ஸ்ரீ

சுபமஸ்து

புராண ரத்தின திலகம் என்னும்

# ஸ்ரீ விஷ்ணு புராணம்



இஃது


சென்னைக் கிறித்தவக் கல்லூரியில்

தமிழ்ப்பண்டிதராயிருந்த

டி. வி. பார்த்தசாரதி
அய்யங்காரால்


பழைய பிரதிகளைக்கொண்டு திருத்தியும்

ஸ்ரீ விஷ்ணு புராண தத்துவபோத விளக்கமும்

நூதனமாகச் சேர்த்தும் பரிசோதித்தும்




பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்

வித்தியா ரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை

இதன் விலை] 1940 [ரூபா-4



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை

𑌸 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌨𑍍
𑌗𑍁𑌣𑌾𑌦𑌿 𑌦𑍋𑌷𑌾𑌂𑌶𑍍𑌚 𑌮𑍁𑌨𑍇 𑌵𑍍𑌯𑌤𑍀𑌤𑌃
𑌅𑌤𑍀𑌤 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌰𑌣𑍋𑌽𑌖𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌾
𑌤𑍇𑌨𑌾𑌸𑍍𑌤𑍃𑌤𑌂 𑌯𑌦𑍍𑌭𑍁𑌵𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌲𑍇‖
𑌸𑌮𑌸𑍍𑌤 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣 𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌽𑌸𑍌
𑌸𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿 𑌲𑍇𑌶𑌾 𑌧𑍃𑌤𑌭𑍂𑌤 𑌸𑌰𑍍𑌗𑌃‖
𑌇𑌚𑍍𑌛𑌾 𑌗𑍃𑌹𑍀𑌤𑌾 𑌭𑌿𑌮𑌤𑍋𑌰𑍁 𑌦𑍇𑌹𑌃
𑌸𑌂𑌸𑌾𑌧𑌿𑌤𑌾𑌶𑍇𑌷 𑌜𑌗𑌦𑍍𑌧𑌿𑌤𑍋𑌽𑌸𑍌‖
𑌤𑍇𑌜𑍋 𑌬𑌲𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯 𑌮𑌹𑌾𑌵𑌬𑍋𑌧
𑌸𑍁𑌵𑍀𑌰𑍍𑌯 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌗𑍁𑌣𑍈𑌕𑌰𑌾𑌶𑌿𑌃‖
𑌪𑌰𑌃 𑌪𑌰𑌾𑌣𑌾𑌂 𑌸𑌕𑌲𑌾 𑌨𑌯𑌤𑍍𑌰
𑌕𑍍𑌲𑍇𑌶𑌾𑌦𑌯𑌃 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌾𑌵𑌰𑍇𑌶𑍇‖
𑌸 𑌈𑌶𑍍𑌵𑌰𑍋 𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿 𑌸𑌮𑌷𑍍𑌟𑌿 𑌰𑍂𑌪𑌃
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌃 𑌪𑍍𑌰𑌕𑌟 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌃‖
𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌸𑌰𑍍𑌵𑌦𑍃𑌕𑍍 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌚𑍍𑌚
𑌸𑌮𑌸𑍍𑌤𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌖𑍍𑌯𑌃‖
𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇 𑌯𑍇𑌨 𑌤𑌦𑌸𑍍𑌤 𑌦𑍋𑌷𑌂
𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌪𑌰𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌮𑍇𑌕𑌰𑍂𑌪𑌂
𑌸𑌂𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌵𑌾𑌪𑍍𑌯𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 𑌵𑌾
𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨 𑌮𑌜𑍍𑌞𑌾𑌨 𑌮𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂

என்று இப்புராணத்தில் சொல்லியபடி, ஸ்ரீ வாசுதேவனின் பரத்வ நிலையினை அறிவதற்கு முதற்கருவியாகவுள்ளது வேதமொன்றேயாம். அவ்வேதத்தில் இலை மறைகாய் மறைபோலும் மறைந்து கிடக்கும் உட்பொருளை விளங்கவைப்பது உபப் பிரமாணங்களுக்குள் இன்றியமைந்தவை புராணங்கள்; அப்புராணங்களும் இராசத

*

தாமத சாத்வித குணங்களினடியாகப் பிரிவுபட்டவை. அப்பிரிவில் சாத்விகத்தை எல்லையாகக் கொண்டதே தலையானது. இவ் விஷ்ணுபுராணம் தத்துவங்களையெல்லாம் சுருக்கமாயும் விளக்கமாயும் அறிவிக்குந் தன்மையாகையாலும் இப்புராணம் எப்புராணங்களினுஞ் சிறந்ததெனச் சொல்லப்பட்டது. அன்றியும் இதில்,

𑌸𑍂𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌰 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌸𑌾𑌰𑌵𑌿𑌤𑍍 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌂
𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌹𑍀𑌨𑌵𑌾𑌕𑍍𑌯𑌂𑌚 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮 𑌵𑌿𑌦𑍋𑌵𑌿𑌦𑍁𑌃

என்கிறபடி, குறுகின பதங்களால் தெளிவாய் நிஷ்க்ருஷ்டமான அர்த்தத்தைச் சொல்லும் வாக்கியங்களமைந்து கிடப்பனவுமாம். இப்புராணப் பெருமையினை ஆளவந்தார்,

𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌯𑌶𑍍𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍀𑌶𑍍𑌵𑌰 𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌭𑌾𑌵
𑌭𑍋𑌗𑌾𑌪𑌵𑌰𑍍𑌗 𑌤𑌦𑍁𑌪𑌾𑌯 𑌗𑌤𑍀𑌰𑍁𑌦𑌾𑌰𑌃
𑌸𑌂𑌦𑌰𑍍𑌶𑌯𑌨𑍍 𑌨𑌿𑌰𑌮𑌿𑌮𑍀𑌤 𑌪𑍁𑌰𑌾𑌣𑌰𑌤𑍍𑌨𑌂
𑌤𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑍋 𑌮𑍁𑌨𑌿𑌵𑌰𑌾𑌯 𑌪𑌰𑌾𑌶𑌰𑌾𑌯॥

எனத் தத்துவ த்ரயாதிகளின் விவேகத்தைச் சாத்தியமாகச் செய்யு முபாயங்களையும் நமக்குச் செவ்வனே அறிவிக்குந் தன்மைவாய்ந்த இவ்விஷ்ணு புராணத்தைச் செய்தருளின பராசர மகாமுனிவருக்குத் தண்டன் ஸமர்ப்பிக்கிறேன் என்று அருளிச்செய்தார். அன்றியும்,

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍍𑌯𑌾 𑌮𑌯𑌾 𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌿𑌣𑍀।
𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌭𑌾𑌵𑍇𑌤𑍌 𑌲𑍀𑌯𑍇𑌤𑍇 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿॥
𑌸𑌏𑌵 𑌪𑌾𑌤𑌿 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃

என்றும் சொல்லியதற் கேற்பவே ஸ்ரீமத் சங்கராசாரியரும் இப்புராணத்தை தத்துவ விவேக விளக்க மெனப் போற்றுவார் என்னுர். மற்றும் இதில்,

அதௌ ந வா யதாஶக்தி காமேஷ்விந்து ஹக்திநத்ரய:।
ஸோऽஜயிஷ்யதி விப்ராக்ருத்யாம் ஸூத்நாத்ய விஸவேதநா:॥

அஸத்யேதா ஶ்ருதாநஸ்ய யாந்த்யாநந்தம் ஸ்வஶக்தித:।
ப்ரதாஸ்யதி த்விஜா ஶ்ரேய: ஸ்வர்க்கம் பாரவி தக்ஷிணாம்॥

திவ்யை: ஸஹாஷ்டி பரவி ஸம்வேதம் ஜநாம்ஜநம்
ஹக்திந ஶ்ருஸ்வஸ்திநிஶ்ய ஸாவ்யூஸாகம் ப்ரதாஸ்யதி

என இதுவே ப்ரமாண விளக்கமாயும்,

ஸோயம் த்விக்ஷ்விஷ ஸ்வக்ஷாத்ரு ஶஹாஸாமவதோ தஹாத்ரு
நக்ஷ்யா ப்ராஸ்ஸ்யேத ஸம்ஸ்யாம் அநந்தா நாரவோரவஸ்ரீ

எனப் பக்தனின் விபவ விளக்கமாயும்,

நமஸ்து ஶ்ரோதவ்யம் யஸ்ய யோதி யேஷ்யம் பரம்பதம்
யதேதாவிஶ்வம் ஸயம்விஶ்வம் ஸவிஷ்ணு: பரமேஶ்வர:

என யோகிகளால் தியான விளக்கமாயும்,

நகேவலம் தாத மம ப்ரஜாநாம்
ஸத்ருஷ்ட ஸம்ஶேதா ஸவதஸ்ய விஷ்ணு:।
யாதா விதாதா பரமேஶ்வரஶ்ச
ப்ரஸீத கோபம் ஸம்ஹரேதி கிஶயஞ்ச॥

எனப் பரப்ரஹ்மமான எம்பெருமானின் விபவ தமமாயும் விளங்கிப் பொலிவதுமான இப்புராணமானது கீர்வாண பாஷையில் இருப்பதனாலே, அப்பாஷையின் பண்டித சிகாமணிகளுக்கே செவ்வனே விளங்குவதன்றி மற்றை யோர்க்கு இதன் விபவம் விளங்காமையின், இது யாவர்க் கும் தெற்றென விளங்கும்வண்ணம், பழைய வியாக்கியா னங்களுக்கிணங்க, இடையிடையே தாத்பரியங்களையுஞ் சேர்த்து, கடினசொற் பிரயோகமின்றித் தமிழ் கற்றறிந்த மக்களும் இவ்விரத்ன குணாகரக்கடலில் அமிழ்ந்து அநு பவித்துய்யும் வண்ணமும், செந்தமிழ் வல்லோர் சீரிய இவ் வைண்ணவ புராணவசன வமைப்பை ஆராய்ந்து ஆனந்த

## அட்டவணை



## மூன்றாம் அம்சம்



## நான்காம் அம்சம்

## ஐந்தாம் அம்சம்

## ஆறும் அம்சம்



அட்டவணை முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ விஷ்ணு புராணம்

திருவினையாகத் திருத்திய தேவன் திருவுருவாய்
இருவினைமாய்க்கு மிணையினற்போதமெமக்களித்த
குருவினைநற்குணக் குன்றினைக்கூனின்றி யொன்றிநன்று
மருவினையேன் மனனே மகிழ்வேயென்று மெய்துவையே.

செந்தமிழாரணச் செந்தேன்பிலிற்றுஞ் செழுங்கொண்டலெந்
தந்தமின்மாட்சி யணிந்தவன் வார்கழலாமவற்கு
வந்தவஞ்ஞான மதப்பேய்வதைத்திடு மாந்திரிகற்
கெந்தையிராமா னுசற்கிசைந்தார் கழலேத்துவமே.

விராவியசித்த சித்தீசரிவர்நிலை வேண்டும்வளம்
பராவியமுத்தி யிவற்றின்வழிகதி பாங்குணர்த்தும்
புராணவிரத்தினம் போந்தவியல்பிற் புணர்த்தவள்ளல்
பராசரனென்னு முனிவரன்பாதம் பழிச்சுவமே.

---

## முதல் - அம்சம் முதல் அத்தியாயம்

## புராண வரலாறு

ஸ்ரீ பராசரமகாமுனிவர் ஒருநாள் காலையில் நித்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஆசனத்தில் எழுந்தருளி யிருக்கையில், மயித்திரேயரென்னு முனிவர் ஆங்கெய்தி தெண்டன் சமர்ப்பித்துத் திருவடிகளில் வணங்கிநின்று, "என்னுடைய ஆசாரியரே! அடியேன் சகல வேதங்களையும் சகல தரும சாஸ்திரங்களையும் வேதாங்கங்களையும் தேவரீரிடத்திலன்றோ ஓதினேன்; சகல சாஸ்திரங்களைக் கற்றறிந்தவர்களும் அடியேனைத் தேவரீருடைய அநுக்கிரகத்தினாலே எல்லாச் சாஸ்திரங்களிலேயும் நன்றாய்ப் பயிற்சி செய்தவனென்று சொல்வார்கள். ஓ சகல தருமங்களு மறிந்தவரே! இப்

படித் தேவரீரநுக்கிரகம் பெற்ற அடியேன், உலகமுண்டான விதத்தையும், இனி யுண்டாகும் விதத்தையும் கேட்க விரும்புகிறேன்."

அன்றியும் "ஓ மகானுபாவரே! உலகமெல்லாம் எந்தவஸ்துவின் சொரூபமாயிருக்கின்றது? எங்கிருந்து உண்டாயிற்று? எங்கே எப்படி லயப்பட்டது? இனி எங்கே லயப்படும்? பஞ்சபூதங்கள் எவ்வளவாயிருக்கும்? எதனால் விளங்கும்? இந்த விஷயங்களையும், தேவதைகள் முதலானோருடைய உற்பத்தியையும், சமுத்திரங்கள் பருவதங்க ளிவைகளி னுற்பத்தியையும், பூமியிருக்கும் விதத்தையும், சூரியாதிகளிருக்கும் விதத்தையும், இவற்றின் அளவையும், தேவர் முதலானோருடைய வமிசங்களையும், மனுக்களையும், மநுவந்தரங்களையும், மகாகல்பங்களையும், நான்கு யுகங்களால் விகற்பிக்கப்பட்ட கல்பங்களின் பிரிவுகளையும், கல்பத்தின் முடிவுவகையையும், சகல யுக தருமங்களையும் கேட்க விரும்புகிறேன்."

"ஓ முனிசிரேஷ்டரே! மேலும் தேவர் முனிவர் என்கிற இவர்களுடைய சரித்திரத்தையும், வியாசமுனிவர் செய்தருளிய வேதசாகைகளின் பிரிவுகளையும், பிராமணர் முதலான வருணங்களின் தருமங்களையும், பிரமசரியம் முதலான நான்காச்சிரமங்களுடைய தருமங்களையும், இவையெல்லாவற்றையும் தேவரீரிடத்திலேயே கேட்க விரும்புகிறேன்."

"ஓ வசிஷ்டகுமாரரான சத்தியின் குமாரரே! இந்தச் சகல விஷயங்களையும் நன்றாய் அறியும்படி அடியேனிடத்தில் அனுக்கிரகத்தோடு கூடிய திருவுள்ளத்தை வைக்கவேண்டும்," என்று பிரார்த்திக்க, பராசரமகாமுனிவர் அருளிச்செய்கிறார்:—

சகல தருமங்களையும் அறிந்த மயித்திரேயரே! உலகத்தின் உற்பத்தி முதலானவைகளை அறிந்தவரான என் பாட்டனார் ஸ்ரீவசிஷ்டபகவான் அருளிச்செய்த முன் விருத்தாந்தத்தை எனக்கு நன்றாய் நினைப்பூட்டினீர். அதாவது, விசுவாமித்திரரால் ஏவப்பட்ட

ராக்ஷசனொருவன் என் தகப்பனுரைப் பக்ஷித்தானென்கிற சங்கதியைக் கேட்ட நான் ஒப்பில்லாத கோபமடைந்து ராக்ஷசர்கள் நாசமடையும்படியான யாகமொன்று ஆரம்பித்தேன். அந்த யாகத்திலே அநேகமாயிரம் ராக்ஷசர் நாசமடைந்தார்கள். அது கண்டு வசிஷ்டமகாரிஷியானவர், "பிள்ளாய்! மிகுந்த கோபத்தைவிடு; இராக்ஷசர்மேற் குற்றமில்லை; உன் தகப்பனுக்கு அப்படி விதியிருந்தது; இந்தக்கோபம் மூடருக்குவரும், ஞானிகளுக்கில்லையே; குழந்தாய்! எவனுலே எவன் கொல்லப்படுகிருன், ஒருவனுலொருவன் கொல்லப்படுவதில்லை; அவனவன் தான் செய்த பாவ புண்ணியங்களையே புசிக்கிருன்; மனிதர் மிகவும் வருத்தப்பட்டுச் சம்பாதித்த கீர்த்தியையும் தவத்தையும் கோபம் அழுத்திவிடும்; சொர்க்க மோக்ஷமிரண்டையும் கெடுக்கிறதற்குக் காரணமான கோபத்தை ரிஷிகளெல்லாரும் விட்டுவிடுகிருர்கள்; ஆகையால் குழந்தாய்! நீ அந்தக் கோபத்திற்கு வசப்படாதே; அபராதம் பண்ணுமலிருக்கிற பேதையரான ராக்ஷதர் அநேகர் எரிந்து போனது போதும்; இனி இந்த யாகத்தை ஒழித்துவிடு; பெரியோர்களெல்லாம பொறுமையையன்றே ஆசாரமாகப் பிடித்திருக்கிருர்கள்" என்று இப்படிச் சொன்னதினுலே, நானும் அவருடைய வாக்கியத்தின் பெருமைக்காக உடனே எக்கியத்தை ஒழித்தேன். அதனுலே வசிஷ்ட பகவான் திருவுள்ள முவந்தார்.

அப்போது அவ்விடத்திலே பிரமபுத்திரரான புலஸ்தியப் பிரமரிஷியும் எழுந்தருள, அவருக்கு என் தகப்பனுர் ஆசனமும் அர்க்கியமும் கொடுத்து உபசரித்தார். புலஹறருக்குத் தமையனுரான அந்த புலஸ்தியன் என்னைப் பார்த்து, "அப்பா! நீ பெருத்த பகையிருக்கையிலும் அந்தக் குருவினுடைய வசனத்தினுல் பொறுமையை யடைந்தாய். ஆதலால் நீ சகல சாஸ்திரங்களையும் அறியக்கடவாய்; நீ மிகவும் கோபங்கொண்டிருந்தும் நம்முடைய சந்ததியை அற்றுப்போகச் செய்யாமையினுலே நாம் உனக்கு வேறொரு பெரியவரந் தருகிறோம்; அதென்னவென்றல், குழந்தாய்! நீ புராணசிங்கத்தை செய்கிற சத்திமானுகக் கட

வாய்; தேவதையின் பரமார்த்தத்தை, அதாவது இன்னதே மேலானதேவதை என்பதை நீயறியக்கடவாய்; பிரவிர்த்தி நிவர்த்தியென்கிற இரண்டு கருமங்களிலேயும் உன்புத்தியானது நம்முடைய அநுக்கிரகத்தினாலே சந்தேகமற நிற்கக்கடவது" என்று அநுக்கிரகித்தார். அதுகேட்டிருந்த வசிஷ்டபகவான் "குழந்தாய்! புலஸ்தியர் என்ன சொன்னாரோ அவையெல்லாம் அப்படியே யுண்டாகும்" என்று அருளிச்செய்தார்.

இப்படி மகாஞானவானான புலஸ்தியராலும், வசிஷ்டராலும், யாதொன்று அருளிச்செய்யப்பட்டிருந்ததோ அவ்வளவும் நீர் கேட்கிறதினாலே எனக்கு நன்றாய் ஞாபகத்துக்கு வந்தது. மயித்திரேயரே! இப்படி வரப்பிரசாதத்தினாலே விசேஷ ஞானம்பெற்ற நாம் சமஸ்தமும் உமக்குச் சொல்லுகிறோம், நன்றாய்க் கேளும்.

"ஸ்ரீ விஷ்ணுவினிடத்தினின்றும் உலகமுண்டாகியவரிடத்திலேதானே இருக்கின்றது. ஸ்திதி சங்காரங்களுக்கும் கர்த்தா அவரே; இவ்வுலகமெல்லாம் அவராலேயே வியாபிக்கப்பட்டு அவருடைய சொரூபமாயேயிருக்கின்றது," என்று மயித்திரேயர் வினவியவைகளுக்குச் சுருக்கமாய் உத்தர மருளிச்செய்தார்.

முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

## இரண்டாம் அத்தியாயம்

# பிரபஞ்சஉற்பத்தி

இந்தப் பிரகாரம் பராசரமாமுனிவர் மயித்திரேயரை நோக்கிப் புராணஞ் சொல்லத் தொடங்கி, இதன் முக்கிய விஷயமான ஸ்ரீ விஷ்ணுவைப் பலவகையாக ஸ்துதித்தருளுகிறார்:—

விகாரமில்லாதவனாய், சுத்தனாய், நித்தியனாய், பரமாத்துமாவாய், எப்போதும் மாறாத சுபாவமுள்ள திவ்வியமங்கள விக்கிரகமுடையவனாய், சகலமும் சுவா

தீனமா யிருக்கும்படியான ஜயசாலியாயுமிருக்கிற ஸ்ரீ விஷ்ணுபகவானுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன். சிருஷ்டிக்கிறபோது சதுர்முக ரூபியாகவும், ரக்ஷிக்கிற போது தன்னவதார ரூபியாகவும், சங்கரிக்கிறபோது ருத்திரரூபியாகவும் இருந்து, சமுசாரத்தினின்றுங் கடைத் தேற்றுகிறவனுமான ஸ்ரீ வாசுதேவனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன். ஒன்றும் பலவுமான சொரூப முள்ளவனும், காரணாவஸ்தையிலே ஒன்றாய் சூட்சுமமுமாய் அவ்வியக்தமுமான ரூபத்தையும், காரியாவஸ்தையிலே அநேகமாய் ஸ்தூலமாய் வியக்தமுமான ரூபத்தையும் உடையவனாகி, அநாதிபிரகிருதி வாசனையினாலே* கட்டுப்பட்ட சேதனங்களுக்கெல்லாம் மோக்ஷகாரணமான ஸ்ரீ விஷ்ணுவுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன். சிருட்டி திதி சங்காரங்களுக்கு மூலமாய், நிமேஷோன்மேஷ சூரியகமனாதி சகல பதார்த்த சொரூபமான காலத்தைச் சரீரமாகவுடையவனும், அக்காலத்திற்கு உட்படாத மேன்மையான சொரூப முள்ளவனும், சர்வவியாபகனுமானவனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன். பிரபஞ்சத்துக்கெல்லாம் ஆதாரமாய், அதிசூட்சுமங்களான பிரகிருதியாதி பதார்த்தங்களுக்குஞ் சூட்சுமரூபமாய், எல்லாவற்றிற்கும் அந்தரியாமியாய், பிரகிருதி சம்பந்தத்தினாலே குற்றமடையாமல் என்றும் பிரியாத ஞானமுடையவனாய் இருக்கிறவனும், கலியாணகுணங்களாலே புருஷோத்தமனென்னப்பட்டவனுமான எம்பெருமானைச் சேவித்துச் சொல்லுகிறேன். பரமார்த்தமாக விசாரிக்குமிடத்தில் சுத்தஞானசொரூபனாய், அஞ்ஞான துக்கமுதலானவையில்லாமல் அத்தியந்த நிர்மலனுமாய், அநாதிப்பிரகிருதி வாசனையினாலேயுண்டான பிரமிப்பினாலே தேகேந்திரியாதிகளை ஆத்துமாவாக நினைக்கிறவர்களுக்குத் தேவமனுஷ்யாதி ரூபமாகத் தோன்றுகின்றவனாய், சேதனங்களிலெல்லாம் வியாபித்துச் செகங்களைக் கிரகித்துச் சங்கல்ப மாத்திரத்தினாலே சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்களைச் செய்துகொண்டு தன் திருவுள்ளத்தாலல்லது கருமவசத்தினாலே பிறப்பிறப்பில்லாதவனும் எப்போதும் முன்சொல்லப்பட்டபடியான ஐசுவரியத்தி

னின்றும் நழுவாதவனுமான ஸ்ரீ விஷ்ணுபகவானைச் சேவித்து, தக்ஷப்பிரசாபதி முதலான மகாமுனீந்திரர் கேட்க, எம்பெருமானுடைய நாபிக்கமலத்திலுதித்தவராயும் சகலத்தில் உற்பத்தி நாசங்கள் முதலானவைகளை யறிந்தவராயுமுள்ள பிரமா அருளிச்செய்ததைச் சொல்லுகிறேன் கேளும்.

பிரமதேவன் திருவாய்மலர்ந்தருளக் கேட்டறிந்தவர்களான தக்ஷர் முதலான மகரிஷிகள் சித்தசுத்திகரமான நர்மதாநதிதீரத்தில் புருகுச்சனென்கிற சக்கிரவர்த்திக்கு உபதேசித்தனர். அந்தச் சக்கிரவர்த்தி சாரசுவதனென்கிற மகாமுனிக்கு உபதேசித்தார். அந்த மகாமுனிவருடைய அநுக்கிரகத்தினாலே நான் விசதமாக வறிந்தேன். இப்படி ஆசாரிய பரம்பரையாலே யறிந்த இந்த மகா புராணத்தைச் சவிஸ்தாரமாக உமக்குச் சொல்லுகிறேன்.

ஓ மயித்திரேயரே! சொரூபகுண விபவங்களாலே மேம்பட்ட லோகாதிபதிகளுக்குள்ளே சிரேஷ்டர்களான பிரமாதிகளுக்குச் சிரேஷ்டனும், தன்னைக்காட்டிலும் வேறு சிரேஷ்டனில்லாதவனும், பரமாத்மாவுமாய், சேதனு சேதனங்களுக்கெல்லாம் தானே ஆதாரமாய், தனக்கு வேறொன்றும் ஆதாரமில்லாதபடியினாலே தன்னிலேயே தானிருப்பவனாய், தேவமனுஷியாதி சாதிகளையும் வெளுப்பு கறுப்பு முதலான வர்ணங்களையும் கிரியாத் திரவியங்களையும் சொல்லுகிற விசேஷணங்களில்லாதவனாய், குறைதல் விநாசம் திரிதல் வளர்தல் ஜென்மம் என்கிற விகாரங்களை விட்டிருக்கையாலே சர்வகாலமும் அப்பிரமேயங்களான ஞானசத்தி தேசோபலாதி ஷட்குண ஐசுவரியமுள்ள சொரூபத்தோடே இருக்கிறவனென்று சொல்லக் கூடியவனாய், சேதனுசேதனங்களெல்லாவற்றிலும் மேலுங் கீழும் பக்கமு முள்ளும் புறமும் தான் வசித்துக்கொண்டு சகல சேதனுசேதனங்களுந் தன்னிடத்தில் வசிக்கத்தக்கதாகிய சர்வலோகவியாபகமான சொரூபமுண்டானவனாய், ஒன்றிலுமொட்டாமல் எல்லாம் தன்னாலே விளங்கும்படி பிரகாசிக்கிறவனாகையாலே ஸ்ரீவாசுதேவனென்கிற திரு

நாமத்தினுலே வேதாந்த வித்துவான்கள் கொண்டாடும் படியானவனுய், சொரூபத்திலும் குணத்திலும் பெருமையுடையவனுகையாலே பிரமமென்றும் பரமனென்றும், சொல்லப்பட்டு, நித்தியனும் செனனரகிதனும் அட்சரனும் அவ்யயனும் எப்போதும் ஒரேவிதமான சொரூபனுமாய் துக்கம் அஞ்ஞான முதலான ஈனகுணங்களில்லாதவனுகையாலே நிர்மலனுய், தோன்றுவதும் தோன்ருததுமான சகல லோகங்களையும் சரீரமாகக் கொண்டவனுய், புருஷரூபமாயும் காலரூபமாயும் இருக்கிற பரப்பிர்மமென்று சொல்லப்பட்ட பகவானெருவனுண்டன்ருே: அந்தப் பிரமத்துக்குச் சேதனமான க்ஷேத்திரக்கியன் முக்கிய சரீரம். அப்படியே வியக்தமும் அவ்வியக்தமும் காலமும் வேறு சொரூபங்களாக இருக்கும். ஆதிகாரணமான பிரகிருதிக்கும் புருஷனுக்கும் வியக்தமான பிரபஞ்சத்துக்குங் காலத்துக்கும் வேருய் மேம்பட்டதாயிருக்கிற அந்த ஸ்ரீவிஷ்ணுவின் சொரூபத்தை வேதாந்த தத்துவக்கியானிகள் அத்தியந்த பரிசுத்தமாய் அடைய்க்கடவதான சொரூபமாகக் கண்டிருப்பார்கள். மூலப்பிரகிருதியும், சீவனும், தேவமனுஷியாதி வியக்தங்களும், காலமும் வகுத்தபடியே அந்தப் பரமாத்மாவின் சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களினுடைய தோற்றத்திற்கும் விளக்கத்திற்கும் சாதனமான ரூபங்களா யிருக்கும். எப்படியென்னில்? வியக்தமான சராசரங்களும், அவ்வியக்தமான பிரகிருதியும், சேதனமான க்ஷேத்திரக்கியனும், கலாகாஷ்டாதிரூபமான காலமும்ஸ்ரீவிஷ்ணுவினுலே தாங்கப்பட்டும் ஆளப்பட்டும் இருக்கையாலே அவருக்கே சொரூபமாயிருக்கும்.

சகல இஷ்டமும் நிறைந்திருக்கிற அவருக்குச் சிருஷ்டி முதலானவை ஏன் செய்யவேண்டுமென்று கேட்பீராயின், சொல்லுகிறேன். விளையாடுகிற பாலகனுக்கு அவ்விளையாட்டே பிரயோசனமாவதுபோல பரமாத்மாவுக்குச் சிருட்டி ஸ்திதி சங்காரங்களினுலே லீலையேயன்றி வேறு பிரயோசனம் கிஞ்சித்து மில்லையென்று அறியும். இனிச் சிருட்டிக் கிரமத்தைக்கேட்பீராக. எம்பெருமானுக்குச் சரீரமென்று என்னச் சொன்

ஞேமோ அந்த அவ்வியக்தமானது, பிரகிருதியென்றும் பிரதானமென்றும் மனு முதலானவர்களாலே சொல்லப்பட்டிருக்கும். அது சேதனு சேதனங்க ளடங்கியதாகையாலே நித்தியமாய், அளவில்லாததாய், தான் அசேதனமாகியுந் தருக்களிடத்தில் அக்கினி யிருப்பது போல் தன்னிடத்திலே சேதனங்களான சீவகோடிக ளெல்லா மிருக்கப் பெற்று, அக்ஷயமுமாய், அப்பிரமேயமுமாய், பகவானேயல்லது வேறொரு ஆதாரமில்லாததாய், காரியமாகாமையாலே ஒன்றுததாய், நிச்சலமாய், சத்த பரிச ரூப ரச கந்தங்க ளில்லாததாய் சாத்துவிக ராஜச தாமச குணாத்துமகமாய், செகத்துக்குக் காரணமாய், காரணம் உற்பத்தி விநாசம் என்னு மிம் மூன்று மில்லாததா யிருக்கும்.

இந்தச் சிருட்டிக்குப் பூர்வத்தில் மகாப் பிரளயமானவுடனே அதனாலே சமஸ்தமும் வியாபிக்கப்பட்டிருந்தது. ஓ மயித்ரேயரே! வேதார்த்த தத்துவக்கியரான பிரமவாதிகள் பிரதானத்தைத் தெரிவிக்கும்படியான இவ்வர்த்தத்தையே சொல்வார்கள். எப்படியெனில், அப்போது பகலும், இராத்திரியும், ஆகாசமும், பூமியும், வாயுவும், சகலமும், சூரிய சந்திராதி சோதிகளும், இருட்டும், சாத்துவிக ராஜச தாமச குண விலாசங்களும், மற்றுமுண்டான வஸ்துக்க ளொன்று மில்லாமலே பிரதான சத்தவாச்சியமான மூலப்பிரகிருதி யொன்றுமே சமஷ்டி புருஷரூபமாக இருந்தது. எல்லாவற்றிற்கும் மேற்பட்ட அந்த ஸ்ரீவிஷ்ணு ஸ்வரூபத்தினின்றும், பிரதானமென்கிற பிரகிருதியும், புருஷனென்கிற ஆத்துமாவும் உண்டாகி, சிருஷ்டிக்கு உபயோகமான சேர்க்கை யில்லாதவைகளாய் அந்த எம்பெருமானுடைய எந்தரூபத்தினலே தரிக்கப்பட்டிருந்தனவோ அது அவனுக்குக் காலமென்கிற பேருடையதான ஒரு சொரூபமாயிருக்கும். ஓ விப்பிரோத்தமா! வியக்தமான மகத்தகங்காராதிகள் பிரகிருதியில் இருக்கும். பிரகிருதியும் பரமாத்துமாவினிடத்தில் லயப்பட்டதனுல் மகாப் பிரளயத்துக்குப் பிராகிருதப் பிரளயமென்று சொல்லப்படும். அந்தக் காலமானது அனதியாயிருக்கும். அந்தக் காலத்துக்கு எப்போதும் முடிவில்லாமையினலே

சிருஷ்டி திதி சங்காரங்கள் அவிச்சின்னப் பிரவாகரூபமாகப் பிரவர்த்திக்கின்றன.

ஓ மயித்திரேயரே! பிரகிருதி சமகுணமாயும் புருடன் வேறாயும் இருக்குமிடத்தில், விஷ்ணுவின் ஸ்வயரூபமான காலமானது சிருட்டிக்கு அனுகூலமாகப் பிரவர்த்திக்கின்றது. பின்பு பரப்பிரமமும், பரமாத்துமாவும், ஜெகன்மயனும், சர்வகனும், சர்வ பூதேச்வரனும், சர்வாத்துமகனும், பரமேச்வரனுமான ஸ்ரீஹரி, சுயவிச்சையினாலே லீலார்த்தமாகப் பிரகிருதி புருஷர்களிடத்தில் பிரவேசித்து, ஒன்றுக்கொன்று ஏற்றமும் குறைவுமில்லாமல் சமமாக இருக்கிற சத்துவ ரஜஸ் தமோ குணங்களுக்கு வைஷம்மியங்களைக் கற்பித்துப் பிரகிருதி புருஷர்களுக்குச் சலன முண்டாக்கியருளினான். எப்படி அதி கம்பீரமான மனசுக்குக் கந்தமானது தன் சன்னித்தியத்தினாலேயே விகாரத்தை யுண்டாக்குகின்றதே யல்லது யாதொரு தொழிலையுஞ் செய்யவில்லையோ, அப்படியே பரமேசுவரன் தன் சன்னித்திய விசேஷத்தினாலேயே பிரகிருதி புருஷர்கள் பிரபஞ்சத்தைச் சிருட்டிக்க அபிமுகராம்படி கலக்குகிறான். கந்தம் மனோவிகாரத்துக்கு நிமித்தமேயானபடி பரமாத்துமா பிரபஞ்சத்துக்கு நிமித்தகாரண மாத்திரமன்று. தானே சலன முண்டாக்குகின்றவனாய்ச் சலிப்பிக்கப்படுவதுமான பிரகிருதி புருஷ ஸ்வரூபமாகத்தானே யாகின்றான். ஆகையால் உபாதான காரணமும் அவனே. சூக்ஷமரூபமும் ஸ்தூலரூபமுமான பிரகிருதியும், வியஷ்டி, சமஷ்டி ரூபமான பிரம்மாதி ரூபங்களும், வியக்தமாயும், அவ்வியக்தமாயும் இருக்கின்ற பிரபஞ்சமும், மூலப்பிரகிருதியும் சர்வேசுவரனாய்ப் புருஷோத்தமனாய் இருக்கின்ற விஷ்ணுவின் ஸ்வரூபமாகையாலே, காரியமான ஜெகத்தும் அவனையல்லாமல் வேறில்லை என்றறியும். மயித்திரேயரே! அது நிற்க; ஜீவனுடைய கர்ம வசத்தினாலே சலனப்பட்ட பிரகிருதியினின்றும் சாத்துவிக ராஜச தாமச குணவைஷம்மிய ரூபமான மகத்துவம் உற்பத்தியாயிற்று. பராத்பரனான ஸ்ரீவிஷ்ணுவினுடைய சரீரமான பிரகிருதியானது தன்னாலே யுண்டான மகத்துவத்தை மூடிக்கொண்டது. அந்த மகத்

துவம் சாத்துவிக ராஜச தாமசமான குணத்திரயத்தை யுடையதாய், விதையானது மேலே தோலினாலே மூடப் பட்டிருக்கிறதுபோல, பிரகிருதியினாலே மூடிக்கொள் ளப்பட்டது. அப்பால் அந்த மகத்தத்துவத்தினின் றும் வைகாரிகம் தைஜசம் பூதாதியென்று மூன்றுவித மான அகங்காரம் பிறந்தது. அதில் சாத்துவித அகங் காரம் வைகாரிகமென்று சொல்லப்படும். ராஜச அகங் காரம் தைஜஸமென்று சொல்லப்படும். தாமஸ அகங் காரம் பூதாதியென்று சொல்லப்படும். அந்த அகங் காரங்கள் திரிகுணாத்துமகம் ஆனபடியினாலே பஞ்சபூதங் களுக்கும் இந்திரியங்களுக்கும் ஏதுவாயிருக்கும். பிர கிருதியினாலே மகத்தத்துவம் மூடப்பட்டதுபோல அகங் காரம் மகத்தத்துவத்தினாலே மூடப்பட்டிருக்கிறது. அதில் பூதாதியென்று சொல்லப்பட்ட தாமசாகங் காரம் விகாரப்பட்டு, சப்த தன்மாத்திரையை யுண் டாக்கிற்று. அதினின்றும் சப்தத்தை லக்ஷணமாகப் பெற்ற ஆகாசம் பிறந்தது. அந்த ஆகாசம் தாமச அகங்காரத்தினாலே மூடிக்கொள்ளப்பட்டது. அந்த ஆகாசம் விகாரப்பட்டுப் பரிச தன்மாத்திரையை யுண் டாக்க அதனாலே வாயு பிறந்தது. அந்த வாயுவுக்குப் பரிசங் குணமாய் இருக்கும். அந்தப் பரிச தன்மாத்திரை யான வாயுவும், ஆகாசத்தினாலே மூடப்பட்டது. அந்த வாயு விகாரப்பட்டு ரூப தன்மாத்திரையை யுண்டாக் கிற்று. அதனாலே தேஜசு பிறந்தது. அந்தத் தேஜ சுக்கு ரூபம் அசாதாரண குணமாயிருக்கும். பரிச தன் மாத்திரையினாலே ரூப தன்மாத்திரையான தேஜசு மூடப்பட்டது. தேஜசு விகாரப்பட்டு ரச தன்மாத்தி ரையை யுண்டாக்கிற்று. அதினாலே அப்பு பிறந்தது. ரச தன்மாத்திரையான அப்பும் ரூப தன்மாத்திரையி னாலே மூடப்பட்டது. அந்த அப்பு விகாரப்பட்டுக் கந்த தன்மாத்திரையை யுண்டாக்கிற்று. அதினாலே பிருதிவி பிறந்தது. பிருதிவிக்குக் கந்தம் அசாதாரண குணமா யிருக்கும். சூட்சுமம் கண்களுக்குத் தெரியாதானபடியி னாலே, பஞ்சமகாபூத காரணங்களான சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களுடனே கூடின சூட்சுமபூதங்கள் தன் மாத்திரையென்று சொல்லப்படும். தூலங்களான ஆகா

சாதி பூதங்களிலே சத்தாதி குணங்கள் விகசிதமாய்க் காணப்படும். தன்மாத்திரைகள் அதிசூட்சுமமாய், சரீர லகுத்துவமும், அற்புதப் பிரகாசமும், பிரசன்னத்துவமும் உண்டாக்குகின்ற சாந்தமான சாத்துவிக குணமும், வியாகூலமும், நானாவிதமான வியாபாரங்களும் உண்டாக்குகின்ற கோரமான ராஜச குணமும், நித்திரையும் ஆலசியமும் உண்டாக்குகின்ற மூடமான தாமச குணமும் இல்லாமல் இருக்கும்.

இந்தப்படி ஆகாசாதி பூதங்களும், தன்மாத்திரைகளும், பூதாதியென்று சொல்லப்பட்ட தாமதாகங்காரத்தாற் பிறந்தன. தைஜசமென்று சொல்லப்பட்ட ராஜசாகங்காரத்தால் இந்திரியங்கள் உண்டாயினவென்று சிலர் சொல்லுவார்கள். வைகாரிகமென்று சொல்லப்பட்ட சாத்துவிக அகங்காரத்தால் இந்திரியங்கள் பிறந்தனவென்று சிலர் சொல்லுவார்கள். இந்த இரண்டு பக்ஷங்களிலேயும் மனதுடன்கூடப் பதினொரு இந்திரியங்கள் சாத்துவிக அகங்காரத்திலே பிறந்தனவென்கிறதே நிச்சயம். ராஜச அகங்காரம் சாத்துவிக தாமச அகங்காரங்கள் இரண்டுக்கும் சகாயமாய் இருக்கும்.

இனி ஞானேந்திரிய கர்மேந்திரியங்களின் சொரூபங் கேளும். தொக்கு, நேத்திரம், நாசி, நாவு, காதுகளென்று சொல்லப்பட்ட ஐந்தும் ஞானேந்திரியங்கள். இவற்றிற்குப் பரிசம், ரூபம், கந்தம், ரசம், சத்தமென்னும் இவ்வைந்தும் போக்கிய பதார்த்தங்கள். வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தங்களைந்தும் கர்மேந்திரியங்கள். வசனம், கர்மம், கமனம், விசர்க்கம், ஆனந்தமென்னும் இவை அவ்வைந்துக்குங் காரியங்கள். ஆகாசம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்னும் பூதங்கள் தமக்கு அசாதாரண குணமான சத்த, பரிச, ரூப, ரச, கந்தங்களைத் தாங்கள் மேன்மேலும் அதிகமாகப் பெற்று அன்னியோன்னிய சையுக்தமாய்ச் சாத்துவிக ராஜச தாமச குணத்துமங்கள் ஆனபடியி

* "பூதிலாயவைந்துமாய் என்கிற பாட்டின்படி பூமியில் ஐந்தும், நீரில் நான்கும், தீயில்மூன்றும், காற்றில் இரண்டும், வானில் ஒன்றும் எனவறிக.

ஞலே சாந்தங்களும் கோரங்களும் மூடங்களுமாய் விசேஷித்திருக்கும். இந்தவிதமாய்ச் ஜெனித்த பஞ்ச பூதங்களும் நாஞவித சக்தியுக்தங்களாய் ஒன்றுட னென்று கூடாதபடியினுலே பிரஜாசிருட்டியிற் சாமர்த் தியமில்லாமல் இருந்தன. அப்பால் ஈஸ்வரனுடைய அநுக்கிரகத்திஞலே ஒன்றுடனென்று கலந்து ஐக்கிய மாயின. அதெப்படி யென்ருல், பிரதிவியில் அப்பும் தேயுவும் வாயுவும் ஆகாசமும், சலத்தில் பூமி தேயு வாயு ஆகாசமும், தேயுவில் பிருதிவி அப்பு, வாயு ஆகாசங்களும், மாருதத்தில் பிருதிவி அப்பு தேயு மாருதங்களும் கலந்தன. இது பஞ்சீகரணப் பிரகாரம். இப்படி அன்யோன்னியமாய்க் கலந்ததிஞலே பிரமாண் டத்தைச் சிருட்டிப்பதற்கும் நால்வகைப் பிறவிகளைச் சிருட்டிப்பதற்கும் சாமர்த்தியம் உடையவைகளாய், சீவ னுடைய கர்மவிசேஷத்திஞலேயும், பிரகிருதி மகத் தகங்கார தன்மாத்திரைகளின் சையோகத்திஞலேயும் ஈசுவர சங்கல்பத்திஞலேயும் பிரமாண்டத்தை உண் டாக்கின.

இப்படிப் பஞ்சபூதங்களிஞலே பிறந்த அந்த அண்டம் நீர்க்குமிழிபோலே ஒரு கணப்பொழுதிலே அபிவிருத்தியாயிற்றே அல்லாமல், கிரமக்கிரமமாக அபி விருத்தியாகவில்லை. இந்தப்படி பிரகிருதியிஞலே உண் டான அதிவிசாலமான பிரமாண்டம் பிரகிருதி சரீரக ஞன ஸ்ரீ விஷ்ணு பகவானுக்கு லீலாஸ்தானமாய் மகா சலத்திலே மிதந்து கொண்டிருக்கின்றது. இப்படிப் பிறந்த பிரமாண்டத்தில் பிரகிருதி சொரூபனுய், மகத் தகங்கார தன்மாத்ரா மகாபூத சரீரகனும், ஜகதீச் வரனுமான விஷ்ணுதேவன் சதுர்முக சொருபனுய்த் தானே அவதரித்தான். அந்த அண்டத்துக்கு மேரு சயிலமானது உல்ப்பமும், மற்றப் பருவதங்கள் ஜராயு வும்,சமுத்திரங்கள் கர்ப்போதகமுமாய் இருக்கும்.உல்ப்ப மென்ருல் கருவைச் சுற்றியிருக்கிற வஸ்திரம் போன்ற தொன்று. ஜராயுவென்ருல் அதன்மேல் சுற்றியிருக் கிற கருப்பை. கர்ப்போதகமாவது அதிலிருக்குந் தண் ணீர். அந்தப் பிரமாண்டத்தில் பருவதங்கள் தீவுகள்

சாகரங்கள் சோதிச்சக்கரங்கள் தேவாசுர மனுஷிய சங்கங்கள் முதலிய பிறந்தன. இப்படியுண்டான பிரமாண்டத்தைக் கவிந்து ஒன்றுக்கொன்று தசகுணோத்தரமான சலமும் அக்கினியும் மாருதமும் ஆகாசமும் தாமசாங்காரமும் மகத்தத்துவமுமாகிய சத்தாவரணங்களிருக்கின்றன. தேங்காயானது நார் மட்டைகளினலே எப்படிக் கவியப்பட்டிருக்கின்றதோ அப்படிப் பிரமாண்டம் சத்தாவரணங்களினலே கவியப்பட்டிருக்கிறது. அந்த அண்டத்தில் விசுவேசுரனை நாராயணன் பிரமரூபியாகி ரசோகுணப்பிரதானனய்த் தேவாசுர கந்தருவ மனுஷிய பசு பட்சி தாவரங்களைச் சிருட்டித்துக்கொண்டு, அப்பிரமேய பராக்கிரமனும் ஷட்குணைசுவரிய சம்பன்னனுமான தானே சாத்துவித குணப்பிரதானனய், லீலார்த்தமாக யுகங்கடோறும் நானவிதமான திவ்யாவதாரங்கள் செய்து, கல்பாந்த பரியந்தமும் ஜெகத்தைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டும், பிரளய காலத்தில் தாமசகுணப் பிரதானனை ருத்திரரூபியாகி இருந்து, அதிக பயங்கரனய்ச் சராசரங்களான அகில பூதங்களையும் விழுங்கி, மூன்று லோகங்களையும் ஏகார்ணவமாகப் பண்ணி, ஸஹஸ்ர பணமண்டல மண்டிதனை ஆதிசேஷனகிய படுக்கையிலே சயனித்துக்கொண்டு, அப்பால் பிரளயாந்தத்தில் திரும்பவும் எழுந்திருந்து பிரமரூபியாய் முன்போலவே பிரபஞ்சத்தைச் சிருட்டித்து அருளுவன்.

ஷட்குண ஐசுவரிய சம்பன்னனை ஜநார்த்தனன் ஒருவனே அந்தந்தச் சொரூபங்களில் நின்று சிருட்டி திதி சங்காரங்களைச் செய்வதனல் பிரம்மா விஷ்ணு ருத்திரன் என்கிற திருநாமங்களை அடைகின்றுன். அந்தப் பகவான் தானே சிருட்டி கர்த்தாவாய் இருந்து சராசர சரீரகனை தன்னைத்தானே சிருட்டிக்கின்றுன். அப்படியே தானே பரிபாலனம் செய்கின்றுன். யுகமுடிவில் தானே சங்கரிக்கின்றுன். ஆகையால் சிருட்டி கர்த்தாவாகவும் சங்கார கர்த்தாவாகவும் தோற்றுகிறவர்களுக்குச், சிருட்டிக்கப்படுவதும் சங்கரிக்கப்படுவதுமாகத் தோற்றும் அவைகளுக்கும், தாரதம்மியம் ஒன்றுமில்லை என்று அறியும். ஏனெனில், பிரிதிவீ அப்பு தேயு

வாயு ஆகாசங்களும் இந்திரியங்களும் மனமும் க்ஷேத்திரக்ஞனுமாகிய சகல பிரபஞ்சமும் அந்த ஸ்ரீமந்நாராயணனே. எப்படியென்றால், சகல பூதங்களுக்கும் ஆத்துமாவாய் எல்லாவற்றையும் தனக்குச் சரீரமாக உடையவன் ஆகையால் கை கால் முதலிய சரீரத்தின் செய்கை சரீரியான ஆத்துமாவுக்கு உபகாரமாவதுபோல், பிரமாதிகள் செய்யுஞ் சிருட்டிமுதலானவையெல்லாம் அவனுக்கு உதவியாக இருக்கும். இதுவரையிலும் நாம் சொன்ன விஷயங்களையெல்லாம் சுருக்கிச் சொல்லுகிறோம். அதென்னவெனில், சேதனு சேதனங்களான சகல பிரபஞ்சமும் சரீரமா யிருக்கும்படியான சொரூபமுடையவன் ஆகையாலே பிரமாதி ரூபங்களினாலே சிருட்டிக்கிறவனும் அவனே. சிருட்டிக்கப்படுகிறவனும் அவனே. இரட்சிக்கிறவனும் அவனே. இரட்சிக்கப்படுகிறவனும் அவனே. சங்கரிக்கிறவனும் அவனே. சங்கரிக்கப்படுகிறவனும் அவனே. ஆனால் தான் சர்வ சக்தனுயிருக்க பிரம்மாதிகளை இடையில் வைப்பது ஏனெனில், அவர்களுக்கு இப்படி வரங் கொடுத்து இருக்கின்றான். ஆகையால், மயித்திரேயரே! அந்த ஸ்ரீமகாவிஷ்ணு பகவானே! சர்வவிதத்திலும் உபாசிக்கத்தக்கவனுய் இருக்கின்றனன்.

*இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

## மூன்றும் அத்தியாயம்

# காலப்பிரமாணம்

இப்படி அருளிச்செய்யக் கேட்ட மயித்திரேயர் பராசர முனீந்திரரை நோக்கி, முனிசிரேட்டரே! நிர்க்குணமும் அப்பிரமேயமும் சுத்தமும் நிர்மலமுமான பரப்பிரமத்துக்குச் சிருட்டி ஸ்திதி சங்கார கர்த்துருத்துவம் எப்படிகூடும்? என்று கேட்க, பராசரமுனிவர் அருளிச் செய்கிறார்;

அக்கினிக்கு உஷ்ணகுணம் சுபாவமாயிருப்பது போல, சர்வ பூதங்களுக்கும் அவாங்மனச கோசரமான

சக்தி விசேஷங்கள் அநேகமுண்டு. அப்படியே எம்பெருமானுக்கும் சிருட்டி முதலானவைகளுக்குக் காரணமான சக்திகளுண்டு. அதினாலே பரமாத்துமா சிருட்டி ஸ்திதி லயங்களைச் செய்தருளுவன். ஸ்ரீமந்நாராயணன் பிரபஞ்ச சிருட்டி உண்டாக்கினவிதஞ் சொல்லுகிறேன் கேளும்.

நாராயணனென்று திருநாமமுடைய பகவான் லோகங்களுக்குப் பிதாமகனான பிரமாவாக அவதரித்தானென்று உபசாரத்தினால் சொல்லப்படுவது அவன்மகா ராத்திரியான பிரளயத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய திருமேனியில் பிரவேசித்திருந்து மறுபடியுந் தோன்றுகிறதினாலே என்றறியவும். அந்தப் பிர்மாவுக்கு அவருடைய அளவினால் நூறு வருஷகாலம் ஆயுசு உண்டு அதற்குப் பரமென்று பேர். அதில்பாதி பரார்த்தமென்று சொல்லப்படும். காலமானது விஷ்ணுசொரூபமென்று முன்னே தானே சொல்லி இருந்தோமே, அந்தக் காலத்தினாலே சதுர்முகனுக்கும் அந்திய முண்டாகும். அதனாலேயே மலைகள் சமுத்திரங்கள் முதலான சகல சராசரங்களுக்கும் வளர்தல் நசித்தல் முதலானவை உண்டாகும். அது அப்படியிருக்க, இனி காலப்பிரமாண இயல்பு சொல்லுகிறோம். மயித்திரேயரே! நிமிஷம் பதினைந்து கூடினால் ஒரு காஷ்டை; அந்தக் காஷ்டை முப்பதானால் ஒருகலை; அந்தக் கலை முப்பதானால் ஒரு முகூர்த்தம். அந்த முகூர்த்தம் முப்பதானால் மனுஷியர்களுக்கு ஒரு அகோராத்திரம், அதாவது ஒருநாள்; அந்த அகோராத்திரங்கள் முப்பதானால் இரண்டு பக்ஷங்களோடு கூடின ஒரு மாசம்; அந்த மாதம் பன்னிரண்டானால் தட்சிணாயனம் உத்தராயணம் என்கின்ற இரண்டு அயனமுஞ் சேர்ந்த ஒருவருஷமாம். தட்சிணாயனம் தேவதைகளுக்கு இராத்திரியும் உத்தராயணம் பகலுமாய்யிருக்கும். தேவமானத்தில்பன்னீராயிரம் வருஷமானால் ஒரு சதுர்யுகம். அதில் கிருதயுகத்துக்குப் பிரமாணம், நாலாயிரமும் சந்திசந்தியம்சங்கள் எண்ணூறு திவ்ய சம்வச்சரமுமாய் இருக்கும். திரேதாயுகத்துக்குப் பிரமாணம், சந்தி சந்தியம்சங்களுட்பட மூவாயிரத்து அறுநூறு திவ்ய சம்வச்ரமாம். துவாபரயு

கத்துக்கு, சந்தி சந்தியம்சங்களுள்பட இரண்டாயிரத்து நானூறு திவ்ய சம்வச்சரமாம். கலியுகத்துக்கு ஆயிரமும் சந்தி சந்தியம்சங்களின் வருஷம் இருநூறுமாய் இருக்கும். சந்தியாவது யுகத்துக்கு முன்னுனகாலம். சந்தியம்சமாவது யுகத்துக்குப் பிற்பட்டகாலம். சந்தி சந்தியம்சங்களுக்கு இடையில் இருக்கும் காலமானது கிருத திரேதா துவாபர கலிகளென்று பெயர்பெற்ற ஒரு யுகமென்று சொல்லப்படும். இப்படிக்குக் கிருதத் திரேதா துவாபர கலியுகங்களென்கிற சதுர்யுகங்களும், ஆயிரந்தரந் திரும்பினால் சதுர்முகனுக்கு ஒரு பகலென்று சொல்லப்படும். அந்தச் சதுர்முகனுடைய தினத்தில் பதினாலு மநுக்கள் அதிகாரம் பண்ணுவார்கள். இனி மநுவந்தரப் பிரமாணங் கூறுவோம்.

மயித்திரேயரே! சத்தரிஷிகளும், வசு ருத்திராதித்தியர் முதலான தேவதைகளும், இந்திரனும், மநுக்களும், மநுபுத்திரரான ராஜாக்களும் ஏக காலத்திலே சிருட்டிக்கப் படுவார்கள். ஏக காலத்தில் சங்கரிக்கப்படுவார்கள். தேவமானத்தில் எழுபத்தொரு மகாயுகம் ஒரு மநுவந்தரமென்று சொல்லப்படும். இந்திராதி தேவதைகளுக்கும் மனுக்களுக்கும் இதுவே ஆயுட்பிரமாணமாம். ஒரு மநுவந்தரத்துக்குத் தேவமானத்தினாலே எட்டுலட்சத்து ஐம்பத்தீராயிரம் வருஷங்கள் அளவாம் அது மனுஷியமானத்தினாலே முப்பதுகோடியும் அறுபத்தேழுலட்சத்து இருபதினாயிரம் வருஷங்களாம். இந்தப்படிப் பதினாலு மநுவந்தரங்களானால், நான்முகனுக்கு ஒருபகலாம். இதன் முடிவில் ஒரு நைமித்திகப் பிரளயம் உண்டாகும். இந்தத் தினப்பிரளயத்தில், பூலோக புவர்லோக சுவர்லோகங்கள் தகிக்கப்பட்டு நாசமாகும். அப்போது மகாலோகத்திலே வாசம் பண்ணுகிறவர்கள், அந்தப் பிரளயாக்கினிச் சுவாலையினுடைய வேகத்தைப் பொறுக்கமாட்டாமல், தங்கள் லோகத்தைவிட்டு ஜனலோகத்துக்குப் போவார்கள். அப்பால் சத்தசாகரங்களும் பொங்கித் திரிலோகங்களையும் ஏகார்ணவஞ் செய்தசமயத்தில் நாராயணாத்மகனை இரணியகர்ப்பன் திரிலோகங்களையும் விழுங்கின எம்பெருமானுடைய அநுப்பிரவேசதத்தினாலே பருத்தவ

ஞகி, அவனுடைய நாபிக்கமலத்தில் இருக்கையாலே ஆதிசேஷஞகிற சயனத்தில் சயனித்துக்கொண்டு, ஜன லோக நிவாசிகளான யோகீசுரர்களால் தியானிக்கப்பட்ட வனுய், முன் சொல்லப்பட்ட பகலளவு, ராத்திரி யோக நித்திரை செய்தருளுவன். இப்படி ஆயிரஞ் சதுர்யுகப் பிரமாணமான ராத்திரியுங் கடந்தபின்பு பதுமசம்பவ ஞன பிதாமகன் மீண்டும் சராசரங்களைச் சிருட்டிப் பான். இப்படிப்பட்ட தினங்களைக்கொண்ட சம்வச்ச ரம் நூருல் சதுர்முகனுக்கு ஆயுசு முடியும். அதில் ஐம்பது சம்வச்சரங்கள் பரார்த்தமென்று சொல்லப் படும். முன்னெரு பரார்த்தம் ஆயிற்று. அது பிராம்ம மென்கிற கல்பம். அது சமார்த்தமான காலம். இப் போது இரண்டாம் பரார்த்தம் நடக்கின்றது. இது வராக நாமகமான முதற்கல்பம்.

*மூன்ரும் அத்தியாயம் முற்றிற்று.*

---

## நான்காம் அத்தியாயம்

# ஸ்ரீ வராஹாவதார வைபவம்

இப்படியாக அருளிச்செய்த பராசரமுனிவரை நோக்கி. ஓ முனிசிரேஷ்டரே! நாராயணனென்கிற திருநாமத்தையுடைய அந்தப் பிரமஸ்வரூபியான பக வான், இந்தக்கல்பத்தின் ஆதியிலே சர்வபூதங்களையும் எந்தப்படி சிருட்டித்து அருளினரோ அது அடியே னுக்கு விசதமாகும்படி முந்திய பாத்தும கல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் பின்னை இந்த வராக கல்ப சிருஷ்டியை அறிய விரும்புகின்றேன் என்ன, பராசரர் தம் சிஷியரான மயித்திரேயரைக் கடாக்ஷித்து அருளிச் செய்கின்ருர்.

ஓ மயித்திரேயரே! பிரஜாதிபதிகளுக்கு ஆதி பதியாய், நாராயணுத்துமகனுய், தேவதேவனுமான அந்தப் பிரமரூபியான பகவான், பிரஜைகளைச் சிருஷ் டித்த விதத்தை அறிவிக்கிறேன் கேளும். முன்சொன்ன படி சதுர்யுக சஹஸ்ர சங்கையான ராத்திரியெல்லாம் யோகநித்திரை செய்தருளி, விடியற்காலத்தில் நித்திரை

தெளிந்து பிரபோதம் அடைந்து, சத்துவ குணம் மேலிட்டவனாய், சதுர்முகன் சூனியமான மூன்று லோகத்தையும் மறுபடியும் சிருஷ்டிக்கத் திருவுள்ளமானான். பராத்பரனும் ஷட்குண ஐசுவரிய சம்பன்னனும் அனாதியும் சர்வஜகத்காரண பூதனும் சதுர்முக சொரூபனுமான அந்த ஸ்ரீமந்நாராயணனே சர்வ லோகங்களுக்கும் பிரபு. மயித்திரேயரே! சிருஷ்டி காலத்தில் பிரமாவினிடத்தில் அனுப்பிரவேசித்துச் சிருஷ்டியை நடத்துகின்றான்.

அவன் மகாசலத்திலே சயனித்திருந்தானன்றோ. இதனாலே மநுவாதி மகாரிஷிகள் நாராயண சப்த நிர்வசனத்தைத் தெரிவிக்கிற சுலோகத்தை அருளிச் செய்திருக்கின்றார்கள். நர சப்த வாச்சியனான பரமாத்மாவினிடத்தில் சனித்த உதகங்கள் நாரங்களென்று சொல்லப்படும். * அந்த நாரங்கள் அவருக்குப் பிறப்பிடம் ஆனபடியினாலே அந்தத் தேவனுக்கு நாராயணனென்கிற திவ்யதிருநாமம் உண்டாயிற்று. இப்படித் திவ்ய திருநாமமுடையவனும், ஜகத் பிரபுவுமான அந்த எம்பெருமான், நீர்மேல் தாமரையிலை யொன்று மிதக்கக்கண்டு, ஏகார்ணவமான பிரளயோதகத்தில் முழுகியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து, முன் கல்பத்தில் லோகரக்ஷணார்த்தமாக மச்சிய கூர்மாதி திவ்விய அவதாரங்களைச் செய்தருளினாற்போல, அப்போது சகலலோக ரக்ஷணத்திற்காகவே ஸ்திரமான திருவுள்ளமுடையவனாகி வேதங்களும் வேதங்களாலே சொல்லப்பட்ட யாகாதி தருமங்களுமாக நிரூபிக்கத்தக்கதான ஸ்ரீவராகாவதாரத்தைச் செய்தருளி, ஜனலோகத்திலே இருக்கிற ஸனக ஸனந்தனாதி யோகீந்திரர்கள் வேத வசனங்களாலே வெகுவிதங்களாகத் துதிக்கப்பெற்று, தமக்குத்தாமே ஆதாரமாகி, ஏகார்ணவமான பிரளயோதகத்தில் பிரவேசித்தருளினான். இவ்விதமாய்த்

* இங்கே தண்ணீர் மற்றுமுள்ள தத்துவங்களுக்கும் உபலக்ஷணம்; ஆகவே சகலத்திலுமுள்ளவனென்றும், சகலத்துக்குங் காரணனென்றும், நாராயணனென்னுந் திருநாமத்தினாற் சொல்லப்படும். ஆனதினாலே, எம்பெருமானுடைய நாபிக்கமலத்தில் லயப்பட்டிருந்து, மறுபடியும் சிருஷ்டிகாலத்தில் தோன்றி, பகவானால் அநுப்பிரவேசிக்கப்பட்டு, சிருஷ்டிசெய்யும் பிரமனுக்கு அத்திருநாமம் பொருந்தாதெனவறிக.

தன்னை உத்தரிப்பதற்காகப் பாதாளத்துக்கு எழுந்தருளின எம்பெருமானைப் பார்த்து, பூமிபிராட்டியானவள் சந்துஷ்டா அந்தரங்கையாய் அவருக்குத் தெண்டன் சமர்ப்பித்து விநய வினதகாத்திரையாய்ப் பக்திபூர்வமாகத் துதிபண்ணுவாளாயினாள்.

"ஓ தாமரைபோன்ற திருக்கண்களுள்ளவனே! சங்க சக்கர கதாதி திவ்யாயுதமும் உள்ளவனே! உனக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன். பூர்வத்திலே மகார்ணவத்தில் முழுகிக்கிடந்த என்னை நீயே உத்தரித்தாய். இப்போதும் அப்படியே அடியேனை உத்தரித்தருள வேண்டும். ஓ ஜனார்த்தனா! உன் கடாக்ஷத்தினாலே ரக்ஷிக்கப்பட்ட நானும் சல தேஜோ வாயு ஆகாசங்களும், மகத்தகங்கார தன்மாத்திரைகளும், பிரகிருதியும், சீவனும், உன்னுடைய சரீரங்களன்றோ! க்ஷேத்திரக்கிய சொரூபனும், பரமாத்மாவும், சமஸ்த ஜகத்வியாபகனுமான உனக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். அவ்வியக்தமான சூக்ஷமப் பிரக்ருதியும் வியக்தமான பிரபஞ்சமும், காலமும், சொரூபமாக உடையவனான உனக்கு நமஸ்காரம் பண்ணுகின்றேன்."

"பிரமரூபமும் ஸ்வயரூபமும் ருத்திரரூபமும் தரித்து, சர்வ பூதங்களுக்கும் சிருட்டிகர்த்தாவும் ரக்ஷகனும் சங்காரகனுமாய் இருந்து, கல்பாந்தகாலத்தில் சகல பூதங்களையுங் கிரகித்து, மூன்று லோகங்களையும் தண்ணீர் பொங்கி மூழ்த்தும்படி செய்து, திருவனந்தாழ்வானாகிற திவ்ய சயனத்தில் சயனித்து மகாயோகிகளாலே தியானிக்கப்பட்ட கோவிந்தன் நீயன்றோ. பராத்பரனுந் திவ்வியனுமான உனது நிஜசொரூபத்தை எவராகிலும் அறிவரோ. நீ ஜகத்தை ரக்ஷிக்க வேண்டி லீலார்த்தமாகத்தரித்த, அந்த மச்சியகூர்ம வராகாதி அவதாரங்களையன்றோ தேவர்களும் ஆராதிக்கின்றார்கள். மோக்ஷத்தை அபேக்ஷிக்கிற மகரிஷிகளும் பரப்பிரமமான உன்னை ஆராதித்து முத்தராய்ப் பரமானந்தத்தை அடைகிறார்கள். எல்லாவற்றிற்கும் ஆதாரமும் ஆதேயமும் தாரகனும் பிரகாசகனுமாகையாலே, ஸ்ரீ வாசுதேவனென்கிற திருநாமமுள்ள உன்னை

ஆராதியாமல் எவன் முத்தியடைய மாட்டுவான். மனதினாலே கிரகிக்கப்படுகிற சுகமுதலானதும், கண் முதலிய இந்திரியங்களாலே கிரகிக்கத்தக்க ரூபாதிகளும், புத்தியினாலே பரிச்சேதிக்கப்படும்படியான பிரமாணுந்தரங்களும், உன் சொரூபங்கள் அன்றோ. ஓ தேவ தேவனே! உன்னிடத்திலே சனித்து, உன்னை ஆசிரயித்து உன் சரீர பூதையாய் உன்னிடத்திலேயே நிலைத்திருப்பேன் ஆகையால், லோகங்களெல்லாம் அடியேனை * மாதவியென்று பிரசித்தமாய்ச் சொல்லும். சகல ஞான சொரூபனே! நீ ஜயசாலியாகக் கடவை; அதாவது, நீ வாழ்க. ஸ்தூலப்பிரபஞ்ச சொரூபனே! நீ ஜயிக்கக்கடவை. அவ்யயனே! வாழ்க. அளவில்லாதவன் ஆகையாலே, அனந்தனென்னுந் திருநாமமுடையவனே! ஜய ஜய. வியக்தபூதாதி சொரூபனே! அவ்வியக்தரூபனே! ஜய ஜய. மகாப்பிரபாவா! உத்தகிருஷ்டங்களுக்கும் நிக்ருஷ்டங்களுக்கும் ஆத்துமாவானவனே! ஜயஜய. விசுவாத்மகனே! ஜயஜய. எக்கியங்களுக்கு அதிபதியே! நீ ஜயஜய. யக்கியங்களும் வஷட்காரமும் நீயே. பிரணவமும் திரேதாக்கினிகளும் நீயே. சதுர் வேதங்களும் நீயே. வேதாந்தங்களும் நீயே. அந்த யக்கியத்துக்கு உரிய புருஷனும் நீயே. ஓ புருஷோத்தமா! சூரிய சந்திராதி கிரகங்களும், அசுவினியாதி நக்ஷத்திரங்களும், மற்றுமுண்டாகிய தாரகா கணங்களும், மூர்த்தமான திரவியங்களும், மூர்த்தம் அல்லாதவைகளும், காணப்பட்டவைகளும், காணப்படாதவைகளும், மற்றும் அடியேனாலே சொல்லப்பட்டதும், சொல்லப்படாததும், சமஸ்தமும் நீயே. ஓ சகலமான தேவதைகளுக்கும் மேலான ஸ்வாமி! இப்படி எல்லாவற்றிற்கும் ஆத்தும பூதனான உனக்குத் தெண்டன் ஸமர்ப்பிக்கின்றேன். இன்னுமின்னும் உனக்கு நமோ நம:"

இவ்விதமாய்ப் பூமிபிராட்டி வெகுவாய் ஸ்துதி பண்ண, அந்தப் பூமியைத் தரிப்பவனான ஸ்ரீயப்பதியானவன் வராக ரூபத்துக்கு அநுகுணமான சாமவேத

* மாதவி என்கிற பதத்துக்கு மாதவனுடைய சம்பந்தமானவள் என்பது பொருள்.

மயமான குர்க்குர சத்தத்திஞலே பூமிபிராட்டி செய்த தோத்திரத்திற்குத் திருவுள்ள முகந்ததைக் காட்டியருளிஞன். பின்பு மலர்ந்த செந்தாமரைமலரை ஒத்த திருக்கண்கள் உடையவனும், கருநெய்தற்பூவை ஒத்து விளங்குந் திருமேனி உடையவனுமான மகா வராகரூபமுடைய ஸ்ரீமந்நாராயணன் கோட்டு நுனியாலே பூமியை உயரகொண்டு மகா நீலமலைபோலப் பாதாளத்தினின்றும் எழுந்தருளிஞன். இப்படித் தோன்றிய ஸ்ரீயக்கிய வராக மூர்த்தியினுடைய சுவாச மாருத வேகத்திஞல் எழும்பிய மகார்ணவ சலமானது, ஜன லோகம் வரைக்கும் பரந்து, அங்கே பகவத்தியானஞ் செய்துகொண்டு மகாபரிசுத்தராய் இருக்கிற ஸனக ஸனந்தனதிகளுடைய தேகங்களில் பரிசித்து, அவர்களை மேலும் பரிசுத்தர் ஆக்கியது.

அந்தச் சமயத்திலே ஏகார்ணவமான அந்தச்சலம், ஸ்ரீயக்கியவராக மூர்த்தியினுடைய குளம்பு தாக்கினதிஞலே பிளந்த அண்டகடாகத்தின் உள்ளே, பாதாளத்துக்கு வெகு இரைச்சலுடனே இறங்கிற்று. அந்த மகா வராக மூர்த்தியினுடைய பிரளயமாருத சமானமான நிசுவாசத்தின் வேகத்திஞலே, பூலோக வாசிகளான ஜனங்கள் தள்ளப்பட்டவர்களாய், அப்புறம் போய் விட்டார்கள். இவ்வாறு ஸ்வாமி பிரளயார்ணவ ஓதகத்திஞல் நனைந்த திருவுதரத்தோடு கோட்டு நுனியில் பூமியை எடுத்துக் கொண்டு, ரசாதலலோகத்திலிருந்து எழுந்தருளி, சர்வ வேதாத்மகமான திவ்விய திருமேனியை உதறியருளும் அளவில், அந்த வராக மூர்த்தியினுடைய ரோம கூபங்களினடுவே நின்று காணப்பட்ட ஜனலோக நிவாசிகளான ஸனக ஜனந்தன ஸனத்குமாராதி திவ்யயோகிகள் ஆனந்த மிகுந்து அதிக பக்தியுடனே முடிவணங்கிக்கொண்டு, புளகாங்கித சரீரர்களாய்க் கெம்பீரமும் பயங்கரமுமான கண்களுடையவனை வராகப்பெருமாளைத் துதி செய்தருளிஞர்கள்.

“பிரமன் முதலான லோகேசுவரர்களுக்கு எல்லாம் மேலான ஈசுவரனே! நீ ஜயிக்கக் கடவை. பிரமருத்திரர்களைப் படைத்ததனலே கேசவன் என்னும் உபநாம

முடையவனே! சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்கிற பஞ்சாயுதங்களைத் தரித்தவனே! எல்லாம் செய்ய வல்லவனே! சிருட்டி ஸ்திதி சங்காரங்களுக்குக் கர்த்தாவும், ஆள்பவனும், பக்தர்களுக்கு எல்லாம் பரமப்பிராப்பியனும் நீயே. ஸ்வாமி! * வேதங்கள் உன்னுடைய சரண கமலங்களில் இருக்கின்றன. யூபஸ்தம்பங்கள் உன்னுடைய கோரைப்பற்கள். யக்கியங்களெல்லாம் உன்னுடைய தந்தங்களில் இருக்கின்றன. நானாவிதமான வேதிகைஸ்தான சயனங்களெல்லாம் உன் திருமுகத்தில் இருக்கின்றன. அக்கினியே உன்னுடைய நாக்கு. உன்னுடைய ரோமங்களே தருப்பைப் புற்கள். ஆதலால் யக்கியரூபமாய், யக்கியத்தினால் ஆராதிக்கப்படும் புருஷன் நீயே. நீ இன்னும் யக்கியரூபியாய் இருப்பதை விண்ணப்பஞ் செய்கின்றோம். ஓ மகாத்துமாவே! இரவும் பகலும் உன்னுடைய திருக்கண்கள். சகல வேதங்களுக்கும் ஆதியான பிரணவமே உன்னுடைய சிரசு. புருஷ சூக்தமுதலான சூக்தங்கள் எல்லாம் உன்னுடைய பிடரின் மயிர்கள். ஓமத்திரவியங்களெல்லாம் உன்னுடைய நாசிசுரூபம் ஸ்ருக்கு என்னும் ஓமக்கருவி உன் திருமுகமண்டலம். சாமவேதமே உன்னுடைய கம்பீரமான நாதம். பிராக் வம்சமென்கிற அக்கினி சாலையின் முன்புறமானது உன்னுடைய திவ்ய திருமேனி. சத்திர யாகங்களே உன்னுடைய அவயவசந்திகள். யாகாதிகருமங்களும் குளம் வெட்டுதல் முதலான தருமங்களும் உன்னுடைய கர்ணங்கள். இப்படியாக

* எம்பெருமான் ஸ்ரீவராகாவதாரத்தினால் லோகோத்தாரணஞ் செய்தருளி, வேதங்களாலே பகவதாராதனமாகப் பிரதிபாதிக்கப்பட்ட யாகாதி தருமங்களைப் பிரவர்த்திப்பித்தபடியினாலே, ஸ்வாமியை யக்கிய புருஷனென்றும், யக்கியவராகன் என்றும் ரிஷி அருளிச்செய்தார். அதற்கேற்ப யாகாதிகளை அவயவமாக நிருபித்தபடி எங்ஙனமெனில் வேதங்கள் நான்காய்த் தருமப் பிரவர்த்தங்களாகையாலே திருவடிகளாகவும், யூபஸ்தம்பங்கள் பசுக்களைப் பந்திக்கும் ஸ்தானங்களாகையாலே கோரைப் பற்களாகவும், அவிகளைக் கொள்ளுமிடமாகையாலே யக்கியங்கள் திருமுத்துக்களாகவும், ஓமஸ்தானமாகையாலே திருமுகம் சயனங்களாகவும், அவியைப் புசிப்பதாகையாலே அக்கினி நாக்காகவும், யக்கியசாலையில் ஆவிர்ப்பவித்த எம்பெருமானுக்கு உரோமம் போன்றமையாலே தருப்பைகள் உரோமங்களாகவும், யாககாலங்களைக் காட்டுகிறபடியினாலே இராப்பகல் செய்யுஞ் சந்திர சூரியங்கள் திருக்கண்களாகவும், பிரணவம் பிரதானமாகையாலே திருமுகையாகவும், இப்படி நிருபிக்கப்பட்டன.

மூர்த்தியாய் அனாதியாயுள்ள ஷட்குண ஐசுவரிய சம்பன்னனான எம்பெருமானே! அடியேங்களிடத்தில் திருவுள்ளம் இரங்கவேண்டும். திருவடிவைப்பினாலே பூமியை ஆக்கிரமித்து, முதலில் நின்ற சொரூபமும், (அல்லது) பதம் கிரமம் என்கிற ஏற்பாடுகளோடுகூடி, அளவற்றதாய், ஆதியில் நின்ற சப்தப்பிரமமும் நீயே. அக்ஷர சொரூபியாயும் க்ஷமிக்குந் தன்மை யில்லாதவனாயும் சகல சொரூபியாயும் இருக்கிற ஸ்வாமி சராசரமயமான உலகங்களுக்கெல்லாம் நீயே ஒப்பில்லாத் ஈச்வரனாயும் தம்தம் விருப்பங்களைப் பிரார்த்திக்கத் தக்கவனாய் இருக்கிறாயென்று அறிந்தோம். ஆதலால் உன்னையே பிரார்த்திக்கின்றோம். கிருபை செய்யவேண்டும், லோக நாதனே! திவ்வியமான உன்னுடைய கோரப்பல்லின் நுனியில் காணப்பட்டிருக்கிற இந்தச் சமஸ்த பூமண்டலமானது, தாமரைத் தடாகத்திலே பிரவேசித்து விளையாடுகிற மதயானைக் கொம்பிலே சேறுடனேகூடின பதுமபத்திரம் எப்படியிருக்குமோ அப்படிக் காணப்படுகின்றது. ஒப்பில்லாத மகிமையுள்ளவனே! பூமிக்கு மாகாயத்திற்கும் நடுவாயிருக்கும் அந்தரிக்ஷமென்பது யாதுண்டோ, அதெல்லாம் விசுவரூபதரனான உனது திவ்விய மங்கள விக்கிரகத்தினாலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது. சர்வ லோகங்களையும் வியாபிக்கத்தக்க காந்தியுடையவனே! நீ இந்தப் பிரபஞ்சத்திற்கு இதமுண்டாகும்படி திருவுள்ளம் பற்றவேண்டும். ஓ ஜகந்நாதா! உண்மையான பொருள் நீயொருவனேயன்றி மற்றொன்றுமில்லை. எப்படி யென்னில், சராசரமயமான சகலமும் உன்னாலே வியாபிக்கப்பட்டு உன் திருமேனியாய் இருக்கிறபடியினாலே இதுவெல்லாம் உன் மகிமையேயாகிறது. ஆனதுபற்றி நீ ஒருவனே பரமார்த்தமாகிறாய். உலகத்துக்குக் காரணபூதனாய், அதனிடத்தில் உள்ளும் புறமும் வியாபித்திருக்கின்ற உன் மகிமை சொல்லத்தக்கதோ! திருஷ்டிபதத்திற்கும் மனதுக்கும் எல்லாம் ஞானமயமான உன்னுடைய சரீரங்கள் சத்து அசத்து என்கிற விவேகமில்லாத அஞ்ஞானிகள் உன்னுடைய சரீரமான பிரபஞ்சத்தை

பிராந்தி ஞானத்தினாலே வேறான தேவமனுஷ்யாதி ரூபமாக நினைக்கின்றனர். புத்தியீனர்களான ஜனங்கள் ஞானமயமான தங்களுடைய நிஜசொரூபங்களை அறியாமல் தான் அமரனென்றும், தான் மனுஷியனென்றும், இது பசுவென்றும், இது தாவரமென்றும், பிராந்தி வசத்தினாலே நினைத்துக்கொண்டு, மோகார்ணவத்தில் முழுகி இருக்கிறார்கள். இப்படிப் பிரகிருதி புருஷவிவேகமில்லாத சேதனங்கள், சகல ஜகத்காரண பூதனும் சமஸ்த பிரபஞ்ச சரீரகனுமான உன் சொரூபத்தை எப்படிக் காண்பார்கள். எவர்கள் ஆத்தும சொரூபத்தை ஞானசாரமாக அறிந்து, பகவானை அனுபவிக்கத்தக்க யோகநிலைக்கு யோக்கியமான பரிசுத்த மனமுடையவர்களோ அவர்கள் பிரகிருதி விகாரமான தேவ மனுஷ்யாதி ரூபமாய்க் காணப்படுகிற இந்தப் பிரபஞ்சத்தை ஞானகுணமுள்ள ஆத்தும சொரூபமாகவும் உன் திருமேனியாகவும் காண்கின்றார்கள். "ஓ! எல்லாருக்கும் மேலான ஸ்வாமி! சகலத்துக்கும் அந்தர்யாமியா யிருப்பவனே சகல லோகங்களுக்கும் இருப்பிடமானவனே! அறியக்கூடாத மகிமை யுடையவனே! சேவிப்பவர்கள் இருதயம் குளிரும்படி செந்தாமரை போல மலர்ந்த திருக்கண்களுடையவனே! இந்தப் பூமியை உத்தரித்து அடியேங்களுக்குச் சுகத்தைக் கொடுத்தருளவேண்டும். சர்வைசுவரிய முதலான சற்குணமுடையவனே! கோவிந்தனே! நீ சத்துவகுணப் பிரதானனாகி இந்த ஜகத்தையெல்லாம் ரட்சிக்கத் திருவுள்ளம் பற்றினாய். ஆகையால் பூமியை உத்தரித்து, ஸ்தானத்தில் நிறுத்தி, எங்களுக்குக் க்ஷேமத்தைக் கொடுத்தருள வேண்டும். தாமரைக் கண்ணனே! லோகங்களுக்கு உபகாரமாகவன்றோ நீ சிருட்டியில் பிரவேசிப்பது; உனக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றோம். அடியேங்களுக்குச் சுகமருளக் கடவை" என்று இப்படி ஸனக ஸனந்தனாதி யோகீந்திரர்கள் அனேகவிதமாகத் தோத்திரம் பண்ண, பூமியைத் தரித்தவனும், ஸ்ரீவராக ரூபனுமான பரமாத்துமாவானவன் மகார்ணவத்தினின்றும் பூமியை எடுத்துப் பழயபடியே ஜலத்தின்மேல் நிறுத்தி அருளினான்.

இவ்விதமாய் அந்தப் பெருவெள்ளத்தின்மேல் ஸ்தாபிக்கப்பட்ட பூமியானது கப்பல்போலவே உருக்குவிந்து பரந்ததாகையாலே, அந்த மகார்ணவ ஜலத்தில் மிதந்து கொண்டிருந்ததே அல்லாமல், முழுகவில்லை.

பின்பு சர்வகாரணமாய் அநாதியான ஸ்ரீஹரி பகவான் பூமிதேவி பிரார்த்தித்த பிரகாரம் அந்தப் பூமியில் தன்னுடைய சங்கல்ப மாத்திரத்தினாலே முன் எரிந்துபோன பர்வத முதலானவைகளை எல்லாம் மறுபடி முன்போலவே சிருட்டித்து அருளினான்.

இப்படியாக ஸ்ரீமந்நாராயணன் ரஜோகுணத்தை ஆசிரயித்து, நான்கு முகங்களோடு கூடின பிரமரூபத்தைத் தெரிந்து, ஏழு தீவாயிருக்கிற பூமி பாகங்களையும் மற்றும் புவர்லோக முதலான லோகங்களையும், மறுபடியும் முன்போலவே சிருட்டித்து அருளினான்.

எம்பெருமான், சிருட்டியிலே நிமித்தமாத்திரமே ஆகிறான். சிருட்டிக்கப்படும் வஸ்துக்களினுடைய சக்திகளே முக்கிய சக்திகளாகின்றன. மயித்திரேயரே! எம்பெருமான் மத்தியஸ்தனாயும் நிமித்தியகாரணனாயும் இருப்பன். ஆகையால் இப்படிச் சிருட்டிக்கிறதினாலே அவனுக்கு வைஷம்மியமும் நிர்த்தபத்துவமும் இல்லை. சீவன்கள், அநாதி கர்மவாசனா வசத்தினாலே பூர்வ கர்மானுரூபமாக நானாவித சரீரங்களை அடைந்து, நானாவித கர்ம மார்க்கங்களிலே சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன.

சர்வசமனும் சாக்ஷிபூதனுமான பரமபுருஷனைத் தவிரப் பிரபஞ்சத்துக்கு வேறொரு காரணமுமில்லை. சீவாத்துமாக்களுடைய அநாதி கர்மவாசனா ஜன்மாவினாலே நல்ல ஜன்மங்களும் கெட்ட ஜன்மங்களுமாய் அந்தந்த வஸ்துக்கள் மாறிவரும். ஆகையாலேதான் ஸ்ரீயப்பதி முக்கிய காரணமாய் இருந்தாலும், சேதனர்களுடைய கர்மங்களைக்கொண்டே சிருஷ்டி நானாவிதம் ஆகவேண்டி இருக்கையாலே, அவை பிரதானமாக உபசார வழக்கமாய்ச் சொல்லப்பட்டனவென்றறியும்.

நாலாம் அத்தியாயம் முற்றிற்று.

## ஐந்தாம் அத்தியாயம்

# தேவமனுஷ்யாதி சிருஷ்டி

இந்தப்படி பராசரமகாமுனி அருளிச் செய்யக் கேட்டு மயித்திரேயர், ஓ மகாத்துமாவே! அந்தப் பிர்மாவானவர் ஆதிகாலத்திலே, தேவதைகள் ரிஷிகள் பிதுர்க்கள், அசுரர், மனிதர் முதலானவர்களையும், விலங்குகளையும், பறவைகளையும், மற்றும் தாவரங்களையும், பூசரங்களையும், கேசரங்களையும், ஜலசரங்களையும், எந்த விதமாய்ச் சிருஷ்டித்தார்? அவைகளுக்குக் குணங்களும் சுபாவங்களும் ரூபங்களும் எவை? இந்த விஷயங்களை எல்லாம் விஸ்தாரமாக அடியேனுக்குக் கிருபை பண்ணவேண்டும் என்று கேட்க, ஸ்ரீ பராசரமாமுனிவர் அருளிச்செய்வாரானார்.

ஓ முனீந்திரரே! அந்தப் பிரமதேவன் பிரபஞ்ச சிருட்டிசெய்ய நினைத்துக்கொண்டு இருக்கையிலே, சர்வ நியாமகனை நாராயணனால் ஏவப்பட்ட நினையாத நினைவினாலே தாமசகுணப் பிரதானமான சிருஷ்டியொன்று உண்டாயிற்று. அது * தமசு, மோகம், மகாமோகம், தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம் என்று சொல்லப்பட்ட பேதங்களினாலே ஐந்துவிதமாய், விருட்சங்களும், புதர்களும், கொடிகளும் பூண்டுகளும், புல்லுகளுமான ஐவகைப்பட்ட தாவரசிருட்டியாய் இருந்தது. அது சுத்த தாமச சிருஷ்டியாகையாலே, தண்ணீர் முதலானவைகளைக் கிரகிப்பது முளைப்பது செழிப்பது முதலான காரியங்களுக்கேற்ற அற்ப அறிவுள்ளதே அன்றித் தன்னை இப்படிப்பட்டதென அறிவதும், சப்தாதி விஷயங்களையும் சுகதுக்கங்களையும் அறிவதுமாகிய அறிவு இல்லாததாயிருக்கும். பிதாமகன் அவைகளைப் பார்த்துத் தமோகுணப் பிரசுரமான இந்தத் தாவ

* தமஸ் - தேகாதிகளை ஆத்துமாவாக நினைத்தல். மோகம் - தேகசம்பந்தமான மக்கள் முதலானவர்களுக்குத் தன்னை அதிபதியாக நினைத்தல். மகாமோகம் - சப்தாதி விஷயங்களை யனுபவிக்கும் நினைப்பு. தாமிஸ்ரம்- அதற்கு இடையூறு வந்தால் உண்டாகுங் கோபம். அந்ததாமிஸ்ரம்-அவற்றை நாசப்படவொட்டாமல் காக்கவேண்டுமென்னும் மனவெழுச்சி இவை அவித்தையின் விருத்திகள்.

ரங்கள் முன்னே எப்படிப் பிறந்தனவென்றனன். ஆகையால், ஸ்தாவரங்கள் முக்கிய சிருஷ்டியென்று சொல்லப்படும். சதுர்முகன் இந்த ஸ்தாவரங்கள் லோகவியாபாரத்தை நடத்தும் சாமர்த்தியம் இல்லாதவை. ஆகையால், இவற்றால் பிரயோஜனமில்லை என்று சிந்தித்துக்கொண்டிருக்கையில், அவருடைய பாரிச பாகங்களில் இருந்து மிருகங்கள் முதலான திரியக்குசாதிகள் பிறந்தன. அவை பக்கங்களிலிருந்து குறுக்காய்ப் பிறந்தனவாகையாலே, திரியக்குகள் என்று சொல்லப்படும். அவையும் தமோகுணப் பிரதானங்கள் ஆகையாலே, விவேகம் இல்லாதவையாய், தாயைச்சேர்தல் முதலான அக்கிரமச் செய்கைகளுள்ளவர்களாய், அவிவேக மயமான தங்கள் ஞாயமே அதியுத்தம ஞானமாக நினைத்துக்கொண்டு, தேகத்தையே ஆத்மாவாக வெண்ணிக்கொண்டு, அகங்கார மயங்களாய், * இருபத்தெட்டு விதங்களாய், சுகதுக்க மாத்திரந் தெரிந்தவைகளாய், தகப்பன் தாய் அண்ணன் தம்பி யென்கிற சம்பந்தம் ஒன்றும் அறியாதவைகளாய் இருந்தன. அப்பால் சதுர்முகன் விவேக ஈனமான இந்தத் திரியக்கு சாதி

* இருபத்தெட்டு விதங்களாவன:—மாடு, ஆடு, எருமை, மான், பன்றி, கவயம், ருரு, அவி, ஒட்டகம் ஆகிய இரட்டைக் குளம்புள்ளவை ஒன்பதும், கழுதை, குதிரை, கோவேறுகழுதை, கவரம், சமரம், கவரி ஆகிய ஒற்றைக் குளம்புள்ள ஆறும்; நாய், நரி, செந்நாய், புலி, பூனை, முயல், சல்பகம், சிங்கம், குரங்கு, யானை, ஆமை, உடும்பு, முதலை ஆகிய ஐந்து நகங்களுடையவை பதின்மூன்றும்; ஆக மிருகசாதிகள் இருபத்தெட்டு விதம். இன்னும் அனேக மிருகங்கள் இருந்தாலும் அவையெல்லாம் இவற்றின் உட்பிரிவுகளாமெனவறிக.

இருபத்தெட்டுச் சத்தி வதமுள்ளவையென்றுஞ் சொல்லப்படும். வதமென்றால் கெடுதல். அவையாவன: முன்சொல்லப்பட்ட ஞானேந்திரிய கர்மேந்திரியங்களென்னும் பதினோரிந்திரியங்களின் கேடும், துஷ்டிகளென்கிற ஒன்பதும், சித்திகளென்கிற எட்டும் ஆகிய பதினேழுவிதமான புத்திகளின் கேடும் சேர்ந்து இருபத்தெட்டு விதங்களாம். பிரகிருதி, உபாதானம், காலம் பாக்கியம், சுதாரம், சம்சாரம், நேத்திரம், மாரீசகம், உத்தமாம்சம் இவ்வொன்பதும் துஷ்டிகள். இவற்றுள் பிரகிருதியாவது:—எட்டுவித பிரகிருதியில் சித்தம் லயப்பட்டதனால் முத்தனானேன் என்கிற சந்தோஷமாம். உபாதானமாவது:—சன்னியாசி வேஷந்தரித்தலினாலே பயன்பெற்றேனென்கிற சந்தோஷமாம். காலமாவது:—மற்றொரு காலத்தினால் சித்திக்குமென்கிற சந்தோஷமாய். பாக்கியமாவது:—பாக்கியத்தினாற் கிடைக்குமென்கிற சந்தோஷமாம். இந்நான்கும் ஆத்தியாத்துமிகமென்று சொல்லப்படும். பொருளைச் சம்பாதித்தல், காப்பாற்றல், செலவழித்தல், வனுபவித்தல், போகத்தில்

களினாலேயும் பிரயோசனமில்லை. ஆகையால் விசேஷ சிருட்டி செய்யவேண்டுமென்ற சிந்தனை கொண்டிருக்கையில், அந்த அம்புச கர்ப்பனுடைய சரீரத்திலே ஊர்த்துவ பாகத்திலிருந்து சத்துவகுணப் பிரதானராயும், சுகானுபவமும் ஆனந்தமும் மிகுந்தவராயும், உள்ளும் புறமும் அக்யானாவரணமும் இல்லாமல் ஆத்மக்கியானமும் இதரபதார்த்த விவேகமும் உண்டானவராயும், நித்திய சந்தோஷம் உள்ளவராயுமான தேவதைகள் உதித்தார்கள். அவர்கள் ஊர்த்துவ ஸ்தானத்திலிருந்து பிறந்தபடியினாலே ஊர்த்துவ சுரோதஸுக்களென்று பேர்பெற்று, பூமியைத் தீண்டாமல் இருந்தார்கள். பிதாமகரானவர் இப்படி மூன்றுஞ் சிருட்டியில் சத்துவகுணப் பிரதானராகப் பிறந்த தேவர்களைக் கண்டு சந்தோஷித்தார். ஆயினும் அந்தக் கமலாசனன், கர்மசாதக மாகாமையினாலே கேவல தேவசிருட்டியினாலேயும் பலமில்லை என்று நினைத்து லோகசாதனமான வேறொரு சிருட்டியுண்டாக்கும்படி சிந்தித்துக் கொண்டிருந்தார்.

---

வைராக்கிய மில்லாமை ஆகிய இவற்றில் கிலேசத்தையும் தோஷத்தையும் காண்பதனால் சப்த முதலான ஐம்புலன்களினும் பற்றற்றேனென்னும் சந்தோஷங்கள் ஐந்தும், சுகாதார முதலாகியவைகளாம். ஊகம், சப்தம் அத்தியயனம், முத்தாபத்தடை மூன்று, நட்புப்பேறு, தானம் ஆகிய இவ்வெட்டும் சித்திகளாம். அவற்றுள் ஊகமாவது:—உபதேசமில்லாமலே பொருளை யுன்னிப்பது. சப்தமாவது:—ஒரு சம்பந்த வசத்தில் சொல்லக்கேட்டு அதன் பொருளை யறிவது. அத்தியயனமாவது:—குருவுபதேசித்த மாத்திரத்தில் அவனிலும் அதிகமாகப் பொருளை யறிவது. வாகடத்தினால் ஆத்தியாத்துமிகமென்கிற உடலைப்பற்றின துன்பநீக்கலும், லௌகிக வுபாயங்களாலே ஆதிபவுதிகமென்கிற உலசத்தால் வருந் துன்பநீக்கலும், வணக்கம் மங்கலஞ் செய்கை முதலியவைகளால் ஆதி தெய்விகமென்கிற தெய்வத்தால் வருந் துன்பம் நீக்கலுமாகிய இம்மூன்றுமே முத்தாபத்தடை மூன்று. இவை முறையே மோதகம், பிரமுதிதம், மோதமானம் என்ற பெயரால் வழங்கப்படும். நட்புப்பேறாவது:—ஒருவரைச் சிநேகிப்பதனால் இஷ்டத்தைப் பெறுதல். தானமாவது:—வித்வான்கள் தவசிகள் இவர்களுக்குச் சிசுரூஷை செய்வதனால் வரும் பொருட்பேறு.

இவையெல்லாம் முத்தியைக்குறித்து முந்திய இடையூறுகளாம். இந்த விஷயங்களைச் சாங்கிய சாஸ்திரத்தில் பார்க்கக் கண்டுகொள்க.

இந்திரிய சத்திவதம் மனிதருக்கும் உண்டு. ஆயினும் புத்திவதமில்லாத அவர்களுக்குப் புத்திவதமுடைய மிருகங்களுக்குப்போலே அவ்வளவு துன்பமில்லாமைபற்றி மிருகங்களுக்கே இவை சிறப்பாகச் சொல்லப்பட்டனவென வறிக.

அப்படி யிருக்கையில், சத்திய சங்கல்பரான அவருடைய மத்தியஸ்தானத்திலிருந்து பூமியை நோக்கின சிருஷ்டியொன்று உண்டாயிற்று. அதில் மனிதர் ஜனித்தார்கள். அவர்கள் மத்தியதேகத்திற் ஜனித்தபடியினாலே மத்தியலோகத்திலே வாசம்பண்ணத் தக்கவர்களாய், ஒருகாலத்தில் சாத்துவிக குணாதிக்கமும், ஒரு காலத்தில் ராஜச குணாதிரேகமும், ஒரு சமயத்தில் தமோகுணாதிசயமும் உண்டானவர்களாய், துக்கத்துக்கு உடையவர்களாய், போசனாதிகாரியங்களைத் திரும்பித் திரும்பிச் செய்துகொண்டு, ஆத்தும மனோபுத்தி இந்திரியாதி விவேகங்களும், புறத்துள்ள வஸ்துக்களின் ஞானங்களும் உடையவர்களாய், லோகமரியாதையை நடத்தத் தக்கவர்களாய் இருந்தார்கள். இவர்கள் மேன்மை பொருந்திய சுரோதஸுக்கள் என்று சொல்லப்படுவார்கள்.

அப்பால் அந்த அம்புசாசனன் தாவரசாதிகளுக்கும், ஜந்துசாதிகளுக்கும், தேவதைகளுக்கும், மனுஷியர்களுக்கும், யதாக்கிரமமாக அவித்தையும் அசக்தியும் சந்துஷ்டியும் சித்தியும் ஆகிய நான்கு குண விசேஷங்களையும் உண்டாக்கினான். இது தாமசமாயும் சாத்துவிகமாயும் இருந்து அனுக்கிரக சிருட்டியென்று சொல்லப்படும்.

அப்பால் ஸனக ஸனந்தன ஸனத்குமார ருத்திராதிகளையும் சிருட்டித்தார். இது கவுமார சிருட்டியென்று சொல்லப்படும். மயித்திரேயரே! இப்படித் தாவரசிருட்டி, திரியக்கு சிருட்டி, தேவ சிருட்டி மானுஷ்ய சிருட்டி, அனுக்கிரக சிருட்டி, கவுமார சிருட்டி என்னும் ஆறுவிதமான சிருட்டி விசேஷங்களை அறிவித்தேன்.

சிருஷ்டி ஒன்பதுவிதமென்றுஞ் சொல்லப்படும். அதாவது, முன்னே மகத்தத்தின் சிருட்டியும், பின்பு ஏகாதச இந்திரியங்களுக்குக் காரணமான சத்துவ ரச தமோகுணாத்துமகமான அகங்கார சிருட்டியும், அப்பால் ஆகாசாதி பஞ்சமகா பூதகாரணங்களான தன்மாத்திரைகளின் சிருட்டியும், ஆகிய இந்த மூன்றும்

சமஷ்டி சீவசொரூபனான இரணியகர்ப்பனுடைய சங்கல்பம் இல்லாமலே சனித்ததனாலே பிராகிருத சிருட்டியென்று சொல்லப்படும். ஆயினும் அவனாலே உண்டான சிருட்டியென்றே சொல்லலாம். எப்படி என்றால், நித்திரையில் புருஷனுக்கு இச்சையில்லாமலே சுவாச நிசுவாசங்களும் நித்திரையும் பிறந்திருக்க, அவைகளுக்கு அவனைக் கர்த்தாவாக வழங்குவதுபோலே, மகத்தகங்கார தன்மாத்திரைகள் சதுர்முகனுக்கு முன்பே சம்பவித்தவை யானாலும், இரணியகர்ப்பனுடைய கர்மவிசேஷத்தினாலே உண்டானபடியினாலே, அதுவும் அவனுடைய கிருத்தியமென்றே சொல்லப்படும் முன்சொல்லப்பட்ட பிராகிருத சிருட்டி மூன்று ஒழிய, நான்காவதான தாவரசிருட்டியும், ஐந்தாவதான திரியக்கு சிருட்டியும், ஆறாவதான தேவ சிருட்டியும், ஏழாவதான மனுஷிய சிருட்டியும், எட்டாவதான அவித்தை முதலான அனுக்கிரக சிருட்டியும், ஆகிய சிருட்டிகள் ஐந்தும் பிரம்மாவின் விகிருதியினாலே உண்டானதினால் வைகிருதங்கள் என்று சொல்லப்படும். ஒன்பதாம் சிருட்டியாகிய கவுமாரம் பிராகிருத வைகிருதாத்துமகமாய் இருக்கும். இவ்விதம் இரணிய கர்ப்பனாலே உண்டாக்கப்பட்ட பிராகிருத வைகிருதங்களாய் ஜகத்துக்கு மூலங்களான நவவித சிருட்டியையுஞ் சொன்னேன். இனிச் சிருஷ்டி விஷயமாய் யாது கேட்க விரும்புகின்றீரென்ன, மயித்திரேயர் பராசர முனிவரைப் பார்த்து, ஓ முனிசிரேட்டரே! மனுஷியாதி சிருட்டிப் பிரகாரங்களைத் தேவரீர் சுருக்கமாக அருளிச் செய்தீர். அதைத் தெளிவாக அறியும்படிக்குப் பிரசாதித்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, அந்த மகா ரிஷிசிரேட்டர் அருளிச் செய்கின்றார்.

மயித்திரேயரே! அநாதி கர்மவாசனையினால் கட்டுண்டவர்களும் நானாவித கர்மபலங்களை அனுபவிப்பவர்களுமான சேதனர்கள், பூர்வவாசனா வசத்தாலே சங்காரகாலத்தில் சங்கரிக்கப்பட்டு, சிருட்டி காலங்களில் தேவமனுஷ்ய திரியக்குத் தாவர சன்மங்களாய்ப் பிறப்பார்கள். சிருட்டி காரியமுடையவனான பிதாமகனுடைய இச்சையினாலே (அம்பஸ்) என்கிற பேராலே சொல்

லப்பட்ட தேவாசுர பிதுர் மனுஷிய சாதிகள் நான்கும் உண்டாயின. அந்த விவரந் தெரியக்கேளும். கமலாசனன் சிருட்டி காரியார்த்தமாய் ஒருவித தேகத்தோடு கூடிச் சிந்திக்கையில், தமோகுண உத்திரேகத்தினாலே அவனுடைய இடையின்கீழ்ப்புறத்தில் இருந்து அசுரர் உதித்தார்கள். பின்பு அந்த விரிஞ்சன் தமோகுணாத்துமகமான அந்தத் தேகத்தை ஒழித்துவிட, அது இருள் மிகுந்த இராத்திரியாயிற்று. அப்பால் அம்புசாசனன் திரும்பியும் பிரஜா சிருட்டிசெய்ய நினைத்து வேறொரு தேகந்தரித்துச் சந்துஷ்டசித்தனாக இருக்க, அந்தத் தேவனுடைய முகாம்புசத்தில் இருந்து சத்வகுணாதிக்கமுள்ள தேவதைகள் ஜனித்தார்கள். மீண்டும் அப்பிதாமகன் அந்தச் சரீரத்தையும் விட்டார். அது சத்துவ குணமயமான பகலாயிற்று. அதனால் தேவதைகள் பகலிலேயும் அசுரர் இராத்திரியிலேயும் பலவான்கள் ஆனார்கள். பின்னும் பிதாமகன் திரும்பவும் சத்துகுண மிகுந்த வேறொரு தேகந்தரித்துத் தன்னைப் பிதாவைப்போல் நினைத்துக்கொண்டிருக்க, அவனுடைய பாரிசங்களின் நின்றும் பிதுர்தேவதைகள் உண்டானார்கள்.

இப்படிப் பிரமன் பிதுர்க்களைச் சிருட்டித்து அந்தச் சரீரத்தையும் விட்டுவிட, அது பகலிராத்திரிகளுக்கு மத்தியஸ்தமான சந்தியாயிற்று. பின்பு அந்தப் பதுமகர்ப்பன் கேவல ரஜோகுணாத்துமகமான வேறொரு சரீரத்தைத் தரித்து, ரசோகுணாதிகரான மனுஷியர்களைச் சிருட்டித்து, அந்தத் தேகத்தையும் நீக்கிவிட, அது பிரகாசமான பிராதக்கால சந்தியாயிற்று. ஆனபடியினாலே மனிதர்கள் பிராத சந்தியிலேயும், பிதுர்க்கள், சாயஞ் சந்தியிலேயும், பலவான்களாய் இருப்பார்கள். மயித்திரேயரே! பகல் இரவு சாயங்காலம் விடியற்காலம் ஆகிய இந்நான்கும் பிரமதேனுக்கு முக்குணங்களோடு கூடின சரீரங்களென்று அறியும். அதன்பின்பு அந்த அம்புசகர்ப்பன் மேலுஞ் சிருட்டி நிமித்தமாய், தமோகுணாதிக்கமுள்ள மற்றொரு சரீரத்தைத் தரித்தான். உடனே அவனுக்குப் பொறுக்கக்கூடாத பசியுண்டாயிற்று. அதனாலே தீவிரமான

கோபம் ஜனித்தது. அதனாலே அந்தப் பிரமன் இருட்டிலிருந்து விகாரரூபமும் பயங்கரமான தாடி மீசைகளும் உள்ள ஒருவித புருஷரைச் சிருட்டித்தான். அவர்களில் பசியுற்ற சிலர் "ஜக்ஷாம"உண்ணக்கடவேம் என்றனர்; பசியுறாத சிலர் "ரக்ஷாம்" காக்கக்கடவேம் என்றனர். இங்ஙனமுரைத்த அவர்களை நோக்கிக் கமலாசனர் நகைத்து, பசி பொறுக்க மாட்டாமல் ஜக்ஷாம என்றவர் யக்ஷராகக் கடவரென்றும் ரக்ஷாம என்றவர் ராக்ஷசராகக் கடவர் என்றும் அருளிச்செய்தனர். இரணியகர்ப்பன் இவ்வாறாகப் பிறந்த யக்ஷரையும் ராக்ஷதரையும் பார்த்து மனதிலே பிரியமில்லாதவனாய்ச் சிந்தித்துக் கொண்டிருக்கையில், அந்தத் தேவனுடைய சிரத்திலிருந்த கேசங்கள் ஈனமாய்க் கழன்று விழுந்து மறுபடியுஞ் சிரத்தின்மேல் ஏறின. இப்படி நகர்ந்து ஏறினதினாலே அவை சர்ப்பங்கள் என்றும், ஈனமானதினாலே அகிகள் என்றுஞ் சொல்லப்பட்டன. திரும்பியும் அந்தச் சதுர்முகன் கோபாவேசத்தினாலே சிருட்டிக்க நினைக்கக் கபிலநிறத்தோடுகூடி ரக்தமாமிச ஆகாரங்கள் உள்ளவைகளான பூதங்கள் அநேகம் உண்டாயின.

பின்பு தியானபாராயணனாய் அந்த விரிஞ்சன் தன்னுடைய அங்கங்களினின்றும் அந்த க்ஷணத்தில் கந்திருவர்களை உற்பத்தி பண்ணினான். அவர்கள் சமத்காரமாய்ப் பாடிக்கொண்டு இருப்பதினாலே கந்திருவரென்று சொல்லப்பட்டார்கள். இப்படிச் சதுர்முகன் சிருஷ்டிக்கப்படும் வஸ்துக்களின் சக்திகளினாலே ஏவப்பட்டு, அததின் கர்மானுகுணமாய் வெகுவிதமான பூதங்களைச் சிருஷ்டித்து, மீளவும் சுயேச்சையின்படி வயசைக்கொண்டு பாரிசங்களினாலே பக்ஷிகளையும், மார்பினாலே ஆடுகளையும், முகத்தினாலே வெள்ளாடுகளையும், உதரத்தினால் பசுக்களையும், பாதத்தினால் குதிரைகளையும், யானைகளையும், கழுதைகளையும், கவயம் என்கிற மிருகங்களையும், ஒட்டகங்களையும், கோவேறு கழுதைகளையும், கடம்பு மான்களையும், மற்றுமுள்ள மிருக சாதிகளையும் சிருட்டித்தான்; திரும்பியும் ரோம கூபங்களினாலே நானாவித உபயோகமுள்ள

ஓஷதிகளையும், தானியங்களையும் உண்டாக்கினன். இவ்விதமாய்ப் பிதாமகன் கற்பாதியான கிருதயுகத்தில் ஓஷதிகளையும், பசுபக்ஷிகளையும் உண்டாக்கி, அவைகளை யாகங்களுக்கு உபயோகமாக வைத்தனன். மாடுகளுக்கு ஆடுகளும் அசுவங்களும் ஒட்டகங்களும் வெள்ளாடுகளும் கோவேறுகழுதைகளும் கழுதைகளும் கிராமியங்களான பசுசாதிக ளென்றறிக. சிங்கம் புலி முதலான துஷ்டமிருகங்களும், இரு குளம்புடைய மிருக விசேடங்களும், யானைகளும், வானரங்களும், பக்ஷிசாதிகளும், நீர்வாழ்வன ஆகிய மச்ச கூர்மாதிகளும், சர்ப்பங்களும் ஆகிய ஏழுசாதியும் ஆரணிய பசு விசேடங்களென்று அறிக. அப்பால் பிதாமகனுர் காயத்திரிசந்தமும், இருக்குவேதமும், திரிவிருத்தென்கிற ஸ்தோமமும், ரதந்தரசாமமும், அக்கினிஷ்டோமமும் தன்னுடைய கிழக்கு முகத்தினுலே யுண்டாக்கினுர். யசுர்வேதமும், திருஷ்டுப்சந்தமும், பஞ்சதஸ்தோமமும், பிருதச்சாமமும், உத்திய மென்கிற யாகவிசேஷமும் தக்ஷிணமுகத்தினுலே யுண்டாக்கினுர். சாமவேதமும் செகதீச்சந்தமும், சப்ததசஸ்தோமமும், வைருப்பிய மென்கிற சாம விசேஷமும், அதிராத்திரியாகமும், மேற்கு முகத்திலே யுண்டாக்கினுர். அதர்வண வேதமும், ஏகவிம்சஸ்தோமமும் அனுஷ்டுப்சந்தமும், வைராசமென்கிற சாமவிசேஷமும், அப்தோர்யாம மென்கிற யக்கியமும், வடக்கு முகத்தினுலே யுண்டாக்கினுர். நானுவிதமான ஜந்து சாலங்களையும் பலவகையான அவயவங்களினுலே பிறப்பித்தார். இப்படிப் பிதாமகனுர் தேவாசுர பிதுர் மனுஷியாதி பூதசாதிகளைச் சிருட்டித்து, திரும்பியும் பிரஜாசிருஷ்டி செய்யவேண்டுமென்று மன உவகையொடு சங்கற்பித்து, கின்னரர் கந்தருவர் அப்ஸரசுகள் யக்ஷர்கள் ராக்ஷதர் பிசாசர் முதலியோர்களையும், பசு பட்சி சர்ப்ப மிருகங்களையும், மற்றுமுண்டாகிய தாவர சங்கமங்களையும் உண்டாக்கினுர்.

இப்படி ஆதிகர்த்தாவும் லோகேசுவரனுமான சதுர்முகபகவான் பலவித பூதஜாதங்களை யுண்டாக்க, அவை, சில குரூர சுபாவங்களும் சில மிருது சுபாவங்களும் சில இம்சைசெய்பவைகளும் சில இம்சை செய்

யாதவைகளும் சில தர்மசொரூபங்களும் சில அதர்ம சொரூபங்களும் சில சத்தியமயங்களும் சில அசத்திய மயங்களுமாய், பூர்வசிருஷ்டியில் எப்படிப்பட்ட கரு மங்களை யடைந்தனவோ அப்படிப்பட்ட கருமங் களையே இந்தச் சிருஷ்டியிலும் அடைந்தன.

பின்பு சமர்த்தரான கமலாசனன் தேகேந்திரிய மனோபுத்தி விசேஷங்களுக்கும் சத்தபரிச முதலிய யோக் கிய வஸ்துக்களுக்கும் வேத வசனங்களைக் கொண்டே தேவரிஷி பிதுர் மனுஷிய பசு பட்சி மிருகாதி நாமதே யங்களையும் உருவங்களையும் அறிந்து, முன்போலவே நாமங்களையும் உருவங்களையும் உண்டாக்கினார். மயித்தி ரேயரே! இப்படியே ரிஷிகள் முதலானோருக்கும் வசிட் டாதி நாமங்களை நித்தியமான வேத சப்தங்களைக்கொ ண்டே யுண்டாக்கினார். ஏனென்றால், வசந்தம் முத லான பருவங்கள்தோறும் அந்தக் காலயோக்கியமான பல புஷ்பித்தல் முதலிய விசேஷங்கள் சுபாவமாக உண்டானதுபோலே கிருத திரேதாதியுகங்களிலே அவ் வக்காலத்துக்குற்ற விசேஷங்கள் சுபாவமாகவே யுற்ப விக்கும். இப்படிப் பிதாமகர் கற்பாதி காலத்தில் எம் பெருமானுடைய சக்தியினாலே அனுப்பிரவேசித்துத் தூண்டப்பட்டுப் பிரபஞ்சங்களை அவ்வவற்றின் கர்மங் களின்படிச் சிருட்டித்தார். ஆகவே சகல சிருஷ்டியும் கல்பாதி கிருதயுகத்திலும், யாகாதிகளும் அவற்றின் உபகரணங்களும் திரேதாயுகாதியிலும் சிருஷ்டித்தா ரென்று அறியும். இப்படியே கற்பந்தோறும் சிருஷ்டி நடந்துவரும்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆறும் அத்தியாயம்

# வருணாச்சிரம உற்பத்தி

இப்படித் தேவர்கள் சிருஷ்டிக் கிரமஞ் சொல்லக் கேட்ட மயித்திரேயர், பராசர முனீந்திரரை நோக்கி ஓ முனிசிரேஷ்டரே! அர்வாக் சுரோதசான மனித

சிருட்டியைப்பற்றிச் சுருக்கமாக அருளிச்செய்தீர். ஆகையால், அவர்களுடைய குணங்களைப்பற்றியும், வர்ணாச்சிரம விவரங்களைப்பற்றியும், ஆசாரபேதங்களைப்பற்றியும் விபரமாக அறிய விரும்புகின்றேன். அதை அருள்புரிய வேண்டுமென்று பிரார்த்திக்க, ஸ்ரீ பராசரமகாரிஷி அருளிச் செய்கின்றார்.

ஆதியில் நான்முகன் பிரஜா சிருட்டியைக் குறித்துச் சிந்தித்துக் கொண்டிருக்குமிடத்து, அவன் திருமுகத்தினின்று சத்துவகுணப் பிரதானரான பிராமணர்களும், மார்பினின்று ரஜோகுணாதிகரான க்ஷத்திரியர்களும், தொடைகளினின்று ரஜோகுணமும் தமோகுணமுங்கலந்த வைசியர்களும், பாதங்களினின்று தமோகுணப் பிரதானர்களான சூத்திரர்களும் உதித்தார்கள். இவ்விதம் தன்னுடைய வதனம் வட்சஸ்தலம் ஊரு பாதம் என்னும் அவயவங்களினின்று பிறந்த பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் என்கிற ஜனங்களை யாகங்களுக்கு உபயோகமான காரியங்களில் பிரவர்த்திக்கும்படி நியமித்தார். ஓ பிராமணோத்தமரான மயித்திரேயரே! இந்த நால்வகை வருணத்தாரும் யாகங்களுக்கு அவசியமானவர்கள்; ஆனதால் அவர்கள் செய்யும் யாகங்களினாலே தேவதைகள் திருப்தி யடைந்து, காலத்தில் மழைப் பெய்வித்து மனிதரையும் திருப்தி படுத்துவார்கள். ஆகையால் சிரேயசுக்கு ஏதுக்களான யாகங்கள் ஜனங்களுக்கு அவசியம் செய்யத்தக்கவையாம். வேதசாஸ்திரங்களுக்கு விரோதமான துராசாரங்களை விட்டுச் சன்மார்க்கத்தில் நடக்கிற சத்புருஷர், சொர்க்க சுகத்தையும், மோக்ஷானந்தத்தையும் இன்னும் தங்களுக்குவேண்டுமான மற்ற பதவிகளையும், இந்த மனிதப் பிறப்பினாலேயே அடைவார்கள். இப்படி ஹிரணியகர்ப்பனாலே சிருட்டிக்கப்பட்ட சதுர்வர்ணஜனங்களும் சாஸ்திர விசுவாசத்தினாலே சதாசாரமும் விநயமு முண்டாய், நிர்மலாந்தஃகரணம் உடையவர்களாய், சகலமான நற்கருமங்களையுஞ் செய்து கொண்டு, காமக்குரோதமுதலிய தோஷங்களும் மற்றுமுண்டாகிய உபத்திரவங்களும் இல்லாமலே, நினைத்த

விடத்தில் வாசம் பண்ணிக்கொண்டு, நிர்மலமான இருதயத்திலே புண்டரீகாக்ஷனைத் தியானஞ்செய்து தத்துவஞானந் தெளியப் பெற்று நற்கதி யடைந்துவந்தார்கள்.

இவ்வகையாகக் கிருதயுகந் தொடங்கித் திரேதாயுகத்திலும் சிறிதுகாலம் நடந்தது. பின்பு நாராயணம்சமென்று சொல்லப்பட்ட காலத்தின் வசத்தினலே மனிதருடைய சத்துவபுத்தி தைரியங்களும் ஆயுளும் குறையும்படி நேரிட்டது. அதனல் மோகமும் லோபமும் அபிவிர்த்தி யடைந்து, அதருமம் மிகுதியாகத் தலைப்பட்டது. அதனல் மோட்சமார்க்கத்துக்குப் பகையான ராகத்துவேஷங்கள் பிரபலமாயின; சுபாவத்தில் உண்டாகத்தக்க ஞானமும், தொந்தங்களை வெல்லத்தக்க சக்தியும் ஜனங்களுக்குக் குறைந்துபோயின. முற்காலத்தில் ஸ்திரீ முதலிய இன்பக்கருவிகளில்லாமலே ஆனந்தமுண்டாயிருக்கும். யோகாப்பியாசவசத்தினல் சிரசில் சந்திரமண்டலத்தி னின்றும் ஒழுகுகிற அமிருதத்தினலே பசியில்லாமலிருக்கும். ஒருதரம் மழைபெய்வதினலேயே பயிர் விளையும். நினைந்தபோதே வீட்டுப்புறத்திலேயே காட்டில் வளரத்தகும் விருக்ஷங்கள் பழங்களைப் பழுத்துக் காட்டும். நினைத்த காரியங்கள் அப்படியே கைகூடும். பரத்துவாச மகாமுனிவருக்கு நடந்ததுபோலே கற்பகவிருக்ஷங்கள் வந்து விரும்பியதைக் கொடுக்கும். மேன்மேலும் வேண்டும்போது மழை பெய்யும். உழுது வருந்தாமலும் பூமி விளையும். இவ்விதமான எட்டுச்சித்திகளும் பிரஜைகளுக்குக் கைகூடாமல் குறைந்துபோயின. போகவே பாதகச் செய்கைகள் விருத்தியாயின.

அதனல் பூமியிலிருக்கும் ஜனங்கள் ராகத்துவேஷ லோப மோகத் தொடக்கத்துத் தொந்த துக்கங்களாலே பீடிக்கப்பட்டு ஒருவரை யொருவர் விசுவாசியாமல் மணற்பூமியிலேயும், பர்வதப் பிரதேசங்களிலேயும், கிருத்திரம ஜலப்பிராய பூமியிலேயும் வசித்துக்கொண்டு, அதிற கோட்டைகள் கொத்தளங்கள் அகழி முதலிய தீப்பொறிகளை யுண்டாக்கிக்கொண்டு அங்கே புரங்களையும் உபக்கிராமங்கள் கூடிய நகரங்களையும் வெகுவித

மான மாடமாளிகைகளையும் சிருஷ்டித்து, பருவங்களா லுண்டாகும் வாத சீதோஷ்ணமுதலிய உபத்திரவங்களை நீக்கும்படியான வுபாயங்களை யுண்டாக்கிக்கொண்டு, சீவனார்த்தமாகப் பயிர்த்தொழில் பசுப்போற்றல் வியா பாரம் முதலிய கர்மங்களைச் செய்துகொண்டு, அதனாலே விளைந்த சம்பா முதலான நெல், யவம், கோதுமை, சிறுதானியம், எள்ளு, பிரியங்கு, சோளம் கேழ்வரகு, தினை, உழுந்து,பயறு, சிறுகடலை, மொச்சை, கொள்ளு, துவரை, கடலை, சணல் ஆகிய அவ்வப்போதைப் பலங் களை யனுபவித்துக் கொண்டிருந்தார்கள். இப்பதினேழு வகையான தானியங்களும் கிராமியங்களென்று சொல் லப்படும். நெல், யவம், உழுந்து, கோதுமை, சிறுதானி யம், எள்ளு, பிரியங்கு, கொள்ளு, சாமை, செந்நெல், காட்டெள், கெவீதுகம், மூங்கிலரிசி, மற்கடகம் என்று சொல்லப்பட்ட பதினான்குவித தானியங்களும், கிராமிய ஆரணியங்களென்னும் பெயருடையவைகளாய் யாகங் களுக்கு உபயுக்தமாம். இப்போது சொன்ன தானிய விசேஷங்கள் யக்கியங்களுக்கும் பிரஜா அபிவிர்த்திக் கும் காரணமாக இருக்கும். ஆனதால் பராபர விவேக முள்ளவர்களான ஞானிகள் இவைகளைக் கொண்டு நாடோறும் பாபங்களைப் போக்கத்தக்க பஞ்சமகா யக்கி யங்களைச் செய்வார்கள். முனிபுங்கவனே! நித்தியமும் யாகாதி கருமங்கள் செய்வதனாலே புருஷர்கள் சகல பாபங்களினின்றும் நீங்கியவராய்ப் பரம சுகத்தை யடை வார்கள். ஆதிகாலத்திலே யாருடைய மனதேனும் காலவசத்தினாலே பாபத்தின் லயமாயிற்றென்றால், அவர்கள் யக்கியாதி சத்கருமங்களிலே விசுவாசமில்லா மல், பாதகங்களை யபிவிர்த்தி யாக்கிக்கொண்டு, வேதங் களையும் சத்கர்மங்களையும் நிந்தித்துக்கொண்டு, யாகவிக் கினங்களைச் செய்துகொண்டு, தேகத்தைப் போஷிப்ப தற்கேற்ற காரியங்களை மாத்திரஞ் செய்துகொண்டு, லோக விர்த்திக்கு விரோதிகளாய், துராத்துமாக்களும் துராசார முள்ளவர்களுமாய், குடிலபுத்தி யுடையவராய் இருப்பார்கள். அது நிற்க.

பதுமகர்ப்பன் பிரமக்ஷத்திரியாதி நாலு வருணங் களையும் நான்கு ஆச்சிரமங்களையும் நிருமித்து, வருண

சிர மோசிதமான மரியாதைகளையும் ஏற்படுத்தி, அவர்களுடைய தாரதம்ய அனுகுணமாகப் புண்ணிய லோகங்களையும் ஏற்படுத்தினார். சொதர்மானுஷ்டான பராயணரான பிராமணர்களுக்குப் பிரசாபத்தியலோகமும், யுத்தத்திற் பின்வாங்காத க்ஷத்திரியர்களுக்கு இந்திரலோகமும், சொதர்மநிரதரான வைசியர்களுக்கு மருத்துக்களுடைய லோகமும், சிசுருஷா நிரதரான சூத்திரர்களுக்குக் கந்தர்வலோகமும், குரு சுச்ருஷா பராயணர்களான பிரமசாரிகளுக்கு ஊர்த்தரேதஸரான எண்பத்தெண்ணுயிரம் யதீச்சுரர்கள் வாசம் பண்ணுகிற திவ்விய லோகமும், சொதர்ம பராயணரான வானப்பிரஸ்தருக்கு சப்தரிஷிலோகமும், ஸத்கர்ம பராயணரான கிருகஸ்தர்களுக்குப் பிராசாபத்திய லோகமும், சந்நியாசிகளுக்குப் பிரமலோகமும் உண்டாகும்படி சங்கற்பித்தார். இது தர்மமார்க்கத்திலுண்டாகிய புண்ணிய லோகங்கள்; இனி ஞானவான்களுக்குக் கிடைக்கும் லோகங்களைச்சொல்லுகிறேன் கேளும். கேவல ஆத்துமத்தியான பராயணரான யோகீச்சுரர்களுக்கு * அமிர்தஸ்தானமுண்டாம். நித்தியம் யோகாப்பியாச யுத்தராய் பிரமத்தியானஞ் செய்துகொண்டு, பரமைகாந்திகளாயிருக்கிற மகாத்துமாக்களுக்கெல்லாம் நித்திய சூரிகளாலே காணப்பட்ட பரமபத முண்டாம். சந்திர சூரியாதி கிரகங்களும் காலக்கிரமமாகப் பலமுறை பதவிகளினின்று நீங்கிப்போகின்றன. துவாதசாட்சர மந்திரத்தைச் செபிக்கிற மகாத்துமாக்கள் என்றைக்கும் திரும்பி வாராமற் பரமாநந்தத்தை யனுபவிப்பார்கள். இனி பாபகருமிகளான துர்ச்சனர் அடையத்தக்க லோகத்தை யறிவிக்கிறேன் கேளும். தாமிஸ்ரமும், அந்தாமிஸ்ரமும், ரவுரவமும், மகாரவுரவமும், அசிபத்திரவனமும், கோரமான காலசூத்திரமும், அவீசிமத்து என்று சொல்லும் மகா நரகங்களெல்லாம் வேதநிந்தகர் யக்கிய விக்கினஞ் செய்பவர் முதலான பாபாத்துமாக்களுக்கு உண்டாகும்.

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

---

* அமிர்தஸ்தானமானது துருவலோகத்துக்கு மேலே கங்கை உற்பவிக்கிற ஸ்தானமாம்.

## ஏழாம் அத்தியாயம்

# பிருகு முதலானருடைய சிருஷ்டி

இவ்விதம் பராசரமுனிவர் மனிதருடைய தருமங்களை விவரித்துப் பின்னும் அருளிச்செய்கின்றார்.

நான்முகன் பிரசா சிருட்டி செய்யும்படியான சிந்தனையோ டிருக்கையில் அவனது சங்கற்பத்தினால் அவனங்கத்திலிருந்து தர்மத்தை அனுபவிக்கும்படியான தேக இந்திரியங்களுடனே கூடி ஜனித்த தேவ மனுஷ்ய திரியக் ஸ்தாவரங்களான சதுர்வித சங்கங்களும் அபிவிர்த்தியடையாமற் போனதைக்கண்டு, பதுமகர்ப்பன் மறுபடியும் பிரஜா சிருட்டிசெய்ய எண்ணி, பிருகு, புலஸ்தியர், கிரது, அங்கிரசு, மரீசி, அத்திரி, தக்ஷர், வசிட்டர், நாரதர் என்ற ஒன்பது புத்திரரை மனதினாலே சிருட்டித்தான். அவர்கள் பிர்மாவுக்குச் சமானராகையாலே நவப்பிரமாக்கள் என்று புகழ்ப்பெற்றார்கள். இப்பிருகு புலஸ்தியாதி நவப்பிரமாக்களுக்கு முன்னே, பிதாமகன் ஸனக ஸநந்தனாதிகளைச் சிருட்டித்தான். அவர்கள் வைராக்கியத்தையடைந்து மோக்ஷமார்க்க நிரதர்களாய், பிரஜா சிருட்டியில் பிரவர்த்தியாமற் சர்வ சங்க பரித்தியாகிகளாய் யோக நிஷ்டை பெற்றுக் காமக்குரோத மதமாச்சரியங்க ளில்லாதவர்களாய், கிருதார்த்தரா யிருந்தார்கள். அவர்கள் பிரஜா சிருட்டி செய்யாம லிருந்த் மகாத்துமாவான பதுமகர்ப்பனுக்குப் பொறுக்கக்கூடாத கோபம் உண்டாடாயிற்று. அப்போது மூன்றுலோகமும் எரிந்துபோம்படியான கோபாக்கினிச் சுவாலைகள் பொருந்தியும், பயங்கரமாகப் புருவங்களை நெறித்துக்கொண்டும், குரோதத்தினாலே சொலித்துக்கொண்டும் இருந்த பிரமாவின் நெற்றியி லிருந்து, மத்தியான்ன மார்த்தாண்ட மண்டலம்போலே பிரகாசமுடையவரும், அர்த்த நாரிரூபத்தைத் தரித்தவருமான உருத்திரமூர்த்தி ஜனித்தார்.

இப்படி அதி யுன்னத சரீரமுடையவராயும், உக்கிரகுண முள்ளவராயும் பாதியுடம்பு ஆணும் பாதி

யுடம்பு பெண்ணுமாயும், பிறந்த உருத்திர மூர்த்தியைப் பார்த்துச் சதுர்முகன், "இரண்டுவிதமாயிருக்கிற வுன்னைப் பிரத்தியேகமாகப் பிரித்துக்கொள்" என்று சொல்லி, அந்தர்த்தானமானன். அப்பால் அந்த உருத்திரமூர்த்தியும், பரமேஷ்டி ஆக்கினைப்படி, ஸ்திரீ புருஷ உருவமான தம்முடம்பை, ஸ்திரீரூபமும் புருஷ ரூபமுமாகத் தனியே பிரித்து வேருக ஏற்படுத்திப்பின்பு அந்தப் புருஷ ரூபத்தையும் பதினெருவிதமாகப் பிரித்து, ஸ்திரீசொரூபத்தையும் வெகு விதங்களாகப் பிரித்தார். அவைகள் சவுமியங்களும், பயங்கரங்களும், சாந்தங்களும், கோரங்களும், கறுத்தவைகளும், வெளுத்தவைகளுமாகப் பலவகைப்பட்டிருந்தன.

பின்பு இரணிய கர்ப்பன் பிரஜைகளை அளிக்கும் நிமித்தமாகத் தம்முடைய அம்சத்திஞலே புத்திரனெருவனைச் சிருட்டித்தான். அவன் சுவாயம்புவமநு என்று பெயர் பெற்றுப் பிரஜா பரிபாலனஞ் செய்து கொண்டிருந்தான். பிரமா, தான் தன் அம்சத்தினலே மனுவென்கிற புருஷனை துபோல, தன் பத்தினியின் அம்சத்தினலே ஒரு ஸ்திரீயை யுண்டாக்கினன். அந்த ஸ்திரீ, சதரூபை யென்னும் நாமதேய முடையவளாய், தனக்குச் சரியான புருஷன் வேண்டுமென்று மிகுந்த தவஞ்செய்து மகா பரிசுத்தையாயிருக்க, அந்தக் கமலாக்ஷியை பிரமதேவனுடைய நியமனப்படி சுவாயம்புவ மநுவானவர் பாணிக்கிரகணம் செய்து கொண்டு, அவளிடத்தில் பிரியவிரதனென்றும் உத்தானபாதனென்றும் இரண்டு பிள்ளைகளையும், பிரசூதி யென்றும் ஆகூதி யென்றும் இரண்டு பெண்களையும் பெற்ருர். பின்பு அந்த மநு, ரூப யவ்வன குணலங்கிருதைகளான அந்த இரண்டு பெண்களுள் பிரசூதியை தக்ஷனுக்கும், ஆகூதியை ருசியென்பவனுக்கும், கலியாணஞ்செய்து கொடுத்தார். ருசி யென்பவன், ஆகூதி யென்பவளைச் சேர்ந்து யக்கியன் என்கிற பிள்ளையையும், தக்ஷிணை யென்கிற பெண்ணையும் பெற்ருன். அப்பால் யக்கியன் தனக்குப் பத்தினியாகத் தன்னுடனே சிருட்டிக்கப்பட்ட தக்ஷிணை யென்பவளிடத்திலே பன்

னிரண்டு பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் சுவாயம்புவ மநுவந்தரத்தில் யாமர் என்னும் நாமத்தையுடைய தேவர்களாயிருந்தார்கள்.

அப்படியே தக்ஷனென்பவனும் பிரசூதி யென்ற ஸ்திரீயினிடத்திலே இருபத்து நான்கு கன்னிகைகளைப் பெற்று, அவர்களிலே சிரத்தை, லட்சுமி, திருதி, துஷ்டி, புஷ்டி, மேதை, கிரியை, புத்தி, லச்சை, வபு, சாந்தி, சித்தி, கீர்த்தி என்று சொல்லப்பட்ட பதின்மூன்று கன்னிகைகளையும், தர்மனுக்கு விவாகஞ் செய்துகொடுத்தான். அவன் சிரத்தையினிடத்திலே காமனையும், லக்ஷ்மியினிடத்திலே தர்ப்பனையும், துஷ்டியினிடத்திலே சந்தோஷனையும், புஷ்டியினிடத்திலே லோபனையும், மேதையினிடத்திலே சுருதனையும், கிரியையினிடத்திலே தண்டன், நயன், வினயன் என்கிற மூவரையும், புத்தியினிடத்திலே போதனையும், லச்சையினிடத்திலே வினயனையும், வபுவினிடத்திலே விவசாயனையும், சாந்தியினிடத்திலே க்ஷேமனையும், சித்தியினிடத்திலே சுகனையும், கீர்த்தியினிடத்திலே யசனையும் பெற்றான். அவர்களுள் சிரத்தையின் புத்திரனை காமன் இரதி என்றவளிடத்தில் ஹர்ஷன் என்கிற பிள்ளையைப் பெற்றான். மற்றுமுள்ள தக்ஷகன்னிகைகளான கியாதி, சதி, சம்பூதி, ஸ்மிருதி, ப்ரீதி, க்ஷமை, சன்னதி, அனசூயை, ஊர்ச்சை, சுவாகை, சுவதை என்ற நாமதேயங்களையுடைய பதினொரு கன்னிகைகளையும், முறையாகப் பிருகுமகாரிஷிக்கும், ருத்திரனுக்கும், மரீசிக்கும், அங்கிரசுக்கும், புலஸ்தியனுக்கும், புலகனுக்கும், கிரதுவுக்கும், அத்திரிக்கும், வசிட்டனுக்கும், அக்கினிக்கும், பிதுர்த்தேவதைகளுக்குங் கொடுத்தான். அது அப்படியிருக்க, அதர்மன் என்றவன் இம்சையென்கிற பெண்ணைச் சேர்ந்து அநிருதன் என்ற மகனையும், நிகிருதி என்ற கன்னிகையையும் பெற்றான். அவ்விருவரும் பயன் நரகன் என்று சொல்லப்பட்ட இரண்டு பிள்ளைகளையும் பெற்றார்கள். அவர்களிலே மாயை என்றவள், சர்வ பிராணிகளையும் அபகரித்துக் கொள்ளும் மிருத்துவைப் பெற்றாள். வேதனை யென்றவள்

இரவுரவனைச் சேர்ந்து துக்கனென்ற மகனைப் பெற்ருள். அந்த மிருத்துவுக்கு, வியாதி, சரை, சோகன், திருஷ்ணை, குரோதன் என்ற மக்கள் பிறந்தார்கள். அவர்கள் எல்லோரும் துக்கமான சுபாவமுள்ளவர்களாய், அதர்ம சொரூபிகளாய், ஊர்த்தரேதசுக்களுமாய், மனைவிமக்கள் என்னும் சம்பந்தங்களில்லாமல், ஜகத்தின் இறுதி அழிவுக்கு ஏதுக்களாயிருந்தார்கள். ஓ முனிகுமாரரே! இப்படி நாம்சொன்ன அதர்மாதி சொரூபங்களெல்லாம் ஸ்ரீவிஷ்ணுவினுடைய ரவுத்திரமான சரீரங்கள். இவை நித்தியப்பிரளயத்துக்கு ஏதுக்கள். தக்ஷன், மரீசி, அத்திரி, பிருகு, முதலான பிரசாபதிகள், நித்தியசிருட்டிக்குக் காரணமாவார்கள். மநுவும் மநுபுத்திரர்களும், சன்மார்க்க நிரதராயும் சூரராயும் வீரியமே முக்கியமாக நினைத்தவராயுமுள்ள பூபாலகரும், நித்திய ஸ்திதிக்குக் காரணமாவார்கள்.

இப்படிச் சொல்லக்கேட்டு மயித்திரேயர், பிராணிகள் அநித்தியங்களா யிருக்க நித்திய சிருட்டியும் நித்திய ஸ்திதியும் நித்தியப் பிரளயமும் உண்டாவதற்குக் காரணம் யாது? என்று கேட்க, பராசரமுனிவர் அருளிச் செய்கின்ருர்.

மைத்திரேயரே! பூதபாவனனும் அறியக்கூடாத சொரூபமுள்ளவனும் தடையில்லாதவனுமான ஸ்ரீமதுசூதனன் என்கிற திருநாமமுடைய பகவானே, தன் சத்தியினுலே விசேஷிக்கப்பட்ட மநு முதலான வெவ்வேறு உருவங்களைக்கொண்டு, சிருட்டி ஸ்திதி சங்காரங்களை நடத்துகிருன். ஆகையாலே சிருட்டி ஸ்திதி சங்காரங்கள் நித்தியங்களென்று சொன்னேம். இனிப் பிரளய பேதங்களைக்கேளும்:—பிரளயம் நைமித்திகம், பிராகிருதம், ஆத்தியந்திகம், நித்தியம் என்று நான்கு விதமாயிருக்கும். அவற்றுள் எதனிடத்தில் ஜகத்பக்தியான லட்சுமிவல்லபன் மகார்ணவ ஓதகத்தில் சயனிப்பனே அது பிர்மனுடைய தினந்தியத்தி லுண்டாகிய நைமித்திகப் பிரளயமாம். சதுர்முகனுடைய ஆயுள் முடிவில் பிரமாண்டமுடைந்து சகல பூதங்களும் பிரகிருதியினிடத்தில் லயப்படுவது பிராகிருதப் பிரளயமாம். யோகியானவன் ஞானதிசயத்தினலே அநாதி

கர்ம வாசனைகளாலே செய்யப்பட்ட சர்வ சங்கங்களை யும் பரித்தியாச்சியம் பண்ணி பரமாத்துமாவிடத்தில் சாயுச்சியத்தை யடைவது ஆத்தியந்திகப் பிரளய மென்று சொல்லப்படும். சதுர்வித பூதங்களும் தத்தம் ஆயுண் முடிவில் மரணமடைவது நித்தியப் பிரளய மென்று சொல்லப்படும். இனிச் சிருட்டி பேதங்களையும் கேளும்: சதுர்முகன் பிறப்பதற்கு முன்னே பிரகிருதி யினலே மகத்தகங்கார தன்மாத்திரைகளை யுண்டாக்கு வது பிராகிருத சிருட்டியென்றும், தினப் பிரளயத்தின் முடிவிலே பிரஜைகளை யுண்டாக்குகிறது நைமித்திக சிருட்டியென்றும், சொர்க்க நரகாதி போகானுபவமான பின்பு ஜீவாத்துமாக்களை மனுஷிய பசு பக்ஷியாதி ரூபங் களாய்ப் பிறப்பிப்பது நித்தியசிருட்டி யென்றும், புராண வித்துவான்கள் சொல்லுவார்கள். ஓ பிராமணேத்த மரே! இந்தவிதமாய் ஜகத்காரண பூதனை ஸ்ரீவிஷ்ணு பகவான் சர்வ பூத சரீரங்களிலேயும் இருந்துகொண்டு சிருட்டி ஸ்திதி லயங்களைச் செய்தருளுகின்றார்.

ஆனல் எம்பெருமான் சர்வ சரீரங்களிலேயும் எப் போதும் இருக்கையாலே சிருட்டியாதிகள் காலபேதத்தி ஞல் உண்டாகவேண்டிய தென்னவெனில், சகல பூதங் களிலும் சிருட்டி ஸ்திதி சங்கார சக்திகள் எப்போ தும் * ஸ்ரீமந் நாராயணனுடைய சங்கற்பத்திற்குத் தகுந்தபடி யுண்டாகின்றன ஆதலால், காலபேதத்தால் சிருட்டியாதிகள் உண்டாகின்றனவென்றறியவும். இந்த மேன்மையான சிருட்டி ஸ்திதி சம்ஹார சக்திகள் மூன் றும் ரெசோகுணம் சத்துவகுணம் தமோகுணம் ஆகிய முக்குணங்களா லுண்டானவை எவன் இவைகளுக்குட் படாமல் சர்வசங்க விமுக்தனுய் பிரம சாயுச்சியத்தை யடைவனே அவன் அப்படியே யிருப்பதன்றி மறுபடி யும் திரும்பமாட்டான்.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

* எம்பெருமான் எங்கும் எப்போது மிருந்தாலும் அவன் எப்போது எதைக்கொண்டு என்ன நடத்தத் திருவுள்ளம் பற்றுகிருனே அப்போது அத ஞல் அக்காரியம் நடக்கும் என்பது கருத்து.

## எட்டாம் அத்தியாயம்

# ருத்திர சிருஷ்டியும் பிராட்டி வைபவமும்

பாராசரமுனீந்திரர் சொல்லுகிருர்:—ஓ மகாமுனிவரரே! சதுர்முகன் தாமச சிருட்டி செய்தானென்று முன் சொன்னேனன்ருே. அதைச்சார்ந்த உருத்திர சிருட்டி விசேஷஞ் சொல்லுகிறேன்: கற்பாதி காலத்திலே இரணியகர்ப்பன் தனக்குச் சமானமான குமாரனைப் பெறவேண்டுமென்று சிந்தித்துக் கொண்டிருக்குமளவில், அவனுடைய மடியிலே நீலலோகிதனுன கறுப்புஞ் சிவப்புங் கலந்திருக்கிற குமாரனெருவன் உதித்து, இனிமையான குரலுடன் அழுதுகொண்டு ஓடினுன். பிதாமகன் அவனைநோக்கி, "குமாரனே! ஏன் உரோதனம் பண்ணுகிருய்" என்ன, அவன் "எனக்கு நாமதேயங் கொடும்" என்று பிரதியுத்தரஞ் சொன்னுன். அதைக் கேட்டுப் பிரமா, "தேவனே! * நீ உருத்திரனென்கிற நாமதேயத்தினுலே பிரசித்தனுகக்கடவை; உரோதனஞ்செய்யாதே, தைரியமாயிரு" என்று சொன்னுன். இப்படிச் சொல்லியும் அந்தக் குமாரன் மீண்டும் ஏழுதரம் உரோதனம் பண்ணினுன். அதனுலே பிரபுவாகிய அந்தக் கமலாசனன், அவனுக்குப் பவன், சர்வன், ஈசானன், பசுபதி, பீமன், உக்கிரன், மகாதேவன் என்னும் ஏழுநாமங்களைக் கொடுத்து, இந்த நாமங்களையுடைய உருத்திரமூர்த்திகளுக்கு வேறு வேறு இடங்களையும், பத்தினிகளையும், புத்திரர்களையும் கொடுத்தான்.

அந்தப் பதவிகளாவன:—சூரியன், ஜலம், பூமி, அக்கினி, வாயு, ஆகாசம், தீட்சிதனுன பிராமணன், சந்திரன் என்னு மெட்டுமாம். அங்கே இருப்பதனுலே அவையே சரீரங்களுமாயின. உருத்திராதி நாமதேயமுடையவரான அவ்வெட்டு மூர்த்திகளுக்கும்

* உரோதனம் - அழுகை, திராவணம் - ஓடுதல், இந்த உரோதன திராவணங்களைக் கொண்டு உருத்திரனென்கிற நாமதேயமுண்டாயிற்றென அறிக.

முறையாக சுவர்ச்சலை, உஷை, சுகேசி, சிவை, சுவாஹை, திசை, தீட்சை, உரோகிணி என்ற எட்டு ஸ்திரீகளும் பத்தினிகள். இவர்களுக்குச் சனி, சுக்கிரன், அங்காரகன், மனோஜவன், கந்தன், சொர்க்கன், சந்தானன், புதன் ஆகிய எண்மரும் குமாரர்களானார்கள். இவர்களுடைய புத்திர பௌத்திராதிகள் முதலிய பரம்பரையினாலே லோகமெல்லாம் நிறைக்கப்பட்டது. இந்தவிதம் அஷ்டமூர்த்தியாகிய உருத்திரன் தக்ஷப்பிரசாபதியின் புத்திரியான சதீதேவியைப் பாணிக்கிரகணம் பண்ணிக்கொண்டான். அந்தத் தேவியுந் தன் தகப்பனுடைய கோபத்தின் காரணமாகத் தன் நாயகனுக்கு உற்ற பழிக்குச் சாதனமுந் தானும் கோபித்துத் தன் சரீரத்தை விட்டுவிட்டாள். பின்பு அவள் இமவானுக்கு மேனையென்கிற ஸ்திரீயினிடத்தில் உமையென்கிற நாமதேயத்தினாலே மறுபடியும் ஜனித்தாள். மகாத்துமாவான அந்தச் சிவபெருமான் தன்னையே நினைந்துக்கொண்டிருந்த அந்தக் கன்னிகையைத் திரும்பியும் விவாகஞ் செய்துக்கொண்டார். அது அப்படி இருக்க, முன்சொன்னபடி பிருகுமகாமுனிவர் தன் பாரியையாகிய கியாதியினிடத்தில் தாதா விதாதா என்கிற இரண்டு குமாரர்களையும், ஸ்ரீமந் நாராயணனுக்குப் பிரிய பத்தினியான ஸ்ரீதேவி என்று சொல்லப்படும் மகளையும் பெற்றார்.

இதுகேட்டு மயித்திரேயன், ஓ பிரமரிஷி சிரேஷ்டரே! அமிருத மதனகாலத்தில் ஸ்ரீமகா லட்சுமியானவள் திருப்பாற் கடலில் அவதரித்தாளென்று ஜகப்பிரசித்தமாக இருக்கிறதே. பிருகு மகாரிஷிக்குக் கியாதியினிடத்தில் அவதரித்தாளென்று தேவரீர் அருளிச்செய்தவித மென்னவென்று கேட்க, ஸ்ரீ பராசரப் பிரமரிஷி யருளிச்செய்கின்றார்.

உலகமாதாவான பிராட்டியானவள் என்றைக்கும் ஸ்ரீ விட்டுணுபகவானோடு பிரிவற்றவளாய் நித்தியையாயிருக்கிறவளேயன்றி பிறப்புடைய ஜனனாதிகளுள்ளவளன்று. எம்பெருமானைப்போலே அவளும் அவதரிப்பதும் மறைவதுமாயிருப்பள். அன்றியும் எம்பெருமான், விபுவாய் எங்கும் நிறைந்து தன் சுபாவத்தை விடாமல் சத்திய ஞானாநந்தாதி சகல கலியாண குணங்க

ளோடு விளங்குவதுபோல், பிராட்டியும் எங்கும் நிறைந்து சகல கலியாண குணங்களோடு விளங்குவாள். இப்படி சகல பூதங்களுக்கும் தாயுந் தந்தையுமான அந்தத் திவ்விய தம்பதிகளுடைய மகா விபூதி வைபவம் சொல்லுகிறேன் கேளும். பதத்துக்குப் பொருள் அந்தப் பெருமாள், அந்தப் பொருளைத் தெரிவிக்கும் பதம் இந்தப் பிராட்டி; இப்படியே நீதி இவள், அந்நீதியின் உபாயமான நயம் அவன்; இவள் புத்தி, அப்புத்தியாலாகும் போதம் அவன்; தருமம் அந்த ஸ்ரீமந்நாராயணன், அந்தத் தருமத்துக்குச் சாதகமான சத்கிரியை இந்தப் பதுமாலயை; சிருட்டிக்கிறவன் ஸ்ரீ விஷ்ணுதேவன், அந்தச் சிருட்டியின் சத்தி ஸ்ரீதேவி; இவள் பூமி, இந்தப் பூமியைத் தரிப்பவன் எம்பெருமான்; அந்தப் பகவான் சந்தோஷம், அச்சந்தோஷத்தை யுண்டாக்கும் சந்துஷ்டி இப்பிராட்டி; இச்சையென்பது ஸ்ரீதேவி; காமமென்பது பகவான்; யக்கியமானது மாதவன், தட்சிணையானது ஜகன்மாதா; புரோடாசமானது சனார்த்தனன், ஆச்சியாகுதியானது கமலை; பிராக்குவம்ச மென்பது மதுசூதனன், பத்தினிசாலை யென்பது ஸ்ரீதேவி; யூபஸ்தம்பம் ஸ்ரீஹரி, யாகசயனம் ஸ்ரீலட்சுமி; எம்பெருமானே தருப்பை, பிராட்டியே சமித்து; சாமவேதமானது பகவான், அதிற்சேர்ந்த உத்கீதியென்பது லட்சுமி; ஜகத்பதியான வாசுதேவன் அக்கினி பகவான், இந்திரையானவள் சுவாகாதேவி; ஸ்ரீ விஷ்ணுபகவானே சங்கரன்; ஸ்ரீ மகா லட்சுமியானவள் கவுரிதேவி; கேசவனே சூரியன், அந்தச் சூரியனுடைய பிரபை கமலை ஸ்ரீ விஷ்ணுதேவன் பிதுர்தேவதா சொரூபி, ஸ்ரீதேவி ஸ்வதாசொரூபி; ஜகன்மாதாவே ஆகாசம், அதிவிஸ்தாரமான அதின்பரப்பே விஷ்ணு; அந்த ஸ்ரீயப்பதியே சந்திரன். அச்சந்திரனுடைய காந்தியாகிய நிலவு ஸ்ரீதேவி; சர்வக்ஞனை ஸ்ரீஹரியே வாயு, மேகாதிகளைத் தரிக்கத்தக்க அக்காற்றின் செய்கை திருமகள்; சமுத்திரம் கோவிந்தன், ஸ்ரீதேவி அச் சமுத்திரத்தின் அலைமுதலான விகிருதி; மதுசூதனனே தேவேந்திரன், இந்திரையே இந்திராணி; சக்காதர

ஞன பகவானே யமன், கமலாலயையே யமபத்தினியான தூமோர்ணை ஸ்ரீதரனுன தேவனே குபேரன், ஸ்ரீதேவியே அக்குபேரனுடைய செல்வம்; கேசவனே வருணன், லட்சுமியே வருண பத்தினியான கவுரி, கோவிந்தனே தேவசேனாபதியான ஸ்கந்தன், இந்திரையே தேவசேனை; கதாதரனே பிடிப்பு; அதற்குக் காரணமான சத்தியானது ஸ்ரீதேவி; நிமிஷ சொரூபம் நாராயணன், காஷ்டையின் சொரூபம் லட்சுமி; முகூர்த்தம் ஸ்ரீவாசுதேவன், அம்முகூர்த்தத்தின் அவயவமானகலை ஸ்ரீலோகமாதா; திருவிளக்கு சர்வேசுவரன், அதன் காந்தி லோகநாயகி; ஸ்ரீமகாவிட்டுணு விருட்சம், ஸ்ரீதேவி கொடி; சக்கரதரன் பகல், ஸ்ரீகாந்தை இராத்திரி; வரப்பிரதனுன விட்டுணுவே மணமகன், தாமரைக்காட்டில் வாசஞ்செய்யு மவளே மணமகள்; பகவான் நதசொரூபன், ஸ்ரீதேவி நதிசொரூபை; புண்டரீகாக்ஷன் அரசருடைய கொடி, புண்டரீகத்தில் வாசஞ்செய்பவள் அக்கொடிச்சீலை; லோகேஸ்வரரான நாராயணன் லோபம், ஜகதீசுவரியான லட்சுமியே ஆசை; கோவிந்தன் இராகம், ஸ்ரீதேவி அதன்காரணமாகிய காதல். மயித்திரேயரே! அநேக வாக்கியங்களாலே சொல்வதில் பிரயோசன மென்ன? அந்தத் திவ்ய தம்பதிகளின் விபூதியைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேளும்; தேவதைகளுக்குள்ளும், மனிதர்களுக்குள்ளும் திரியக்குக்களுக்குள்ளும், மற்றுமுண்டாகிய வஸ்துக்களுக்குள்ளும் ஆண்பால் என்ற நாமத்தையுடைய பதார்த்தங்களெல்லாம், ஷட்குண ஐசுவரிய சம்பன்னனுன ஸ்ரீஹரியே, பெண்பால் என்ற பெயருடைய பதார்த்தங்களெல்லாம் ஸ்ரீமகா லட்சுமியே என்று நினையும். * இவ்விருவரினும் வேறான வஸ்து ஒன்றுமில்லை. எல்லாம் அவர்களால் வியாபிக்கப்பட்டு அவர்களுடைய விபூதியாகவே இருக்கின்றன.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

* சகலமும் திவ்ய தம்பதிகளுடைய விபூதியாயிருந்தாலும், சில பொருள் எம்பெருமான் விபூதியாகவும், சிலபொருள் எம்பெருமாட்டி விபூதியாகவும் அருளிச்செய்தன. அவற்றில் அவர்களுடைய விசேஷ சாந்நியத்தினாலே யென்றறியவேண்டும். விபூதியென்பது சர்வ விதத்திலும் ஆளுகைக்கு உட்

# ஒன்பதாம் அத்தியாயம்

## பெரிய பிராட்டியார் திருவவதாரம்

இவ்விதமாய்ப் பிராட்டி வைபவஞ் சொல்லிய பின்னும் பிரம ரிஷியாகிய பராசரர் திருவாய்மலர்ந் தருளுகின்றார்.

ஓ முனிவரே! நீர் அறிய விரும்பிய பிராட்டியின் திருவவதார சம்பந்தமான சரித்திரத்தைக் குறித்து நாம் முன் மரீசி மஹாமுனிவரிடத்தில் கேட்டறிந்தபடிச் சொல்லுகிறோம் கேளும். அஃதென்னவென்றால்,

உருத்திரருடைய அம்சமாய் மிகுந்த கோபமுள்ளவரான துர்வாச மஹாமுனிவர் தன்னிஷ்டமாகப் பூமண்டலமெங்குஞ் சஞ்சரித்துக்கொண்டு திரிகையில் ஒருநாள் மனிதர் எளிதில் அடையக்கூடாத ஒருவனத்திற்போகும் போது அங்கே ஒரு வித்தியாதரஸ்திரீயின் கமலமன்ன கரத்தில் திக்குகளெல்லாம் வியாபிக்கத் தகுந்த திவ்ய பரிமளமிகுந்த அற்புதமான மாலையொன்றைக் கண்டார். உன்மத்த விரதத்தோடு ஜகங்களிலே சஞ்சரிக்கிற அந்த மகாமுனி அந்த வித்தியாதர மங்கையைப் பார்த்து, "பெண்ணே! அதி மனோகரமான இந்தச் சந்தான புட்பமாலையை எனக்குக் கொடு" என்று யாசித்தார். அந்தப் பெண்ணரசியும், இவர் கேட்கப்பெற்ற சந்தோஷத்தினால் கண்மலர்ந்து, பக்திபூர்வகமாக அவருக்குத் தெண்டனிட்டு, அம்மாலையைக் கொடுத்தாள். உன்மத்த வண்ணத்தை ஏந்திய அந்தத் துர்வாசமுனி, அந்தப் புட்பமாலையைத் தன் சிரசிலே சுற்றிக்கொண்டு அங்கங்கே சஞ்சரித்து வருகிறபோது, திரிலோகாதிபதியான தேவேந்திரன் மதோன்மத்தனான ஐராவதத்தின்மே லேறிக்கொண்டு தேவ கந்தர்வ சங்கங்கள் நாலு பக்கமுஞ் சூழ்ந்துவர வெகு கோலாகலமாய் வருவதைக் கண்டு, அந்தத் துர்வாசர், தேனுக்கும் வாசனைக்கும் பரவசமாய் வண்டுகள் களித்துச் சூழாநின்ற அந்தப் பூமாலையைத் தன் சிரசினின்று மெடுத்து, ஐராவதத்தின் மேலிருக்கிற இந்திரன்மேலே பித்தனைப்

---

பட்ட வஸ்து. காரிய காரணாதி ரூபமாயிருக்கிற அவ்வவ் வஸ்துக்களும் அவ்விருவருடைய அனுக்ராதீன மென்பது கருத்து.

போல் விட்டெறிந்தார். அந்த அமரேசுவரன் அதைக் கைக்கொண்டு, ஐராவதத்தினுடைய கும்பஸ்தலத்தின் மேற்போட, அதனாலே அந்த மதயானையானது திவ்ய கங்காப் பிரவாகத்தினாலே விளங்குகிற கயிலாச பர்வத சிகரம்போற் பிரகாசித்தது. பின்பு மதமிகுதியினாற் கண் சுழன்று நிற்கிற அந்த யானையானது, அப்பூமாலையைத் தன் துதிக்கையினாலே முகர்ந்து பார்த்து, எடுத்துத் தரையிலெறிந்துவிட்டது.

அதைக்கண்டு அந்தத் துர்வாச மகாமுனி மிகவுங் கோபமடைந்து, தேவேந்திரனைப் பார்த்து, "அடா வாசவா! நீ ஐசுவரிய மதமத்தனாய் மிகவும் கர்வித்திருக்கின்றாய். ஸ்ரீமகாலக்ஷ்மி வாசஸ்தானமான திவ்ய மாலையை நீ அங்கீகரித்துக் கொண்டாடாமற் போனாய். நான் கொடுக்கும்போது விநயத்தோடு நமஸ்கரித்துக் கைகளை யேந்தி வாங்கிச் சந்தோஷத்தினால் கபோலங்கள் மலர்ந்து விளங்கக் கிருதார்த்தனானேன், மகாப் பிரசாதம் பெற்றேன் என்று சொல்லிச் சிரசிலே தரியாமற்போனாய். மேலும் இந்தப் புட்பமாலையைத் தரையில் எறிவித்தாய். ஆகையால் உன்னுடைய மூவுலகத்து ஐசுவரியமும் சீக்கிரத்தில் நாசமடையக்கடவது. நான் கோபித்தால் மூன்றுலோகமும் நடுங்கிப்போமே. அப்படிப்பட்ட என்னைக் கொஞ்சமாகிலும் கருதாமல் அவமானம் பண்ணி, நான் கொடுத்த மாலிகையை அங்கீகரியாமற் போனதினால், உன்னுடைய திரிலோகமும் மகாலக்ஷ்மி வாசம் ஒழிந்து துர்த்தசை யடையக் கடவது" என்று சபித்தார்.

பின்பு இந்திரன் வெகு பரபரப்போடு யானையினின்று மிறங்கி, குற்றமில்லாத அந்த மகாரிஷியின் பாதங்களின் வீழ்ந்து, தன் அபராதத்தை மன்னிக்கும்படியாகப் பலவிதமாய் வேண்டிக் கொண்டான்.

இப்படி வணங்கி வேண்டிக் கொண்டும் மனமிரங்காமல், அந்தத் துர்வாசன் இந்திரனைப் பார்த்து, "இந்திரனே! நான் தயையுள்ள இதய முடையவனல்லேன். என்னிடத்தில் க்ஷமை என்கிற குணம் வந்து சேருகிறதில்லை. உனக்கு உட்பட்டுப் பின்பாட்டுப் பாடு

கிற இருஷிகள் வேறே யிருக்கிறார்கள். என்னை யவர் களிலே யொருவனாக நினையாதே. நான் துர்வாச னென்றறி. தங்கள் விஷயத்தில் செய்த மகா துரோ கத்துக்காக உன்னைக் கௌதமர் முதலான முனீந்திரர் முன்னே சபித்து, மறுபடியு முன்னுடைய விநயத்திற் குட்பட்டு அநுக்கிரகம் பண்ணினதினாலே, நீ கர்வித னாய் என்னையும் அவர்களைப்போல நினைத்தாய். நான் அப்படிப்பட்டவனன்று. அடங்காத கோபத்தின் சார மெல்லாம் ஒருங்கே திரண்டு வாசம் செய்யுமிடமானது துர்வாசன் என்பது காண். வசிட்டர் முதலான தயை யுள்ள சில மகாரிஷிகள் விசேஷமாய் உன்னைத் துதி த்து வருவதினாலே நீ மிகவும் இறுமாப்படைந்து, இப்போ தென்னை அவமானித்தாய். அக்கினிச் சுவாலை கள் போலே சொலிக்கின்ற ஜடாகலாபத்தோடும் உக் கிரமான புருவ நெரிப்போடுங் கூடிப் பயங்கரமாயிருக் கும் என் முகத்தைக் கண்டு பயப்படாதவனும் ஜகத் திலேயுண்டோ? சதமகனே! அநேகமான வார்த்தைகளி னாலே பிரயோசன மென்ன; நான் க்ஷமிக்கிறவ னல் லேன். நீ யேன் பயந்தவனைப் போலே கபடமான விநயஞ் செய்கிறாய். என்னைப் பரியாசஞ் செய்யவேண் டாம். சும்மாபோ” என்று சொல்லித் துர்வாசமுனி யதேச்சையாகப் போனார். இந்திரனும் மறுபடியும் ஐராவதத்தின்மேல் ஏறிக்கொண்டு அமராவதி பட்டண த்தைப் போய்ச்சேர்ந்தான்.

கேளும் மயித்திரேயரே! அன்று முதல் மூன்று லோகங்களும் லட்சுமி கடாக்ஷமற்று, மூலிகைகளும், கொடிகளும் பலவிருக்ஷங்களும் க்ஷீணிக்கலாகி, கேட்டையடைந்துகொண்டுவந்தன. அதுமுதல் யாகாதி கர்மங்களும் நன்றாய் நடக்கவில்லை. தவசிகளும் நன் றாய்த் தவஞ் செய்யவில்லை. தானம் முதலான தர்ம காரி யங்களிலே ஜனங்களுக்கு மனது பிரவேசிக்கவில்லை. சகலமான ஜனங்களும் சத்துவ மில்லாதவர்களாய், லோபம் முதலானவைகளாலே இந்திரியசுத்தி இல்லா தவர்களாய், அற்பவிஷயத்திலும் பேராசை யுள்ளவ ரானார்கள். ஏனென்றால், மயித்திரேயரே! சத்துவ குணம் எங்கே யிருக்குமோ அங்கே ஸ்ரீமகாலட்சுமி

வாசஞ்செய்பவள். சத்துவ குணமும் லக்ஷ்மி கடாக்ஷத்தை யநுசரித்திருக்கும். லக்ஷ்மி கடாக்ஷ மற்றவர்களுக்குச் சத்துவ மேது? சாத்துவிக குணமில்லாதவரிடத்தில் மற்றச் சுகுணங்கள் மிகவும் குறைவா யிருக்கும். புருஷன் எவ்வளவு பிரசித்தனு யிருந்தாலும் வீரிய தைரியங்களும் தயாளம் இரக்க முதலிய குணங்களும் இல்லாதவனுனல், சகல ஜனங்களாலேயும் தூஷிக்கத்தக்கவனும், அவமானஞ் செய்யத் தக்கவனுமாவான். அப்படியிருக்க, இவ்வாறு திரிலோகங்களும் லக்ஷ்மி கடாக்ஷங் குறைந்தனவாய், மிகுந்த துர்த்தசையடைந்திருக்கையில், தைத்திய தானவாதிகள் தேவசனங்களை உபத்திரவப்படுத்தத் தொடங்கினுர்கள்.

அப்பால் லோபாதி துர்க்குணங்களுடையவர்களாய், லக்ஷ்மி கடாக்ஷ மில்லாதவர்களுமாய், பலமும் சத்துவமும் இல்லாதவர்களுமாயிருந்த அசுரர்களும், ஐசுவரிய மிழந்தவராய்த் துர்ப்பலரான தேவதைகளும், ஒருவரோடொருவர் யுத்தஞ்செய்யத் தொடங்கினுர்கள். இப்படிச் சண்டை செய்கையில், இந்திரன் முதலான தேவர்களெல்லாம் தைத்தியர்களுடைய பராக்கிரமத்துக்குத் தோற்று, எதிர் நிற்கமாட்டாமல் ஓடிப்போய், பிரமதேவனைச் சரணமடைந்து, தங்களுக்கு அசுரராலே நேர்ந்த கெட்ட காலத்தை யறிவித்தார்கள். அது கேட்டு, அவ்விரிஞ்சன் "தேவர்களே! பராபரங்களென்று சொல்லப்பட்ட உயர்ந்தவைகளுக்கும் தாழ்ந்தவைகளுக்கும் ஈசுவரனும், அசுரரை யெல்லாம் நாசஞ்செய்ய வல்லவனும், உலகத்தினுடைய உற்பத்தி திதி லயங்களுக்குக் காரணமானவனும், தனக்கொரு காரணமின்றித் தானே சுதந்திரனு யிருப்பவனும், சர்வேசுவரனும், பிரசாதிபதிகளுக்கும் அதிபதியும், முடிவில்லாதவனும், ஒருவராலும் வெல்லக்கூடாதவனும், நித்தியர்களும், காரிய பூதர்களுமான பிரகிருதி புருஷர்களுக்கு உட்புகுந்து நடத்துகிறவனும், தன் திருவடிகளை யடைந்தவர்களுடைய துன்பங்களை நீக்க வல்லவனுமான ஸ்ரீ விஷ்ணுவைச் சரணமடையுங்கள்; அவர் உங்களுக்கு க்ஷேமத்தைச் செய்தருளுவர், வாருங்கள்," என்று சொல்லி, அவர்களைக் கூட்

டிக்கொண்டு, திருப்பாற்கடலின் வடகரையிற் சென்று, அங்கே சகல தேவசமூகமும் தானுமாய்ச் சர அசரங் களுக்கும் ஈசுவரனை ஸ்ரீயப்பதியை உத்தேசித்துத் தோத்திரஞ் செய்வாராயினர்.

"சர்வமயனும், சர்வேசனும், முடிவில்லாதவனும், பிறப்பில்லாதவனும், சுருங்கல் முதலானவை யில்லாத வனும், லோகாதாரனும், தனக்கு வேறு ஆதார மில்லாதவனும், அப்பிரமேயனும், பேதிக்கக் கூடாதவனும், சூட்சுமங்களிலும் அதிசூட்சுமமானவனும், தூலங்களிலும் அதிதூலமானவனுமாகிய ஸ்ரீமந் நாராயணனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றோம். அடியேன் முதலான சமஸ்த பிரபஞ்சமும் எவனிடத்தினின்றும் ஜனித்ததோ, எவனிடத்தி லிருக்கின்றதோ, எவனிடத்தில் லயப்படுமோ, சர்வபூதங்களும் எவனுடைய சரீரமோ, எந்த தேவன் மேலானவர்களுக்கும் மேலானவனோ, எவன் இருபத்துநான்கு தத்துவங்களுக்கும் பரனை புருஷனுக்கும்* மேற்பட்டவனென்றும் பரமாத்துமாவென்றும் மோக்ஷத்தை யபேக்ஷிக்கிற யோகிகளாலே மோக்ஷத்திற்காக நினைக்கப்படுகிறானோ, எவனிடத்தில், பிராகிருதமான சத்துவாதி குணங்களில்லையோ, சுத்தமான சகல வஸ்துக்களுக்கும் மிகவும் சுத்தனான அந்த ஆதிபுருடன், அடியேங்களுக்குப் பிரசன்னனாகவேண்டும். கலை காஷ்டை நிமிஷம் முதலான காலசூத்திரத்திற்குக் கோசரமானவிடத்தில், பிராட்டி, திவ்விய மங்கள விக்கிரகம், பரிஜனமுதலான எவனுடைய விபூதிகள் இல்லையோ, அப்படிப்பட்ட ஸ்ரீஹரிபகவான் அடியேங்களுக்குப் பிரசன்னனாகக் கடவன்.

"எவன் பரமேசுவரனும் அஜனுமாயிருந்தும் எல்லோருக்கும் அந்தர்யாமியா யிருக்கையாலே, முத்தியடைந்த ஆத்துமாவாக உபசார வழக்காய்ச் சொல்லப் படுகின்றானோ, அந்த ஸ்ரீமகா விஷ்ணுவானவன் அடியேங்களுக்குப் பிரசன்னனாகக் கடவன். எவன் காரணமாகியும் காரியமாகியும் காரணத்திற்குக் காரணமாகியும் காரியத்திற்குக் காரியமாகியு மிருக்கின்றானோ, அவன் பிரசன்னனாகக் கடவன். பிரகிருதியின் காரிய

மான மகத்தின் காரியமான அகங்காரம் யாதுண்டோ அதின் காரியமான தன்மாத்திரைகளுண்டன்றே, அவற்றின் காரியமான பஞ்சமகா பூதங்களுண்டன்றே, அவற்றின் காரியமான பிரமாண்டத்திற்குக் காரியமாயிருக்கிற சதுர்முகனும், அவனிடத்திலுண்டான தக்ஷாதிகளும் ஆகிய இந்த உலகப்பிரவாக மெல்லாம் எவன் தானேயா யிருக்கின்றானோ, அப்படிப்பட்ட எம்பெருமானை அடியோம் சரண மடைகின்றோம். எவன் சப்தாதி சகல போக்கியங்களை அநுபவிப்பவனாயும், சப்தம் முதலான சகல போக்கிய வஸ்துக்களாயும், சகலபிரபஞ்சங்களுக்கும் சிருட்டிகர்த்தாவாயும், சிருட்டிகாரியமாயும், சகல சரீரகனா யிருக்கையாலே, இப்படிக் கர்த்துரு சொரூபமாயும் காரிய சொரூபமாயு மிருக்கிற பரமப்பிராப்பியனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றோம். விசுத்தஞானமயமும் அஜமும் அட்சரமும் அவ்யயமும் அவ்யத்தமுமாய்த், தூலமுஞ் சூட்சுமமுமல்லாதே, சகல விசேஷண வர்ச்சிதமா யிருக்கிற அந்தப் பராத்பரமான விஷ்ணு சொரூபத்துக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றோம். பரப்பிரம சொரூபனான அந்தப் புருஷோத்தமனுடைய பதினாயிரத்திற் பதினாயிரமான அம்சத்தின் யாகம் ஓர் அம்சத்தில் சமஸ்த பிரபஞ்ச சக்தியும் இருக்கிறதோ, அந்த அவ்யயனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றோம். எப்போதும் தியானஞ் செய்து கொண்டிருக்கிற யோகிகள் தங்களுடைய பாவ புண்ணிய உருவமான கருமங்கள் நசித்தவுடனே எந்தச்சொரூபத்தைப் பிரணவப்பொருளாகக் காண்கிறார்களோ, எந்தச் சொரூபத்தைத் தேவர்களும் ரிஷிகளும் நானும் சங்கரனும் அறியமாட்டோமோ, தனக்குமுன் யாருமில்லாமல் தானே எல்லாவற்றிற்கும் முன்னுமிருக்கிற எந்தத் தேவனுடைய சத்திகள் பிர்ம விஷ்ணு சிவாத்துமகங்களாய்ச் சிருஷ்டிஸ்திதி சம்ஹாரங்களை யுண்டாக்குமோ, அந்த ஸ்ரீமகா விஷ்ணுவினுடைய சொரூபத்துக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றோம். சர்வேசுவரனே! சர்வபூத சொரூபனே! சகலத்துக்கும் ஆசிரயமானவனே! அச்சுதனே! ஸ்ரீ விஷ்ணுபகவானே! உன் சரண கமலங்களை நம்பி

யிருக்கிற அடியேங்களிடத்தில் கிருபைசெய்து அடியோங்களுடைய கண்களுக்கு எதிரில் சேவை சாதித்தருளவேண்டும்," என்று சதுர்முகன் துதித்துக்கொண்டிருக்க, மற்றத் தேவர்கள் அவ்வெம்பெருமானைக் குறித்து அநேகமாகத் தெண்டனிட்டு, "ஸ்வாமி! அடியேங்களிடத்திற் பிரசன்னனாகிச் சேவை சாதிக்கவேண்டும்; எம்பெருமானே! இரணியகர்ப்பனும் உருத்திரனும் உன்னுடைய பரமசொரூபத்தை நிசமாக அறியமாட்டார்கள். ஜகந்நிவாசனாய் எங்கும் நிறைந்தவனான உனக்குத் தெண்டன் சமர்ப்பிக்கிறோம்" என்று துதி செய்யக்கண்டு பிரகஸ்பதி முதலான தேவரிஷிகளும் துதிசெய்வாராயினர்.

"ஆதியாயும், யக்கிய புருஷனாயும், சகல யக்கியங்களாலேயும் ஆராதிக்கத் தக்கவனாயும், பூர்வீகர்களுக்கும் பூர்வீகனாயும், ஜகத்தைச் சிருட்டிக்கிற பரமேஷ்டிக்குத் தகப்பனாயும், இன்னபடியென்று விசேஷப்படுத்தக் கூடாதவனாயும் இருக்கிற ஸ்ரீயப்பதிக்குத் தெண்டனிடுகின்றோம். ஷட்குண அயிசுவரிய சம்பன்னனானவனே! முற்பட்டவைகளுக்கும் பிற்பட்டவைகளுக்கும் அதிபதியானவனே! யக்கிய சொரூபத்தைத் தரித்தவனே! அழிவில்லாதவனே! உன்னுடைய திருவடித் தாமரைகளைச் சரணமாகப் பற்றின அடியேங்களுக்குக் கிருபை செய்து சேவை சாதிக்கக்கடவை. அடியோமோடுகூட இந்தப் பிரமதேவனும், ஏகாதச உருத்திரர்களோடு இந்த மகா தேவனும் துவாதச ஆதித்தர்களோடு இந்தப் பூஷாவும், திரேதாக்கினிகளோடு இந்த அக்கினியும், அசுவனி தேவதைகளும், வசுக்களும், மருத்துக் கணங்களும், விசுவதேவதைகளும், சாத்தியரும், மற்றுமுள்ள தேவ கணங்களோடு இந்தத் தேவேந்திரனும், அசுரசேனைகளினாலே ஜயிக்கப்பட்டு ஓடிவந்து, உன் திருவடித் தாமரைகளையே தஞ்சமாகப் பற்றி, அநேகமாய்த் தண்டன் சமர்ப்பித்துக்கொண்டிருக்கின்றார்கள். இவர்களைக் கடாக்ஷித்தருளவேண்டும், ஸ்வாமீ" என்று தேவரிஷிகளாலே துதிக்கப்பட்ட எம்பெருமான் சங்க சக்கராதி லக்ஷணங்களோடுகூடி அந்தத் தேவசமூகங்களுக்குப் பிரத்தியக்ஷமாகிச் சேவை கொடுத்தருளினர்.

இவ்வண்ணம் திருவாழி திருச்சங்கு முதலானவைக ளோடு கூடி விலக்ஷணமான திவ்யமங்கள விக்கிர காதிகளை யுடையவனுய்த் தேஜோராசியாய்ச் சேவை சாதித்த எம்பெருமானைச் சதுர்முகன்முதலிய தேவதை கள்சேவித்து, அந்த ஆநந்தத்திஞலே கண்கள் மலர்ந்து அசையாமலிருக்க, முன்பு தெண்டன் சமர்ப்பித்திருந் தாலும் பக்தியின் அதிசயத்திஞலே அடிக்கடிக்கீழே வீழ்ந்து தெண்டன் சமர்ப்பித்துச் செந்தாமரைக் கண்ணனை அவ்வெம்பெருமானைத் துதிக்கத் தொடங் கிஞர்கள்.

"ஸ்வாமி! ஆநந்தமான தெண்டன் சமர்ப்பிக்கின் ரேம். உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்னும் பேதமில்லா மல் யாவரிடத்திலும் சமமான அநுக்கிரக முள்ளவன் நீ. பிரமாவும் உருத்திரமூர்த்தியும் இந்திரனும் அக்கினி யும் வருணனும் வாயுவும் ஆதித்தனும் யமனும் வசுக் களும் மருத்துக்களும் விசுவ தேவதைகளும் மற்றும் இங்கே வந்திருக்கிற சகல தேவதா கணங்களும் நீயே. ஏனெனில் யாவரிடத்திலும் நீயே இருந்து நடத்து கின்ருயன்ரே. ஆகையாலே ஆத்துமாவுக்குக் காரணங் கள்போலே எல்லாரும் உனக்குச் சேஷபூதரா யிருக்கி ருர்கள். அன்றியும் உன்னுடைய ஆராதனமான யாகங் களும் வஷட்காராதிகளும் சகல வேதமூலமான பிர ணவமும் நீயே. இவ்விதமான சகல ஆராதனங்களை யும் திருவுள்ளம்பற்றிப் பிரஜைகளை ரக்ஷிப்பவனும் நீயே. எல்லாவற்றையும் அறிபவனும் நீயே. எல்லா வற்ருலும் அறியப்படுவதும் நீயே. உன்னிடத்திலே சகல பிரபஞ்சமும் நிற்கின்றன. அடியேங்கள் தைத் தியர் கூட்டத்திஞலே ஜயிக்கப்பட்டு மகாவிசனமடை ந்து சர்வலோக சரணியனை உன்னைச் சரணமடைந் தோம். கிருபைசெய்து உன்னுடைய தேஜோ விசேஷத் திஞலே அடியேங்களை நிறைந்தவாராகச் செய்தருள வேண்டும். சகல பாபநாசகரனை உன்னைச் சரண மடையு மளவுதான் புருஷனுக்கு உபத்திரவமும் விஷ யங்களில் ஆசையும் மோகமும் துக்கமு முண்டாயிருக் கும். தயாசமுத்திரனே! சரணுகதரான அடியேங்களிடத் திற் பிரசன்னனுகி உன்னுடைய திவ்விய தேஜசிஞலே

அடியேங்களுடைய தேஜஸைப் பூரித்தருளவேண்டும்'' என்று துதிசெய்து தெண்டன் சமர்ப்பித்துக் கைகூப்பிக்கொண்டு நிற்கின்ற அவ்வமரர்களைக் கண்டு, சர்வக்கியனான எம்பெருமான் முகமலர்ந் தநுக்கிரகம் புரிந்து அருளிச் செய்வாராயினர்.

"ஓ தேவதைகளே! என்னுடைய தேஜோ விசேஷத்தினாலே உங்களுடைய பல சத்துவ தேஜோ தைரியங்களை அபிவிர்த்தி செய்கின்றேன; நீங்கள் தைத்தியர்களை ஒருமைப்படுத்திக் கூட்டிக்கொண்டு, திருப்பாற் கடலிலே சகல ஓஷதிகளையும் போட்டு, மந்தர பர்வதத்தை மத்தாகவும் வசுகியைக் கடையுங் கயிருகவுஞ் செய்துகொண்டு, அமிர்தத்தைக் குறித்துக் கடையுங்கள்; இதனாலுண்டாகும் பயனை நாமிரு திறத்தாருஞ் சரியாய்ப் பங்கிட்டு அநுபவித்துக் கொள்ளுவோமென்றே பேசி, சாமோபாயத்தினாலே தைத்திய தானவர்களை வசம் பண்ணிக்கொள்ளுங்கள்; இப்படித்திருப்பாற்கடலைக் கடைவதினாலேயுண்டாகும் அமிர்தத்தைப் பானஞ்செய்து நீங்கள் மகாபலவான்களும் அமரர்களுமாவீர்கள்; நான் அந்த அமிர்தம் அவ்வசுரர்களுக்கு எட்டாமல் வருத்த மாத்திரமே மிகுந்திருக்கும்படிச்செய்விக்கின்றேன்; இந்தக் காரியத்தில் உங்களுக்கு வேண்டுஞ் சகாயஞ் செய்கின்றேன்'' என்று எம்பெருமான் திருவாய் மலர்ந்தருளக்கேட்டு, தேவர்கள் மிகவும் சந்துஷ்டி யடைந்து, சுவாமி சந்நிதியினின்று விடை பெற்றுப்போய், சாம உபாயத்தினாலே அசுரருடனே சமாதானம் பண்ணிக்கொண்டு, அமிர்தமதனஞ் செய்வதற்காக இருதிறத்தாரு மொருமனப்பட்டுக் கூடிப்போய் சகல ஓஷதிகளையும் கொண்டுவந்து சரத்கால மேகத்தைப்போல் மிகவும் வெண்மையா யிருக்கிற திருப்பாற் கடலிலே போட்டு, மந்தர பர்வதத்தை மத்தாகவும் வாசுகியைக் கயிருகவுங்கொண்டு, அதிக வுற்சாகத்தோடு கடையத் தொடங்கினர்கள்.

அப்போது எம்பெருமான் தேவதைகளை வாசுகியின் வாலைப் பிடிக்கும்படியாகவும் அசுரரைத் தலையைப் பிடிக்கும்படியாகவும் நியமித்தார். அவர்களும் அந்தப்படியே செய்துவர, பல பராக்கிரமங்கள் மிகுந்

தவரான தானவர்கள் விஷாக்கினிச் சுவாலையோடு கூடின வாசுகியினுடைய பெருமூச்சுக் காற்றினாலே தேஜசு குறைந்து பலஹீனரானார்கள். தேவதைகளோ, அந்த நாகேந்திரனுடைய சுவாச வேகத்தினாலடித்துத் தள்ளப்பட்டு வாலின்பக்கத்திற் சேர்ந்த மேகங்கள் வருஷித்த சீதளமான நீர்த்திவலைகளாலே வருத்தந் தீர்ந்து சுகப்பட்டார்கள். அப்போது ஸ்ரீமந் நாராயணன் திருப்பாற்கடலின்மத்தியில் மகா கூர்ம ரூபத்தைத் தரித்து, சுழலாநின்ற மந்தரபருவதத்துக்கு ஆதாரமாக எழுந்தருளி இருந்தார். மேலும் வேறொரு திருமேனியைத் தரித்து தேவதைகள் பக்கத்திலேயும், மற்றொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று, சங்க சக்கராதி திவ்விய ஆயுதங்களைத் தரித்து, வாசுகியினுடைய வாலையுந் தலையையும் பிடித்து வலமுமிடமுமாக இழுத்து, கடைந்தருளினார்.

இதுவுமல்லாமல் மிகவும் பெரிதான ஒரு திவ்விய ரூபத்தினாலே அந்தப் பர்வதத்தின் மேற்புறத்தை ஆக்கிரமித்து, அதைப் பலப்படுத்தியருளினார். பின்னும் மகாப் பிரபுவான அப்பகவான், தேவரும் அசுரரும் அறியமாட்டாத அதி ரகசியமான வேறொரு சொரூபத்தினாலே நாகேந்திரனான வாசுகிக்கும், மற்றொரு சொரூபத்தினாலே தேவர்களுக்கும், தேஜோபல தைரிய உற்சாகங்களை அபிவிருத்தி செய்துகொண்டு எழுந்தருளி இருந்தார். இவ்விதமாய்ச் சகலவிதத்திலும் ஸ்ரீயப்பதியினுடைய சகாயத்தைக்கொண்டு தேவதைகளும் அசுரரும்கடைந்த திருப்பாற்கடலினின்றும், அவிசுக்கு இருப்பிடமாய், சகல தேவதைகளினாலேயும் பூசிக்கத் தக்க காமதேனு உண்டாயிற்று. அதைக்கண்டு சுரரும் அசுரரும் மனமிழுக்கப்பட்டுக் கண்கள் மலர்ந்து சந்தோஷத்தை யடைந்தார்கள். பின்பு ஆகாசத்திலே சித்தாதிகள் மோகத்தினாற் கலக்குற்ற மனமுடையவர்களாய் இஃது என்ன அற்புதமென்று அதிசயிக்கும்படி மதர்த்த கண்களைச் சுழற்றிக்கொண்டு சகல லோக மோகினியான வாருணிதேவி தோன்றினாள். திரும்பியும் மந்தர மலையினாலே கடையப்பட்ட திருப்பாற்கடலிலிருந்து அபூர்வமான திவ்விய கந்தத்தினாலே மூன்று

லோகத்தையும் பரிமளிப்பிக்கத் தக்கதும், தேவஸ்திரீகளுக்கு ஆநந்தகரமானதும் ஆகிய பாரிசாதமென்கிற விருட்சமும், பின்பு ஜகன்மோகனமான ரூபலாவண்ணிய விலாசங்களுள்ள அற்புதமான அப்சர ஸ்திரீகளும் அதற்குப் பின்பு *குளிர்ச்சியான கிரணங்களாலே லோகாநந்தகரனுன சந்திரனும் ஜனித்தார்கள். அந்தச் சந்திரனை உருத்திரமூர்த்தி எடுத்துக்கொண்டார்.

பின்பு அக்கடலி லுற்பவமான விஷத்தைச் சிவனும் நாகேந்திரர்களும் கிரகித்துக் கொண்டார்கள். அப்பால் பகவதம்சமான தன்வந்தரி என்னுந் தேவன், வெண்மையான வஸ்திரமும் பூமாலையுந் தரித்துக் கொண்டு, அமிர்தபூர்ணமான கமண்டலத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, அந்த க்ஷீர சமுத்திரத்திலிருந்து உதயமானன். இப்படி அமிர்த கலசத்தோடு உதித்த அந்தத் தேவனைக்கண்டு சுரர்களும் அசுரர்களும் மனம் சொஸ்தப்பட்டு மகா சந்தோஷத்தினுலே பூரிப்பை அடைந்தார்கள்.

கேளும் மைத்திரேயரே! பின்பு, அதியற்புதமும் அபூர்வமுமான திவ்வியகாந்தி விசேஷத்தினுலே திக்குகளெல்லாம் பிரகாசிக்கும்படியாய், மலர்ந்த செந்தாமரை மலரை ஆசனமாகக்கொண்டு, தாமரைப் புஷ்பங்களையே திருக்கரங்களிலும் தரித்துக்கொண்டு, ஜகன்மாதாவான பெரிய பிராட்டியார் திருவவதரிக்கக்கண்டு, மகாரிஷிகளெல்லாம் பரமசந்தோஷ யுக்தர்களாய் ஸ்ரீ சூக்தங்களைக் கொண்டு வெகுவிதமாகத் தோத்திரஞ் செய்தார்கள்.

அப்போது பிராட்டியின் சந்நிதியிலே விசுவாவசு முதலான கந்தருவர்கள் கீதங்களைப் பாடினுர்கள். கிருதாசி முதலான அப்சரஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தார்கள். கங்கைமுதலான மஹாநதிகள் தங்கள் தீர்த்தங்களைக் கொண்டு அந்தப் பிராட்டியின் திருமஞ்சனத்திற்காக ஸ்திரீரூபந் தரித்துச் சேவித்து நின்றன.

* ஆதியில் எம்பெருமானிருதயத்தினின்றும் உதித்த சந்திரனுக்கு இரண்டு ரூபங்கள். அவற்றுள் ஒன்று சிவனுக்குச் சிரோபூஷணமானது, மற்றொன்று உலகத்திற்கு வெளிச்சந்தர நிற்பதென வறிக.

திக்குக் கஜங்கள் நவரத்தின கசிதமான சுவர்ண கலசங்களிலே அந்த நதி தீர்த்தங்களை எடுத்துச் சர்வலோக மகேச்வரியான அந்தப் பிராட்டிக்குத் திருமஞ்சனஞ் செய்தன. அந்த க்ஷீராப்தி, ஒரு புருஷ ரூபத்தைத் தரித்து நித்திய விகசிதமான திவ்விய பதுமமாலிகையைத் தாயாருக்குச் சமர்ப்பித்தது. உடனே விசுவ கர்மாவானவன் திவ்விய ரத்தினமயமான திருவாபரணங்களைத் தாயார் திருமேனியிலே சாத்தினன். இவ்விதமாய் அவரவர் செய்த கைங்கரியங்களைத் திருவுள்ளம் பற்றி, திருமஞ்சனங் கண்டருளி, திருவாபரணம் திருமாலை முதலானவைகளைச் சாத்திக்கொண்டு, அந்தப் பிராட்டியானவள் பிரம ருத்திர புரந்தராதி தேவர்கள் பார்த்துக்கொண்டே யிருக்க, அந்தத் தேவசங்கத்தின் நடுவே எழுந்தருளி யிருந்த பெருமாளுடைய திருமார்பிலேறி எழுந்தருளி யிருந்தாள்.

பின்பு எம்பெருமானுடைய வக்ஷஸ்தலத்தில் வீற்றிருந்தக் பெரியபிராட்டியார் குளிர கடாட்சித்ததனாலே, தேவதைகளெல்லாம் மனஸ்தாபம் இழந்து, மிகுந்த சந்தோஷத்தை யடைந்தார்கள். விப்பிரசித்தி முதலான அசுரர், பெருமாளிடத்தில் பக்தியில்லாதவர்களாகையாலே, பிராட்டியின் கடாட்சமிழந்து மிகுந்த தீனஸ்திதியை யடைந்தார்கள். இப்படியிருக்க, தைத்தியர்கள் தன்வந்திரியின் கையிலிருந்த அமிர்த கலசத்தைப் பலாத்காரமாகப் பிடுங்கிக்கொண்டார்கள். அப்போது ஸ்ரீமந் நாராயணன் ஜகன்மோகனகரமான ஒரு ஸ்திரீ ரூபத்தைத் தரித்து, அசுரர்களை வஞ்சித்து, அமுர்தத்தைக் கைக்கொண்டு, அமரர்களுக்குப் பிரசாதித்தார். இப்படிப் பகவத் கிருபையினாலே கிடைத்த அவ்வமுதத்தைத் தேவதைகள் பானஞ்செய்து பலாதிகர்களாய்ப் பிரகாசித்தார்கள். இதைக் கண்டு தைத்தியதானவர்கள் அதிக குரோத முடையவர்களாய் நானாவித ஆயுதங்களைத் தாங்கித் தேவர்களோடு யுத்தத்துக்கு வர, தேவதைகள் அமிர்த பானத்தினாலே பல சௌரிய தைரிய உற்சாகங்கள் மிகுந்திருந்ததனால், பின் வாங்காமல் உக்கிரமாக எதிர்த்து அஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். அதனாலே அசுரர்கள் மெலிந்து மனங்கலங்கி

மிகவும் நடுக்கமுற்றுப் பாதாள லோகத்துக்கு ஓடிப் போய் விட்டார்கள். புரந்தரன் முதலிய வானவர்கள் எல்லாம் ஜயமடைந்து, லக்ஷ்மி கடாட்ச வீட்சணலங் கிருதர்களாய், சங்க சக்கர கதாதரனை ஸ்ரீயப்பதிக்குத் தெண்டன் சமர்ப்பித்து, விடைகொண்டு சென்று, முன் போலவே தேவராச்சியத்தை இடையூறின்றி அநுப வித்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

ஓ முனிசிரேஷ்டரே! அப்போது சூரியன் பிரசன்ன மான கிரணங்களோடு கூடித் தன்வழியில் மாறாமல் சஞ் சரித்து வந்தான். மற்று முண்டாகிய கிரக நட்சத்திராதி சோதிக் கணங்களும் தம்வழி மாறாமற் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. அக்கினி பகவானும் பிரதட்சிண வர்த்தமாகச் சுவாலா சாலங்களினாலே மிகவும் பிரகாசித் தான். சகல ஜனங்களுந் தரும புத்தியுடையவர்களாய்ச் சுகமாக இருந்தார்கள். இப்படி மூவுலகங்களும் லட்சுமி கடாட்சம் பெற்று வாழ்ந்திருந்தன.

இப்படி இருக்குங்காலத்தில் சொர்க்கத்தில் தேவ ராச்சியம் பெற்று திவ்விய சிங்காசனத்திலுடனே யிருக்கிற தேவேந்திரன் பிராட்டியைத் தோத்திரம் பண்ணுவா னாயினன். "சகல லோகங்களுக்குந் தாயாராய், திருப் பாற்கடலிற் றிருவவதரித்தவளாய், மலர்ந்த தாமரைப் பூவையொத்த திருக்கண்களுடையவளாய், பெருமா ளுடைய திருமார்பில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீதேவிக் குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன். தாமரை மலரில் வீற்றிருப்பவளும், தாமரை மலரைத் திருக்கைகளிற் றரித்தவளும், தாமரை மலர்போன்ற திருக்கண்க ளுடையவளும், தாமரை மலரையொத்த திருமுக மண் டல முள்ளவளும், உந்தியில் தாமரை பூத்தவன் திரு வுள்ளத்துக்கு உகப்பானவளுமான ஸ்ரீதேவியைச் சேவிக்கின்றேன். உலகங்களைப் பரிசுத்தம் செய்தருளு கிற தாயே! சித்தியும் சுவாகையும் சுதையும் சொதையும் சந்தியும் இரவும் பிரபையும் பூதியும் மேதை யும் சிரத்தையும் சரசுவதியும் எல்லாம் நீயே. சகல மங்கள சொரூபையான தாயே! யக்ஞவித்தை யென்கிற கர்ம மீமாஞ்சையும், மகாவித்தையென்கிற இந்திர

ஜால வித்தையும், குஹ்யவித்தையென்கிற மந்திரவித்தையும், மோக்ஷங் கொடுக்கவல்ல ஆத்தும வித்தையென்கிற வேதாந்தவித்தையும் நீயே. தர்க்கவித்தையும், வேதவித்தையும், உழவு, பசுக்காத்தல், வாணிபம் முதலிய வித்தையும், தண்டநீதி வித்தையும் நீயே. இப்படிச் சாந்தங்களாயும் அசாந்தங்களாயு மிருக்கிற ரூபங்களைக்கொண்டு நீ மூன்று லோகங்களையும் நிறைத்திருக்கிறாய். தாயே! சர்வலோகேசுவரீ! நீயல்லாமல் மற்றும் யார் சகல யக்ஞிய சொரூபமாய் மகா யோகீந்திரர்களுக்குந் தியானித் தறியத்தக்கதான தேவதேவனை கதாதரனுடைய திருமேனியில் வீற்றிருக்க மாட்டுவார்கள்? லோகமாதாவே! உன் கடாக்ஷ மிழந்தபோது மூன்றுலோகங்களும் நாசமடைந்தவைகள் போலாகித் திரும்பியும் உன் கடாக்ஷம் பெற்றபடியினாலே சௌபாக்கியங்களைப் பெற்றிருக்கின்றன. மகாநுபாவையான தாயே! கிருபாரசம் நிறைந்த உன் கடாக்ஷ வீக்ஷணத்தினாலே பிராணிகளுக்கு பாரியா புத்திர பந்து மித்திர கிருக க்ஷேத்திர தன வாகனாதிகள் எப்போதும் உண்டாகின்றன. எம்பெருமாட்டி! உன் கடாக்ஷமுண்டான புருஷர்களுக்குத் தேகாரோக்கியமும், அதிகாரமும், சத்துரு ஜயமும், சுகமும் கிடைப்பது அருமையன்று. அம்மா! நீ சமஸ்த பிரபஞ்சத்துக்குந் தாய். தேவதேவனை நாராயணன் தந்தை. அம்மா! நீங்களிருவருமே சேர்ந்து சராசர ஸ்வரூபமான இந்தப் பிரபஞ்சமெல்லாம் வியாபித்திருக்கின்றீர்கள். ஸ்ரீவிஷ்ணுவின் திருமார்பில் வீற்றிருக்குந் தாயே! அடியேமுடைய புத்திர மித்திர வர்க்கங்களையும், பசுக்கணங்களையும், பூஷணங்களையும், ஒரு நாளும் பிரியாமலிருந்தருளவேண்டும். சகலத்தையும் பரிசுத்தம் பண்ணவல்ல தாயே! அடியேமுடைய தனகோசத்தையும், தொழுவத்தையும், கிருகங்களையும், பரிகரங்களையும், சரீரத்தையும், களத்திரத்தையும், ஒருநாளும் பிரியாமலிருந்தருளவேண்டும். நிர்மலையான தாயே! உன்னுடைய கடாக்ஷத்துக்குத் தூரமானபோது ஜனங்கள், சத்திய சௌசீலாதி சாத்துவிக குணங்களில்லாமற் போவார்கள். குண ஹீனராயினும் உன் கடாக்ஷத்துக்குப் பாத்

திரரான புருஷர் அப்போதே செளசீலியாதி சகல மகா குணங்களுந் தனதானியாதி சமிர்த்தியும் பிரபுத்துவமும் பெற்று வாழ்வார்கள். ஸ்ரீவிஷ்ணு வல்லபையான தாயே! உன் கருணை கடாக்ஷத்துக்கு எவன் பாத்திர பூதனோ, அவனே சிலாக்கியனும், குணவானும், புண்ணியவானும், மகா குண மூள்ளவனும், புத்திமானும், சூரனும், பராக்கிரமவானு மாவான். ஜகத்தை யெல்லாம் வளர்க்குந் தாயே! நீ யுபேட்சை பண்ணினால் அவனிடத்தில் உண்டான சத்திய சமதமாதி சகல சத்குணங்களும் துர்க்குணங்களாய் மாறி விடும். ஓ பதுமாக்ஷி! உன் திருக்கலியாண குணங்களைச் சதுர்முகனாலுஞ் சம்பூர்ணமாகத் துதிக்க மாட்டுவனோ? அப்படியிருக்க அடியேன் எவ்வளவு. ஆனாலும் அடியேங்களிடத்தில் கிருபைகூர்ந்து, ஒருக்காலும் விட்டுவிடாமல் ரக்ஷித்தருளவேண்டும்" என்றிப்படித் தோத்திரஞ்செய்ய, எங்கும் நிறைந்திருக்கிறவளான பிராட்டியார் திருவுள்ளமுவந்து கக்ஷணமே புரந்தரனுக்குப் பிரத்தியக்ஷமாய் எழுந்தருளிச் சேவை சாதித்து, தேவதைகளுங் கேட்கும்படியாக, "ஓ தேவேந்திரனே! நீ செய்த ஸ்தோத்திரத்துக்குச் சந்தோஷமடைந்து வரங்கொடுக்க வந்தேன்; உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்" என்று அருளிச்செய்ய, அந்தப் புரந்தரனும் தாயாரைச் சேவித்து, தாயே! அடியேன் உன் கிருபாகடாக்ஷத்துக்குப் பாத்திரனாகும் படி கிருபைகூர்ந்து வரந்தரும்படி எழுந்தருளினதனால் நீ திரிலோகத்தையும் விடாமல் எழுந்தருளியிருக்கவும், எவனாகிலும் பத்தியுத்தனாய் இந்த ஸ்தோத்திரத்தினாலே உன்னைத்துதித்தால் அவனை நீ யொருநாளும் கைவிடாமல் ரக்ஷித்தருளவும் வேண்டும்" என இரண்டு வரங்களைக் கொடுத்தருளும்படிப் பிரார்த்தித்தான்.

பிராட்டியாரும் இந்தப் பிரார்த்தனையைத் திருவுள்ளம்பற்றி, சுரேந்திரனைப் பார்த்து, "அமரேந்திரா! நீ விரும்பியபடியே நீயாளுகிற லோகங்களை நான் விட்டு நீங்குவதில்லை. அன்றியும், எவன் தினந்தோறும் காலை மாலைகளில் இந்தத் தோத்திரத்தினாலே

என்னைத் துதிக்கிருனே அவனை யொருநாளும் நான் உபேக்ஷை செய்யாமல் கடாக்ஷிக்கிறேன்" என்று இர ண்டு வரங்களையும் பிரசாதித்தருளினாள்.

கேட்டீரோ மயித்திரேயரே! பூர்வத்தில் ஸ்ரீதேவி பிருகுமகாரிஷிக்குக் கியாதியென்ற ஸ்திரீயினிடத்திலவ தரித்தாளென்று சொன்னேனே; பின்பு அமிர்தங் கடை ந்த காலத்திலே திருப்பாற்கடலிலேயுமவதரித்தாள். இது மாத்திரமன்று. லோகநாதனை ஜனார்த்தனன் எப்போ தெப்போது லோகங்களி லவதரிப்பனே அப்போதப் போது ஸ்ரீதேவியும் அவனேடுகூட அவ் வவதாரப் பிர யோசனம் தலைக்கட்டும்படி அவதாரஞ் செய்தருளுவள். முன்பு நாராயணன் அதிதிக்குக் குமாரனாக அவதரித்த போது, இவள் பதுமை யென்கிற திருநாமமுடைய வளா யவதரித்தாள். அவன் பரசுராமனாக அவ தரித்தபோது, இவள் தரணியாக அவதரித்தாள். அவன் சக்கிரவர்த்தித் திருமகனாய் அவதரித்தபோது, இவள் சீதாபிராட்டியாக அவதரித்தாள். அவ்வெம் பெருமான் கண்ணனாக அவதாரஞ் செய்தருளின போது, இவள் உருக்குமணிப் பிராட்டியாயவதரித்தாள். இப்படியே மற்ற அவதாரங்களிலேயும், இப்பிராட்டி எம்பெருமானை விட்டுப்பிரியாமல் கூடவே அவதரித் துக்கொண்டிருப்பள். எம்பெருமான் தேவதா ஸ்வ ரூபத்தோ டவதரித்தால், இப்பிராட்டியும் அதற்கேற்ற தெய்வத் திருமேனியோடே யவதரிப்பள். மனுஷ்ய ஸ்வரூபத்தோ டவதரித்தால், தானும் மனுஷ்ய ஸ்வ ரூபத்தோடே யவதரிப்பள். இப்படி எம்பெருமான் செய்தருளுந் திருவவதாரங்களுக்கு இசைந்த திவ்விய மங்கள விக்கிரக குணாதிகளோடு பிராட்டியும் அவதரித் துக்கொண்டிருப்பள்.

மயித்திரேயரே! ஸ்ரீ மகாலக்ஷ்மியின் இந்தத் திரு வவதாரத்தை எந்த மனிதன் பக்தியோடு பாராயணஞ் செய்கின்றானோ, அல்லது எவன் பக்தியோடு கேட்கின் றானோ, அவர்கள் மாளிகையில் மூன்று தலைமுறை வரைக்கும் பெரியபிராட்டியார் பிரியாம லெழுந்தருளி யிருப்பள். எந்தக் கிருகங்களிலே இந்த ஸ்ரீதேவியின் சரித்திரம் நித்தியமாய்ப் படிக்கப்படுமோ, அந்த

மாளிகைகளில் கலகத்துக்கு ஆதாரமான தாரித்திரியம் எப்போதும் சேராது.

ஸ்ரீதேவி முன்பு பிருகு மகாமுனியின் புத்திரியாகி, மறுபடியும் திருப்பாற்கடலிலே அவதாரஞ் செய்த விதத்தை உமக்குத் தெரியச்சொன்னேன். சமஸ்த ஐசுவரிய காரணமாய், இந்திரனாலே சொல்லப்பட்ட இந்த லக்ஷ்மி தோத்திரத்தை யாராகிலும் நித்யம் பக்தியுடனே படிப்பார்களாகில் அவர்கள் ஒருக்காலும் அசுபத்தை யடையாமல் சர்வாபீஷ்டங்களையும் அடைந்து சதிராக வாழ்ந்திருப்பார்கள்.

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தாவது அத்தியாயம்

# பிருகு மரீசி முதலானோர் வமிசம்

பின்பு மயித்திரேயர் தம் ஆசாரியரை வணங்கி, முனிசிரேஷ்டரே! உம்முடைய அநுக்கிரகத்தினாலே பிராட்டியின் திருவவதார வைபவத்தை விசதமாக அறிந்தேன். இனிப் பிருகு முதலானருடைய வமிசவரலாற்றைப்பற்றி அருளிச்செய்ய வேண்டுமென பராசரமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

ஓ மயித்திரேயரே! பிருகு மகாரிஷிக்குக் கியாதியென்கிற ஸ்திரீயினிடத்தில் ஸ்ரீவிஷ்ணு பத்தினியான லக்ஷ்மியும், தாதா விதாதா என்கிற இரண்டு பிள்ளைகளுண்டானார்களன்றோ. அந்தத் தாதாவும் விதாதாவும் மேரு புத்திரிகளான ஆயதி நியதி என்கிற கன்னிகைகளை முறையே விவாகஞ் செய்தார்கள். அவர்களில் தாதாவுக்குப் பிராணனென்கிற குமாரனுண்டானான். அவனுக்குத் துதிமானென்கிற மகனுதித்தான். அவனுக்கு அசாவானென்கிற குமாரன் பிறந்தான். விதாதாவுக்கு மிருகண்டு என்கிற புத்திரனுண்டானான். அவனுக்கு மார்க்கண்டேயன் பிறந்தான். அந்த முனிக்கு வேதசிரனென்கிற தநயன் ஜனித்தான். இவர்களாலே பிருகு வமிசம் உலகத்தில் பரவிவந்தது.

அஃது அப்படியிருக்க, மரீசிமகாரிஷிக்கு சம்பூதி யென்கிற பத்தினியினிடத்திலே பௌர்ணமாசனென்கிற புத்திரனுண்டானான். அவனுக்கு விரசன் பர்வதன் என்கிற இரண்டு புத்திரர்களுதித்தார்கள். அவர்களுடைய சந்ததிக்கிரமம் பின்னாலே சொல்லுவேன். ஆங்கிரசரிஷிக்குப் பத்தினியான ஸ்மிருதி யென்பவள் சினீவாலி, குரு, ராகை, அனுமதி என்று சொல்லப்பட்ட நான்கு பெண்பிள்ளைகளைப் பெற்றாள். அத்திரி மகாரிஷிக்கு மனைவியான அனசூயை யென்கிறவள் * சந்திரனையும் துர்வாசனையும் தத்தாத்திரேயர் என்கிற மகாயோகியையும் பெற்றாள். புலஸ்தியருக்குப் பிரீதியென்கிற பாரியையினிடத்தில் தத்தாத்திரி யென்கிற குமாரனுண்டானான். அவன் பூர்வஜன்மத்தில் சுவாயம்புவமநுவந்தரத்திலே அகஸ்தியனாக இருந்தான். புலஹனென்கிற இருடிக்கு க்ஷமை யென்கிறவளிடத்தில் கர்த்தமன், அர்வரீவான், சகிஷ்ணு என்கிற மூன்று மக்களுண்டானார்கள். கிரதுவென்கிற மகாரிஷிக்கு சன்னதி யென்பவளிடத்தில் ஊர்த்தரேதஸரும், கட்டைவிரற்கணுவள வுள்ளவர்களும் சூரியப்பிரகாசிகளுமான வாலகில்யர் என்கிற அறுபதினாயிரம் இருடிகளுமுண்டானார்கள். வசிஷ்டருக்கு ஊர்ச்சை யென்கிற பெண்ணிடத்தில் ரசனும், காத்திரனும் ஊர்த்தபாகுவும், சவனனும், அனகனும், சுதபனும், சுக்கிரனும், ஆகிய சப்தமகாரிஷிகள் பிறந்தார்கள். பிரமதேவனுக்கு மூத்தமகனாகிய அக்கினி யென்பவனுக்கு சுவாகையென்கிற பத்தினியினிடத்தில் பாவகனும், பாவமானனும், சுசியும் ஆகிய தனயர் மூவர் உதித்தார்கள். அவர்களுடைய சந்ததியில் நாற்பத்தைந்து பிள்ளைகள் வம்சகாரிகளாக உதயஞ் செய்தார்கள். இவர்களும் இவர்களுடைய தகப்பன்மார் மூன்றுபேரும் ‡ கூடஸ்தனை

* இந்தச் சந்திரன்தான் லோகத்துக்கு வெளிச்சந் தருகிறவன்.

‡ அக்கினியபிமானி தேவதையென்றால் நெருப்பைத் தேகமாகக் கொண்டு தோன்றி அதின்மூலமான பலன்களைக் கொடுக்கின்ற தேவனும். இப்படியே ஜலாதிகளுக்கும் வருணாதிகளை அபிமானி தேவதைகளென்று காண்க. அத்தேவதைகளை அந்தந்த வஸ்துக்களின் பேராலேயும் அவ்வஸ்துக்களை அந்தத் தேவதா நாமங்களாலேயும் பேசுவார்கள். காவ்யெயர்களிலும் இந்த நியாயமுண்டு.

அக்கினியபிமானி தேவதையும் ஆக நாற்பத்தொன்பதுபேரும், அக்கினிகளென்று சொல்லப்பட்டிருப்பார்கள். ஓ மயித்திரேயரே! சதுர்முகன் சிருஷ்டித்த அக்னிஷ்வாத்தர் என்றும் பர்ஹிஷதரென்றும் சொல்லப்பட்டு யாகஞ் செய்யாதவர்களும் யாகஞ் செய்பவர்களுமான பிதுர்கணங்களைச் சேர்ந்து, ஸ்வதை யென்கிறவள் மேனை வைதரணி என்கிற இரண்டு பெண்களைப் பெற்றாள். அவ்விருவரும் யோகாப்பியாச முள்ளவர்களாய்ப் பிரமவாதிகளாய் உத்தமமான ஞானமும் சமதமாதி குணங்களு முள்ளவர்களாய் இருந்தார்கள்.

இவ்விதமாய் விர்த்தியான தக்ஷபுத்திரிகளுடைய சந்தானக் கிரமம் சொன்னேன். இதை விசுவாசத்தோடு ஸ்மரணஞ் செய்த மனுஷியன் சந்தான மில்லாதவனாகமாட்டான்.

*பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

## பதினோராவது அத்தியாயம்

# துருவ சரித்திரம்

---

திரும்பியும் ஸ்ரீபராசரர் மயித்திரேயரை நோக்கி முனீந்திரனே! சுவாயம்புவ மநுவுக்குப் பிரியவிரதனென்றும் உத்தான பாதனென்றும் இரண்டு பிள்ளைகளுண்டானாரென்று முன்னம் சொன்னே னன்றோ. அவர்களிலே உத்தானபாதனுக்கு சுருசி சுநீதியென்று மனைவிக ளிருவ ரிருந்தார்கள். அவர்களுள் சுருசி உத்தானபாதனுக்குப் பிரிய முள்ளவளாயிருந்தாள். அந்தப் பெண்ணுக்கு உத்தமனென்று சொல்லப்பட்ட குமாரனுண்டானான். அவன் தகப்பனுக்கு மிகவும் பிரியனா யிருந்தான். சுநீதி யென்கிற பெண் புருஷனுக்குப் பிரியமில்லாதவளா யிருந்தாள். அந்தப் பெண்ணுக்குத் துருவனென்கிற குமாரன் பிறந்து சகல குணாபிராமனாக இருந்தான். ஒருநாள் அவன், சிங்காசனத்தில் வீற்றிருந்த தன் தகப்பனுடைய மடியிலே யுட்கார்ந்திருந்த தன்னுடன் பிறந்த உத்தமனைப் பார்த்

துத் தானும் அப்படி உட்காரவேண்டுமென்று அருகிற் போனான். அப்போது தகப்பன் சுருசி எதிரிலிருந்த படியினாலே மகனுடைய எண்ணத்தை ஏற்றுக்கொள்ள வில்லை. இவ்விதமாய்த் தகப்பன் மடியின்மேலே ஏற வேண்டுமென்று வந்த சக்களத்தி மகனான துருவனைப் பார்த்து, சுருசி "பாலகனே! நீ யேன் விருதாவாக இப் பிரயத்தனஞ் செய்கின்றாய். இந்த மனோரத முனக்குத் துர்லபமாயிருக்கும். என் வயிற்றிலே பிறவாமல் வேறொருத்தி வயிற்றிற் பிறந்த நீ இந்த உத்தமோத் தமமான சிங்காதனத்திலேயிருக்க நினைக்கின்றது அவி வேகமாம். நீ இந்த மகிபாலனுக்கு மகனானாலும், சகல ராச்சிய லட்சுமி நிவாசமான சிங்காசனத்துக்கு நீ தகுந்தவனாகமாட்டாய் என்மகனே அதற்கு யோக்கிய மானவன். வீணான வருத்தம் வேண்டாம். என் குமாரனுக்கு இருக்கிறதுபோலே உனக்கும் இப்படிப் பட்ட மேன்மையான மனோரதம் இருக்கத்தகாது. பிள் ளாய்! நீ பாக்கியவீனையான சுநீதி கருப்பத்திலே பிறந் ததை நினைத்துக்கொள்ள வேண்டாமா? போ" என்று இழிவாகச் சொன்னதைப் பொறாமல், கோபத்தினாற் கலங்கின மனமுடையவனாய், சரேலென்று தன் தாயார் வீட்டுக்குப் போய்விட்டான்.

அப்போது சுநீதி, கோபத்தினாற் கண் சிவந்து உதடு துடிக்க வந்த தன் மகனை மடியிலுட்கார வைத்துக் கொண்டு சொல்லுகின்றாள்: "குமாரனே! உன் கோபத் துக்குக் காரணமென்ன? உன்னை யார் உபலாளனம் பண்ணாதே போனார்கள்? உனக்கு இப்படி அபராதஞ் செய்து மகீமண்டலேசுவரனான உன் தகப்பனை அவ மானஞ் செய்தவர் யார்?" என்று கேட்டதற்குத் துரு வன், சபத்தினீ மாதாவான சுருசி கர்வத்துடன் இரா ஜாவின் சமீபத்திலே தன்னைச் சொன்ன வார்த்தைகளை யெல்லாம் தாயாருடனே சொன்னான். அதைக் கேட்ட வுடனே சுநீதியானவள் பெருமூச்சுவிட்டுக் கண்ணொளி யற்று, மெலிந்தவளாய்ச் சொல்லுகின்றாள்:

"புத்திரா! சுருசி சொன்ன வார்த்தைக ளெல்லாம் நிஜந்தான். நீ சொற்பமான பாக்கியமுள்ளவன். ஏனென்றால், மகா புண்ணிய முள்ளவர்களுடைய

குழந்தை சத்துருக்களால் இப்படி சொல்லப்படுமா? இத்தனையு முன்னுடைய பூர்வஜனன கர்ம பரிபாகமாக நினைத்து, மனதிலே கிலேசத்தை விட்டுவிடு. உன்னுடைய பூர்வஜன்ம சுகிர்த பலத்தை யபகரிக்க யாராலேயாகும். நீ செய்யாத கர்மபலத்தைக் கொடுக்கத்தான் யாராலாகும். பாக்கியவான்களான புருஷர்களுக்கே யல்லாமல் மற்றவருக்கு மகாராஜ யோக்கியமான சிங்காசனமும் சுவேதசத்திரமும் கஜதுரகாதி வாகனங்களு முண்டாகுமா? சுருசியானவள் பாக்கிய வசத்தினாலே புருஷன் தன்னிடத்தில் மிகவும் பிரிய முள்ளவளா யிருக்கப்பெற்று, பரிபூர்ண மனோரதையாய்ச் சுகமாயிருக்கிறாள். என்னைப்போலே பாக்கிய ஈனையாயிருக்கிறவள் பாரியை யென்கிற பெயர் மாத்திர முடையவளாய்த் துக்கித்திருக்கிறாள். உத்தமன் புண்ணியவானானபடியினாலே சுருசிக்கு மகனாகப் பிறந்தான். சொற்ப பாக்கியனான நீ என் கருப்பத்திலே ஜனித்தாய். குழந்தாய்! என்ன செய்யலாம். எவனுக் கெந்தமட்டும் அதிர்ஷ்டமோ, அவன் அந்த மட்டிலே சந்தோஷிக்க வேண்டும். இதுதான் புத்திமானுடைய காரியம். ஆனபடியினாலே ஐசுவரியத்தை நினைத்துத் துக்கிக்க வேண்டாம். ஆனால் சுருசி சொன்ன வசனங்களுக்கு நீ மனம்பொறாவிட்டால், உனக்கும் அப்படிப்பட்ட மேன்மையுண்டாகும்படிச் சகல பலப்பிரதமான புண்ணியத்தைச் செய்ய எத்தனப்படு. தர்மாத்துமாவாய் நல்ல நடக்கையில் இருந்துகொண்டு சர்வபூத தயாபரனும் சர்வஜன மித்திரனுமாகச் சுகிர்தங்களைச் செய்தால் தண்ணீர் பள்ளத்தி லெப்படிப் போய்ச்சேருமோ அப்படியே, சம்பத்துகளுங் குணவானான மனிதனிடத்தில் தாமே வந்துசேரும்" என்று தாய் சொல்லக்கேட்டுத் துருவன் தாயாரைப் பார்த்து, "தாயே! நீ சொன்ன வார்த்தைகள் சுருசி சொன்ன துர்ப்பாஷணத்தினாலே பிளந்திருக்கிற என்னிருதயத்திலே பதியவில்லை; ஐசுவரிய கர்விதையான அவளாலே நிராகரிக்கப்பட்ட நான், சர்வோத்தமமான பதவியைச் சம்பாதிக்கிறதற்கு எத்தனம் செய்கிறேன் பார்; மகீபாலனுக்கு அத்தியந்தப் பிரியையான சுருசியினுடைய கருப்பத்

திலே பிறவாமல் உன்னுதரத்திலே பிறந்தவனானாலும் என்னுடைய உத்தம திராணியைப்பார். என்னுடைய பிராதாவான உத்தமன் சுருசிக்குக் குமாரனானபடியினாலே தகப்பன் கொடுத்த இராச்சியத்தை அனுபவிக்கட்டும். நான் சுய சக்தியினாலே சம்பாதிக்கப்பட்ட விபவமல்லாமல் ஒருவர் கொடுத்த விபவத்தைக் கைக்கொள்ளேன். என் தகப்பனுக்கும் கிடைக்கலாகாத திவ்விய பதவியைத் தவத்தினாலே சம்பாதிக்கின்றேன்" என்று சொல்லித் தாயாருடைய அநுமதியைப் பெற்றுக் கொண்டு, அதிசீக்கிரமாகப் பட்டணத்தை விட்டு, அந்தப் பட்டணத்துக்குச் சமீபத்திலே யிருக்கிற ஒரு உபவனத்திலே சென்றான்.

அங்கே கிருஷ்ணாசன வுத்தரீயங்களையே ஆசனமாக விரித்துப் போட்டு உட்கார்ந்திருக்கிற ஏழு ரிஷிகளைக்கண்டு, இராசபுத்திரன் அவர்களுக்குத் தெண்டனிட்டு, விநயத்தினால் மிகுந்த வணக்கத்துடன் சொல்லுகின்றான். "முனீந்திரர்களே! நான் உத்தானபாதனுக்குச் சுநீதிவயிற்றிலே பிறந்த குமாரன். துருவனென்கிற நாமதேயமுடையவன். மிகுந்த மனக்கிலேசத்தினாலே தேவரீர்கள் சந்நிதிக்கு வந்தேன்" என்று சொல்லக்கேட்டு, அந்த மகா முனிகள் பாலகனைப் பார்த்து, "இராசகுமாரனே! நீ நாலைந்து வயதுள்ளவனா யிருக்கிறாய். இவ்வளவு சிறுவனான உனக்கு மனதில் துக்கமுண்டான காரணமென்ன? உன் பிதா வாழ்ந்து கொண்டிருக்கையாலே உனக்குக் குடும்பத்தைப் பாதுகாக்குங் கவலை யில்லையே. உனக்கு இஷ்டமான பொருள் ஏதாகிலு முனக்குக் கைகூடாம லிருக்க மாட்டாதே. இஷ்டபந்துஜன வியோக முண்டானதாகவும் தோன்றவில்லை. உன் சரீரத்திலே ரோக வுபத்திரவ மொன்று முண்டாயிருக்கவுமில்லை. இப்படியிருக்க மன வெறுப்புக்குக் காரண மென்ன, சொல்லப்பா" வென்று கேட்க, துருவன், அந்த மகா முனிவர்களைப் பணிந்து "என் தாய்க்குச் சக்களத்தியாகிய சுருசி சொன்ன வார்த்தையாலே வெறுப்புண்டாயிற்று. அந்த அவமானத்தைப் பொறுக்க மாட்டாமையாலே வந்தேன்" என்று சொல்லக்கேட்டு,

அந்த முனிவர்கள் ஒருவரோடொருவர், "இந்தப் பாலகன் சக்களத்தித் தாய்ப் பேய்ச்சைப் பொறுக்கமாட்டாமல் கோபபரவசனாகப் புறப்பட்டு வந்தானன்றோ. உக்கிரமான க்ஷத்திரிய தேஜஸைப் பார்த்தீர்களோ. இவ்வளவு பையனும் அவமானம் பொறுக்க வில்லையே" யென்று பேசிக்கொண்டு, துருவனைப் பார்த்து, "இராசகுமாரனே! நீ மனஸ்தாபத்தினாலே நொந்து என்ன செய்யவேண்டுமென்று நினைத்திருக்கிறாய், அதற்காக எங்களாலே உனக்கு வேண்டிய சகாயமென்ன" என, துருவன், முனீந்திரர்களே! அடியேன் ராச்சியத்தையாவது மற்றுமுண்டான அர்த்தங்களையாவது அபேட்சிக்கின்றேனில்லை. ஆனால் பூர்வத்திலே யொருவனாலேயு மனுபவிக்கப்படாததாய் அபூர்வமாய்ச் சகலஸ்தானங்களுக்கும் உன்னதமாயு மிருக்கின்ற பதவியை வேண்டுகின்றேன். இந்த மனோரதம் நிறைவேறும்படியான உபாயத்தை அடியேனுக்கு அநுக்கிரகிக்க வேண்டும்" என்று சொன்னான். அதற்கு "மரீசி மகாமுனிவர், ஓ ராஜகுமாரனே! ஸ்ரீகோவிந்தனுடைய சரணாரவிந்தங்களை யடைந்து ஆராதியாதவர்களுக்குச் சர்வோத்தமமான ஸ்தானங் கிடைக்கமாட்டாது. ஆனபடியினாலே நீ பக்தபராதீனனான அச்சுதனை ஆராதனஞ் செய்" என்று அருளிச்செய்தார். பின்பு அத்திரி மகாரிஷி அந்த ராஜகுமாரனைப் பார்த்து, "லோகேஸ்வரரான பிரமாதிகளுக்கும் அதீச்வரனான ஜனார்த்தனன், எவனைக் கடாக்ஷிப்பனோ அவனே, அக்ஷயமான திவ்விய ஸ்தானத்துக்கு உடையவனானவன். என் வசனத்தைச் சத்தியமாக நினை" என்றார். அப்பால் ஆங்கிரசர், "சராசராத்மகமான சகல பிரபஞ்சமும் எவனுடைய குட்சியி லிருக்கின்றதோ, அந்தக் கோவிந்தனுடைய சரணகமலங்களை அர்ச்சனை பண்ணு. சர்வ உன்னதமான ஸ்தானத்தைப் பெறுவாய்" என்று அருளினார். அப்பால் புலஹ மகாரிஷி, "எவன் பரப்பிரம்மமும் பரமப் பிராப்பியமும் சர்வ வியாபகனுமாக இருக்கின்றானோ, அந்த ஸ்ரீஹரியை ஆராதனஞ் செய்கிறதினாலே அத்தியந்தம் துர்லபமான மோக்ஷத்தையு மடையலா மென்றால், இதர ஸ்தானங்

களை யடைகிறதற்குச் சந்தேகமென்ன” என்று சொல்லி யருளினார். அப்புறம் கிருதுமகா ரிஷி “எவன் எக்கியங்களாலே ஆராதிக்கப்படும் புருஷனாகவும் எக்கியசொரூபியாகவும் எக்கியங்களுக்கு அதிபதியாக வும் இருக்கிற பரமபுருஷனோ, அந்தச் ஜனார்த்தனன் திருவுள்ளம் பற்றினானால் அடையக்கூடாத ஸ்தா னமு முண்டோ” வென்று சாதித்தார். பின்பு புலஸ் திய மகாரிஷி, பூர்வத்திலே இந்திரன் ஜகத்பதியான எவனை ஆராதித்துச் சர்வோன்னதமான இந்திர பதத்தை யடைந்தானோ, அப்படிப்பட்ட எக்கியேசுவர னை ஸ்ரீவிஷ்ணுவை ஆராதனம் பண்ணு” என்று சாதித்தருளினார். அப்பால் வசிஷ்டர், குழந்தாய்! ஸ்ரீ விஷ்ணு பகவானை ஆராதனஞ் செய்வாயாகில் இதுவரையிலும் இல்லாத நூதனமான பதவி ஒன்றை நீ மனதிலே நினைத்தாலும் அதையும் சித்தமாய் அடை வாய். அப்படியிருக்க முன்னமே சிருஷ்டிக்கப்பட் டிருக்கிற மூன்று உலகத்துக்கும் உட்பட்ட மேலான ஸ்தானமடையச் சந்தேகமென்ன” என்று அருளிச் செய்தார்.

இவைகளைக்கேட்டுத் துருவன் அந்த மகா முனி வர்களைப் பார்த்து, “முனீந்திரர்களே! தேவரீர், ஆரா திக்க வேண்டியவனை அடியேனுக்குத் தெரியும்படி அரு ளிச் செய்தீர்கள்; அவ்வெம்பெருமான் திருவுள்ள முகந்து கிருபை செய்யும்படி ஜெயிக்கவேண்டிய மந்தி ரத்தையும், ஆராதனஞ் செய்யவேண்டிய விதத்தையும், அடியேனுக்குப் பிரசாதிக்கவேண்டும்” என்று கேட்க, அந்த மகாரிஷிகள் “ஓ ராஜபுத்திரனே! ஸ்ரீ விஷ்ணுவி னிடத்தில் பக்தி செய்யவேண்டுமென்கிற மனிதன், முன்னதாகப் பாஹ்யவிஷய அபிலாசைகளை வர்ச்சித்து, மனதை நிர்மலமாக்கிப், பின்பு அம்மனதை முகுந்த னுடைய சரணாரவிந்தங்களிலே நிச்சலமாகச் சேர்த்து, வேறு நினைவில்லாமல் அத்திருவடிகளையே பாவித்துக் கொண்டு பரிசுத்தனாய் “வியஷ்டி சமஷ்டி ரூபமாகப் பிரகிருதியும் புருஷனும் சரீரமாகவுடைய சுத்த ஞான மயனான வாசுதேவனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கி றேன்” என்கிற பொருளை யுடைத்தான மகாமந்திரத்

தைச் ஜெபிக்கவேண்டும். உன்னுடைய பிதா மகனுன சுவாயம்புவ மநுவானவர் இந்த மகா மந்திரத்தினுல் ஜனுர்த்தனனே உபாசனே செய்ததினுலே அவர் திருவுள்ள முகந்து அந்த மநுவுக்கு அவர் விரும்பியபடி திரிலோக துர்பலமான ஐசுவரியத்தைப் பிரகாசித்தருளினுர். நீயு மப்படியே * இந்த மகா மந்திரத்தைச் செபித்து ஸ்ரீயப்பதியை ஆராதனஞ் செய்யக்கடவாய்'' என்று நியமித்தருளினுர்கள்.

பதினெராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# துருவன் சித்திபெற்றது

இப்படிச் சப்த மகாரிஷிக ளுபதேசஞ் செய்யப் பெற்று, துருவன் சந்துஷ்டியுடையவனுகி, மகாமுனிகளுக்குத் தெண்டனிட்டுக் கிருதார்த்த னுனேனென்று நினேத்துக்கொண்டு, அந்த வனத்தை விட்டுப் புறப்பட்டு, மதுவென்கிற பெயரையுடைய அசுரனுக்கு வாசஸ்தானமா யிருந்ததினுலே மதுவனமென்று பேர் பெற்றதாயும், ஸ்ரீ சத்துருக்கனுழ்வான் அந்த மதுவின் புத்திரனுன லவணுசுரனேச் சங்கரித்து மதுரை என்கிற புரத்தைச் செய்தருளப் பெற்றதாயும், தேவதேவனுயும் சகலபாபங்களேயும் போக்கும்படியான புத்தியுள்ளவனுயுமிருக்கிற எம்பெருமானுடைய சாந்நித்திய முள்ளதாயும், யமுனுநதி தீரத்திலே விளங்குகிற மதுவனத்துக்கு வந்து, சகல பாபக்ஷயகரமான அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்திலே மரீசி முதலான மகாரிஷிகள் உபதேசித்த கிரமமாக, சகல தேவதைகளுக்கும் நாதனுன ஸ்ரீ விஷ்ணுவைத் தன் இருதய கமலத்திலே தியானித்துக் கொண்டிருந்தான்.

இப்படி ஒரு நினேவாய்த் தியானஞ் செய்து கொண்டிருந்த அந்தத் துருவனுடைய சித்தத்திலே சர்வ

---

* இங்கே ஸ்ரீமத் துவாதசாக்ஷர மகாமந்திரம் உபதேசிக்கப்பட்டது. அது தகுந்த சிஷ்யனுக்கு ஏகாந்தத்தில் உபதேசிக்க வேண்டியதானதால் அதை மகரிஷி ரோயருளிச் செய்திலர். இஃது இலிங்க புராணத்திஞல் விளங்கும்.

பூதங்களிலும் உள்ளவனை ஸ்ரீ ஹரிபகவான் மிகுந்த பேரொளியோடு தோன்றி அருளினார். மயித்திரேயரே! கேளும், இப்படிப் பிரமயோகியான துருவனுடைய இருதயத்தில் எம்பெருமான் எழுந்தருளி யிருந்த படியினாலே, யாவற்றையுந் தரிக்கிற பூதேவி அந்தப் பரமயோகீந்திரனைத் தரிக்க மாட்டாமல் இருந்தாள், அவன் பூமியை இடக்காலாலே தாங்கி நிற்கையில், பூமி இடப்பக்கத்தில் தாழ்ந்தும், வலக்காலாலே தாங்கி நின்றபோது வலப்பக்கத்தில் தாழ்ந்தும் நின்றது. பின்பு அந்தயோகி ஒரே பாதத்தின் கட்டை விரலாலே பூமியில் நின்றபோது, அந்தப் பூமண்டல மானது மலைகளோடுகூட நடுநடுங்கிற்று. மகாநதி களும் சப்தசாகரங்களும் கலங்கிப்போயின. இவ்வித மாகச் ஜனங்களுக்குக் கலக்கமுண்டானதைக் கண்டு, அந்த மநுவந்தரத்திலே இருந்த யாமரென்று சொல் லப்படும் தேவதைகள், சித்தங்கலங்கி, இந்திரனுடனே ஆலோசனை செய்து, துருவனுடைய தியானத்திற்கு ஊறு செய்யவேண்டுமென்று எத்தனஞ் செய்தார்கள்.

அப்போது தேவேந்திரனுடைய கட்டளையினாலே விரூபங்களும் பயங்கரங்களுமான கூசுமாண்டாங்க ளென்ற பூதவிசேடங்கள் அந்த மகாயோகி செய்யும் தியானத்தைக் கலைக்கும்படி வந்து சூழ்ந்து பல மாயங்கள் செய்தன. எப்படியெனில், துருவனுக்குத் தாயான சுநீதியின் சொரூபத்தை ஒரு மாயை தரித்துத் துருவனுக்கு எதிரில் "அப்பா மகனே!" என்று இரக்க மான தொனியோடு கூவிக்கொண்டுவந்து, "குமாரனே! சரீரம் அபாயமடைவதற்குக் காரணமாகையாலே கொடியதான இந்தத் தவத்தை நிறுத்து; ஐயோ மகனே! அநேககாலந் தவஞ்செய்து உன்னைப் பெற் றேனே? என் மனோரதங்களைத் தவிர்த்து, அனாதையும் பேதையுமான என்னைத் தனியே அலையவிட்டுச் சக்க ளத்தித் தாய் சொன்ன பேச்சினாலே நீ யிப்படி வரு கின்றது நியாயமோ? குழந்தாய்! கதியில்லாத எனக்கு நீ யன்றோ கதி? ஐந்து வயதுள்ள பாலகனை நீ யெங்கே? மிகவுங் கடினமான இத் தவமெங்கே? நிஷ்

பலமான இந்தக் கஷ்டமான காரியத்திலிருந்து மனதை த்திருப்பு. அப்பனே! இஃது உனக்கு விளையாடுகிற வயதாயிற்றே? இதற்குப்பின் வேதசாஸ்திரங்களை அத்தியயனஞ் செய்யுங்காலம், அதன்பின் போகானுபவங்களுக்குக் காலம், அதற்குப் பிறகே தவஞ் செய்வதற்குக் காலம். புத்திரனே! விளையாடுகிற பிராயத்திலே ஆத்தும கிலேசமான தவஞ்செய்கிறது யுக்தமன்று. எனக்குச் சந்தோஷஞ் செய்வதன்றோ உனக்குத் தருமம்? தாயான என் வார்த்தைகளைக் கேட்டு இந்தப் பிராயத்துக்குத் தகுந்தபடி என்னுடனே கூடவரவேண்டியது உனக்கு நியாயம். இப்படிச் செய்யாமல் புத்தி மோகத்தினாலே இவ் வதர்மத்தைச் செய்கின்றாய். இனியாகிலும் விட்டுவிடு. என்னருமையான குழந்தாய்! நீ கடின இருதயனாகி யென் வசனத்தைக் கேளாமலிருக்கின்றாய். இனி இந்தத் தவத்தை விடாமற் போனாயேயானால், இதோ பார் உன் எதிரிலேயே என் பிராணனை விட்டு விடுகின்றேன்" என்று இப்படிக் கண்களிலே தாரைதாரையாகக் கண்ணீர் பெருகக் கதறியழுதுகொண்டு நிற்கிற மாயா ஸ்திரீயைத் தன் முன்னே கண்டும், துருவன் நாராயண சரண அரவிந்தங்களிலே சித்தத்தை வைத்திருப்பதினாலே காணாதவனாகவே இருந்தான். பின்பு அந்த மாயா ஸ்திரீயும், துருவனைப் பார்த்து, "குழந்தாய்! கோராகாரர்களான அரக்கர்கள் கதா கட்க முதலிய ஆயுதங்களை யெடுத்துக் கொண்டு இதோ உன்னைச் சங்கரிக்க வருகின்றார்கள். இப்போதாகிலும் தவம் விட்டோடிவா" என்று சொல்லி மறைந்து போனாள். அப்பால், பலவித ஆயுதங்களோடு அக்கினிச் சுவாலாகுலமான முகங்களுடையவர்களாய், அநேக இராட்சதர்கள் வந்து தோன்றினார்கள். அவர்கள் அச் சிறுவனுக் கெதிரில் வந்து, அதிதீக்ஷணங்களான கதா கட்க சூலங்கள் முதலான ஆயுதங்களைக் கைகளிலேந்தி, பளபளவென்று மின்னும்படித் திருப்பிக்கொண்டு பயங்கரமாகக் கர்ச்சனை செய்தார்கள். அன்றியும், குபுகுபென்று அனலெழும்புகிற முகங்களுடன்கூடின நரிகள் அந்தப் பாலகனை நாற்புறமுஞ் சுற்றிக்கொண்டு, அதிகோரமாகக் கூவிக்

கொண்டிருந்தன. சிங்க முகங்களும் முதலை முகங்களும் ஒட்டக முகங்களுமுள்ள நிசாசரர்கள், இந்தப் பையனைச் சங்கரியுங்கள் குத்துங்கள் வெட்டுங்கள் பட்சியுங்களென்று ஒருவர்க்கொருவர் சொல்லுவதுபோல் குரூர வசனங்களினாலே அதட்டிக்கொண்டு, பெருங் கூச்சலிட்டுப் பயப்படுத்தினார்கள். அவன் கோவிந்தனுடைய சரணாரவிந்தங்களிலே லயமான இருதயமுடையவனாய் விட்டதால் அந்த ராக்ஷதர்களும் அவர்களுடைய ஆயுதங்களும் அந்த நரிகளும் பயங்கரமான சத்தங்களும் அந்தப பாலகனுக்கு ஒன்றுஞ் செய்யமாட்டாமற் போயின. அவன் இவையிற்றைக் கவனியாமல் ஸ்திர சித்தத்துடனே ஸ்ரீமந் நாராயணனைத் தனக்குள்ளே எழுந்தருளி யிருக்கிறவனாகத் தியானித்துக்கொண்டு மற்றொன்று மறியாமலிருந்தான்.

இப்படிப் பிரயோகித்த அந்த மாயைகளெல்லாம் உபயோகப்படாமல் நாசமடைந்தமை கண்ட தேவதைகள், அந்த மகாத்மாவினுடைய தவத்தின் மகத்துவத்தினாலே தங்களுக்கென்ன அபாயம் நேரிடுமோவென்று அச்சம் நிறைந்த சித்தர்களாய், அத்தவத்தை நிறுத்த உபாயந் தேட வேண்டுவது உறுதியெனத் துணிந்து, அநாதிநித்தனாய், ஜகத்காரண பூதனாய்ச் சரண்ணியனுமா யிருக்கிற ஸ்ரீமந் நாராயணனைச் சரணமடைந்து விண்ணப்பம் பண்ணுகிறார்கள். "தேவ தேவனே! ஜகந்நாதனே! புருஷோத்தமனே! துருவனுடைய தவத்தின் பிரபாவத்தினாலே நாங்கள் தபிக்கப்பட்டவர்களாய் உன் சந்நிதியில் சரணாகதியானோம். சந்திரன் தினந்தினமுங் கலைகளினாலே அபிவிர்த்தியடைவதுபோலே, உத்தானபாதனுடைய குமாரன் தபோவிசேஷத்தினாலே அபிவிர்த்தியாகி வருகின்றான். அதனாலே அடியேங்கள் பயப்படுகின்றோம். அந்தப் பாலகன் இந்திர வருண குபேர சூரிய சந்திராதிகளுடைய அதிகாரத்திலே எதைக்கேட்பனோ அறியோம். ஆனதினால் அவனுடைய தவத்தை நிறுத்தி அடியேங்களுடைய விசாரத்தைத் தீர்த்தருள வேண்டும்" என்று வேண்டிக்கொள்ள, அச்செந்தாமரைக் கண்ணன் அமரர்களைக் கடாட்சித்து, "துருவன் இந்திர வருண சூரிய

சந்திராதிகளுடைய அதிகாரங்களிலே யொன்றையும் அபேட்சிக்கவில்லை. அவனுடைய மனோரதத்தைத் தானறிவேன். நீங்கள் கிலேசத்தைவிட்டு உங்களுடைய வாசஸ்தானங்களுக்குப் போய்ச் சேருங்கள். நான் அவனுக்கு இஷ்டமான வரத்தைக் கொடுத்துத் தவத்தை நிறுத்துகின்றேன்" என்று அருளிச்செய்தான். பிறகு இந்திராதி தேவதைகள் தெண்டன் சமர்ப்பித்து சாந்தியுடைய மனதினராய்த் தங்களுடைய வாசஸ்தானத்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள்.

பின்பு சர்வாத்மகனை எம்பெருமான் துருவனுடைய ஒரே சித்தமான தியானத்திற்குத் திருவுள்ளம் உகந்து, நான்கு திருத்தோளுள்ள திருமேனியோடு துருவனுக்குப் பிரத்தியட்சமாய் அவனுடனே யருளிச் செய்கின்றான். "ஓ உத்தானபாத புத்திரா! உனக்குச் சுபமுண்டாகக்கடவது. உன் தவத்துக்குச் சந்தோஷித்து அபீஷ்டமான வரங்கொடுக்கிறதற்காக இதோ வந்தேன். நீ பாகிய விஷயங்களைப் பரிகரித்துச் சித்தத்தை என்னிடத்திலே நிலையாக நிறுத்தினதினாலே சந்தோஷமடைந்தேன். இஷ்டமான வரத்தைக் கேள்" என்று அருளிச் செய்யக்கேட்டு, அந்தப் பாலகன் தன் கண்களைத் திறந்து தான் தியானஞ் செய்த விதமாகவே எதிரில் சங்கு சக்கர கதா கட்க சார்ங்கங்களாகிய பஞ்சாயுதங்களுடனேயும், கிரீட வனமாலிகா கவுஸ்துவ பீதாம்பராதிகளுடனேயும், எழுந்தருளிவந்த ஸ்ரீயப்பதியைக் கண்டு, திடீரென்று சாஷ்டாங்கமாய்ப் பூமியில் விழுந்து தெண்டன் சமர்ப்பித்துப், புளகாங்கித காத்திரனாய்ப் பயபக்தியுடனே தேவதேவனை ஸ்ரீமந் நாராயணனைத் துதிசெய்ய நினைத்து, "இந்த மகா புருஷனைக் குறித்து எந்த வாக்கியஞ் சொல்வேன், யார் சொன்னபடி துதிப்பேன்" என்று மனங்கலங்கி ஒன்றுந் தோன்றாமல் அவ்வெம்பெருமானையே சரணமடைந்து, "ஸ்வாமீ! ஷட்குண ஐஸ்வரிய சம்பன்னனே! அடியேன் தவத்துக்குத் திருவுள்ள முகந்தாயானால், தேவரீரை ஸ்தோத்திரஞ்செய்ய நினைக்கின்ற அடியேனுக்கு அதற்கேற்ற ஞானத்தைக் கொடுத்தருளவேண்டும். தேவனே! வேதாந்த வேதிகளான

பிரமாதிகளும் உன்னுடைய பிரபாவத்தைச் சொல்ல வல்லவர்களல்லர். அப்படிப்பட்ட உன்னைப் பாலகனுன அடியேன் எவ்விதமாகத் துதிப்பேன். பரமேசுவரனே! அடியேன் மனது உன்சரண கமலங்களிலே பத்தியுத்த மாய் உன்னைத் துதிக்கவேண்டு மென்கிற விருப்ப முடையதா யிருக்கின்றது. ஆகையால் அடியேனுக்கு அதற்கேற்ற ஞானேதயத்தைத் தந்தருளல் வேண்டும்" என்று பிரார்த்திக்க, ஸ்ரீ கோவிந்தன் சகல வித்தியா மயமான தன்னுடைய திவ்விய சங்கத்தினுலே அஞ்சலி பண்ணி நின்றுகொண்டிருக்கின்ற அந்தப் பாலகனை முகத்திலே பரிசித்தருளினுன்.

பின்பு அந்த ராசகுமாரன் ஞானேதயமானதனுலே பிரசன்னமான முகத்துடனே தெண்டனிட்டு, அந்த க்ஷணத்திலே சர்வபூதேசுவரனுன அச்சுதனைத் தோத்தி ரஞ் செய்யத்தொடங்கினுன். "பிரிதிவி அப்பு தேயு வாயு ஆகாசங்களும், தன்மாத்திரைகளும், மனமும் மற்றுமுள்ள இந்திரியங்களும், மகத்தகங்காரங்களும், மூலப்பிரகிருதியும், எவனுடைய ரூபங்களோ, அந்தச் சருவேசுரனுக்குத் தெண்ட னிடுகின்றேன். சுபாவத் தில் சுத்தனுய், சூட்சுமரூபியாய், ஞானத்தினுலே எங்கும் வியாபித்தவனுய், பிரகிருதிக்கும் பரனுயிருக் கின்ற புருஷனும் எவனுடைய ரூபமாயிருக்குமோ, அந்த குணகரனுன புருஷோத்தமனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கிறேன். பிருதிவி முதலான பூதங்களும், கந்தாதி குணங்களும், புத்தியாதிகளும், பிரகிருதியும், சம்சாரியான ஜீவனும், ஆகிய இவர்களைக் காட்டிலும் பரனுன முத்த புருஷன் எவனுடைய ரூபமாயிருக் குமோ அப்படிப்பட்ட ஜகத்பதி யானவனுக்குத் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன். பரமேசுவரனே! பிரமலக்ஷண முள்ளதாய், சகல லோகத்துக்கும் அதிபதியாய், சுத்தமாயுமிருக்கிற உன் சொரூபத்துக்கு வந்தனஞ் செய்கின்றேன். "சர்வாத்துமகனே! சமஸ்த சத்திகளும் அமைந்திருக்கையாகிற பிருகத்துவத்தி னுலேயும், ஜகதாகாரத்தினுலேயும் மகாப் பிரமாணமாக இருப்பதினுலேயும் பிரமமென்கிற நாமதேய முடையதாய் விகாரமில்லாததாய் யோகி சிந்திய

மாய் விளங்குகின்ற உன் சொரூபத்துக்கு வந்தனஞ் செய்கின்றேன். * நீ சகஸ்ர சிரசுகளும் சகஸ்ர பாதங் களும் சகஸ்ர நேத்திரங்களும் உடையவனும், புருஷ னுமாய், யாவற்றிலும் வியாபித்துப் பூமியென்று சொல் லப்படும் சராசர மயமான பிரபஞ்சத்தைக் காட்டிலும் பதின்மடங் கதிகமாக யேற்பட்டிருக்கின்றாய். பூத பவிஷ்யத் வஸ்துசாதங்கள் நீயே. புருஷோத்தமனே! விராட்டு என்று சொல்லப்பட்ட அவியத்த சரீரகனை அநிருத்தனும், ஸ்வராட்டு என்று சொல்லப்பட்ட கேவலாத்ம பிராப்தியுள்ளவனும், சம்ராட்டு என்று சொல்லப்பட்ட பரமபதத்தை அடைந்தவனும், ஆதிபுருஷன் என்று சொல்லப்பட்ட பிரமதேவனும் உன்னிடத்திலே யுண்டானார்கள். சமஷ்டிதேகனை இரணியகர்ப்பனென்கிற அந்தப் புருஷன் பிருதிவிக்கு அதோபாகத்திலும், பாரிச தேசத்திலும், ஊர்த்துவ தேசத்திலும், வியாபித்திருக்கின்றான். உன்னிடத்திலே பிரபஞ்சமெல்லா முண்டாயின. உன்னிடத்திலேயே

* சகஸ்ரம் என்பது இங்கே ஆயிரமன்று. அளவில்லாதது என்னும் பொருளைத் தரும். சிரம் என்பது சகல அங்கங்களுக்கும் உபாங்கங்களுக்கும் உபலக்ஷணமாம். ஆகவே அளவற்ற சிரசு முதலான சகலஅங்கங்களையுமுடைய வன் என்பது பொருளாகும். அதனால் அபரிமிதமாய் அற்புதமாயிருக்கிற மகா ஞானமும் மகாசத்தியு முள்ளவன் எம்பெருமான் என்பது கருத்து. இதையே சகஸ்ரபாதன் சகஸ்ரநேத்திரன் என்பவைவிளக்குகின்றன. எப்படியென்னில், பாதம் என்பது கர்மேந்திரிய மெல்லாவற்றையும் நேத்திரம் என்பது ஞானேந்திரிய மெல்லாவற்றையும், காட்டுகிறதனுலெனவறிக. ஆக முக்கிய மான கருத்து என்னவெனில், எம்பெருமான் சகல இந்திரியங்க ளாலேயாதல், ஓரிந்திரியத்தினாலேயாதல், ஒரு விஷயத்திற்குரிய இந்திரி யத்தை மற்றொன்றிற்கு மாற்றியாதல், திருமேனியாலேயாதல், திவ்யாத்தும ஸ்வரூபத்தினாலே யாதல் எல்லாவற்றையும் எப்போதும் எல்லாவிதத்திலும் நேராக அறிகின்றவனும், செய்பவனுமா யிருக்கின்றா னென்கிறதேயாம். இப் படியே யல்லது, முள்ளம்பன்றி தேக முழுவதிலும் முள்ளுகளாலே செறிந் திருப்பதுபோல் அநேகந்திருமுடிகள் திருக்கண்கள் திருக்கைகள் திருவடிகள் முதலான அவயவங்களால் செறிந்து, கோரரூபமுள்ளவனாயிருக்கின்றான் பக வான் என்பது கருத்தன்று. அளவில்லாத கண் முதலியவைகளை உடையவன் எப்படி அளவில்லாத காட்சி முதலானவற்றை யுடையவனாயிருப்பானோ, அப் படியே பகவானும் என்று ஒரு திருஷ்டாந்தம் காட்டினபடியாம் என்று ஆழ் வார் அருளிச்செய்தபடி. இங்குச் சிலர், உலகமெல்லாம் பகவானுடைய சொரூபமாதலாலே உலகத்திலுள்ளோருடைய சிரம் கண் முதலானவை யெல் லாம் அவனுடையவையாம் எனக் கருத்துக் கூறினர். அது பலவிதத்திலும் பொருந்தாதென வறிக.

உண்டாகவும்போகின்றன. இப்படி உன்னாலே சிருட்டிக்கப்பட்டு, உன்னுடைய உருவமா யிருக்கின்ற இரணிய கர்ப்ப னுதரத்திலே, அகிலப் பிரபஞ்சமும் அடங்கி யிருக்கின்றதனால் எல்லாம் உனக்குள்ளேயென்று வேறாகச் சொல்ல வேண்டுமோ. எல்லாம் ஓமஞ் செய்யப் பெற்ற யாகமும், பிரஷதாச்சியம் என்கிற அவிசும், கிராமியங்கள் ஆரணியங்களென்னு மிரண்டு விதமான பசுக்களும், ருக்கு யசுர் சாமங்களும், சந்தங்களும், அசுவங்களும் அஜாதிகங்களும், ஒற்றைப் பல்வரிசையுள்ளனவாகிய ஐந்துசாதங்களும், மிருகங்களும் உன்னிடத்தில் உண்டாயின. உன் வதனத்திலே பிராமணர்களும், புயங்களிலே க்ஷத்திரியர்களும், தொடைகளிலே வைசியர்களும், பாதத்திலே சூத்திரர்களும், கண்களிலே சூரியனும், மனதிலே சந்திரனும், பிராணத்திலே வாயுவும், முகத்திலே அக்கினியும், நாபியிலே அந்தரிட்சமும், சிரத்திலே சொர்க்கமும், கர்ணங்களிலே திசையும், பாதங்களிலே பூமியு முண்டாயின. அதி விஸ்தீரணமான ஆலமரம் அதிக சொல்பமான பீசத்திலே யடங்கியிருந்தாற்போலே, மகத்தான இந்தப் பிரபஞ்சமெல்லாம் பிரளயகாலத்திலே ஆதிகாரண பூதனை வுன்னிடத்திலே யடங்கி யிருந்தது. வடவிருட்சம் மறுபடியும் பீசத்தினின்று முண்டாய்ச் சாங்கோபாங்கமாக விஸ்தாரமானாற்போலே, சிருட்டிகாலத்திலே பிரபஞ்சமெல்லா முன்னிடத்திலிருந்து உண்டாகி விஸ்தீரணமாயின. ஜகந்நாயகனே! பட்டைக ளொன்றின்மேலொன்றாய் மூடப்பெற்று, ஏகாகாரமாகத் தோன்றுகிற இள வாழைக்கன்றே பெரிதாகி வேறாகாம லிருப்பது போலே, சூக்ஷ்ம சிதசித்துக்களோடு கூடிக் காரணரூபமான உன்னைக்காட்டிலும் ஸ்தூல சிதசித்துக்களின் உருவமாய்க் காரியமான இந்தப் பிரபஞ்சம் வேறாகாம லிருக்கின்றது. சுத்த சந்தோஷகரமும் இடைவிடாது நிகழ்வதும், எப்போதும் ஒரேவிதமுமா யிருக்கின்ற ஞானமும் உன்னிடத்திலேயே உண்டு. இப்படியல்லாமல் சந்தோஷ துக்கங்களை யுண்டாக்குவதும், சுத்த துக்கத்தை யுண்டாக்குவதுமான ஞானங்கள் உன்னிடத்திலில்லை. ஏனெனில் நீ பிராகிருதங்களான சத்து

வாதி குணங்களோடு கலப்பில்லாமல் அப்பிராகிருத சுத்த சத்துவமயனு யிருக்கின்ரு யன்ரே! பிரபஞ்சத் துக்கு வேருய் நிற்கின்ற ஒரே ஆத்துமாவாய், சர்வபூத சரீரகனுய் விளங்குகின்ற வுனக்கு வந்தனஞ் செய்கின் றேன். பிரபஞ்சத்திலே சிரேஷ்டரான பிரமாதி சுவ ரூபியும், சர்வபூதாந்தர்யாமியுமான உனக்குத் தெண்ட னிடுகின்றேன். சூக்ஷ்ம பிரகிருதியும், ஸ்தூலபிரகிருதி யும், புருஷனும், விராட்டு ஸ்வராட்டு சம்ராட்டு என் கின்றவர்களும் எல்லாம் நீயே யாகின்ரு யன்ரே! அன்றியும் யாவருடைய அந்தக்கரணங்களிலேயும் அக்ஷயமான ஞானமயனுகப் பிரகாசிக்கின்ருய். நீ * அவ்வவற்றின் சாரமாய் யாவற்றிலு மிருக்கின்ருய். உன்னிடத்திலே சர்வமு மிருக்கின்றன. ஆதலால் சர் வாத்துமகனுன உனக்குத் தெண்டனிடுகின்றேன். இப் படி நீ எல்லாவற்றிற்கும் காரணமாய், எல்லாவற்றை யும் வியாபித்து, எல்லாவற்றினுள்ளு மிருக்கிரு யாத லாலே, நீயே அடியேனுடைய மனோரத முழுதும் அறிவாய். ஆதலால் அடியேன் விண்ணப்பஞ் செய்ய வேண்டுவதென்ன இருக்கின்றது. சுவாமீ! உன்னைப் பிரத்தியக்ஷமாகக் கண்டு தெண்டன் சமர்ப்பித்தேனுதி ஞலே அடியேன் மனோரதங்களும் நிறைவேறின. அடி யேன் தபசும் பலனடைந்தது. அடியேன் கிருதார்த்த னேன்" என்று இப்படி துதிசெய்து நின்ற துருவ னைப்பார்த்து, எம்பெருமான் அருளிச் செய்கின்ருர்.

"ராஜகுமாரனே! என்னைக்கண்டு வணங்கினதி ஞலே உன் தபசு நற்பலம் பெற்றது சரிதான். ஆனுல் நான் சேவைகொடுத்தது வியர்த்தமாகக் கூடாதாகையா லே, உனக்கு வேண்டிய அபீஷ்டத்தைக்கேள் நான் பிரத்தியக்ஷமானேனுனல் புருஷர்களுக்குச் சகல மனே ரதங்களும் கைகூடும்" என்று பெருமாள் அருளினதைக் கேட்டுத் துருவன் விண்ணப்பஞ் செய்கிருன். "தேவ தேவனே! சர்வ பூதாந்தர்யாமியான வுனக்கு அடியே

* அதனதின் சாரமாய் என்ருல் எந்த வஸ்துவுக்கு எதனுலே விசேஷ மோ அந்தந்த விசேஷமெல்லாம் பகவத் ஸ்வரூபமாம். எப்படியென்ருல் ஆகாசத்திற்குச் சப்தம், மனிதருக்குப் பௌருஷம், சூரியனுக்கு ஒளி இப்படி யாகக் கண்டுகொள்க.

னபீஷ்டந் தெரிந்தே யிருக்கின்றது. ஆனாலும் நியமித்தபடியினாலே விண்ணப்பஞ் செய்கின்றேன். மூடனை அடியேனுக்குக் கிடைக்கவொண்ணாத பொருளைப் பிரார்த்திக்கின்றேன். இந்திரன் உன்னனுக்கிரகத்தினாலே யன்றோ திரிலோகராச்சியத்தை யனுபவித்துக் கொண்டிருக்கின்றான். ஜநார்த்தனனே! சுருசியானவள், தன் கருப்பத்திலே பிறவாதபடியினாலே நீ ராஜயோக்கியமான சிங்காசனத்துக்கு அதிகாரியல்லவென்று அடியேனைப் பார்த்து வெகு இறுமாப்போடு சொன்னாளன்றோ. ஆனதினால் ஜகத்துக்கு ஆதாரபூதம் சர்வோத்தமமும் அவ்யயமுமான உன்னத நிலையைப் பெறவேண்டுமென்று அபேக்ஷிக்கின்றேன். அநுக்கிரகித்தருளவேண்டும்" என, ஸ்ரீபகவான் இராஜநந்தனனைக் கடாக்ஷித்து, "பாலனே! உனக்கபீஷ்டமான ஸ்தானத்தை யடையக் கடவாய், இதற்குக் காரணம் வேறுமுண்டு, சொல்லுகிறேன்கேள்: பூர்வ ஜன்மத்திலே நீயொரு பிராமணனாய்ப் பிறந்து மாதா் பிதுர் சிசுருஷைகள் செய்துகொண்டு, தர்மந் தப்பாதே ஏகாக்கிரசித்தனாய் என்னை யாராதித்துக் கொண்டிருந்தாய்; சிலநாள் சென்றபிறகு உனக்கு யவ்வன வயது வந்தபோது, சர்வாபரண பூஷிதனும் சகல போக சம்பன்னனும் மகாசுந்தர தேகமுடையவனுமான ஓர் இராஜகுமாரன் சினேகிதனானன்; அப்போது யாருக்கும் கிடைக்காத அவனுடைய ஐசுவரிய போகங்களைக் கண்டு ஆசைப்பட்டு இராஜபுத்திரனாகப் பிறக்கவேண்டுமென்று இச்சித்தாய், ஆனதினாலே உன் மனோரதத்துக்கு ஏற்றதாகத் துர்லபமான உத்தானபாதன் கிரகத்திலே பிறந்தாய்; என்னைத் துதியாத மற்றவர்களுக்கு ஜகத்பூசிதமான சுவாயம்புமநு வமிசத்திலே ஜனன முண்டாவது துர்லபம். இப்போதும் நீ அத்தியந்த பக்தி விசேஷத்தினாலே நான் உவக்கும்படிச் செய்தாய். என்னிடத்தில் சித்தத்தை நிறுத்தி என்னைத் தியானஞ் செய்த மனிதன் அதிசீக்கிரத்தில் சர்வோத்தமமான மோக்ஷத்தையும் அடைவனனால், அற்பமான சொர்க்காதி பலன்களை யடைவது அதிசயமோ. நீயும் என்னுடைய அநுக்கிரகத்தினாலே மூன்று லோகங்களுக்கும் மேற்பட்டதாய்,

சகல தாரா கிரக நக்ஷத்திரங்களுக்கும் ஆதார பூதமாய், சூரிய சந்திர அங்காரக புத பிரகஸ்பதி சுக்கிர சனிக ளுடைய ஸ்தானங்களுக்கும் நக்ஷத்திரமண்டலத்துக்கும் சத்தரிஷிகள் மண்டலத்துக்கும் விமானாரூடராய், சித் தாதிகள் சஞ்சரிக்கின்ற ஸ்தானங்களுக்கும் அதியுன் னதமாய் விளங்குகிற திவ்ய ஸ்தானத்தை யடைந்து, சுகமாயிருப்பாய். தேவதைகளிற் சிலர் சதுர்யுக பரியந்த மும், சிலர் மநுவந்த பரியந்தமு மல்லாமல் அதிககாலம் இரார்கள். நீயோ என் கிருபையினாலே கல்பகால பரி யந்தமும் அந்தச் சர்வோன்னத ஸ்தானத்திலே சுகமாக இருக்கக்கடவாய். உன்னுடைய தாயான சுநீதியும் திவ் விய விமானத்தி லேறிக்கொண்டு நக்ஷத்திர ரூபமாய்ப் பிரகாசித்துக்கொண்டு கல்பாந்த பரியந்தமும் உன் சமீ பத்திலே யிருக்கக்கடவள். எவனாகிலுஞ் சாயம் பிராதக் காலங்களிலே, மனவுறுதி யுள்ளவனா யுன்னைக் கீர்த் தனம் பண்ணுவானாகில், அவன் மகா புண்ணியத்தைப் பெறுவான்” என்று திருவாய்மலர்ந்தருளினார்.

இவ்விதமாகத் தேவதேவனும் ஜகத்துக்கு நாதனு மான ஜனார்த்தனனுடைய கிருபையினாலே இஷ்டமான வரம் பெற்றுத் துருவன் சர்வலோக உன்னதமான ஸ்தானத்தை யடைந்தான். மாதா பிதாக்களுடைய சிசுரூஷையினாலும், தவத்தின் பிரபாவத்தினாலும், ஸ்ரீமத் துவாதசாக்ஷர மகா மந்திர மகாத்துமியத்தி னாலும், மகாத்மாவான துருவனுக்கு உண்டான அபி மானமும் லோகோத்தரமான ஐசுவரியமும் மகிமையும் பார்த்து அசுர குருவான சுக்கிராசாரியார் சந்தோஷ மடைந்து, “சப்த ரிஷிகளும் எந்த மகாத்மாவை முன் னிட்டுக்கொண்டு சஞ்சரிக்கின்றார்களோ, அந்தத் துருவ னுடைய மேன்மையான தவசின் பிரபாவத்தை என்ன சொல்லுவேன், அவனுடைய தவத்தின் பயனை என்ன சொல்லுவேன், வெகு ஆச்சரியமா யிருக்கின்றது, இந்தப் பிரபாவத்தைக் கொண்டாட யாராலே யாகும். இதமும் சத்தியமுமான வாக்குள்ள துருவன் தாயான சுநீதியின் மகத்துவத்தை வர்ணிக்கத் தக்க கவிகளும் உலகத்திலுண்டோ, அந்தப் பெண்ணரசி துருவனைக் கர்ப்பத்திலே தரித்ததினாலே சர்வோத்தமும் சாசுவத

மும் மூன்று லோகங்களுக்கு மாதார பூதமுமான அந்தத் திவ்விய ஸ்தானத்தை யடைந்தாள். ஓகோ! என்ன அதிர்ஷ்டம் என்ன மகிமை'' என்று சில சுலோகங்களாலே துதித்தார்.

மயித்திரேயரே! எந்த மனுஷ்யன் துருவன் சர்வோன்னதமான ஸ்தானம் பெற்றதைக் கீர்த்தனஞ் செய்வானே, அவன் சகல பாப நிவிர்த்தியுள்ளவனாய்ச் சொர்க்கலோகத்தில் வாசஞ் செய்வான். அன்றியும் அவன் வானத்திலும் பூமியிலும் ஸ்தான பிரஷ்டனாகாமற் சகல சௌபாக்கியங்களு முண்டாகித் தீர்க்காயுளோடு வாழ்வான்.

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

# பிருதுசக்கரவர்த்தி சரித்திரம்

இப்படி ஸ்ரீ பராசரமுனிவர் துருவசரித்திர மருளிச்செய்து, அவ்வமிசக் கிரம மருளிச் செய்கின்றார்.

முனிசிரேஷ்டரே! இந்தப் பிரகாரம் தவஞ்செய்து ஸ்ரீமந் நாராயணனுடைய கிருபையினாலே சர்வோத்தமமான அதிகாரத்தை யடைந்து பரிபூரண மனோரதனான துருவன், சம்பு வென்கின்றவளை விவாகஞ் செய்துகொண்டு அப்பத்தினியி னிடத்தில் சிஷ்டி என்றும் பவியன் என்றும் இரண்டு பிள்ளைகளைப் பெற்றான். அவர்களிலே சிஷ்டி யென்றவன் சுச்சாயை யென்ற பாரியை யிடத்தில் ரிபு ரிபுஞ்சயன் விப்பிரன் விருகலன் விருகதேஜசன் என்கிற குமார ரைவரைப் பெற்றான். அவர்களிலே ரிபு என்கிறவன் பிரகதீ யென்ற பாரியை யிடத்தில் சாட்சுஷன் சர்வதேஜசன் என்கிற இரண்டு பிள்ளைகளைப் பெற்றான். அவர்களிலே சாட்சுஷன் வருணசந்ததியிற் பிறந்தவளும் வீரணப் பிரசாபதிக்கு மகளுமான புஷ்கரிணி யிடத்தில் ஆறாவது மனுவந்தரத்திற்கு அதிபதியான மனுவைப் பெற்றான். அந்த மனுவுக்கு வயிராசனென்

னும் பிரசாபதியின் புத்திரியான நட்வலை யென்றவளிடத்தில் ஊரு, பூரு, சதத்தியும்னன், தபஸ்வி, சத்தியவான், சுசி, அக்கினிஷ்டோமன், அதிராத்திரன், சுத்தியும்னன், அபிமன்யு என்னும் பத்துப்பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்கள் மகா பிரபாவ முடையவர்கள். அந்த ஊரு என்பவனைச் சேர்ந்து அக்கினியின் மகள் மகாதேஜசுள்ளவர்களான அங்கன், சுமனசு, சுவாதி, கிரது, அங்கிரசு, சிபி என்ற ஆறுபிள்ளைகளைப் பெற்றாள். அங்கனுக்கு மிருத்து புத்திரியான சுநீதை யென்கிறவளிடத்தில் வேனன் என்பவனுண்டானான். மகாரிஷிகள் புத்திரார்த்தமாக அந்த வேனனுடைய வலக்கையைக் கடைந்தார்கள். அப்போது அதனின்றும் பிருதுவென்கிற குமாரன் பிறந்தான். அவன் பிரஜைகளின் நன்மைக்காக தேனுருபந்தரித்த பூமியினின்றும் வேண்டிய வஸ்துக்களைக் கறந்து கொடுத்தான் என்று சொல்லக்கேட்டு, மயித்திரேயர், ரிஷிசிரேஷ்டரே! மகாரிஷிகள் வேனனுடைய தக்ஷிண ஹஸ்தத்தை ஏன் கடைந்தார்கள்? அதனாலே பிருது எப்படிப் பிறந்தார்? அதைச் சொல்ல வேண்டுமென ஸ்ரீ பராசரர் சொல்லுகின்றார்.

மயித்திரேயரே! மிருத்துவுக்குப் பிரதம புத்திரியான சுநீதை யென்றவள் அங்கனென்கிற அரசனுக்குப் பத்தினியாகி வேனனென்னும் மகனைப் பெற்றாளன்றோ. அந்த வேனன் மாதா மகனான மிருத்துவினுடைய தோஷத்தினாலே குணவீனனாய்ப் பாலிய முதல் துஷ்ட சுபாவனாகவே இருந்தான். அவன் எப்போது மகாரிஷிகளாலே மகாராஜாவாகப் பட்டாபிஷேகஞ் செய்யப்பட்டானோ அப்போது "யாரும் இன்றுமுதல் யக்கியங்கள் பண்ணவேண்டாம், ஓமங்கள் செய்யவேண்டாம், தானங்கள் கொடுக்கவேண்டாம், நானே யக்கியங்களுக்கு அதீசுரனும் ஜகத் பிரபுவுமல்லாமல் வேறொருவ னில்லை" என்று பறையறைவித்ததைக் கேட்டு முனிவர்களெல்லாம் அவ்வரசனிடத்திற் போய் வணங்கி, "ஓ இராஜேந்திரனே! எங்கள் வசனங்களைக் கேளும். நாங்கள் தேசத்துக்கும் பிரஜைகளுக்கும் இதமாகத் தீர்க்க சத்திர யாகத்தைச்

செய்து யக்கியேசுரனை ஸ்ரீஹரியை ஆராதிக்கிறோம். அதனாலே உமக்கும் யக்கியபலத்தில் பங்குகிடைக்கும். யக்கிய புருஷனை ஸ்ரீமந் நாராயணன் நாங்கள் செய்கிற யக்கினத்தினாலே திருவுள்ள முகந்து உனக்குச் சகலாபீஷ்டமுங் கொடுத்தருளுவன். எவனுடைய ராச்சியத்திலே யாகாதி சத்கர்மங்களினாலே யக்கியேசுரனை புருஷோத்தமன் பூஜிக்கப்படுவனோ அந்த அரசனுக்கு அவ்வெம்பெருமான் சகல மனோரதங்களையும் அருளுவன்" என்று சமாதானமாகவும் மதுரமாகவும் சொன்னதற்கு, வேனன் "என்னிலும் அதிகனும் அர்ச்சிக்கத் தக்கவனுமான புருஷன் வேறுண்டோ? நீங்கள் யக்கியேசுரனென்று நினைத்திருக்கிறீர்களே அந்த ஹரி என்கிறவன் யார்? பிரமா விட்ணு சிவன் இந்திரன் யமன் வருணன் குபேரன் வாயு அக்கினி சந்திரன் சூரியன் பூமி என்கிற தேவரும் மற்றுமுள்ள சாபமும் அனுக்கிரகமும் செய்யும் சாமர்த்தியமுடையவர்களான யாவரும் இராஜாவினுடைய சரீரத்திலேயிருக்கிறார்கள். ஆகையால் மகீபாலன் சர்வதேவ சொரூபியென்று சாஸ்திரம் சொல்வதையறிந்து, நான் ஆக்யாபித்தேன். அதன்படி நடந்துகொள்ளுங்கள்; தானங்கள் செய்யவேண்டாம்; ஓமங்களாசரிக்கவேண்டாம்; யக்கியங்களைப் பண்ணவேண்டாம்; ஸ்திரீகளுக்குத் தங்கள் பர்த்தாவின் சுசுரூஷையே முக்கிய தர்மமானது போலே அரசனாகிய என்னுடைய ஆக்கினையை பரிபாலனஞ்செய்வதே உங்களுக்குத் தருமமாம்" என்று சொன்னதைக் கேட்டு மகரிஷிகள் மறுபடியும் மிக வணக்கத்துடனே அவனைப் பார்த்து, "இராஜோத்தமனே! யக்கியங்கள் செய்கிறதற்கு அனுக்கியை கொடும், தர்மத்தை நாசம்பண்ண வேண்டாம், சராசராத்மகமான பிரபஞ்ச மெல்லாம் யக்கியங்களிலே ஓமஞ்செய்கிற அவிசினாலே வளர்ந்து வருகின்றன" என்று வெகு விதங்களாகப் பலதரம் பிரார்த்தித்தபோதிலும் பாபசித்தனை வேனன் அதைக் கைக்கொள்ளாம லிருந்ததினாலே அந்த முனிவர்கள் கோபம் மிகுந்தவராய் இவன் ஆதியந்தங் ளில்லாதவனும் ஜகத்பிரபுவும் யக்கிய புருஷனுமான ஸ்ரீயப்பதியை நிந்தித்தானன்றோ. இப்படி நிந்தனை செய்கிற நராத

மன் இராச்சிய பரிபாலனத்துக்குத் தகுந்தவனல்லன்; இந்தத் துராத்துமாவைக் கொன்று போடுங்கள், வதையுங்கள், இதனாலே நமக்குப் பாவம் வராது" என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு, மந்திரங்களாலே சுத்தி செய்யப்பட்டிருந்த குச தருப்பைகளினாலே அவ் விராசனை அடித்தார்கள். அவன் பூர்வத்திலேயே சர்வேசுவரனை ஸ்ரீவிஷ்ணுவையும், அவன் மகிமையை விளக்கும்படியான வேதத்தையும், அவன் திருவாராதனமான யாகத்தையும் நிந்திப்பதாகிய அக்கினியினாலே தகிக்கப்பட்டிருந்தபடியினாலே, அவர்களுடைய தருப்பையின் அடி பட்டமாத்திரத்திலே பிராணன் போய்க் கீழே விழுந்தான்.

இஃது இப்படியாக, நான்கு திக்கிலும் அதிகமாய்த் தூளெழும்பி ஆகாசமெங்கும் வியாபித்தது. அதைக்கண்டு அம்முனிவர் அங்கேயிருந்த சனங்களைப் பார்த்து, "இஃது என்ன காரணத்தினாலுண்டாயிற்று" என்றுகேட்க, அந்த ஜனங்கள் முனிவரை நோக்கி, "உங்களாலே பூமண்டலம் அரசனை யிழந்துவிட்டதனாலே அனேக சனங்கள் ஒன்றாய்க்கூடி அங்கங்கே பிரவேசித்துப் பிறருடைய திரவியங்களை யபகரிப்பதற்காக வேகமாய் வருகிறார்கள்; இவ்விதமா யோடி வருகிற அந்தக் கள்ளருடைய கால்கள் பட்ட வேகத்தினாலேயுண்டாகிய தூளீபடலமிது" என்று சொன்னார்கள். அதைக் கேட்டபின் அந்த முனிவர்கள் ஒருவரோடொருவர் ஆலோசனை செய்து புத்திரனை யுண்டாக்க வேண்டுமென்று, அபுத்திரனான வேனனுடைய தொடையைக் கடைந்தார்கள். அப்போது அதிலிருந்து எரிந்த கட்டைபோல் கறுப்பான நிறமும் விகாரமான முகமும் குட்டையான சரீரமுமுள்ள ஒரு மனிதன் ஜனித்து, அம்முனிவரைப் பார்த்து "நானென்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான். அதற்கு அவர்கள் (நிஷீத) உட்கார் என்று சொன்னார்கள். அது காரணமாக அவன் நிஷாதனென்னும் பெயரை அடைந்தான். விந்திய பர்வத நிவாசிகளாய்ப் பாபகர்மஞ் செய்பவரான வேடர் அவன் பரம்பரையி லுண்டானார்கள். ஆனதால், அவர்கள் நிஷாதரென்று சொல்

லப்படுவார்கள். இவ்விதமாய் அந்த அரசனுடைய பாபமெல்லாந் திரண்டு புருஷாகாரமாகப் பிறந்தது. அன்றுமுதல் நிஷாதசாதி ஜகத்திலே யுண்டாயிற்று.

அப்பால் அந்த மகரிஷிகள் வேனனுடைய வலக்கையைக் கடைந்தார்கள். அந்தக் கையிலிருந்து அக்கினிபோலே சொலிக்கிற திவ்வியதேஜோவிராஜிதனும், மகா பிரதாப முள்ளவனுமாய் ஒரு குமாரன் உதித்தான். பிருது சக்கரவர்த்தி என்று அவனுக்கு நாமதேய முண்டாயிற்று. அவன் பிறந்தவுடனே ஆகாசத்திலிருந்து அசகவ மென்கிற முதல் வில்லும், திவ்வியமான பாணங்களும் கவசமும் விழுந்தன. அவன் அவைகளைக் கைக்கொண்டான். இப்படி அந்த மகாத்துமா ஜனனஞ் செய்ததினாலே சகல பூதங்களும் மகா சந்தோஷத்தை அடைந்தன. வேனனும் மகாப் பிரபாவசாலியான சத்புத்திர னுண்டானதினாலே புத்து என்ற நரகத்தினின்றும் நீங்கிச் சொர்க்கலோகத்துக்குப் போனான். அப்போது சமுத்திரங்களும் நதிகளும் அவனுக்கு அபிஷேகார்த்தமாகத் திவ்விய இரத்தினங்களும் நிர்மலமான வுதகங்களும் கொண்டுவந்து வணங்கி நின்றன. சதுர்முகனும் ஆங்கிரசர் என்று சொல்லப்பட்ட தேவதைகளோடும் ஜங்கமங்களும் தாவரங்களுமான சகல பூதங்களோடும் வந்து வேனனுடைய புத்திரனை பிருது சக்கரவர்த்தியை சகல பூமண்டலத்துக்கும் அதிபதியாகப் பட்டாபிஷேகஞ் செய்தான். அப்போது பிரமாவானவர் பிருது சக்கரவர்த்தியினுடைய வலது கையிலே சக்கர ரேகையைக்கண்டு, இவன் நாராயணம்சமுடையவனென்று நினைத்துச் சந்தோஷத்தை யடைந்தார். மயித்திரேயரே! எவர்களுடைய வலது ஹஸ்தத்திலே விஷ்ணு சின்னமான சக்கர ரேகை காணப்படுமோ, அவர்கள் தேவர்களாலும் ஜயிக்கக்கூடாத பராக்கிரம முடையவர்களாய்ச் சக்கரவர்த்திகளுக்குள்ளே சிரேஷ்டராவார்கள். இப்படி மகா பிரபாவ சாலியான பிருது சக்கரவர்த்தி, சகல மகா ராஜாக்களுக்கும் இராஜாவாகப் பட்டாபிஷித்தனாகி, விதிப்படி பிரஜா பரிபாலனஞ் செய்து வருகையில், அவனுக்குத் தகப்பனான வேனனுடைய வுபத்திரவத்தினாலே வருந்தி மெலிந்த

சனங்கள், இவனுடைய சுகுணங்களினாலே சந்தோஷமடைந்தார்கள். பிரசைகளை சம்ரக்ஷணை செய்து அவர்களுடைய அனுராகத்தை, அஃதாவது ஆசையைப், பெற்றபடியினாலே, அவனிராசாவென்று பேர்பெற்றான். அவன் இரதாரூடனாய்ப் புறப்பட்டுப் போகும்போது, சமுத்திரங்கள் இரைச்சலிடாமல் ஸ்தம்பித்து நின்றன. பருவதங்களெல்லாம் வழிவிட்டு நின்றன. அவனுடைய விருதுக் கொடிகள் கிளைகளிலே படுமென்கிற பயத்தினாலே உன்னதமான விருக்ஷங்கள் தணிந்து நின்றன. பூமி யுழாமலே விளைந்தது. அன்றியும் நினைத்த மாத்திரத்திலே பலன்கள் சித்தித்து வந்தன. பசுக்கள் வேண்டிய பால் முதலானவைகளைக் கறந்து வந்தன. இலை மடிப்புகளிலெல்லாம் தேன் நிறைந்திருந்தது. பிரமாவைக் குறித்துச் செய்த யக்கியத்திலே இவ்விதமாய் மகா பிரபாவசாலியான பிருது சக்கரவர்த்தியானவன் பிறந்தவுடனே, அந்த யக்கியத்தின் * சுத்தியா காலத்திலே சூதனும் மாகதனும் பிறந்தார்கள். இப்படி ஜனித்த சூத மாகதர்களைப் பார்த்து, அங்கேயிருந்த மகா முனிவர்கள் "பிரதாபசாலியான இந்தப் பிருது நரேந்திரனை அனுரூபமான குணகர்ம சரித்திரங்களைச் சொல்லித் துதியுங்கள், இவன் ஸ்தோத்திரத்துக்குத் தகுந்தவன்" என்று ஆக்கியாபித்தார்கள். இவ் வாக்கினையைக் கேட்டு அவர்கள் முனிவரை நோக்கி நமஸ்கரித்து "முனீந்திரர்களே! இவரிப்போதுதானே ஜனித்தார். ஆகையால் இவருடைய குணங்களையும் கீர்த்திப் பிரதாபங்களையும் நாங்களறியோமே, என்ன காரியத்தைக் கொண்டு துதிப்போம்" என்றுசொல்ல, அதற்கு ரிஷிகள் "இந்த மகீபாலன் சக்கரவர்த்தியும் மகா பலவானுமாகி லோகத்துக் கிதமான அனேக காரியங்களைச் செய்வான். ஆனதினாலே இவனுக்கு இனிமேல் விளங்கத்தக்க குணங்களைப் பற்றித் துதியுங்கள்"

* சுத்நிலை என்பது யாகத்தைச் சேர்ந்த ஒருவிதச் சடங்கு. வேனனுடைய கையைக் கடைந்து, அக்கினியுண்டாக்கி, அதில் சதுர்முகனைக் குறித்து யாகஞ் செய்ய, அதில் பிருது சக்கரவர்த்தி உதித்தார் என்பது கருத்து. சூதர் மாகதர் என்பவர்கள் இராசாக்களுக்குச் சூரத்துவமும் உற்சாகமும் வளரும்பொருட்டுத் துதிசெய்ய ஏற்படுத்திய சாதியார்.

என்று சொன்னார்கள். இதைக்கேட்டு பிருது சக்கரவர்த்தியும் சந்தோஷமடைந்து தன்னிலே நினைக்கிறான், "லோகத்திலே சற்குணங்களினாலே புருஷனுக்குக் கீர்த்தியுண்டாம், இந்த இருடிகள் துதிக்கச் சொன்னது நான் சற்குணங்களைத் தெரிந்து கொள்ளும்படியான வோருபதேசம், ஆனதினாலே நான் குணவானாகுவேன், பிராக்கியர்களான இந்த வந்தி மாகதர்கள் கீர்த்தனஞ்செய்யுங் குணங்களையே நானுங் கிரகிக்கிறேன், இவர்கள் காட்டுந் துர்க்குணங்களை வர்ச்சிக்கிறேன்" என்று சித்தமாயிருந்தான்.

அப்போது அந்தச் சூதமாகதர்கள் அந்த ராஜகுமாரனை "இந்த மகாராஜகுமாரன் சத்தியவாதி, தானசீலன், பிரதிக்கினையை நிறைவேற்ற வல்லவன், செய்யக்கூடாத காரியத்திலே வெட்கமுள்ளவன், ஜயசாலி, பொறுமையுடையவன், சினேககுண முள்ளவன், மகா பிரதாபவான், துஷ்டர்களைச் சிக்ஷிக்குந் தன்மையுள்ளவன், இனிப்பாய்ப் பேசுந் திறமை யுடையவன், பூசிக்கத் தகுந்தவர்களைப் பூசிப்பவன், யாகசீலன், பிராமணரிடத்திற் பத்தியுள்ளவன், யோக்கியரிடத்தி லன்புள்ளவன், சத்துரு மித்திரர்களிடத்திலே சமபுத்தியாய்ப் பட்சபாத மில்லாதே சகல விவகாரங்களையுந் தீர்க்கிறவன்" என்றிப்படி நல்ல சுரத்தோடு நன்றாகத் துதித்தார்கள். சூதனும் மாகதனும் எடுத்துச் சொன்ன சற்குணங்களை யெல்லாம் அந்தப் பிருது சக்கரவர்த்தி யானவன் தன் இருதயத்திலே நன்றாய் நிறுத்தி, அந்தப்படித் தானுஞ் சகல கலியாண குணாகரனாய்ப், பூமண்டலத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டு, அதிக தட்சிணைகளுடனே பலவிதமான யாகங்களைச் செய்துவந்தான்.

வேன னிறந்து போனதினாலே பூமி அராசகமாயிருக்க, இவ்வரசன் துரைத்தனத்திற்கு ஆரம்பிக்கும் போது, அகிலப் பிரசைகளும் பசியினால் வருத்தப்பட்டவர்களாய் மகாராஜாவினிடம் வந்து "ஓ மகாராஜாவே! நீர் இராச்சியாபிஷேகஞ் செய்யப்படுகிறதற்கு முன்னே பூமண்டலம் அராசகமாகிச் சகல வோஷதி

வர்க்கங்களையும் தனக்குள்ளே இழுத்துக் கொண்டது. ஆனதினாலே இப்போது ஆகாரங்களில்லாமற் பிரஜைகள் (க்ஷுத்து) பசி வாதையினாலே க்ஷயத்தை யடைகிறார்கள். அன்ன பானங்கள் கொடுத்து எங்களை இரட்சிக்கிற நிமித்தமே பிரமா உம்மை யுண்டாக்கி எங்களுக்குக் கொடுத்தருளினார்; ஆனதினாலே பசியினால் பீடிக்கப்பட்டவர்களான எங்களுக்குப் பிழைக்கும்படியான ஓஷதி நிகரங்களைக்கொடுத்து அளிக்க வேண்டும்'' என்று முறையிட்டுக் கொண்டார்கள். அதைக்கேட்டு அந்த மகீவல்லபன் நன்றென மனதிற்கொண்டு "அப்படியே யாகட்டும்'' என்று சொல்லி, அசகவமென்கிற வில்லையும் திவ்ய பாணங்களையும் கையிலெடுத்துக் கொண்டு கோபமூண்டவனாய்ப் பூமியின்மே லெதிர்த்து வந்தான். அந்தப் பூதேவியானவள் அப்போது பசுவின் உருவத்தைத் தரித்துப் பயந்தோடினாள். அந்த மன்னனும் விடாமல் பூமியைப் பின்தொடர்ந்தே போனான்.

அதனாலே அந்தத் தரணியும், பிரமலோகாதி சகல லோகங்களிலு மோடிப்பார்த்தும் எங்குஞ் சரணங் காணாமல், தனுர்த்தரனைப் பின்னே வருகிற மகா பராக்கிரமசாலியான பிருதுவைப் பார்த்து, மிகுந்த பயத்தினால் தளர்ச்சியுற்று, பிராணனைக் காப்பாற்றிக் கொள்ள நினைந்து, "நரேந்திரனே! பெண் வதையினாலே பாதகஞ் சம்பவிக்குமென்று அறிந்தும் என்னை வதைக்க இந்த யத்தன மெப்படிச் செய்தாய்?'' என்று சொன்னாள். அதற்கு * வைனியன், "வசந்தரையே! துஷ்ட காரியஞ் செய்கிற ஒருவனை வதைத்தலினாலே வெகு தனங்களுக்கு நன்மை யுண்டாகுமானால் அப்படிப்பட்ட வதையினாலே புண்ணிய முண்டாமே யல்லது பாவ முண்டாகாது'' என, அதைக் கேட்டுப் பூதேவி அவனை நோக்கி, "இராஜேந்திரனே! பிரஜைகளுக்கு இதமுண்டாம் பொருட்டு என்னைச் சங்கரிப்பையானால் சதுர்வித பூத சாதங்களுக்கும் ஆதாரமென்ன?'' என்று சொன்னாள். வைனியன் "வசந்தராய்! என்னுடைய ஆக்கினையை அதிக்கிரமித்துத் துர்விநீதை

* வைனியன் என்றால் வேனனுடைய மகன்.

யாய் நடக்கிற உன்னைத் தீக்ஷணமான அம்புகளினாலே சங்கரித்து என் யோகபலத்தினாலே சகல பிரஜைகளையுந் தரிக்கிறேன்" என்று சொன்னான். அதைக் கேட்டு வசுந்தரை பயத்தினாலே நடுநடுங்கி அந்த மகாராஜனுக்குத் தண்டஞ் சமர்ப்பித்துச் சொல்லுகிறாள்.

"இராசபுங்கவரே! உபாயத்தினாலே சகலமான காரியங்களுஞ் சித்திக்குமே யல்லது வேறுவிதமாய்ச் சித்திப்பதில்லை; ஆனதினாலே நானொருபாயஞ் சொல்லுகிறேன் கேளும். உலகத்திலுண்டான ஔஷதி நிகரங்களை யெல்லாம் நான் எனக்குள்ளே அடங்கும்படி கிரகித்திருக்கிறேன். ஆதலால் அவை என்னிடத்திலே க்ஷீரரூபமாக இருக்கின்றன; வேண்டுமானால் பால்வடிவமாயிருக்கின்ற அவ்வோஷதிகளை உலகத்தின் நன்மைக்காகக் கொடுக்கிறேன்; தகுந்த ஒரு கன்றை யுண்டாக்கிக் கொடும்; அந்தக் கன்றினிடத்திலே வாச்சலியத்தினாலே க்ஷீரரூபமாக அந்த ஔஷதிகளைக் கறக்கச் செய்வேன். நான் கொடுக்கிற க்ஷீரங்கள் ஜகமெல்லாம் வியாபிக்கும் பொருட்டு விஷமமாக இருக்கிற என்னிடம் சமமாகும்படி மலைகளை எல்லாம் விலக்கி, என்னை மேடுபள்ளமில்லாமல் நிரவும்" என்றனள். பிருது நரேந்திரனும் "அப்படியே யாகட்டும்" என்று, நூறாயிரங்கோடி பருவதங்களையெல்லாம் தன்னுடைய வில்லின் நுனியாலே அப்பாலே தள்ளிப் பூமண்டலத்தைச் சமமாகச் செய்தான்.

மைத்திரேயரே! பூர்வகாலத்திலே மலைகள் முழுதும் பரவி நெருங்கியிருந்ததனாலே, பூமண்டலம் விஷமமா யிருந்ததுபற்றிப் புரங்களும் கிராமங்களுமாகிய குடியிருப்பிடங்கள் பிரிவு படாதே இருந்தன. அன்றியும் கிரிஷியும் கோரட்சணமும் வாணிச்சியங்களுமில்லை. பிருது நரேந்திரன் இராச்சியாபிஷித்தன் ஆனது முதல் இவ் வேற்பாடுகள் ஜகத்திலே உண்டாயின. எங்கெங்கே மேடு பள்ளமில்லாமல் மேதினி சமமாக இருக்குமே, அங்கங்கே அந்தச் சக்கரவர்த்தி புரங்களையுங் கிராமங்களையும் நிர்மித்துச் ஜனங்களை வசிக்கப் பண்ணினான். பூர்வத்திலே கந்தமூல பலாதிகள் பிரஜைகளுக்கு ஆகாரமாக இருந்தன. ஜகம் அராசகமான போது அவை

களும் கிடைப்பது கஷ்டமாயிற்று. ஆனதினாலே வைனியமகாராசா அப்போது சுவாயம்புவ மனுவைக் கன்றாக வைத்துத் தனது ஹஸ்தத்தைப் பாத்திரமாகச் செய்து, தேனுரூப தாரிணியான பூமியினிடத்தில் சகல ஸஸ்யங்களையும் கறந்தார். அதினாலே பிரஜைகள் சந்தோஷமடைந்து, அவனுண்டாக்கின ஆகாரத்தினாலே பலத்தையும் சக்தியையும் பெற்றுச் சுகித்தார்கள். அவன் கொடுத்த அன்னத்தினாலேதான் இன்றளவும் பிரஜைகள் சீவித்து வருகிறார்கள். அந்தப் பிருது மகாராஜன் பூமிக்குப் பிராணனைக் கொடுத்ததினாலே பிதாவானான். அந்தக் காரணத்தினால் பூமிக்கு "பிருதிவி" என்கிற பெயருண்டாயிற்று. அப்பால் தேவதைகளும் ரிஷிகளும் தயித்தியர்களும் ராக்ஷசர்களும் கந்திருவர்களும் நாகர்களும் பிதுர்க்களும் விருட்சங்களும் பிருது மகாராசாவினுடைய அனுக்கிரகத்தினாலே தங்கள் தங்கள் சாதிக்கான பாத்திரத்தையுங் கன்றையுங் காக்கிறவனையு முண்டாக்கித் தங்களுக்கு அபீஷ்டமான வஸ்துக்களைக் கறந்துகொண்டு சந்தோஷத்தை அடைந்தார்கள். சகலபூத தாரிணியாயும் யாவற்றையு முண்டாக்கிறவளாயும் எல்லாவற்றையும் இரக்ஷிக்கிறவளாயும் ஸ்ரீ மகாவிஷ்ணு பாதாம்புஜத்திற் பிறந்தவளாயு மிருக்கிற பிருதிவி முன்போலச் சகல பூதங்களுக்கும் இஷ்டங்களைக் கொடுத்துக் காப்பாற்ற ஏற்பட்டாள்.

மைத்திரேயரே! இந்தப்படி வேன புத்திரனை பிருது சக்கரவர்த்தி மகா பிரபாவ சம்பன்னனாய், ஆதிகாலத்திலே பிரசாரஞ்சனஞ் செய்ததினாலே இராசா வென்கிற பெயரைப் பெற்று விளங்கினான். எவன் இப்படிப்பட்ட பிருது மகாராஜனுடைய சரித்திரத்தைக் கீர்த்தனஞ் செய்வானோ அவன் பாவந் தீர்ந்தவனாகித் துர்ச் சொப்பன பயங்களு மில்லாமல் சுகத்தை யடைவான்.

பதின்மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினான்காம் அத்தியாயம்

# பிரசேதசருடைய தவமும் தோத்திரமும்

பராசரமுனீந்திரர் திரும்பியுஞ் சொல்லுகின்றார்: அந்தப் பிருது நரேந்திரனுக்கு அந்தர்த்தானன், வாதி என்று இரண்டு பிள்ளைகளுண்டானார்கள். அந்தர்த்தானனவன் சிகண்டிநீ என்கிற பாரியையினிடத்தில் ஹவிர்த்தானனென்கிற மகனைப் பெற்றான். அவனுக்கு அக்கினி புத்திரியான திஷணையினிடத்தில் பிராசீனபர்ஹி சுக்கிரன் கயன் கிருஷ்ணன் விரசன் அசினன் என்று ஆறு குமாரர் உண்டானார்கள். அவர்களில் அந்த ஹவிர்த்தானனுக்கு மூத்தமகனாயும் மகாத்துமாவாயுமிருக்கிற பிராசீனபர்ஹி மகா பிரபாவத்தினாலே பிரசைகளை விருத்தியாக்கி பிரஜேசுவரனானான். பிராசீனாக்கிரங்களான தருப்பைகளினாலே பூமியெல்லாம் பரப்பி யக்கியங்கள் செய்ததினாலே அவனுக்குப் பிராசீனபர்ஹி என்ற பேருண்டாயிற்று. அவன் சமுத்திரனுக்குப் புத்திரியாய் இருள் நீங்கும் காந்தியுள்ளவளான சுவர்ணை பென்பவளைப் பாணிக்கிரகணஞ்செய்து அவளிடத்திலே பிரசேதசர்களென்று சொல்லப்படும் பத்துப் பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் தனுர்வேதத்தின் கரைகண்டவர்களாய் யாவரும் ஒரே பயனை விரும்பி, ஒரே தருமத்தைச் செய்துகொண்டு, சமுத்திர ஜலத்திலே முழுகியிருந்து, பதினாயிரம் வருஷந் தவஞ் செய்தார்கள். ஏனெனில், சதுர்முகனுடைய உத்தரவின்படி பிராசீனபர்ஹி பிரசைகளை யபிவிர்த்தி செய்ய நினைத்துத் தன் புத்திரரான பிரசேதசர்களைப் பார்த்து, "புத்திரர்களே! தேவதேவனான பிதாமகர் என்னைப் பிரசாபிவிருத்தி பண்ணும்படி நியமித்தார். நானும் அப்படியாகட்டுமென்று அந்தத் தேவனுடைய கட்டளைக்கு இயைந்தேன். ஆனதினாலே, நீங்களெனக்குப் பிரியமாகப் பிரஜாவிருத்தி செய்யுங்கள். ஆலசியமில்லாமல் லோகேசுவரனான விரிஞ்சனுடைய ஆக்கினை

யைப் பரிபாலனஞ் செய்யுங்கள்" என்று சொன்னார். பிரசேதசரும் தகப்பனுடைய வசனத்தை யங்கீகரித்துத் தகப்பனை நோக்கி, "ஐயா! நாங்கள் எந்தக் காரியஞ்செய்தால் பிரஜாபிவிர்த்தி செய்யத்தக்க சாமர்த்தியமுடையவர்களாவோம். அதை விளங்கச் சொல்லவேண்டும்" என்று கேட்க. பிராசீனபர்ஹி புத்திரர்களைப் பார்த்து "அபீஷ்டப் பலப்பிரதனான ஸ்ரீவிஷ்ணுவை யாராதித்துப் புருஷன் இஷ்டத்தைப் பெறுவானே யல்லாமல், வேறோ ருபாயத்தினாலே இஷ்டசித்தி பெற மாட்டான். இனி நான் வேறென்ன சொல்லவேண்டும். நீங்கள் இஷ்டம் சித்திக்க வேண்டு மென்று விரும்புவீர்களாகில் ஸ்ரீகோவிந்தனை யாராதியுங்கள். பிரஜாபிவிர்த்தி செய்யமாட்டுவீர்கள். புருஷனுக்குத் தர்மார்த்த காம மோக்ஷ மென்கிற சதுர்வித புருஷார்த்தங்களிலே அபிலாஷை யுண்டானால், ஆதியந்த ரகிதனும் பகவானுமான புருஷோத்தமனை யர்ச்சிக்கவேண்டும். ஆதி காலத்திலே பிரமா ஸ்ரீஜனார்த்தனனை ஆராதித்துத் தான் சிருட்டிக்குஞ் சாமர்த்தியத்தைப் பெற்றார். உங்களுக்கும் அச்சுதனை ஆராதிப்பதினாலே பிரஜாவிர்த்தி சாமர்த்திய முண்டாமென்று சொன்னான். அதைக் கேட்டு அந்தப் பிரசேதசர் பத்துப்பேரும் தகப்பனுடைய நியமனப்படி தவப்பண்ண நிச்சயஞ் செய்து கொண்டு சாகரத்திலே முழுகி சமாகித சித்தர்களாய், சர்வலோக சரண்யனும் ஜகத்பதியுமான ஸ்ரீமந் நாராயணனுடைய சரணாரவிந்தங்களில் மனங்களைச் சமர்ப்பித்து, பதினாயிரம் வருஷந் தவஞ்செய்துகொண்டு சகலாபீஷ்டங்களையுங் கொடுக்க வல்லவனான லக்ஷ்மீ வல்லபனை, மனோக்கியமான துதி வசனங்களினாலே துதித்தார்கள்.

இப்படி சொல்லக்கேட்டு மைத்திரேயர், முனி சிரேட்டரே! பிரசேதசர்கள் சமுத்திரத்திலே யிருந்து கொண்டு ஸ்ரீ விட்டுணு தேவனைத் தோத்திரஞ் செய்தார்களென்று சொன்னீரே, அந்தப் பரிசுத்தமான ஸ்தோத்திரத்தை விசதமாகத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கப் பராசரர் தம்முடைய சிஷியரை நோக்கி, ஓ பிராமணோத்தமரே! பக்தி பர

வசத்தினாலே தன்மயராய் சாகரஜலத்தில் நின்று கொண்டு பிரசேதஸனர்கள் செய்த ஸ்ரீவிஷ்ணு ஸ்துதியைச் சாவதானமாகக் கேளும் என்று சொல்லுகின்றார்.

* "சகலமான சப்த ஜாதங்களும் எங்கே சென்று நிலைபெறுமோ, அப்படிப்பட்ட சகல லோகங்களுக்கும் சிருட்டி சங்கார கர்த்தாவான பரம புருஷனுக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கின்றோம். சூரிய சந்திராதி சோதிக் கணங்களையும் பிரகாசிக்கப்பண்ணுகிற அப்பிராகிருத சோதிமயனும், உபமான ரகிதனும், சூட்சுமரூபனும், கால பரிச்சேதமில்லாதவனும், சேத பரிச்சேத மில்லாதவனும், சராசராத்மகமான ஜகத்துக்குக் காரணபூதனுமான ஸ்ரீ விட்டுணுவுக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கின்றோம். எவனுக்குப் பகல் முதல் உருவமாயும், இரவு இரண்டாம் உருவமாயும், சந்தி மூன்றும் உருவமாயும் இருக்குமோ, காலரூபியான அந்தப் பரமேசுவரனுக்குத் தண்டமிடுகின்றோம். எவன் அமிர்தமாகித் தினந்தோறும் தேவதைகளாலும் பிதுர்க்களாலும் உண்ணப்படுகின்றானோ, ஓஷதிகளைக்கொண்டு எல்லாவற்றிற்கும் சீவனாயிருக்கின்ற அந்தச் சந்திரரூபியான பகவானுக்குத் தண்டமிடுகின்றோம். எவன் உட்டிணமயமாகித் தன் நிஜகிரணங்களினாலே அந்தகாரத்தைப் போக்கி ஆகாசத்தைப் பிரகாசிக்கச் செய்துகொண்டு தாபத்திற்கும் சைத்தியத்திற்கும் ஜலத்திற்கும் காரணமா யிருக்கிறானோ, சூரியாத்மகனான அந்தப் பகவானுக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கின்றோம். எவன் கடினமான உருவமுள்ளவனாய் இவ்வுலகத்தை யெல்லாம் பரித்துக்கொண்டு சத்த பரிச ரூப ரச கந்தங்களுக்கு ஆசிரயமாய் விளங்கு

* சொற்கள் நிலைபெறுவது பொருளினிடத்திலே யாகையால் எல்லாச் சொற்களும் ஸ்ரீயப்பதியே பொருளென்றதாயிற்று. ஏனெனில் சொல்லானது பொருளை எந்த முகாந்தரத்தினாலே உணர்த்துகிறதோ அந்தக் குண முதலான சிறப்புகள் எம்பெருமானிடத்திலேயே நிறைந்தவைகளா யிருப்பதினாலும் எல்லாப் பொருளும் அவனுடைய சொரூபமாகவே இருப்பதினாலுமென அறிக. இதன் விவரணமே பின் சொல்லப்பட்டவைகள். ஸ்வாமியைச் சந்திர சூரியாதி ரூபங்களாய்ச் சொன்னது சொரூபத்தில் பேதமில்லாமையாலே யன்று. மற்றெதனாலென்றால் அவற்றையெல்லாம் சரீரமாகக் கொண்டு அவற்றுள்ளே நின்று அவற்றின் மூலமாய் அந்தந்தக் காரியங்களை நடத்துவதினாலென அறிக.

கிருனே, அந்த பூமிஸ்வரூபியான எம்பெருமானுக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கின்றோம். சுக்கிலமும் சோணிதமு மாகி உலகங்களுக்குக் காரணமாயிருக்கிற ஜலமென்பது யாதுண்டோ, பக்தாரக்ஷகனுடைய அந்த ஸ்வரூபத் துக்கு வந்தனஞ் செய்கின்றோம். எவன் சகல தேவதை களுக்கும் முகமாயிருந்து ஹவ்யத்தையும் பிதுர்க்களுக்கு முகமாயிருந்து கவ்யத்தையும் புஜிக்கிருனே அந்த அக் கினி ஸ்வரூபமான பரமாத்துமாவுக்குத் தண்டம் சமர்ப் பிக்கின்றோம். பிராணுபானுதி ரூபமாகச் சரீரங்களிலே யிருந்து எப்போதும் சுவாசம் விடுவது முதலான செய்கைகளைச் செய்கிறவனும் ஆகாசத்தினின்று முற் பன்னனுயு மிருக்கிற வாயுதேவதா ஸ்வரூபியான ஜக தீசுவரனுக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கின்றோம். எவன் சகல பூதங்களுக்கும் அவகாசங் கொடுத்துக்கொண்டு அநந்தமூர்த்தியாயும் சுத்தமாயுமிருக்கிற ஆகாசரூபியா யிருக்கிருனே, அந்த ஸ்வாமிக்குப் பிரணுமஞ் செய் கின்றோம். எவன் சகலேந்திரியங்களுக்கும் ஆசிரய மான சப்தாதி விஷயாத்மகனு யிருக்கிருனே, அப்படிப் பட்ட ஜகத் கர்த்தாவான ஸ்ரீ கிருட்டினனுக்குப் பிரணு மஞ் செய்கின்றோம். எவன் க்ஷரமும் அக்ஷரமுமான இந்திரிய ஸ்வரூபியாகிச் சத்தாதி விஷயங்களைக் கிரகித் துக்கொண்டு ஞானத்துக் காதாரமாக இருக்கிருனே, அந்தப் பிரணதார்த்திஹரனை பெருமானுக்குத் தண் டம் சமர்ப்பிக்கின்றோம். இந்திரியங்களினுலே கிர கிக்கப்பட்ட சத்தாதி விஷயங்களை ஆத்மா அறி வதற்குக் கருவியாய் நின்ற மனசு, புத்தி, அகங்காரம், சித்தம் என்று சொல்லப்பட்ட அந்தக்கரண ஸ்வரூபி யான சர்வேசுவரனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றோம். அளவில்லாதவனுன எவனிடத்திலே சகல பிரபஞ்சமும் இருக்கிறதோ, எவனிடத்திலிருந்து உண்டாயிற்றோ, எங்கே லயிக்கிறதோ, அந்தப் பிரகிருதி ரூபமுடையவ னுக்கு நமஸ்காரம் செய்கின்றோம். எவன் பிராகிருத மான சத்துவாதி குணங்களில்லாதே சுத்தனுகி யிருந் தும் பிரகிருதி சம்பந்தமான சத்துவாதி குணங்களுள் ளவனைப்போலே பிராந்தியினுலே தோன்றுகிருனே, அந்த ஜீவாத்துமரூபியான புருஷோத்தமனுக்குத் தண்

டம் சமர்ப்பிக்கின்ரேம். அறிவு சுருங்குவதும் விரிவதுமான விகாரமில்லாதவனும், பிறப்பற்றவனும், சுத்தனும், பிரகிருதி குண சம்பந்த மில்லாதவனும், பிரகிருதி புருஷர்களைக் காட்டிலும் மிகுந்த மேன்மையுள்ளவனுமாக இருக்கிற முத்தசீவன் எவனுண்டோ, அந்த ஸ்வரூபியாய் விளங்குகிற ஸ்ரீ விஷ்ணுதேவனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்ரேம். தீர்க்கமும் ஹ்ரஸ்வமும் ஸ்தூலமும் சூட்சுமமும் ரத்தமும் நீலமுமல்லாதே யிருப்பதாய், ஓட்டுதலும் சாயையும் தேகமும் அவயவங்களும் இல்லாததாய்த் துன்பமில்லாததாய், இடை வெளி யில்லாததாய், சத்த பரிச ரூப ரச கந்தங்களில்லாததாய், கண் மூக்கு காது முதலானவையும், வாக்கு பாணி பாதாதிகளும், அந்தக்காணமு மில்லாததாய், நாம கோத்திரங்களும் அன்ன பானுதிகளாலுண்டாகுஞ் சுகமும், தன்னிலும் வேருன தேஜசும் தனக்கொரு காரணமு மில்லாததாய், பயம் பிரம்ம நித்திரை ஜரை மரணம் முதலான குற்றங்க ளில்லாததாய் சஞ்சரித்தலில்லாததாய், ஒன்றினுல் மூடப் படாததாய், அமிர்தமயமாய், முன்னும் பின்னுமில்லாததாய், பரமேசுரத்துவாதி சகல கல்யாண குணங்க ளுடையதாய், யாவற்றுக்கும் ஆசிரயமாய், தனக்கோ ராசிரய மில்லாததாய், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததாய், கண்ணினுற் காணக்கூடாததாய், இப்படி யெல்லா விதத்திலும் மேலானதாய், பரம பிராப்பியமுமாம் விளங்குகிற அந்த ஸ்ரீ விஷ்ணுபகவானுடைய ஸ்வரூபத்துக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்ரேம்'' என் றிந்த விதமாகப் பிரசேதசர்கள், எம்பெருமானைத் துதி செய்துகொண்டு அங்கேயே மனம் பற்றினவர்களாய், மகார்ணவ ஜலத்திலே யிருந்து, பதினுயிரம் வருஷகாலந் தவஞ் செய்தார்கள். அப்பால் சட்குண ஐசுவரிய சம்பன்னனுன ஸ்ரீ ஹரி அவர்களிடத்தில் கிருபை கூர்ந்து அந்தச் சமுத்திர ஜலத்திலே பிரத்தியக்ஷமானுர்.

அப்போது அந்தப் பிரசேதசர்கள் மலர்ந்த நீலோற்பல இதழைப்போலே நீலச் சாயையுடனே பிரகாசிக்கிற திவ்விய தேகத்துடனேயும், கிரீட மகர குண்டலாதி திவ்வியாபரணங்களுடனேயும், சங்க சக்க

ராதி திவ்வியாயுதங்களுடனேயும், பக்ஷிராஜனான பெரிய திருவடியின் திருத்தோளி லேறிவந்து சேவைசாதித்த ஸ்ரீமந் நாராயணனைக் கண்களாரக் கண்டு சேவித்து, பக்தி பாரத்தினாலே தலை வணங்கி, தண்டப் பிரணாமங்கள் செய்து, கைகூப்பிக்கொண்டு நின்றார்கள். அனந்தனை பகவான் அவர்களைக்கடாக்ஷித்து, "ஓ பிரசேதசரே! உங்கள் தவத்துக்குச் சந்தோஷித்துப் பிரசன்னனானேன். உங்களுக்கு வேண்டும் வரங்களைக் கேளுங்கள் கொடுக்கிறேன்" என்று அருளிச்செய்ய, அவர்கள் மறுபடியும் வந்தனங்களைச் செய்து பிதாவினுடைய வசனப் பிரகாரம் பிரஜாவிர்த்தி யுண்டாக்க எங்களுக்குச் சாமர்த்திய முண்டாகும்படிக் கிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அந்தத் தேவதேவனும் அவர்கள் கேட்ட வரத்தைக் கொடுத்தருளி, அந்தர்த்தானமானான். பிரசேதசரும் ஸ்ரீ விஷ்ணுவினுடைய அனுக்கிரகத்தினாலே அபீஷ்ட வரம்பெற்றுக் கடலிலிருந்து தங்கள் இருக்கைபோய்ச் சேர்ந்தார்கள்.

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினைந்தாம் அத்தியாயம்

# கண்டு சரித்திரமும் தக்ஷ வமிசமும்

இவ்வாறு சொல்லிப் பராசரமுனீந்திரர் மேல் நடந்ததை யருளிச் செய்கின்றார்: கேளீர் மைத்திரேயரே! அந்தப் பிரசேதசர் சமுத்திர ஜலத்திலே முழுகித் தவஞ் செய்துகொண்டிருக்கையில், இவர்களுடைய பிதாவான பிராசீனபர்ஹி, நாரதமுனிவனுடைய உபதேசம் பெற்று, இராச்சியத்தைத் துறந்து யோக நிட்டை புரியலாயினர். அதனாலே அராசகமாகிச் சனங்கள் பயிர்த்தொழிலைக் கைவிட்டார்கள். ஆகையால், பூமியிலே யுண்டான விருக்ஷங்கள் கிளைகளதிகமாக நெருங்கிப் பூமியையு மாகாசத்தையும் மூடிக்கொண்டிருந்தன. அதனால் காற்றும் வீசமாட்டாமற்

போயிற்று. இப்படி மரங்களெல்லாம் அதியுன்னதமாய் வளர்ந்து ஆகாசத்தை அளாவியிருந்தபடியினாலே பதினாயிரம் வருஷ காலம் காற்றுச் சஞ்சரிக்க இடமில்லாமலிருந்தது. அதனால் சகல ஜனங்களும் அசையவு மாட்டாமல் நாசமடைந்தார்கள். பின்பு பிரசேதசர்கள் சலத்தினின்றும் வெளிப்பட்டு வந்து, மரங்களுலக மெல்லாம் வெளியில்லாதபடி வளர்ந்து மூடிக் கொண்டதினாலே மிகுதியாகச் ஜனசமூகம் அழிவுற்றது பார்த்துக் கோபம் கொண்டவர்களாய், தம்முடைய முகங்களிலிருந்து வாயுவையும் அக்கினியையு முண்டாக்கினார்கள். அந்தப் பெருங்காற்று வந்து மரங்களை யெல்லாம் வேரோடே வீழ்த்தித்தள்ள, காலாக்கினிக்குச் சமானமான அந்த அக்கினி அவைகளை எரிக்க, மரங்களின்தொகுதி ஏககாலத்திலே நாசமாகத் தலைப்பட்டன. இவ்விதமாய் விருட்சங்கள் அங்கங்கே ஒன்றிரண்டே நின்று மற்றவை யெல்லாம் நாச மடைவதைக் கண்டு, ஓஷதிகளுக்கு அதிபதியான சந்திரன், பிரசேதச ரிடத்திற்கு வந்து, "இராஜகுமாரர்களே!" நீங்கள் கோபத்தை விட்டு என் வார்த்தையைக் கேளுங்கள்; விருக்ஷங்களுக்கு முங்களுக்குஞ் சந்தி செய்து சிநேகத்தை யுண்டாக்குகின்றேன். விருக்ஷங்களுக் கெல்லாம் மகளான மாரிஷை யென்ற கன்னியை வரும் காரியத்தை யறிந்து நான் கிரணங்களினாலே வளர்த்து வைத்திருக்கின்றேன். ஜகன் மோகனமான ரூபலாவணிய சௌந்தரியங்களாலே மிகுந்து ரத்தினம் போலே விளங்காநின்ற அந்தப் பெண்ணை உங்களுக்குப் பாரியையாய்க் கொடுக்கின்றேன். அவள் வமிசத்தை அபிவிர்த்தி செய்யத் தக்கவள். அந்தப் பெண்ணிடத்திலே உங்களுடைய தேஜசின் பாதியினாலும் என்னுடைய தேஜசின் பாதியினாலும் மகா வித்துவானான தட்சனென்கிற பிரசாபதி பிறந்து, அக்கினி சமானமான தேஜசுள்ளவனாய், வெகுவாய்ப் பிரசாவிர்த்தி செய்வான். அந்தக் கன்னிகையின் உற்பத்திக் கிரமம் தெரியச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

"பூர்வத்திலே வேதசாஸ்திரங்கள் நன்று யறிந்தவரான கண்டுவென்ற மகாரிஷி, இரம்மியமான கோமதீ

நதி தீரத்திலே மிகுந்த தவத்தைச் செய்துகொண்டிருந்தான். இந்திரன் அவனுடைய தவத்திற்கு விக்கினஞ் செய்ய வேண்டுமென்று நினைத்து பிரமிலோசையென்ற அப்சரசை அனுப்பினன். அந்தப் பொற்கொடியும் மகா ரிஷியின் ஆச்சிரமத்துக்கு வந்து மனோகர லாவண்ணிய விலாசங்களினாலே அவனை மோகிக்கப் பண்ணினாள். அந்த மகா ரிஷியும் அவளுடைய விலாசங்களினாலே மனங் கலங்கினவனாகி, அந்த மங்கையுடன் கூடி, மந்தர பர்வதத்தின் நடுத்துரோணியிலே நூறுவருஷகாலம் இரவு பகலென்பதறியாமல் கிரீடித்துக் கொண்டிருந்தான். பின்பு அந்தப் பெண்ணரசு முனிவனைப் பார்த்து, பிராமணோத்தமரே! நானினித் தேவலோகத்துக்குப் போகின்றேன், என்னிடத்தில் பிரசன்னராய் விடைகொடுக்க வேண்டும்" என்றாள். அந்த முனிவன் அவளைப் பிரியமாட்டாமல், 'நல்லாய்! நீ இன்னஞ் சிலநாளிங்கிருக்க வேண்டும்' என்று பிரார்த்தித்தார். அதனாலே அத் தெய்வப்பெண் மறுபடியும் நூறு வருஷம் அந்த முனிக்கு இஷ்டபோகங்களினாலே திருப்தி யுண்டாக்கிப் பிறகு, 'மகாத்மாவே! இனி நான் சுரலோகத்துக்குப் போகிறேன், உத்தரவு கொடும்' என்றதற்கு, அந்தத் தபோதனன் அம்மடந்தையைப் பார்த்து 'அடி கட்டழகி! போகலாமிரு' என்று சொன்னான். அப் பெண்மணியுந் திரும்பி நூறுவருஷத்திற்கும் மேலான காலம்வரையில் அங்கே யிருந்து, ஒருநாள் அவனைநோக்கி அன்பாய்ப் புன்னகை கொண்டு, 'முனிவனே! நான், இனியாகிலும் தேவலோகம்போக அனுக்கிரகம் செய்ய வேண்டும்' என்றாள். அதைக்கேட்டு அம்முனிவன் காமபரவசனாய் அத்தடங் கண்ணியைக் கெட்டியாய்க் கட்டிக் கொண்டு 'அழகிய புருவத்தினாய்! இன்னும் ஒரு க்ஷணமாத்திரம் இரு, போனாயாகில் நெடுங்காலம் வரமாட்டாயன்றோ' என்று வேண்டிக்கொண்டான். அந்தப் பெண்ணழகி முனிவன் சபிப்பானென்று பயந்து, சிறிதுநாள் குறைய இருநூறுவருஷம் அவனோடு கூடியிருந்து, அப்பால் அமராவதிக்குப் போக வேண்டுமென்று அம் மகாரிஷியினிடத்தில் விடைகேட்க, அவனுங் காமபோகத்

திலே திருப்தி யடையாதவனாய், இன்னமுஞ் சிலநாளி ருக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். இப்படி யவள் கேட்கக் கேட்க 'சிலநாளிரு, சிலநாளிரு' என்று சொல் லிக் கொண்டே வந்தான். அக் கமலாக்ஷியும் சாப பயத் தினாலும் தாக்ஷிணியத்தினாலும் அவனுடைய அனு நயத்தினாலும் பிரதிவசனஞ் சொல்லப் பயப்பட்டுத் திரும்பியும் அநேககால மங்கேதானேயிருக்க, மகாரிஷி மதனபரவசனாய் ஒருநாளுக்கொருநாள் மோக மதிகமாய் அனுராக விசேஷத்தினாலே அந்த ஸ்திரீயைக்கூடி இஷ்டபோகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தான். இப்படி யிருக்கையில் அம்முனிவர் ஒருநாள் சடுதியாக வெழுந்திருந்து பன்னக சாலையை விட்டுப் புறப்பட்டுப் போக, அவரைப்பார்த்து அவ் அமரவனிதை, ஓ முனீந் திரரே! சடுதியாக எழுந்து எங்கே போகிறீர்' என்று கேட்டாள். அதற்கு அம்மகாரிஷி 'அடி கமலாட்சி! சாயங்காலம் வந்ததினாலே சந்தியா வந்தனஞ் செய்வ தற்குப் போகிறேன், செய்யா போனால் மகத்தான பிரத் தியவாயமுண்டாகும்' என்று சொன்னார். அதைக்கேட்டு அந்த அரவிந்த கந்தி, தாமரையொத்த தன் திருமுகத் தில் மந்தகாச முடையவளாகி ரிஷியைப்பார்த்துச் சொல் லுகிறாள். 'சர்வ தருமக்கியனே! உமக்குச் சந்தியாவந் தன காலம் இப்போதுதானா வந்தது? அனேக நாறு வருடங்கள் உமக்கொரு நாளானவை யாருக்குத்தான் ஆச்சரியத்தைச் செய்யமாட்டாது? பிறரிடத்திற் சொல் லிப்பாரும்' என்று சொல்லக்கேட்டு, அந்தரிஷி பெண் ணணங்கைப்பார்த்து, பெண்ணே! நீ பிராதக் காலத் திலே நதி தீரத்திலிருந்துவந்தாய்; அப்போது உன் னைப்பார்த்து ஆசிரமத்துக்குக் கூட்டிக்கொண்டு வந் தேன்; இப்போது தின அந்தமான சாயங்கால மான படியால் சந்தியாவந்தனஞ் செய்யப்போகின்றேன்; இத ற்குப் பரிகாசமேன் செய்கிறாய்; உண்மையாகச் சொல்' என்று கேட்டார். அதற்குப் பிரமிலோசை சொல்லுகி றாள், "பிராமணோத்தமரே! நான் பிராதக்காலத்திலே வந் தது உண்மைதான். ஆனாலும் அஃது இன்றைய பிரா தக்கால மன்று. அதன் பிறகே அனேக சத சம்வச்சரங் கள் ஆயின என்று சொன்னதைக்கேட்டு, அந்தப் பிரா

மணன் பயப்பட்டு, நடுநடுங்கி தெய்வப்பெண்ணை நோக்கி 'அடிபதுமாட்சி! நான் உன்னுடன் கூடி யெத்தனை கால மனுபவித்துக் கொண்டிருந்தேன், சொல்லவேண்டும்' என்றுகேட்க, அந்த வதூமணி மகரிஷியைப் பார்த்து 'முனீந்திரரே! நான்வந்து தொள்ளாயிரத்தேழுவருஷ மும் ஆறுமாதமும்மூன்று நாளும் ஆயின' என்றுசொன்னாள். அதைக்கேட்டு அத்தவசி அந்தத் தேவஸ்திரீயை ப்பார்த்து 'இது நிச்சயமோ பரியாசமோ உண்மையாகச் சொல்லு, நான் உன்னுடனே கூடியிருந்தது ஒரு தினமென்று நினைக்கிறேன், என்று சொல்லக்கேட்டுப் பிரமலோசை சொல்லுகிருள்: 'பிரம ரிஷிசிரேஷ்டரான வும்மிடத்திலே அசத்தியமேன் சொல்லுவேன்? அதுவுமல்லாமல் தர்ம மார்க்கத்தை அனுசரித்துக் கேட்டதற்கு நான் அசத்தியம் சொல்லப்போமோ? ஆதலால் நான் சொன்னது யதார்த்தந்தான்' என்று இப்படிச் சொன்னதைக் கேட்டு அந்த விப்பிரன் மனதிலே அத்தியந்த சந்தாபத்தை யடைந்து, தன்னைத்தானே நிந்தித்துக் கொண்டு, 'ஐயோ! என் தவம் நஷ்டமாயிற்றே; என்ன செய்வேன்; பிரம வித்துக்களான பிராமணர்களுக்குத் தனமான வேதாத்தியயனமும் வியர்த்தமாயிற்றே; என் விவேகம் அபகரிக்கப்பட்டுப் போயிற்றே; என்னை வஞ்சனை செய்வதற்காக எவனே இந்த வனிதையை நிருமித்து அனுப்பினன்; க்ஷுத்து, தாகம், சோகம், மோகம், வார்த்திக்கியம், மரணம் ஆகிற ஷடூர்மி என்று சொல்லப்பட்ட இந்த ஆறு விகாரங்களு மில்லாதே நின்மலமாயிருக்கிற பரப்பிரமத்தை யறியும் பொருட்டு மனோநிக்கிரகஞ் செய்ய நியமங் கொண்டிருந்த என் விவேகத்தை யபகரித்து, என்னை யோகப் பிரஷ்டனுகச் செய்ய காம மென்கிற மகாபூதத்தைத் தகிக்க வேண்டும்; சாந்திராயணுதி விரதங்களும் வேதாப்பியாசமும் மற்றுமுண்டான மோட்சகாரணங்களான புண்ணியங்களும் நரகத் துவார மார்க்கமான துஷ்ட சகவாசத்தினுலே பாழாக்கப்பட்டன' என்று, இங்ஙனம் அனேகவிதமாய்த் தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டு, அந்த மகீசுரோத்தமன் அந்தத் தேவ

நந்தனைப் பார்த்துச் சொல்லுகிறான். 'அடி பாதகி! நீ இனிமேலாகிலும் உன் பிரியப்படிப் போய்விடு. நீ வந்து நடை உடை பாவனை விலாசத்தினாலே என் சித்தத்தைக் கலக்கி, இந்திரனுக்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்தாய்; இப்படிப்பட்ட வுன்னை என்னுடைய கோபாக்கினிச் சுவாலைகளினாலே பஸ்மஞ் செய்யவேண்டும்; ஆனாலும் சற்புருஷருக்கெல்லாம் ஏழடி கூட நடந்தவர்களும் சிநேகிதர்கள் ஆவார்கள்; ஆகையினாலே இத்தனை நாளு முன்னுடனே கூடி யிருந்ததை நினைத்துப் பொறுத்தேன்; நிசமாக விசாரித்தால் உன்மேல் குறை சொல்லவேண்டியதில்லை; நான் இந்திரியங்களைச் சயிக்கமாட்டாதே மோகபரவசனானதினாலே என்மேலே தான் குற்றமிருக்கின்றது. புரந்தரனுக்குப் பிரீதியாக என்னுடைய தபோவிக்னஞ் செய்ய வல்ல உன்னுடைய மகா மோகத்திற்கு இருப்பிடமான மாயையைத் தகிக்கவேண்டும்' என்று இப்படிச் சினத்தின் வயப்பட்டவனை முனிசிரேஷ்டன் கடிய வசனங்கள் சொல்லுகிறபோது, அப்சரப்பெண் அச்சங் குடிகொண்ட உள்ளத்தினளாய் நடுநடுங்கித் தன்னுடல் வியர்த்துக் கவலைப்பட்டிருந்தாள். மாமுனீந்திரன் வியர்த்து மயிர் சிலித்து நடுங்கிக் கொடிபோல் நிற்கிற மான்விழியினளைப் பார்த்துக் குரோத மிகுந்து அக்கினிபோற் சொலித்துக்கொண்டு, 'போ போ' என்று அதட்ட, அப் பிரமலோசை அம் முனிவனுடைய கோப வசனங்களுக்குப் பயந்து, அந்த ஆச்சிரமத்தை விட்டுப் புறப்பட்டு, ஆகாசமார்க்கத்திலே போகிறபோது, தன் சரீரத்திலே உண்டானவியர்வையைத் தருக்களினுடைய நுனியி லிருந்த தளிர்களினாலே துடைத்து, விருட்சங்களிலே போட்டு மரத்தின்மேல் மரமாகத் தாண்டிப் போனாள்.

மகாரிஷியினாலே பிரமலோசையிடத்தில் உண்டான கர்ப்பமானது அவளுடைய ரோம கூபங்களினின்றும் வியர்வையாகக் கசிந்து வந்ததனால், அந்தக் கர்ப்பத்தை விருக்ஷங்கள் தரித்தன. பின்பு அவ்வியர்வை எல்லாம் வாயுவினாலே கூட்டப்பட்டு ஒன்றாய்த் திரண்டு நின்றன. அவற்றை நான் கிரணங்களினாலே வளர்த்து வந்தேன்.

இப்படி அந்தக் கர்ப்பம் நாளுக்குநாள் வளர்ந்துவர அதிலிருந்து மனோஹர லாவண்ணிய சௌந்தரியம் உள்ள ஒரு கன்னிகை யுதித்தாள். அவள் மாரிஷை என்கிற நாமதேய முடையவளாய் வளர்ந்து கொண்டிருக்கிறாள். இந்த விருக்ஷங்கள் இந்தக் கன்னிகையை உங்களுக்குக் கொடுக்கிறதினாலே நீங்கள் கோபத்தை விட்டுவிடுங்கள். இந்த மாரிஷை என்கிற கன்னிகை, கண்டுமகாரிஷி பிரமலோசையினிடத்தில் விட்ட வீரியத்தினாலே தருக்களிலே தரித்து வாயுவும் நானும் உதவி செய்ய வளர்ந்ததனால், கண்டுமுனிக்கும் மரங்களுக்கும் வாயுவுக்கும் எனக்கும் பிரமலோசைக்கும் மகளாயிருக்கிறாள். அஃது அப்படி யிருக்கட்டும்; அப்பால் கண்டு மகாரிஷி பிரமலோசை போனபிறகு தவம் ஈனமடைந்ததற்காக மனஸ்தாபத்தையடைந்து, ஸ்ரீ விஷ்ணுதேவனுக்கு நிவாஸஸ்தானமான ஸ்ரீபுருஷோத்தமமென்று சொல்லப்படும் பர்வதத்துக்கு வந்து, அங்கே ஏகாக்கிர சித்தனாய் ஸ்ரீஹரியை ஆராதனஞ் செய்துகொண்டு ஊர்த்துவப் பாகுவாய் மகா நிஷ்டையிலிருந்து, சமாகித சித்தனாய்ப் பிரம பாரஸ்துதியைச் சேவித்து வந்தான். என்று சந்திரன் சொல்லக்கேட்டுப் பிரசேதசர்கள், சந்திரனைப் பார்த்து, "மகாத்மாவே! கண்டுமகாரிஷி ஸ்ரீமந் நாராயணன் திருவுள முகக்கும்படிச் செய்த அப் பிரம பாரஸ்துதியை அறிய விரும்புகின்றோம். விளக்கமாகச் சொல்லவேண்டும்" என்று கேட்க, சந்திரன் சொல்லுகிறான்:—

"முடிவில்லாததும் தாண்டக்கூடாததும் காமக் குரோத மோகாதி திமி திமிங்கலங்களாலே பயங்கரமுமான சமுசார சாகரத்தைக் கடப்பதற்கு ஒரு தெப்பம் போலிருப்பவனும், அதற்குப் பரமமான முடிவாயிருப்பவனும், உபதேச பரம்பரையினாலே அறியப்பட்டவனும், அளவற்ற சத்தியுள்ளவனும், தேசகால வஸ்துக்களினாலே பரிச்சேதிக்க ஒண்ணாதவனும், நிறைவுபெறாத கருமாதிகளைத் தன் திருநாம ஸங்கீர்த்தனத்தினாலே நிறைவேற்றுகிறவனும், பிரம்மாதிகளான சகல ஆத்மகோடிகளுக்கும் மேற்பட்டவனாய்க்

காரணமாய் நிரதிசய ஆனந்தரூபனாய் இருக்கிறவனும், பிரமாதிகளைப்போலே கால வசத்திலே யகப்படாமல் சகல சத்திகளோடு கூடி நித்தியமாய்த் தேசோமயமாய் விளங்குகிற திவ்விய மங்கள விக்கிரகமுடையவனாய் முக்கிய பிரயோஜனமான ஆனந்த ஸ்வரூபியாய் இருப்பவனும், பிரதானத்துக்கு மூடிவிடமாயும் வேத வைதிகங்களைப் பரிபாலிப்பவனாயும், பிரதானமும் சீவனும் பிரளயகாலத்திலே லயமடைகிற ஸ்தானமாயும், எல்லாவற்றிற்கும் கலப்புண்டாகாமலிருக்கும்படியாய் ஏற்பட்ட அணையாயும், முத்தியடைந்தவர்களுக்கும் மேற்பட்டவனென்று சொல்லும்படியான காரணத்துவ சேஷித்துவங்களை யுடையவனாயும், பிரபஞ்சத்துக்குப் பரியவசானமான காலத்துக்கும் பரியவசான ஸ்தானமாயும், ஆகாச முதலான விபுத் திரவியங்களையும் நிறைப்பவனாயும், சகலமான இரக்ஷகர்களுக்கும் இரக்ஷகனாயு மிருக்கிற ஸ்ரீ விஷ்ணு தேவனே, ஜகத்துக்குக் காரணமான விராட்புருஷனும், அவனுக்குக் காரணமான அகங்காரமும், அதற்குக் காரணமான மகத்தத்துவமும், அதற்குக் காரணமான பிரகிருதியும், இத் தத்துவங்களின் முக்கிய காரியங்களுமாகி, காரிய காரண ரூபமாகக் காணப்பட்டுக்கொண்டு, சுவாபாவிகங்களும் அனந்தங்களுமான ஞானபல ஐசுவரிய வீரிய சத்தி தேஜ சவுசீலிய வாச்சல்லிய சௌரிய தைரியாதி சகல கலியாண குணங்களுக்கும் ஆசிரயனாகிக் கிரியா சொரூபங்களாலேயும் கர்த்துரு சொரூபங்களாலேயும் சேதனா சேதனங்களையெல்லாம் இரட்சித்து வருகிறான். வேதங்களுக்கு அதிபதியும், வேதவேதாந்தங்களினாலே அறியப்படுகிறவனும், வேதங்களும் வேதாந்தங்களும் மற்றுமுள்ள சமஸ்த சாஸ்திரங்களும் அந்த ஸ்ரீ விஷ்ணுவே யல்லாமல் வேறில்லை. சாஸ்திர சென்னியம் விவேக சென்னியமென்று சொல்லப்பட்ட இரண்டுவித ஞானமும், முதல் வேதபிரவர்த்தகனான பிரமாவும், ஸ்மிருதி பிரவர்த்தகரான மனு முதலானாரும், இந்த அச்சுதனே. அபக்ஷயாதி தோஷங்களை யடையாமல் ஜனன ரகிதமும், அட்சரமும், நித்தியமுமான பரப்பிரமம் அந்த

பதின்மூன்று பெண்களையும், சந்திரனுக்கு காலத்தை நிர்ணயிக்கும் சமர்த்தர்களான இருபத்தேழு பெண்களை யுங் கொடுத்தான். அந்தப் பெண்களினிடத்திலே தேவ தைத்திய தானவ புசங்க கந்தர்வ அச்சரோகணங்களும் தேவர்களும் ஜனித்தார்கள்.

மயித்திரேயரே! அது முதலாகத்தான் பிரஜைகள் ஸ்திரீ புருஷ சங்கமத்தினாலே ஜனித்து வருகின்றார் கள். அதற்கு முற்பட்ட காலத்திலே தவம் மிகுந்த மகாத் மாக்கள் தரிசன பரிசன சங்கற்பங்களினாலே சந்தானங் களை யுண்டாக்கி வந்தார்கள் என்று சொல்ல, மயித் திரேயர் ஸ்ரீபராசர முனியைப்பார்த்து, முனீந்திரரே! பூர்வத்திலே தட்சன் பிரமாவினுடைய வலது பாதத் தின் கட்டைவிரலிலே ஜனித்தானென்று கேட்டிருந் தேனே. இப்போது பிரசேதசர்களாலே ஜனித்தா னென்று சொல்லுகிறீர். இந்த விஷயம் சந்தேகமா யிருக்கிறது. சந்திரனுக்குப்பாட்டனை தட்சன் திரும்பி அவனுக்கு எப்படி மாமனானான் என்றுகேட்க, ஸ்ரீபரா சரர் அருளிச் செய்கின்றார்.

உத்தமனே! சகல பூதங்களுக்கு முற்பத்தி நாசங் கள் நித்தியமானதினாலே, திவ்வியக் கியானமுடையவர் களான முநீந்திரர்களுக்கு இவ்வர்த்தத்தில் சந்தேகம் உண்டாவதுமில்லை. அவர்கள் மயங்குவதுமில்லை. தக்ஷன் முதலான சகல தேவ ரிஷிகணங்களும் யுகந் தோறும் பிறந்து லயத்தை யடைந்து வருவார்கள். ஆகையால் சந்தேகப்பட வேண்டியதில்லை. பூர்வகாலத் தில் வயதைப்பற்றிப் பெரியவன் சிறியவன் என்ற ஏற் பாடுகளு மில்லை. தவத்தினாலேயும் ஞானத்தினாலேயும் அதிகமானவர்களே மூத்தவர் என; மயித்திரேயர் "பிரம ரிஷி சிரேட்டரே! தேவ தானவ கந்தருவ பன்னக ராக்ஷசாதிகளுடைய வுற்பத்திக்கிரமம் சவிஸ்தாரமாகச் சொல்லி யருளவேண்டு மென்று கேட்க ஸ்ரீபராசரர் சொல்லுகின்றார்:

கமலாசனனுடைய நியோகத்தினாலே முன் தக்ஷன் தேவரிஷி கந்தர்வ அசுர பன்னகாதி பூதங்களைத் தன் சங்கற்ப மாத்திரத்தினாலே சிருஷ்டித்தான். அவைகள் அபிவிர்த்தி யாகாதே நசித்துப் போகக்கண்டு, அவன்

திரும்பியும் பிரஜா சிருட்டி செய்வதற்காக ஆலோசித்து, ஸ்திரீ சங்கமத்தினாலே பிரஜைகளைச் சிருட்டிக்க வேண்டுமென்று யத்தனஞ் செய்து, வீரணப் பிரசாபதிக்கு மகளான அசிக்கினி யென்கிறவளைப் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டு, அவளிடத்திலே ஐயாயிரம் பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் அரியசுவர்கள் என்ற நாமதேயத்தினாலே பிரசித்தராகி, பிரசாவிருத்தி செய்ய யத்தனித்திருந்தார்கள். அப்படியிருக்கிற அவசரத்திலே பிரிய வசனம் பேசக்கற்ற நாரதமுனிவர், அவர்களிடத்திற்கு வந்து சொல்லுகின்றார்: "அரியசுவர்களே! பிரஜாசிருட்டி செய்ய நினைத்த நீங்கள் ஒரு காரியத்தை முன்னதாகச் செய்யவேண்டும். அஃதாவது பூமியினுடைய விஸ்தாரமும் தணிவும் உன்னதமும் அறியவேண்டும். நீங்கள் பாலியர்களாகையால் அறிய மாட்டீர்களே. இப்படியானால் நீங்கள் பிரஜைகளைச் சிருட்டிக்கிறது எப்படி? தடையில்லாமல் எங்குஞ் செல்ல வல்லவர்களான நீங்கள் பூமியின் உயரமும் அதோபாகமும் பாரிசமுமான பூமியின் அளவை ஏன் அறியாமலிருக்கிறீர்கள்?" என்று சொல்ல, அரியசுவர்கள் "பூமிப் பரிமாணத்தை யறிந்து வருகிறோம்" என்று நான்கு திக்கிலும்போய்ச் சமுத்திரத்திலே போன நதிகளைப்போலே இதுவரையிலும் திரும்பி வராமலே இருக்கின்றார்கள். இப்படி அரியசுவர்கள் நாசமடைந்ததை பிராசேதசனான தட்சன் கேட்டுத் திரும்பியும் வீரணபுத்திரியான அசிக்கினியினிடத்திலே ஆயிர மக்களைப்பெற்றான். அவர்கள் சபளாசுவர்களென்ற பெயருடையவர்களாய்ப் பிரஜாசிருட்டி செய்ய நினைத்திருக்கிற அவசரத்திலே நாரதர் வந்து முன் சொன்னதுபோலே அவர்களோடு சொன்னார். அவர்கள் "நாரதர் சொன்னது சரிதான்" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு தங்களுடைய சகோதரர்களான அரியசுவர்கள்போன மார்க்கத்திலே போய்ப் பூமிப்பரிமாணத்தை யறிந்து வந்து பின்பு பிரசைகளை சிருட்டிப்போமென்று நினைத்து, முதற்போனவர்கள் போன மார்க்கத்திலே போய்ச் சாகரங்களிலே புகுந்த நதிகளைப்போலே இதுவரையிலுந் திரும்பி வராதே

போனார்கள். அது முதலாகத் தூரதேசஞ்சென்ற சகோதரனைத் தேடிக்கொண்டு ஒருவன்போனால் நாசமடைவான்; ஆனதினாலே பிராக்கியனானவன் அப்படி செய்யலாகாது.

அப்பால் தக்ஷன் சபளாசுவர்களும் நாசமடைந்தது கேட்டு மனதில் கோபமுண்டவனாகி "நீ எங்கும் நிலைபெறாமல் திரிகிறவனாய்ப் போகக்கடவாய்" என்று நாரதனைச் சபித்தான். திரும்பியும் பிரஜா சிருட்டி செய்ய நினைத்து, அசிக்கினியி னிடத்திலே அறுபது பெண்களைப் பெற்றான். அவர்களிலே தருமனுக்குப் பத்துப்பேரையும், காசிபனுக்குப் பதின்மூன்று பேரையும், சந்திரனுக்கு இருபத்தேழுபேரையும், அரிஷ்டநேமிக்கு நாலுபேரையும், வெகுபுத்திரனுக்கு இரண்டு பேரையும், அங்கிரசுக்கு இரண்டுபேரையும், பிருசாசுவனுக்கு இரண்டு பேரையுமாகக் கொடுத்தான். முதல் பத்துப்பெண்களாகிய அருந்ததி, வசு, ஜாமி, லங்கை, பானு, மருத்வதி, சங்கலப்பை, முகூர்த்தை, சாத்தியை, விசுவை என்று சொல்லப்படும் கன்னிகைகளைத் தருமன் விவாகம் செய்துகொண்டு விசுவை என்கிறவளிடத்தில் விசுவதேவதைகளையும், சாத்தியையினிடத்தில் சாத்தியர்களையும், மருத்வதியினிடத்தில் மருத்வந்தர்களையும், வசுவினிடத்தில் வசுக்களையும், முகூர்த்தையிடத்திலே முகூர்த்தங்களையும், பானுவினிடத்திலே பானுக்களையும், லங்கையென்கிறவ ளிடத்திலே சுகோஷனையும், ஜாமியினிடத்திலே நாகவீதியென்கிற திவ்ய மார்க்க அபிமானி தேவதையையும், அருந்ததியினிடத்தில் பூமியைச் சேர்ந்த வஸ்துக்கள் முழுமையையும், சங்கலப்பையி னிடத்திலே எல்லாவற்றையும் பற்றின சங்கலப்பனென்கிறவனையும் பெற்றான்.

அவர்களில் அபாரமான பலமும் தேசசுமுடையவர்களாய் விளங்குகின்ற அக்கினி முதலான வசுக்களுடைய வமிச விஸ்தாரத்தை விசதமாகச் சொல்லுகின்றேன் கேளும். ஆபன், துருவன், சோமன், தருமன், அனிலன், அனலன், பிரத்தியூஷன், பிரபாசன், என்னு நாமதேயமுடைய வசுக்கள் எட்டுப்பேர். அவர்களுக்

குள்ளே ஆபனுக்கு, வைவஸ்தப்த்தன் சிரமன் சிராந்தன் த்வனி என்கிற பிள்ளைகளுண்டானார்கள். துருவனுக்கு, சகல லோகங்களையுஞ் செலுத்துகிறவனான காலன் உண்டானான். சோமனுக்கு, வர்ச்சனென்கிற தனயனுண்டானான். அவனாலேதான் சகல ஜனங்களுக்கும் வர்ச்சஸ் என்கிற ஒருவித பிரகாச முண்டாகின்றது. தருமனுக்கு, மனோகரை யென்கிறவளிடத்தில் திரவிணன் உதவகன் சிசிரன் பிராணன் ரமணன் என்கிற குமாரர் உண்டானார்கள். அனிலனுக்குச் சிவை யென்கிற ஸ்திரீயினிடத்தில், புரோவசன் அவிக்கியாதகதி என்கிற இரண்டு புத்திரர் உண்டானார்கள். * அனலனுக்கு, நாணற் புதரிலே குமாரனென்று சொல்லப்படுகிற சுப்பிரமணியன் உண்டானான். அவனுடைய முதுகிலிருந்து சாகன், விசாகன், நைகமேஷன் என்கிற மூன்று பிள்ளைகளுதித்தார்கள். அந்தச் சுப்பிரமணியன் கிருத்திகைகளின் ஸ்தன்னியபானஞ் செய்ததினாலே அவர்களுக்குப் பிள்ளையாகிக் கார்த்திகேய னென்கிற பெயரை யடைந்தான். பிரத்தியூஷனுக்குத் தேவல னென்கிற மகாரிஷி ஜனித்தான். அவனுக்குப் பொறுமை யுள்ளவர்களாயும் மகா புத்திசாலிகளாயுமுள்ள இரண்டு மக்களுண்டானார்கள். அவர்களுள் ஒருவன் பிரகஸ்பதி. அந்தப் பிரகஸ்பதிக்குச் சகோதரியான ஒரு பெண்பிள்ளை யோகசித்தி யுள்ளவளாய் விரக்தியடைந்தவளாகிப் பிரமசரியத்தோடு உலகமெங்கும் சஞ்சாரம் பண்ணிக்கொண்டிருந்தாள். பின்பு அவள் வசுக்களில் எட்டாவனான பிரபாசனுக்குப் பத்தினியாகி, விசுவகர்மாவைப் பெற்றாள். அவன் விசித்திரங்களான அநேக சிற்ப கர்மங்களை யறிந்தவனாய்த் தேவதைகளுக்குத் தச்சனாகி, அநேக திவ்வியாபரணங்களையும் விமானாதிகளையும் நிருமித்தான். அவன் செய்த சிற்பங்களில் சிலவற்றை யறிந்துதான் பூலோகத்திலுள்ள ஜனங்கள் வேலைசெய்து பிழைக்கிறார்கள்.

* அனலன் என்றால் அக்கினி. ருத்திரவீரியத்தை அக்கினி கைக்கொண்டு கங்கையின் வழியாய் நாணற் புதரில் விட்டதனால், சுப்பிரமணியனை அக்கினி புத்திரன் என்றது. சாகன் முதலானவர்களை சுப்பிரமணியனுடைய தம்பிகளென்றுஞ் சொல்வார்கள்.

மேலும் அந்தப் பெண்ணரசினிடத்தில் * அஜைகபாத், அகிர்ப்புத்தினியன், துவஷ்டா, உருத்திரன் என்கிற நான்கு குமாரர் பிறந்தார்கள். அவர்களுள் துவஷ்டாவுக்கு விசுவரூபனென்கிற மகா தவசியான புத்திரன் பிறந்தான். மகா புத்திசாலியான உருத்திரனுடைய அமிசமாய், அரண் பகுருபன் திரியம்பகன் விருஷாகபி சம்பு கபர்த்தி ரைவதன் மிருகவியாதன் சர்வன் கபாலி என்கிற பதினொருவர் பிறந்து, ருத்திரர் என்கிற பேரை யடைந்து, திரிலோகாதிபதிகளாய் விளங்குகிறார்கள். இப்படி இவர்களிலிருந்து அளவற்ற தேஜசுடையவர்களான நூறு பிள்ளைக ளுதித்தார்கள்.

அது அப்படியிருக்கக் காசிபருக்குப் பாரியைகளான அதிதி, திதி, தனு, அரிஷ்டை, சுரசை, கசை, சுரபி, விநதை, தாம்பிரை, குரோதவசை, இளை, கத்துரு, முனி என்று நாமதேயமுடைய பதின்மூன்று பேர்களுள், அதிதி என்பவளுக்கு, பூர்வத்திலே சாட்சுஷமனுவந்தரத்திலே துஷிதர் என்று சொல்லப்பட்ட பன்னிரண்டு தேவதைகள், வைவச்சுத மனுவந்தரம் வரும்போது நாமெல்லாரும் அதிதி கர்ப்பத்திலே ஜனிக்கவேண்டும். அதனாலே சிரேயசுண்டாம் என்று சேர்ந்து ஆலோசித்து நிச்சயித்துக் கொண்டபடி ஜனித்தார்கள். அவர்கள் இந்திரன், விஷ்ணு, அரியமன், தாதா, துவஷ்டா, பூஷா, விவசுவான், சவிதா, மித்திரன், வருணன், அமிசு, பகன் என்று பெயருடையவர்களாய்த் துவாதசாதித்தர் என்று சொல்லப்படுவார்கள். இப்படிச் சாட்சுஷ மனுவந்தரத்திலே துஷிதர் என்று சொல்லப்படும் தேவதைகள், வைவச்சுத மனுவந்தரத்திலே ஆதித்தியர் என்று சொல்லப்பட்டார்கள். சந்திரனுக்குப் பாரியைகளான அசுவனி முதல் இருபத்தேழுபேருக்கும் மிகுந்த காந்தியுள்ள மக்களுண்டானார்கள். அரிஷ்டநேமி பத்தினிகள் நாலுபேருக்கும் பதினாறு பிள்ளைகள் உண்டானார்கள். வெகுபுத்திரனுக்குப் பத்தினிகளான இருவரிடத்

* இந்நால்வரும் உருத்திரமூர்த்திகள் தாம். அரசன் முதலான ஏகாதச ருத்திரர்கள் இம்மனுவந்தரத்தவர் என்றறிக. இவர்கள் குமாரர்களும் உருத்திரரென்று சொல்லப்படுவார்கள்.

திலும் காற்று வெய்யில், மழை, துர்ப்பிக்ஷம், இவற்றிற்கு ஏதுக்களாய்க் கபிலவர்ணமும் இரத்தவர்ணமும் அரித்திரா வர்ணமும் நீலவர்ணமுமுள்ள நான்கு மின்னல் உண்டாயின. அங்கிரசிக்கு, பிரமரிஷிகள் துதிக்கத்தக்க மேன்மையையுடைய பிரதியங்கிரசங்க ளென்கிற மந்திரங்களுதித்தன. பிருசாசுவனுக்கு திவ்விய அஸ்திரங்கள் பிறந்தன. இப்படிக் கற்பாதி காலத்திலே யுண்டான முப்பத்துமூன்று கோடி தேவதைகளும், சூரியன் தினந்தின முதயமாகி அஸ்தமிப்பது போல ஒவ்வொரு மனுவந்தரத்திலும் பிறந்து கொண்டேவருவார்கள். இவர்கள் சுய இச்சையின்படி பிறப்பவர்கள். திதி யென்பவளிடத்தில் காதிபருக்கு வெல்லக்கூடாத ஹிரணியகசிபுவும் இரணியாக்ஷனும், விப்பிரசித்தி யென்கிற இராக்ஷதனுக்குப் பாரியையான சிம்மிகை யென்ற கன்னிகையுஞ் ஜனித்தார்கள். அவர்களில் இரணியகசிபுவுக்கு அநுலாதன் ஹிலாதன், பரம தார்மிகனான பிரகலாதன், சமஙிலாதன் என்ற நான்கு பிள்ளைகள் பிறந்து பல பராக்கிரமசாலிகளாய் தைத்திய வமிசத்தை அபிவிர்த்தி யாக்கினார்கள். அவர்களில் பிரகலாதன் ஜிதேந்திரியனும் சர்வபூத சமனும் மகாபாதகனுமாய் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பரமமான பக்திசெய்து ஜகத்திலே பிரசித்தனானான்.

கேளும் முனிவரே! தைத்தியராஜனான இரணியகசிபுவினுடைய ஆக்கினையினாலே அசுரர் கொளுத்தின அக்கினியும் ஸ்ரீவாசுதேவன் இருதயகமலத்திலே வசித்திருந்ததனாலே, அந்த மகாத்துமாவான பிரகலாதாழ்வானைத் தகிக்கமாட்டாதே போயிற்று. அந்த மகானுபாவன் பாசங்களினாலே கட்டப்பட்டு மஹார்ணவமத்தியத்திலிருந்து அசைந்தபோது, அநேக மலைகளுங் காடுகளும் நெருங்கின. பூமண்டலமும் நடுங்கிற்று. எங்கும் எம்பெருமானையே பாவித்துக் கொண்டிருந்தபடியினாலே அந்த மகாத்துமாவினுடைய சரீரத்தைப் பருவதம்போற் கடினங்களாய் அசுரேந்திரனாலே பிரயோகிக்கப்பட்ட நானாவித ஆயுதங்களும்பேதிக்கமாட்டாதே போயின. இரணியகசிபு ஏவின விஷாக்கினிச்சுவாலைகள் சொலித்துக் கொண்டிருந்த சர்ப்பங்

கள் அந்தமகாத்துமாவைப் பீடிக்கமாட்டாதேபோயின. அந்த மகாபாகவதன் பர்வதங்களினுலே அமுக்கப்பட்டபோதிலும் ஸ்ரீவிஷ்ணு ஸ்மரணமாகிற கவசத்திலே காக்கப்பட்டு மரணமடையாமற் போனுன். சொர்க்கலோகத்திலிருந்து இரணியகசிபு அதியுன்னதமான விடத்தினின்றும் கீழே தள்ளினபோது அம்மகா புருஷனைப் பூதேவி ஏந்தி யெடுத்துக் கொண்டாள். இரணியகசிபுவினுலே ஏவப்பட்ட சம்சோஷகனென்ற வாயுவானது மதுசூதனன் இருதயத்தி லிருந்ததினுலே அம் மகானுபாவனிடத்திலே புகுந்து நாசமடைந்து போயிற்று. திக்கஜங்களெல்லாம் இரணியகசிபுவின் உத்தரவினுலே அந்தப்பாகவதன்மேல் ஏவப்பட்டு வக்ஷஸ்தலத்திலே பாய்ந்து தந்தங்கள் ஒடிந்து மதமெல்லாம் க்ஷீணித்துப் போய்விட்டன. தைத்தியபுரோகிதர்களாலே நிர்மிக்கப்பட்ட கிருத்திகைகள், கோவிந்த சரணரவிந்தங்களிலே மனதைச் செலுத்திய மஹா யோகீந்திரனைப் பாதிக்கமாட்டாதே போயின. மஹா மாயாவியான சம்பரனென்ற அசுரன், அப் புண்ணிய புருஷன்மேல் ஏவின அனந்த மாயைகளும் ஸ்ரீவிஷ்ணுவின் திருக்கையினுல் விடப்பட்ட சக்கராயுதத்தினுலே சாம்பலாய்விட்டன. இரணியகசிபுவினுடைய சமையற்காரர் ஆலாகல மென்ற மஹாவிஷத்துடன் கூடக் கலந்து வைத்த அன்னமானது மாச்சரிய மில்லாதவனும் விகாரரகிதனுமான அந்த மகா பாகவதனுதரத்திலே ஜீர்ணமாய்விட்டது. சர்வபூதசமனும் சர்வபிராணி மித்திரனுமான அம் மகாத்துமா தன் சரீரத்தைப்போலேயுந் தன் பிள்ளைகளைப்போலேயுஞ் சகல பூதங்களையும் லாலனை செய்துவருவான். தர்மாத்துமாவாய்ச் சத்திய சவுசசமதமாதி சற்குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாய் விளங்குகிற அந்த மகானுபாவன் ஜகத்திலே ஞானனுஷ்டான சம்பன்னரான சத்புருஷர்களுக்கெல்லாம் உபமானமாய்ப் பிரசித்தி யடைந்திருந்தான்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

## பதினாறம் அத்தியாயம்

# பிரகலாத சரித்திர பிரசினம்

இப்படிப் பராசரர் சொல்லக்கேட்ட மயித்திரேயர், முனிவரரே! மனு வமிசத்திலே பிறந்த உத்தானபாதன் துருவன் முதலான மகாராஜாக்களுடைய சரித்திரங்களை யும் அனாதி புருஷனான ஸ்ரீ விஷ்ணுவே ஜகத் காரணமான பிரம்மம் என்கிற அர்த்தத்தையும் விவர மாகக் கேட்டறிந்தேன். ஆனால் தைத்திய புங்கவனான பிரகலாதாழ்வானை அக்கினியும் ஆயுதங்களும் தகிக்க மாட்டாமற் போய்விட்டன வென்றும், கயிற்றாற் கட் டுண்டு சமுத்திரத்திலே கிடந்த அந்த மகாத்துமா அசைந்தவுடனே பூமண்டலமும் நடுங்கிப் போயிற்றென் றும், சமாகித சித்தனான அந்தத் தைத்தியோத்தமன் பருவதங்களினாலே அகப்பட்ட போதும் மரணமடையா திருந்தானென்றும், இப்படி வெகுவிதமாய்ப் பிரகலா தாழ்வானுடைய மகத்துவத்தைத் தேவரீரே புகழ்ந் தருளினதனாலே தத்துவ ஞானமும் பகவத் பக்தியு முடைய அம்மகானுபாவனுடைய ஒப்பில்லாத சரித் திரத்தைக் கேட்க விரும்புகின்றேன். அந்த மகா தர் மிஷ்டனை அசுரர் ஆயுதங்களிலே ஏன் புடைத்தார் கள்? பாசங்களினாலே கட்டிச் சமுத்திரத்திலே ஏன் போட்டார்கள்? பருவதங்களினாலே அவரை ஏன் துவைத்தார்கள்? அவர்மேல் மகா சர்ப்பங்களை ஏன் கடிக்க விட்டார்கள்? திக்குக்கஜங்களைக் கொண்டு ஏன் அவரைத் துன்பப் படுத்தினார்கள்? உயரத்திலிருந்து ஏன் கீழே தள்ளினார்கள்? ஏன் அக்கினியிற் போட்டு எரித்தார்கள்? அசுரன் அவன்மேலே சோஷணவாயுவை ஏன் விட்டான்? தைத்திய புரோகிதர் அந்த மகாத்துமா மேலே கிருத்தியையை ஏதுக் கேவினார்? சம்பரன் அவரிடத்தில் அநேகவாயிர மாயைகளை ஏதுக்குச் செய்தான்? இரணிய கசிபுவினுடைய சமையற்காரர் அவருக்கு அன்னத்தில் விஷத்தை ஏன் வைத் தார்கள்? அதை யவர் ஜீர்ணஞ் செய்துகொண்டார் என்றும் அருளிச்செய்தீரே! இவை முதலான அந்தப் பரம பாகவதருடைய சரித்திர விசேடங்களையெல்லாம்

விசிதமாகக் கேட்க விரும்புகின்றேன். இது விசேஷ மான அர்த்தத்துக்குச் சூசகமா யிருக்கின்றது. இவர் இந்தச் செய்கைகளினாலே மரணமடையா திருந்தது ஆச்சரியமன்று. ஏனெனில் ஸ்ரீ முகுந்தனது சரணாரவிந்தங்களிலே சித்தத்தை நிலைபெற வைத்த மகாபாகவதனை நிக்கிரகிக்க வல்லவன் ஜகத்திலுண்டோ, இல்லையே, ஆனால் தர்மபாராயணமும் ஸ்ரீகேசவனை ஆராதனமும் பண்ணுவதில் ஆவலுள்ளவனும் தங்கள் குலத்திலே பிறந்தவனும் ஆகிய அந்த மகானுபாவனிடத்திலே அசுரர் பகைமை பாராட்டியது அதிசயமாக இருக்கின்றது. தர்மாத்துமாவாய் மாற்சரிய மற்றவராய் விஷ்ணுபத்தரா யிருக்கிறவரிடத்திலே தைத்தியர் ஏன் இப்படிப்பட்ட கொடிய துன்பங்களைச் செய்தார்கள்? உலகத்திலே சற்குணமுள்ளவனாய்ச் சாதுவாயிருக்கிறவன் அன்னிய குலத்தனானாலும் அவன் திறத்திலேயும் யாரும் இவ்வளவு கொடுமை செய்யமாட்டார்களே. தன் ஸ்வகுலத்தவனிடத்தில் செய்யமாட்டார்களென்பதற்குக் கேட்கவேண்டுமோ. இப்படியிருக்கக் கலியாண குணங்களுள்ளவரும் தங்கள் வம்சத்திற் பிறந்தவருமான பிரகலாதாழ்வான் திறத்தில் அசுரர் இப்படிச்செய்த காரணத்தை விளக்கமாக அருளிச் செய்யவேண்டும். அந்தத் தைத்தியேசுவரனான பரம பாகவதனுடைய பிரபாவ பெருமை யெல்லாங் கேட்க ஆசையாயிருக்கிறது. கிருபைசெய்து அருளிச் செய்ய வேண்டும்.

பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினேழாம் அத்தியாயம்

# பிரகலாதசரித்திரம்

இப்படிக் கேட்ட மைத்திரேயரைப் பார்த்து, பாராசர முனீந்திரர், ஞானவானாக உதார சரித்திரத் தலைவரான பிரகலாதருடைய பிரபாவத்தைச் சொல்லுகின்றேன் சாவதானமாய்க் கேட்பீராக வென்று திருவாய் மலர்ந்தருளுகின்றார்:

ஆதியில், மகா பல பராக்கிரமசாலியும் அதிதி புத்திரனுமான இரணியகசிபு என்பவன் கோரமான தவங்களினாலே பிதாமகனைச் சந்தோஷப்படுத்தி, அவரிடத்தில் அநேக வரங்களைப்பெற்று, கர்வித்தவனாய்த் திரிலோகங்களையும் சுவாதீன மாக்கிக்கொண்டு, இந்திரன் ஆதித்தன் வாயு அக்கினி வருணன் சந்திரன் யமன் முதலானோர் செய்கிற அதிகாரங்களைத் தானே செய்து கொண்டு, யக்கியங்களிலே அவர்களுக்கான அவிர்ப்பாகங்களைத் தானே கைக்கொண்டு, மூன்று லோகங்களையும் ஏகாதிகாரமாய்த் தானே ஆண்டுகொண்டிருந்தான். அப்போது புரந்திரன் முதலிய தேவதைகள் அந்த மகாசூரனுக்குப் பயந்து, சொர்க்கலோகத்தை விட்டு, மனுஷ வேடம்பூண்டு, பூமியில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

இவ்வண்ணம் இரணியகசிபு திரிலோக ராச்சியாதிபத்தியத்தினாலே அதிக கர்வமுற்றவனாய்ப் பொங்கி, கந்திருவர் கீதங்கள்பாட, சித்தசாரண பன்னகாதிகள் மிருதங்க கோமுகாதி வாத்தியங்களை வாசிக்க, வித்தியாதரர் ஜெயஜெய சத்தங்களினாலே துதிக்க, அப்சர ஸ்திரீகள் நாட்டியங்கள் செய்ய, படிகமயமும் அப்பிரக் சிலாமயமும் அதியுன்னதமும் அதிமனோகரமுமான உப்பரிகையிலே இருந்துகொண்டு, மகா சந்தோஷப் பூரிப்போடு மதுபானஞ் செய்துகொண்டு, மனதுக் கிச்சையானபடி போகங்களை யனுபவித்துக் கொண்டிருந்தான்.

அவனுக்குப் பிரகலாதனென்ற ஒப்பற்ற குமாரனுண்டாகி, மகானுபாவனாய் இருந்தான். அவர் பாலியத்திலே உபாத்தியாயர் கிருகத்திலே யிருந்து இளைஞர் படிக்க வேண்டிய படிப்பை படித்துக்கொண்டிருந்தான். ஒருநாள் உபாத்தியாயருடனே கூடி மதுபான பரவசனாயிருந்த தன் தகப்பனருகில் வந்து, பாதத்திலே தண்டமிட்டு நின்றார். அந்த அசுரேசுவரன் மகா தேஜசோடு விளங்காநின்ற தன் குமாரனை எடுத்துக்கொண்டு, சந்தோஷத்தோடு சொல்லுகிறான்: "குழந்தாய்! இத்தனை நாளாய் அதிக முயற்சியோடு உன்னுடைய குருவான

வர் உனக்குச் சொல்லிக்கொடுத்த விஷயங்களிலே சார மான ஒரு நல் வசனத்தைச்சொல், கேட்க விரும்புகின் றேன்" என்றுரைக்கப் பிரகலாதாழ்வான், "ஐயா! நீர் கட்டளை யிட்டபடி சமரசித சித்தனுகிச் சாரபூதமாக மனதி லிருக்கின்ற நன்மொழியைப் படிக்கிறேன் கேளும்" என்று சொல்லுகிறான்: ஆதிமந்தியாந்த ரகித தனும் அஜனுமாகி, விருத்தியும் ஈனமுமில்லாத சர்வ பூதாந்தராத்துமாவாய், சிருஷ்டியாதிகளுக்குக் கார ணங்களான யாவற்றுக்கும் காரணமாய் எப்போதும் ஆனந்த சொரூபமாய் விளங்குகிற ஸ்ரீ அச்சுதனுக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கின்றேன் என்றிவ்வாறு படிக்க, இரணியகசிபு அந்த வார்த்தையைக் கேட்டுக் கோபா வேசத்தினலே கண்கள் சிவந்து, உதடு துடிக்கப் பயங் கரமான ரூபத்தோடு குருவைப் பார்த்து, "ஓய் கெட்ட பிராமணனே! துர்ப்புத்தி யுள்ளவனே! நிசாரமும் சத் துரு பட்ச ஸ்தோத்திர சகிதமுமான இந்தச் சுலோ கத்தை இந்தக் குழந்தைக்குச் சொல்லிக்கொடுத்து என்னை அவமதித்தாயே" என்று சொல்ல, அதற்கு உபாத்தியாயன் அவனைப் பார்த்து, "தைத்தியேசுரா! கோபம் வேண்டாம், உன்னுடைய குமாரன் நானுப தேசித்தவிதமாகப் படிக்கவில்லை" என்று சொன்னன். அதுகேட்டு இரணியகசிபு பிரகலாதனைப் பார்த்து, "குழந்தாய் பிரகலாதா! உபாத்தியாயன்தான் இப்படி உபதேசிக்க வில்லையென்று சொல்லுகிறானே, மற்றை யார் உனக்கு இப்படிப் போதித்தார்?" என்று கேட்ட தற்குப் பிரகலாதன் தகப்பனைப்பார்த்து, "ஐயா! எவன் சர்வ பூதங்களுடைய இருதயத்திலே இருக்கின்றானே அந்த ஸ்ரீ விஷ்ணுவே சகல ஜனங்களுக்கும் புத்தி யைக் கற்பிக்கிறவன். பரமாத்துமாவான அந்தத் தேவனை யல்லாமல் வேறு யார் கற்பிக்கிறவனிருக்கின் றான்" என்று சொல்லக்கேட்டு, தைத்தியேந்திரன் அவனைப் பார்த்து "துர்ப்புத்தி யுள்ளவனே! ஜகதீசுர னை என் முன்னிலையில் பயமில்லாமல் எவனையோ அடிக்கடிப் பலவிதமாகத் துதிக்கிறாயே, அந்த விஷ்ணு வென்கிறவன் யார்?" என்றதற்குப் பிரகலாதன், "எவ னுடைய பரமார்த்த ஸ்வரூபம் இப்படிப்பட்டதென்று

சொல்லக் கூடாமல் யோகீந்திரர்களுக்குத் தியான நிலையிலேயே இருக்கின்றதோ, எவனாலே உலகமெல்லாமுண்டாயிற்றோ, எவன் விசுவமயனா யிருக்கிறானோ, அந்தப் பரமேசுவரன்தான் ஸ்ரீ விஷ்ணு என்றறியும்" என்று சொல்ல, இரணியன் சொல்லுகிறான் "மூடா! யோகேசுரனாக நானிருக்கப் பரமேசுரனென்கிற பேர் வேறொருவனுக் குண்டாகுமோ? நீ நாசமாகிறதற்காகப் பலவிதமாய் என்முன்னே அன்னியனைத் துதி செய்கிறாய்" என்று சொல்ல, பிரகலாதன் "தைத்தியேசுரனே! பரப்பிரமபூதனான ஸ்ரீவிஷ்ணுவே எனக்கொருவனுக்கன்று உமக்கும் சகலவிதமான பிரஜைகளுக்கும் நிலைப்படுத்துகிறவனும், சிருஷ்டிக்கிறவனுமா யிருக்கின்றான். ஆகையால் ஏன் கோபிக்கிறீர், கோபத்தை விட்டுச் சாந்தசித்தராக இரும்" என்று சொன்னதற்கு, இரணியன் துர்ப்புத்தியான இந்தப் பாலகனுடைய இருதயத்திலே எவனோ ஒரு தீவினை யுடையவன் உட்புகுந்து மோகத்தை உண்டாக்கினான். ஆனதினாலே தான் இவன் இத்தகைய கெட்ட வார்த்தைகளைப் பலவாறு சொல்லுகிறான்" என்று சொல்ல, பிரகலாதன், "சர்வலோக வியாபகனான அந்த ஸ்ரீ மகாவிஷ்ணு என்னிருதயத்திலே மாத்திரமன்று. சமஸ்த எல்லா வுலகங்களிலும் வியாபித்து, நீர் நான் மற்றுமுள்ள சகலமானவர்களையும் அவ்விதக் காரியங்களில் பிரவேசிப்பிக்கின்றான்" என்று சொன்னதைக் கேட்டு இரணியன், தன் அருகில் இருந்த அசுரர்களைப்பார்த்து "துராத்மாவான இந்த மூடனைக் குருவின் கிரகத்துக்குக் கொண்டுபோய் நன்றாய் சிக்ஷிக்கும்படிச் சொல்லுங்கள், எவனோ ஒரு துராத்துமா இவனுக்குச் சத்துரு பட்சத்தைத் துதிக்கும்படி போதித்திருக்கின்றான்" என்று சொன்ன உடனே, அவ்வசுரர் அம்மகாத்மாவைக் குருவின் இல்லத்துக்குக் கூட்டிக்கொண்டுபோய் விட்டார்கள். அவரும் அங்கே குருவுக்குப் பணிவிடை செய்து கொண்டு வித்தியாப்பியாசம் செய்துவந்தார்.

சிறிதுகாலஞ் சென்றபிறகு இரணியகசிபு தன் குமாரனை யழைப்பித்து, "புத்திரனே! ஏதாகிலுமொரு சுலோகத்தைச் சொல்" என்றான். பிரகலா

தாழ்வான் தகப்பனைப் பார்த்து "எவனிடத்தினின்றும் மூலப்பிரகிருதியும் சமஷ்டிரூபனான க்ஷேத்திரக்கியனும் உண்டானார்களோ, எவனிடத்தினின்றும் சராசராத்மகமான சகல பிரபஞ்சமும் ஜனித்தனவோ அப்படிப்பட்ட சர்வகாரண பூதனான ஸ்ரீ விஷ்ணுதேவன் நமக்குப் பிரசன்னனாகக் கடவன்" என்கிற சுலோகத்தை அருளிச்செய்ய, அந்த அசுரேசுவரன் கோப மூண்டவனாய் அங்கிருந்த அசுரரை நோக்கி இத் துராத்துமாவை வதையுங்கள்; இவன் பிழைத்திருப்பதனாலே பிரயோசன மொன்றுமில்லை; இவன் எனக்கே இடையூறு செய்கிறவனாய்த் தலைப்பட்ட படியினாலே இக்குலத்துக்கு ஓர் அக்கினிபோலா யிருக்கிறான்" என்று ஆக்கியாபித்தான். அந்தப் பேச்சைக்கேட்டு அந்த அசுரர் அநேகர்கூடி நானாவித ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அவரை வதைக்கும்படி எத்தனித்தார்கள். அப்போது பிரகலாதாழ்வான் அருளிச் செய்கின்றார்:—

ஓ அசுரர்களே! உங்களிடத்திலேயும் என்னிடத்திலேயும் உங்களுடைய ஆயுதங்களிலேயும் ஸ்ரீமந் நாராயணன் பரிபூரணனாய் எழுந்தருளி யிருக்கின்றான் என்பது சத்தியம். இந்தச் சத்தியத்தினாலே உங்களாயுதங்கள் என்மேல் பாயா திருக்கக்கடவன" என்று சொல்லக்கேட்டும், அவ்வசுரரெல்லாம் ஒன்றாய்ச்சேர்ந்து தடி கத்தி சக்கரம் சூலம் முதலான ஆயுதங்களினாலே பிரகரித்தார்கள். ஆயினும் பிரகலாதாழ்வான் அவைகளினாலே கொஞ்சமேனும் வேதனையுறாமல் விசேஷ காந்தி பொருந்தி விளங்கினார். அப்போது இரணியகசிபு மகனைப் பார்த்து, அடா துர்ப்புத்தியுடையவனே! இனியாகிலும் சத்துருவைத் துதிசெய்வதினின்றும் ஒழிந்து விடுவையானால் உனக்கு அப்பயங் கொடுக்கின்றேன். அதிக மூடத் தன்மையை யடையாமல் சன்மார்க்கனாயிரு" என்று சொல்ல, பிரகலாதாழ்வான் "ஐயா உன்னைச் சிந்தித்த மாத்திரத்திலே பிறப்பு இறப்பு மூப்பு முதலான எல்லாப் பயங்களும் ஓடிப்போமோ, அப்படிப்பட்ட சகல பயங்களையும் போக்கடிப்பவனான அனந்தன் என் இருதயத்திலே பிரகாசித்துக் கொண்டிருக்க எனக்குப் பயமெங்கே யிருக்

கிறது?" என்று சொன்னதற்கு, இரணியன் மகா நாகங்களைக் கூப்பிட்டு "ஓ சர்ப்பங்களே! நீங்கள், மிகவும் துர்ப்புத்தி யுள்ளவனுய்த் துர்நடக்கை பூண்ட இந்தப் பையனை விஷச் சுவாலைகள் மிகுந்த உங்கள் பற்களினுலே கடித்து இப்பொழுதே நாசமடையப் பண்ணுங்கள்" என்ருன். அதுகேட்ட தக்ஷகன் முதலான கொடிய மகா சர்ப்பங்கள் உக்கிரமான விஷங்களைக் கக்கிக் கொண்டு வந்து, அவருடைய சகல அவயவங்களிலும் கடிக்க, அந்த மகானுபாவர் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திற் சித்தத்தை நிறுத்தி யிருப்பதனுலே ஆனந்த பரவசராகி, மகா வுரகங்களாலே கடிக்கப்பட்டிருந்தும் தம் தேகத்தையும் உபாதையையும் யறியாமலிருந்தார். அப்பால் பாம்புகள் இரணியனிடத்திற் சென்று, "மகாராசனே! எங்களுடைய பற்களொடிந்தன; முடியிலிருக்கு மிரத்தினங்கள் வெடிக்கின்றன; படங்களிலே மகாதாபமொன்றுண்டாயிற்று; இருதயமோ நடுங்குகின்றது; இவ்வளவே யல்லாமல் அந்தப் பாலகனுடைய தேகத்திலுள்ள தோலில் கிஞ்சித்தாகிலும் சேத முண்டாகவில்லை; ஆகையாலே எங்களிடத்திலே நீர் பிரசன்னராகி இந்தக் காரியத்தை யொழித்து, வேருெரு காரியத்தை எங்களுக்குக் கட்டளையிடும்" என்று சொல்லிக் கொண்டன.

பின்பு இரணியகசிபு திக்குக்கஜங்களைப் பார்த்து, "ஓ திக்குக்கஜங்களே! ஒன்ருேடொன்று நெருங்கி அதிக கடினமாயும் உக்கிரமாயு முள்ள உங்கள் தந்தங்களினுலே என் சத்துரு பட்சத்திலேகூடி வேறுபட்டிருக்கிற இந்தத் துராத்துமாவைப் பாய்ந்து சங்கரியுங்கள். அரணியிலே ஜனித்த அக்கினியே அரணியைத் தகிக்குமா போலே தைத்திய குலத்திலே ஜனித்த இவ் அதமன் சுயகுலத்துக்கு விஞசகாஞ யிருக்கின்ருன்" என்று சொல்ல, உடனே திக்குக்கஜங்கள் அந்தப் பாலகனைப் பூமியிலே வீழ்த்திப் பருவத சிகரங்களோடொத்த தந்தங்களினுலே பாய்ந்து இடித்தன. பாயவே, கோவிந்த சரணுரவிந்த விநியஸ்த மானசனுன அந்தப் பாலகனுடைய மார்பிலே பட்டதினுலே, அந்தத் திக்குக்கஜங்களுடைய தந்தங்கள் முறிந்து பொடியாய்ப் போயின.

அப்போது அம்மகாத்துமா * பிதாவைநோக்கி, "தைத்தியேசுவரனே! வச்சிர கடினங்களான திக்குக்கஜங்களுடைய தந்தங்கள் பட்டுப் பொடியானது என்னுடைய பலத்தினாலே அன்று. சகல ஆபத்துக்களையும் பாபங்களையும் நாசஞ் செய்யவல்ல ஸ்ரீ ஜனார்த்தனனுடைய ஸ்மரணத்தின் பிரபாவத்தினாலேயென்று நினையும்" என்று சொன்னதைக் கேட்டு, கோபமிகுந்த திக்குக்கஜங்களை அப்பாற் போக்கி, அசுரர்களைப் பார்த்து, "தைத்தியர்களே! பாபகர்மனான இவனைக் காலாக்கினிக்குச் சமானமான மகா அக்கினியை வளர்த்தி அதிலே போட்டுத் தகியுங்கள்" என்றுரைத்து, காற்றை நோக்கி, "மாருதனே! அந்த மகா அக்கினியை மகாச் சுவாலை கொண்டு சொலிக்கப் பண்ணு" என்று ஆக்கியாபித்தான். அந்தத் தானவர்கள் அவ்வசுரேந்திரனுடைய கட்டளையினாலே மலைபோல் விறகுகளைக் குவித்து, சிறுவனையதிலே மறையும்படி வைத்து, அனலை மூட்டிக் கொளுத்தினார்கள். அப்போது பிரகலாதர் தகப்பனை நோக்கி, "பிதாவே! பிரசண்டமாருதத்தினாலே சொலிப்பிக்கப்பட்டும், இவ்வக்கினி கொஞ்சமாகிலு மென்னைத் தகிக்கவில்லை. மேலும் நான் பத்துத் திசைகளையும் நல்ல தாமரை மலர்களாலே நிறைத்து அதி சீதளமாகச் செய்யப்பட்டவை போலக் காண்கிறேன்" என்று சொல்லி யருளினார்.

அப்படியிருக்க, இரணியனுக்குப் புரோகிதராயும் சுக்கிரனுடைய குமாரர்களாயும், மகாத்துமாக்களாயுமுள்ள சண்டாமர்க்கர் முதலானோர்கள், அவ் வசுரேந்திரனை நல் வார்த்தைகளினாலே துதித்து, "ஓ அசுரராசேந்திரனே! உமக்குப் பிரதிபக்ஷிகளான தேவதைகளிடத்திலே இந்தக் கோபத்தைச் செலுத்தவேண்டுமேயல்லாமல், சொந்த குமாரனை இந்தப் பாலகனிடத்

* பிரகலாதாழ்வான், தமக்கு இப்படிப்பட்ட இம்சைகளினாலே துன்பமில்லையென்று தகப்பனோடு சொன்னது தம்பெருமையைக் காட்டினதன்று. அவன் மனதைத் திருப்பும்பொருட்டு எம்பெருமானுடைய பிரபாவத்தைக் காட்டியதேயாம். ஸ்வாமியை அப்போதப்போது பிரார்த்தித்தும் தமது உபத்திரவத்தைப் போக்குவதற்கன்று. எம்பெருமான் ஆசிருத வாச்சல்லியத்தை வெளியிட்டுக் காட்டி இரணியன் முதலானவர்களுக்கு அச்சம் உண்டாக்கவேண்டுமென்பதற்கேயாம்.

திலே செலுத்துவது தகுதியன்று. இவன் இனிமேல் சத்துரு பட்ச ஸ்துதியை விட்டுப் புத்திமானாகும்படி நாங்கள் கற்பிக்கின்றோம். பாலியம் சகல துர்க்குணங் களுக்கும் இருப்பிடமானதினாலே, பாலகனை இக் குமாரனிடத்திலே மிகுதியாகக் கோபஞ் செய்யவேண் டாம். நாங்கள் போதிக்கிறதினாலே இவன் ஹரிபத் தியை விடாதே யிருப்பானாகில் இவனை வதைக்கிறதற்கு என்ற செயல்களை நாங்களே யுண்டாக்குகின்றோமென்று வெகுவிதமாக வேண்டிக்கொண்டார்கள். இதைக்கேட்ட தைத்தியேந்திரனும் மகாக்கினி மத்தியிலே கிடக்கப் பட்ட பிரகலாதாழ்வானை அசுரரைக்கொண்டு புறத்திலே யிழுத்துக்கொண்டு வரச்சொல்லி, குரு கிருகத்துக்குப் போகும்படி யாக்கியாபித்தான்.

அப்பால் அம் மகாபாகவத சிகாமணி, குரு கிருகத் திலே வசித்துக்கொண்டிருக்கையில், உபாத்தியாயர் படிப்பியாத தருணங்களிலே தம்மோடுகூடப் படிக்கின்ற தைத்திய பாலகர்களை யழைத்து வைத்துக்கொண்டு, கடைத்தேறுகிற மார்க்கமான ஞானத்தை உபதேசித்துக் கொண்டு வந்தார். "ஓ தைத்திய பாலகர்களே! சிறந்த பொருள் தெரிந்திந்த விஷயத்தை யுபதேசிக்கிறேன் கேளுங்கள். என் வசனங்களை அசத்தியமாக நினைக்க வேண்டாம். ஏனென்றால், நான் பொருள் முதலான வற்றில் ஆசைவைத்தாவது பிரமித்தாவது உபதேசிக்க வந்தேனல்லேன். ஆதலால் நான் சொல்வதை நம் பிக் கேளுங்கள். புருஷன் பிறந்தவுடனே பாலியமும், பின்பு யவ்வனமும், அதற்குமேல் தடுக்கக்கூடாத கிழந் தனமும் பெற்று அப்பால் மிருத்துவின் வசமடை கிறான். தைத்திய பாலர்களே! பிராணிகளிடத்திலே இவையெல்லா முண்டாவது நமக்கும் உங்களுக்கும் கண்கூடாகக் காண்கிறோமன்றோ. இம்மட்டேயன்று மரண மடைந்தவனுக்குத் திரும்பி ஜன்ம முண்டாகிற தும் உண்மை. யான் இவ்வாறு சொல்லுவதற்கு ஸ்ருதி ஸ்மிருதி முதலிய சாஸ்திரங்கள் பிரமாணங்களாம். அவைகளை நீங்களும் ஓதி யிருக்கிறீர்கள். இந்தத் தேகம் பிறப்பதற்குப் பூர்வ ஜன்மத்திற் செய்த பாப

புண்ணியங்களோடு கூடின ஸ்திரமான ஆத்துமாவை யல்லாமல் வேறு காரணம் அகப்படாமையாலே சுக்கில சோணிதங்களுக்கு அதிஷ்டாவதான ஆத்துமாவே முக்கிய காரணமாம். ஆகையால் புருஷனுக்குக் கர்ப்ப வாச முதல் சரீரம் விழுமளவும் சர்வ அவஸ்தையிலுந் துக்கமே யென்று நினையுங்கள். அன்னபானங்களாலே பசியுந் தாகமுந் தீருவதும், அந்தந்த வுபாயங்களினாலே சீத உஷ்ணாதி உபத்திரவங்கள் விலகுவதும், சுகமென்று நினைப்பது அவிவேகம். எப்படியென்றால், அன்ன பானங்களைச் சம்பாதிக்கிறதற்காகச் செய்யும் பிரயத்தனத்தினாலே யுண்டாகிற துக்கங்கள் சொல்லத்தரமா. இந்த அனுதிகளே அஜீர்ணமானபோது எத்தனை துக்கத்துக்குக் காரணமாகின்றன. இதற்குத் திருஷ்டாந்தம் பாருங்கள். வாத தோஷங்களினாலே மாத்திருக்கிற அங்கங்களுடையவர்களாய், வருத்தத்தினாலே தேக சவுக்கியம் விரும்புகிறவர்களுக்கு உடம்பைக் குத்தி நசுக்குவதும் அடிப்பதும் சுக கரமாக இருக்கின்றன. காம மோகாந்தர்களான ஜனங்களுக்கு ஊடலில் காமினீ சரண தாடனமும் சுகமாய்க் காணும். இப்படி, துக்க ஏதுக்களில் சுகப்பிராந்தி யுண்டாயிருக்கிறதைக் கண்டீர்களே. இப்படியே மாமிச சிலேஷ்ம மல மூத்திராதி மயமான தேகத்தில் சௌந்தரிய சௌகுமார்ய சௌஉப்பிய காந்தி முதலான குணங்க ளுண்டென்று நினைப்பதும் பிராந்தியே யல்லாமல் வேறன்று. இரத்த மாம்ச சிலேஷ்ம மல மூத்திர மச்ச ஸ்நாயு அஸ்திகளின் சமுகமாயிருக்கிற தேகத்தினிடத்து அன்பு வைக்கிறவன் நரகத்திலேயும் அன்பு வைக்கலாம். குளிரினாலே அக்கினியும், தாகத்தினாலே தண்ணீரும், பசியினாலே அன்னமும், சுகமாகத் தோன்றுகின்றன. சைத்தியமுந் தாகமும் பசியுமில்லாதபோது அக்கினியும் உதகமும் அன்னமும் துக்க ஹேதுக்களாயிருக்கும். ஓ பிள்ளைகளே! புருஷன் எவ்வளவாய்த் தன தானிய ரத்தினாதிகளைச் சேமித்து வைக்கிறானோ அவ்வளவுந் துக்கமென்று நினைக்கவேண்டும். மனிதன் மனதுக்குப் பிரியங்களான புத்திர மித்திர களத்திராதி சம்பந்தங்களைத் தனை சம்பாதிக்கின்றானோ அத்தனையும் அவனுடைய

இருதயத்திலே தைத்த ஆணிகள்போலிருக்கும். புருஷன் எத்தனை தூரத்திலே யிருந்தாலும் அவனுடைய இருதயத்திலே யிருக்கும் தனதானிய ரத்நாதிகள் நாசமும் அக்கினிபாதையும் சோரபயமு மில்லாமலே ஸ்திரமாய்ப் பாதித்துக்கொண்டே யிருக்கின்றன. இல்லத்தில் சோரர் முதலியோராலே பயமில்லாம லிருந்தாலும், இருதயத்தில் பொருளினிடத்துப் பிரேமையினாலே அவை யுண்டாய்க்கொண்டே யிருக்கின்றன. மேலும் ஜன்மிக்கிறபோது அனுபவிக்கிற துக்கத்தைப்போலே மரணத்திலேயும் துக்கம் உண்டாகின்றது. பின்பு யமவாதனையிலேயும் மறுபடி கர்ப்பப்பிரவேசத்திலேயும் மகா துக்கமே யுண்டாம். கர்ப்பவாசத்திலே லேசமாத்திரமாகிலும் சுகமுண்டா யிருக்குமென்று தோன்றினால் சொல்லுங்கள். ஆகையால் எங்கும் சுகமில்லை. ஆகையாலே ஜகமெல்லாம் துக்க மயமாக இருக்கின்றன. இப்படிச் சகல துக்கங்களுக்கு யிருப்பிடமான சம்சார சாகரத்தை ஸ்ரீமந் நாராயண னொருவனே கடக்கப் பண்ணுகின்றவன். உங்களுக்குச் சத்தியமே சொன்னேன். நாம் இளையோரானதினாலே விரக்தி மார்க்கத்துக்கு அதிகாரிகளல்லேமென்று நினைக்கவேண்டாம். பாலிய யவ்வன ஜராமரணாதி அவஸ்தைகள் தேகத்துக்கே யல்லாமல் ஆத்துமாவுக்கில்லை. சரீரத்திலே ஆத்துமா ஜனன மரணாதி ரகிதனாய் சாசுவதனா யிருக்கின்றான். உலகத்தில் புருஷன், பாலியஞ் சென்றபிறகு யவ்வனத்திலே ஆத்துமாவுக்கு இதஞ் செய்து கொள்ளுகின்றேனென்றும், எவ்வனத்தை யடைந்திருக்கிறபோது வார்த்திகத்திலே சிரேயசான ஞானத்தைப் பெற்றுக்கொள்வேனென்றும் நினைப்பான். அப்பால் வயது முதிர்ந்து மூப்பு வந்து இந்திரியங்கள் பலஹீனப்பட்டுப் போனவளவில் இனிமேலென்ன செய்வேன், திடகாத்திரனாக இருந்தபோதே ஆத்தும இதஞ்செய்து கொள்ளாமல் மூடனாய்ப் போனேனே யென்று துக்கிப்பான். இப்படியேயல்லாமல் துராசாரங்களில் இச்சையுடையவனாய் ஒருநாளும் சிரேயசான மார்க்கத்துக்கு அபிமுகனாக மாட்டான். எப்படி யென்றால் நானாவித கிரீடா விசேஷங்களினாலே பாலியமும், சந்தனம் புஷ்பம் பெண்கள்

முதலிய போக பரவசத்தினாலே யவ்வனமும், அசத்தியினாலே வார்த்திகமும், போக்கிக்கொண்டு அஞ்ஞானிகள் தங்களாயுசை வியர்த்த மாக்குகின்றார்கள். ஆனதினாலே கங்கா பிரவாகத்தி லிருந்தபோதிலும், வண்ணான் தாக மெடுத்தபோது தண்ணீரைக் குடியாமல் இந்த வஸ்திரந் தோய்த்தாகட்டும், இந்த வஸ்திரந் தோய்த்தாகட்டு மென்று காலம் போக்குவது போலவும், செம்படவன் இந்த மீன் பிடித்தாகட்டும், இந்த மீன் பிடித்தாகட்டும், எனப் பொழுதுபோக்குவது போலவும், பிற்காலத்தை நினைத்துப் பருவத்தை வீண் போக்கலாகாது. பாலிய யவ்வன மரணாதி யவஸ்தைகள் சரீரத்துக்கே யல்லது ஆத்துமாவுக்கில்லை யென்று நினைத்து, விவேகமுடையவர்களாய் நீங்கள் ஆத்துமா உச்சீவிக்கும்படியான எத்தனஞ் செய்யுங்கள். இப்படி விரக்தி மார்க்கத்தை விளக்கமாக உங்களுக்கு உபதேசித்தேன். இதனை அசத்தியமென்று நினையாதேயுங்கள். சர்வப் பிரகாரத்திலேயும் சம்சாரபந்த மோசனனை ஸ்ரீமந் நாராயணனை நினையுங்கள். எம்பெருமானை ஸ்மரிக்கிறதற்குப் பிரயாசமென்ன ஸ்மரித்தமாத்திரத்திலே சகல பாபங்களும் நாசமாய், சகல சுபங்களு முண்டாம். ஆதலால் எப்போதும் அவனை ஸ்மரித்து மகாத்துமாக்கள் உச்சீவிப்பார்கள். சர்வ பூதாந்தர்யாமியான நாராயணனிடத்திலே மித்திர பாவமான புத்தி உங்களுக்கு உண்டாகக்கடவது. அவனுக்கு லீலா சாதனங்களான சேதனங்களிடத்தில் சிநேகஞ்செய்யுங்கள். அதினாலே மோக முதலிய சகல துன்பங்களும் விலகும். ஆத்தியாத்துமிகாதி தாபத்திரயத்தினாலே ஜகமெல்லாம் துன்பப்பட்டிருக்கையாலே, மிகவும் இரங்கவேண்டிய பிராணிகளிடத்திலே தெரிந்தவனாயிருந்தால், எவன் துவேஷத்தை வைப்பான். ஒருவேளை சகல பிராணிகளும் செல்வம் கல்வி பலம் முதலானவைகளாலே தன்னைக்

* ஆத்தியாத்துமிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம் என்று மூன்று துக்கங்கள் உண்டு. ஆத்தியாத்துமிகமாவது தன்னைப்பற்றி யுண்டாவது. அஃது ஆத்துமாவைப் பற்றியும் தேகத்தைப் பற்றியும் இருவகைப்பட்டது. ஆதிதெய்விகமாவது தெய்வத்தைப்பற்றி யுண்டாவது. ஆதிபௌதிகமாவது இவ்வுலகத்திற் சராசரங்களைப்பற்றி யுண்டாவது. இவற்றை 86-வது பக்கத்தில் முதலாவது வரியில் தேவ என்பது தொடங்கி விரித்திருப்பது காண்க.

காட்டிலும் அதிகமா யிருக்கிறதாகவும், தானொருவனே அப்படி யல்லாமல் சத்தியீனனா யிருக்கிறதாகவும் நினைத்தானானால், அப்போதும் துவேஷஞ் செய்யாமல் சந்தோஷப்படவேண்டும். துவேஷஞ் செய்தால் கிடைப்பது ஹானியே. ஆனதினாலே பிராணிகளிடத்தில் வாச்சரியஞ் செய்யலாகாது. சிலர் வீண் மாச்சரியத்தினாலே தன்னிடத்தில் துவேஷத்தைச் செய்தால் விவேகியானவன், ஐயோ! இவர்கள் அஞ்ஞானக்கடலில் அமிழ்ந்திருக்கிறார்களே, என்றைக்குக் கடைத்தேறுவார்கள் என்று இரங்கவேண்டும். சிறுவர்களே! இவ்விதமாக மயித்திரி, கருணை, மூதிகை உபேக்ஷை என்கிற மனத்தெளிவின் காரணங்களை மத்திமாதிகாரிகளுடைய மதத்தை யனுசரித்து உங்களுக்குச் சொன்னேன். மத்திமாதிகாரிகள் யாரென்றால் உலகத்தைப் பகவானுடைய சொரூபமாக நினையாமல் வேறாக நினைக்கிற சாங்கியர். உத்தமாதிகாரிகளுக்கு ஆன காரியத்தைச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன் கேளுங்கள்.

"சகல பிரபஞ்சமும் சர்வாத்துமாவான ஸ்ரீமந் நாராயணனுடைய சொரூபமென்று நினைத்து, ஞானமுள்ளவர்கள் சகல பூதங்களையும் தன்னைப்போலே அபேதமாக நினைக்க வேண்டும். ஆகையால் நானும் நீங்களும் ஆசுர பாவத்தை விட்டு மகா ஆனந்தத்தைப் பெறும் பொருட்டு எத்தனஞ் செய்வோம். சூரியன், சந்திரன், அக்கினி, வாயு, இந்திரன், வருணன், மேகம் முதலானவர்களாலே ஒரு பேறு மில்லை. ஆகில் என்ன செய்ய வேண்டுவதென்றால் தேவ அசுர யக்ஷ ராக்ஷச கின்னர பன்னகாதிகளாலேயும், மனுஷ்ய பசு பக்ஷி மிருகங்களாலேயும், அதிசார ஜ்வர குல்மாதி மகா ரோகங்களாலேயும், இராக துவேஷ லோப மோக மத மாச்சரியங்களாலேயும், எது நாசஞ்செய்யப்படாததோ அப்படிப்பட்ட பரமானந்தத்தைப் பெற ஸ்ரீ கேசவனுடைய திருவடிகளிலே இருதயத்தை நிறுத்த வேண்டும். அதனால் சுகமா யடையலாம். ஆதலால், சாரமற்றதான சம்சார மார்க்கத்திலே யுண்டாகிற தேவ மனுஷ்யாதி சரீரங்களுக்கு உரிய சொர்க்காதி போகங்களுக்கு ஆசைப்பட வேண்டாம். உங்களுக்கு நான் வலுவிலே

வந்து நன்மை சொல்லுகின்றேன். சர்வ பூதங்களி டத்திலேயும் சமத்வபுத்தியைப்பண்ணுங்கள். சர்வ பூத சமத்துவந்தான் அச்சுதனுக்கு ஆராதனமாகும். சர்வே சுரனை எம்பெருமான் பிரசன்னனானால் கிடைக்க முடி யாத துர்லபசெல்வமென்ன இருக்கின்றது? ஆனாலும், தர்மார்த்த காமங்களைப் பிரார்த்திப்பது நல்லதன்று. அவை அற்பங்கள். அவைகளினாலே பிரயோசன மென்ன? மோட்சத்தையும் விரும்பவேண்டாம். ஏனெ னில் நன்றாய்த் பழுத்த மாமரத்தி னடியைச் சேர்ந்தவ னுக்குத் தற்செயலாய்ப் பழம் கிடைக்குமா போலே பரப்பிரமமான அனந்தனென்கிற மகா கல்ப விருக்ஷ த்தை ஆசிரயித்தவனுக்கு மோக்ஷானந்த மென்ற பலம் தன்கடையே கிடைக்கும். சந்தேகமில்லை என்று பிரகலா தாழ்வான் அருளிச் செய்தனர்.

பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று

---

## பதினெட்டாம் அத்தியாயம்

# பிரகலாதர் குருபுத்திரரைக் காத்தது

ஸ்ரீ பராசர மகாரிஷி மேலுஞ் சொல்லுகின்றார்:— அப்புறம் அசுரர் புத்திரர்கள் பிரகலாதருடைய உபதே சத்தைக் கேட்டு, இரணியகசிபுவின் ஆக்கினைக்குப்பயப் பட்டு, அவர் சொன்ன வசனங்களை யெல்லாம் அந்த அசுரேசுவரனுக்குச் சொல்வித்தனர். அசுரேந்திரன் கோபமடைந்து, தனக்குப் பாகஞ் செய்வோரை யழை த்து, "ஓ பாசகர்களே! இந்த மந்த புத்தியனை என் குமாரன், தான் சத்துரு பக்ஷத்தைச் சேர்ந்து கெட்டுப் போனது மல்லாமல் மற்றுமுள்ள பேருக்கும் துன் மார்க்கமான வுபதேசஞ் சொல்லிக் கொடுத்துக் கொண் டிருக்கின்றான். ஆகையால் இவனைத் தாமதமில்லாமல் சங்கரிக்கவேண்டும். ஆனதால் இவனறியாதபடி போச னங்களிலெல்லாம் ஆலகால மென்கிற மகா விஷத்தைக் கலந்து இவனுக்குக் கொடுத்துவிடுங்கள். இந்தக் காரி யத்தைக் குறித்துச் சந்தேகப்படவேண்டாம்" என்று

கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே விஷங் கலந்த அன்னத்தை அவருக்குக் கொடுத்தார்கள். அந்த மகானுபாவன் இதை யறிந்து மனதில் யாதொரு வேறுபாடு மில்லாதவராய் அனந்தன் என்கிற திவ்விய நாம விசேடத்தினால் அந்த அன்னங்களை யெல்லாம் அபிமந்திரித்துச் சந்தோஷமாய் அமுது செய்தார்.

ஸ்ரீ அனந்த நாம உச்சாரணஞ்செய்த பெருமையி னாலே அந்தவிஷம் தன் சக்தியிழந்து அவருடைய உத ரத்தில் ஜீர்ணமாய்விட்டது. பின்பு அந்தப் பாசகர் அந்த மகாவிஷம் அவருக்கு ஜீர்ணமானதைப்பார்த்து, மகா பயம் பிடித்தவர்களாய் தைத்தியேந்திரன் சமுகம் அடைந்து கும்பிட்டு, "தானவேந்திரனே! அதி பயங் கரமான மகாவிஷத்தை அன்னத்தோடு கலந்து வைத் தோம்; உன் குமாரனான பிரகலாதன் அதைப் போச னம்பண்ணி ஜீர்ணமாக்கிக் கொண்டான்" என்று சொல்லக்கேட்டு, இரணியன் அதி யுக்கிரமடைந்து தன் புரோகிதர்களை யழைப்பித்து, "புரோகிதர்களே! விரைவில் அந்தத் துன்மார்க்கப் பையலை கட்டிக் கொண்டுபோய், உங்கள் மந்திரபலத்தினாலே பயங்கர மான கிருத்தியை யுண்டாக்கிச் சீக்கிரத்தில் சங்காரஞ் செய்யுங்கள்" என்று ஆக்யாபித்தான். அந்தப் பிராம ணர்கள் ஆக்கினையைச் சிரமேற்கொண்டு, பிரகலாதாழ் வாளை அணுகி வணக்கத்தோடு நிற்கிற அம்மகாத்து மாவைப் பார்த்துப் பிரியமாகவும் மிருதுவாகவும் சொல்லுகின்றார்கள்.

"சிறு பிள்ளாய்! திரிலோக விக்கியாதமான பிரம குலத்திலே பிறந்து, தைத்தியேந்திரனான இரணிய கசிபுவுக்குத் தனயனான உனக்கு எந்தத் தேவதைகளி னாலேதான் என்ன ஆகவேண்டியது? அந்த அனந்த னாலேதான் என்ன பிரயோசனம்? சகல லோகங்களுக் கும் உன்பிதாவே அதிபதியானதினாலே நீயு மப்படியே சகல லோகாதிபதியாயிருக்கலாம்; ஆகையால் சத்துரு பக்ஷ ஸ்தோத்திரத்தை விட்டு விடு. சகல ஜனங் களுக்கும் உன் பிதாவே பூசிக்கத்தக்கவனும், பரம குரு வாயு மிருக்கின்றார்; ஆகையால், இப்போது நீ அவ

ருடைய ஆக்ஞையைப் பரிபாலனஞ் செய்வதே நியாயம்" என்று புரோகிதர் சொன்னதற்குப் பிரகலாதர், "மகாத்துமாக்களே! உங்கள் வசனங்களெல்லாம் பெரும்பாலும் நிசந்தான். மூன்று லோகத்திலும் பிரம புத்திரனுன மரீசியின் வமிசம் பாவனம் என்று சொன்னது சரிதான். என் தகப்பனுன இரணிய கசிபு உலகங்களுக்கெல்லாம் மேன்மையான தேஜோ பல பராக்கிரமங்களுண்டானவனென்பதும் சரிதான். தகப்பனே பரமகுருவென்பதும் நியாயமானதுதான். நான் அப்படிப்பட்ட தகப்பனிடத்திலே கிஞ்சித்தாகிலும் அபராதம் செய்தேனில்லை.

அஃது போகட்டும். நீங்கள் அநந்தனாலே பிரயோசனமென்னவென்று சொன்னீர்களே; இப்படி பிராக்கியர் சொல்லார்கள். இந்த வசனமொன்றுதான் பொருளில்லாதது" என்று சொல்லி, அவர்கள் ஆசாரியர் என்பதை நினைத்து, மற்றொன்றுஞ் சொல்லாமல் சற்றுநேரம் சும்மாயிருந்து அப்பால் கொஞ்சஞ் சிரித்துக்கொண்டு, அவர்களைப் பார்த்துச் சொல்லுகின்ருர். "உபாத்தியாயரே! அனந்தனாலே பிரயோசனமென்னவென்று சொன்ன வாக்கியம் மகா நேர்த்தியாயிருக்கின்றது; என்னுடைய ஆசாரியர்களே! அநந்தனாலே காரியமென்னவென்று சொன்னது மிக நன்ருயிருக்கின்றது; நான் சொல்வதினாலே மனதில் கிலேசம் வேண்டாம்; அனந்தனாலேயாகிற பிரயோசனத்தைச் சொல்லுகின்றேன் கேளுங்கள்; தர்மார்த்த காம மோட்சமென்கிற இந்நான்கும் புருஷார்த்தமென்று சொல்லப் படுமே. அந்தச் சதுர்வித புருஷார்த்தங்களு மெவனாலே யுண்டாமோ, அந்த அனந்தனாலே பிரயோசனமென்னவென்று சொன்ன வசனங்களை நான் எப்படி யங்கீகரிப்பேன்? மரீசி முதலானவர்களும் தக்ஷர் முதலானவர்களும் மற்றுமுண்டாகிய பெயர்களும் அனந்தனை யாராதித்து, அவ்வனந்தனுடைய கிருபையினாலே தர்மார்த்த காமங்களிலே அவரவர் விரும்பியதைப் பெற்ருர்கள்; தத்துவக் கியானிகளான மகாத்துமாக்கள் ஞான நிஷ்டையினாலே எம்பெருமானை ஆராதித்துச் சமுசார பந்தத்தினின்றும் விடுபட்டவ

ராய் மோக்ஷமடைந்தார்கள்; சம்பத்துக்கும் ஐசுவரியத்துக்கும் பெருமைக்கும் சந்தானலாபத்துக்கும் நல்லகாரியத்துக்கும் மோக்ஷத்துக்கும் ஒன்றாலேயே பெறத்தக்க காரண மெது வென்றால் ஸ்ரீ ஹரியினுடைய ஆராதனமேயாம். இப்படித் தருமார்த்த காமங்களும் மோக்ஷமும் எவனிடத்தினின்றும் பெறப்படுமோ அப்படிப்பட்ட அனந்தனாலேயும் என்ன என்ன வென்கிறீர்களே? ஓ பிராமணர்களே! இதென்ன நியாயம்? இன்னமும் நான் பலபல வார்த்தை சொல்வதில் பிரயோசனமென்ன? நீங்க ளெனக்கு ஆசாரியர்கள். ஆனதினாலே சங்கையில்லாமல் பொல்லாதாகிலும் நல்லதாகிலும் யதேச்சையாகச் சொல்லுங்கள். எனக்கு அதனாலே விசேஷ முண்டாக மாட்டாது. இந்த அற்பமான விவேகந்தான் இருக்கும். இனி என் அபிப்பிராயத்தை விரிவாய்ச் சொல்லியென்ன? முடிவான சித்தாந்தஞ் சொல்லுகிறேன். ஸ்ரீமந் நாராயணனே கர்த்தாவும், வளர்க்கிறவனும், சங்கரிக்கிறவனும், லோகநாதனும், யாவற்றின் இருதயத்தில் இருப்பவனும், சகல யாவற்றையும் அநுபவிக்கிறவனும், அநுபவிக்கப்படுகிறவனுமே யல்லாமல், வேறொருவனு மன்று. இப்படி நான் பாலியத்தினாலே உங்களிடத்தில் சொன்னதைப் பொறுத்தருள வேண்டும்'' என்று பிரகலாதர் சொன்னதைக் கேட்டு, அசுர புரோகிதர்கள் அவரைப் பார்த்து "பாலகனே! இனிமேல் நீ இப்படிச் சத்துரு பக்ஷ ஸ்தோத்திரமான வார்த்தைகளைச் சொல்ல மாட்டாயென்று நினைத்து மகா அக்கினி மத்தியிலே தகித்துக்கொண்டிருந்த உன்னைப் புறத்தே இழுக்கச் செய்தோம். மூடனாகையாலே அதை நீ அறியாமல் மறுபடியும் இப்படிப் பேசுகின்றாய். இனி நீ மூடத்தனமான இப்படிப்பட்ட பிடிவாதத்தை விடாம லிருப்பையே யானால் கடுந்த தண்டனை வுண்டாக்கி, க்ஷண மாத்திரத்திலே உன்னை நாசம் பண்ணுகிறோம்'' என்றதற்கு பிரகலாதாழ்வான் சொல்லுகின்றார்:

"ஓ பிராமணர்களே! ஒருவனாலே யொருவன் இரட்சிக்கப் படுகிறது மில்லை. சங்கரிக்கப்படுகிறது மில்லை. அவனவன் தன்னுடைய நல்லொழுக்கத்தினாலே

தன்னை இரக்ஷித்துக் கொள்ளுகின்றான். தீயவொழுக் கத்தினாலே நாசப்படுத்திக் கொள்ளுகின்றான். நற்கரு கருமத்தினாலே சகல பலங்களும் சற்கதியு முண்டாகின் றன. ஆகையால் சகல பிரயத்தனத்தினாலேயும், சற் கருமமே செய்யவேண்டும்" என்று உரைத்ததைக் கேட்டு தைத்திய புரோகிதர்கள் கோபாவேச மடைந்து, சுவாலா மாலைகளாலே மிகவும் பயங்கரமான முகத்துடனே காணப்பட்ட ஒரு கிருத்தியையை யுண்டாக்கிப் பிரக லாதர்மேலே ஏவினார்கள். அது பூமி நடுங்கும்படிப் பாதங்களை யெடுத்து வைத்துக்கொண்டு இரௌத்திரா காரமாக வந்து சூலத்தினாலே அந்தப் பாலகனுடைய வக்ஷஸ்தலத்திலே குத்திற்று. அந்தச் சூலம் அவரு டைய மார்பிலே பட்ட மாத்திரத்திலே ஒடிந்து தரையில் விழுந்து பொடிப் பொடியாய்ப் போயிற்று. மயித்தி ரேயரே! பகவானும் ஜகதீசுவரனுமான ஸ்ரீஹரி எங்கே பிரியாமலிருப்பனோ, அங்கே வச்சிராயுதமானாலும் பொடியாய்ப் போமென்றால், சூலத்தின் கதையைக் கேட்க வேண்டுமோ? இந்தப்படிக் கிருத்தியை வந்து ஒன்றுஞ் செய்ய மாட்டாதே திரும்பிப் போய்க் குற்ற மில்லாத விடத்திலே தன்னை யேவின பாவச் செய லுடைய புரோகிதர்மேலே விழுந்து தகிக்க ஆரம் பித்தது. அதனாலே தகிக்கப்பட்டுத் தவிக்கிற உபாத்தி யாயர்களைப் பார்த்து, பிரகலாதாழ்வான் மகா தயை யுடையவராகி அவர்களை இரக்ஷிக்கும்பொருட்டு "ஸ்ரீ கிருஷ்ண! ஸ்ரீ அனந்த! இவர்களை இரக்ஷி" என்று சொல்லிக் கொண்டு அவர்கள் அருகில் ஓடி, சுவாமி யைப் பிரார்த்தித்தருளினார்.

"ஓ சர்வவியாபகனே! ஜகத்ரூபனே! ஜகத் கர்த் தாவே! ஜனார்த்தனனே! கடினமான மந்திராக்கினியி னாலே தகிக்கப்படுகிற இந்தப் பூசுரர்களை இரக்ஷித்தருள வேண்டும். சர்வ பூதங்களிடத்திலேயும் ஜகத்குரு வான ஸ்ரீ விஷ்ணுவே வியாபித்திருக்கிறா னென்பது சத்தியமானால் இந்தப் புரோகிதர்கள் பிழைக்கக் கடவர் கள். ஸ்ரீ விஷ்ணுவே யாரிடத்திலும் பிரியாம லிருக் கிறவனென்று நினைத்து சத்துரு பக்ஷத்திலேயும் துவேஷ மில்லாம லிருப்பேனானால் இந்தப் பிராமணர்

கள் பிழைக்கவேண்டும். நான் என்னைச் சங்கரிக்க வந்த தைத்தியரிடத்திலேயும், விஷமிட்ட சுயம்பாகிகளிடத்திலேயும், அக்கினி கொளுத்தின தானவர்களிடத்திலேயும், தந்தங்களாலே பிடித்துக் குத்தின திக்குக் கஜங்களிடத்திலேயும், விஷங் கக்கிக்கொண்டுகடித்த சர்ப்பங்களிடத்திலேயும், சிநேகிதரிடத்திலேயும், சமமான புத்தியுடையவனாகவே யிருந்து எங்கும் ஒரு தீங்கும் நினையாமலிருந்தேனானால், அந்தச் சத்தியத்தினாலே இந்த அசுர புரோகிதர்கள் பிழைத்துச் சுகமாயிருக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்து அனுக்கிரகித்தார். அதனாலே அந்தப் * பூசுரர்கள் வேதனையொழிந்து, சந்தோஷத்தை யடைந்து, வணக்கமாய் நின்ற பிரகலாதாழ்வானைப் பார்த்து, குழந்தாய்! நீ தீர்க்காயுசும் எதிரில்லாத வீரிய பல பராக்கிரமங்களும் புத்திர பௌத்திர செல்வ முதலிய ஐசுவரியங்களும் பெற்றுச் சுகமாயிருக்கக் கடவை'' என்று ஆசீர்வாதஞ் செய்து, இரணியகசிபுவினிடம் போய் அந்தச் சமாசாரத்தை ஸவிஸ்தாரமாகச் சொன்னார்கள்.

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# பிரகலாதர் ஸ்தோத்திரஞ் செய்தது

பராசரமுனிவர் மேல் நடந்ததை அருளிச் செய்கின்றார். அப்பால் இரணியகசிபு, தம் புரோகிதர் உண்டாக்கின கிருத்தியை வீணாய்ப் போனதைக் கேட்டு ஆச்சரியமடைந்து, புத்திரனை அழைப்பித்துக் கேட்கின்றான்; அடா பிரகலாதா! உன் பெருமை அதி யற்புதமாயிருக்கின்றது. இதற்குக் காரண மென்ன? இஃது உனக்கு மந்திரத்தினாலே உண்டானதா? இயற்கையாயுள்ளதா? தெரியச்சொல்'' என, பிரகலாதாழ்வான் தகப்பன் பாதங்களிலே தண்டமிட்டுச் சொல்லுகின்றார்:—

"ஐயா! எனக்கு இந்தப் பெருமை மந்திர தந்திராதிகளாலே உண்டானது மன்று. சுபாவமானது மன்று. எவனெவன் இருதயத்திலே ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்திரமாகப் பிரகாசிப்பனோ, அவனுக்கெல்லா மிப்படிப்பட்ட பிரபாவமுண்டு. யாவனொருவன் தனக்குக் கேட்டை நினையாதது போலே பிறருக்குங் கேட்டை நினையாமலிருப்பானோ அப்படிப்பட்டவனுக்குப் பாவத்தின் காரணமாகிய துரோகமில்லாமையாலே காரியமாகிய பாவம் உண்டாவதில்லை. எவன் மனோவாக்குக் காயங்களினாலே பூதத்துரோகம் (அஃதாவது பிறருக்குத் துன்பஞ் செய்கிறானோ) அவனுக்கு அந்தத் துரோக சிந்தையாகிற விதையினின்றும் விசேஷமான துன்பமுண்டாகின்றது. ஆகையாலே நான் ஸ்ரீ கேசவன் எல்லாப் பூதங்களிலும் வியாபித்திருக்கிறானென்று தன்னிலே நினைத்து, மனோவாக்கு காயங்களினாலே யாருக்கும் துரோகஞ் செய்யாமலிருக்கின்றேன். இவ்வண்ணம் நல்ல சிந்தையுள்ளவனை எனக்கு ஆத்தியாத்துமிகம் ஆதிதெய்விகம் ஆதிபௌதிகம் என்கிற மூன்றுவித துக்கமும் ஏனுண்டாகும். ஆகையால் விவேகமுள்ளவர்கள் ஸ்ரீஹரியே சர்வாத்துமகனா யிருக்கின்றானென்று நினைத்துச் சமகபூதங்களிடத்திலேயும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் இடைவிடாமல் அன்பு செய்யவேண்டும்" என்று சொல்லக் கேட்டு இரணியகசிபு கோபத்தின் ஆவேசத்தினாலே மனதி லிருளடைந்து, அங்கிருந்த அசுர கிங்கரர்களைப் பார்த்து, "நூறுயோசனை உன்னதமான இந்த உப்பரிகையின் மேலிருந்து இந்த துராத்துமாவை கீழே தள்ளுங்கள். இவன் அந்த மலையின்மேலிருந்து விழுந்து உடம்பெல்லாம் சின்னபின்னமாய்ச் சிதைந்துபோகட்டும்" என்று ஆக்கியாபித்தான். அந்தக் கிங்கரர்களும் அந்த மகாத்துமாவை அப்படியே கீழேவிழும்படித் தள்ளினார்கள். அவர் இருதய கமலத்திலே புண்டரீகாக்ஷனை நினைத்துக் கொண்டிருந்ததனாலே, சர்வபூத ரட்சகனான கேசவனுக்குப் பரம பத்தரான அவரைப் பூமிதேவி தன் கைகளாலே ஏந்திக் கொண்டாள்.

இப்படி விழுந்தும் அங்கத்தில் சிறிதேனுஞ் சேதமில்லாமல் சுகமாய் எழுந்திருந்து வந்த மகனைப் பார்த்து, அவ்விரணியன் மனம் பொறுமல் மகாமாயாவியான சம்பராசுரனைக்கூவி, "அசுரோத்தமனே! துர்மார்க்கனான இந்தப் பையனைச் சாகும்படி நான் எத்தனை யுபாயம் பண்ணினாலும், இவன் சாகாமலே யிருக்கின்றான். ஆகையாலே சகல மாயைக்கும் அதிபனான உன் மாயா பலத்தினாலே இந்தத் துராத்துமாவைச் சங்கரிக்கவேண்டும்" என்று சொல்லக்கேட்டு, அந்தச் சம்பரன் சொல்லுவான்; "தைத்தியேந்திரனே! என் மாயாபலத்தைப் பாரும், சஹஸ்ரகோடி மாயைகளைச் செய்து பிரகலாதனைச் சங்கரிக்கின்றேன்" என்று சொல்லித் துர்புத்தியான சம்பராசுரன் சர்வபூதங்களுக்கும் இத சிந்தை செய்யும் பிரகலாதர்மேலே வெகுவிதங்களான மாயைகளைப் பிரயோகித்தான். அவரோ சமாகித சித்தராகி அந்தச் சம்பரனிடத்திலும் துவேஷமில்லாமல் ஸ்ரீ மதுசூதனனையே நினைத்துக்கொண்டிருந்தார். அத்தருணத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய நியமனத்தினாலே அநேக ஆயிரஞ் சுவாலைகளோடு கூடின திருவாழியாழ்வான் அவரை இரக்ஷிக்கும்பொருட்டு அதிவேகமாய் அங்கே யெழுந்தருளி சம்பரன் செய்த மாயைகளை யெல்லாம் தகித்துச் சாம்பலாக்கி விட்டார்.

பின்பு தைத்தியேந்திரன் சம்சோஷக னென்று சொல்லப்படும் வாயுவைப் பார்த்து, "சீக்கிரமாக இந்தத் துஷ்டனை நாசஞ் செய்துவிடு" என்று அனுப்பினான். அவனும், அதிக சீதளமும் அதிக வுக்கிரமுமுள்ளவனாகிச் சகிக்கக்கூடாத விதமாய், அதிசீக்கிரமாகப் பிரகலாதருடைய திருமேனிக்குள்ளே பிரவேசித்தான். பிரகலாதர் அதை யறிந்து, இருதயத்திலே மகாத்துமாவான தரணீதரனைத் தரித்துக்கொண் டிருந்தபடியினாலே, இருதயத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ மதுசூதனன் அந்தச் சம்சோஷகனை விழுங்கி ஒரு கணமாத்திரத்திலே நாசஞ் செய்தருளினான். இதைக் கண்டு இரணியனும் பிரமித்துச் சும்மாவிருந்தான். இந்தப்படிச் சம்பரனாலேவப்பட்ட மாயைகளும் சம்

சோஷக வாயுவும் அழிந்துவிட்டமையறிந்து மகாபுத்தியான பிரகலாதர் மறுபடியும் குரு கிருகத்துக்குப்போய்ப் படித்துக் கொண்டிருந்தார்.

அப்பால் ஆசாரியர் பிரகலாதாழ்வானுக்குத் தினந் தினமும் சுக்கிர புரோக்த்தமான நீதிசாஸ்திரத்திலே இராச்சிய பலப்பிரதங்களான நீதிகளை யெல்லாம் நன்றாயுபதேசித்து வந்து, சிலகால மானபின்பு அவர் நீதி சாஸ்திரக் கேள்வியுடையவராய்த் தனது தேசத்துக்குப் பணிந்திருப்பதாக நினைத்து, அவரை இரணியகசிபுவினிடத்தில் அழைத்துக் கொண்டுபோய் "தயித்தியேசுவரனே! உம்முடைய புத்திரன் சுக்கிராசாரியர் செய்தருளிய நீதிசாஸ்திரத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டு, சகல விவகாரங்களிலேயும் சமர்த்தனானான்" என்று சொன்னார். அதுகேட்டு அவன் பிரகலாதரை வினவுகிறான், "புத்திரனே! அரசன் மித்திரர்க ளிடத்திலேயும், சத்துரு வர்க்கத்திலேயும், மத்தியஸ்த ரிடத்திலேயும், விருத்தி, சாமியம், க்ஷயம் என்பவை நேரிடுங்காலங்களில் எப்படி யிருக்கவேண்டும்? புத்திசகாயரான மந்திரிகளிடத்திலேயும், காரிய சகாயர்களான அமாத்தியரிடத்திலேயும், பாகியரென்று சொல்லப்படுகிற வரி வாங்கிச் சேர்க்கு மதிகாரி முதலானாரிடத்திலேயும், அப்பியந்தாரென்று சொல்லப்படுகிற அந்தப்புரத் ததிகாரி முதலானாரிடத்திலேயும், சாரர்களிடத்திலேயும், பிறஜனங்களிடத்திலேயும், தன் கையினாலே ஜயிக்கப் பட்டுத் தன்னிடத்தில் சேவகஞ் செய்து கொண்டிருக்கும் சத்துருக்களிடத்திலேயும், மற்றைச் சனங்களிடத்திலேயும் அரசன் எப்படி நடந்து கொள்ளவேண்டும்? சந்திவிக்கிரகம் முதலானவைகளிலே எங்கே எதை யெதைச் செய்யவேண்டும்? தனக்குள்ளிருந்து மர்மங்களை யறிந்து பின்பு பிறராலே பேதப்படுத்திக்கொண்டு போக வுடன்பட்டிருக்கும் தன் ஜனங்களைப் பேதியாத படிக்கு நிலைநிறுத்துகிற உபாயமென்ன? சைலதுர்க்கம் வனதுர்க்கம் ஜலதுர்க்கம் முதலான துர்க்கங்களைச் சாதிக்கிற விதமென்ன? அசாத்தியர்களாய் ஆரணியத்திலே வாசஞ்செய்துகொண்டிருக்கும் மிலேச்ச புளிந்தர்களை வசப்படுத்துகிற வுபாயமெது? திருடர் முத

லான துஷ்டர்களை நிக்கிரகிக்கிற விதமெது? இவைகளை யும், சாம தான பேதாதி யுபாயங்களை யெப்படி நடத்த வேண்டுமோ அதையும், நீ நீதிசாஸ்திரத்திலே கற்றிரு க்கிறபடிச் சொல்லவேண்டும். உன்மனதிலிருக்கிற அபிப் பிராயத்தை யறிய விரும்புகின்றேன்'' என்றதற்கு, வினயபூஷணரான பிரகலாதாழ்வான் தகப்பன் பாதத் திலே தண்டமிட்டு, அஞ்சலி பண்ணிக்கொண்டு சொல் லத் தொடங்கினார்:

"என்பிதாவே! ஆசாரியர் சகல நீதிசாஸ்திரங்களு முபதேசித்தார். நானும் படித்தேன். ஆனாலு மிவை யெல்லாம் அசாரமற்றவையென்று எனக்குத் தோன்று கின்றன. மித்திராதிகளை வசப்படுத்துவதற்குச் சாம தான பேத தண்டங்கள் என்கிற நான்கு உபாயங்களைச் செய் யும்படி நீதிசாஸ்திரத்திலே சொல்லி யிருக்கின்றது. ஐயா! கோபியாதேயும். ஜகத்திலே சத்துருமித்திரன் என் பவர்களை நான் காணவில்லை. ஆனதினாலே சாமதானாதி யுபாயங்கள் வீணாகின்றன. சாத்தியமில்லாதபோது சாத னத்தினாலே பிரயோசனமென்ன? சகல பூதங்களையுஞ் சரீரமாகக்கொண்டு ஜகத் ஸ்வரூபியாய் ஜகந்நாதனாய் பரமாத்துமாவா யிருக்கிற ஸ்ரீ கோவிந்தன் எழுந்தருளி யிருக்கையில் சத்துரு மித்திரன் என்னும் பேச்சுக்கு அவ காசமேது? அந்த விவரத்தைக் கேளும். ஸ்ரீவிஷ்ணுபக வான் உம்மிடத்திலேயும் என்னிடத்திலேயும் மற்று முள்ள சகல ஜகத்திலேயும் பரிபூர்ணமா யெழுந்தருளி யிருக்கச் சத்துரு மித்திரன் என்ற பேதம் எப்படியுண் டாகும். ஆனதினாலே இகலோக போக சாதனங்களாய் வீணான சொற்கள் விரித்து அவித்தைக்கு உட்பட்டிருக் கின்ற தண்டநீதி சாஸ்திரங்களினாலே யென்ன பயன்? ஐயனே! பந்தம் நீக்கும்படியான பிரம வித்தியாப்பி யாசத்துக்கே எத்தனஞ் செய்யவேண்டும். குழந்தை மின்மினிப் பூச்சியைப் பார்த்து அக்கினியென்று பிரமித் தாற்போலே சிலர் அஞ்ஞானத்தினாலே அவித் தையை வித்தையென்று நினைக்கின்றார்கள். எது சம் சாரபந்தத்திற்குக் காரணமாகாதோ அப்படிப்பட்ட கருமமே கருமமாம். எது மோக்ஷத்திற்குக் காரண மாகுமோ அப்படிப்பட்ட வித்தையே வித்தையாம்.

மற்றைக் கருமமெல்லாம் வீணான ஆயாசத்தையுண்டாக்குமேயல்லது வேருகா. மற்ற வித்தைகளும் சிற்ப சாமர்த்திய மாத்திரமாய் நிற்குமேயல்லாமல் உபயோகமாகமாட்டா. ஆனதினாலே நீதி சாஸ்திரத்தினால்வரும் இராச்சியாதி பலங்கள் துச்சமென்று நினைத்து உத்தமமான வொரு பொருளைச் சொல்லுகின்றேன், சாவதானமாகக் கேளும். உமக்குத் தண்டமிடுகின்றேன். பூமியிலே இராச்சிய விருப்பம் இல்லாதவனும் அபேக்ஷையில்லாதவனும் உண்டோ? ஆனாலும் பூர்வ புண்ணிய வசத்தினாலே கிடைக்கத்தக்கதே கிடைக்குமல்லாமல் நினைத்தது கிடைக்காது. மகா பாக்கியவானான என் பிதாவே! ஜகத்திலே யாவரும் தமக்கு ஐசுவரிய முண்டாக வேண்டுமென்று முயற்சி செய்கிறார்கள். ஆனாலும் அது ஜன்மாந்தர பாக்கிய வசத்தினாலேயல்லாமல் முயற்சியாலுண்டாகமாட்டாது. விவேகமில்லாதவர்களுக்கும் முயற்சி செய்யாதவர்களுக்கும், நீதிசாஸ்திரமறியாத பேருக்கும், அதிர்ஷ்டவசத்தினாலே இராச்சியாதிகள் உண்டாகின்றன ஆகவே ஐசுவரியத்தை விரும்புகிறவர்களும் புண்ணியமே செய்ய முயற்சிக்க வேண்டும். மோக்ஷ சுகத்தையும் விரும்புவானாகில் எல்லாவற்றையும் சமமாக நினைக்கும்படியான ஞானத்தைக் குறித்து எத்தனஞ் செய்யவேண்டும். தேவ மனுஷிய பசு பக்ஷி விருட்சாதி ரூபமான பிரபஞ்சமெல்லாம் ஸ்ரீ அனந்தனுடைய ஸ்வரூபமாயிருக்கின்றன. ஆனால் அஞ்ஞானிகளுக்கு வேறுபோலே காணப்படுகின்றன. ஸ்ரீவிஷ்ணுபகவான் விசுவரூபதரானதினாலே தாவர சங்கமாத்மகமான பிரபஞ்சத்துக்கெல்லாம் அந்தர்யாமியாயிருக்கின்றானென்று நினைத்து, விவேகியானவன் சமஸ்த பூதங்களையும் ஆத்ம சமானமாகப் பாவித்திருக்கவேண்டும். இந்த ஞானமெவனுக் குண்டாயிருக்குமோ அவனிடத்தில் அநாதியாயும் அறுவகைப்பட்ட ஐசுவரிய சம்பன்னனாயு மிருக்கிற அந்தப் புருஷோத்தமன் பிரசன்னனாவான். அவன் பிரசன்னனானால் சகல கிலேசங்களும் விலகிப்போம்" என்று சொல்லக் கேட்டு, இரணியகசிபு சகிக்கமாட்டாமல் கோபாக்கினி மிகுந்தவனாகிச்சிங்காதனத்திலிருந்தெழுந்திருந்து, குமா

ரனை மார்பிலுதைத்து, குரோதமெரிந்து சொலிக்கச் ஜகத்தைச் சங்கரிக்கின்றவனைப் போலே கையொடு கையையறைந்து கொண்டு, பயங்கரமாக அருகிலிருந்த அசுரரைப் பார்த்துச் சொல்லுகின்றான்; "ஓ விப்பிரசித்தி! ஓ ராகுவே! ஓ பலனே! இப்பையலை நாக பாசங்களினாலே கட்டிச் சமுத்திரத்திலே போடுங்கள். சாவகாசப்படவேண்டாம். இல்லாதேபோனால் சகல லோகங்களும் தைத்திய தானவ சமூகங்களும் மூடனான இந்தப் பாவியின் மார்க்கத்திலே நடந்து கெட்டுப்போம். இந்தத் துர்மார்க்கன் நாமெத்தனை விதத்திலே வேண்டாமென்றாலுந் தன்னுடைய துர்ப்புத்தியை விடாமல் மூர்க்கனாய் சத்துரு பக்ஷ ஸ்துதியே செய்கின்றான். துர்ச்சனங்களைச் சஞ்சரிக்கின்றதினாலே லோகோபகாரமேயல்லாது வேறில்லை. ஆகையால் இவனை நான் சொன்னபடி செய்யுங்கள்" என்று ஆக்கியாபித்தான். தைத்தியர்களும் அவனுக்கினையைச் சிரசிலே தரித்துச் சீக்கிரமாக அந்த மகானுபாவனை நாகபாசங்களினாலே கட்டிக் கடலிலே போட்டார்கள்.

அப்புறம் பிரகலாதர் அதில் வீழ்ந்து அசைய, அதனாலே சமுத்திரமும் அல்லோல கல்லோலமாய்க் கலங்கி வரை தப்பி ஜகமெல்லாம் வியாபித்தது. இப்படிச் சமுத்திரம் பொங்கிப் பூமியில் வியாபித்ததை இரணியன் கண்டு, தைத்தியர்களைப் பார்த்து "சமுத்திரத்திலே முழுகியிருக்கிற இந்தத் துட்டன்மேலே நெருக்கமாகப் பர்வதங்களை யடுக்குங்கள். அக்கினியும் ஆயுதங்களும் உரகங்களும் மாருதமும் விஷமும் கிருத்தியையும் மாயைகளும் திக்குக் கசங்களும் இவனைச் சங்கரிக்கமாட்டாதே போயின. மேலும் இவன் நூறுயோசனையுன்னதமான மேடையிலிருந்து தள்ளப்பட்டு மலைமேல் விழுந்தும் மரணமடையாமற் போனான். துஷ்ட சித்தனான இந்தப் பையன் பிழைத்திருப்பதினாலே யாதொரு புருஷார்த்தமு மில்லை. ஆகையால் ஜலராசி மத்தியிலே மலைகளினாலே நாற்புறத்திலும் அழுத்தப்பட்டுக் கொண்டே பல்லாயிர வருஷகால மிருந்தானாகில் பிராணனை விடுவான்" என்று ஆக்கியாபித்தான். பின்பு தைத்திய தானவர்கள் அதி யுன்னதமான பருவதங்

களைக் கொண்டுவந்து பிரகலாதர்மேலே போட்டுச் சுற்றிலும் ஆயிரம் யோசனை யளவாய் அடுக்கினார்கள். இப்படிப் பிரகலாதாழ்வான் சமுத்திரமத்தியிலே பருவதாக்கிராந்த தேகரா யிருந்து கொண்டு, திருவாராதன சமயத்திலே ஏகாக்கிரசித்தராய் அச்சுதனைத் துதித்தருளினார்:

“ஸ்ரீ புண்டரீகாக்ஷனே! உனக்குத் தண்டம் இடுகின்றேன். புருஷோத்தமனே! உனக்குத் தண்டமிடுகின்றேன். சர்வலோக ஸ்வரூபனே! உனக்குத் தண்டமிடுகின்றேன். உக்கிரமான சக்கிராயுத முடையவனே! உனக்குத் தண்டமிடுகின்றேன். பிரமண்ணியம் என்று சொல்லப்பட்ட தபசு வேதம் முதலானவைகளுக்குத் தேவனும், கோக்களுக்கும் பிராமணர்களுக்கும் இதனும், ஜகத்துக்கெல்லாம் ரட்சகனும், ஸ்ரீ கிருஷ்ணனென்றும் கோவிந்தனென்றும் திருநாம முடையவனும் இருக்கின்ற உனக்கு மேலு மேலுந் தண்டமிடுகின்றேன். பிரம ரூபமாகிச் ஜகங்களைச் சிருட்டித்துக்கொண்டும், தன் ஸ்வரூபமாகி ரட்சித்துக்கொண்டும், கற்பாந்தத்திலே உருத்திர ரூபமாகிச் சங்காரஞ் செய்துகொண்டும், திரிமூர்த்தியாகி விளங்குகிற வுனக்குத் தண்டமிடுகின்றேன். ஓ அச்சுதனே! தேவ அசுர கந்தர்வ கின்னர சித்த சாத்திய பன்னக யக்ஷ ராக்ஷச பிசாச மனுஷிய பசுபட்சி ஸ்தாவர பிபீலிகாதிகளும், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசங்களும், சத்த பரிச ரூப ரச கந்தங்களும், மனோ புத்தி சித்த அகங்காரங்களும், காலமும், அதனுடைய குணங்களும், இவைகளின் பரமார்த்தமான ஆத்துமாவும், இவையெல்லாம் (விசிஷ்டரூபத்தினாலே) நீயே. வித்தை, அவித்தை, சத்தியம், அசத்தியம், பிரவிர்த்தி, நிவிர்த்தி, வேதோக்த்த சர்வ கர்மங்களும் நீயே. ஓ ஸ்ரீ விஷ்ணுபகவானே! சகல கர்ம போகத்தை அநுபவிக்கிறவனும், சர்வ சாதனங்களான திரவியங்களும், சர்வ கர்மபலன்களும் நீயே. ஓ மகாபிரபுவே! என்னிடத்திலேயும் இதரமானவரிடத்திலேயும் சேஷ பூதங்களான சகல லோகங்களிலேயும் நீ வியாபித்திருப்பது, உபாதான நிமித்த காரணரூபமான ஐசுவரியத்தையும்

அனந்த ஞானசத்தி முதலான கல்யாண குணங்களையும் நன்றாய்க் குறிப்பிக்கின்றது. பரமயோகிகள் உன்னைத் தியானஞ் செய்கிறார்கள். யாகசீலரும் உன்னைக் குறித்து யாகம் பண்ணுகின்றார்கள். நீயே பிதுரு ரூபமுந் தேவ ரூபமுந்தரித்து ஹவ்ய கவ்யங்களைப் புசிக்கின்றாய். ஓ அச்சுதனே! மஹத் அகங்காரம் முதலான சூட்சுமங்களும், பிருதிவி முதலான பூதங்களும், அவைகளி விரா நின்ற அதிசூட்சுமமான ஆத்தும தத்துவமுமாகிய இந்த சூட்சும பிரபஞ்சமெல்லாம் எங்கே யிருக்கிறதோ, எங்கிருந்து உண்டாகிறதோ, அது சொரூப குணங்களிலே மிகுந்த உன்னுடைய மகாரூபமா யிருக்கின்றது. சூட்சும முதலான யாதொரு விசேஷணங்களு மில்லாது, சிந்திக்க அரியதாய், யாதொரு ரூபமுண்டோ அதுவே உன்னுடைய பரமாத்மசொரூபம். இப்படிப் பட்ட புருஷோத்தமனை உனக்குத் தண்டமிடுகின்றேன். சர்வாத்துமகனே! சகல பூதங்களிலேயும் சத்துவாதி குணங்களைப் பற்றியதாய், உன்னுடைய யாதொரு பிராகிருத சக்தியிருக்கிறதோ, ஜீவஸ்வரூபமான அத்தச் சத்தியை நமஸ்கரிக்கிறேன். எது வாக்குக்கும்மனத்துக்கும் எட்டாததோ, யாதொரு விசேஷத்தினாலும் விசேஷப் படுத்தக்கூடாததோ, ஞானிகளுடைய ஞானத்தினாலே நிரூபிக்கக் கூடியதோ அப்படிப்பட்ட முக்தாத்தும ஸ்வரூபமா யிருக்கிற உன்னுடைய மேலான சக்திக்கு வந்தனஞ் செய்கின்றேன். * எவனுக்கு வேறான தொன்றுமில்லையோ, எவன் எல்லாவற்றிற்கும் வேறாயிருக்கிறானோ, அப்படிப்பட்ட பகவானை ஸ்ரீ வாசுதேவனுக்குத் தண்டமிடுகின்றேன். கர்மாதீனமான நாமரூபங்களில்லாமல், விலக்ஷணனாய் இருக்கிறதாக மாத்திரம் எவன் காணப்படுவனோ, அப்படிப் பட்ட மகாத்துமாவுக்கு நமஸ்காரம். அவனுக்கு நமஸ்காரம். அவனுக்கு நமஸ்காரம். சங்கர்ஷணாதி வியூத ரூபியானவனுக்கு நமஸ்காரம். தேவதைகளும் எவனுடைய பராத்பரமான உருவத்தைக் காணமாட்டாமல் மச்ச கூர்மாதி அவதார ரூபங்களையே அர்ச்சனை செய்

* இங்கே ஸ்ரீமத் த்வாதசாக்ஷர மகாமந்திரம் முன்பின் மாற்றி அனுசந்திக்கப்பட்டும், அதின் அர்த்தம் சூசுப்பிக்கப்பட்டும் இருக்கின்றன.

வார்களோ, அந்தப் பரமாத்துமாவுக்கு வந்தனம். எவன் உருத்திராதி சகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாகி சுபாசுபங்களைக் கண்டுகொண்டிருப்பவனோ, அந்தச் சர்வசாட்சியும் பரமேஸ்வரனுமான ஸ்ரீ விஷ்ணு தேவனுக்குத் தண்டமிடுகின்றேன். காணப்படுகின்ற இந்தச் ஜெகமெல்லாம் எவனோடு பேதமில்லாம லிருக்கின்றதோ, அந்த விஷ்ணுவுக்கு வந்தனஞ் செய்கின்றேன். சகலத்துக்கும் ஆதியான ஸ்ரீஹரி எனக்குப் பிரசன்னனாகக் கடவன். அட்சரமென்கிற பெயரையுடையவனா யிருக்கிற எவனிடத்திலே பிரபஞ்ச மெல்லாம் நூலில் வஸ்திரம் கலந்திருப்பதுபோலே கலந்தும், நூலில் மணிகள் கோக்கப்பட் டிருப்பதுபோலே கோக்கப்பட்டும் இருக்குமோ, அந்தத் தியானகம்யனை அச்சுதன் என்னிடத்திலே பிரசன்னனாகக்கடவன். * சர்வஸ்வாமியாய் சர்வசேஷியாயிருக்கிற அந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு தண்டமிடுகின்றேன். எவனிடத்திலே சகலமும் பிரளய காலத்திலொடுங்குமோ, எவனிடத்திலிருந்து சகலமும் சிருட்டி காலத்தில் உண்டாகுமோ, எவன் சகல சரீரகனும் சகலாதாரமாயும் இருக்கிறானோ அந்த ஸ்வாமிக்குப் பலதரம் தண்டமிடுகின்றேன். † ஸ்ரீ அனந்தன் எங்கும் ஆத்துமாவாய் உள்ளும் புறமும் வியாபித்து ஞானானந்தமயனாய் நிறைந்திருக்கிற படியினாலே நானும் அவனாகவே யிருக்கின்றேன். ஆகையால் என்னிடத்தி னின்றும் எல்லாமுண்டாயிற்று. நானே சகலமுமா யிருக்கின்றேன். எப்போது மிருக்கின்ற என்னிடத்திலே எல்லா மிருக்கின்றன. நானே அவ்யயனும் நித்தியனும் வேறோராதாரமின்றித் தன்னிலேயே தானிருப்பவனுமிருக்கிற பரமாத்துமாவா யிருக்கின்றேன். நான் சிருட்டிக்கு முன் பிரமமென்னும் பெயரையுடையவனா

* இங்கே ஸ்ரீஷடாக்ஷர மந்திரம் நேராய் அனுசந்திக்கப்பட் டிருக்கின்றது.

† சகலமும் எம்பெருமானுடைய விபூதியாய், அவனைப்பற்றியே நிற்பதும் இயல்வதுமாகிச், சற்றும் சுதந்தர மில்லாம லிருப்பதைப்பற்றி எம்பெருமானே எல்லாமென்றும், அவனல்லது வேறொன்று மில்லையென்றும் அவனுக்குள்ளேயே சொருகித் தன்னையும் அனுசந்தித்தபடி. இதுதான் விசிஷ்டாத்துவைதம்.

யிருந்தேன். அப்படியே பிரளயகாலத்திலேயும் எல்லா முள்ளே யொடுங்கும்படியான பரமபுருஷனை யிருப் பேன்” என்று இவ்வாறு பிரகலாதாழ்வான் தியானித் துக் கொண்டிருந்தார்.

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபதாம் அத்தியாயம்

# பிரகலாதருக்கு நரசிங்கன் பிரத்தியக்ஷம்

இங்ஙனம் பிரகலாதர் சர்வகாரணனும் சர்வாத் மகனுமான ஸ்ரீவிஷ்ணுதேவன் தம்மைச் சரீரமாகக் கொண்டவனாய், உள்ளும் புறமும் வியாபித்துப் பூர் ணமா யிருக்கின்றதினாலே, விஷ்ணுமயராகத் தம்மை நினைத்து விஷ்ணு வில்லாத வஸ்து வொன்றும் வேறே காணாமையாலே, திரிகுணாத்மகமாய் அனாதிப் பிரகிருதி வாசனா மலினமாய் மற்ற காலத்திலேதோன்று இற ஆத்தும ஸ்வரூபத்தை மறந்தார். தாம் அவ்யய னும் நித்தியனுமான பரமாத்துமாவுக்குச் சரீர பூதராய் தன்மயரென்று நினைத்தார். இந்தப்படி யோகாப்பியாசப் பிரபாவத்தினாலே கிரமக் கிரமமாகச் சகல கர்மங்களி னின்றும் விடுபட்டவராய் அத்தியந்த பரிசுத்தரான அவருடைய அந்தக்கரணத்திலே ஞானமயனும் அச்சு தனுமான ஸ்ரீவிஷ்ணுபகவான் பிரகாசித்தருளினான்.

அப்பால் யோகப் பிரபாவத்தினால் பிரகலாதர் விஷ்ணுமயரானதினாலே, அவருடைய அங்கத்திலே கட்டியிருந்த நாகபாச பந்தங்கள் கணமாத்திரத்திலே சின்னபின்னமாக அற்று விழுந்தன. பின்பு சமுத்திர மானது, மீன் ஆமை முதலை முதலான சீவஜந்துக்க ளெல்லாம் ஏங்கி நிற்கவும் அலைகள் ஒன்றின்மே லொன்று விரைவாய்ப் பாய்ந்து கரைகளை முழுத்தவும், ஒரு பெருங்கலக்கத்தையுடைய, மலைகளும் காடுகளும்

கூடிய சகல பூமண்டலமும் நடுங்கிப்போயிற்று. அப்போது மகா புத்திசாலியான பிரகலாதாழ்வான், தைத்தியர் தம்மாலே போட்டிருந்த பருவதங்களையெல்லாம் விலக்கித் தள்ளிக் கொண்டு, சமுத்திரத்தை விட்டுப் புறப்பட்டு வெளியில் வந்து, ஆகாசாதிகளினாலே குறிப்பிக்கப்பட்ட உலகத்தைப்பார்த்து, லௌகிக திருஷ்டியினாலே தான் பிரகலாத நாமதேயன் இரணியகசிபு மகனென்று நாமசாதியாதி விசேஷண சமேதராக மறுபடியுந் தம்மை நினைத்தார். புத்திசாலியான அந்த அசுர சிகாமணி ஏகாக்கிர சித்தராகி, மனோவாக்குக் காயங்களைச் சுவாதீன மாக்கிக்கொண்டு, வியாகுலத்தை விட்டு, அநாதி புருஷோத்தமனை அச்சுதனைத் திரும்பியுந் துதிசெய்தருளினார்.

"பரமார்த்தமான பிரயோஜனமானவனே! ஸ்தூல சூட்சும ரூபனே! வியத்தமாயும் அவியத்தமாயு மிருப்பவனே! * பஞ்சேந்திரியாதி கலைகளைக் கடந்தவனே! யாவற்றுக்கும் ஈசுவரனே! நிரஞ்சனனே! குணங்களைத் தோற்றுவிப்பவனே! குணங்களுக் காதாரமானவனே! பிராகிருதகுண மில்லாதவனே! சகல சற்குணமுமுடையவனே! மூர்த்தமும் அமூர்த்தமு மானவனே! மகாமூர்த்தியான விசுவரூபமும், சூக்ஷ்ம மூர்த்தியான வியூக ரூபமும், வெளிப்படையாய்த் தோன்றுகிற விபவ ரூபமும், அப்படித்தோன்றாத பரஸ்வ ரூபமு முடையவனே! சத்துரு சங்காராதி காலங்களில் குரூரமாயும் சுபாவத்தில் சாந்தமாயுமுள்ள உருவமுடையவனே! ஞானமயனாயும் அஞ்ஞானமயனாயு மிருப்பவனே! உள்ளது மில்லது மானவனே! நல்லதா யிருப்பவனே! எல்லாவற்றிற்கும் உண்மையையும் இன்மையையுங் கற்பிப்பவனே! நித்தியா நித்திய பிரபஞ்சாத்மகனே! பிரபஞ்சங்களுக்கு மேற்பட்டவனே! நிருமலர் ஆசிரியிக்கப் பெற்றவனே! அச்சுதனே! உனக்குத் தண்டமிடுகின்றேன். ஏகா! அநேகா! வாசுதேவா! ஆதிகாரணா! உனக்குத் தண்டமிடுகின்றேன். எவன் ஸ்தூல ரூபத்தினால் தோன்றுகின்றவனும், சூட்சுமரூபத்தினால்

* பொறிகள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும். கலைகள் என்று சொல்லப்படும்.

தோன்றுதவனுமாயிருக்கிறானோ, எவன் சகல பூதங் களையும் சரீரமாகக்கொண்டு எல்லாவற்றிலும் தான் விலக்ஷணமா யிருக்கின்றானோ இந்த வுலகமெல்லாம் விஷம சிருட்டி காரணமாகாத எவனிடத்தினின்று முண்டாயிற்றோ, அந்தப் புருஷோத்தமனுக்குத் தண்ட மிடுகின்றேன்" என்று பலவாய்த் தோத்திரஞ் செய்த பிரகலாதரிடத்திலே ஸ்ரீ ஹரிபகவான் பிரசன்னனாய்ப் பீதாம்பராதி திவ்ய லக்ஷணங்களோடு அவருக்குப் பிரத்தி யக்ஷமாய்ச் சேவை சாதித்தான். அப்போது அந்தப் பரமபாகவதர், பயபக்தியுடனே எம்பெருமானைச் சேவி த்து, சந்தோஷத்தாலும் ஆச்சரியத்தாலும் தடுமாற, "ஸ்ரீ விஷ்ணுவுக்குத் தண்டமிடுகின்றேன்" என்றனே கந்தரஞ் சொல்லிப் பிரார்த்தித்தார்:

ஸ்வாமீ! சரணாகதி செய்தவர்களுடைய துக்கத் தைப் போக்கடிக்கிறவனே! ஸ்ரீ கேசவனே! அடியே னிடத்திலே பிரசன்னனாகி, இப்படி யெக்காலமும் பிரத்தியக்ஷமாகச் சேவை தந்து இரக்ஷித்தருள வேண் டும்" என்று வேண்டிக்கொண்டார். அப்போது ஸ்ரீபக வான் அவரை நோக்கி, "ஓ பிரகலாதனே! நீ இந்த பலங்களை விரும்பாமல், மற்றவர்களையு மெண்ணாமல், என்னிடத்திலே பரமமான ஏகாந்த பக்தியைச் செய்தா யாகையினாலே உனக்குப் பிரசன்னனானேன்; இஷ்ட மான வரங்களை வேண்டிக்கொள்" என்றருளிச்செய்ய, பிரகலாதாழ்வான் "ஸ்வாமீ! அச்சுதனே! அடியேன் தேவ திரியக் மனுஷியாதி சன்மங்களிலே எந்த ஜன்ம மெடுத்தாலும் அந்த ஜன்மங்களி லெல்லாம் உன் னிடத்திலே இடையறாத பக்தி விசேஷ முண்டாகவேண் டும். மேலும் விவேக மில்லாத ஜனங்களுக்கு நல்ல சந்தன வனித முதலிய போக்கிய வஸ்துக்களிலே யெப் படிப்பட்ட பிரீதி யுண்டாகுமோ, அப்படிப்பட்ட பிரீதி விசேஷமானது உன்னை ஸ்மரிப்பதில் அடியேனுடைய மனதினின்றும் நீங்காமலிருக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, எம்பெருமான் பக்தசிகாமணியைக் கடா க்ஷித்து, "பிரகலாதனே! முன்னமே யென்னிடத்திலே பிரியாத பக்தி விசேஷ முனக் குண்டா யிருக்கின்றது. இன்னமு மப்படியே அபிவிர்த்தியாகும். அது போகட்

டும். இப்போது உனக்கு வேண்டிய வரங் கேள்" என்று அனுக்கிரகிக்க, பிரகலாதாழ்வான் பிரார்த்திக்கின்றார்:

"எம்பெருமானே! உன்னைத் துதிக்காநின்ற அடியேன் இடத்திலே மாச்சரியம் பாராட்டினதனாலே அசஹயமான அபசாரம் பண்ணினவனானாலும் இரணியன் என் தகப்பன் என்பது பற்றிப் பாவமில்லாதவனாகும்படி அனுக்கிரகிக்கவேண்டும். அன்றியும் ஆயுதங்களினாலே அடிப்பித்தும், அனலிலே போடுவித்தும், சர்ப்பங்களாலே கடிப்பித்தும், போசனத்திலே விஷத்தை இடுவித்தும், நாக பாசங்களினாலே கட்டிச் சமுத்திரத்திலே போடுவித்தும், பருவதங்களாலே துவைப்பித்தும், இவ்வாறு மற்றும் நானாவிதங்களான உபத்திரவங்களைச் செய்து, உன் பக்தனை அடியேனை சங்கரிக்கப் பார்த்த என் தகப்பனுக்குச் சம்பவித்திருக்கின்ற அளவில்லாத மகா பாபங்கள் உன் கடாட்சத்தினாலே நாசமாகவேண்டும். இதுதான் அடியேனுக்கு வேண்டிய வரம்" என்றதற்கு, மதுசூதனன் அவரைப்பார்த்து "பிரகலாதனே! என் அனுக்கிரகத்தினாலே நீ கேட்டபடி யாகும். சந்தேகமில்லை. இன்னமும் நான் உனக்கு வேண்டிய வரங் கொடுக்கின்றேன் கேள்" என்றருளிச்செய்ய, பிரகலாதர் சொல்லுகின்றார்: "புருஷோத்தமனே! உன்னுடைய திருவடித் தாமரைகளில் பிரியாத பக்தி யுண்டாகும்படி அனுக்கிரகித்ததினாலே அடியேன் கிருதார்த்தனானேன். சகல ஜகத் காரணபூதனான உன்னிடத்திலே எவனுக்கு அசஞ்சலமான பக்தி விசேஷ முண்டாகுமோ, அவனுக்குச் சர்வோத்தமமான மோட்சமென்பது கையிலிருக்குமன்றோ. அப்படி யிருக்க, அவனுக்குத் தர்மார்த்த காமங்களாலே ஆகவேண்டுவதென்ன" என்று விண்ணப்பஞ் செய்யக் கேட்டு, ஸ்ரீபகவான் அந்த அசுரோத்தமனைப் பார்த்து, "குழந்தாய்! உன்னிதய மென்னிடத்திலே பக்தியோடுகூடி எப்படி அசஞ்சலமா யிருக்கின்றதோ, அப்படியே என்னனுக்கிரகத்தினாலே பரமமான மோட்சானந்தத்தையும் பெறுவாய்" என்று அருளிச்செய்து, அவர் பார்த்துக்கொண்டே யிருக்க அந்தர்த்தானமா யெழுந்தருளினார்.

பிரகலாதாழ்வான் திரும்பியும் நகரத்துக்கு வந்து தகப்பனுடைய பாதங்களிலே தண்டமிட்டு நின்றார். அப்போது தகப்பனான இரணியன் புத்திரன் திறத்தில் தான் செய்ததற்காகப் பச்சாதாப மடைந்து, கெட்டியாய்க் கட்டிக்கொண்டு, உச்சிமோந்து, கண்களில் நீர் ததும்பிநிற்க, "அடா குழந்தாய்! பிழைத்து வந்தாயா? என்று அதி பிரீதியோடு லாலனை செய்தான். கேட்டீரோ மைத்திரேயரே! பரம தார்மிகரான பிரகலாதரும், தகப்பனுக்கும் ஆசாரியருக்கும் பணிவிடை செய்து கொண்டு சுகமாயிருந்தார்.

அப்பால் சிறிதுகாலத்துக்குப் பிறகு இரணியகசிபுவானவன் முன்பு நேர்ந்திருக்கின்ற பிரம்ம சாப வசத்தினாலே, பகவானிடத்தில் துவேஷம் முற்றி மறுபடியும் மகனைக்கொல்ல யத்தனித்தபோது, ஸ்ரீ ஹரிபகவான் நரசிம்ஹ ரூபியாய் அவ்வரக்கன் சுட்டிக்காட்டிய ஒரு ஸ்தம்பத்தினின்றுந் தோன்றி அவ்வசுரராஜனைச் சங்கரித்தருளினார்.

பின்பு பரம பாகவதரான பிரகலாதர் தைத்திய ராச்சியத்தில் பட்டாபிஷேகஞ் செய்யப் பெற்று, அந்த ராச்சிய போகத்தினாலே பிராப்த கர்மங்களைக் கழித்து, புத்திர பௌத்திராதிகளையும் பெற்று, பிராப்த கர்மானுபவமாகிற அதிகாரங் கழிந்தவுடனே இரண்டையும் விட்டு, பகவத்தியான யோகத்தினாலே பரமமான மோட்சத்தை யடைந்தார்.

மைத்திரேயரே! பரம பக்தாக்கிர கண்ணியரான பிரகலாதருடைய மகிமையைச் சவிஸ்தாரமாகச் சொன்னேன். எவன் மகாத்துமாவான பிரகலாதருடைய சரித்திரத்தைச் சமாகித சித்தனாகிக் கேட்பானோ அவனுக்கு அப்போதே சகல பாபங்களுந் தீர்ந்துபோம். பிரகலாதருடைய சரித்திரத்தைப் படிக்கிறவர்களுக்கும் கேட்கிறவர்களுக்கும் அகோராத்திர கிருதங்களான பாபங்களெல்லாம் நீங்குவதற்குச் சந்தேகமில்லை. எவன் இந்தச்சரித்திரம் படிக்கிறானோ அவன் பௌர்ணமாசையிலேயும் அமாவாசையிலேயும் துவாதசியிலேயும் அஷ்டமியிலேயும் திவ்ய க்ஷேத்திரத்திலே சூரியகிரகண புண்ணியகாலத்தில் சுவர்ணசிருங்க முதலானவை

களாலே அலங்கரிக்கப்பட்ட உபயதோமுகியான பசுக்களைச் சற்பாத்திரத்திலே பூரணமான தக்ஷிணைகளோடு தானஞ்செய்த பலனை அடைவான். எவன் பக்திபூர்வமாக பிரகலாதாழ்வானுடைய சரித்திரத்தைக் கேட்கிறானோ அவனை ஸ்ரீமந் நாராயணன் பிரகலாதரை இரட்சித்தாற் போல சகல ஆபத்தையும் விலக்கிச் சர்வகாலமும் இரக்ஷித்தருளுவன்.

இருபதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்தோராம் அத்தியாயம்

# தனு முதலானவர்களுடைய சந்ததிக்கிரமம்

கேளும் மயித்திரேயரே! இப்படி மகாப் பிரபாவ சம்பன்னரான பிரகலாதருக்குச் சிபி பாஷ்கலன் விரோசனன் என்கிற மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். விரோசனனுக்கு பலிச் சக்கரவர்த்தி பிறந்தான். பலிக்கு பாணாசுரன் முதலான நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். இஃது இருக்கட்டும். இரணியாட்சனுக்குச் சர்ச்சரன் சகுனி பூதசந்தாபனன் மகாநாபன் மகாபாகு காலநாபன் என்கிற பிள்ளைகளறுவர் பிறந்தனர்.

இப்படி திதிவமிசக்கிரமம் சொன்னேன். இனிக் காசிபருக்குப் பாரியையான தனு முதலான பெண்களுடைய வமிசங்களைச் சொல்லுகிறேன் கேளும். தனுவென்பவளுக்கு துவிமூர்த்தா சம்பரன் அயோமுகன் சங்குசிரன் கபிலன் சங்கரன் ஏகவக்திரன் தாரகன் சொர்ப்பானு விருஷபர்வா புலோமன் விப்பிரசித்தி முதலாக மகாபல பராக்கிரமசாலிகளான பிள்ளைகள் உண்டானார்கள். அவர்களிலே சொர்ப்பானுவுக்குப் பிரபை யென்பவளும், விருஷபர்வாவுக்கு சர்மிஷ்டை யென்பவளும், வைசுவானரனுக்கு உபதானவி அயசிரை புலோமை காலகை என்று சொல்

* உபயதோர்முகி என்பது இருபுறத்திலும் முகத்தையுடையது, என்றால் கன்றை யீன்றுகொண்டே யிருக்கையில் இருக்கும் விதம்.

லப்பட்ட நான்கு கன்னிகைகளும் பிறந்தார்கள். அவர்களுள் புலோமை காலகை என்ற மகானுபாவைகளான கன்னிகைகள் மரீசிக்குப் பாரியைகளாய், பௌலோமர் என்றும் காலகேயர் என்றும் பிரசித்தரான அறுபதினாயிரம் பிள்ளைகளைப் பெற்றார்கள். இரணிய கசிபுவுக்குச் சகோதரியான சிம்ஹிகை, விப்பிரசித்திக்குப் பாரியையாகி, திரியமிசன் சல்லியன் நயன் வாதாபி இல்வலன் நமுசி கசிருமன் அந்தகன் நாகன் கால நாபன் இராகு என்று சொல்லப்பட்ட மகாசத்தியுள்ள பிள்ளைகளைப் பெற்றாள். இப்படித் தனுவென்பவள் வமிசத்தை விருத்தியாக்கினவர்களாய், மகாபல பராக்கிரமமுடையவர்களாயுள்ள அசுரர் அநேகர் பிறந்தார்கள். இவர்களுக்குச் சதசஹஸ்ர சங்கைகளாகப் புத்திரவளத் திரசந்தானங்களு முண்டாயின. மேலும் முன்பு நான் சொல்லியபடி ஆத்துமக்கியானவானை பிரகலாதாழ்வான் வமிசத்திலே நிவாத கவசர் என்னும் தைத்தியர் தோன்றினர். தாம்பரை யென்பவளுக்குக் காசிபரிடத்தினின்றும் சுசி சேனி பாசி சுக்கிரீவை கிருத்திரி சுசி என்னும் ஆறுபெண்கள் பிறந்தார்கள். அவர்களில் சுகிக்குக் கோட்டான்களுங் காக்கைகளும் பிறந்தன. சேனியென்பவளுக்குப் பருந்துகளும் பாசிக்குச் செம்போத்துகளும், கிரித்திரிக்குக் கழுகுகளும், சுசிக்குத் தண்ணீர்ப் பறவைகளும், சுக்கிரீவைக்கு அசுவங்களும் ஒட்டகங்களும் கழுதைகளும் பிறந்தன. இது தாம்பிரையின் வமிச விவரம். இனி விநதைக்கும் கருடன் அருணன் என்று இரண்டு புத்திரர் பிறந்தார்கள். அவர்களில் கருடன் சர்ப்பங்களைப் புசிக்கிறவனாய்க் கடூரமான ரூபமுள்ளவனாய்ப் பட்சி குலத்துக்கெல்லாம் சிரேஷ்டனுமாய், ஜகத்திலே கீர்த்திபெற்றிருந்தான். சுரசை யென்பவளுக்கு மகாப் பிரகாசமுள்ளவைகளும் அநேக சிரசுள்ளவைகளும் மகாசத்தி யுடையவைகளும் ஆகாசத்தில் சஞ்சரிக்க வல்லவைகளும் மகாப் பிரபாவமுள்ளவைகளுமான சர்ப்பங்களாயிரம் பிறந்தன. சத்துருவுக்கும் பலமும் தேஜசு முண்டானவைகளாய் அநேக பணுமண்டல மண்டிதங்களாயுள்ள அநேக நாகங்கள் உண்டாயின. அவை கருடனுக்கு வசப்

பட்டிருந்தன. இந்த நாகர்களிலே சேஷன் வாசுகி தக்ஷகன் சங்கன் சுவேகன் மகாபத்மன் கம்பளன் அசுவதரன் ஏலாபுத்திரன் கார்க்கோடகன் தனஞ்சயன் என்பவர்கள் முக்கியமானவர்கள். இவர்களும் மற்று மநேகரும் விஷச்சுவாலா பயங்கரங்களாயும் தீக்ஷண தந்தங்களாயுமுள்ள முகங்களோடு கூடியிருப்பார்கள். குரோதவசை யென்பவளுக்குப் பதினாயிரம் பேர் வரையில் ராக்ஷசரும் சர்ப்பங்களும், நிலத்திலும் நீரிலுஞ் சஞ்சரிக்கிற பக்ஷிகளும் பிறந்து, குரோதவச கணமென்று பேர் பெற்றார்கள். அவர்களெல்லாம் மிகவும் குரூரமான பற்களுள்ளவர்களும் பயங்கரமானவர்களும் மாமிச போசனஞ் செய்பவர்களுமா யிருந்தார்கள். சுரபி யென்பவளுக்கு மாடுகளும் எருமைகளும் பிறந்தன. இரை யென்பவளுக்கு விருட்சங்களும் கொடிகளும் புல்லுகளு முண்டாயின. கஸையென்பவளுக்கு யட்ச ராட்சதர்களும், மனுவென்றவளுக்கு அப்சரசுகளும், அரிஷ்டை யென்றவளுக்கு மகா பலவான்களும் கந்திருவர்களும் ஜனித்தார்கள். இவ்விதமாய்த் தாவரங்களும் ஜங்கமங்களுமான காசிபருடைய சந்தானங்களையெல்லாம் விசதமாகச் சொன்னேன். அவர்களுடைய புத்திர பௌத்திராதி சந்ததிகளோ, அசங்கைகளாக ஜகத்துள்ளே விளங்கி யிருந்தன. மயித்திரேயரே! இது சுவாரோசிஷ மனுவந்திரத்திலே நடந்த சிருஷ்டியின் விதம். இனி வைவச்சுத மனுவந்தரத்திலே வருணன் மகா வைபவமான யாகம் செய்துகொண்டிருக்க, அதில் சதுர்முகன் ஹோதாவாகி அதை நிர்வகித்துக் கொண்டிருக்கையில், பிரசாசிருஷ்டி செய்த விதத்தை விவரிக்கின்றேன் கேளும். தேவரிஷி கந்தர்வ பன்னகாதிகளுக்குப் பிதாமகனான சதுர்முகன் நூதன சிருஷ்டி செய்யக் காலம் பெறாமல், பூர்வம் சுவாரோசிஷ மனுவந்தரத்திலே தன் சங்கற்பத்தினாலே யுண்டான சத்தரிஷிகளைப் பார்த்து, "வைவச்சுத மனுவந்திரத்திலே நீங்களே பிரஜைகளைச் சிருஷ்டியுங்கள்" என்று நியமித்தார். அவர்களும் அப்படியே செய்தார்கள். தேவதைகளினாலே தயித்தியராதிய அசுரரெல்லாம் விநாசமாய்ப் போனதனாலே திதியென்பவள் புத்

திரசோகமடைந்து, அநேககாலம் பர்த்தாவான காசிபரை ஆராதித்து வந்தாள். அந்தக் காசிபர் சந்துஷ்டி யடைந்தவராகித் திதியை நோக்கி, "பெண்ணே! அபீஷ்டமான வரத்தைக் கேள்" என்றுசொல்ல, அந்தத் திதியானவள் தனக்கு அதிபராக்கிரமசம்பன்னனாய் இந்திரனைச் சங்கரிக்கத் தக்கவனான ஒரு புத்திரன் உண்டாகவேண்டும் என்று பிரார்த்தித்தாள். அந்த முனீந்திரர் அவளைப் பார்த்து, "என் பிரிய பத்தினியே! உனக்கு மஹேந்திரனைச் சங்கரிக்குஞ் சாமர்த்திய முள்ளவனான மகன் வேண்டுமானால், நூறு வருஷம் சமசித்தத்துடனே சுசியாய்க் கர்ப்பத்தைத் தரித்திரு. அதனால் உன் இஷ்டப்படி புத்திரன் உண்டாகும்" என்று சொல்லி அவளோடு சேர்ந்தார். அவளும் அதனாலே கர்ப்பந்தரித்து, நித்தியமும் சுசியாய் விரதத்தை அநுஷ்டித்துக் கொண்டிருந்தாள். இப்படியிருக்க, இந்திரன் இச்செய்தி யறிந்து சமீபத்திலே வந்து, விநயத்தோடு சிசுருஷை செய்துகொண்டு, கர்ப்பத்தைச் சேதம் பண்ணச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். இருக்கையில் சிலநாள் குறைய நூறுவருடமாகுங்காலத்தில், ஒருநாள் திதிதேவி பாதசுத்தி செய்யாமல் வந்து படுக்கையிற் படுத்து நித்திரை செய்தாள். அப்போது பாகசாதனன் அவள் அசுசியாயிருப்பதறிந்து, வச்சிராயுதத்தைக் கையி லெடுத்துக் கொண்டு, சூட்சுமரூபமாக அவள் வயிற்றிலே பிரவேசித்து, அந்தக் கர்ப்பத்தை ஏழுதுண்டாகத் துண்டித்தான். அப்போது அந்தச் சிசு மகாநாதமாக ரோதனஞ் செய்ய, இந்திரன் "உரோதனஞ் செய்யவேண்டாம்" என்று அநேகந்தரஞ்சொல்லி, இன்னுங் கோபமாறாமல் அந்த ஏழு கண்டங்களையும் மறுபடியும் எவ்வேழாகக்கண்டித்தான். அப்பால் அந்த நாற்பத்தொன்பது துண்டங்களுக்கும் "(மாரோதீ:) ரோதனஞ் செய்யாதே" என்று சொன்ன காரணத்தினாலே மருத்துக்களென்கிற நாமதேய முண்டாயிற்று. பின்பு அந்த மருத்துக்கள் விவேக சத்துவ சம்பன்னராய் இந்திரனுக்குச் சகாயமாகத் தேவதைகளா யிருந்தார்கள்.

இருபத்தோராம் அத்தியாயம் முற்றிற்று.

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# தேவதாதிகாரமும் பகவத்வைபவமும்

பராசரமகாரிஷி அருளிச்செய்கின்றார்:—கேளும் மயித்திரேயரே! பூர்வகாலத்திலே பிருதுமகாராசா மகாரிஷிகளாலே ராச்சியாபிடேகஞ் செய்யப் பெற்ற போது, பிரம்மா, சந்திரனைக் கிரக நட்சத்திரங்களுக்கும் ஓஷதிகளுக்கும் பிராமணர்களுக்கும் யக்கியங்களுக்கும் தவங்களுக்கும் ராஜாவாகவும், குபேரனை ராசாக்களுக்கு அதிபதியாகவும், வருணனை ஜலத்துக்கு அதிபதியாகவும், விஷ்ணுவென்கிற சூரியனை ஆதித்தியர்களுக்குப் பிரபுவாகவும், தக்ஷனைக் கர்த்தமர் முதலான பிரசா நாதருக்கு அதிபதியாகவும், இந்திரனை வசுருத்திராதித்திய பிரமுகரான தேவர்களுக்கு அதிபதியாகவும், பிரகலாதரை தயித்திய தானவர்களுக்கு நாயகராகவும், யமதர்மராஜனைப் பிதுர்தேவதைகளுக்கு இராசாவாகவும், ஐயிராவதத்தைச் சமஸ்த கஜாதிபதிகளுக்கும் அதிபதியாகவும், கருடனைச் சகல பக்ஷிகளுக்கும் அதிகாரியாகவும், வாசுகியை நாகாதிபதியாகவும், உச்சைச்சிரவத்தைக் குதிரைகளுக் கெல்லாம் அதிபதியாகவும், விருஷபராசனை கோக்களுக்கு அதிபதியாகவும், இமவானைப் பருவதங்களுக்குப் பிரபுவாகவும், கபிலரை முனிகளுக்கு இராசாவாகவும், சிங்கத்தை மிருகங்களுக்கு இந்திரனாகவும், வியாக்கிரத்தை நகமும் பல்லுமுள்ள மிருகங்களுக்குப் பிரபுவாகவும், கல்லால மரத்தை விருட்சங்களுக்குச் சிரேட்டமாகவும், ஏற்படுத்தி, இப்படியே மற்றுமுண்டான அந்தந்தச் சாதிகளுக்கும் தகுந்தபடி தலைவர்களாகுப்படியான *இராச்சியாதிபத்தியங் கொடுத்தருளினார். இப்படித் தலைவர்களை ஏற்படுத்திய பின்பு, அந்தப் பிரம்மா வயிராசப் பிரசாபதியின் குமாரனை சுதன்வாவைக் கீழ்த்திசைக்கு அதிபதியாகவும், கர்த்தமப் பிரசாபதியின் தநயனை

* இங்கே அதிபதிகளாகச் சொன்ன பொருள்கள் ஆளுகையினாலே மாத்திர மன்று. வைதிகத்துக்கு உபயோகமாகத் தலைமையினாலேயும் என்றறிக.

சங்கபதனைத் தென்றிசைக்கு அதிபதியாகவும், ரஜசு என்னும் பிரசாபதியின் புத்திரனை கேதுமானென்பவனை மேற்றிசைக்கு அதிபதியாகவும், பர்ச்சன்னியப் பிரசாபதியின் மகனை இரணியரோமா என்பவனை வடதிசைக்கு அதிபதியாகவும் நியமித்தார். அவர்களினாலே த்வீப சமுத்திர பர்வதாதிகளோடு கூடின பூமண்டலமெல்லாம் இதுவரையிலும் தங்கள் தங்கள் எல்லைகளிலே தர்மமாகப் பரிபாலனஞ் செய்யப்பட்டு வருகின்றன. இப்போது நான் சொன்னவர்களும் மற்ற அரசர்களும் ஜகத்தை ரட்சிப்பதில் புகுந்திருக்கிற ஸ்ரீமந் நாராயணனுடைய விபூதியா யிருக்கிறவர்களென்றறியும். பூர்வத்திலே இருந்தவர்களும் இப்போதிருக்கிறவர்களும், இனிமே லுண்டாகு மவர்களுமான பூதாதிபதிகள் யார் யாருண்டோ அவர்களெல்லாம் சர்வமயனாயிருக்கிற ஸ்ரீ விஷ்ணுவினுடைய அமிசபூதரென்றறியவும். தேவ தானவ பிசாச மனுஷ்ய பசு பட்சி பன்னகாதிபதிகளும், கிரகாதிபதிகளும், விருட்ச பருவதாதி பதிகளுமாயிருக்கிற சென்றவர்களும் உண்டாகுமவர்களும், யாவரும் சர்வபூதமயனான ஸ்ரீ விஷ்ணு பகவானுடைய அமிச பூதரேயல்லாமல் வேறல்லர்.

ஓ பிராஞ்ஞரே! ஜகத் ரட்சண தீட்சிதனும் சர்வேசுவரனுமான ஸ்ரீஹரிக்கல்லாமல் வேறொருவனுக்கு இரட்சிக்கிற சாமர்த்தியம் உண்டாயிருக்க மாட்டாது. இவ்வளவே யன்று. அவன் சத்துவ குணாசிரயமான சொரூபத்தோடே ஜகத்தை எப்படி ரட்சிக்கிறானோ அப்படியே ராஜச தாமசகுணங்களை யங்கிகரித்துச் சிருட்டி காலத்திலே சிருஷ்டி கர்த்தாவாகிச் சிருட்டித்துக் கொண்டும், பிரளயகாலத்திலே சங்கார கர்த்தாவாகிச் சங்காரஞ் செய்துகொண்டு மிருக்கின்றான். அந்தச் சனார்த்தனன் சிருட்டியிலும் நான்குவிதமுடையவனாய், அப்படியே ஸ்திதி சங்காரங்களிலும் நந்நான்கு பேதமுடையவனா யிருக்கின்றான். எப்படியெனில் முதலமிசத்தினாலே பிரமாவாயும், இரண்டா மமிசத்தினாலே மரீசிப் பிரமுகரான பிரசாபதிகளாயும், மூன்றா மமிசத்தினாலே காலமாயும், நாலா மமிசத்தினாலே சகல பூதங்

களாயும் இரசோகுணத்தை ஆசிரயித்து சிருட்டிப்பான். ஸ்திதி காலத்திலே சத்துவகுணசிரயமான முதலமிசத்தினலே நானுவித திவ்யாவதார ரூபியாயும், இரண்டாமமிசத்தினலே மனுவாதிரூபியாயும், மூன்றும் அமிசத்தினலே காலரூபியாயும், நாலாமாமிசத்தினலே சகல பூதலங்களிலே யிருந்தும் இரட்சிப்பான். சங்கார காலத்திலே தமோ குணத்தை யாசிரயித்து, முத லமிசத்தினலே ருத்திரரூபந் தரித்தும், இரண்டா மமிசத்தினலே அக்கினி வாயு அந்தகாதி ரூபங்களைத்தரித்தும், மூன்று மமிசத்தினலே காலசொரூபந் தரித்தும், நாலா மமிசத்தினலே சர்வ பூதாந்தரியாமியாக இருந்தும் சங்கரிப்பான்.

ஓ மயித்திரேயரே! இப்படியே கற்பந்தோறும், சிருட்டி திதி சங்காரங்களிலே எம்பெருமானுக்கு நந்நான்குபேதஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. பிரமாவும் தக்ஷாதிகளும் காலமும் சகல பூதங்களும் ஸ்ரீவிஷ்ணு தேவனுடைய லோகசிருட்டி ஹேதுக்களான லீலா விபூதிகள். உபேந்திராதி யவதார சொரூபங்களும் மனுமுதலானவர்களும்,காலமும்,சகல பூதங்களும், ஸ்ரீவிஷ்ணுவினுடைய லோகஸ்திதி ஹேதுக்களான லீலா விபூதிகள் ருத்திரனும், யமன் முதலானரும், காலமும் சகல பூதங்களும், நாராயணனுடைய லோக சங்கார காரணங்களான விபூதிகள். பிரம்மாவும், மரீசி முதலான பிரஜாபதிகளும், ஆதிகாலமுதலாகப் பிரளயகாலம் வரைக்கும் சதுர்வித பூதசாதங்களைச் சிருஷ்டித்து வருகின்றார்கள். எப்படியென்றால், ஆதிகாலத்தில் பிரம்மாவினலும், இடையிலே மரீசி முதலான பிரஜாபதிகளினலும் பின்பு அந்தந்த ஜந்துக்களாலும் சிருஷ்டிக்கப்பட்டு வருகின்றன. சிருட்டிக்கெல்லாம் முக்கிய காரணம் காலம். காலசக்தி யில்லாமல் பிரமாவும் தட்சாதிகளும் பிரஜைகளும் சிருஷ்டிக்கமாட்டார்கள். ஸ்திதியும் இப்படி காலசக்தி யில்லாமல் யாராலுமாகாது. பிரளயத்திலே உருத்திராதிகளும் காலசக்தியில்லாமல் சங்கரிக்க மாட்டார்கள். மயித்திரேயரே! அநேக வார்த்தைகளினலே பிரயோசனமென்ன? எததினலே எது சிருட்டிக்

கப் படுகின்றதோ அந்தச் சிருட்டிக்கப்படும் வஸ்து வின் உற்பத்தியைக் குறித்துக் காரணமாயிருக்கிற அவ் வஸ்து வெல்லாம் எம்பெருமானுடைய திருமேனியே யாம். இப்படியே ஒன்றைச் சங்கரிக்கிற வஸ்து ஏது ண்டோ அதுவும் சங்கார ஹேதுவான ஜனார்த்தன னுடைய உருத்திர ரூபமாம். ஸ்ரீ விஷ்ணுவே சிருட்டி யும் இரட்சணையும் சங்காரமும் செய்கிற சீவன்களுக்கு அந்தரியாமியாகிச் சிருட்டி திதி சங்காரங்களைச் செய் தருளுகின்றான். இந்தப்படிச் சத்துவ ரச தமோ குணங் களிலே புகுந்து, சிருட்டி காலமுதலான காலங்களிலே மூன்றுவிதமா யிருக்கிற பிரமாதி ஸ்தாவராந்த மான நாராயணனுடைய ரூபத்தை விவரித்தேன். இனி முத்த ஜீவ மயமான அவனுடைய ரூபாந்தரத்தைச் சொல்லுகிறேன் கேளும். பிரகிருதி குணவர்ச்சிதமும், ஞானகுணவத்துவம், சுயம்பிரகாசமும், உபமான ரகித மும், சகல பூதவியாபகமும் பிரம்மாதி சீவசாதங்களைக் காட்டிலும் சிரேஷ்டமுமான முக்தசீவ ஸ்வரூபமும், நாராயணனுடைய பரஸ்வ ரூபமென்று சொல்லப் படும். அதுவும் நான்குவிதமாக இருக்கும் என்று பராசர முனீந்திரர் அருளிச்செய்ய மயித்திரேயர், முனீந்திரரே! ஞானமயமாய் நாராயணனுக்குச் சரீரபூத மான முக்த சொரூபம் நான்கு விதமாக இருக்கின்ற தென்று சொல்லி யருளியதை விசதமாகத் தெரிவிக் கும்படிப் பிரார்த்திக்க, ஸ்ரீ பராசரர் அருளிச்செய் கின்றார்.

மயித்திரேயரே! உலகத்தில் இஷ்ட வஸ்துவைச் சம்பாதிக்கக் கருவியாய் உள்ளது சாதனமென்றும், இஷ்ட வஸ்துவானது சாத்தியமென்றுஞ் சொல்லப்ப டும். மோட்சத்தை விரும்பின யோகிக்குப் பிராணயாமா திகள் சாதனமும், பரப்பிரம்மமானது சாத்தியமுமாக இருக்கின்றது. யோகிகளுக்கு முத்தி நிமித்தமாய் யோக சாஸ்திரத்தினாற் பிறந்த பிராணயாம முதலான சாதனங்களுடைய ஞானமானது அந்த ஞானமய ஸ்வரூபத்துக்கு முதற்பேதம். பாதமோசனார்த்தமாக யோகாப்பியாசஞ் செய்துகொண் டிருக்கிறவனுக்குச்

சாத்தியமாய் சாங்கிய சாஸ்திரத்தி னுலுண்டான ஆத்தும விஷயமான ஞானமானது இரண்டாவதுபேதம். இவ்விரண்டும் சாத்திய சாதன சம்பந்தத்தினுலே சேர்ந்ததாய், தேவ மனுஷியாதி பேதமில்லாத ஆத்துமாவைப்பற்றி வியாபித் திருக்கிற தியானரூபமான ஞானமானது மூன்ருவது பேதம். இந்த மூவகைப் பட்ட ஞானங்களுக்கும் சாதனமா யிருத்தலாகிய விசேஷம் யாதுண்டோ அதைத் தள்ளுதலினுலே தோன்றுகிற ஆத்தும சாக்ஷாத்காரமானது நாலாவது பேதம். இந்த ஞான விஷயமான ஆத்தும ஸ்வரூபமானது சாதனுனுஷ்டான மில்லாததாய் ரூபாதிகளுக்குக் கோசரமாகாததாய், சுருக்கமில்லாமல் வியாபித்திருப்பதாய், உபமானரகிதமாய், தன்னுலே அறியத்தக்கதாய், விருத்தி அழிவுமுதலான இல்லதாய், குறிகளினுலே அறியப்படாததாய், உணவாசை முதலிய ஆறு ஊர்மிகளுமற்றதாய், பயமில்லாததாய், கர்மசம்பந்தமற்றதாய், இப்படியென்று ஊகிக்கப்படாததாய், யாதொன்றையும் பற்ருததாய் நின்று, ஞானமயமான ஸ்ரீ விஷ்ணுதேவனுக்குப் பிரமமென்று பேர்கொண்ட சொரூபமென்று சொல்லப்படும். எந்த யோகிகள், அந்த ஸ்வரூபத்திலே முடிவுகாலத்து நினைப்பின் பலத்தினுலே வேருன நினைப்பெல்லாந் தவிர்த்து சகல உபாதிகளுமில்லாமையாகிற லயத்தை யடைகின்ருர்களோ அவர்கள் சம்சாரமாகிற கழனியில் விதைப்பதற்கு உமி நீங்கின அரிசிபோலே விதையாமற் போவார்கள்.

நாம் விவரித்த முத்த ஸ்வரூபத்துக்கு உள்ள சகல குணங்களையு முடையதாய், நித்திய சுத்தமாய், சர்வாத்துமகமாய், பரிபூர்ணமாய், ஹேயகுணங்களில்லாததாய், கல்யாணகுணங்களுடையதாய் ஸ்ரீவிஷ்ணு என்று திருநாமமுள்ள உத்தமமான ஸ்வரூப மொன்றுண்டு. அதுதான் பரப்பிரமமென்று சொல்லப்படும். அந்தப் பரப்பிரமத்தையடைந்த யோகீந்திரன் புனராவிருத்தி யில்லாதே புண்ணிய பாபவர்ச்சிதனுய், சகல கிலேசமு மில்லாதவனுய், அத்தியந்த நிர்மலமான ஆனந்தானுபவஞ் செய்துகொண்டிருப்பான். அந்தப்

பரப்பிரம்மத்துக்கு மூர்த்தம் அமூர்த்தம் என்று இரண்டு ரூபமுண்டு. அவற்றுள் பிரமாதி ஜீவசாதங்கள் மூர்த்த மென்று சொல்லப்படும். அஃது அழிவதாகையால் க்ஷர மென்று பேர் பெறும். முக்தஸ்வரூபமானது அமூர்த்த மென்று சொல்லப்பட்டு, அறியாத் தாகையாலே அக்ஷர மென்று பேர்பெறும். ஏகதேசத்தி லிரா நின்ற அக்கினி யினுடைய பிரபாவிசேஷம் விஸ்தாரமாக வியாபித்திருக் கிறதுபோலே பரப்பிரமமான ஸ்ரீமந் நாராயணனுடைய சக்தி விசேஷமானது சகல ஜகத்தையும் வியாபித்திருக் கின்றது. அக்கினி சமீபத்திலே யிருந்தால் பிரபாவிசே ஷம் மிகுதியாயிருக்கும். தூரத்திலேயிருந்தால் சொற் பமாயிருக்கும். அது போலே ஸ்ரீமந்நாராயணனுடைய சத்தியும் பிரமாதி ஸ்தாவராந்தமான ஜகத்திலே ஏறவுங் குறையவும் வியாபித் திருக்கின்றது. அந்த விவரஞ் சொல்லுகின்றேன் கேளும். பிரம விட்டுணு ருத்திரர்க ளிடத்திலே பரப்பிரம சத்தி மிகுதியாக வியாபித்திருக் கும். அதிலே பிரம ருத்திரர்களிடத்திலே அனுப்பிரவேச மாகவும், விஷ்ணுவினிடத்திலே சொரூபமாகவுமிருக்கு மென்று அறியவேண்டும்! இனி அவர்களைக்காட்டிலும் தேவதைகளும், அவர்களைக்காட்டிலும் தக்ஷாதிகளும் அவர்களைக்காட்டிலும் மனுஷியர்களும், அவர்களைக் காட்டிலும் பசு பட்சி சரீசி ரூபங்களும் அவைகளைக் காட்டிலும் விருக்ஷம் கொடி செடிகளும் முறை முறை யாய்க் குறைந்திருக்கும். இந்தப்படி (தோற்றம் மறைவு) உற்பத்தி நாசம் முதலான விகற்பங்களை யுடையதாயும் கணக்கில்லாததாயும் நித்தியமாயு மிருக்கிற இந்தப் பிர பஞ்சம் எம்பெருமானுக்கு ஒரு ரூபம். முதலிற்சொல்லப் பட்ட சர்வ சக்திகளையு முடையவனுக்கு மூர்த்தமான வேறு ரூபமொன்றுண்டு. மந்திர ஜபாதி சகிதமான சாலம்பனமென்கிற மகா யோகத்தை அப்பியசிக்கிற சமயத்திலே யோகிகளுக்குள் அஸ்திர பூஷணாதி சகித மும் திவ்வியமுமான விஷ்ணுதேவனுடைய அந்த ரூபந்தான் தியானஞ் செய்யவேண்டுவது. சித்தத்தை நிச்சலமாக்கி யோகாப்பியாசஞ் செய்கிற யோகிகளுக்கு இப்போது அறிவித்த தியான விசேஷம் சித்திக்கும். ஓ மயித்திரேயரே! அந்த எம்பெருமானுக்கு நாம் முன்

சொன்ன சகல ரூபங்களைக்காட்டிலும் பரமமானரூபம் அந்த விஷ்ணுஸ்வரூபமேயல்லது வேறில்லை. அது வே திருவுள்ள முகந்த ஸ்வரூபம். ஏனென்றால் அந்த ஸ்ரீ அரியே சர்வாத்துமகமான பரப்பிரம சொரூபம். அவனிடத்திலே சகல லோகங்களும் வஸ்திரத்திலே நூல்களைப்போலே கலந்து கோப்புண்டிருக்கின்றன. எப்படியென்றால் சகல லோகங்களும் அவனாலேயுண்டாகி அவனிடத்திலே நின்றிருக்கின்றன. க்ஷராக்ஷரமயனை ஸ்ரீவிஷ்ணு, பிரகிருதி புருஷாதிகளையெல்லாம் அஸ்திர பூஷணங்களாகத் தரித்திருப்பவன் என்று அருளிச்செய்யக் கேட்டு, மயித்திரேயர் வினவுகின்றார். முனீந்திரரே! ஸ்ரீமந்நாராயணன் சகல ஜகத்தையும் அஸ்திர பூஷண சொரூபமாகத் தரித்திருக்கும் விதத்தைச் சொல்லவேண்டுமென ஸ்ரீபாராசரர் அருளிச்செய்கின்றார்.

அப்பிரமேயனையும் சர்வசக்தனையும் சர்வேசுவரனையு மெழுந்தருளியிருக்கிற ஸ்ரீவிஷ்ணுதேவனுக்குத் தண்டம் சமர்ப்பித்து, என் பிதாமகனை வசிஷ்ட முனீந்திரர் அருளிச்செய்த பிரகாரம் நாராயணனுடைய அஸ்திர பூஷணாதி சொரூபம் விவரிக்கிறேன் கேளும். † லோகத்தோடு ஒட்டாதவனும், பிரகிருதிகுண ரகிதனுமான க்ஷேத்திரக்கியனே கவுஸ்துவ மணியாகவும், ஜகதாதி காரணமான மூலப் பிரகிருதியே ஸ்ரீவச்சமென்கிற மறுவாகவும், புத்தியே கௌமோதகி யென்ற கதையாகவும், தாமசாகங்காரமே பாஞ்சசன்னிய மென்கிற சங்காகவும், சாத்விகாங்காரமே சார்ங்கமென்ற வில்

† ஜீவன் முதலானவைகள் அததின் அபிமானி தேவதைகள் ரத்தினத்தைப்போலே நிர்மலமாய்ச் சுயம்பிரகாசமாகையாலே ஆத்துமாவைக்கவுஸ்துவ மணியாகவும், பிரகிருதி லீலாவிபூதி யாகையாலே அதைப் பிராட்டி எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவச்சமாகவும், புத்திதத்துவம் ஸ்திரமாகையாலே அதைக் கதாயுதமாகவும், சப்தாதி காரணமாகையாலே பூதாதியைச் சங்காகவும், இப்படியே உவமைபற்றித் தத்துவங்களெல்லாம் அஸ்திர பூஷண ரூபமாயிருக்கின்றனவென்று கண்டுகொள்ளவேண்டும். சேதநா சேதந வசிஷ்டமான தன் ஸ்வரூபத்தை உபாசிப்பதற்கு எம்பெருமான் உகந்து திருவுள்ளம்பற்றிய சூட்சும திவ்விய மங்கள விக்கிரமிதுதான்.

லாகவும், சலனாத்துமகமான மனமே மகா வேகத்தி னாலே வாயுவை நிராகரிக்கத் தக்க சுதரிசன மென்ற சக்கரமாகவும், பஞ்சமகா பூதங்களும் முத்துமாணிக்க மரகத இந்திர நீல வச்சிர மயமாய்ப் பஞ்ச வர்ணமான வைசயந்தி யென்கிற வனமாலையாகவும், ஞானேந்திரி யங்களும் கர்மேந்திரியங்களும் அம்புகளாகவும், வித் தையே அத்தியந்த நிர்மலமான நந்தக மென்கிற கத்தி யாகவும், அவித்தையே அக்கத்தியின் உறையாகவும், இப்படி ஸ்ரீமந்நாராயணன் பிரகிருதி புருஷர்களையெல் லாம் அஸ்திர பூஷண சொரூபமாகத் தரித்து, விசித்திர சக்தியுத்தனாகிச் சேதனர்களுக் கெல்லாம் இதஞ் செய்தருளுவான். மயித்திரேயரே! வித்தையும் அவித்தையும் சேதனமும் அசேதனமும் நாராயண னிடத்திலேதான் இருக்கின்றன. கலாகாஷ்டா முகூர்த்த அகோராத்திர மாச அயந வருடரூபமான காலமும் ஸ்ரீ ஹரியின் சொரூபம். பூலோக புவர்லோக சுவர் லோகங்களும், மகாலோக ஜனலோக தபோலோக சத் தியலோகங்களும், தேவ மனுஷ்ய பசு பக்ஷியாதி சீவ சாதங்களும், இருக்கு யசுர் சாமம் அதர்வண மென்கிற வேதங்களும், உபநிஷத்துகளும், இதிகாசங்களும், வேதாங்கங்களும் மநுவாதிஸ்மிருதிகளும், கல்பசூத்தி ராதிகளும், காவியங்களும், கீதங்களும், மற்றுமுண் டான சாஸ்திர சாதங்களும், மூர்த்தங்களாயும் அமூர்த் தங்களாயு மிருக்கிற பதார்த்தங்களும், ஸ்ரீ மந்நாராயண னுடைய சரீரமென்று நினையும். எல்லாருக்கும் ஸ்ரீஹரியே ஆத்துமபூதன். சகலமும் அவனே. ஜனார்த் தனனைக் காட்டிலும் காரியமுங் காரணமுமான வேறே வஸ்து இல்லை, என்று திடசித்தமுண்டானவன் ஜன்ம சம்பந்தமான தொந்த துக்கமில்லாதவனாய்ப் பரமமான மோட்சானந்தத்தை யடைவன்.

மயித்திரேயரே! சகல பாபக்ஷயகரமான ஸ்ரீவிஷ்ணு புராணத்திலே பிரதமாம்சத்தை இருபத்திரண்டு அத்தி யாயத்தால் சவிஸ்தாரமாய்ச் சொன்னேன். சமாகித சித்தர்களாகி இம்முதல் அம்சத்தைக் கேட்ட மனித ருக்கு புஷ்கரத்திலேயும் புண்ணிய தீர்த்தங்களிலேயும்

பன்னிரண்டு வருஷம் கார்த்திகை பௌர்ணமாவாசையில் ஸ்நானஞ் செய்த பலனுண்டாம். புத்திர பௌத்திர தன கனக வஸ்து வாகனங்களும், அட்சயமான பரமபத சுகமுமுண்டாம். தேவரிஷி பிதுர் கந்தர்வ யக்ஷாதிகளுடைய சிருஷ்டிக் கிரமத்தைக் கேட்ட மனுஷியர்களுக்கு தேவரிஷி கந்தர்வாதிகளும் சந்தோஷத்தை யடைந்து எளிதிலே சகலாபீஷ்டங்களையும் கொடுப்பார்கள்.

*இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

**ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலம்சம்**

*முற்றிற்று.*

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ விஷ்ணு புராணம்

## இரண்டாம் அம்சம்

### முதல் அத்தியாயம்

### பிரயவிரத வம்ச விஸ்தாரம்

மயித்திரேயர் ஸ்ரீபராசர முனிவரை நோக்கி "ஓ மகானுபாவரே! லோகசிருஷ்டி சம்பந்தமாக எந்தெந்தக் கேள்விகள் அடியேன் கேட்டேனே அவைகளுக்கெல்லாம் உத்தரம் தேவரீர் அருளிச்செய்தீர். அப்படித் தேவரீ ரருளிச்செய்த முதலம்சத்திலேயே அந்த லோகசிருஷ்டி சம்பந்தமாக மறுபடியும் ஒரு விஷயத்தைக் கேட்க விரும்புகின்றேன். சுவாயம்புவ மனுவுக்குக் குமாரர்களான பிரயவிரதன், உத்தானபாதன் என்பவர்களுக்குள்ளே உத்தானபாதனுக்குத் துருவன் என்ற புத்திரன் பிறந்தானென்று அருளிச்செய்தீர். மற்றவனான பிரயவிரதனுடைய சந்ததியையோ அருளிச்செய்யவில்லை. ஆதலால் அதைக்கேட்க விரும்புகின்றேன். அடியேனிடத்திற் கிருபை செய்து அருளிச்செய்ய வேண்டும்" என, பராசர முனீந்திரர் அருளிச்செய்கின்றார்:—

கேளும் மயித்திரேயரே! அந்தப் பிரயவிரதன் கர்த்தமப் பிரஜாபதியின் புத்திரியைக் கலியாணஞ்செய்து கொண்டு சம்ராட்டு குக்ஷி என்கிற இரண்டு கன்னிகைகளையும் ஆக்கினீத்திரன் அக்கினிபாகு வபுஷ்மான் தியுதிமான் மேதா மேதாதிதி பவியன் ஸவனன் புத்திரன் ஜியோதிஷ்மான் என்னும் பத்துப் புத்திரர்களையும் பெற்றான். அவர்கள் மகா கியானவான்களும் மகா சத்தியவான்களும் வணக்க முள்ளவர்களுமாகித் தகப்பனுக்கு இனியரா யிருந்தனர். இவர்களுள் ஜியோ

திஷ்மான் என்பவன் அவன் பெயர்ப்பொருளின்படி மகா தேஜசு உள்ளவனு யிருந்தான்.

இப்படி மகா பல பராக்கிரமசாலிகளான பிரயவிரத குமாரர்களுக்குள்ளே மேதா, அக்கினிபாகு, புத்திரன் என்னு மூவரும் பூர்வ ஜன்ம ஞானத்தினுல் யோகாப்பியாசத்தில் முக்கியராய் மகானுபாவராய் இராச்சியாதி முதலான சகல விஷயங்களிலும் பற்றற்றவராய்க் கரும பலன்களை விரும்பாராகி, விதிப்படிக் கருமாதிகளைச் செய்து வந்தார்கள். ஆனதால் தகப்பன் பிரயவிரதன் தனது ஏழு துவீபங்களையும் மகாத்துமாக்களான மற்ற எழுவருள் ஆக்கினீத்திரன் ஜம்பூத்துவீபத்தையும், மேதாதி பிலக்ஷத்துவீபத்தையும், வபுஷ்மான் சால்மலத் துவீபத்தையும், ஜியோதிஷ்மான் குசத்துவீபத்தையும், தியுதிமான் கிரவுஞ்சத்துவீபத்தையும், பவியன் சாகத்துவீபத்தையும், ஸவனன் புஷ்கரத்துவீபத்தையும் ஆளும் படிக்குப் பிரித்துக்கொடுத்து அவர்களை அவைகளுக்கு அரசராக்கினுன்.

இவர்களுள் ஜம்பூத்துவீபத்தின் அதிபதியான ஆக்கினீத்திரனுக்குப் பிரசாபதி சமானரான நாபி, கிம்புருஷன், ஹரிவருஷன், இளாவிரதன், இரமியன், இரண்வான், குரு, பத்திராசுவன், கேதுமாலன் என்னும் ஒன்பது புத்திரர் பிறந்தார்கள். இவர்களுடைய பிதா தன்னிராச்சியமான ஜம்பூத்துவீபத்தை ஒன்பது பங்காக்கி நாபிக்குத் தென்புறமான * பாரத வருஷத்தையும், கிம்புருஷனுக்கு ஹேமகூட வருஷத்தையும், ஹரிவருஷனுக்கு நைஷதவருஷத்தையும், இளாவிரதனென்பவனுக்கு மேருபர்வதம் நடுவிலே யிருக்கப்பெற்ற இளாவிருத வருஷத்தையும், இரம்மியனென்பவனுக்கு நீலாசலத்தைச் சேர்ந்த இரம்மியக வருஷத்தையும், ஹிரண்வானுக்கு அதற்கு வடக்கிலுள்ள சுவேத வருஷத்தையும், குருவென்பவனுக்குச் சிருங்கவத்தென்னுமலைக்கு வடக்கிலுள்ள குருவருஷத்தையும், பத்திராசுவனுக்கு மேருபர்வதத்திற்குக் கிழக்கிலிருக்கிற பத்திராசுவ வருஷத்தையும், கேதுமாலனுக்கு கந்தமா

* வருஷம் என்ருல் வாசஞ்செய்யுமிடம் என்பதாம்.

தன வருஷத்தையும் கொடுத்து; அவர்களுக்கு இராச்சிய பட்டாபிஷேகஞ் செய்து, அவ்வரசன் தவவேடம் பூண்டு மகா பரிசுத்தமான ஸாளக்கிராம மென்னுந் திவ்விய க்ஷேத்திரத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

கிம்புருஷவருஷ முதலான எட்டு வாசஸ்தானங்களிலும் வசிப்பவர்களுக்கு யாதொரு முயற்சியுமில்லாமலே பெரும்பான்மையும் சுகானுபவமே கிடைக்கும். மேலும் துக்கானுபவமும், மூப்பு, சாவு, இவைகளினாற் பயமும், தருமம் அதருமம் என்பவைகளும், உத்தமன் மத்தியமன் அதமன் என்கிற வித்தியாசங்களும், பிராணிகளுடைய உடம்பு முதலானவை குறைதலாகிய அடையாளமுள்ள யுகபேதங்களு மில்லை. ஹிமாஹ்வயம் அல்லது பாரதம் என்கிற வருடத்திற்கு அதிபதியான நாபியென்பவனுக்கு மேருதேவி யென்பவளிடத்தில் மகாதேஜஸ்வியான இரிஷபரென்பவர் உதித்தார். அவ் இரிஷபருக்குப் பரதர் பிறந்தார். அவர் நூறு பேருக்குள்ளே மூத்தவர். இரிஷப மகாராஜன் தர்மமாக இராச்சிய பரிபாலனஞ் செய்து, அநேகவிதமான யாகங்களையும் நிறைவேற்றி, மூத்த குமாரனை பரதனுக்கு இராச்சிய பட்டாபிஷேகஞ் செய்வித்துத் தான் தவஞ்செய்யும்பொருட்டு புலகருடைய ஆச்சிரமமான ஸாளக்கிராம க்ஷேத்திரத்திற்குச் சென்றான். அவ்விடத்திலும் வானப்பிரஸ்த விதிப்படி யிருந்து விசேடமாகத் தவங்களையும் யாகங்களையுஞ் செய்து, அந்தத் தவ முயற்சியினாலே உடம்பெல்லாம் நரம்புகள் வெளிப்பட்டுக் காணும்படி மிகவு மிளைத்துப் போய்ப் பின்பு வஸ்திரங்களையு மெறிந்து, நிர்வாணமாய் வாயில் பந்தைப்போன்ற கற்கவளத்தை வைத்துக்கொண்டு, அங்கிருந்து மகாப்பிரஸ்தானம் போய்விட்டான்.

கேட்டீரோ மயித்திரேயரே! இப்படிப் பரதமகாராஜனுக்குக் கொடுக்கப்பட்டதினால் இவ்விடமானது உலகங்களில் பாரதவருடமென்று வழங்கப்படுகின்றது. அந்தப் பரதனுக்கு மகா தர்மசீலனான சுமதி என்ற புத்திரன் பிறந்தான். அந்தப் பரதரும் நீதிப்படி இராச்சிய பரிபாலனத்தையும் யாகங்களையுஞ் செய்து புத்திரனுக்கு இராச்சியத்தைக் கொடுத்துவிட்டு ஸாளக்கிராம

க்ஷேத்திரத்திற்குப் போய் யோகாப்பியாசஞ் செய்து கொண்டிருந்து பிராணனை விட்டார். அவர் மறுபடியும் உத்தமமான யோகிவமிசத்திலே பிராமணனுகப் பிறந்தார். மயித்திரேயரே! அவருடைய சரித்திரத்தை உமக்குப் பின்னுலே சொல்லுகின்றேன்.

அந்தச் சுமதிக்கு இந்திரத்தியும்நன் என்ற குமாரன் பிறந்தான். அவனுக்குப் பரமேஷ்டி என்பவன் குமாரன். அவனுக்குப் புத்திரன் பிரதிஹாரன். அவனுடைய மகன் மகாப் பிரசித்தனுன பிரதிகர்த்தா. அவனுக்குப் பவனென்பவனும், அவனுக்கு உத்கீதியென்பவனும், அவனுக்குப் பிரஸ்தாவ னென்பவனும் பிறந்தார்கள். அவனுடைய தனயன் பிருது. பிருதுவின் தனயன் நக்தன். அவனுடைய சுதன் கயன். கயனுடைய மகன் நரன். அவன் மகன் விரோகணன். விரோகணனுடைய மகன் மகாவீரியன். அவன் மகன் தீமான். அவனுக்கு மகாந்தன் பிறந்தான். அவனுக்குப் பாவனன் பிறந்தான். அவனுக்குத் துவஷ்டா. அவனுக்கு விரஜன். விரஜனுக்கு ரஜன். அவன்மகன் சதஜித்து. அந்தச் சதஜித்துக்கு நூறுகுமாரர் பிறந்தார்கள். அவர்களுள் முதல்வன் விஷ்வக்சோதி. இந்த விஷ்வக்சோதி முதலானவர்களாலேதான் பிரஜைகளெல்லாம் நன்ருய் வளர்க்கப்பட்டார்கள். அவர்களாலே இந்தப் பாரதவருடமானது ஒன்பது பிரிவாக்கப்பட்டு வாசஞ் செய்யப்பெற்றது. அவர்களுடைய குலத்திற் பிறந்தவர்களாலே இந்தப் பாரத பூமியானது கிருதயுகம் முதலான நான்கு பிரிவுகளோடு கூடின. எழுபத்தொரு சதுர்யுக காலம் அனுபவிக்கப்பட்டது. இதுதான் சுவாயம்புவமனு சிருட்டி. இந்த வராக கற்பத்திலே முதல் மனுவந்தராதிபதியான சுவாயம்புவ மனுவின் காலத்தில் இந்தப் பிரயவிரத சந்ததிக் கிரமம் நடந்தது.

முதலாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இரண்டாம் அத்தியாயம்

# பூமண்டலத்தின் பிரிவு முதலானவை

இப்படிச் சொல்லக்கேட்ட மயித்திரேயர் மறுபடியும் வினவுகிறார்:—ஓ மகாமுனியே! தேவரீர் சுவாயம்புவமனு சிருஷ்டிக் கிரமத்தை அடியேனுக் கருள்செய்தீர். இனிப் பூமியினுடைய மண்டலத்தையும், அதிலுள்ள சமுத்திரங்கள், தீவுகள், மலைகள், காடுகள், நதிகள், தேவர்கள் முதலானோருடைய நகரங்கள் அவைகளின் அளவு ஆதாரம் சொரூபம், இருக்கும் விதமாகிய இவைகளை அறிய விரும்புகின்றேன், கிருபைசெய்து திருவாய்மலர்ந் தருளவேண்டும் என்று பிரார்த்திக்க, பராசரர் அருளிச்செய்கின்றார்:—

மயித்திரேயரே! இந்த விஷயங்கள் விரித்துச் சொல்ல அநேகமாயிரம் வருஷங்களும் போதாதென்றாலும், நான் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன். இந்தப் பூமியானது ஜம்பூத்துவீபம்,பிலக்ஷத்துவீபம், சான்மலத்துவீபம், குசத்துவீபம், கிரௌஞ்சத்துவீபம், சாகத்துவீபம், புஷ்கரத்துவீபம் என ஏழு துவீபமாய்ப் பிரிந்திருக்கின்றன. இவ் வேழுத்துவீபங்களும் உப்பு, கருப்பஞ்சார், கள், நெய், தயிர், பால், சுத்தநீர் என்பன ஏழு சமுத்திரங்களாய்த் துவீபங்களி னளவாகச் சூழப்பட்டிருக்கின்றன. இவைகளுக்குள்ளே ஜம்பூத்துவீபமென்பது எல்லாவற்றிற்கும் நடுவி லிருக்கின்றது. அதற்கு நடுவில் மேருவென்கிற பொன் பர்வதமானது எண்பத்து நாலாயிரம் யோசனை உயரமுள்ளதும் பதினாயிரம் யோசனை பூமிக்குள்ளே யுருவியதும், முப்பத்தீராயிரம் யோசனை தலையில் விரிந்ததும், பதினாயிரம் யோசனை அடியில் விரிந்ததுமாகிப் பூமி என்னுந் தாமரை மலருக்குக் கருணிகையைப்போல, விளங்குகின்றது. இதன் தென்புறத்தில் இமவான், ஏமகூடம், நிஷதம் ஆகிய மூன்றும், வடபுறத்தில் நீலம் சுவேதம் சிருங்கி என்கிற மூன்றும் வருஷங்களின் எல்லைமலைகளா யிருக்கின்றன. அவற்றுள் நடுவிலிருக்கும்

இரண்டு பருவதங்கள் லட்சயோசனைப் பிரமாணமுள்ள வைகளாயும், மற்றவைகள் பதினாயிரம் யோசனை குறைந்தவைகளாயும் இருக்கின்றன. அவையெல்லாம் இரண்டாயிரம் யோசனை உயரமும் அவ்வளவு பரப்பும் உள்ளவைகள். இந்த ஜம்பூத்துவீபத்தில் முதல் பாரத வருஷமும், பின்பு கிம்புருடவருஷமும், அப்புறம் ஹரிவருஷமும் இம்மூன்றும் மேருவின் தெற்கே யுள்ளவை. இரம்மியக வருஷம், இரண்மய வருஷம், குருவருடம் ஆகிய மூன்றும் மேருவின் வடக்கிலுள்ளவை. பாரதவருடம் எப்படித் தெற்கின் கடைசியோ அப்படியே குருவருடம் வடக்கின் கடைசியாய் இருக்கின்றது. மேருவைச் சுற்றிலும் இராநின்ற பூமி இளாவிருத வருடமென்று சொல்லப்படும். இவ்வருடங்களில் ஒவ்வொன்றும் ஒன்பதினாயிரம் யோசனை விஸ்தாரமுள்ளவை. அந்த இளாவிருத வருடத்தில் நான்கு பர்வதங்கள் மேருவுக்குத் தாங்கிகளா யிருக்கும்படி யுண்டாக்கப்பட்டுப் பதினாயிரம் யோசனை உயரமுள்ள உயர்ந்த கேஸர பர்வதங்களாய் இருக்கின்றன. அவற்றுட் கிழக்கில் மந்தரமும், தெற்கில் கந்தமாதனமும், மேற்கில் விபுலமும், வடக்கில் சுபார்சுவமு மிருக்கின்றன. அந்த மலைகளில் முறையே கடம்பு, நாவல், அத்தி, ஆல் என்கிற மரங்கள் பதினோராயிரம் யோசனை அளவுள்ளனவாய் துவஜங்கள் நாட்டினபோல் பிரகாசிக்கின்றன. ஓ மகாமுனிவரே! அந்த நாவன்மரத்தைப் பற்றித்தான் இந்தப் பூமிக்கு ஜம்பூத்துவீபம் என்ற பெயர் உண்டாயிற்று. அந்த நாவன்மரத்தின் பழங்கள் * மகாகஜப் பிரமாண முள்ளவைகளாய் மலையின்மேல் வீழ்ந்து சிதைய அவைகளி னிரசத்தினாலே ஜம்பூநதி யென்று பிரசித்தமான ஒரு நதி ஓடுகின்றது. அவ்வாற்றின் தண்ணீரை யவ்விடத்தார் பானஞ் செய்வதனால் அவர்களுக்கு வியர்வையும், துர்க்கந்தமும், மூப்பும், இந்திரியங்களின் பலக்குறைவும் உண்டாவதில்லை. மேலும் மனம் எப்போதும் சுவஸ்தமா யிருக்கின்றது. அவ்வாற்றங்கரையின் மண்ணனைத்து அந்த

* மகாகஜமென்பது ஐந்துமுழ உயரமும் ஏழுமுழம் நீளமும் எட்டுமுழப் பருமனு முடையது.

இரசத்தில் நனைந்து காற்றிறை லுலர, ஜாம்பூநதம் என்று பேர்கொண்டு சித்தர்கள் தரிக்கும்படியான சொர்ணமாகின்றது. மேரு பர்வதத்திற்குக் கிழக்கில் பத்திராசுவ வருஷமும், மேற்கில் கேதுமால வருஷமும் இருக்கின்றன. அன்றியும் மேருவின் கிழக்கு முதலா கிய நான்கு திசைகளிலும் முறையே, சைத்திரரதம், கந்தமாதனம், வைப்பிராசம், நந்தனம் என்று சொல் லப்படும் நான்கு உத்தியான வனங்களுண்டு. அவை களில் அருணோதம், மகாபத்திரம், ஸிதோதம் மான ஸம் என்கிற நான்கு மடுக்கள் தேவதாயோக்கியங்களா யிருக்கின்றன. அந்த மேருவின் கிழக்கில் ஸிதாம்பம், குமுதத்துவான், குரரி, மாலியவான், வைகங்கம் முதலா கிய கேஸர பர்வதங்கள் சிலவுள. திரிகூடம், சிசரம், பதங்கம், உருசகம், நிஷதம் முதலியன தென்புறத்தில் உள்ள கேஸரபர்வதங்கள் சிகிவாஸம், வைடூரியம் கபிலம், கந்தமாதனம், ஜாருதி முதலானவை மேற்கின் கேசரபருவதங்கள். மேருவினுடைய சுற்றிலு மிருக்கிற அவயவங்களிற் சேர்ந்திருக்கின்ற சங்ககூடம், இரிஷி பம், ஹம்ஸம், நாகம், காளாஞ்சனம் முதலானவை வடக்கின் கேசர அசலங்கள்.

மயித்திரேயரே! மேருவின்மேல் பதினாலாயிரம் யோசனை விசாலமுள்ளதாய்ப் பிரமாவினுடைய மகா பட்டணமொன்று இருக்கின்றது. அதைச்சுற்றி எட்டுத் திக்குகளிலும் லோகபாலகர் எட்டுப் பேருக்கும் சிறந்த பட்டணங்களுண்டு. ஸ்ரீவிஷ்ணு பாதத்தினின்றும் உதித்த கங்காநதி ஆகாசத்தினின்றும் சந்திர மண்டலத் தில் வீழ்ந்து அதை நனைத்துக்கொண்டு மேருவின் மேலிருக்கும் பிரமாவினுடைய நகரத்திற்கு நாற்புறத் திலும் நான்கு பிரிவாய் விழுந்து சீதை, அளகநந்தை, சட்சு, பத்திரை எனப் பெயர்பெற்று விளங்குகின்றது. அவற்றுள் சீதை என்னும் நதி மலைமேன் மலையாக ஆகாசமார்க்கத்திலிருந்து பத்திராசுவ வருஷத்தில் இறங்கிச் சமுத்திரத்திற் சேருகின்றது. அப்படியே அளகநந்தையும் தென்புற மலைகளின் வழியாய்ப் பாரத வருஷத்திற் சென்று ஏழுபிரிவாய்ப் பிரிந்து சமுத்திரத் தில் விழுகின்றது. அந்த சட்சு வென்பது மேற்கு

மலைகளைக் கடந்து கேதுமாதுல வருஷத்திற் போய்ச் சாகரத்திற் சங்கமமாகின்றது. அப்படியே பத்திரை வடமலைகளின் வழியாய்க் குரு வருஷத்திற் புகுந்து கடலைச் சேருகின்றது.

மாலியவத்து, கந்தமாதனம் என்னும் பர்வதங்கள் நீல நிஷத பர்வதங்களின் அளவா யிருக்கின்றன. அவைகளின் நடுவிலேதான் மேருபர்வதமானது கருணிகைபோல் இருக்கின்றது. பாரதகேது, மாலபத்திராசுவ வருஷங்கள் எல்லை மலைகளாகி ஜடராதிகளுக்குப் புறத்தில் இப்பூமியென்னுந் தாமரை மலருக்கு நான்கு இதழ்களாக விளங்குகின்றன. ஜடரம், ஏமகூடம், என்னு மிரண்டு சைலங்கள் தெற்கு வடக்காய் நீல நிஷத பர்வதங்களு னளவாய்த் தென்புறத்தில் எல்லை மலைகளா யிருக்கின்றன. கந்தமாதனம் கைலாசம் என்ற இரண்டு பருவதங்களும் எண்பதினாயிரம் யோஜனை யளவாய் கிழக்குதிசையில் எல்லை மலைகளாய் நீண்டு சமுத்திர நடுவி லிருக்கின்றன. நிஷதம், பாரியாத்திரம் இவ்விரண்டும் கீழ்த்திசை மலைகள் போலவே மேற்றிசையில் எல்லை மலைகளாயிருக்கின்றன. திரிசிருங்கம், ஜாருதி என்பவைகள் முந்திய மலைகளைப் போலவே நீண்டு சமுத்திரத்தி னடுவிலே வடக்கெல்லை மலைகளா யிருக்கின்றன. ஓ முனிவரே! இப்படியாக இளாவிருத வருஷத்தின் உட்பிரிவின் எல்லை மலைகள் இரண்டிரண்டா யிருப்பதைச் சொன்னேன். முன்பு மகா மேருவின் நாற்புறத்திலுங் கேசர பருவதங்கள் சில இருக்கின்றனவென்று சொன்னேனன்றோ. அந்தச்சித சைல முதலானவைகளின் நடுவிலுள்ள சரிவான பள்ளத்தாக்குகள் சித்தசாரணதியர் வாசஞ் செய்யப் பெற்று அதி மனோகரங்களாய்ப் பிரகாசிக்கின்றன. அவைகளிலே மிகவு மனோகரங்களான ஸ்ரீவனம், கிம்சுகவனம், நளவனம், சைத்திரரதம் என்னும் உத்தியான வனங்களும், ஹேமசித்திரம், பூதவனம், பிரமபாரிசம், சுநாபகம் என்னும் புரங்களும் இருக்கின்றன. அன்றியும், அங்கே ஸ்ரீமகாலக்ஷ்மி, விஷ்ணு, அக்கினி, சூரியன் முதலான தேவர்களுக்குத் திவ்யமான வாசஸ்தானங்க ளுண்டு. அந்த மலைச் சந்துகளிலே

கந்தருவ யக்ஷர் முதலியோர் எப்போதும் கீதவாத்தியங்களுடனே விளையாடிக்கொண் டிருப்பார்கள். ஓ முனிவரே! இவையெல்லாம் பூலோகசொர்க்கங்களென்று சொல்லப்படும். இவற்றுள் புண்ணியவான்கள் போய்ச் சேருவார்களே யன்றிப் பாவிகள் அநேக ஜனனமெடுத்தாலும்போய்ச் சேரமாட்டார்கள். ஸ்ரீ விஷ்ணுபகவான் பத்திராசுவ வருஷத்தில் ஹயக்கிரீவ ரூபியாய் எழுந்தருளியிருக்கின்றார். கேதுமால வருஷத்திலே வராஹரூபியாகவும் பாரதவருஷத்திலே கூர்ம ரூபியாகவும், குரு வருஷத்திலே மச்சிய ரூபியாகவும் எழுந்தருளி யிருக்கின்றார். சர்வேசுவரனை ஸ்ரீ ஹரிபகவான் சர்வ சொரூபியாய் சர்வாதாரமாய் எங்கும் எழுந்தருளி யிருக்கின்றார். முன் சொல்லப்பட்ட கிம்புருஷாதி வருஷங்க ளெட்டிலும் சோகமும் ஆயாசமும் பயம் பசி முதலான துன்பமு மில்லாமல் பிரஜைகளெல்லாம் சொஸ்த சித்தராய் தேஜோ பலாதிகளுடையவர்களாய்ப் பதினாயிரம் பன்னீராயிரம் வருஷமட்டும் பிழைத்திருப்பார்கள். அங்கே மழை பெய்வதில்லை. பூமியிற் சுரக்குந் தண்ணீரே எப்போதும்வேண்டியமட்டு மிருக்கும். அங்கே கிருதயுகம் திரேதாயுகம் முதலான கால கற்பனைகளு மில்லை. அந்த வருஷங்களுள் ஒவ்வொன்றிலும் எவ்வேழு குலபருவதங்களுண்டு. அப்பருவதங்களினின்றும் அநேகமாயிர நதிகள் உண்டாகி வெகு ரமணீயங்களாய் ஓடுகின்றன.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்றும் அத்தியாயம்

# பாரதவருஷ வர்ணனை

சமுத்திரத்துக்கு வடக்காகவும் இமாலயத்துக்குத் தெற்காகவும் இருக்கின்ற பூமியானது பரதனுடைய சந்ததியார் வசிப்பதனாலே பாரத வருஷமென்று சொல்லப்படுகின்றது. ஓ மயித்திரேயரே! இதன் விஸ்தாரம் ஒன்பதினாயிரம் யோஜனையுள்ளது. சொர்க்

கத்தை யடைகிறவர்களுக்கும் மோக்ஷத்தை யடைகிறவர்களுக்கும் பிரவிர்த்தி நிவிர்த்தி கர்மசாதன பூமி இது தான். இதில் மகேந்திரம், மலயம், ஸஹ்யம், சுத்திமான், ரிக்ஷம், விந்திரியம், பாரியாத்திரம் ஆகிய இவ்வேழுவித மலைகளிருக்கின்றன. பிராணிகள் இங்கிருந்து சொர்க்கமடைகின்றார்கள். மோக்ஷத்தையும் பெறுகின்றார்கள். மிருகாதி சன்மங்களையும் நரகத்தையும் இங்கிருந்தே யடைவார்கள். இதைவிட வேறிடத்தில் மனிதர்களுக்குச் சொர்க்காபவர்க்கங்களுக் குரிய கருமம் விதிக்கப் படவில்லை. இப்படிப்பட்ட பாரதவருஷத்தில் இந்திரத்துவீபம், கசேரு, தாம்பிரவர்ணம், கபஸ்திமான், நாகத்துவீபம், சவுமியத்துவீபம், காந்தருவத்துவீபம், வாருணத்துவீபம், பாரதத்துவீபம் என்னும் நாமதேயங்களையுடைய ஒன்பது பிரிவுகளுண்டு. அவற்றுள் ஒன்பதாவதான பாரதத்துவீபம் [அல்லது பாரதகண்டம்] என்பது நாமிருக்கும் இந்தப் பூமிதான். இது சகரர்தோண்டிய கடலால் பெரும் பாலுஞ் சூழப்பட்டிருக்கின்றது. இதுபோலவே மற்றைக்கண்டங்களும் கடல்களால் சூழப்பட்டிருக்கின்றன. இந்தப் பரதகண்டமானது தெற்குவடக்கில் ஆயிரம் யோஜனை யளவாயிருக்கின்றது. கிழக்கிலே கிராததேசமும் மேற்கில் யவனதேசமும் இருக்கின்றன. நடுவில் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்கிற நான்கு வருணத்தாரும் வகுப்பின்படி இருக்கின்றனர். யாகாதிசெய்கைகளும் யுத்தஞ்செய்து துஷ்டரை யடக்குதலும் வாணிபஞ் செய்தலும் சிற்பத் தொழிலுமாகிய ஜீவனோபாயங்களினாலே வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். இதில் சதத்துரு, சந்திரபாகை முதலான நதிகள் இமய பருவதத்தின் சார்பிலிருந்து பெருகுகின்றன. வேதஸ்மிருதி முதலிய பல நதிகள் பாரியாத்திர பருவதத்தினின்று முண்டாகி வருகின்றன. நருமதை, சுரசை முதலான நதிகள் விந்திய மலையினின்றும், ஓடி வருகின்றன. தாபீ, பயோஷ்ணீ, நிர்விந்தியை முதலான நதிகள் இரிக்ஷபருவதத்தின் சாரலிலிருந்து பிரவகிக்கின்றன. கோதாவரி, பீமரதி, கிருஷ்ணவேணி முதலிய நதிகள் சஹ்ய பரு

வதத்தின் தாழ்வரைகளினின்று முண்டாகி வருகின்றன. கிருதமாலே, தாம்பிரவர்ணியாதி நதிகள் மலய சைலத்தி லுண்டாகின்றன. திரிசாமா, இரிஷிகுல்யா முதலான ஆறுகள் மகேந்திரகிரியி லுதிக்கின்றன. குமாரி முதலான நதிகள் சுக்திமத்தென்னும் பருவதத்திற் பிறந்தவைகள். இவைகளைச் சேர்ந்த உபநதிகளும், வேறு நதிகளும் அநேகமாயிர மிருக்கின்றன. இவ்வாற்றங்கரைகளிலே குரு, பாஞ்சால, மத்தியதேசம், பூர்வதேசம், காமரூபம், ஆந்திரம், கலிங்கம், மகதம், பாண்டியநாடு முதலிய தக்ஷிணதேசம், அபராந்தம், சவுராஷ்டிரம், சூத்திரதேசம், ஆபீரதேசம், பர்ப்பரதேசம், மாருகம், மாளவம், பாரியாத்திரம், சவ்வீரம், சிந்து, ஸ்ணம், சால்வம், கோசலம், மத்திரம், ஆராமம், அம்பஷ்டம், பாரசீகம் முதலான நானாதேசத்துச் சனங்களும் வாசஞ் செய்துகொண்டு அவற்றின் தண்ணீரைப் பானஞ் செய்துகொண் டிருக்கிறார்கள். இவ்விடத்திலேதான் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்கிற நான்குயுக பேதங்களுண்டு. மற்றோரிடத்திலுமில்லை. இங்கேதான் யோகிகள் தவஞ்செய்கின்றனர். யாகசீலர் யாகஞ் செய்கின்றனர். தானசீலர் தானங்களைச் செய்கின்றார்கள். இப்படிப் பரலோக சாதகமான நல்ல தருமங்களைச் சனங்கள் ஆதரவோடு செய்து வருகின்றனர். இந்தச் சம்பூத்தீவிலே யக்கிய புருஷனும் யக்கிய சொரூபியாயு மிருக்கின்ற ஸ்ரீமகாவிஷ்ணுபகவான் யக்கியங்களினாலே ஆராதிக்கப் படுகின்றான். மற்ற தீவுகளிலேயோ வேறு விதமாக ஆராதிக்கப் படுகின்றான். ஏனெனில் இந்தச் சம்பூத்தீவானது பரலோக சாதகமான கருமங்கள் செய்யத்தகு மிடமாகையாலே பாரதவருஷந்தான் சிரேட்டமானது. மற்றவிடமெல்லாம் போகங்களுக்கே உரியனவாம். ஓ சத்புருஷரே! ஒரு ஜந்து அநேக ஜனனங்களிலே செய்த புண்ணிய சமுதாயத்தினாலே இவ்விடத்தில் மனுஷிய ஜனன மடையும். பாரதவருஷத்தைப் பற்றித் தேவதைகள் பாடிய பாட்டைக் கேட்பீராக: "சொர்க்கத்துக்கும் மோக்ஷத்துக்கும் ஏதுவான கருமங்களுக்குச் சாதகமாயிருக்கின்ற பாரத வருஷத்திலே தேவஜன்மத்

துக்குப் பின்னாகிலும் ஜன்மத்தைப் பெறுவார்களானால் அவர்களே புண்ணியவான்கள். அவர்களே தேவர்களிலும் மேலானவர். அவ்விடத்துச் சனங்கள் கரும பலன்களிலே கருத்தை வையாமல் செய்த கருமங்களையெல்லாம் பரமாத்துமாவான ஸ்ரீவிஷ்ணுவுக்கு அர்ப்பணஞ் செய்து, நிர்மலராய் அந்த அனந்த னிடத்திலே லயத்தை யடைகின்றனரன்றோ. நமக்குச் சொர்க்கப் பிராப்தி காரணமான கருமம் அனுபவித்தலினாலே அழிந்தபின்பு எவ்விடத்திலே தேகசம்பந்தத்தைப் பெறுவேமோ அதை அறியோம். இப்போது பாரத வருஷத்திலே பிறவிபெற்று ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் குறைவறப் பெற்றிருக்கின்றவர்கள் சுலபமாய் ஆத்துமா கடைத்தேறும் வழியைத் தேடமாட்டுவார்கள். ஆதலால் அவர்கள் மகா புண்ணியவான்களென்று சொல்லப்படுகின்றார்கள்.'' கேட்டீரோ மயித்திரேயரே! அப்படி ஒன்பது வருஷங்களாகப் பிரிந்து லக்ஷ யோஜனை விஸ்தாரமுள்ள ஜம்பூத்துவீபத்தின் பெருமையை உமக்குச் சுருக்கமாய்ச் சொன்னேன். சம்பூத்துவீபத்தைச் சுற்றி வளையம்போலே இலவண உப்பு சமுத்திரம் இலக்ஷயோஜனை விஸ்தார முள்ளதா யிருக்கின்றது.

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

நான்காம் அத்தியாயம்

## பிலக்ஷாதித் துவீபங்களின் வர்ணனை

ஸ்ரீ பராசரர் அருளிச்செய்கின்றனர்: இந்தச் சம்பூத்துவீபமானது இலவண சமுத்திரத்தினாலே சுற்றப்பட்டதுபோலே இலவண சமுத்திரமும் பிலக்ஷதுவீபத்தினாலே சுற்றப்பட்டிருக்கின்றது. ஜம்பூத்துவீபத்தின் விஸ்தாரம் லட்சயோசனை யன்றோ? அதன் இரட்டிப்பு பிலட்சத்துவீபத்தின் விஸ்தாரமென் றறியக்கடவீர். அப் பிலட்சத்துவீபாதிபதியான மேதாதிதி என்பவனுக்குச் சாந்தஹயன், சிசிரன், சுகோதயன்,

ஆனந்தன், சிவன், க்ஷேமகன், துருவன் என ஏழு குமாரர்களுண்டு. அத்தீவில் இவர்களின் பேராலேயே சாந்தமயம், சிசிரம், சுகதம், ஆனந்தம், சிவம், க்ஷேமகம், துருவம் என்று ஏழுவருஷங்களுண்டு. இவற்றிற்குக் கோமேதகம், சந்திரம், நாதம், துந்துபி, சோமகம், சுமனசு, வைப்பிராஜம் என்னும் ஏழுமலைகள் எல்லைகள். மிகவும் ரமணீயங்களான இந்த வருஷ பருவதங்களிலே, அவ்விடத்துச் சனங்கள் தேவகந்தருவாதிகளோடு வேடிக்கையாய் வாசஞ் செய்துகொண்டிருப்பார்கள். அங்கே சகல இராச்சியங்களும் பரிசுத்தமானவைகள். வெகுநாள் கழிந்தபிறகே ஜனங்கள் மரணமடைவார்கள். தேக வியாதிகளும் மனோ வியாதிகளும் அங்கில்லை. எக்காலமும் சுகமாகவே இருக்கும். அவ்வருஷங்களேழுக்கும் சமுத்திரஞ் சேரத்தக்க ஆறுகள் அநுதத்தை, சிகி, விபாபை, திரிதிவை, அக்கிலமை, அமிருதை, சுகிருதை என ஏழாம். இவையெல்லாம் பேர் சொன்ன மாத்திரத்திலேயே பாதகங்களை நீக்கும்படியான மகிமையுள்ளன. மேலும் சிற்றாறுகளும் சிறுமலைகளும் பற்பல விருக்கின்றன. அவ்விடத்தார் உத்சர்ப்பிணீ என்கிற விருத்தி காலமும் அவசர்ப்பிணீ என்கிற க்ஷயகாலமும் கிருதாதி யுக பேதங்களு மில்லாதே எப்போதும் திரேதாயுகத்துக்குச் சமானமான கால முடையவர்களாய் அந்தப் பர்வத சாரல்களில் வாசஞ் செய்துகொண்டும் அந்நதிகளின் தண்ணீரைப் பானஞ் செய்துகொண்டும் சுகமாய் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். ஓ பிராமணோத்தமரே! இந்தப் பிலக்ஷத்துவீப முதலாகச் சாகத்துவீபம் வரையிலுமுள்ள பூமிகளிலே நோயொன்று மில்லாமல் ஐயாயிரமாண்டளவும் பிரஜைகள் பிழைத்திருப்பார்கள். இவ்வைந்து தீவுகளிலும் வேறு பிரிவின்படி வர்ணாச்சிரம தருமமுண்டு. அங்கேயும் ஆரியகர், குகரர், விதிசியர், பாவியர் எனப் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்ற பிரிவுகள் போலே நான்கு பிரிவுகளுள்ளன. அத்தீவின் நடுவில் முன் சொன்ன நாவல் மரத்தினளவாய் ஒரு கல்லால மர மிருக்கின்றது. அதனாலேதான் அதற்குப் பிலக்ஷத்துவீப மென்கிற

பெயருண்டாயிற்று. அங்கே சர்வேசுவரனை ஸ்ரீஹரி பகவான் சோமரூபியாய் ஆரியகர் முதலானவர்களாலே ஆராதிக்கப் படுகின்றான். அந்தப் பிலக்ஷத்துவீபமானது அத்தீவின் அளவுள்ள கருப்பஞ்சாற்றுக் கடலினாலே சூழப்பட்டிருக்கின்றது.

இனிச் சால்மலத்துவீபத்தைக் குறித்துச் சொல்லுகின்றேன் கேளும். சால்மலத்துவீபத்திற்கு அதிபதியான வபுஷ்மா னென்பவனுக்குச் சுவேதன், அரிதன், ஜீமூதன், ரோஹிதன், வைத்துதன், மானசன், சுப்பிரபன் என்று ஏழு குமாரரிருந்தனர். அவர்களுடைய பெயரினாலே அங்கே ஏழுவருஷங்களுள்ளன. அத்தீவின் அளவு பிலக்ஷத்துவீபத்தின் அளவுக்கு இரட்டித்தது. அங்கும் குமுதம், உன்னதம், பலாஹகம், துரோணம், கங்கம், மகிஷம், ககுத்துமான் என்னும் ஏழு பருவதங்கள் ஏழு வருஷங்களுக்கும் எல்லைகளாயும், நானாவித இரத்தினங்களுக்கு உற்பத்தி ஸ்தானங்களாயும் விளங்குகின்றன. அவற்றுள்ளே துரோணமென்ற பருவதமானது திவ்விய ஓஷதிகளுக்கு இருப்பிடம். ஆதியில் ஆஞ்சனேயர் அங்கிருந்துதான் சஞ்சீவினி முதலான ஓஷதிகளைச் சக்கிரவர்த்தித் திருமகனுக்காக இலங்கைக்குக் கொண்டு போனார். அத்தீவில் யோனி, தோயை, விதிருஷ்ணை, சந்திரை, சுக்கிலை, விமோசினி, நிவர்த்தி என நதிகளும் ஏழேயுண்டு. அங்கே கபிலர் அருணர் பீதர் கிருஷ்ணர் என்கிற நான்கு வர்ணத்தாருண்டு. அவர்கள் சர்வ ஸ்வரூபியான எம்பெருமானை வாயு ரூபியாகப் பாவித்து யாகங்களினாலே பூசித்து வருகின்றனர். அங்கே சகல தேவதைகளும் நித்தியவாசிகளாயிருக்கின்றனர். அதன் மத்தியில் மிகப் பெரியதான இலந்தைமரமொன் றிருப்பதனாலே அத்தீவிற்கு அப்பெயருண்டாயிற்று. இத்தீவைச்சுற்றி இதனளவுள்ள சுரா [கள்] சமுத்திரஞ் சூழ்ந்திருக்கின்றது.

இச்சமுத்திரத்தைச் சுற்றி இதற்கு இரட்டிப்பான அளவுள்ள குசத்துவீப மிருக்கின்றது. அதின் அதிபதியான ஜியோதிஷ்மானுக்கு உத்பிதன், வேணுமான், சுவைரதன், லம்பன், திருதி, பிரபாகரன், கபிலன் என்னு

மக்கள் ஏழுபேருண்டு. அவர்களுடைய பெயராலே அங்கே ஏழு வருடங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அதில் தேவ அசுர யக்ஷ கின்னர கிம்புருட கந்தர்வாதி தேவ கணங்களும், தமிகள் சுஷ்மிகள் தேஹர் மந்தேஹர் என்ற நால்வகைச் சனங்களும் வாசஞ் செய்கின்றனர். அந் நான்கு வருணத்தாரும் தங்களுக்குக் கர்மாதிகாரம் நிவர்த்தியாகும்பொருட்டு ஞானமுண்டானமுடையவர்களாய்ப் பிரம ரூபியான ஸ்ரீ ஜனார்த்தனனை ஆராதித்துக் கொண்டு உக்கிரமான பலங்கொடுக்க வல்ல பூர்வ ஜன்ம கர்மங்களைத் தொலைக்கின்றனர். அவ்விடத்தில் வித்துருமம், ஹேமசைலம், தியுதிமான், புஷ்பவான், குசேசயம், ஹரி, மந்தரம் என்னும் வருட எல்லைப் பர்வதங்கள் ஏழுண்டு. தூதபாபை சிவை பவித்திரை சுமதி வித்தியுதம்பை மஹீ என ஏழு பிரதான நதிகளுண்டு. உபநதிகளும் உபபருவதங்களும் அநேகமுண்டு. சிறந்த நாணற்புல்லிருப்பதுபற்றி அத்தீவிற்கு அந்த நாமதேய முண்டாயிற்று. அத்தீவின் அளவுள்ள சர்ப்பி [நெய்] ஸமுத்திரம் அதைச் சூழ்ந்திருக்கின்றது.

அச்சமுத்திரத்தைக் கிரவுஞ்சத் துவீபஞ் சுற்றிக் கொண்டிருக்கிறது. அதின் வளப்பஞ் சொல்லுகிறேன் கேளும். அத்தீவானது முந்திய தீவி னிரட்டித்த விஸ்தாரமுள்ளது. மேலும் அதன் அரசனான தியுதிமான் என்பவனுக்குக் குசலன், மனுகன், உஷ்ணன், சிவரன், அந்தகாரன், முனி, துந்துபி என்னும் ஏழு குமாரர்களுண்டு. அவர்கள் பெயரினாலே அங்கு ஏழுவருஷங்கள் உண்டு. மேலும் கிரவுஞ்சம், வாமனம், அர்த்தகாரகம், வடவாக்கினிக்குச் சமானமான இரத்தினசைலம், திவாவிருது, புண்டரீகவான், துந்துபி என்கிற வருஷ எல்லைப் பருவதங்களுண்டு. அவற்றுள் முதலான கிரவுஞ்சம் என்கிற பருவதத்தைப்பற்றி அத்தீவிற்கு அப்பெயர் வந்தது. இந்தத் துவீபங்களெல்லாம் எப்படி ஒன்றிலொன்று இரட்டிப்பான அளவுள்ளனவோ அப்படியே அந்த அந்தத்தீவின் வருஷபருவதங்களும் முந்தினவைகளிற் பிந்தினவை இரட்டித்த அளவுள்ளனவா யிருக்கும். இந்த மலைகளெல்லாம்

சித்த சாரண கிம்புருட கின்னரர் முதலியவர்கள் விநோதமாய் விளையாடிக்கொண்டிருக்கு மிடங்கள். இந்த வருடங்களேழிலும் புஷ்கரர், புஷ்கலர், தன்னியர், திஷ்யர் என்று சொல்லப்படும், பிராமணாதி நான்கு வருணத்தாரும் தேவ தானவர்களோடு கூடவே வாசஞ் செய்து கொண்டு, கௌரி, குமுத்துவதி, சந்தியா, ராத்திரி, மனோஜவா, கியாதி, புண்டரீகை என்ற ஏழு மகா நதிகளிலும் மற்றும் பல உபநதிகளிலுமுள்ள தண்ணீரைப் பானஞ் செய்துக்கொண்டு உருத்திர ரூபியாய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீஜனார்த்தனனை யாகங்களால் ஆராதித்து வருகின்றார்கள். இப்படிப்பட்ட கிரவுஞ்சத் துவீபமானது அத்தீவி னளவான [தயிர்] சமுத்திரத்தினாலே சூழப்பட்டிருக்கின்றது.

இனி அச்சமுத்திரத்தைச் சூழ்ந்திரா நின்ற * சாகத் துவீபமானது அளவில் கிரவுஞ்சத்திற்கு இரட்டித்தது. அதில் அத்தீவின் அரசனான பவியன் என்றவனுடைய குமாரர்களான ஜலதம், குமாரம், சுகுமாரம், மரீசகம், குசுமோதம், சுமோதம், மகாத்துருமம் என்பவர்களின் பெயரினாலே ஏழுவருடங்களும், அவ்வவ் வருடங்களின் எல்லைகளான உதயகிரி, ஜலதாரம், இரைவதகம், சியாமம், அம்போகிரி, ஆம்பிகேயம், கேசரி என்னும் ஏழு மகா பர்வதங்களும் உள்ளன. அங்கே சித்தர் கந்திருவர் முதலானவர்கள் இருந்து உல்லாசமாய் விளையாடப்பெற்ற சாகமென்னும் மகா விருட்சமொன்று விளங்குவதினாலே அதற்குச் சாகத் துவீபமென்கிற நாமமுண்டாயிற்று. அத்தருவின் இலைகளில் உராய்ந்து காற்று வீசும்போது மிகுந்த ஆனந்த வுல்லாச முண்டாகும். அங்கே பரிசுத்தமான அநேக ராச்சியங்களும், சகல பாபஹரங்களான சுகுமாரி, குமாரி, நளினி, வேணுகி, இக்ஷு, தேனுகை, கபஸ்தி என்ற ஏழு பிரதான நதிகளும், அனேக பருவதங்களும் விளங்குகின்றன. சில ஜனங்கள் சொர்க்க சாதனமான புண்ணியம் க்ஷீணமானபோது சிறிது சேடித்த அப்புண்ணியவசத்தினாலே சொர்க்கத்தினின்றும் அவ்

* சாகவிருக்ஷமென்பது இலையின்மேலே வழுவழுப்பாயும் உள்ளே சொரசொரப்பாயு மிராநின்ற ஒரு வாசனைமரம். தேக்கமரமுமாம்.

வருக்ஷங்களி லிறங்கி அந்நதிகளின் மதுரமான தீர்த்தத்தைப் பானஞ் செய்துகொண்டு அதிக சந்தோஷமுடையவர்களா யிருப்பார்கள். அவைகளில் தருமஹானியும் பரஸ்பர கலகமும் மரியாதையைக் கடத்தலுங் கிடையா. மங்கர், மாதகர், மானசர், மந்தகர் எனப் பிராமணாதி வருணத்தார் இருக்கின்றனர். அவர்கள் அங்கே சூரிய ஸ்வரூபியாய் எழுந்தருளி யிராநின்ற ஸ்ரீவிஷ்ணுபகவானை தங்களுக்கு விதித்திருக்கிற ஞான கருமங்களினாலே ஆராதித்து வருகின்றனர். இந்தச் சாகத்துவீபமானது இவ்வளவோடு கூடின க்ஷீர [பால்] சமுத்திரத்தினாலே ஒரு வலயத்தினாலே சுற்றப்பட்டது போலே சுற்றப்பட்டிருக்கின்றது.

ஓ பிராமணோத்தமரே! இந்த க்ஷீரசாகரத்தைச் சுற்றிப் புஷ்கரமென்னுந் துவீப மிருக்கின்றது. அதின் அளவு சாகத்துவீபத்தின் அளவி லிரட்டித்தது. அத்தீவிலே அதின் அதிபதியான சவனனுடைய புத்திரரிருவரால் தங்கள் பேரைக்கொண்டு மகாபீதம் தாதகி என்றிரண்டு வருஷங்க ளுண்டாக்கப்பட்டன. இவ்விரண்டு வருஷங்களையும் பிரிக்கின்ற மானசோத்தரம் என்னும் பர்வதம் அத்தீவின் மத்தியத்தில் வலயம் போலச் சூழ்ந்திருக்கின்றது. அந்தப் பர்வதம் ஐம்பதினாயிரம் யோஜனை யுயரமும் அவ்வளவு பரப்புமுள்ளதாய் வட்டமாய் இருக்கின்றது. அதனாலே அதிலுள்ள இரண்டு வருஷங்களும் வலயகாரமாகவே பிரகாசிக்கின்றன. அங்குள்ள ஜனங்கள் வியாதி சோக முதலான துன்பமில்லாமலே பதினாயிரம் வருஷகாலம் சுகமாய்ப் பிழைத்திருக்கின்றனர். அங்கே மேலானவன் கீழானவன் என்கிற பேதமும், கொல்லுகிறவனும், கொல்லப்படுகிறவனும், பொறாமை அசூயை பயம் கோபம் லோபம் முதலான துர்க்குணங்களும், மெய் பொய்களும் இல்லை. முற்கூறிய மானசோத்தரம் அல்லாமல் வேறு மலைகளும் நதிகளும் அங்கில்லை. அங்கிருக்கு மனிதரெல்லாம் தேவதைகளுக்குச் சமமான உருவமுடையவர்களாய் வேஷபாஷாதிகளிலும் சுகத்திலும் பேதமில்லாதவர்களாய், வருணச்சிர மாசாரங்களும் தரும நடக்கைகளு மில்லாம லிருக்கின்றனர். மேலும் அவ்

விடத்தில் வேதங்களும் பயிரிடுதன் முதலான பிழைப்புகளும், ராஜநீதி முறைகளும், மேலோருக்கும் கீழோர் பணிவிடை செய்வதும், இவைகளெல்லாம் இல்லை. அவ்விடம் உத்தமமானது. பூலோக சொர்க்கமென்று சொல்லப்பட்டு சுத்த போகத்திற்கே உரியதாயிருக்கின்றது. காலமும் அங்கு இருதுபேதமில்லாமல் எப்போதும் எல்லாம் விருதுக்களின் சுகத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும். நோய் மூப்பு முதலியனவும் இல்லை. அங்கே மிகப் பெருமையுஞ் சிறப்பும் உள்ளதாய், பிரமதேவன் வாசஞ் செய்யப் பெற்றதுமாய், புஷ்கரம் என்கிற பேரோடுகூடிய ஆலமரம் ஒன்றிருக்கின்றது. அதனாலே அதற்குப் புட்கரத்துவீபம் என்னும் நாமதேயமுண்டாயிற்று. அத்தீவைச் சுற்றித் தீவின் பிரமாணமான அளவுள்ளதாய்ச் சுத்தோதக [சலம்] சமுத்திரமானது சூழ்ந்து கொண்டிருக்கின்றது.

கேளும் மயித்திரேயரே! இவ்வண்ணம் ஏழு தீவுகளும் ஏழு சமுத்திரங்களாலே சூழப்பட்டு விளங்குகின்றன. தீவுகளும் சமுத்திரங்களும் ஒரேயளவாயிருக்கும். முந்திய துவீப சமுத்திரங்களிலும் பிந்திய துவீப சமுத்திரங்கள் இரட்டித்த அளவுள்ளனவாயிருக்கும். சகல சமுத்திரங்களிலும் எப்போதும் தண்ணீர்சமானமாயிருக்குமேயல்லது சுபாவத்தில் உயர்வதுந் தாழ்வதுமில்லை. ஆனாலும் ஒரு பாத்திரத்திலிருக்கிற ஜலமானது அக்கினியின் சம்பந்தத்தைப் பெறும்போது பொங்குவதும், அவ்வக்கினி சம்பந்தம் நீங்கினபோது தணிவதுமா யிருப்பதுபோலே, சுக்கிலபக்ஷ கிருஷ்ணபக்ஷங்களில் சந்திரனுடைய உதயாஸ்தமய காலங்களில் சமுத்திர சலம் பொங்கியுந் தணிந்தும் வருகின்றது. இப்படிப் பொங்குவதுந் தணிவதும் ஐந்நூற்றுப்பத்து அங்குலம் வரையுமே யுள்ளதென்று நிச்சயம் உண்டாயிருக்கின்றது. அந்தப் புஷ்கரத் துவீபத்தில் அறுசுவைகளோடு கூடிய அன்னமானது முயற்சியின்றிக் கிடைக்கும். முன்சொன்ன சுத்தோதக நன்னீர்ச் சமுத்திரத்தின் புறத்திலே உலகநிலை காணப்படவில்லை. ஆனால் முந்திய பூமிக்கு இரட்டிப்பான சுத்த சுவர்ண பூமி காணப்படுகின்றது. அங்கே ஒருவனு மில்லை.

அதற்குப் பிறகே பதினாயிரம் யோசனை உயரமும் பதினாயிரம் யோசனை பரப்புமுள்ள லோகாலோகம் என்கிற பருவதம் இருக்கின்றது. அதின் நாற்புறங்களிலும் அந்தகார மொன்று சூழ்ந்திருக்கின்றது. அவ்விருளுக்குப் புறத்திலே அண்டச்சுவர் சுற்றிக்கொண்டிருக்கின்றது. இவ்விதமாக இந்தப் பூமியானது சகல சமுத்திர துவீபங்களோடும் அண்டகடாகத்தோடும் ஐம்பதுகோடி யோசனையளவாய் யாவற்றுக்கும் உற்பத்தி ரட்சணங்களைச் செய்துகொண்டு கந்த முதலிய குணங்களைந்து முடையதாய் விளங்குகின்றது.

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஐந்தாம் அத்தியாயம்

# பாதாளலோக வர்ணனை



ஓ மயித்திரேயரே! உமக்கு நான் பூமியின் பரப்பைப்பற்றிச் சொன்னேன் அன்றோ? அதன் உயரமானது † எழுபதினாயிரம் யோசனை அளவுள்ளதென்று சொல்லப்பட்டிருக்கின்றது. அதில் அதலம், விதலம், நிதலம், இரசாதலம், மகாதலம், சுதலம், பாதாளம் என ஒவ்வொன்றும் பதினாயிரம் யோசனையளவாய் ஏழு கீழ்லோகங்கள் இருக்கின்றன. இவைகளில் வெண்மை, கருமை, செம்மை, பொன்மையாகிய நிறமுள்ள பருக்கை மலைகளும், பொன்மயமான பூமிகள் இருக்கின்றன. அங்கே உத்தமமான மித்தை மேடைகளில் தானவர் தைத்தியர் முதலான அசுர ஜாதிகளும், பெருமையுள்ள நாகஜாதிகளும் வாசஞ்செய்துகொண்டு உல்லாசமாய் இருக்கின்றனர். நாரத மகாமுனிவர் பாதாளத்திலிருந்து சுவர்க்க லோகத்துக்கு ஒருகால் வந்து தேவ சபையிலே "பாதாள லோகங்கள் சுவர்க்க லோகத்தைப் பார்க்கிலும் மிக இராமணீயமானவைகளா யிருக்கின்றன" என்று சொன்னார். அந்தப் பாதாளங்களிலே

† எழுபதினாயிரமென்றது லோகங்களின் அளவைப்பற்றி அதிலும் ஒன்பதினாயிரம் லோகவெளியும் ஆயிரம் தட்டுமா யிருக்கும்.

நாகஜாதிகள் தரித்திருக்கும் ஆபரணங்களிலுள்ள திவ்விய ரத்தினங்கள் மகா வெண்மையாய் வெகு பிரகாசமுள்ளனவாய் அதிக சந்தோஷகரங்களாய் இருக்கின்றன. ஆதலால் அப்பாதாளத்துக்குச் சமானமேது? அங்கே தைத்திய தானவர்களுடைய கன்னிகைகள் இங்குமங்குந் திரிந்துகொண்டு இருக்கப் பார்க்கிறவன் மகா விரத்திமான் ஆனாலும் மனம்பதியாமற் போக மாட்டான். அங்கே பகலில் சூரிய கிரணங்கள் உஷ்ணமில்லாமலே வெளிச்சத்தை மாத்திரந் தருகின்றது. அப்படியே இரவில் சந்திரனுடைய கிரணங்கள், சைத்தியஞ் செய்யாமல் வெளிச்சந்தருகின்றன; இஷ்டப்படி நேர்ந்த போஜன பானவகைகளில் மகா சந்தோஷமடைந்து அங்கிருப்பவர் காலஞ்செல்வதையும் அறியாம லிருக்கிறார்கள். அவ்விடங்களில் மகா விநோதமான உத்தியான வனங்களும், ரமணீயங்களான நதிகளும், தாமரைத் தடாகங்களும், குயில் முதலான பட்சிகளின் இனிப்பான தொனிகளும், அதி மனோகரங்களான வஸ்திராபரணங்களும், அதி சுகந்தமான சாந்துகளும், பூமாலைகளும், வீணை வேணு மிருதங்க முதலிய வாத்தியத் தொனிகளும், உல்லாசமான ஆடல் பாடல்களும் இன்னும் வேண்டிய போக பாக்கியங்களெல்லாம் எப்போதும் தைத்திய நாகர்களாலே சம்பூரணமாய் அநுபவிக்கப்படுகின்றன.

இந்தப் பாதாளங்களுக்குக் கீழே முப்பதினாயிரம் யோசனை யுள்ளவிடத்திலே ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய சம்ஹார ஹேதுவாகையாலே தமோ குணாசிரயமான திருமேனியாய் விளங்குகிற ஆதிசேடன் எழுந்தருளி இருக்கின்றனர். அவர் அனந்தன் என்கிற திருநாமத்தினாலே பிரசித்தராய், தேவதைகளினாலும் தேவரிஷிகளினாலும் பூஜிக்கப்படுகின்றனர். மேலும் ஸ்வஸ்திகம் என்கிற இரேகையினாலே அலங்கரிக்கப்பட்ட ஆயிரந் திருமுடிகளோடு கூடி அத் திருமுடிகளிலுள்ள திவ்வியரத்தின காந்திகளினாலே திக்குக்களை யெல்லாம் பிரகாசிப்பித்துக்கொண்டு, லோகஹிதார்த்தமாய்ச் சகலமான அசுரர்களையும் சத்திஹீனராக்கிக் கொண்டிருக்குந் திருக்கண்களுடையவராய், எப்போதும் ஒரு குண்

டல ரூபத்தையும் கிரீட வரிசைகளையுந் தரித்துக் கொண்டு, முடியில் அக்கினி சொலித்துக் கொண்டிருகிற வெள்ளிமலையைப் போலவும், நீலமான பட்டாடையும் வெண்மையான முத்துமாலைகளையுந் தரித்திருப்பதனாலே ஆகாச கங்காப் பிரவாகம் மேலே விழப்பெற்று இடையிலே மேகஞ் சூழப்பெற்றுள்ள கைலாச பருவதம் போலவும் விளங்குகின்றனர்.

அன்றியும் திருக்கைகளிலே கலப்பையும் உலக்கையும் தரித்தவராய்க் காந்தி தேவியினாலேயும் வாருணி தேவியினாலேயும் உபாசிக்கப்பட்டு இருக்கின்றனர். அவருடைய முகங்களினின்றும் பிரளய காலத்திலே விஷாக்கினிச் சுவாலைகளோடு கூடின காலாக்கினி ருத்திரன் சங்கர்ஷண மூர்த்தியினாலே ஆவேசிக்கப்பட்டு உண்டாகி ஜகத்தை யெல்லாம் நாசஞ் செய்வன். அந்த ஆதிசேஷன் இப் பூமண்டலத்தைத் திருமுடிகளுக்கு ஓராபரணம் போலே தரித்துக்கொண்டு பாதாளத்தி னடியிலே சகல தேவதைகளினாலும் பூசிக்க இருக்கின்றனர். அவருடைய பலத்தையும் சத்தியையும் சொரூபத்தையும் இயல்பையும் வர்ணிப்பது தேவர்களுக்கும் அருமையாயிருக்கும். நான் முன்சொல்லியபடி துவீப சமுத்திர பருவதாதிகளோடு கூடின இப்பூமண்டலமானது அவர் திருமுடியில் ஒரு பூமாலைபோலே விளங்கும். ஆனால் அவர் சத்திய விசேஷத்தை வர்ணிக்க யார்க்குத்தான் திறமுண்டு. அனந்தன் மதத்தினால் கண்கள் சுழலமிடக் கொட்டாவி யிடுவாரானால் இப் பூமி முழுதும் நடுநடுங்கிப்போம். தேவ, தானவ, யக்ஷ, கந்தர்வ, சித்த, சாரணாதிகளும் அவருடைய குணங்களின் முடிவு காணமாட்டார். ஆகையால் அவருக்கு அனந்தனென்கிற திருநாமம் உண்டாயிற்று. அவருடைய திருமேனியில் நாக கன்னிகைகள் கைம்மலர்களாலே சமர்ப்பித்த ஹரிசந்தனமானது அவர் மூச்சுக் காற்றினால் வீசப்பட்டுத் திக்குகளின்மேல் இறைந்த கந்தகப் பொடிபோல் ஆகின்றது. முன்பு கர்க்கரென்று பெயர் பெற்ற ஒரு மகாமுனிவர் அவரை நெடுநாள் ஆராதித்துச் சூரியன் முதலான சகல கிரகசார ஒழுக்கங்களையும், அந்தக் கிரக சாரத்தினாலே குறிக்கப்படுகிற பல

விசேஷங்களையும் நன்ருயறிந்தார். அப்படிப்பட்ட தாகராஜனாலே இந்தப் பூமியானது தாங்கப்பட்டுத் தேவ மனுஷியாதிகளோடு கூடின லோகவரிசையைத் தான் தாங்கிக்கொண்டு இருக்கின்றது.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆறும் அத்தியாயம்
## நரகவர்ணனை

ஓ மயித்திரேயரே! பூமியின் கீழிருக்கிற இருட் பள்ளத் தண்ணீருக்குங் கீழே பாவிகள் வதைக்கப்படுகிற நரக ஸ்தானங்கள் உள்ளன. அவை *இரவுரவம், சூகரம், உரோதம், தாலம், விசஸநம், மகாச்சுவாலம், தப்தகும்பம், இலவணம், விலோகிதம், உருதிராம்பம், வைதரணி, கிருமிபோசனம், அசிபத்திர வனம், கிருஷ்ணம், லாலாபட்சம், பூயவகம், அக்கினிச் சுவாலம், அதச்சிரம், சந்தமிசம், கிருஷ்ணசூத்திரம், தமசு, அவீசி, சுவபோசனம், அப்பிரதிஷ்டம், என்பவை முதலான அநேகமாயிரங் கொடிய நரகங்கள் இயமனுடைய அதிகாரத்திற்குள்ளே இருக்கின்றன. அவற்றுள் பாவிகளுக்கு ஆயுத பயம் அக்நி பயம்

* இரவுரவம் - ருருவென்னும் மிருகத்தினுல் துன்பப்படுத்துமிடம். சூகரம் - பன்றிகளால் பீடிக்கப்படுமிடம். உரோதம்-அசையவொட்டாமல் நிறுத்தப்படு மிடம். தாலம்-பனைமாத்தினின்றும் விழுதல் அதின் மட்டைகளினுலே அறுபடுதல். விசஸனம்-கைவாளாலே அறுக்கப்படுதல். மகாச்சுவாலம்-எரிகிற நெருப்பு. தப்தகும்பம்-காய்ச்சின எண்ணெய்க் குடம். இலவணம்-அறுத்தறுத்துக் காய்ச்சின உப்பிலிடப்படுவது. விலோகிதம்-உதிரத்தை அறியும்படிச் செய்வது. உருதிராம்பம்-காய்ச்சின ரத்தத்திற்போடுமிடம். வைதரணி-கடப்பதற்கு வருத்தமான உதிர ஆறு. கிரிமிசம்-புழுக்கள் தொளைக்குமிடம். கிருமிபோஜனம்-புழுக்களைத் தின்னுமிடம். கிருஷ்ணம்-நெருங்கின இருப்பு முட்களின் மேல் நடக்கச் செய்யுமிடம். இது கார்ஷ்ணுயசம் என்றுஞ் சொல்லப்படும். தாருணம்-சகிக்கக்கூடாத குளிராயிருக்குமிடம். சந்தமிசம்-சந்தமிசினி என்னுமாயுதத்தினுல் நாக்கைப் பிடுங்குமிடம். அசிபத்திரவனம் - நாற்புரத்திலுங் கொடிய கத்திகளைக் கட்டி நடக்குமிடம். பூயவஹம்-அதிக துர்க்கந்தமாய் கிமிஷமும் பொறுக்கக் கூடாத விடம். கிருஷ்ண சூத்திரம்-சக்காத்தில் ஏற்றிக் கால் விரலில் ஒரு கயிறுமாட்டி உடலெல்லா மொன்ருகும்படி யிறுக்கிக் கட்டி அறுக்கப் படும்படியான இடம்.

ஜந்துபயம் முதலான சகல பயங்களு முண்டு. அவற்றுள் விழுகின்ற பாவிகளுக்குள் பொய்ச்சாட்சி சொல்லுகின்றவன், பட்சபாதத்தினலே விவகாரத்தில் அநியாயம் பேசுகின்றவன், பொய் சொல்லுகின்றவன் இரௌரவத்தில் விழுவார்கள். சிசுவைக் கொல்லுகின்றவன், பட்டணத்தை யழிக்கின்றவன், கோக்களைக் கொல்லுகின்றவன், மூச்சைத் திணரச் செய்கின்றவன் உரோதமடைவார்கள். மத்தியபானஞ் செய்கிறவன், பிரமஹத்திசெய்கின்றவன், பொன் திருடுகின்றவன், இவர்களோடு சேர்த்தவன் சூகரத்திற் சேருவார்கள். இராஜாவைக் கொல்லுகின்றவனும், வைசியனைக் கொல்லுகின்றவனும், குருவின் மனையாளோடு புணர்கின்றவனும், உடன் பிறந்தாளைச் சேருகின்றவனும், இராஜாவின் வேலைக்காரரைக் கொல்பவனும், தப்த கும்பத்திற்கு இரையாவார்கள். மனைவியை விற்கின்றவனும், சத்புருஷரைக் காவற் படுத்து கின்றவனும், வைதிக யோக்கியமான குதிரைகளை விற்கின்றவனும், தன்னிடத்தில் அன்போடு காத்திருப்பவனைக் கைவிடுகின்றவனும், அடைக்கலம் புகுந்தாரை அடித்துத் துரத்துகின்றவனும், தப்த லோகத்திற்கு ஆளாவார்கள். மருமகள் மகள் முதலானரோடு புணர்கின்றவன், குருவை யவமதிக்கின்றவன், கோபித்துத் திட்டுகின்றவன் மகாச்சுவாலத்தைச் சேர்வார்கள். வேததூஷணை செய்பவனுக்கும், வேதவிக்கிரயஞ் செய்கின்றவனுக்கும், புணரக்கூடாத பெண்களோடு புணர்கின்றவனுக்கும், இலவண மென்பதுகிடைக்கும். திருடனுக்கும் உலகவொப்புறவை யழிப்பவனுக்கும் விலோமம் நேரிடும். தேவதூஷணை பிராமண தூஷணை பிதுரு தூஷணைகளைச் செய்கிறவனும், உத்தம வஸ்துக்களைத் தூஷிப்பவனும், பிறர்க்குத் தீங்கு செய்பவனும், சூனியம் வைக்கின்றவனும், கிரிமிசம் கிரிமிபக்ஷமென்பவைகளில் விழுவார்கள். பிதுர்க்களையும் அதிதிகளையும் விட்டு முன் உண்கின்றவனும், வேடன் முதலானேர்க்கு அம்பு செய்து கொடுப்பவனும், இலாலாபட்சத்தில் வதிவார்கள். கர்ணியென்கிற கொடிய அம்புகள் கத்திகள் முதலான ஆயுதங்களை அயோக்கியருக்

குச் செய்துகொடுப்பவர் விசஸநத்தைச் சேருவார்கள். அயோக்கியரிடத்தில் தானம் ஏற்கிறவன், வைதிக கருமங்களுக்குத் தகாதவனுக்கு அவற்றைச் செய்விப்பவன், சோதிட நூலை நன்ருயுணராமல் பயன்சொல்லுகின்றவன் அதோமுகத்தில் வாதைப்படுவார்கள். சாகசஞ் செய்பவனுக்கும், பிறருக்குக் கொடாமல் தானொருவனே நல்ல வஸ்துவைப் புசிப்பவனுக்கும் பூயவக வேதனையுண்டாகும்; பூனை கோழி ஆடு நாய் பன்றி பறவைகள் இவற்றை எப்போதும் மிகவும் பாலனை செய்பவனும் அந்நரகத்தையே யடைவான். கூத்தாடிப் பிழைக்கும் பிராமணன், அல்லது மல்லுத்தஞ் செய்து பிழைப்பவன், தூண்டின் முதலான கருவியினல் மீன் பிடிப்பவன்; குண்டகோளகர் முதலானருடைய அன்னத்தைத் தின்பவன், விஷமிடுகின்றவன், கோட்சொல்லுகின்றவன், மனைவியைக் கூட்டிக் கொடுத்துப் பிழைக்கின்றவன், பருவமல்லாத காலங்களிலே பொருளாசையினலே பருவச்சடங்கு செய்விப்பவன், வீட்டைக் கொளுத்தி விடுகின்றவன், சிநேகிதனைக் கெடுப்பவன், பறவைகளைக் கொலைக்கு விற்றுப் பிழைப்பவன், ஊர்க்காக யாகஞ்செய்கின்றவன், யாகத்தில் சோமம் என்கிற ஆட்டாங்கொடியை விற்கின்றவன் முதலானோர் உருதிராம்பத்திலே போய் விழுவார்கள். யாகத்தை யழிப்பவன், ஊரையழிப்பவன் முதலானவர் வைதரணியைப் பொருந்துவார்கள். பணம் வயது முதலானவைகளால் செருக்கடைந்து கிராமத்து எல்லைகளை மாற்றுகின்றவர்களும், சுத்தியில்லாதவர்களும், மோசஞ்செய்து பிழைப்பவர்களும் கிருஷ்ணத்தை யடைவார்கள். வைதிக வுபயோகமில்லாமல் வீணுய்ப் பலாசு முதலிய மரங்களைச் சேதிப்பவனும், ஆடு விற்கின்றவன், மிருகங்களைக் கொன்று திரிகின்றவன் முதலானரும், அக்கினிச் சுவாலத்தில் பிரவேசிப்பார்கள்; கொளுத்தக்கூடாத பாண்ட முதலானவற்றில் தீயிடுகின்றவனும் அதிலேயே சேருவான். விரத லோபஞ் செய்பவன், தனக்குரிய ஆச்சிரதருமத்தை விடுகின்றவன் சந்தமிசத்திலே வீழ்ந்து வேதனை படுவார்கள். பிரமசாரிகளாய்ப் பகலிலும்

கனவிலும் சுக்கிலத்தை விடுமவரும் புத்திரராலே ஓது விக்கப்படுமவரும் சுவபோஜனத்திற் படுவார்கள். தங்கள் தங்கள் வர்ணாச்சிரம விரோதமான காரியங்களைச் செய்தல், மனோ வாக்குக் காயங்களினாலே பாதகஞ் செய்தல் முதலான துஷ்கரும முடையவரெல்லாம் இப்படியே அந்த அந்த நரகங்களிற் சேருவார்கள். இப்படியநேகவிதமான பாபஞ் செய்பவர்கள் யாதனைப்படும்படியான நரகங்கள் அநேக வாயிர மிருக்கின்றன. நரகலோகத்தி லிருக்கிற பிராணிகள் தலைகீழாய் இருந்துக்கொண்டு சுவர்க்கத்தி லிருக்கிற தேவர்களைப் பார்த்துத் துன்பப்பட்டுக்கொண்டு இருப்பார்கள். தேவர்களும் தலைகீழாய் அவஸ்தைப்படுகிற நரகத்தாரைப் பார்த்து மிகவும் பயந்துகொண்டு இருப்பார்கள். பாவிகள் நரக மனுபவித்த பிறகு தாவரங்களாகவும், புழுக்களாகவும், ஜலசரங்களாகவும், பக்ஷிகளாகவும், மிருகங்களாகவும், மனிதராகவும், மனிதரில் தருமசீலராகவும், தேவர்களாகவும், மோக்ஷ மடையத் தக்கவராகவும், முறையே ஆவார்கள். இவர்களெல்லாம் முந்தினவரிற் பிந்தினவர் ஆயிரத்தி லொருபங்காய் முந்தின ஜனனத்திற் பிந்திய ஜனனந் தொடர்பவர்கள் மோக்ஷம் அடையுமளவும் உழன்றுகொண்டே இருப்பார்கள். சுவர்க்கத்திலே எத்தனை யாத்துமாக்க ளிருக்குமோ அத்தனை யாத்துமாக்கள் நரகத்திலேயும் உண்டு. எந்தச் செந்து பாவஞ்செய்து பிராயச்சித்தஞ் செய்துகொள்ள வில்லையோ அது நரகத்தை யடையும். வேதங்களிலோ எந்த எந்தப் பாவங்களுக்கு எந்த எந்தப் பிராயச்சித்தங்கள் காணப்படுமோ அவைகளை நன்று யாராய்ந்து மனு முதலான மகா ரிஷிகள் அற்பத்திற் கற்பமாகவும், கனத்திற்குக் கனமாகவும், தாங்கள் செய்த தரும சாஸ்திரங்களிற் சொல்லி யிருக்கின்றனர். கேளும் மயித்திரேயரே! சாந்திராயண முதலான தவங்களாயும், யக்கியம் தானம் முதலான கருமங்களாயும் விதிக்கப்பட்டிருக்கிற சகல பிராயச்சித்தங்களுக்கும் மேலான பிராயச்சித்தம் ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸ்மரண சங்கீர்த்தனாதிகளேயாம். அஃதாவது எம்பெருமான் நிருபாதிக சர்வசேஷி என்றும், தான் அவனுக்குச் சர்வதேச சர்வகால

சர்வாவஸ்தைகளிலும் நிருபாதிக தாசன் என்றும், ஆகையால் அவற்றில் கர்த்துருவாதிகள் சுவாதந்திரியத்தா லல்லவென்றும் அவைகளைப் போக்கும் உபாயம் அவனே என்றும் நினைத்து, அவன் திருவடிகளையே சரணம் அடைந்து, அவன் திருநாமங்களைக் கீர்த்தனஞ் செய்துகொண்டிருத்தல் ஆகையால் இந்த ஸ்ரீ கிருஷ்ணனு ஸ்மரண பிராயச்சித்தமானது பகவத்குணப் பிரபாவத்திலும், ஆத்தும ஸ்வரூபத்திலும் தெளிந்து நிற்கின்ற விலக்ஷணகாரிக்கே யல்லது மற்றவர்களுக்கன்று மற்றவர்களுக்கோ கருமாதிகளே எனத் தெளியவேண்டும்.

எவன் பாபஞ் செய்தபோது "ஐயோ! கொடியேன் தருமம் என்று கருதி, எம்பெருமான் நியமித்த நியமனத்தை உல்லங்கனஞ் செய்தேனே? என்னசெய்வேன்" என்று மனந்தவிப்பானோ அவனுக்கே பிராயச்சித்தத்தி லதிகார மல்லது மற்றவர்க்கன்று. அப்படிப்பட்டவனுக்கு விதித்த பிராயச்சித்தங்களுக்குள்ளே முன் சொல்லப்பட்ட ஸ்ரீ ஹரி சம்ஸ்மரணமே சிறந்தது. அதுவும் ஒருதரஞ் செய்வதே போதுமானது. பலதரஞ் செய்தாலோ இனிச் செய்யும் பாவங்களுக்குக் காரணமான பூர்வபாபங்களின் ஸம்ஸ்காரத்தை யழித்து, வரும் பாவங்களையும் நாசஞ்செய்யும். இந்த ஸ்ரீ ஹரி ஸ்மரணத்திற்குக் காலாதி நியமம் வேண்டுவதில்லை. காலை நடுப்பகல் மாலை இராத்திரி ஆகிய எக்காலத்திலானாலும் எந்த மனுஷியனானாலும் எவ்விதமாகவானாலும் ஸ்மரிக்கலாம். அப்படி ஸ்மரித்துக்கொண்டே ஸ்ரீமந் நாராயணனைச் சரணமடைந்தவன் அப்போதே சகல பாபத்தினின்றும் கிலேசங்களினின்றும் நீங்கினவனாய் மோட்சமடைவான். அப்படிப்பட்டவனுக்குச் சுவர்க்கம் பெறுதல் இடையூறாகவே இருக்கும். ஜப ஹோம அர்ச்சனாதி சகல கருமங்களிலும் ஸ்ரீ வாசுதேவ ஸ்மரணஞ் செய்யு மகாத்துமாவுக்கு இந்திரபட்ட முதலானவை கிடைப்பதும் இடையூறுதான். ஏனெனில், மீண்டும் திரும்பும்படியான சொர்க்க மடைதற்கும் மோக்ஷகாரணமான ஸ்ரீ வாஸுதேவாதி திவ்ய நாம

ஸ்மரணத்திற்கும் உள்ள தாரதம்யத்தை நீரே அறிந்துக்கொள்ளுவீர். ஆதலால் எப்போதும் ஸ்ரீ விஷ்ணு பகவானை ஸ்மரிக்கிற மனிதன் அப்போதே சகல பாதகங்களும் க்ஷீணித்தலாலே நரக மடையமாட்டான்.

ஓ முனிவரே! மனதிற்குச் சந்தோஷத்தை உண்டாக்குவதன்றோ சுவர்க்கம். நரகமோ இதற்கு மாருக இருப்பது. புண்ணிய பாபங்களே சொர்க்க நரக சாதகங்கள் ஆகையாலே உபசார வழக்கமாய் அவையே சுவர்க்க நரகமென்று சொல்லப்படும். அன்றியும் ஒரே வஸ்து புருஷ பேதத்தினுலே சுக ஹேதுவாகவும், துக்க ஹேதுவாகவும், பொருமை கோப முதலானவைகளுக்குக் காரணமாகவும் இருக்கின்றது. மேலும் ஒருவனுக்கே ஒருவஸ்து காலதேச அவஸ்தா பேதத்தினுலே ஒருதரம் சுகஹேதுவாயும் மற்றொருதரம் துக்க ஹேதுவாயும், கோபஅனுக்கிரக ஹேதுவாயும் ஆகின்றது. ஆகையால் இதுசுகம் இதுதுக்கம் என்று ஒரு வஸ்துவை நியதமாகச் சொல்லக் கூடுமோ? கர்ம வசமான மனோவிர்த்தி பேதத்தினுலே வஸ்துக்களில் சுக துக்காதி ஸ்வரூப முண்டாகின்றதைப் பற்றி பகவத் பிராப்தியாகிற மோக்ஷந் தவிர மற்றெல்லாம் நிருபாதிக சுகரூபமாயும் ஸ்திரமாயு மிராமையாலே சுவர்க்காதிகளும் இடையூரும்.

இப்படி மனோவிருத்தியான ஞானமானது விஷயங்களைப் பற்றுமாயின் சம்சார பந்தத்திற்குக் காரணமாகின்றது. அப்படிப் பற்ருமலிருந்தால் பிரமப் பிராப்திக்குக் காரணமாகின்றது. ஆதலால் மனோவியாபாரத்தினுலே சம்சார மோக்ஷங்களாகிய சகலமும் உண்டாகின்றன. மோக்ஷ சாதனமாகிய வித்தையும், பயனை விரும்பாமற் செய்கிற கருமமாகிய அவித்தையும் ஞானத்தினுற் சாதிக்கப் படுகின்றனவாம்.

ஓ மயித்திரேயரே! கேட்டபடி பூமண்டலம் பாதாளங்கள் நரகங்கள் பர்வத நதி சமுத்திராதிகள் ஆகிய யாவற்றையும் சுருக்கமாய்ச் சொன்னேன். இன்னும் யாதுகேட்க விரும்புகிறீர் என, மயித்திரேயர் வினவுகின்றனர்.

ஆரும் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஏழாம் அத்தியாயம்

# புவர்லோகாதி மேலோகங்களும்

### சூரியாதிகளுடைய நிலைகளும்

---

ஓ பிரம ரிஷிசிரேஷ்டரே! பூலோக சொரூபங்களை யருளிச் செய்யக் கேட்டு மகிழ்ந்தனன். புவர்லோகாதி மேலோகங்களின் சொரூபங்களையும், சூரியாதி கிரகங்க ளிருக்கும் விதம் பிரமாணம் முதலானவைகளையும் அருளிச் செய்யவேண்டும் என்ன, ஸ்ரீபராசரர் அருளிச்செய்கின்றனர்.

கேளும் மயித்திரேயரே! சூரிய சந்திரர்களுடைய கிரணங்களினலே எவ்வளவு பிரகாசிக்கப்படுமோ அவ்வளவாய்ச் சமுத்திரம் நதி பருவதம் முதலியவைகளோடு கூடின பாகமானது பூலோகமென்று சொல்லப்படும். இந்தப் பூமியானது அண்டகடாஹத்தை நாற்புறத்திலுந் தொட்டிருக்கிற வட்டப் பரப்பி னளவு எதுவோ அதுவே வியாசப் பிரமாணமான அளவாயுள்ள ஆகாசம். இதுவே புவர்லோகம். பூமிக்கு லக்ஷயோசனை தூரத்திலே சூரியமண்டல மிருக்கின்றது. அந்தச் சூரியமண்டலத்துக்கு லட்சயோசனை தூரத்திலே சந்திர மண்டல மிருக்கின்றது. அந்தச் சந்திர மண்டலத்துக்குச் சரியான லட்சயோசனை தூரத்தின் மேலே நட்சத்திர மண்டல மிருக்கின்றது. நட்சத்திர மண்டலத்துக்கு மேலே இரண்டு லட்சயோசனை தூரத்திலே புத மண்டல மிருக்கின்றது. புத மண்டலத்துக்கு அவ்வளவு தூரத்தில் சுக்கிர மண்டல மிருக்கும். சுக்கிர மண்டலத்துக்கு அவ்வளவு தூரத்தில் அங்காரக மண்டலமும், அதற்கு அவ்வளவு தூரபாகத்தில் பிரகஸ்பதி மண்டலமும், அதற்குமேல் அவ்வளவு பாகத்திலே சனி மண்டலமு மிருக்கும். அதற்குமேல் லட்சயோசனை தூரத்தில் சப்தரிஷி மண்டலம் விளங்குகின்றது. அதற்கு லட்சயோசனை தூரத்தின் மேலே துருவ மண்டலமானது சகல சோதிச் சக்கிரத்துக்கும் நடுவில் நாட்டிய கம்பம்போலே விளங்குகின்

றது. இவ்வளவுதான் சுவர்லோகம். இப்படி உயரத்தில் மூன்றுலோகங்களைச் சொன்னேன். இம் மூன்று லோகமும் யாக பலானுபவத்துக்கு ஸ்தானமா யிருக்கின்றது. யாகமோ இந்தப் பாரத வருஷத்திலேயே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. அந்தத் துருவ மண்டலத்துக்கு மேலே கோடி யோஜனை தூரத்திலே ஒரு கற்ப காலம் பிழைத்திருக்கிற பிருகு முதலான ரிஷிகள் வாசஞ் செய்யும் மகர்லோகமானது இருக்கின்றது. அதன்மேலே இரண்டுகோடி யோஜனை தூரத்திலே பிரமபுத்திரரான சனகாதிகள் வாசஞ்செய்கின்ற சன லோக மிருக்கின்றது. அதற்குமேல் எட்டுக்கோடி யோஜனை தூரத்தில் தபோலோக மிருக்கின்றது. அதில் வைராஜர் என்கிற தேவதைகள் பிரளயாக்கினியினாலுண்டான வெப்ப மில்லாதவர்களாய் இருக்கின்றனர். தபோலோகத்திற்கு மேல் பன்னிரண்டுகோடி யோஜனை தூரத்தில் சத்தியலோகம் பிரகாசிக்கின்றது. அதுதான் மறுபடி மரணமடையாதவர்கள் வாசஞ் செய்கின்ற பிரம லோகமென்று நினைக்கப்பட் டிருக்கின்றது. இவைகளின் விவரஞ் சுருக்கிச் சொல்லுகின்றேன் கேளும். காலாலே நடந்துபோகத் தக்கதாய்ப் பூமிசம்பந்தமான வஸ்துஎஃது காணுகிறதோ அதுவே பூலோகமென்று சொல்லப்படும். அதின் விஸ்தாரத்தை முன்னமே உமக்குச் சொன்னேன். பூமிக்கும் சூரியனுக்கும் நடுவில் சித்தர் முதலான முனிவர்கள் வாசஞ் செய்யுமிடம் எவ்வளவுண்டோ அதுதான் புவர்லோகம். அது லோகங்களி லிரண்டாவது. துருவனுக்கும் சூரியனுக்கும் நடுவாய்ப் பதினான்கு லக்ஷம் யோஜனை யளவான விடம் சுவர்க்கலோகம் எனப்படும். இம்மூன்றும் கற்பந்தோறும் உண்டாக்கப் படுவதினால் கிருதகம் என்றும், ஜனலோகம் தபோலோகம் சத்தியலோகம் ஆகிய இம் மூன்றும் கற்பந்தோறும் உண்டாக்கப் படாமையால் அகிருதகம் என்றும் சொல்லப்படும். இந்தக் கிருதகம் அகிருதகம் என்கிற இரண்டின் நடுவில் மஹர்லோகம் இருக்கின்றது. அது கற்பத்தின் முடிவில் ஜன சூனிய மாகிறதே யல்லாமல் சொரூபம் நசிப்பதில்லை. ஆகையால் கிருதகாகிருதகம் என்று சொல்லப்படும். மயித்தி

ரேயரே! இந்த மேலேழு லோகங்களும் பாதாளங்களா கிய கீழேழுலோகங்களும் பிரமாண்டத்தின் பரப்பு என் னப்படும். இவை விளங்கனியின் விதை ஓட்டினாலே சுற்றிலுஞ் சூழப்பட்டிருப்பதுபோலே மேலுங் கீழும் பக்கங்களிலும் அண்டகடாகத்தினாலே சூழப்பட்டிருக் கின்றது. இந்த அண்டகடாஹமானது பத்துப் பங் கதிகமான நிலத்தினாலேயும், அந்த ஜல ஆவரண மானது அக்கினியினாலேயும் அந்த அக்கினியானது வாயுவினாலேயும், அந்த வாயு ஆகாசத்தினாலேயும் பப் பத்துப் பங் கதிமாகச் சூழப்பட்டிருக்கின்றன. அவ் வாகாசமும் பத்துப்பங் கதிகமான பூதாதியினாலும், அந் தப் பூதாதியும் பத்துப் பங்கதிகமான மஹத்தத்துவத்தி னாலும் சூழப்பட்டிருக்கின்றன. அந்த மஹத் தத்துவத் தைப் பிரகிருதி தத்துவஞ் சூழ்ந்திருக்கின்றது. அது காலத்தைப் பற்றின முடிவையாகிலும் இடத்தைப் பற் றின அளவையாகிலும் உடைத்தாயிராமையாலே அனந் தம் என்று சொல்லப்பட்டு முடிவில்லாததாய் யாவற்றுக் குங் காரணமா யிருக்கின்றது. அதில் இப்படிப்பட்ட அநேகவாயிரங் கோடிகோடி அண்டங்கள் உண்டு. அன்றியும் கியானத்தினாலே வியாபிக்கத் தக்கவனும் சுயம்பிரகாசமானவனும் ஞான சுவரூபியுமான சீவனும் அந்தப் பிரதான தத்துவத்தில் மாத்தில் நெருப்பைப் போலவும் எள்ளில் எண்ணெயைப் போலவும் மறைந் திருக்கின்றான்.

இப்படி ஒன்றோடொன்று கலந்திருக்குந் தன் மையை யுடைய பிரகிருதியும் புருஷனும் சகல பூத வியாபகமான ஸ்ரீ விஷ்ணு சக்தியினாலே வியாபிக்கப் பட்டிருக்கின்றார்கள். ஓ மகாபுத்தி யுடையவரே! அந்த விஷ்ணு சக்தியே அந்தப் பிரகிருதி புருஷர்களை வேறு படுத்துகிறதாகிற மோக்ஷத்திற்கும் கூட்டுகிறதாகிற பந் தத்திற்கும் காரணமாயிருப்பதுந் தவிர சிருஷ்டிகாலத் திலே சத்துவாதி குணங்கள் விஷமப்படுவதற்குங் கார ணமா யிருக்கின்றது. காற்றானது அநேக நீர்த் துளிகளை யாதொரு பற்று மில்லாமலே வகிப்பது போலே அந்த விஷ்ணுசக்தியும் பிரகிருதி புருஷ ரூப மான சகலத்தையும் பற்றில்லாமலே வகிக்கின்றது

வேர் கவை கிளை முதலான அவயவங்களோடு கூடிய மரமானது, முதலாகிய விதையினின்றும் எப்படியுண்டாகிறதோ, எப்படி அதினின்றும் வேறு விதைகளும் அவற்றினின்றும் வேறு மரங்களும் உண்டாகி அவ்விதமான காரணத்தினாலே வியாபிக்கப்பட் டிருக்கின்றனவோ, அப்படியே சத்துவாதிகுண மயங்களான மகத்தத்துவமுதல் பிருதிவியாதி பூதங்களீருகவுள்ள சகல வஸ்துக்களும் அவியத்தத்தினின்றே யுண்டாகின்றன. பின்பு அவற்றினின்றும் தேவமனுஷியாதிகளும், அவர்களினின்றும் அவருடைய புத்திரர்களும், பௌத்திரர்களும் உண்டாகி வருகின்றனர். விதையினின்றும் மரம், மரத்தினின்றும் விதை, இப்படியாகப் பெருகி வருவதனாலே மரத்துக்கு என்றும் குறைவில்லாதது போலே, பூதங்களிலிருந்து பூதங்களுண்டாகி வருவதனாலே அவற்றிற்குக் குறைவில்லை. அந்த மரம் விதையினின்று உண்டானாலும் அதற்கு ஆகாசம் காலம் முதலானவை கூடச் சேர்ந்திருத்தலினாலே காரணமாவது போலே, பிரகிருதியினின்றும் உண்டாகிற பிரபஞ்சத்திற்கு ஸ்ரீஹரிபகவான் அப்பிரகிருதியில் சான்னியத்தினாலே காரணமாகின்றதனால் பரிணாம விகாரமில்லாமல் இருக்கின்றனர். பாரும் மயித்திரேயரே! நெல் விதையிலேயே மறைந்திருக்கின்ற வேர் தாள் இலை முளை கதிர் பூ பால் அரிசி உமி என்பன உழவு விதைப்பு நீர்ப்பாய்ச்சல் முதலான முளைத்தற்குவேண்டுங் கருவிகளைப் பெற்று தன்ருய் வெளிப்பட்டுத் தோன்றுவதுபோலே, நானாவிதமான கருமங்களில் விழுந்திருக்கின்ற ஆத்துமாக்கள் ஸ்ரீவிஷ்ணு சத்தியையடைந்து, தேவ மனுஷ்யாதி பேதத்தினாலே வெளிப்படுகின்றன. வேதத்தில் காரண வாக்கியங்களின்படியே எங்கிருந்து இவ்வுலகமெல்லா முண்டாகுமோ, எங்கே நிலைபெற்றிருக்குமோ, எங்கே லயத்தை யடையுமோ, எதனாலேயே வியாபிக்கப்பட்டிருக்குமோ அந்தப் பரப்பிரமம் விஷ்ணுவே. பிரம்மமென்பதும் பரமபதமென்பதும் சத்து அசத்து என்பதும் மற்றும் உள்ள யாவையும் அந்த ஸ்ரீவிஷ்ணுவே. இவ்வாறு சகல லோகமும் வித்தியாசமின்றி அந்த விட்டுணுவினுடையதாய் இருக்கின்றது. அவி

யத்தமான மூலப்பிரகிருதி சரீரகனும், வியக்தமான லோக சரீரகனும் அந்த ஸ்ரீவிட்டுணுவே. மேலு மந்த ஸ்ரீவிஷ்ணுதேவனே தன்னைப் பெறுவதற்குச் சாதன மான யாகாதிகளுக்குக் கர்த்தாவாயும், உத்தேசிய தேவ தையாயும், கிரியாசொரூபியாயும், அதன் பயனும், அக்கிரியைகளின் உபகரங்களான சுருவ முதலானவை யாயும் இருக்கின்றான். அவனிலும் மேலானது வேறொன்று மில்லை. அவனே எல்லாவற்றிற்கும் சொரூப யோக்கியதா சத்திகளைக் கற்பிப்பவன் என்பது கருத்து.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## எட்டாம் அத்தியாயம்

# சூரியமண்டலகதி முதலானவை

பராசரர் அருளிச்செய்கின்றனர்:—ஓ நல்ல விரத முடையவரே! பிரமாண்ட நிலையை உமக்கு விளங்கக் கூறினேன். இனிச் சூரியன் முதலான கிரகங்களின் நிலையைச் சொல்லுகின்றேன் கேளும். சூரியனுடைய இரதமானது பதினாயிரம் யோசனை விசாலமுள்ளதாய், ஒன்பதினாயிரம் யோசனை வரையில் சூரியமண்டலத்தி னுலே வியாபிக்கப்பட்டிருக்கும். அதன் இருபுறத்தின் இரிசுகளையும் கூட்டுகிற கட்டையானது [ஏற்கால்] இரு பதினாயிரம் யோசனை யளவாயுள்ளது. அதின் ஒரு புறத்தில் இரிசு ஒரு கோடியே ஐம்பத்தேழு லட்சம் யோசனை அளவாயுள்ளது. அதிலேதான் சக்கிரம் ஒன்று மாட்டியிருக்கும். அந்தச் சக்கிரமாவது சம்வச் சர ஸ்வரூபமாயிருப்பது. அதற்குக் காலை, நடுப்பகல் பிற்பகல் என்கிற நாட்பிரிவு மூன்றும் இரிசி கோத் திருக்கும் இடமாயிருக்கும். சம்வச்சரம், பரிவச்சரம், இடாவச்சரம், அநுவச்சரம், இத்வச்சரம் என்கிற வருஷ பேதங்களைந்தும் அரங்களாயிருக்கும். இரு துக்களாறும் சுற்று வட்டங்களாயிருக்கும். இப்படிப் பட்ட அவயவங்கள் உள்ளதாய் அழிவில்லாதிருக்கிற

அந்தச் சக்கரத்திலேதான் காலசக்கரம் முழுதும் ஸ்தாபிக்கப்பட்டு இருக்கின்றது. அவ்விரதத்திற்கு காயத்திரி, பிருகதி, உஷ்ணிக், ஜகதீ, திருஷ்டுப்பு, அனுஷ்டுப்பு, பங்கி என்கிற சந்தங்கள் ஏழுமே குதிரைகளாயிருக்கின்றன. அச்சூரிய ரதத்தின மற்றொரு புறத்து இரிசு நாற்பத் தையாயிரத் தைந்நூறு யோஜனை யளவுள்ளது. நுகத்தடியின் அளவோ இரிசினளவேயாம். அந்தச் சிற்றிரிசானது தன்புறத்து நுகத்தடியின் பாதியோடுகூட வாயுரூபமான கயிறுகளால் கட்டப்பட்டுத் துருவனை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றது. பேரிரிசிலே கோக்கப்பட்டிருக்கிற சக்கரமானது மானசோத்தர பர்வதத்தின்மேல் இருக்கின்றது. அந்த மானசோத்தர பருவதத்தின்மேல் கிழக்கில் வஸ்வோகசாரா என்னும் இந்திரனுடைய பட்டணமும், தெற்கில் சம்யமனீ என்னும் பட்டணமும், மேற்கில் சுகா என்னும் வருணனுடைய பட்டணமும், வடக்கில் விபாவரீ என்னும் சோமனுடைய பட்டணமும் விளங்குகின்றன.

மயித்திரேயரே! சூரியபகவான் தென்றிசையை யடைந்தபோது சோதிச் சக்கரத்தின் கடைசி யடைந்தவனாகி, எறிந்த அம்பைப்போல் விரைவாக வோடுகின்றான். அந்தச் சூரியபகவான்றான் இராப் பகல்களின் ஏற்பாட்டிற்குக் காரணமாயும், யோகிகளுக்குச் சகலகிலேசங்களும் விடுபட்டுப் போகுங்காலமாகிய முடிவுகாலத்தில் * தேவயான மார்க்கமாயும் இருக்கின்றான். சூரியன் நமக்கெப்படி பகலிலே அதியுஷ்ணமாயும் பிரகாசமாயுங் காணப்படுகின்றானோ அப்படியே மற்றெல்லாத் தீவுகளிலும் இரவிலும் இருக்கின்றானே யல்லது உஷ்ணப் பிரகாசங்கள் குறைந்து எப்போதும் இருப்பதில்லை. ஆகையால் உதயாஸ்தமய பேதங்கள் இல்லை. ஆனால் திக்குவிதிக்குகளி லெதிலும் எவர்களுக்கு எங்கே காணப்படுகின்றானோ அவர்களுக்கு அங்கே

* தேவயானம் என்பது அர்ச்சிராதி மார்க்கம். அதாவது முதலில் அக்கினி பின்பு முறையே பகல், பூர்வபக்ஷம் உத்தராயணம், வருஷம், காற்று, சூரியன், சந்திரன், மின்னல், வருணன், இந்திரன், பிரமன், என்பவர்களுடைய எல்லைகளேயாம். மோக்ஷமடைபவர்கள் போகும் வழி யிதுவே.

உதயமென்றும், அதற்கு நேர்க்கோணத்தில் காணப் படாமற் போவதினலே அஸ்தமய மென்றும் உலக விவகாரமுண்டாயிருக்கின்றது. ஆகையால் எப்போதும் உதயாஸ்தமயங்க ளுண்டாயிருக்கிற காரணம் இவ் வளவே யல்லாமல் சூரியனுக்குச் சுபாவத்தில் உதயமும் அஸ்தமயமு மில்லவே யில்லை. இச்சூரியன் இந்திரன் முதலானவருடைய பட்டணங்களில் எதிலிருந்தாலும் அதனையும், பக்கத்துக் கோணங்கள் இரண்டையும், புரங்கள் இரண்டையும் பரிசிக்கின்ருன். உதயமானது முதல் கிரணங்கள் வளரப்பெற்றிருந்து, மத்தியானத்துக்குமேல் கிரணங்கள் சுருங்கப்பெற்றவனுய் அஸ்தமயமாகின்ருன். இவ்வித உதயாஸ்தமயங்களைக் கொண்டுதான் கிழக்கென்றும் மேற்கென்றும் திக்குகளின் ஏற்பாடு உண்டாக்கப்பட்டிருக்கின்றது. இதைக் கொண்டே வலப்புறம் தென்றிசை எனவும்,இடப்புறம் வடதிசை எனவும் குறிக்கப்படும். சூரியன் தனக்கு எதிரில் எவ்வளவு காய்கின்ருனே அவ்வளவு பின்புறத்திலும் பக்கங்களிலும் காய்கின்ருன். ஆனல் மகாமேரு பருவதத்தின்மேலிருக்கிற பிரமசபையிற்செல்லுமளவில் அதின் கிரணங்களாலே சூரியகிரணங்கள் ஒளிமழுங்கித் திரும்புகின்றமையால் அச்சபையைக் காய்வதில்லை. இப்படி யுதயாஸ்த மயங்களினலேயே கிழக்கு முதலிய திக்குகள் ஏற்பட் டிருப்பதனலே மேருமலையானது சகல வருஷங்களுக்கும் வடக்காகவே ஆகின்றது. ஆனதுபற்றி மேருவின்மேல் எப்போதும் பிரமசபையின் காந்தியினல் பகலும், சூரியசஞ்சார மின்மையா லிரவுமா யிருக்கும்.

அத்தமயமாகிற சூரியனுடைய கிரணங்கள் அக்கினியில் பிரவேசிப்பதால் அவ்வக்கினியானது இரவில் அதிகமாய்ப் பிரகாசிக்கின்றது. அக்கினி கிரணங்கள் பகலில் சூரியனிடத்திலே பிரகாசிப்பதனலே சூரியன் அதிகமாய்ப் பிரகாசிக்கின்ருன், இப்படியாக உஷ்ணப் பிரகாசமுள்ள தேஜசு இரண்டும் மாறிமாறி ஒன்றிலொன்று கலந்து விளங்குகின்றன. மேருவின் புறத்திலும் வடபுறத்திலும் பூமியின்பாதியில் சூரியன் உதயமாகும்போது, இருளான இராத்திரியும் வெளிச்

சமான பகலும் முறையே தண்ணீரில் பிரவேசிப்பதி னாலே, அத்தண்ணீரானது கிஞ்சித்துச் சிவப்பாகவும் வெளுப்பாகவும் ஆகின்றது. இவ்வண்ணம் புஷ்கரத் தீவின் நடுவினால் பூமியில் முப்பதி லொருபங்கைச் சூரியன் கடப்பதனால் நாளில் முப்பதி லொருபங்காகிய முகூர்த்தகாலம் உண்டாகின்றது.

குயவனுடைய சக்கரத்திலே திரிகின்ற பூச்சியைப் போலே சோதிச் சக்கரத்திலே திரிகின்ற சூரியன் தென் றிசையினீங்கி உத்தராயணத்தின் முதலான மகரத் திலே வரும்போது முற்பட்ட பகலிரவுகளைப் பார்க்கி லும் வித்தியாசமான பகலிரவுகளைச் செய்துவருவன். பின்பும் அப்படியே முறையாய் கும்பம் மீனம் என்னும் இராசிகளிரண்டையுங் கடந்து மேஷராசியிற் பிரவேசிக் கும்போது, பூமத்தியமாகிய விஷுவத்தின் கதியைச் சேர்ந்து பகலிரவுகளைச் சரியாகச் செய்வன். அங்கி ருந்து சஞ்சரிக்கும்போது நாடோறும் பகல் வளர்ந்து கொண்டேவர இரவு க்ஷீணித்துக்கொண்டே வரும். இப்படி மிதுனம் வரையிற் சென்று கர்க்கடக ராசிக் குத் திரும்ப தக்ஷிணாயனம் உண்டாகும். குயவன் சக்க ரத்தின் நுனியிலிருக்கும் பூச்சிபோலே தக்ஷிணாயனத் திலே சூரியன் சீக்கிரமாகச் சஞ்சரித்துக்கொண்டு பன் னிரண்டு முகூர்த்தகாலமான பகலினாலே பதின்மூன் றரை நக்ஷத்திரங்களையும், பதினெட்டுமுகூர்த்தகாலமான இரவினாலே மற்றைப் பதின்மூன்றரை நக்ஷத்திரங்களை யும் கடக்கின்றான். மறுபடி யுத்தராயணத்திற்கு வரும் போது குலால சக்கரத்தி னடுக்கிடக்கும் பூச்சிபோலே மந்தமாகச் சஞ்சரித்துக்கொண்டு முந்திய இராப்பகல் களுக்கு மாறான இராப்பகல்களைச் செய்கின்றான். ஆகவே உத்தராயணத்தில் பகலின்வளர்ச்சி பதினெட்டு முகூர்த்தவளவாயும், இரவின் குறைவு பன்னிரண்டு முகூர்த்த அளவாயும் இருக்கும். சக்கரத்தின் நாபி யானது அங்கேயே மதிமந்தமாய்ச் சுழல்கின்றது போலே சோதிச் சக்கர மத்தியத்திலேயே துருவனும் சுழன்றுகொண்டு இருக்கின்றான். இப்படி சூரியன் தக்ஷிணாயன உத்தராயணங்களிலே அந்த அந்த ராசி மண்டலங்களைச் சூரியன் கடக்குந் திறத்தினாலே பகல்

வளர இரவு குறைதலும், இரவு வளரப் பகல் குறைதலுமாயிருக்கும். சூரியனே பகலிலும் இரவிலும் அவ்வாறு இராசிகளையே சமமாகக் கடக்கின்றானே யல்லது வேறில்லை. ஆனாலும் இராசிகளின் அளவின் வித்தியாசத்தினால் இரவு பகல்களின் வித்தியாசம் உண்டாகின்றது. மேலும் இந்த வித்தியாசம் ஆங்காங்கிருந்து நோக்குகின்றவர்களுடைய திருஷ்டியிற் படுகின்ற உதயாஸ்தமய பேதத்தினாலுமாம்.

இரவு உஷை என்றும், பகல் வியுஷ்டி என்றுஞ் சொல்லப்படும். இந்த உஷா வியுஷ்டிகளின் நடுவானது சந்தி என்று சொல்லப்படும். இப்படி சந்தி வரும்போது, மாந்தேகர் என்ற ராக்ஷசர் சூரியனைத் தின்னும்படி யத்தனஞ் செய்கின்றனர். அவர்களுக்கு நித்தியம் மரணமும் உடம்பு நாசமாகாம லிருப்பதுமாகப் பிரமதேவனாலே சாபமிடப்பட்டிருக்கின்றது அவ்வசுரர் சூரியன்மேற் பாயும்போது சூரியனுக்கும் அசுரருக்கும் கொடிய யுத்த முண்டாகின்றது. அதினிமித்தம் பிராமணோத்தமர்கள் பிரணவ வியாகிருதி காயத்திரி மந்திரங்களினாலே அபிமந்திரித்துத் தண்ணீரை எறிகின்றார்கள். அத்தண்ணீரானது வச்சிரம்போலாகி அவ்வசுரரை நாசஞ் செய்கின்றது. பின்பு பிராமணர்களாலே அக்கினி யோத்திரத்தில் மந்திரத்தோடுகூட ஆவுதி செய்யப்படுகின்ற முதல் ஆகுதியினாலே ஆயிரங் கிரணங்களுள்ள சூரியன் என்னுஞ் சோதியானது உலகமெல்லாம் பிரகாசிக்கும்படி விளங்குகின்றது. அந்தப் பிரணவமானது ஸ்ரீ விஷ்ணுசொரூபமாய், வியாகிருதி தேவதைகளுக்கிடமாய், வேதங்களுக்கெல்லாம் அதிபதியா யிருக்கையாலே அதின் உச்சாரண மகிமையினாலே அந்த ராக்ஷசருக்கு நாசம் உண்டாகின்றது. நிர்விகாரமாய் உள்ளே தோன்றுகின்ற சோதியாயிருக்கிற ஸ்ரீ விஷ்ணுவுடைய உத்தமமான அம்சமானது சூரியனாகி அந்தப் பிரணவத்தைப் பொருந்தி யிருக்கின்றபடியினாலே அதை யது தெரிவித்துக்கொண்டு, அச்சோதியை நடத்திக்கொண்டு இருக்கின்றது. இப்படிப்பட்ட பிரபாவமுள்ள பிரணவத்தினாலே

ஸ்ரீவிஷ்ணு தேஜோமயமான சூரியன் விளக்கப்பட்ட தாகி மந்தேகர் என்கிற பெயரையுடைய பாபங்களைக் கொளுத்திப் போடுகின்றது. ஆதலால் சந்தியாவந்தன காரியத்தை எவனும் விடலாகாது. விடுவதினாலே சூரியனைக் கொன்ற பாபத்தை அடைவான். இப்படி வாலகில்லியர் முதலான மகா பிராமணர்களாலே ரக்ஷிக்கப் பட்டுச் சூரியபகவான் உலக சம்ரக்ஷணார்த்தமாய் அப் புறஞ் செல்லுகின்றான்.

சந்தியாகால நிர்ணயஞ் சொல்லுகின்றேன் கேளும். பதினைந்து நிமிஷங்கள் ஒருகாஷ்டை, முப் பது காஷ்டைகள் ஒரு கலை, முப்பது கலைகள் ஒரு முகூர்த்தம், அவை முப்பது சேர்ந்து இரவும் பகலு மாகிய ஒரு நாளாம். இப்படிப்பட்ட நாளில் விருத்தி யாலும் குறைவாலும் அவைகளுக்கேற்ற அள வைக்கொண்ட பதினைந்தாம் பங்கான ஒரு முகூர்த்த காலமே சந்தியாகாலமாம். உதயகாலந் தொடங்கிச் சூரியன் மூன்று முகூர்த்தஞ் செல்லுமளவும் பிராதக் காலம் என்று சொல்லப்படும். அது பகலின் ஐந்தி லொரு பங்காம். அதற்கு மேல் மூன்று முகூர்த்தகாலம் சங்கவம் என்று சொல்லப்படும். சங்கவ காலத்தின் மேலே மூன்று முகூர்த்த காலமானது மத்தியான்னம் எனப்படும். அதின் பிறகு மூன்று முகூர்த்தகாலமானது அபரான்ன காலமாம். அபரான்ன காலத்திற்குப் பின்பு உள்ள மூன்று முகூர்த்த காலம் சாயான்ன கால மாம். இப்படிச் சரியான பதினைந்து முகூர்த்தமுள்ள பகலானது விஷுவத் காலத்திலாம். இந்த நாளானது உத்தராயண தக்ஷிணாயனங்களிலே வளர்ந்துங் குறைந் தும் ஒருபோது பகலினாலிரவு விழுங்கப்பட்டும் மற் றொருபோது இரவினாற் பகல் விழுங்கப்பட்டும் நடை பெறும். சரத்ருதுவின் ஆரம்பமான துலாராசியில் சூரியன் வருகையிலும், வசந்த ருதுவின் ஆரம்பமான மேஷராசியில் சூரியன் வருகையிலும் விஷுவம் என் கிற காலம் உண்டாகின்றது. அதுதான் ஏற்றக்குறைச்ச லில்லாத இரண்டும் சமமாக ஒரே அளவினையுடைய இராப்பகல்களை உடையது. சூரியன் கர்க்கடக இராசியி

லிருக்கையில் தக்ஷிணாயனமும், மகர இராசியி லிருக்கையில் உத்தராயணமுமாம். ஓ பிராமணோத்தமரே! முன்பு நான் முப்பது முகூர்த்த அளவானது நாளென்று சொன்னேனே; அவை பதினைந்து கூடினது ஒரு பக்ஷமாம். இரண்டு பக்ஷங்கள் ஒருமாதம். சூரிய கதியினாலாகும் இரண்டு மாதங்கள் ஓர் இருதுவாம். மூன்று இருது ஒரு அயனமாம். இரண்டு அயனங்கள் கூடி ஒரு வருஷமெனப்படும். இவ்வருடமானது சௌரம், சாந்திரம்,சாவனம், நாக்ஷத்திரம் என்று நான்கு விதமாக விகற்பிக்கப்படும். இப்படி விகற்பிக்கப்படுகின்ற வருஷங்கள் ஐந்து கூடி ஆரம்பம்போல் விகற்பமின்றி முடிதலாலே யுகமென்கிற பெயரையடையும். அவற்றுள் முதல் சம்வச்சர மென்றும், இரண்டாவது பரிவச்சர மென்றும், மூன்றாவது இடாவச்சரமென்றும், நான்காவது இத்வச்சரமென்றும், ஐந்தாவது அனுவச்சர மென்றுஞ் சொல்லப்படும்.

வேறு காலத்தில் அயனவிஷுவத் காலங்களுண்டாகின்ற முகாந்தரங்களைச் சொல்லுகின்றேன் கேளும். சுவேதமலைக்கு வடக்கில் சிருங்கவான் என்கின்ற பருவதமுண்டென்று சொன்னேனே அது மூன்று கொடுமுடிகளை யுடைய காரணத்தால் அப்பெயரால் விளங்குகின்றது. அம்முடிகளுள் ஒன்று தென்புறத்திலும், மற்றொன்று வடபுறத்திலும், இன்னொன்று நடுவிலும் இருக்கின்றன. தென்புறச் சிருங்கத்திற் சூரியன் சஞ்சரிப்பதனால் தக்ஷிணாயனமும், வடபுறச் சிருங்கத்திற் சஞ்சரிப்பதனால் உத்தராயணமும், நடுச் சிருங்கத்தில் வருவதனால் விஷுவமும் உண்டாகின்றன. கிருத்திகையின் முதற் பாதத்திலே சூரிய னிருக்கையில் சந்திரன் விசாகா நக்ஷத்திரத்தின் நாலாம் பாதத்தில் இருப்பன். சூரியன் விசாகா நக்ஷத்திரத்தின் மூன்றாம் பாதத்தில் சஞ்சரிக்கும்போது சந்திரன் கிருத்திகையின் முதலில் இருப்பான். இப்படிப்பட்ட காலந்தான் மகாவிஷுவமென்கிற புண்ணியகாலம். அப்போது சிரத்தையுள்ள புருஷர் தேவதைகள் பிதுருக்கள் இவர்களை உத்தேசித்து பிராமணருக்குத் தானங் கொடுக்க

வேண்டும். இது தானத்திற்கு மூகமா யிருக்கின்றது. அப்போது தானங் கொடுப்பவன் மகாபுண்ணியஞ் செய்தவனாகின்றான்.

யாககாலங்கள் அறியும்படிச் சொல்லுகின்றேன் கேளும். பகல், இரவு, அர்த்தசாமம் என்கிற பக்ஷம், கலை, காஷ்டை, க்ஷணம், பௌர்ணமாசை, அமாவாசை, சந்திரன் காணப்படும்படியான சினிவாலி என்பதும், சந்திரன் காணப்படாத குரு என்பதுமான அமாவாசையின் பிரிவுகள், பூரணசந்திரனுள்ள ராகை என்பதும் குறைந்த சந்திரனுள்ள அனுமதி என்பதுமான பௌர்ணமாசையின் பிரிவுகள், தபம் தபசியம் மதுமாதவம் சுக்கிரம் சுசி என்கிற மாசி முதலான மாதங்களாலாகிய வுத்தராயண இருதுக்கள் மூன்று, நபம் நபசியம் இஷம் ஊர்ச்சம் சகம் சகசியம் என்கிற ஆவணி முதலான மாதங்களாலாகிய தக்ஷியணாயன இருதுக்கள் மூன்று இக்காலங்கள் எல்லாம் முக்கியமாக நன்றாய் அறிய வேண்டிய யாக காலங்களாம்.

முன்பு லோகாலோகம் என்னும் ஒரு பருவதம் உண்டென்று உமக்குச் சொன்னேனே. அதில் நாற்புறங்களிலும் கர்த்தமப் பிரசாபதியின் குமாரர்களான சுதன்வா சங்கபா என்பவர்களும், இரணியரோமா கேதுமான் என்கிற வேறிருவருமான லோகபாலகர் நால்வர் இருக்கின்றார்கள். இவர்களுக்கெல்லாம் சுகதுக்கங்களும் ராகத் துவேஷாதிகளுமான துன்பங்களில் ஒன்றும் இல்லை. இன்னுங் கேளும் மயித்திரேயரே! அகஸ்திய வீதிக்கு வடக்காயும், அஜ வீதிக்குத் தெற்காயும், வைசுவானர மார்க்கத்திற்கு வெளியிலிருக்கிற மார்க்கம், பிதுர்யானம். அஃதாவது பிதுர்லோகஞ் சேரும்வழி. அங்கே அக்கினிஹோத்திர முடையவர்களாய் மகானுபாவர்களான சில ரிஷிகள் வாசஞ்செய்து கொண்டு, வேதத்தில் கர்மகாண்டங்களைத் துதித்துக் கொண்டு, யாக முயற்சியைச் செய்வித்துக்கொண்டு இருக்கின்றார்கள். அவ்வுலகத்தை யடைய விரும்புவோர்களுக்குத்தான் பிதுர்யானம் என்று முன் சொல்

லப்பட்ட * தூமாதிமார்க்கம் உண்டு. அவ்வுலகத்தி லிருக்கிற பிதுர்க்கள் கர்மகாண்டம் அழிந்து போகாம லிருக்கும்படி சந்ததிகளினாலும் தபசினாலும் ஏற்பாடு களினாலும் வேதாத்தியயனங்களினாலும் யுகந்தோறும் ஸ்தாபித்து வருவதுமல்லாமல், முந்தினவர் பிந்தின வர்களுடைய வமிசத்திலேயும், பிந்தினவர் முந்தின வர்களுடைய வமிசத்திலேயும் ஜனித்துக்கொண்டே, இம்மூன்று உலகமும் அழியுங்காலமாகிய பிரமாவின் தினம் வரைக்கும் இருப்பார்கள்.

கேளும், நாகவீதிக்கு வடக்காயும், சப்தரிஷி வீதிக் குத் தெற்காயுமுள்ள மார்க்கம் தேவயானம் என்று சொல்லப்படும். அவ்விடத்திலே இந்திரிய ஜயமுள்ள வர்களாய்ச் சித்திபெற்றவர்களாய் நிருமலராய் பிரமசாரி களான சில மகாத்துமாக்கள் இருக்கின்றார்கள். அவர் கள் சந்ததியை வெறுத்திருக்கையாலே மிருத்துவை வென்றவர்களானார்கள். அந்த எண்பதினாயிரம் இருடி களும் சூரியனுடைய அந்த வடவண்டை வழியை ஆசிரயித்துப் பிரமாவின் தினபரியந்தம் யாதொரு துன்பமும் அழிவும் இல்லாதவர்களாய் இருப்பார்கள். இந்த இருப்பு, உலோபமும் அதனடியான குரோதாதி களும் ஸ்திரீ சம்போகமும் விருப்பும் வெறுப்புகளும் இல்லாமையினாலும், கரும சம்பந்தத்தை விட்டிருக் கின்றதனாலும், யோகத்தினின்றும் நழுவாமையினா லும், சத்தாதி விஷயங்களிற் குற்றத்தைக் காண்கையி னாலும் அவ்விடத் திருப்பவர் பிரமதின முடிவளவும் நிலைநிற்பதினாலும் அமிருதத்துவம் என்று மோக்ஷம் போலே உபசாரமாகச் சொல்லப்படும். இந்தப் பிரம தினாந்தமானகாலமே பிரமஹத்தி செய்தபாவத்தின் பய னாக நரகம் அனுபவிப்பதற்கும், அசுவமேதஞ் செய்த புண்ணியத்திற்காக மகாபோகம் அனுபவிப்பதற்கும்ஏற்

* பிதுர்யானம் என்றும் தக்ஷிண மார்க்கம் என்றும் சொல்லப்பட்டது தூமாதிமார்க்கம். அதாவது முதலில் தூமம், பிறகு கிரமமாய் இராத்திரி, அபரபக்ஷம், தக்ஷிணாயனம், மாதங்கள், பிதுர்லோகம், ஆகாசம், சந்திரன் என்னும் எல்லைகளாம். இவ்வழியிற் போனவர் கர்மலோகானுபவ முடிந்த வுடனே திரும்பிச் சந்திரனைவிட்டு ஆகாசம், காற்று, புகை, மேகம், மழைத் தண்ணீர், விதைகள், இவற்றின் வழியாய் ஸ்திரீ புருஷர்களை யடைந்து கர் மங்களுக்கேற்ற தேகத்தோடு பிறப்பார்கள்.

படுத்திய காலமாம். அந்தக் காலத்தில் பூமி முதல் துருவனிருக்கும் ஸ்தானமளவும் அழிந்துபோய் விடும்.

சப்த ரிஷிகளுக்கு மேலே வடபுறத்திலே துருவன் இருக்குமிடம் யாதுண்டோ அது திவ்வியமாயும் மகா பிரகாசமாயு மிருக்கின்ற மூன்ருவது ஆகாசஸ்தானம். அது விராட் புருஷனுக்கு இருதய நாடி ஸ்தான மானது பற்றி அங்கே விஷ்ணு எழுந்தருளியிருக்கின் ருர். ஆகையால் அதற்கு விஷ்ணுபதம் என்று பெய ருண்டாயிருக்கின்றது. அது காமாதி தோடங்களைக் கழித்துப் பரமாத்துமாவி னிடத்தே மனதை ஸ்திரப் படுத்தின யோகிகளுக்கு புண்ணிய பாப கர்மங்களெல் லாம் ஒழிந்தபோது அடையத்தக்க ஸ்தானமாயிருக் கின்றது. யோகிகள் பாப புண்ணியங்கள் ஒழிந்தத னுலே சுக துக்கானுபவ ரூப சம்சார ஹேது இல்லாத வர்களாய், எந்த உத்தமமான விடத்திலே சென்று ஆனந்தத்தோ டிருப்பார்களோ அதுதான் ஸ்ரீவிஷ்ணு வினுடைய பரமபதம். லோக சாக்ஷிகளான தருமன், துருவன் முதலிய மகாத்துமாக்கள் எங்கே யிருந்து கொண்டு அந்த ஸ்ரீவிஷ்ணுவினுடைய ஐசுவரியத்துக் குச் சமானமான ஐசுவரியமாகிய இந்திரிய ஜயத்தி னுலே சீர்ப்பட்டிருக்கின்ற யோகப் பிரபாவமுள்ளவர்க ளாய் விளங்குகின்ருர்களோ அதுதான் ஸ்ரீவிஷ்ணு வினுடைய பரமபதமாம். சராசரங்களெல்லாம் எங்கே நெடுக்காகவும் குறுக்காகவும் நோக்கப்பட்டவையாய் எங்கே யிருப்பனவாய் எங்கே இனி யுண்டாவனவா யிருக்குமோ அது ஸ்ரீவிஷ்ணுவினுடைய பரமபதமாம். ஆகாசத்திலே பரவ நிற்கின்ற சூரியனைப்போலே மகாத் துமாக்களுக்குச் சுத்த விவேக ஞானத்தினுலே பிரத்தி யட்சமாய் விளங்குவதெதுவோ அதுதான் ஸ்ரீவிஷ்ணு வினுடைய பரமபதமாம். அங்கே சென்றவர்கள் மறு படியும் சம்சார சம்பந்தமடையாமல் பிரமாவோடு கூட மோட்சமடைவார்கள். ஆகையால் அது கிரம முத்தி ஸ்தானமானது பற்றி மோட்ச ஸ்தானமான பரமபத மென்று சொல்லப்பட்டது.

அது லோகாதாரமான விதம் சொல்லுகின்றேன் கேளும் மகா தேஜசுள்ள துருவனனவன் அங்கே நடுக்கூச்சம்போலே ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றா னன்றோ, அந்தத் துருவனிடத்திலே சகல கிரக நட்சத் திரங்களும் ஸ்தாபிக்கப்பட்டு இருக்கின்றன. அந்தக் கிரக நட்சத்திரங்களில் மேகங்கள் நாட்டப்பட்டு இருக் கின்றன. மேகங்களிலே மழை ஏற்படுத்தப்பட்டு இருக் கின்றது. மழையானது சகல ஓஷதிகளின் மூலமாய்ச் சிருஷ்டிக்குக் காரணமாயும் தேவதைகள் முதலானோர்க் குப் போஷணமாயும் இருக்கின்றது. அதனாலே நெய் முதலிய அவி சொரிகின்ற ஆவுதிமூலமாகத் தேவர்கள் திருப்தி யடைந்தவர்களாய், லோகசிருட்டிக்கும் ஸ்தி திக்கும் காரணமாகின்றார்கள். இந்தப்படி இந்த விஷ்ணுபதமென்கிற பரிசுத்தமான மூன்றாம் ஸ்தான மானது மூன்றுலோகங்களுக்கும் ஆதாரமாயும் விருத் திக்கு ஹேதுவாயும் இருக்கின்றது.

ஓ பிராமணோத்தமரே! இன்னும் அவ் விஷ்ணு பதத்தின் பரிசுத்த பிரபாவத்தைக் கேளும். அங் கிருந்துதான் சகல பாதக நாசஞ்செய்யும் திறமுடைய கங்கை என்னு நதியானது உண்டாகி, தேவஸ்திரீக ளுடைய சரீரத்தின் குங்குமப் பூச்சினால் பொன்னிற முடையதாய் விளங்குகின்றது. ஸ்ரீவிஷ்ணுபகவா னுடைய இடது திருவடித் தாமரையின் கட்டை விர லின் நகத்தி லுண்டான பிரவாகத்தினின்றும் பெருகி வருகின்ற அந்தக் கங்கா நதியைத் துருவனனவன் இரவும்பகலும் மகா பக்தியோடு சிரத்தில் வகிக்கின் றான். பின்பு சப்தரிஷிகள் பிராணயாமஞ் செய்து கொண்டு, அந்தக் கங்கையின் அலைகளினாலே ஜடை கள் மிதக்கத் தாங்கப்பட்டு, அகமர்ஷண ஸ்நானஞ் செய்துகொண்டு இருக்கிறார்கள். பிறகு அந்தக் கங்கா நதியின் ஜலப்பிரவாகத்தினாலே சந்திர மண்டல மானது நன்றாக நனைக்கப்பட்டதாய் இரவில் அதிக காந்தியடைந்து விளங்குகின்றது. அப்புறம் சந்திர மண்டலத்தைவிட்டுப் புறப்பட்டு மேருபருவதத்தின் மேல் விழுந்து, சிதா அளகநந்தா சக்ஷு பத்திரை என்கிற நாமதேயங்களை யடைந்து நான்கு திசை

களிலும் இவ்வுலகத்தைப் பரிசுத்தஞ் செய்யும் பொருட்டு இறங்கி வருகின்றது. அந்நான்கு பிரிவில் தென்புறத்தில் வருகின்ற அளகந்தை என்னுங் கங்கைப் பிரிவை சிவன் மகா பத்தியோடு நூறு வருஷத்துக்கு மேலான காலமும் தன் சிரசில் தரித்துவிட, அது சிவனுடைய ஜடாமகுடத்தினின்றுந் தரையில் விழுந்து, சகர குமாரருடைய நுறுங்கிப் போயிருந்த எலும்புகளை நனைத்து, பாபஞ்செய்திருந்த அவர்களை அதின் முகாந்தரமாய் சுவர்க்கஞ் சேரும்படிச் செய்தது. இன்னும் அதன் பிரபாவஞ் சொல்லுகின்றேன். அந்த மகா நதியில் ஸ்நானஞ் செய்த மாத்திரத்திலே சகல பாபங்களும் பாழாவதுமன்றி மகா புண்ணியமும் உண்டாகும். புத்திராதிகள் அதின் ஜலத்தினாலே தங்கள் பிதுருக்களுக்கு ஒருதரம் தர்ப்பணஞ் செய்வார்களாகில் அதனால் அந்தப் பிதுர்க்கள் நூறுவருஷமட்டும் ஒப்பற்ற திருப்தியடைவார்கள். அந்தக் கங்கா நதியின் கரையில் பிராமணரும் க்ஷத்திரியரும் யக்கியேச்வரனான ஸ்ரீ புருஷோத்தமனை மகா யக்கியங்களினாலே ஆராதித்து, இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் மிகுந்த செல்வத்தைப் பொருந்தினார்கள். யோகிகளும் அதன் தீர்த்தத்தில் மஞ்சனமாடிப் பாவங்கள் நசிக்கப்பெற்று ஸ்ரீ கேசவனிடத்திலே சித்தலயத்தினால் மோக்ஷானந்தமும் பெற்றார்கள். அந்தக் கங்கையானது தன்னில் முழ்குகின்றவருக்கும் தன்னையுண்பவருக்கும் துதிப்பவருக்கும் பரிசிப்பவருக்கும் விரும்புகிறவருக்கும் காண்பவருக்கும் கேட்பவருக்கும் சகல பாப நிவர்த்தி செய்யும்படியான பிரபாவமுடையது. நூறு காதத்திற்கு அப்புறமிருந்தாகிலும் கங்கை கங்கை யென்று நாமசங்கீர்த்தனஞ் செய்தவர்களுக்கும் மூன்று ஜன்மங்களினாலே நேர்ந்திருக்கின்ற பாவங்களை யொழிக்கும். இப்படி மூவுலகங்களையும் பரிசுத்தஞ் செய்யவல்ல கங்காநதி யவதரிக்கப்பெற்று அந்த ஸ்ரீ விஷ்ணுபதமானது விளங்குகின்றது.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

## சிம்சுமாரசக்கர வர்ணனை

கேளும், மயித்திரேயரே! மகா பிரபுவான ஸ்ரீ ஹரி பகவானுடைய சிம்சுமாரம் என்கிற ஜந்துபோலே தோன்றுகின்ற நக்ஷத்திரக் கூட்டமாகியரூபம் யாதொன்றுண்டோ அதின் வாலில் துருவன் இருக்கின்றான். அந்தத் துருவன் அங்கிருந்து சுற்றிக்கொண்டு சந்திர சூரியாதி கிரகங்களையெல்லாஞ் சுற்றித் திருப்ப, அவைகளும் சக்கரம்போலே அவனைச் சுற்றித் திரும்புகின்றன. சந்திர சூரியர்களும், மற்றுமுள்ள கிரகங்களும், நக்ஷத்திரங்களும், காற்றின் வடிவான கயிறுகளினாலே கட்டப்பட்டுத் துருவனிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆகாசத்திலே யிருக்கும் நக்ஷத்திரக் கூட்டமெல்லாம் சிம்சுமாரமென்கிற ஜந்துவைப்போலே காணப்படுகின்ற தென்றேனே, அதன் இருதயத்திலே சகல தேஜோ லோகங்களுக்கும் ஆதாரபூதனான ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளி இருக்கின்றான். உத்தானபாதனுடைய புத்திரனான துருவன் அந்த லோகநாதனை ஆராதித்து நக்ஷத்திர மயமான அந்தச் சிம்சுமாரத்தின் வாலினிடத்திலே யிருக்கப்பெற்றான். அந்த சிம்சுமாரத்திற்கு ஆதாரம் ஸ்ரீயப்பதி. அந்த சிம்சுமாரமோ துருவனுக்கு ஆதாரம் அந்தத் துருவன் சூரியனுக்கு ஆதாரம். அந்தச் சூரியனோ தேவாசுர மனுஷ்யாதி யாவற்றுக்கும் ஆதாரம். அஃது எப்படியெனில், சூரியன் தான் இரசவத்தான ஜலங்களை எட்டு மாதங்களினாலே இழுத்து வருஷிக்க, அம் மழையினாலே சகல ஜந்துக்களுக்கும் உபயோகமான உணவுகள் உண்டாகின்றன. அன்னத்தினாலே தான் சகல ஜகத்துமுண்டாகி வளர்கின்றன. மேலும் சூரியன் தன் உக்கிரமான கிரணங்களினாலே லோகத்திலிருந்து தண்ணீரை இழுத்தும் சந்திரனிடத்திலே பெய்ய, சந்திரனும் வாயுநாடி மயங்களான வழிகளினாலே புகையும் நெருப்பும் காற்றுமான வடிவுள்ள மேகங்களிலேவிட, அம் மேகங்களினின்றும் ஜலமானது உலகத்திலே

விழுகின்றது. அந்த மேகங்களினின்றுந் தண்ணீர் நழுவி விழாமையாலே அம்மேகங்களுக்கு அப்பிரங்கள் என்று பெயர் வந்தது. ஆனாலும் காற்றினால் அம்மேகங்கள் அலைக்கப்பட்ட காலத்தினாலுண்டான பரிபாகத்தினால் தண்ணீர் நிர்மலமாகி விழுகின்றது. ஆறுகளிலிருக்கின்ற ஜலம், சமுத்திரங்களிலுள்ள ஜலம், பூமியிலுண்டாகிற ஜலம், பிராணிகளிலுண்டாகிற ஜலம் ஆகிய நால்வகை ஜலத்தையும் கவர்ந்துதான் சூரியன் வருஷிக்கின்றான். அன்றியும், ஆகாச கங்கையின் ஜலத்தைத் தன் கிரணங்களாலே கொண்டு மேகங்களிற் சேர்க்காமலே வருஷிப்பதுமுண்டு. அந்தப் பரிசுத்த தீர்த்தம் பட்டவுடன் மனிதன் பாவத்தினின்றும் தீர்ந்து நரகத்தினின்றும் தப்பித்துக்கொள்கிறான். அந்த ஸ்நானம் திவ்விய ஸ்நானமென்று சொல்லப்படும். ஓ முனிவரே! சூரியன் காணப்படும்பொழுது எந்த நீர் மேகமின்றி ஆகாசத்தினின்றும் விழுகின்றதோ அதுதான் ஆகாச கங்காஜலமென்னப்படும். அன்றியும் கிருத்திகை முதலான ஒற்றைப்பட்ட நக்ஷத்திரங்களிலே சூரியன் விளங்கிக்கொண்டேயிருக்க, ஆகாசத்தினின்றும் விழுகின்ற தீர்த்தமானது திக்குக்கஜங்களினாலே வருஷிக்கப்படுகிற ஆகாச கங்காஜலமெனப்படும். ரோகிணி முதலான இரட்டைப்பட்டை நக்ஷத்திரங்களிலே சூரியன் பிரகாசிக்கையில் மேகமில்லாமல் வானத்தினின்றும் உகுகின்ற தண்ணீர் சூரியன் பெய்யும் ஆகாசகங்கை ஜலமென்னப்படும். எந்தத்தண்ணீரானது மேகங்களினாலே வருஷிக்கப்படுகின்றதோ அது, பிராணிகளின் பிழைப்புக்காக ஓஷதிகளைப் போஷிக்கும் அமுதமென்று சொல்லப்படும். இவ்விதமாக மழையினாலே ஓஷதிகள் பயன் கொடுக்குமளவும் போஷிக்கப்பட்டனவாகி நிற்க, அவைகளைக்கொண்டு சாஸ்திரக் கண்களையுடைய மனிதர், விதிப்படி பலவகைப்பட்ட யக்கியங்களைச் செய்து தேவதைகளைத் திருப்தி பண்ணுகின்றார்கள். இவ்விதமாய் யாகங்களும், வேதங்களும், பிராமணாதி வர்ணங்களும், தேவதைகளும், பசு பட்சியாதிகளும் குடிகொண்ட உலகமெல்லாம் மழையினாலேயே தாங்கப்பட்டு இருக்கின்றன. ஏனெனின், அம்மழையன்றோ

அன்னத்தை விளைக்கின்றது. அம்மழையை உண்டாக்குகின்றவன் சூரியன். அச்சூரியனுக்கு ஆதாரமானவன் துருவன். அந்தத் துருவனுக்கு ஆதாரம். சிம்சுமார சக்கரம். அச்சக்கரத்துக்கு ஆதாரம். ஸ்ரீமந் நாராயணன். இப்படி ஸ்ரீமந் நாராயணன் அந்த சிம்சுமாரசக்கரத்தின் இருதயத்தி லிருந்துகொண்டு சகல பிராணிகளையும் தரிக்கும்படி தாங்கிக்கொண் டிருக்கின்றான்.

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தாம் அத்தியாயம்

# சூரியரதத்தின் விசேஷம்

மயித்திரேயரே! கேளும். சூரியன் சஞ்சரிக்கின்ற தட்சிணாயன உத்தராயண எல்லைகளின் நடுவாகிய கிராந்தி விருத்தங்கள் நூற்றெண்பத்து மூன்று. அந்த மண்டலங்களிலேதான் சூரியன் உத்தராயணத்தில் ஏறுவதும் தட்சிணாயனத்தில் இறங்குவதுமான மூந்நூற்றறுபத்தாறு கதிகளினாலே ஒரு வருஷத்தைக் கழிக்கின்றான். அந்தச் சூரியரதமானது சூரியர்களாலும் இருடிகளாலும் கந்திருவராலும் அச்சரசுக்களாலும் இயக்கர்களாலும் சர்ப்பங்களினாலும் இராட்சசர்களினாலும் ஏறப்பட்டிருக்கும். எப்படியெனில், அவ்விரதத்தில் சித்திரை மாதத்தில் தாதா என்கின்ற சூரியனும், கிருதஸ்தலை என்கிற அச்சரசும், புலஸ்தியர் என்கின்ற ரிஷியும், வாசுகி என்கின்ற சர்ப்பமும் ரதபிருத்து என்கிற இயக்கனும், ஹேதி என்கின்ற ராட்சசனும், தும்புரு என்கின்ற கந்திருவனும் வசிப்பார்கள். வைகாசி மாதத்தில் அர்யமா என்கின்ற சூரியனும், புலகன் என்னும் ரிஷியும், புஞ்சிகஸ்தலை என்கின்ற அச்சரசும், இரதௌஜா என்கிற யட்சனும், கச்சவீரன் என்கிற சர்ப்பமும், நாரதன் என்னுங் கந்திருவனும், பிரஹேதி என்னும் அரக்கனும் வசிப்பார்

கள். ஆனி மாதத்தில் மித்திரன் என்ற சூர்யனும், அத்திரி என்ற ரிஷியும், தக்ஷகன் என்கிற சர்ப்பமும், பௌருஷேயன் என்கிற அரக்கனும், மேனகை என்கிற அப்சரசும், ஹாஹா என்கிற கந்தருவனும் இரதஸ்வனன் என்ற இயக்கனும் இருப்பார்கள். ஆடி மாதத்திலே வருணன் என்கிற சூரியனும், வசிஷ்டர் என்கிற ரிஷியும், சகஜந்யை என்கிற அப்சரசும், ஹூஹூ என்கிற கந்தருவனும், நாகம் என்னும் சர்ப்பமும், இரதன் என்கிற ராட்சதனும், சித்திரன் என்கிற யக்ஷனும் வசிக்கின்றார்கள். ஆவணிமாதத்தில் இந்திரன் என்னுஞ் சூரியனும், விசுவாவசு என்னுங் கந்தருவனும், சுரோதா என்னும் யக்ஷனும், ஏலாபுத்திரன் என்னுஞ் சர்ப்பமும், ஆங்கிரசு என்கிற ரிஷியும், பிரமலோசை என்னும் அப்சரசும், சர்ப்பி என்னும் ராட்சதனும் இருப்பார்கள். புரட்டாசியில் விவசுவான் என்னுஞ் சூரியனும், பிருகு என்னும் மகரிஷியும், அனுமிலோசா என்கிற அப்சுரனும், சங்கபாலன் என்கிற சர்ப்பமும், வியாக்கிரகன் என்கிற அரசனும் உக்கிரசேனன் என்ற கந்தருவனும், ஆபூரணன் என்னும் யட்சனும் இருப்பார்கள். ஐப்பசியில் பூஷா என்கிற சூரியனும், வசுருசியென்னுங் கந்தருவனும், வாதன் என்னும் ராக்ஷசனும், தனஞ்சயன் என்னுஞ் சர்ப்பமும் கௌதமர் என்னும் இருடியும், கிருதாசி என்னும் அப்சரசும், சுஷேணன் என்னும் யக்ஷனும் இருப்பார்கள். கார்த்திகையில் பர்ச்சனியன் என்னுஞ் சூரியனும், விசுவாவசு என்ற கந்தருவனும், பரத்துவாஜர் என்னும் ரிஷியும், ஐராவதனம் என்னும் சர்ப்பமும், விசுவாசி என்னும் அப்சரசும், சேனஜித்து என்னும் யக்ஷனும், ஆப என்னும் இராக்ஷசனும், வாசஞ்செய்வார்கள். மார்கழியில் அம்சன் என்கிற சூரியனும், காசியபர் என்ற ரிஷியும், தார்க்ஷயன் என்கிற யட்சனும், மகாபத்துமன் என்னும் சர்ப்பமும், வித்தியுத்து என்னும் ராட்சசனும், சித்திரசேனன் என்னுங் கந்தருவனும், ஊர்வசி என்னும் அப்சரசும் இருப்பார்கள், தைமாதத்தில் பகன் என்னுஞ் சூரியனும், கிரது என்ற ரிஷியும் ஊர்ணயு என்ற கந்தருவனும், ஸ்பூர்ஜன் என்ற,

இராக்கனும், கார்க்கோடகன் என்னுஞ் சர்ப்பமும், அரிஷ்டநேமி என்கிற யக்ஷனும், பூர்வசித்தி என்னும் அப்சரசும் இருப்பார்கள். மாசிமாதத்தில் துவஷ்டா என்கிற சூரியனும், ஜமதக்கினி என்கிற ரிஷியும் திலோத்தமை என்னும் அப்சரசும், கம்பளம் என்னும் சர்ப்பமும், பிரம்மாபேதன் என்னும் ராக்ஷசனும், இருதசித்து என்னும் யட்சனும், திருதராஷ்டிரன் என்னுங் கந்தருவனும் வசிக்கின்றார்கள். பங்குனியில் விட்டுணு என்கிற சூரியனும், விசுவாமித்திரன் என்கிற இருடியும், ரம்பை என்கிற அப்சரசும், சூரியவர்ச்சசு என்கின்ற கந்தருவனும், சத்தியசித்து என்கிற யட்சனும், அசுவதரன் என்கிற சர்ப்பமும், யக்கியாபேதன் என்கிற ராட்சசனும் வாசஞ்செய்வார்கள். கேட்டீரோ மயித்திரேயரே! இப்படி ஒவ்வொரு மாதத்திற்கு எவ்வேறுபோராக இவர்களெல்லாம் ஸ்ரீ விட்டுணு சக்தியினால் வியாபிக்கப்பட்டு லோகப் பிரகாச நிமித்தமாய்ச் சூரிய ரதத்தில் இருக்கின்றார்கள். இவர்களுடைய செய்கைகளைக் கேட்பீராக. அந்தமண்டலத்தில் பிரகாசிக்கின்ற சூரியனுக்கு தேஜசு விருத்தியாகும்படி ரிஷிகள் துதிக்கின்றார்கள். கந்தருவர் கானஞ்செய்கின்றார்கள். அப்சரப்பெண்கள் ஆடுகின்றார்கள்; இராட்சதர் சூரியனுக்குப்பின் செல்லுகின்றார்கள்; சர்ப்பங்கள் சுமக்கின்றன; இயக்கர் கடிவாள முதலானவற்றைத் தாங்கிப் பிடித்துக்கொண் டிருக்கின்றார்கள்; இவர்களல்லாமல் வாலகிலியர் என்கின்ற மகரிஷிகள் எப்போதும் சூரியனைச் சூழ்ந்து உபாசித்துக்கொண்டு இருக்கின்றார்கள். இப்படிச் சூரியமண்டலத்திலே வாசஞ்செய்கின்ற ஏழு கணங்களும் அவ்வச் சமயங்களிலே பனி வெப்பம் தண்ணீர் இவைகளைப்பெய்வதற்குக் காரணமாயிருக்கின்றன.

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினோராம் அத்தியாயம்

# சூரியனுடைய கிரியா விசேஷம்

இப்படி ஸ்ரீ பராசரபகவான் அருளிச்செய்ததைக் கேட்டு, மயித்திரேய முனிவர் வினவுகின்றார்: சூரியமண்டலத்தில் பனி வெப்பம் மழை இவற்றிற்குக் காரணமாக ஏழு கணங்கள் இருக்கின்றனவென்றும், கந்தருவர், யக்ஷர், ராக்ஷசர், முனிவர், வாலகிலியர், அப்சரசுகள், நாகர் இவர்களுடைய தொழில் இன்னின்னதென்றும் தேவரீர் அருளிச்செய்தீர். ஆனால், சூரியனுடைய தொழில் இன்னது என அருளிச்செய்தீரில்லை. அந்தக் கணங்களே பனி வெப்பம் தண்ணீர் இவற்றை வர்ஷிக்குமானால் சூரியனுக்குக் காரியம் என்ன? சூரியனாலே மழை யுண்டாகிறதென்று தேவரீர் முன்னம் அருளிச்செய்தீர். அன்றியும் ஜனங்கள் சூரியன் உதயமாகி உச்சியில் வந்து அஸ்தமிக்கிறான் என்று சொல்லுகின்றார்கள். இப்படிப்பட்ட செய்கைகள் இந்த ஏழுகணங்களுக்கும் பொதுவாகவே யிருக்குமானால் சூரியனுக்குச் சிறப்பாய்ச் சொல்வதென்ன, இந்த விவரம் அருளிச்செய்யவேண்டும் என, ஸ்ரீபராசரர் அருளிச்செய்கின்றார்:

ஓ மயித்திரேயரே! இருக்கு யசுர் சாமம் என்கின்ற மூன்று வேத வடிவாகிய விசேஷமான ஸ்ரீவிஷ்ணு சத்தியே சூரிய ரூபமாகிப் பிரகாசித்துக்கொண்டு காய்வதுமல்லாமல், உலகத்தின் பாவத்தையும் போக்கிக்கொண்டு இருக்கின்றதனாலே அந்த மண்டலத்தில் வாசஞ்செய்கின்ற ஆதித்தன் முதலான கணங்கள் ஏழினும் அந்த ஆதித்தனே பிரதானம். அந்த அந்த மாதத்தில் வருகின்ற சூரியனிடத்திலே திரிவேதமயமான ஸ்ரீவிஷ்ணு சக்தியானது பிரவேசித்து விளங்குகின்றது. விடியற்காலத்திலே இருக்குகளும் மத்தியான்ன காலத்திலே யசுசுகளும், சாயங்காலத்திலே சாமங்களும் சூரிய சரீரகனாய்ச் சூரியனுக்குள்ளே விளங்குகின்ற ஸ்ரீவிஷ்ணுவைத் துதிக்கின்றன. இந்த

இருக்கு முதலிய மூன்று வேதங்களும் ஸ்ரீவிஷ்ணுவுக்குச் சரீரமாயிருக்கின்றன. இந்த ஸ்ரீவிஷ்ணு சக்தியானது சூரியனுக்குள்ளே மாத்திரமன்று, பிரமாதிகளுக்குள்ளும் பிரவேசித்து அந்த அந்தக் காரியங்களை நடத்துகின்றது. சிருஷ்டியாதியில் இருக்கு வேதமயமான பிர்மாவாகவும், திதியிலே யசுர்வேத மயமான விஷ்ணுவாகவும், முடிவில் சாமவேத மயமான உருத்திரனாகவும் ஸ்ரீமந்நாராயணனுடைய சத்தியானது பிரகாசிக்கின்றது. ஆதலால் உருத்திர சம்பந்தமான சாமத்தொனியானது * அசுத்த மென்றெண்ணப் படுகின்றது. இவ்வாறு வேதத்திரய ரூபமான ஸ்ரீவிஷ்ணுவினுடைய சுத்த சாத்துவிக சத்தியானது தன் சரீரமா யிருக்கின்ற ஏழுகணங்களுக்குள்ளே சூரியனிடத்திலே விசேஷித்துப் பிரவேசித்திருக்கின்றதினாலே சூரியன் விசேஷமாய்ப் பிரகாசித்துக் கொண்டு லோகத்திலுண்டான அந்தகாரங்களை யெல்லாம் நாசஞ் செய்கின்றான். இப்படிக்கு வேதமயமான ஸ்ரீவிஷ்ணுசத்தியின் அனுப்பிரவேசாதிசயத்தினாலே சூரியன் பிரதானமானதைப் பற்றியே அச்சூரியனை ரிஷிகள் துதித்துக்கொண்டும், கந்திருவர் பாடிக்கொண்டும், அரம்பையர் ஆட்டத்தினாற் களிப்பித்துக் கொண்டும், இராக்கதர் பின்றொடர்ந்து கொண்டும், நாகர் வகித்துக்கொண்டும், இயக்கர் கயிற்றைப் பிடிப்பதனால் சேவித்துக்கொண்டும், வாலகிலியர் உபாசித்துக் கொண்டும் வருகின்றார்கள். அந்த மண்டலத்திலே சக்தி ரூபத்தைத் தரித்திருக்கின்ற ஸ்ரீவிஷ்ணுவானவன் சப்த கணங்களைப்போலே தோன்றுவதுமில்லை. அழிவதுமில்லை சப்தகணமும் ஸ்ரீவிஷ்ணுவைக் காட்டிலும் வேறுதான். அனுப்பிரவேச விதம் எப்படியென்றால், ஒரு ஸ்தம்பத்தி லிருக்கின்ற கண்ணாடிக்குச் சமீபத்தில் எவனெவன் வருகின்றானோ அவனவன் தன்னுடைய நிழலை அக்கண்ணாடியிற் காணும்படி அதன் காந்தியை யடைவதுபோலே, அம்மண்டலத்திலே ஸ்திரமாயிருக்கிற ஸ்ரீவிஷ்ணு சக்தியை

* மற்ற வேதங்களைச் சாமவேதம் ஓதுகையில் ஓதக்கூடாமையாலே அஃது அசுத்தமான தேசகாலாதிகளைப்போல் அனத்தியாய மானதென் பது கருத்து.

அங்கே மாதந்தோறும் வருகின்ற சூரியன் அடைகின்றான். அப்படிப்பட்ட சூரியன் பிதுர்க்கள் தேவதைகள் மனுஷியர் முதலானாரைத் திருப்திசெய்துகொண்டு இராப்பகலுக்குக் காரணமாய்ச் சுற்றிக்கொண்டு இருக்கின்றான். பிதுர்க்கள் முதலானாருக்குத் திருப்தி செய்யும் விதம் எப்படியென்றால், சூரியகிரண பிரபாவத்தினாலே நிறைக்கப்பட்டு அமிர்தமயமாயிருக்கின்ற சந்திரனைக் கிருஷ்ண பக்ஷத்திலே அக்கினி முதலான தேவதைகள் ஒவ்வொரு கலையாகப் பானஞ் செய்கின்றார்கள். இப்படிச் சதுர்த்தசி வரையில் தேவதைகள் ஒவ்வொரு கலையாகப் பானஞ் செய்கின்றார்கள். இப்படிச் சதுர்த்தசி வரையில் தேவதைகள் பானஞ்செய்து மிகுந்திருக்கின்ற இரண்டு கலைகளுள் ஒன்றை அமாவாசையில் பிதுர்க்கள் பானஞ் செய்கின்றார்கள். இதுதான் அவர்கள் திருப்தியடையும் விதமென்றறியும். பூமியிலிருந்து தன் கிரணங்களினாலே இழுக்கும் இரசத்தை (நீரை) மறுபடியும் மழையாகப் பொழிந்து பயிர்களை விர்த்திசெய்து மனுஷ்யாதிகளைச் சூரியன் திருப்தி செய்கின்றான் என்பதை முன்பே சொன்னேன். இவ்விதமாய்ச் சூரியபகவான் தேவர்களுக்குப் பக்ஷதிருப்தியும், பிதுர்க்களுக்கு மாசதிருப்தியும், மனுஷ்யாதிகளுக்குத் தினதிருப்தியுஞ் செய்து கொண்டு விளங்குகின்றான்.

பதினோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# சந்திராதிமண்டல வர்ணனை

கேளும் மயித்திரேயரே! சந்திரனுடைய இரதமானது மூன்று சக்கரங்களை யுடையதாய் முல்லைப்பூ வர்ணங்களான பத்துக் குதிரைகள் இடப்பக்க வலப்பக்கங்களில் கட்டப்பெற்றதாய் இருக்கின்றது. துருவனை ஆதாரமாகக் கொண்டு வேகமுள்ளதாயும் இருக்கின்றது. அத்தேரினாலே சந்திரன் நாகவீதி முதலான

வீதிகளை யடைந்திருக்கின்ற நக்ஷத்திரங்களிலே சஞ்சரித்து வருகின்றான். சூரியகிரணங்களுக்கு எப்படியோ அப்படியே அந்தச் சந்திரனுக்கும் உதயாதி காலங்களிலே குறைவு வளர்ச்சி முறையுண்டு. சூரியரதத்தின் அசுவங்களைப்போலே ஜலத்திற்பிறந்த அந்தச் சந்திர ரதத்தின் அசுவங்களும் கல்பத்தின் ஆதியிலே ஒரேதரம் ரதத்திற் கட்டப்பட்டவைகளாய் அதன் முடிவுவரைக்கும் வகித்துக்கொண்டிருக்கின்றன. தேவதைகளாலே பானஞ் செய்யப்பட்டு ஒரு கலையோடு மிகுந்திருக்கின்ற அந்தச் சந்திரனைச் சூரியன் ஒரு கிரணத்தினாலே முன்பு தேவர்கள் பானம்பண்ணின முறைப்படி ஒவ்வொரு நாளுக்கு ஒவ்வொரு கலையாக வளர்த்து நிறைக்கின்றான். இப்படி அரைமாதத்தினாலே சந்திரனிடத்திலே நிறைக்கப்படுகின்ற அமிர்தத்தை முப்பத்து மூவாயிரத்து முந்நூற்று முப்பத்து மூன்று அமிர்தபானர்களாகிய தேவதைகள் அச்சந்திரனைப் பானம் பண்ணுகிறார்கள். இவ்வண்ணந் தேவர்களாலே பானஞ்செய்யப்பட்டு இரண்டுகலைகள் மிகுந்தவனாய்ச் சந்திரன் சூரியகிரணங்களில் மறைவதனாலே சூரியமண்டலத்திற் பிரவேசித்தவன்போலாகி அமை என்கின்ற கிரணத்தில் வாசஞ்செய்கின்றான். அதனாலே அந்த நாள் அமாவாசை என்னப்படும். அந்த நாளில் இராப்பகல்களில் சந்திரன் முந்தித் தண்ணீரிலும் பிந்திக் கொடி முதலானவைகளிலும் இருந்து, பின்பு முறையே சூரியனை யடைகின்றான். ஆனதனாலே அந்த நாளில் எவனாகிலும் கொடி முதலியவைகளைச் சேதித்தாலும் இலையை உதிர்த்தாலும் பிரமஹத்தி செய்த பாவத்தை யடைவான். கலாரூபமான பதினைந்தாம் பங்கினாலே சந்திரன் சிறிது மிகுந்திருக்கின்ற அமாவாசையின் அபராணணத்திலே, குறைந்தவனான அந்தச் சந்திரனைப் பிதுர்க்கள் அமிர்த பானத்திற்காக உபாசித்து அமிர்த மயமான அந்தப் பதினைந்தாங் கலையைப் பானஞ் செய்கின்றார்கள். சௌமியர் என்றும் பர்ஹிஷதர் என்றும் அக்கினிஷ்வாத்தர் என்றும் மூன்று பிரிவாயிருக்கின்ற பிதுர்க்கள் அமாவாசையினாலே சந்திரகிரணத்தினின்றும் ஒழுகுகின்ற

அமிர்தத்தை யுண்டு மேன்மையான மாச திருப்தி யடைகின்றார்கள். இவ்விதமாய்ச் சந்திரன் அமிர்த மயங்களாயும் குளிர்ச்சி யுள்ளவையாயு மிருக்கின்ற ஜல பரமாணுக்களாலே சுக்கிலபக்ஷத்தில் தேவதைகளையும், கிருஷ்ண பட்சத்தில் பிதுர்க்களையும், புல் பூண்டு கொடி செடி முதலானவைகளை யுண்டாக்குவதனாலேயும், நிலவு சந்தோஷிப்பித்தலினாலேயும், மனுஷ்ய மிருக பக்ஷி முதலானவைகளையும் திருப்தி செய்து வருகின்றான்.

இந்தச் சந்திர புத்திரனான புதனுடைய ரதமானது வாயு அக்கினி இவைகளினாலே பிறந்ததாய், பூமியிற் பிறந்த பொன்னிறமான எட்டுக் குதிரைகளோடு கூடி, வரூதம் என்கிற முன்தாங்கும் அவயவமும், அநுகர்ஷம் என்கின்ற அடித்தாங்கும் அவயவமும், உபாசங்கம் என்கின்ற உட்காருமிடமும், பதாகை முதலான மற்றை அவையவமும், உடையதாகி விளங்குகின்றது. சுக்கிரனுடைய ரதமும் இப்படி அவயவாலங்காரங்களைப் பெற்றதாய் எட்டுக் குதிரைகள் கட்டினதாய், மிகப்பெரிதாய், பொன்மயமாய் விளங்கும். அங்காரகனுடைய ரதமும் பெரிதாய் அக்கினியிற் பிறந்தவைகளாய் பதுமராகம் போலே சிவந்திருக்கின்ற எட்டுக் குதிரைகள் கட்டப்பெற்று விளங்குகின்றது. எட்டு வெள்ளைக் குதிரைகள் கட்டப்பெற்றதாய், பொன்மயமாகி விளங்குகின்ற பெரிய ரதத்திலே பிரகஸ்பதியானவர் இருந்துகொண்டு, ஒவ்வோர் இராசியில் ஒவ்வொரு வருஷம் இருக்கின்றார். சனியானவன் ஆகாசத்திற் பிறந்து சித்திர வர்ணமான இரதத்தில் ஏறிக்கொண்டு மெல்ல மெல்லச் சஞ்சரிக்கின்றான். இராகுவின் தேரானது கிஞ்சித்து வெண்ணிற முடையதாய், வண்டின் நிறமுள்ள எட்டுக் குதிரைகள் கட்டப் பெற்றதாய் இருக்கின்றது. இராகுவானவன் இப்படிப்பட்ட ரதத்தோடு சூரியனுக்கு மேலே அந்தகார மயமான மூன்றாம் ஸ்தானத்திற் சஞ்சரித்துக்கொண்டு, பருவ காலங்களிலே அங்கிருந்து திரும்பி, பூமி முதலானவைகளின் சாயையிலே பிரவேசித்து, சூரிய சந்திரர்களை மறைத்துக் கிரணங்களை உண்டாக்குகின்றான்.

அப்படியே கேது இரதத்தில் கட்டியிருக்கின்ற குதிரைகள் எட்டும் சத்தை கொளுத்தின புகைவர்ணங்களாயும், அரக்கின் ரசத்து வர்ணமுடையவைகளாயும் இருக்கும். கேதுவும் ராகுவைப்போலவே கிரகண காரணமாம்.

இவ்விதமாய்ச் சூரியன் முதலான நவக்கிரகங்களுடைய இரதங்கள் இருக்கும் விதத்தை உமக்குத் தெரியச் சொன்னேன். இந்தக் கிரக நட்சத்திரங்களுடைய மண்டலங்கள் எல்லாம் வாயுரூபமான கயிறுகளினாலே துருவனிடத்திலே கட்டப்பட்டு, தங்கள் தங்களுக்கு ஏற்பட் டிருக்கின்ற சாரத்தின்படி சுற்றிக்கொண்டு இருக்கின்றன. ஆகாசத்தி லுண்டான மண்டலங்கள் அத்தனையும் அத்தனை காற்றுக் கயிறுகளினாலே கட்டப்பட்டு, செக்கிழுக்கு மெருதுகள் தாங்கள் சுற்றிக்கொண்டே அச்செக்கையும், சுற்றுவிப்பதுபோல், தாங்கள் சுற்றிக்கொண்டு தங்களுக்கு ஆதாரமான துருவனையும் சுற்றுவிக்கின்றன. அன்றியும் இந்தக் கிரக முதலானவையெல்லாம் காற்றின் வடிவமான சக்கரத்தினாலே தினந்தோறும் ஏவப்பட்டு, கொள்ளிக்கட்டையானது சக்கரம்போல் காணப்பட்டுச் சுழல்வது போலே சுழன்றுகொண்டு இருக்கின்றன. ஆதலால் அக் காற்றுக்குப் பிரவகம் என்கின்ற பேர் உண்டாயிருக்கின்றது.

முன்பு நான் சிம்சுமாராகிருதியான துருவாதாரரூபமென்று சொன்னேனே; அது இருக்கும் விதத்தை நன்றாய்க் கேளும். அந்த ஸ்வரூபத்தைக் காண்கின்றவன் அன்று பகல் செய்த பாவத்தினின்றும் விடுபடுவதுமன்றி, அந்தச் சிம்சுமார சக்கிரத்தில் எத்தனை நக்ஷத்திரங்கள்சேர்ந்திருக்கின்றனவோ அத்தனை வருஷங்களினளவும் சுகமாகச் சீவித்திருப்பான். நக்ஷத்திர ரூபிகளான சிலதேவதைகள் அதன் அவயவமாய் இருப்பார்கள். அதாவது அந்தச் சிம்சுமாரத்திற்கு, உத்தானபாதன் மேல்வாயிலும், யக்கியன் கீழ்வாயிலும், தருமன் சிரத்திலும், நாராயணன் இருதயத்திலும், அசுவனிதேவதைகள் கால்களிலும், வருணன் அர்யமாவும் பின்தொடைகளிலும், சம்வச்சரம் குறியிலும், மித்திரன்

அபானத்திலும், அக்கினியும் மகேந்திரனும் காசிபனும் துருவனும் முறையே வாலிலும் இருக்கின்றார்கள். அக்கினி முதலான நான்கு நக்ஷத்திரங்களும் மற்ற அவயவங்களிலுள்ள நக்ஷத்திரங்களைப்போலே அஸ்தமிக்காமல் எப்போதும் காணப்பட்டுக்கொண்டே இருக்கும்.

ஓ மயித்திரேயரே! நீர் கேட்டபடி பூமியின் இருப்பும், அதில் பருவதங்கள் சமுத்திரங்கள் தீவுகள் வர்ஷங்கள் முதலானவைகளின் இருப்பும், ஆகாசத்தில் இருக்கும் கிரக நக்ஷத்திராதிகளின் இருப்பும், கூடிய வரையிற் சொன்னேன். மேலும் அதன் சுருக்கம் சொல்லுகின்றேன் கேளும். ஸ்ரீ விஷ்ணுவின் சரீரமான ஜலம் யாதுண்டோ அதினின்றும் தாமரைப் பூப்போல பூமியானது பருவத சமுத்திராதிகளோடு கூட உண்டாயிற்று. ஆனதால் இந்தப் பூமியும் அவருடைய சரீரமேயாம். இதுமாத்திரமேயன்று. சூரியாதி சோதிகளும், பூமி முதலான லோகங்களும், வனங்களும், மலைகளும், திசைகளும், நதிகளும், சமுத்திரங்களும் என்றும் இருக்கின்றதென்று சொல்லத்தக்க சித்தும், மாறுவதினாலே இல்லையென்று சொல்லத்தக்க அசித்தும், யாவும் அந்த ஸ்ரீவிஷ்ணுவின் சரீரங்களாயிருக்கின்றன. ஞானமே வடிவான சகல ஜீவன்களையுஞ் சரீரமாகக் கொண்டிருக்கின்ற அந்த ஸ்ரீபகவானுக்கும் ஞானமே சுத்த ஸ்வரூபமல்லது தேவமனுஷ்யாதி ஸ்வரூபமன்று. ஆகையால் பர்வத சமுத்திர பூமியாதி ரூபபேதங்களெல்லாம் சீவன்களுடைய கர்மவசத்தினாலுண்டான ஞானபேதத்தைப் பற்றியவையே. எப்போது இப்படிப்பட்ட அஞ்ஞான ஹேதுவான கர்மம் க்ஷயப்படுமோ அப்போது ஞானமயமான தன் சொரூபம் சுத்தமானதாகத் தோன்ற, சகலமும் கர்ம மூலமான நினைப்பின் பேதத்தினாலே வெவ்வேறு வண்ணமாகத் தோன்றியதாகுமேயல்லாமல் சுபாவமாய் அவ்வவ் வஸ்துக்களில் அந்தந்தப் பேதங்கள் இருக்கமாட்டா. ஞானமயமான வஸ்துவே ஸ்திரமாகையாலே அஸ்தி [இருக்கின்றது] என்று உள பொருளாய்ச் சொல்லப்படும். ஞானமில்லாத ஜடமெல்லாம் மாறிப்போவன

வாகையால், நாஸ்தி [இல்லை] என்று இல்பொருளாய்ச் சொல்லப்படும். ஏனெனில் ஆத்தும ஸ்வரூபத்தைக் காட்டிலும் ஆதியும் மத்தியமும் முடிவும் இல்லாததும், எப்போதும் மாறுமல் ஒரே உருவத்தையுடைய வஸ்து எங்கே யிருக்கின்றது? எது அடிக்கடி வேறுபாட்டை அடைகிறதோ அதில் உண்மை எங்கே இருக்கின்றது? இவைகளைத் திருஷ்டாந்தப் படுத்திக் காட்டுகிறேன். முதலில் பிருதிவியானது மண்ணுருண்டையாகி, பின்பு குடமாகி, அஃது உடையக் கபாலமாகி, அக்கபாலம் துண்டு துண்டாகச் சூர்ணமாகி, அப்புறம், துகளாகி, தன்பின்பு அணுவாக மாறுகின்றது. இவையெல்லாம் ஆத்தும ஸ்வரூப யதார்த்தந் தெரியாமல் தேவ மனுஷ்யாதி ரூபமாக நிச்சயித்துக் கொண்டவர்களுக்குத் தங்களால் அநுபவிக்கப்படுகின்ற வெவ்வேறு பொருளாகத் தோன்றுகின்றனவன்றோ? இவற்றுள் எதை வஸ்துவென்று சொல்லலாம்? ஞானாகாரமான ஆத்துமவஸ்து தவிர வேறு எதுவும் இருக்கின்றது என்று சொல்லத்தக்க பொருள் இல்லை. அந்த ஞானாகாரமோ அவரவருடைய கருமபேதத்தினுலே மாறுபட்ட சித்தமுடைய ஜனங்களுக்கு தேவாதி சரீரப் பிரவேசத்தினுலே அந்தந்த ரூபமாகத் தோன்றுகின்றது. ஆத்துமஸ்வரூபமானது சுபாவத்தில் கர்மமில்லாததும், அதனுல் வரும் பிரகிருதி சம்பந்தமான மலமில்லாததும், அதுபற்றி உண்டாக்கத்தக்க சோக மோஹ லோபாதி தோஷ சம்பந்த மில்லாததும், தேய்தல், வளர்தல் முதலியன வில்லாமையால் ஒரே ரூபமானதுமாய் இருக்கின்றது. இப்படிப்பட்ட ஞானரூபமான ஆத்தும ஸ்வரூபம் ஸ்ரீ வாசுதேவனுடைய சரீரமாகையாலே தன்மயமாய் இருக்கின்றது. அந்த ஸ்ரீ வாசுதேவாத்துமகம் ஆகாதவஸ்து ஒன்றுமில்லை. மயித்திரேயரே! இவ்விதமாய் ஞானஸ்வரூப மொன்றே நித்தியமா யிருக்கையாலே சத்தியபதார்த்தம் என்றும், மற்றது மாறி மாறி யழிகையாலே அசத்தியம் என்றும் உண்மையை நான் உமக்குத் தெரிவித்தேன். சொல்லாலே மாத்திரம் இருக்கின்றதென்று சொல்லத் தக்க நானுவித ஸ்வரூபமுள்ள வஸ்துக்களெல்லாம்

கர்மாதீனமாய் லோக மரியாதையில் இருக்கின்றன வென்பதுந் தெரிவித்தேன். அந்தக் கர்ம ஸ்வரூபம் யக்கியம் என்றும், பசு என்றும், இருத்துவிக்குகள் என்றும், அக்கினி என்றும், சோமம் என்றும், சுரை என்றும், சுவர்க்காபேக்ஷை என்றும், இப்படிப் பலவிதமாகக் கர்ம மார்க்கத்திற் காணப்பட்டவைகளாகும். இவைகளுக்குப் பலன் பூர்வலோக முதலான லோகங்களேயாம். இப்படியாக உமக்கு நான் விவரித்த லோக விசேஷங்கள் எத்தனையுண்டோ அத்தனையிலும் கர்ம வசியனு யிருக்கின்ற புருஷன் மாறி மாறிப் போய் வந்துகொண்டே இருப்பான். ஆதலால் இக் கர்ம மார்க்க பலன்களிலே மனம்செலுத்தாமல் எல்லாம் அஞ்ஞானத்தினுல் தோன்றுவனவென்று, ஞானமொன்றே நித்திய சுத்த நிர்மல ரூபமானதென்றும் அறிந்து ஸ்ரீவாசுதேவ பகவானை அடையத்தக்க முயற்சியைச் செய்ய வேண்டும்.

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

☞ இப்புராணத்தில் இவ்வாறு பூகோளமும் ககோளமும் சொல்லப்பட்டன. இவ்விதமாகவே ஸ்ரீபாகவத முதலான மற்றுமுள்ள புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸ்காந்த முதலான புராணங்களில் அளவுகளைப் பற்றி வித்தியாசம் சொல்லப்படிருந்தாலும், மற்ற விஷயங்களில் பேதமில்லை. ஆனுல் சோதிஷ சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட விதமோ வேறு; அஃதாவது எங்ஙனமெனில், பூமியானது விளங்கனியைப் போலே முற்றும் உருட்சியான வடிவுடையதாய், இரண்டு பங்கு சமுத்திரஞ் சூழ்ந்ததாய்; இடையில் தெற்கிலிருந்து வடக்குவரையிலும் ஒரு நாராசம் உருவப்போ யிருப்பதுபோலே மேருபர்வதம் நிற்கப்பெற்றதாய், யாதோர் ஆதாரமுமில்லாமல் அந்தரத்தி லிருக்கின்றது. இதன் சுற்றளவு 4967-காதமாகும். சிலர் 2400-என்கின்றனர். இது யோஜனையளவின் பேதத்தால் பேதப்பட்டிருக்கலாம். முற்றளவு 7853054-யோசனையாய் இருக்கின்றது. பூமியின் மத்தியம் இலங்கை. அதுமுதல் தொண்ணூறு பாகங்களில் ஒவ்வொரு பட்டணமாக மூன்று பட்டணங்கள் சூரியவுதய அஸ்தமய மத்தியான்ன அர்த்தராத்திரங்களைக் குறித்து இடங்களாய் இருக்கின்றன. ஆகப் பூமி முந்நூற்றறுபது பாகமாகப் பிரிக்கப்படும். எங்கிருந்து கணக்கிட்டாலும் இப்படிச் சமானமான முந்நூற்றறுபது பாகங்களே இருக்கும். இப்பூமியின்

வடமுனை சுமேருவென்றும் தென்முனை குமேருவென்றுஞ் சொல்லப்படும். இப்பூமியின் மத்தியஸ்தானமாகிய இலங்கைக்கு 24-பாகங்களுள்ள இடத்தில் உத்தராயண ரேகை யுண்டு. அப்படியே தெற்கில் 24-பாகங்களுள்ள இடத்தில் தக்ஷிணயன ரேகை யுண்டு. இச்சமுத்திரத்திலேதானே க்ஷீர சமுத்திர முதலான பிரிவுகள் சொல்லப்படுகின்றன. இந்தப் பூமிக்குமேல் சந்திர மண்டலம், அதற்குமேல் புதமண்டலம், அதன்மேல் சுக்கிரமண்டலம், அதன்மேல் சூரியமண்டலம், அதன்மேல் அங்காரக மண்டலம், அதன்மேல் பிரகஸ்பதிமண்டலம், அதற்குமேல் சனி மண்டலம், இவைகளுக்குமேல் நக்ஷத்திரமண்டலம் இருக்கின்றது. இவையெல்லாம் பூமியைச் சுற்றித் திரிந்து கொண்டு இருக்கும். ஒவ்வொரு கிரகமும் தன் தன் மார்க்கத்தில் நாள் ஒன்றுக்கு 11858¾-யோசனை தூரமே ஓடும். ஆனால் அந்தந்த மார்க்க வட்டங்களின் அளவினாலே கிரகங்களுடைய ஒரு சக்கிரபோககாலம் சிறிதும் பெரிதுமாய் வித்தியாசப்பட்டு இருக்கும். ஆகாச மண்டலமெல்லாம் பன்னிரண் டிராசிகளாகவும், ஒவ்வோர் இராசி முப்பது பாகங்களாகவும், ஒவ்வொரு பாகம் அறுபது கலைகளாகவும், பிரிக்கப்பட்டிருக்கும். ஆகையால் ஒவ்வொரு கிரகமார்க்க சக்கரமும் ஏற்றபடி சிறியவையும் பெரியவையுமான இராசிபாக கலைகளென்கிற பிரிவுகளை யுடையனவாய் இருக்கும். இனிச் சந்திரச்சாயை நேராய் சூரியனை மறைக்கும்போது சூரியக்கிரகணமும், பூச்சாயை சந்திரனை மறைக்கும்போது சந்திரக் கிரகணமும் உண்டாகின்றன. சந்திரன் முதலான சகல கிரக நக்ஷத்திரங்களுக்கும் சூரிய கிரண சம்பந்தத்தினாலேயே பிரகாசம் உண்டாகின்றபடியால் சந்திரன் சூரியனைவிட்டுத் திரும்பத் திரும்பச் சந்திரகாந்தி பூமியிலிருக்கின்றவர்களுக்குப் படிப்படியாய் விளங்குகின்றதனால் அந்தக் காலம் வளர்பிறை [சுக்கில பக்ஷம்] என்றும் மறுபடியுஞ் சூரியனைநோக்கிச் செல்லச் செல்லச் சந்திர காந்தி ஜனங்களுக்குப் படிப்படியாய் மறைந்து வருவதனால் அக்காலம் தேய்பிறை [கிருஷ்ண பக்ஷம்] என்றும் சொல்லப்படும். இங்கே நாம் சுருக்கமே எழுதினோம். விரிவை அச்சாஸ்திர கிரந்தங்களில் அறிந்துகொள்க.

இந்தச் சோதிட சாஸ்திரக்கொள்கையே அனுபவத்திற்கும் இசைந்திருக்கின்றது. சோதிட நூலும் வேதாங்கமாய் இருப்பதனாலே புராணத்தைப் போல் வைதிக சாஸ்திரமாய் இருக்கின்றது. இப்படிச் சாஸ்திரத்திற்கும் அனுபவத்திற்கும் விரோதமாய் பூகோளக் ககோளக் கிரமங்களைப் புராணத்திற் சொல்லி யிருப்பதைப்பற்றிப் பெரியோர் விசாரித்து எழுதியிருப்பவைகளைச் சொல்லுகின்றேன். சோதிடத்தில் பூகோள கோளங்களை விவரிப்பது, வருஷ மாச பக்ஷ திதி நக்ஷத்திராதி கால பேதங்களைக் கணித்து ஏற்படுத்துவதற்காக புராணத்திலேயோ எம்பெருமானுடைய வைபவத்தை யறிந்து விசுவரூபமான ஸ்தூலரூபத்தை உபாசனை செய்வதற்காக இவ்வர்த்தம் பாகவதத்தில் பூகோள பிரசினத்தில் விசதமாகும். இப்புராண வியாக்கியாதாக்களும் புராணகாரருக்கு வைராக்

னியத்தையும் தத்துவ ஞானத்தையும் உண்டாக்குவதே உத்தேசியமான அபிப்பிராயமன்றிக் கணிதாதிகளில் அப்படிப்பட்ட அபிப்பிராயம் இல்லை என்று எழுதி இருக்கின்றார்கள். ஆதலின் புராணங்களில் காலாந்தரத்திலிருந்து பூகோளாதிகளைக் கொண்டு உபாசனார்த்தமாக அதிதேசித்துச் சொன்னார்கள் என்று அறியவேண்டும். சூரியரதம் சிம்சுமார சக்கிரமுதலான வர்ணனைகளை உபாசனைக்காகவே புராணங்களில் சொன்னதாக நேரே வியாக்கியாதாக்களும் எழுதி யிருக்கின்றார்கள். சிருஷ்டிகள் கற்பந்தோறும் பேதப்பட்டிருக்கின்றனவென்றும் சாஸ்திரங்களால் அறியப்படுகின்றன. இப்படிப்பட்ட ஏதுக்களால் எம்பெருமானுடைய மகிமையை விசேஷமாய் விளக்கத்தக்க ஆச்சரியகரமான விசேஷங்களை நூலோபாசனைக்காகவும் ஐசுவரியச் செருக்குடையார்க்கு வைராக்கியாதிகள் உண்டாவதற்காகவும் மகரிஷிகள் அருளிச் செய்தார்களென்றும், சோதிட நூலார் கிரக சாரங்களைக்கொண்டு காலங்களைச் சரியாய் அறிவிக்க வேண்டுவதற்காகப் பூகோள ககோள ஸ்திதிகளை உள்ளபடி அறிவித்திருக்கின்றார்கள் என்றும், தெரிந்து கொள்ளவேண்டும். ஆனால் சோதிட நூலோரிற் சிலர் பூமி சுற்றிக்கொண்டு இராப்பகல்களை உண்டாக்குகின்றன வென்கின்றார்கள். மற்றவர்களோ சோதிச் சக்கரஞ் சுற்றுதலினாலே இராப்பகல்கள் உண்டாகின்றன என்கிறார்கள். பூமி சுற்றுகிற தென்பதில் சில நியாயங்கள் இருந்தபோதிலும், அவை அவ்வளவு உறுதி யாகாதவைகளாய் முடிவுக்கு நிற்காதவைகளாம். எப்படியானாலும் சோதிட நூலோர் சொல்லியபடியே பூகோள ககோளங்களின் நிலை என்பது அனுபவத்திற்கும் கணிதத்திற்கும் இசைந்திருக்கிறபடியால் தற்கால ஸ்திதி அதுவேயென நம்ப வேண்டும். இவ்வாறு யாம் சுருக்கிக்கூறிய சாஸ்திர தாற்பரியங்களைப் பெரியோரிடத்திற் கேட்டு விரிவாய் அறிந்துகொள்க.

இனிப் பௌத்தர் பூகோள ஸ்திதியையும் ககோள ஸ்திதியையும் வெவ்வேறு விதமாய் ஒரு புருஷாகாரமாகச் சொல்வதுமன்றி, இரண்டு சூரியர்களும் இரண்டு சந்திரர்களும் இருக்கின்றனவென்றும், பூமி கீழே வீழ்ந்து கொண்டே இருக்கிறதென்றும் சொல்லுவர். இப்பக்ஷங்களெல்லாம் ஆன்றோர்களால் விசேஷமாய்க் கண்டிக்கப்பட்டுப் போயின.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

# ஜடபரதோபாக்கியானம்

மயித்திரேயர் வினவுகின்றார்:—"ஓ பராசர பகவானே! அடியேன் கேட்டபடி பூமி சமுத்திரம் நதிகள் கிரகங்கள் முதலானவைகளின் ஸ்வரூப விதங்களையும், திரிலோகங்களும் ஸ்ரீவிஷ்ணுவையே ஆதாரமாகக் கொண்டு நிலைபெற்று இருப்பதையும், ஞானஸ்வரூபமே பிரதானம் என்கிற பரமார்த்தத்தையும் தேவரீர் நன்றாய் அருளிச் செய்தீர். பரதமகாராஜனுடைய சரித்திரத்தைப் பின்பு அருளிச்செய்கிறதாய்த் திருவுளம் பற்றியபடி அதை இப்போது சாதித்தருளவேண்டும். யோகத்தோடுகூடி ஸ்ரீ வாசுதேவனிடத்திலே இருதயத்தை நிலைநிறுத்தித் தியானஞ் செய்துகொண்டு சாளக்கிராம க்ஷேத்திரத்திலே வாசஞ்செய்து கொண்டிருந்த பரத மகாராஜனுக்கு க்ஷேத்திரப் பிரபாவத்தினலேயும் ஸ்ரீ ஹரித்தியான பிரபாவத்தினலேயும் மோக்ஷமுண்டாகாமல் மறுபடியும் பிராமண ஜனனமுண்டாயிற்று என்பது எப்படி? அவர் மறுபடியும் பிராமண ஜன்மம் பெற்றபோது என்னென்ன செய்தார்? இந்த விஷயங்களைத் திருத்தமாக அருளிச் செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க மகரிஷி அருளிச் செய்கின்றார்:—

கேளும் முனிவரே! அந்தப் பரதர் எம்பெருமான் திருவடிகளையே தியானஞ் செய்துகொண்டு, சாளக்கிராமத்திலேயே நெடுநாள் வாசஞ்செய்திருந்து, மகா குணவானாய் அஹிம்சை முதலான காரியங்களிலே மிகவுத்தமனாய் மனதை யடக்குவதிலும் வெகு சாமர்த்தியம் அடைந்திருந்தார். மேலும் சொப்பன மத்திய முள்பட சகலாவஸ்தைகளிலும் யக்கியேச, அச்சுத, கோவிந்த, மாதவ, அனந்த, கேசவ, கிருஷ்ண, விஷ்ணோ, ஹிருஷீகேச, வாசுதேவ உனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன் என்று உச்சரித்துக்கொண்டு இருந்தாரே யல்லதுவே றொன்றும் உச்சரிக்கவில்லை. அவை

களின் பொருளையே யல்லாமல் வேறு பொருள்களைச் சிந்தித்ததும் இல்லை. வைதிகக் கிரியைகளை நடத்தும் பொருட்டாகச் சமித்து, புஷ்பம், தருப்பை முதலானவற்றைக் கொண்டுவருகின்ற செய்கையே யல்லாமல் வேறு செய்கைகளைச் செய்ததும் இல்லை. இப்படி அவர் பற்றில்லாமல் யோக தபசு செய்துகொண்டு வருங்கால், ஒருநாள் மகாநதியினிடத்துக்குப் போய், நீராடிப் பின் செய்யவேண்டுஞ் சடங்குகளைச் செய்து நிற்கையில், அங்கே கருவுயிர்க்குந் தருணமுடைய மான் ஒன்று ஒன்றியாய்த் தண்ணீர் குடிக்க வந்து நீர் குடித்திருக்க, அச்சமயம் ஒரு சிங்கத்தின் அதி பயங்கரமான கர்ச்சனை கேட்டது. கேட்டமாத்திரத்திலே அம்மான் மகா பயமுற்றுத் திகைத்துப் பரபரப்புடனே மிக வுயரமான அந்நதியின் கரையின் மேலேற, அதின் கருப்பமானது கீழே நதிஜலத்தில் விழுந்து அலைகளிலே மிதக்கக் கண்டு, அவர் அந்த மான்குட்டியை யெடுத்துக் கொண்டார். இப்படி யிருக்க அந்த மானும் கருப்பம் விழுந்த அதிர்ச்சியினாலும் மிக வுயரத்தி லேறின வருத்தத்தினாலும் கீழேவிழுந்து இறந்தது. இவ்வாறு மான் இறந்ததும், அந்தச் சிறுகுட்டி அந்தரமா யிருப்பதுங்கண்டு, அந்த யோகி மிகவும் இரக்கமுற்று, அக்குட்டியை எடுத்துக்கொண்டு தமதாச்சிரமஞ் சேர்ந்தார். பின்பு அவர் அம் மான்குட்டியை வெகு அன்புடனே வளர்த்துவர, அதுவும் நாளுக்குநாள் வளர்ந்ததாகி அவ் வாச்சிரமத்தின் சமீபத்திலே இளம்புற்களை மேய்ந்து திரிந்து கொண்டும், ஒவ்வொருவேளை தூரத்திற்போய் மேய்ந்து கொண்டிருந்து புலியைக் கண்டு பயந்து ஆச்சிரமத்திற்கு ஓடிவந்து கொண்டும், காலையிற் புறப்பட்டு அங்கங்கே ஓடி மேய்ந்து சாயங்காலத்தில் அவர்வாசஞ் செய்யுங் குடிசையினருகே வந்து கொண்டும் இருந்தது. இவ்விதமாய் அந்த மிருகமானது தூரத்திலேயும் சமீபத்திலேயும் இருந்து விளையாடுகையில், அம் முனிவருடைய மனம் அதனிடத்திலேயே பற்றி நின்றதேயன்றி வேறொரு விஷயத்திலுஞ் செல்லவில்லை. இராச்சியம் மக்கள் முதலான சகல பந்தங்களையும் விட்டு யோக நிஷ்டையிலிருந்த அம்

முனிவர், அம் மான் குட்டியினிடத்திலே தனது என்னும் அபிமானம் பற்றினவராய், அது சிறிதுபொழுது காணப்படாமலிருந்தால் "ஐயோ நமது மான்குட்டியை செந்நாய் தின்றதோ, புலியறைந்ததோ, சிங்கந்தான் கொன்றதோ, இன்னும் வரவில்லையே" என்ன செய்வேன்! மான்குட்டி இங்கே குதித்து விளையாடும்போது அதன் சிறு குளம்புகளினால் பெயர்க்கப்பட்டு மேடு பள்ளமாய் இருக்கின்ற இந்தவிடம் எனக்கு எவ்வளவு சந்தோஷத்தை யுண்டுபண்ணுகின்றது. அப்படிப்பட்ட எனது மான்குட்டி எங்கே போயிற்றோ தெரியவில்லையே. மேலும் என்னருகிலே வந்து அது தன் கொம்பினாலே என்னுடம்பைச் சொறிந்து சுகமுண்டாக்குமே. அப்படிப்பட்ட குட்டி க்ஷேமமாய் வந்து சேர்ந்து எனக்குச் சந்தோஷத்தை யுண்டாக்குமோ, வந்து சேராமல் துக்கத்தை யுண்டாக்குமோ என் செய்வேன்! ஐயோ! அந்தக்குட்டி இப்போதுதான் முளைத்த தன் சிறிய பற்களாலே கடிக்க, நுனிகளையிழந்து நிற்கின்ற இந்தத் தருப்பைகளும் நாணல்களும் சாமவேதிகளான பிரமசாரிகளைப் போலே மொட்டைகளாய் விளங்குகின்றனவே. இவ்வாறு மறுபடியும் அதுவந்து மேயக் காண்பேனோ? என்னவாகுமோ? என்று விசனப்படுவதும், சமீபத்தில் வரும்பொழுது மிகுந்த மகிழ்ச்சி யடைவதுமாய் இருந்தார்.

இப்படி அதன்மேல் அன்பு பாராட்டி வந்தமையாலே இராச்சியபோகாதிகள் எல்லாவற்றையுந் துறந்த அவருக்கும் சமாதி நிஷ்டை குலைந்து போயிற்று. அந்த மான்குட்டி ஓடி விளையாடும்போது அதின் வடிவான பாவனையும் தூரத்தில் போயிருக்கும்போது மனமும் தூரமாக வோடிச் சிந்தித்துக்கொண்டு இருப்பதுமாய் யோக பங்கமுற்ற அந்த பாதமகாராஜனுக்கு மரணகாலங் கிட்டிற்று. அப்போது பிதாவை மிகவும் அன்புள்ள மகன் நோக்குவதுபோலே அந்த மிருகமானது கண்களில் நீர் ததும்ப நோக்கிக்கொண்டிருந்தது. இவரும் அப்படியே பிரியமான புத்திரனைப் பார்ப்பதுபோலவே கண்ணுங் கண்ணீருமாய்ப் பார்த்

துக்கொண்டே பிராணனை விட்டார். ஆனதனாலே அவர் மறுஜனனத்திலே ஜம்பூ மார்க்கம் என்கிற கங்கைக்கரைக் காட்டிலே மானாகவே பிறந்தார். ஆனாலும் யோகப் பிரபாவத்தினாலே பூர்வ ஜன்ம ஞானமுடையவராய் இருந்தார். அதனாலே வெறுப்புண்டாகித் தாயைவிட்டுப் பிரிந்து, முன்னிருந்த சாளக்கிராம க்ஷேத்திரத்திற்கே வந்து, உலர்ந்துபோன புற்களையும் சருகுகளையுந் தின்றுகொண்டு, மானாய்ப் பிறப்பதற்கு ஏதுவாயிருந்த கருமத்தைக் கழித்து வந்து, அங்கேதானே மரணமடைந்து, நல்லொழுக்கமும், யோகநிஷ்டையும் மிகுந்த உத்தமமான ஒரு பிராமண குலத்திலே பூர்வ ஜன்ம ஸ்மரணத்தோடு பிறந்தார். பூர்வக்கியானம் உண்டாயிருந்த படியினாலே முன்னிருந்தபடியே சகல சாஸ்திரங்களின் உண்மை யறிந்தவராய்ச் சகலவித ஞானத்தினாலும் தேர்ந்தவராய் இருந்து, ஆத்தும சொரூபத்தைப் பிரகிருதிக்கு வேறாகவும், தேவாதி சகல சரீரங்களிலுமுள்ள ஆத்தும ஸ்வரூபங்களெல்லாம் தன்னைக் காட்டிலும் பேதமில்லாமல் விலக்ஷணமான ஞானாகார முள்ளவைகளாகவும் பாவித்திருந்தார். வேத முதலான சகல சாஸ்திரங்களுங் கற்று, அவற்றால் பெறவேண்டிய ஞானத்தைப் பெற்றிருக்கையாலே குரு ஓதுவித்த வேதாதிகளை அவர் ஓதினாரில்லை. ஆத்துமஞானம் கைவசப்பட்டு அனுபவ நிஷ்டையில் இருந்தபடியினாலே யாதொரு கருமத்தையுஞ் செய்தாரில்லை. மேலும் அழுக்குநிறைந்த வுடம்பும் அழுக்கான கந்தைத்துணியும் ஊத்தை மிகுந்த பல்லுமாய், கண்டோர் யாவரும் அருவருத்துத் தூஷித்து அவமதிக்கும்படி நடந்தார். "உலகத்தார் செய்யும் வெகுமதிப்பானது யோக சம்பத்துக்கு மிகுந்த கேட்டைத்தரும் அவமதிப்போ கர்வாகாரங்களைப் போக்குவதினாலே யோகசித்தியைத் தரும். ஆதலால் யோகியானவன் யாவரும் தன்னிடத்திற் சேராமல் தன்னை யவமானம் பண்ணும்படி ஜடனைப்போலக் காட்டிப் பெரியோர்களுடைய ஒழுக்கத்திற்குப் பழுதுவராமற் காத்து நடக்கவேண்டும்" என்கிற இரணியகர்ப்ப வாக்கியங்களை நினைத்து அந்தப்

பிராமணோத்தமர் வித்துவானு யிருந்தும் மூடனைப் போல இலக்கணங்களுக்குப் பொருந்தாததும் குணங் களில்லாததுமான பேச்சுகளைப் பேசிக்கொண்டும் பைத் தியம் பிடித்தவனைப்போலத் திரிந்துகொண்டும் இருந் தார். இப்படி இருந்ததனாலேதான் அவருக்கு ஜடபர தர் என்று பெயருண்டாயிற்று. அவர் புழுத்துக்கெட் டுப்போன உழுந்து நவதானிய முதலியவைகளாற் செய்த அப்பங்களாகிலும், கீரையாகிலும், காட்டுக் கிழங்கு முதலியவையாகிலும், தினையாகிலும் எப்போது எவ்வளவு கிடைக்குமோ அவ்வளவையே மேன்மை யாகவும் வெகுவாகவும் பாவித்துப் பிராணதாரணை செய்துகொண்டு சந்துஷ்டி அடைந்திருந்தார். இவ் விதமான இவருக்குத் தகப்பனார் லோகாந்தரஞ் சேர்ந்தபின்பு இவருடைய அண்ணன் றம்பிமார் களும், அவர்களுடைய மக்களும், மற்றுமுள்ள பந் துக்களும், அற்ப ஆகாரமே கொடுத்து இவரைக் கொண்டு கழனிவேலை செய்வித்து வந்தார்கள். ஆகி லும் அவர் வேலைகளைத் திருத்தமாகச் செய்யாமல் மூடனைப்போல் செய்துவந்தார். அவரிப்படி அற் பாகாரமுண்டு வேலைசெய்து வந்தாலும் உடம்பெல் லாம் நன்றாய்ப் பருத்துக் கண்களிரண்டும் வித்தியாச மில்லாமற் சமானமாய் விளங்கியிருந்தார். இவரை இவர் பந்துக்கள் மாத்திரமேயன்று அன்னியர் யாரா னாலும் வேறு கூலியில்லாமல் கிஞ்சித்து ஆகாரமே கூலியாக எந்தவேலை செய்யச் சொன்னாலும் தடை யின்றிச் செய்தே வந்தார்.

முன் சொல்லியபடி அழுக்குத் தீர்ப்பது முதலான செய்கைகள் ஒன்றுமில்லாதே, சிகா யக்கியயோபவீத முதலான பிராமணக் குறிகளும், நீராடல் சந்தியாவந்த னஞ் செய்தல் முதலிய பிராமணச் செய்கைகளு மாத்தி ரம் உடையவராய்ப் பித்தனைப்போலே திரிந்துகொண் டிருந்த அந்த யோகியைச் சவ்வீரராஜனுடைய சாரதி யானவன் காளிக்கு நரபலியாகக் கொடுக்கும்படி நிச் சயித்து, இரவில் பிடித்துக்கொண்டுபோய் பலியிடு வதற்கு உரிய அலங்காரஞ் செய்து, காளி கோயிலுக்கு எதிரில் கொலையிடும் இடத்திற் கொண்டுபோய் நிறுத்த

அந்தக் காளியானவள் இவர் மகா யோகீச்சுரர் என்பதையறிந்து இவரைப் பலியிடவந்த அந்தக் கொடியவனையே கத்தியினாலேவெட்டி அவன் கழுத்தினின்றும் ஒழுகின உதிரத்தைத் தன் பரிவாரத்தோடுகூடக் குடித்துச் சந்தோஷமடைந்தாள்.

பின்பு ஒருகாலத்தில் சவ்வீர ராஜனுடைய சேவகன் ஒருவன், சாம்பல் மூடின நெருப்பைப்போலே பிரபாவம் வெளிப்படாமல் ஜடாகிருதியாய்த் திரிந்துகொண்டிருந்த பரதரை அரசன் சிவிகையைச் சுமப்பதற்குத் தகுந்த சிவியாளாக நினைத்து [விட்டு] அமிஞ்சி பிடித்துப் போட்டான். இக்ஷுமதிநதி தீரத்தில் எழுந்தருளியிருக்குங் கபிலமகா முனிவரிடத்துக்கு, துக்கமயமான இந்தச் சமுசாரத்தில் எது சிரேயசு என்று விசாரித்து அறியும்பொருட்டுப் பிரயாணப்பட்டிருந்த அவ்வரசனுடைய பல்லக்குப் போயிகளாக அமிஞ்சி பிடித்துப் போட்டிருக்கின்ற ஆட்களுக்குள்ளே இவரும் ஒருவராய்ச் சகல ஞானபூர்ணராய் இருந்தாலும், பூர்வ ஜன்மத்தை நினைத்து பாபங்கள் கழியும்பொருட்டுப் பல்லக்கைச் சுமந்துபோனார். போகையில் இவர் நுகத்தடியளவு தூரம் ஜந்து வொன்றும் இல்லாதிருக்கும்படி தரையைப் பார்த்துக்கொண்டு மெதுவாய் நடக்க, மற்றவர் துரிதமாய் நடக்க, பல்லக்கின் நடை விஷமமாய் இருந்தபடியால் அவ்வரசன் "சரியாய் நடவுங்கள்" என்று சிவியாரை நோக்கிச்சொல்லியும் சிவிகையின் கதி விஷமப்பட்டே போனபடியினாலே கோபத்தினால் சிரித்துக்கொண்டு, "ஓ சிவியாரே! என் பேச்சையுங் கடந்து ஏனிப்படி நடக்கின்றீர்கள்" என்று பலதரம் சொல்ல, அச் சிவியார் "மகாராஜாவே! எங்களிற் குற்றமில்லை, இவனொருவன் இப்படி நடக்கின்றான்" என்றார்கள். அதுகேட்டு அந்தராஜன் அந்தப் பிராமணோத்தமரை நோக்கி "அடா! என் பல்லக்கைச் சிறிதுதூரமே நீ சுமந்தாய், இதனாலேயே விடாய்த்துப் போனையோ? மேலும் நீ வருத்தஞ் சகிக்கமாட்டாதவனோ? பிரத்தியட்சமாய்ப் பருத்தவனாகவே காணப்படுகின்றாய்" என்று சொல்ல, அந்தப் பிராமணர் அரசனை நோக்கி "நான் பருத்தவனும் அல்

லேன், உன் பல்லக்கைச் சுமக்கவும் இல்லை, நான் வருந்தவும் இல்லை, அதின் காரணமான ஆயாசமும் எனக்கு இல்லை'' என்றார். அரசன் அதுகேட்டு அவர் கருத்தறியாமல் பிரத்தியக்ஷத்தில் நீ பருத்துக் காண்கின்றாய், இப்போதும் உன் தோளில் என் பல்லக்கிருக்கின்றது, சுமை சுமைப்பதினால் சகல பிராணிகளுக்கும் ஆயாசம் உண்டென்பதும், நிச்சயமாய் இருக்க, நீ என்ன பொய் சொல்லுகின்றாய்'' என்று அவரைப் பார்த்துச் சொன்னான். அதற்கு அந்தப் பிராமணர் "ஓ அரசனே! நீ என்னவோ பிரத்தியட்சமாய்க் கண்டேன் என்று சொன்னையே, அந்தவஸ்துவை முன்னே எனக்குத் தெரியச்சொல், அது பலம் உள்ளதென்றும் பலமில்லதென்றும் விசேஷணங்களைப் பின்னே சொல்லலாம். மேலும் உன்னாலே சிவிகை சுமக்கப்பட்டதென்றும், இப்போதும் உன்மேல் அது இருக்கின்றதென்றும் சொன்னையே. இது சுத்தப் பொய், அதைக் குறித்து நான் சொல்வதைக்கேள்; நிலத்திலே இரண்டு பாதங்க ளிருக்கின்றன; அவற்றின்மேல் கணைக்கால்க ளிருக்கின்றன; அவைகளிலே தொடைக ளிரண்டு நிற்கின்றன; அவற்றை ஆதாரமாகப்பற்றி நிற்கின்றது வயிறு. மார்பு கைகள் தோள்கள் இவையெல்லாம் வயிற்றின்மேல் இருக்கின்றன. அந்தத் தோள்களைப் பற்றி யிருக்கின்றது சிவிகை. இப்படியிருக்க எனக்குப் பாரம் எதனாலே உண்டாயிற்று? அந்தச் சிவிகையிலே நீ என்று உன்னாலே நினைக்கப்பட்ட தேகம் இருக்கின்றது. அந்தத் தேகத்திலே நீ இருக்கின்றாய். அப்படியே இந்தத் தேகத்தில் நான் இருக்கின்றேன். இப்படியிருக்க இதுவெல்லாம் உன்னாலே வேறுவிதமாயன்றோ சொல்லப்படுகின்றன. அரசனே! நானும் நீயும் மற்றவர்களும் தேகங்களாய் யாறி நிற்கிற பிருதிவி முதலான பஞ்சபூதங்களாலே சுமக்கப்படுகிறோம். இந்தப் பூதவர்க்கமும் குணங்களின் பிரவாகத்திலே வீழ்ந்து அதன் வசத்தினாலே நடத்தல் முதலிய வியாபாரங்களைப் பெற்றிருக்கின்றன. அந்தச் சத்துவமுதலான குணங்களும் கருமங்களுக்கு வசப்பட்டிருக்கின்றன. அந்தக் கருமங்கள் அவித்தையினாலே சம்பாதிக்

கப்பட்டிருக்கின்றன. அவ்வவித்தை சகலப் பிராணி களிலும் இருக்கின்றது. ஆத்துமாவோ சுத்தமாய், நாசமில்லாததாய், பசி முதலான ஷடூர்மிகளும் அற்ற தாய், சத்துவாதி குணரகிதராய் குணமயமான பிரகிருதி யைக்காட்டிலும் வேறான தாய் இருக்கின்றது. அது சகல ஜந்துக்களிலும் தேகம்போலே அநேகாம்சமாய் இரா மல் ஒரே அம்சமா யிருக்கின்றது. அதற்கு வளர்தலுந் தேய்தலும் இல்லை. இப்படி ஆத்துமாவுக்கு விருத்தி அழிவு இல்லாமலிருக்க, நீ பருத்திருக்கின்றாயென்று எந்த யுத்தியினாலே சொன்னாய்? அன்றியும் பூமி, பாதம், கணைக்கால், தொடை, இடை முதலான அவய வங்களின் அடுக்கின் மேலான தோளில் இருக்கின்ற பல்லக்கினால் எனக்குப் பாரம் உண்டென்றால் அந்தப் பாரம் உனக்கும் சமமாய் இருக்கவேண்டும். மேலும் சகலமான பேருக்கும் இந்தப் பல்லக்கின் பாரம் மாத் திரமன்று. காடு, மலை, வீடு முதலானவற்றைப் பற் றிய பாரமும் உண்டாகின்றதெனச் சொல்லவேண்டும். இப்படி யல்லாமல் ஆத்துமாவானது பிராகிரதங்க ளான அவயவங்களைக் காட்டிலும் வேறென்பது சித்த மாகின்றபோது, நான் பாரத்தைச் சுமக்கின்றேனென் பது ஏது? இந்தச் சிவிகை எந்த வஸ்துவினாலானதோ அந்த வஸ்துவினா லானதுதான் இந்த வுடம்பும். இதிலேதான் உனக்கும் எனக்கும் மற்றவர்களுக்கும் [மமத்துவம்] எனது என்கிற அபிமானம் ஆரோபிக் கப்பட்டு இருக்கின்றது" என்று இவ்வளவு பேச் சைப் பேசி அந்த யோகியானவர் வாய் மூடிக்கொண்டு பல்லக்கைச் சுமந்து கொண்டே போனார். இது கேட்டவுடனே அவ்வரசன் திடுக்கிட்டுச் சிவிகையினின் றுந் திடீரென்று குதித்து அவர் திருவடிகளைப் பிடித் துக்கொண்டு, "ஓ! பிராமணோத்தமரே! இப் பல்லக்கை விட்டு, அடியேன் அறியாமையினாலே செய்த குற் றத்தை மறந்து, அடியேனிடத்தில் அனுக்கிரகஞ் செய்தருளவேண்டும்; தேவரீர் ஜடனைப்போலே உருவந் தரித்துக் கொண்டிருக்கின்றீர்; தேவரீர் யாரோ? தெரிய வில்லை. மேலும் என்ன காரணத்தினாலே என்ன பய னைக்கருதி இங்கே எழுந்தருளியது? இவற்றையெல்

லாம் அறிய விரும்பி வணங்கிநிற்கின்ற அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, ஜட பரதர் அருளிச் செய்கின்றார்.

"அரசனே! கேள். நீ யார்! என்று வினவினையே, அதற்கு நான் இன்னானென்று விடைகொடுக்கக் கூடாத தாய் இருக்கின்றது. எப்பயனை நோக்கி எதனால் இங்கே வந்தாய் என்பதற்கும் விசேஷித்து விடை கொடுக்க வேண்டுவதில்லை. எங்கும் வருவதற்குப் பயன் அநுபவமே. இந்தச் சுக துக்கானுபவங்கள் புண்ணிய பாவங்களினாலே உண்டானவைகளாய், இடத்தையுங் காலத்தையும்பற்றி யிருப்பதனாலே பிராணிகள் தங் கர்மகானுபவத்திற்கு உரிய தேசகாலங்களிலே தேகாதிகளைப் பெற்று வருகின்றார்கள். ஓ அரசனே! இப்படிச் சகல ஜந்துக்களுக்கும் சகல இடங்களிலும் உடலோடு வருதல் கர்மானுபவத்திற் கென்று சாதாரணமா யிருக்கிறபடியினாலே, என்னை வருதற்குக் காரணம் என்னென்று நீ ஏன் வேறு வினவினாய்?" என்றருளிச் செய்தார். அது கேட்டரசன் வினவுகின்றான்:—

"யோகீந்திரரே! சகல காரியங்களுக்கும் தருமாதருமங்கள் காரணம் என்பதும், சுக துக்கானுபவத்திற்காகத் தேகம் விட்டுத் தேகம் பிரவேசிப்பது என்பதும், சரிதான். ஆனால் நான் இன்னானென்று ஆத்துமாவைக் குறித்துச் சொல்லக்கூடாதென்று தேவரீர் அருளிச்செய்தீர். அதை அறிய விரும்புகின்றேன். ஓ பிராமணோத்தமரே! ஆத்துமாவானது இல்லாத வஸ்துவாகையாலே அப்படி சொல்லக்கூடாதென்றால் ஆத்துமா இருக்கிற வஸ்துவே யல்லாமல் இல்லாததன்றே. நான் என்கின்ற சொல் ஆத்துமாவின்மேல் பிரயோகிப்பது குற்றமன்றே. இப்படியிருக்க நான் இன்னானென்று சொல்லக்கூடாதென்று எப்படியருளிச் செய்தீர். அதை அடியேனுக்கு விளக்கி யருளவேண்டும்" என, யோகி அருளிச் செய்கின்றார்.

அரசனே! கேள், ஆத்துமாவைக் குறித்து நானென்னுஞ் சொல்லைப் பிரயோகிப்பது குற்றமன்று. அது சரிதான். ஆனால் நான் இன்னானென்பதினாலே

ஆத்துமாவல்லாத தேகாதிகளிலே ஆத்தும புத்தியும், இப்படிப்பட்ட பிராந்தியைத் தெரிவிக்கும் சொல்லாவதும் ஆகிய குற்றங்கள் உண்டாம். அரசனே! நாக்கும் உதடும் பல்லும் தாலுக்களும் நான் என்று சொல்லுகின்றன வென்று நினைக்கின்றையே. அவை பலவும் கருவிகளேயன்றிக் கர்த்தாவான ஆத்துமாவன்று. இந்தக் கருவிகளைக்கொண்டு வாக்கென்னும் இந்திரியமே நான் என்கின்ற தென்பாயோ, அந்தப் பக்ஷத்தில் நீ பருத்திக்கிருய் என்கின்ற கேள்வி எப்படி சரிப்படும்? அன்றியும் என்னுடைய வாக்கு என்று வேருய் பேசுவதுங் கூடாது. இவ்வாறே மற்ற இந்திரியங்களும் ஆத்துமா என்பது கூடாது. தேகமே ஆத்துமாவென்ருல் அந்தத் தேகம், தலை கால் கை முதலான அநேக வஸ்து ரூபமாகையாலே, எந்த அவயவத்திலே அந்தச் சொல்லை பிரயோகிக்கலாம்? மேலும் ஜாக்கிரத்திலே எனது உடம்பு என்று வேருகத்தோன்றுவதுமன்றிச் சொப்பனத்தில் அதற்கு வேறுவிதமாகத் தோன்றுவதினாலும், சுஷுப்தியில் தோன்ருமையாலும் இந்த தேகத்தைக் காட்டிலும் ஆத்துமா வேருனவஸ்து என்றறி. இப்படியானாலும் நான் இன்னுனென்று சொல்லக்கூடாமை எப்படி என்பையோ? கேள். ஞானமே வடிவாகக்கொண்ட நானென்றும் ஆத்தும ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேருன வடிவுள்ள ஆத்தும ஸ்வரூபமொன்று இருக்குமாயின் அதைக்காட்டிலும் வேருக என்னை இன்னுனென்று சொல்லலாம். அப்படி இல்லையே. சகல தேகங்களிலேயும் இருக்கின்ற ஆத்துமாக்கள் ஞான ஸ்வரூபமாய் சுத்தியாதி விசேஷணங்களைப் பொருந்தினவையேயன்றி வேறு விதங்களல்ல.

ஆனபடியினாலே தேக தர்மங்களான ஜாதியாதிகளைவிட்டுப் பேதப்படுத்திச் சொல்லக்கூடாமலிருக்க நீ யார் என்கிற கேள்வியும், நான் இன்னுனென்கிற உத்தரமும் பொருந்தாதவைகளாம். ஆத்துமா நித்தியப்பொருள். உடம்பு முதலானவை அநித்தியப் பொருள். ஆகையினால் இராஜாவென்கின்ற நீயும் இச் சிவிகை சுமக்கின்ற நாங்களும் உன் சேவகரும் எல்லாம்

[சத்] இருக்கின்ற பொருளன்று. எப்படி யென்றால், முன்பு மரமாயிருந்தது வெட்டப்பட்டுக் கட்டையாயிற்று. இப்பொழுது நீ ஏறுகின்ற பல்லக்காயிற்று. இந்த ஸ்திதியிலே அதற்கு விருக்ஷ மென்கின்ற பெயரும் கட்டையென்கின்ற பெயரும் எங்கே இருக்கின்றது? மகாராஜா விருக்ஷத்தின்மேல் ஏறி யிருக்கின்றார் என்று உன் மனிதர்கள் சொல்வார்களா? கட்டையின்மேலிருக்கின்றாரென்றாகிலும் சொல்வார்களா? சிவிகையின்மேலிருக்கின்றார் என்றல்லவோ சொல்வார்கள். ஆராய்ந்து பார்த்தால் இச் சிவிகை ஒருவகைச் சோடிப்பைப் பெற்றிருக்கின்ற கட்டைகளின் கூட்டமே யல்லது வேறன்று. இந்தச் சோடிப்பைப் பிரித்து விட்டுப் பல்லக்கு எங்கேயிருக்கின்றது தேடிப் பார். இப்படியே சலாகை முதலானவைகளைப் பிரித்து விட்டுக் குடை எங்கே யென்று பார். இந்த நியாயத்தையே உன்னிடத்திலும் என்னிடத்திலும் வைத்துப் பார்த்தால், நீ இன்னான், நான் இன்னான் என்பது தெரியும். லோக விவகாரம் எப்படி யிருக்கின்றதென்றால் கர்ம வசத்தினாலுண்டாயிருக்கின்ற தேகங்களிலே புருஷனென்றும், ஸ்திரீயென்றும், மாடென்றும், ஆடென்றும், குதிரையென்றும், யானையென்றும், பக்ஷியென்றும், மரம் என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. நீ நான் என்கின்ற சொற்களின் முக்கிய பொருளான ஆத்தும சொரூபமானது ஆணுமன்று, பெண்ணுமன்று, தேவனுமன்று, மனிதனுமன்று, மிருகமுமன்று, மரமுமன்று, இத் தேவத்துவாதி தருமங்களெல்லாம் கருமத்தினால் வந்த சரீரத்தின் ரூப பேதங்களேயாம். இப்படியே உலகத்தில் அரசன் என்ற வஸ்துவும், இராஜபடர் முதலானவைகளாகிய பொருள்களும், உற்பத்தியாலாகின்றதுபற்றி உள்ள பொருள் என்று சொல்லப்படலாம். எந்தக்காலத்திலும் எது திரிபு முதலானவைகளால் உண்டாகின்ற வேறு பெயர்களை அடையமாட்டாதோ அதுதான் வஸ்து. அரசனே! அஃது எதுதானென்று யோசித்துப்பார். இதோ பார் நீ உலகத்தாருக்கு அரசன், தகப்பனுக்கு மகன், சத்துருக்குச் சத்துரு, மனையாளுக்குப் புருஷன், மகனுக்குப் பிதா. இப்படியிருக்க

உன்னை யாரென்று சொல்வேன்? மேலும் நீ என்ன சிரசா கழுத்தா வயிறு அல்லது கால் முதலியவற்றுள் எது வேணுமென்றே சொல். இவ்வுடம்புக்கு நீ யார்? உனக்கு இவ்வுடம்பு என்ன? ஓ ராஜாவே! இவ்விதமாய்ச் சகல அவயவங்களுக்கும் வேறாய் நிற்கின்ற நீ நன்றாய் ஆலோசித்து "நான் யார்" என்று சிந்தித்துக்கொள். உண்மை இப்படியிருக்க என்னை நான் இன்னுன் என்று வேறுபடுத்திச் சொல்வது எப்படிக் கூடும்" என்று ஜடபரதர் அருளிச்செய்தார்.

பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினான்காம் அத்தியாயம்
# பரமார்த்த நிஷ்கர்ஷம்

இப்படிப் பரமார்த்தத்தோடு கூடின பரதயோகீந்திரருடைய சொற்களைக் கேட்டு இரஹூகண மகா ராஜன் மிக வணக்கத்தோடு வினவுகின்றான். "சுவாமி! சகல ஜந்துக்களிலேயும் பிரகிருதியினும் வேறாய் ஞான ஸ்வரூபமாய், மகத்தாய், ஒரேவிதமான ஆத்தும ஸ்வரூப முண்டென்றும், சிவிகையை நான் சுமக்கின்றேனில்லை, என்னிடத்தில் சிவிகையுமில்லை, இச்சரீரஞ் சுமக்கின்றது, அது நம்மினும் வேறானது, திரிகுணங்களின் ஏவுதலினாலே பஞ்சபூதங்கள் அசைகின்றன, அக்குணப் பிரவிர்த்தியும் கருமத்தினால் ஏவப்பட்டது, ஆதலால் அவைகளினால் எனக் கென்ன வென்றும் தேவரீர் இப்படிப்பட்ட பரமார்த்தங்களை திருவாய் மலர்ந்தருளினீர். என் செவியிற் பட்டவுடனே என் இருதயம் பரமார்த்தத்தை நன்றாய் அறிய ஆவலுடையதாய் தழதழத்து நிற்கின்றது. ஓ மகானுபாவரே! முன்னமே நான் இந்தச் சம்சாரத்திலே எது சிரேயசு என்று கேட்டறியும்பொருட்டு ஸ்ரீ கபிலமகா முனிவரிடம் போகப் புறப்பட்டேன். இதனிடையில் அந்தப் பரமார்த்த விஷயமாய்த் தேவரீர் அருளிச் செய்த வார்த்தையைக் கேட்டு மனம் தேவரீரிடத்திலேயே ஓடுகின்றது. அந்தக் கபில மகரிஷியானவர் உலகத்தினுடைய அஞ்ஞானத்தைப் போக்கும் பொருட்டுப்

பூமியில் இறங்கின ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய அம்ச மன்றோ? அந்த ஸ்ரீ கபிலபகவானே அடியேனுக்கு இதம் போதிக்கவேண்டு மென்ற பரமகிருபையினாலே வழியில் பிரத்தியக்ஷமாய் எழுந்தருளினாரென்று நினைக்கின்றேன். இல்லாவிட்டால் அடியேனுக்கு இப்படி இதம் உபதேசிப்பார் யார்? ஆ த லா ல் இதங்கேட்க அவர் வணங்கி நிற்கும் அடியேனுக்கு எது சிரேயசோ அதைக் கிருபைகூர்ந்து நன்றாய்த் தெரிவிக்கவேண்டும். தேவரீர் சகலவித ஞானங்களாகிய அலைகள் வீசிக்கொண்டிருக்கின்ற கடலாயிருக்கின்றீர்'' என்று பிரார்த்தித்த இராஜாவை நோக்கி, அந்த மகாயோகி அருளிச்செய்யத் தொடங்கினார்:—

"ஓ இராஜாவே! நீ இப்போது என்னைச் சிரேயசை வினவுகின்றையா? பரமார்த்தத்தை வினவுகின்றையா? சிரேயசு என்பதும் பரமார்த்தம் என்பதும் ஒன்றன்று. சிரேயசுகளெல்லாம் பரமார்த்தங்கள் அல்ல. எந்த மனிதன் இஷ்டதேவதைகளை ஆராதித்துப் பணம் முதலான சம்பத்துக்களை இச்சிக்கின்றானோ அவனுக்கு அந்தச் செல்வப்பேறே சிரேயசு எனப்படும். அப்படியே சந்தானத்தை இச்சிக்கின்றவனுக்கு அதைப் பெறுதல் சிரேயசு. இராச்சியம் இச்சிப்பவனுக்கு அதை அடைதல் சிரேயசாம். யக்கியாதி கர்மங்களைச் செய்து சுவர்க்காதிகளைப் பெற நினைப்பவனுக்கு சுவர்க்காதிகளே சிரேயசாகும். யாதொரு பலனையுங் கருதாமல் யாகாதி கருமஞ் செய்பவனுக்கு அக்கருமமே சிரேயசாகும். யோக நிஷ்டையிலிருந்து ஆத்துமத் தியானஞ் செய்வோர்க்கு அதுவே சிரேயசாம். அவ்வாத்துமாவுக்குத் பரமாத்துமாவோடு ஒன்றாகக் கூடுதல் மேலான சிரேயசாகும். இப்படி ஒன்றுக்கொன்று மேலான ஏழு சிரேயசுகள் பிரதானங்களாம். இவற்றின் உட்பிரிவான சிரேயசுகளும் அநேகமுண்டு. இவை எல்லாம் பரமார்த்தங்களல்ல. எப்படியெனில் பணமே பரமார்த்தமானால் அதைத் தருமத்திற்கும் காமத்திற்கும் செய்வார்களல்லவா? அப்படிச் செலவு செய்வதினாலே இது பரமார்த்த மாகமாட்டாது. இதனாலே சாதிக்கப்படுகின்ற தரும காமங்களு மழியுமவை யாதலால் பரமார்த்த

மென்று சொல்லப்படாவாம். புத்திரன் பரமார்த்தம் என்றால் அவன் தன் பிதாவுக்கும் அவனும் அவன் பிதாவுக்கும் பரமார்த்தம் என்றுகின்றதனாலே உலகத்திற்குப் பரமார்த்தம் எப்படி யாவான்? காரியங்களெல்லாம் காரணங்களுக்குப் பரமார்த்தமே யல்லாமல் யாவர்க்கு மாகமாட்டா. இராச்சிய முதலானவை பரமார்த்தமென்றால் அவை ஸ்திரமாகாமையாலே பரமார்த்தமாகா. இருக்கு, யசுர், சாமம் என்கிற வேதங்களின் விதிப்படி செய்கின்ற யாக கருமம் பரமார்த்தமென்று நீ நினைத்திருப்பையாகில் அதுவுமன்று, மண்ணென்கிற காரணப் பொருளினாலே உண்டாக்கப்படுகின்ற குடம் முதலான காரியங்களெல்லாம் காரணமான மண்ணின் றன்மையையே அடைந்திருப்பதைப் போலே, நாசப்படத்தக்க சமித்து நெய் தருப்பை முதலானவைகளினாலே செய்யப்படும் யாகாதி கருமமும் நாசப்படத்தக்க தாதலால் பரமார்த்தமென்று சொல்லப்படாது. பரமார்த்தம் என்பது நாசப்படாததாக ஞானிகளாலே அங்கீகரிக்கப்பட்டும் இருக்கின்றது. யாதொரு பலனையும் விரும்பாமற்செய்த யாகாதிகளோவென்றால் அவை மோக்ஷத்திற்குச் சாதனமாகையாலே பலனைக் கொடுத்தவுடனே நசிப்பதனால் பரமார்த்தமல்ல. ஆத்துமத் தியானமும் [விசதம், விசததரம்] பிறவற்றினின்றுந் தெளிவு நற்றெளிவு என்று இப்படிப்பட்ட அவஸ்தா பேதங்களை யடைதலாலேயும், போனதை நினைத்தல், பிரத்தியக்ஷத் தோற்றம் முதலாக க்ஷணந்தோறும் மாறுதலினாலேயும் பரமார்த்தமன்று. பரமாத்துமாவோடு ஆத்துமாவுக்கு ஐக்கியமாகின்ற யோகமே பரமார்த்தம் என்று சிலர் நினைக்கின்றார்களன்றோ? அப்படிப்பட்ட யோகம் பொய்யாகையினாலே பரமார்த்தமன்று. ஏன் பொய்யெனில் ஒரு பொருள் மற்றொருபொருளாய் ஆகமாட்டாது. ஆகையால் ஜீவாத்துமாவானது பரமாத்துமாவாக மாறமாட்டாது. * ஆதலால், இராஜாவே! நான் முன்

* அப்படி சொல்வதற்குக் காரணம் என்னவென்றால் யோகபலத்தினாலே பரமாத்துமாவைப் பிரத்தியக்ஷமாய் அனுபவிக்கும்போது வேறொன்றுந் தோன்றாமல் ஆனந்தமயமான பிரம ஸ்வரூபமே தோன்றுவதாம்.

சொன்னவைகளெல்லாம் சிரேயசுகள் என்பதற்குச் சந்தேகமில்லை. பரமார்த்தம் எதுவென சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். தேகத்தைப்போல் பல பொருளாயிராமல், ஒரு பொருளாயும், ஞானத்தினுலே எங்கும் வியாபிக்கவல்லதாயும், தேகத்தைப்பற்றிய வைஷம்யம் இல்லாதே சமமாயும், நிர்மலமாயும், சத்துவாதிகுண சம்பந்தம் இல்லாததாயும், பிரகிருதிக்கு வேறுபட்டதாயும், உற்பத்தி விநாச விருத்தியக்ஷயாதிகள் இல்லாததாயும், நுண்மையினுலே அக்கினி வாயு ஜலாதிகளான அழிக்கும் பொருள்களுக்கு உட்படாததாயும், பற்றிக்கொள்ளுதல் முதலான தோஷங்கள் இல்லாததாய்த் தேகாதிகளுக்கு அதிபதியாயும் இருக்கின்ற ஆத்துமஸ்வரூபம் யாதுண்டோ அது முதலான ஞான வடிவாய், அவித்தியா ரூபங்களான ஜாதி நாமாதிகளோடு பூதம் வர்த்தமானம் பவிஷியத் என்கிற மூன்று காலங்களிலேயும் கூடாதது. தன்னுடையதும் பிறருடையதுமான தேகங்களிலே இருக்கின்ற அந்த ஆத்தும ஸ்வரூபத்தைப்பற்றி எல்லாம் ஒரேவிதம் என்கின்ற ஞானம் எதுவோ அந்த ஞானஸ்வரூபந்தான் பரமார்த்தமாம். ஆதலால் தேகபேதத்தினுலே பேதமாக நினைக்கின்றவர்கள் யதார்த்தத்தை யறியாதவர்கள். வேய்ங்குழலில் பிரவேசித்த காற்று ஒன்ருயிருந்தும் அதின் துவாரபேதங்களினுலே அக்காற்றுக்கு அறுவகை ஸ்வரபேத நாமதேய முண்டானதுபோலே அவ்வாத்தும ஸ்வரூபம் பேதமில்லாததாய் இருந்தும் அதற்குப் புறம்பான கர்மபேதத்தினுலே வந்த சரீர பேதத்தைப்பற்றி தேவன் மனிதன் என்கிற விவகாரம் உண்டாகின்றது. அந்த கர்மமாகிய மறைவு அழிந்தால் அந்தத் தேவாதிபேதம் இல்லவே யில்லை என்று அறியக்கடவாய்.

பதினுன்காம் அத்தியாயம் முற்றிற்று.

———

## பதினைந்தாம் அத்தியாயம்

# ருபுநிதாகோபாக்கியானம்

ஓ மயித்திரேயரே! இப்படியாக அப் பிராமணோத்தமர் அருளிச் செய்யக் கேட்டும் ரஹூகண மகாராஜனுக்கு அவ்விஷயம் மனதில் திடப்படாமையினாலே ஒன்றும் பேசாமல் சிந்தித்துக்கொண்டிருக்க, அச்சடபாதர் ஞானபேத மில்லாமையைப் பற்றிய கதையொன்று சொல்லத் தொடங்கினார்:—

ஓ ராஜேந்திரனே! நிதாகருக்கு ஞானத்தை யுண்டாக்கும் பொருட்டு இருபு என்பவர் அருளிச்செய்ததைச் சொல்லுகிறேன் கேள். பூர்வத்தில் பரமேஷ்டிக்கு இருபு என்கிற குமாரர் ஒருவர் சுபாவத்திலே தத்துவஞான மடைந்தவராயிருந்தார். அவருக்குப் புலஸ்திய குமாரரான நிதாகர் என்கின்ற சிஷ்ய ரொருவர் இருந்தார். அவருக்கு இருபு அதிக சந்தோஷத்தினால் சகல கலா ஞானங்களையும் ஓதுவித்தார். சகல ஞான சாஸ்திரங்களை ஓதியும் அவருக்கு ஆத்தும ஸ்வரூபத்தில் பேதமில்லாமையைப் பற்றிய வாசனை இல்லை என்பதை இருபு அறிந்திருந்தார். ஆயிரம் வருஷகாலஞ் சென்ற பின்பு இருபு மகாமுனி தேவிகா நதியின் கரையிலே புலஸ்தியராலே ஏற்படுத்தப்பட்டு மிகவும் இரமியமாயும் வளப்பமுள்ளதாயு மிருந்த நகரம் என்னும் பட்டணத்தின் பக்கத்தில் ஒரு உத்தியான வனத்திலே வாசஞ் செய்துகொண்டிருந்த தன் சிஷ்யராகிய நிதாகரைப் பார்க்கும் பொருட்டு அவ்விடத்திற்குப் போனார். அந்த நிதாகர் வைசுவதேவத்தை முடித்து வாசலில் வந்து அதிதிகளைப் பார்க்குந் தருணத்தில் இருபு நேரிட்ட படியால், அவரை அர்க்கியாதி உபசாரத்துடனே உள்ளே இட்டுக்கொண்டுபோய் ஆசனத்தில் உட்காரவைத்து, "சுவாமி! அமுதுசெய்தருள்க" என்று பிரார்த்திக்க, அந்தமுனிவர் நிதாகரைப் பார்த்து, "ஓ பிராமணோத்தமரே? உம்முடைய கிருகத்தில் நான் புசிக்கத்தக்க வஸ்து என்ன இருக்கின்றது? ஈனமான

போசனத்தில் எனக்குப் பிரியமில்லை" என, நிதாகர் "சுவாமி! என் மாளிகையில் அரிசி மாவினாலும் நவதானியங்களினாலும் செய்யப்பட்டிருக்கின்ற அன்னங்களிலும் காய் கிழங்கு கனிகளிலும் அப்பங்களிலும் எவை யெவை தேவரீருக்கு திருவுள்ளமா யிருக்கின்றனவோ அவற்றை யெல்லாம் யதேச்சையாய் அமுது செய்தருளலாம்" என அந்நீக்ருக்கு "ஓ பிராமண! இவையெல்லாம் அற்ப போசனங்கள். இவற்றுள் எனக்குப் பிரியமில்லை. மோர்க்குழம்பு, பாயசம், தேன் குழல் முதலான மதுர அன்னங்களை யெனக்குக் கொடும்" என அந்நிதாகர், "அப்படியே யாகட்டும்" என்று சொல்லித் தன் பாரியைப் பார்த்து, "அடி விளக்கமுள்ள பெண்ணே! நம்முடைய கிருகத்தில் மிகவும் சிரேஷ்டமாகிய எந்த வஸ்து இருக்கின்றதோ அதைக்கொண்டு இவருக்கு விசேஷ மதுரமான அன்னஞ் செய்து பரிமாறு" என்று நியமித்தார். அவளும் பர்த்தாவின் நியமனப்படி அக்காரவடிசில் முதலானவைகளைச் செய்து பரிமாறினாள். இவ்விதமாகப் பிரசாதித்த அடிசிலை யமுது செய்திருக்கின்ற அந்த அதிதியை நோக்கி நிதாகர் மிகுந்த வணக்கத்துடனே "சுவாமி! தேவரீருக்கு மிகுந்த திருப்தியும் சந்துஷ்டியும் உண்டாயினவா? தேவரீர் திருவுள்ளம் சொஸ்தமாயிருக்கின்றதா? தேவரீர் எழுந்தருளி யிருக்குமிடம் எது? எங்கிருந் தெழுந்தருளுகின்றது? எங்கே எழுந்தருள உத்தேசித்து இங்கெழுந்தருளியது? இவற்றை யெல்லாம் அருளிச் செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, இருபு சொல்லத் தொடங்கினார்:—

ஓ பிராமணோத்தமரே! எவனுக்குப் பசியோ அவனுக்கு அன்னத்தைப் புசிப்பதனால் திருப்தியுண்டாகின்றது. எனக்குப் பசியில்லை, அப்படி யிருக்க எனக்குத் திர்ப்தியுண்டா வென்று ஏன் கேட்கிறீர்? பிருதிவி சம்பந்தமான தாதுவானது கர்ப்பத்திலிருக்கும் அக்கினியினாலே அழிக்கப்படுமளவில் பசியும் அந்த அக்கினி வேகத்தினால் உள்ளிருக்கும் நீர் வற்றிப் போவதனாலே தாகமு முண்டாகின்றன. இந்தப் பசி தாகங்கள் (இச்சாரூபங்கள் ஆகையாலே மனோதர்மங்களாக

லும்) தாதுக்ஷயத்திஞல் உண்டாகின்றன வாதலால், தேக தருமங்களே யாகின்றன. எனக்கு இவை யில்லேயோ? ஆதலால் பசியிஞலுண்டாகுந் திர்ப்தி இப்போது மாத்திரமன்று; எப்போதும் எனக்கு இல்லே. மனசு சொஸ்தமா யிருப்பதும் சந்துஷ்டியும் சித்தத்தின் தன்மைக ளாதலால் இவ்விரண்டையும்பற்றிச் சித்தத்தை யன்ருே கேட்கவேண்டும்? என்னே யேன் கேட்கிறீர்? நான்மாத்திரமன்று என்னேப்போலுள்ள ஆத்துமாக்களுக் கெல்லாம் இந்தப் பசி முதலானவை இல்லேயென்றறியும். வாசஸ்தானம் எது? எங்கிருந்து வருகின்ருய்? எங்கே போகின்ருய்? என இம்மூன்றையும் பற்றி நீர் கேட்டவைகளுக்கு உத்தரஞ் சொல்லுகின்றேன் கேளும், புருஷன் தேவமனுஷ்யாதி சகல சரீரங்களிலேயும் இருக்கத்தக்கவஞய், சகல அசேதனங்களிலேயும் வியாபிக்கத் தக்கவஞய், ஆகாசத்தைப் போலே ஒன்ருேடும் ஒட்டாதவஞய் இருக்கின்ருன். இப்படிப்பட்ட ஆத்துமாவைப் பார்த்து எங்கிருக்கின்ருய்? எங்கிருந்து வருகின்ருய்? எங்கே போகின்ருய்? என்னுங் கேள்விகளுக்குப் பொருளில்லே. ஆனதுபற்றி அப்படிப்பட்ட நான் போகிறவனுமல்லேன், வருகிறவனுமல்லேன், ஓரிடத்திலிருப்பவனுமல்லேன். நீயும் மற்றவர்களும் அப்படியே. ஆஞல் வருவதும் போவதுமாகத் தோன்றுவது ஆசிரயமான தேகவசத்திஞலென்றறிக. ஆதலால் போக்கு வரவுகளுக்கு கர்த்தாவாகத் தோன்றுகின்ற இந்தத் தேகம் நானன்று, அப்படிப்பட்ட நீரும் நீரன்று, மற்றவர்களும் மற்றவர்க ளன்று. ஆஞல் நல்ல அன்னங்கொடும் அற்ப அன்னம் வேண்டாமென்று நான் சொன்னது சுயாவசித்தமோ உபாதியைப் பற்றியதோ என்று உமது கருத்தை அறியும்படி பரீக்ஷை செய்ததே யல்லது நான் மெய்யாய்க் கேட்டேனில்லே. அவ்விஷயத்தைப் பற்றியுஞ் சொல்லுகின்றேன் கேளும். உண்கின்றவனுக்கு இது சுவையுள்ளது, இது ருசியில்லாதது என்று சொல்லும்படி ஒரு பொருளும் நியதிப்பட்டிருக்கவில்லே. யாதொரு வியாதியு மில்லாமல் நல்ல பசியுள்ளவனுக்குப் புழுத்த வுளுந்து முதலானவைகளாற் செய்த தாழ்வான வுணவு

களும், ருசிகரமாகவே யாகின்றன. அப்படி யல்லாதவனுக்குத் தேன்குழல் அக்காரவடிசில் முதலானவைகளும் ருசிகரம் ஆகாமற் போகின்றன. ஆதலால் உண்பவனுடைய உடம்பின் றன்மையின்படி உணவுகளிலும் ருசியும் அருசியும் உண்டாயிருப்பதனாலே, மதுரமென்பதும் அமதுரமென்பதும் ஔபாதிகமேயல்லது சுவாபாவிகமன்று. மண்ணாற் செய்தவீடு மண்ணினாலே பூசப்பட்டு உறுதியாவது போலே பிருதிவிமயமான இந்தத் தேகமும் பிருதிவி சம்பந்தமான பொருள்களினாலும் உறுதியாக வேண்டி யிருப்பதனால் யாவரும் உணவைக் கொள்ளவேண்டி யிருக்கின்றது. யவம் கோதுமை பயறு முதலான தானியங்களும், நெய் எண்ணெய் பால் தயிர் முதலான ரச வஸ்துக்களும், வெல்லம் கனிகள் முதலான பொருள்களும், பிருதிவி சம்பந்தமான அணுக்களேயாம். ஆகையால் நாம் முன் சொல்லிவந்த விஷயங்களை யெல்லாம் நன்றாய் அறிந்து இது இனிப்பு, இது இனிப்பன்று என்றும், இவன் தேவன் இவன் மனுஷ்யன் என்றும், பேத விசாரணையுள்ள மனதை, இப்படிப்பட்ட பேதங்களெல்லாம் கர்மத்தினால் வந்த விகாரங்களென்றும், ஆத்தும சொருபத்தில் வைஷமியம் யாதுமில்லை என்றும், சமத்துவஞானம் உள்ளதாகச் செய்ய வேண்டும். இப்படிப்பட்ட சமத்துவ புத்திதான் மோக்ஷகாரணமாகும்" என அந்த நிதாகர் குருவைத் தண்டம் சமர்ப்பித்து, "ஓ பிராமணோத்தமரே! பரமார்த்தத்தைப்பற்றின தேவரீர் வசனங்களைக் கேட்டு எனக்கு அஞ்ஞானம் நீங்கிற்று. அடியேனுக்கு இதம் போதிப்பதற்காக இங்கெழுந்தருளின தேவரீர் யாரோ தெரியவில்லை, சாதித்தருளவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்ய, இருபு சீஷனை நோக்கி, "உமக்கு ஆசாரியனான இருபு என்பவன் நான். உமக்கு ஞானங் கற்பிக்கும் பொருட்டு இங்கே வந்தேன். நினைத்தபடி உமக்குப் பரமார்த்தத்தைத் தெரியப்படுத்தினேன். இனி நான் என்னிடம் போகின்றேன். உமக்குச்சுருக்கம் ஒன்று சொல்லுகின்றேன் கேளும். தேவமனுஷ்யாதி பேதமாய்க் காணப்படுகின்ற சேதன ஸ்வரூபமெல்லாம்

ஒன்றேயல்லாமல் பேதப்பட்டதன்று. தேவாதிபேதங்களோ கர்மவசத்தினால் வந்த பூதவிகாரங்கள். இப்படி சேதநாசேதநாத்துமகமான சகல பிரபஞ்சமும் ஸ்ரீவாசுதேவன் என்னுந் திருநாமமுடைய பரமாத்துமாவுக்குத் திருமேனியாய் இருக்கின்றன." இவ்வாறு ஆசாரியர் போதித்ததைக் கேட்டுச் சீஷரான நிதாகர், "இனி அடியேன் அப்படியே நினைத்திருக்கிறேன்" என்று தண்டம் சமர்ப்பித்து மகா பக்தியோடு உபசாரஞ் செய்யப்பெற்று, அந்த ருபுவானவர் தம்மிஷ்டப்படி யோக வேண்டு மிடத்திற்குப் போனார்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

## பதினாறும் அத்தியாயம்

# நிதாகபரதர்கள் முத்தியடைந்தது

ஜடபரதர் சவ்வீர ராஜனை நோக்கிப் பின்னையு மருளிச் செய்கின்றார். அரசனே! கேள். மறுபடியும் ஆயிரம் வருஷகாலஞ் சென்றபின்பு அந்த ருபுவானவர் நிதாகருக்கு ஞானோபதேசஞ் செய்ய நினைத்து அந்நகரத்திற்கேபோனார். அப்போது அநேக பரிவாரங்களோடு அரசன் பட்டணத்திற்குள் சென்றுகொண்டிருக்க, இந்த நிதாகர் காட்டினின்றும் சமித்து தருப்பைகளைச் சம்பாதித்துக்கொண்டு, சந்தடியா யிருந்தபடியால் தீட்டுப்படுவோமென்று பட்டணத்திற்குள்ளே போகாமல் தூரத்தில் நின்றுகொண்டிருந்தார். இவ்வகையாய்ப் பசியினாலே மெலிந்து நிற்கின்ற அந்த நிதாகரைக் கண்டு, இருபு தண்டமிட்டு, "ஓ பிராமணரே! நீர் ஏன் இங்கே ஒன்றியாய் நிற்கின்றீர்?" என்று வினாவினார். அதற்கு அந்த நிதாகர் "சுவாமி! இங்கே இராஜா பட்டணத்தினுள்ளே போகின்றான். ஆனதனாலே, நானாவித ஜனங்களுஞ்சேர்ந்து நெருங்கியிருக்கின்றபடியால் உள்ளே போகக்கூடாமல் இங்கே நிற்கின்றேன்" என்றார். அதுகேட்டு ருபு "ஐய! அரசன் யார்? மற்றச் சனங்கள் யார்? எனக்குத் தெரியவில்லை,

நீர் தெரிந்தவரா யிருக்கின்றீர், ஆதலால் தெரியச் சொல்லவேண்டும்'' என்றார். அதற்கு நிதாகர் "அதோ பாரும் பெரிய பர்வதத்தின் சிருங்கம்போலே மிகப் பெரியதாயிருக்கின்ற யானையின்மேல் ஏறிக்கொண்டு பிர காசிக்கின்றானே அவன் தான் இராஜா, அவனைச்சுற்றி நிற்பவர் பரிவாரங்கள்'' என, ருபு "ஐய! நீர் ராஜா, வென்றும் யானையென்றும் வெவ்வேறான லக்ஷண முடையனவாய் இரண்டு பொருள்களை ஒரே காலத்திற் சொல்லிக் காட்டினீர். எனக்கோ அவைகளுக்குப் பேதம் ஒன்றும் தெரியவில்லை. என்ன விசேஷமோ அதை யெனக்குத் தெரியச் சொல்லவேண்டும். யார் அரசன்? எது யானை? இதை யறிய விரும்புகின்றேன்?'' என, நிதாகர் "என்ன பிராமணா! கீழிருப்பது யானை, மேலிருப் பவன் அரசன். இவ்விருவருக்கும் சுமப்பதும் சுமக்கப் படுவதுமான சம்பந்தம் இருக்கின்றது. இது சாதா ரணமான காரியம், யாருக்குத்தான் தெரியாது'' என்று சொன்னார். அதுகேட்டு ருபு "பிராமணரே! நீர் கீழ் இன்னது, மேல் இன்னது என்று எனக்கு நன்றாய்த் தெரிவிக்கவேண்டும்'' என்று சொன்னவுடனே, நிதாகர் அந்த ருபுவின்மேல் சீக்கிரமாய் ஏறிக்கொண்டு, அவரை நோக்கி "நான் சொல்வதை நன்றாய்க்கேளும். நானிருக்கு மிடந்தான் மேல், மேலே என்னைப்போலேறி யிருப்பவனே இராஜாவென்றறியும், நீர் இருக்குமிடந் தான் கீழ், உம்மைப்போல் கீழே சுமந்துகொண்டிருப் பதை யானையென்றறியும், இக்காரியம் உமக்கு நன் றாய்த் தெரியும்பொருட்டுத் திருஷ்டாந்தம் காண்பித் தேன்'' என்றார். பின்பு ருபுவானவர் "சரிதான் நீ என் பதும், நான் என்பதும் எனக்குத் தெரிந்தாலன்றோ மற் றைக் காரியங்களையும் அறிந்து கொள்ளுவேன். அந்தப் பேதமே எனக்குத் தெரியவில்லை. ஆதலால் நீ நான் என்பவர்கள் யாரோ எனக்குத் தெரியச் சொல்லும்'' என்றார். இப்படிச் சொன்னதைக் கேட்டவுடனே நிதாகர் வெகு பரபரப்பாய் அவர் திருவடிகளில் வீழ்ந்து தண்டம் சமர்ப்பித்து "சுவாமீ! தேவரீர் அடியேனுக்கு ஆசாரியரான ருபுவென்று நினைக் கின்றேன். மற்றவர்களுடைய இருதயம் இப்படி ஆத்

தும அபேத ஞானத்தினாலே சுத்தப்பட்டிருக்கமாட்டாது. ஆதலால் தேவரீர் ஆசாரியர் என்பதற்குச் சந்தேகமில்லை" என்று சொல்ல, இருபுவும் "ஆம் நான் இருபுதான், நீர் செய்திருந்த பணிவிடைக்கு உவந்து உமக்கு ஞானத்தை ஸ்திரப்படுத்தும் பொருட்டு வந்தேன். பரமார்த்தசாரமான அபேத ஞானத்தையும் உமக்குச் சுருக்கமாய் அறிவித்தேன்" என்று சொல்லித் தம்மிடம் போய்ச் சேர்ந்தார். அந்த நிதாகரும் சகல ஆத்தும சொரூபங்களும் ஒரேவிதமென்கின்ற அபேத ஞானந் திருந்தினவராய் அப்படியே பாவனையு முறுதிப்பட்டு இவற்றை யெல்லாம் பிரமஸ்வரூபமாகத் தியானித்து மேலான மோக்ஷத்தை யடைந்தார்.

"ஓ ரகூகண மகாராஜனே! நீயும் அப்படியேதான், சத்துருமித்திரன் என்னு மிடங்களிலே வித்தியாசமில்லாதவனாகி கர்மவசத்தினாலே எங்கு மிருக்கின்ற ஆத்தும சொரூபம் ஒருவிதமானதே யென்று நினைத்திரு. சுத்தமான ஆகாசம் ஒன்றே. உபாதி வசத்தினாலே கறுப்பு வெளுப்பு முதலாகப் பலவகையாய்த் தோன்றுவது போலவே ஒரேவிதமான ஆத்தும ஸ்வரூபமும் அஞ்ஞானிகளுக்கு வெவ்வேறாகத் தோன்றுகின்றது. முடிவு சுருக்கமாகச் சொல்லுகின்றேன் கேள். எந்த எந்தப் பொருளுண்டோ அவையெல்லாம் ஸ்ரீ அச்சுதனுடைய சொரூபமேயாம். அவனுக்கு வேறாய் மேற்பட்டதொன்றும் இல்லை. நானும் அவன் சொரூபமே. நீயு மப்படியே. சகலமும் அப்படியே. ஆதலால் எல்லாம் வேறு வெறென்கின்ற பேதபுத்தியாகின்ற அஞ்ஞானத்தை விட்டுவிடு" என்றிப்படி அந்த யோகீந்திரராலே நன்றாய்ப் போதிக்கப்பட்டு அரசனும் சுத்தஞானமடைந்து முன்னிருந்த பேதஞானத்தை விட்டு விட்டான். அந்தப் பரதயோகியும் பூர்வஜன்ம ஸ்மரணத்தினாலே ஞானயோக மடைந்தவராய் அந்தச் சனனத்திலேயே மோக்ஷமடைந்தார். இப்படிக்கு மகானுபாவரான பரதயோகியினுடைய இந்த மேன்மையான சரித்திரத்தை எவன் சொல்லுகின்றானோ எவன் பக்தியோடு அதைக் கேட்கிறானோ அவர்களெல்லாம் சுத்தஞானம்

உடையவர்களாகி மோக்ஷம் பெறுவதற்கு யோக்கிய ராவார்கள்.

ஸ்ரீ இங்கே ஜடபாதர் முதலானோர், பக்திநிஷ்டருக்கு ஆத்தும ஸ்வ ரூபானுபவம் ஆவசியமானதனாலே அது தெளிந்து அனுபவப்படும்படி நானா வித உபாயங்களினாலே போதித்தார்களே அல்லது, அவ்வளவே உபாய பரம புருஷார்த்தங்களென்றன்று. ஏனெனில் கடைசியில் வாசுதேவத் தியானத் தையும் மோக்ஷத்தையுஞ் சொல்லியிருப்பதனை இலன்றறியுங்கள். ஆனால் ஆத்தும சொரூபத்தையே பரமார்த்தமென்று சொன்னதென்னவெனில், பிரகிருதி சம்பந்தமற நீங்கி ஆத்துமா தன் யதார்த்த சொரூபத்தோடு நிற் பதே பரமபுருஷார்த்த மாகையால் அப்படிச் சொன்னார்களென்று உணர வேண்டும்.

பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## விஷ்ணு புராணம் இரண்டாம் அம்சம்

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ விஷ்ணு புராணம்

மூன்றாம் அம்சம்

## முதல் அத்தியாயம்

## நடந்த மனுவந்தரங்களின் விவரம்

மயித்திரேயர் ஸ்ரீ பராசரமுனிவரை வினவுகின்றார்:—"சுவாமீ ஸ்ரீ பராசர பகவானே! தேவரீர், பூமி சமுத்திர முதலானவைகளின் விதங்களும், சூரியன் முதலான சோதிகளுடைய நிலைகளும் விதங்களும் விசதமாக அருளிச்செய்தீர்; தேவதைகள் முதலானவர்களுடைய சிருட்டியும், இருடிகளுடைய சிருட்டியும், நான்கு வர்ணத்தின் உற்பத்தியும், திரியக்குகளின் உற்பத்தியும், விசேஷமாய்த் துருவனுடைய சரித்திரமும் பிரகலாதருடைய சரித்திரமும் அடியேனுக்கு அருளிச் செய்தீர்; இனி அடியேன் சகல மனுவந்தரங்களையும், மனுவந்த ராதிபதிகளையும், இந்திரன் தேவதைகள் முதாலானவர்களையும், தேவரீர் அருளிச் செய்யக் கேட்க வேண்டும் என்று பிரார்த்திக்க, மகரிஷி அருளிச் செய்யலாயினார்:—

கேளும், மயித்திரேயரே! நடந்தவைகளும் நடக்குமவைகளுமான மனுவந்தரங்களை உமக்குத் தெரியச் சொல்லுகின்றேன்:— ஆதியில் சுவாயம்புவமனு தொடங்கி சுவாரோசிஷர், உத்தமர், தாமசர், ரைவதர், சாக்ஷுஷர் என்கிற மனுக்கள் அறுவரும் முறையே சென்றனர். இப்பொழுது சூரிய குமாரரான வைவச்சுத மனுவினுடைய அந்தரம் நடக்கின்றது. இக் கற்

பத்தின் முதலில் நடந்த சுவாயம்புவ மனுவந்தரத்தையும் அதிலிருந்த தேவர் முனிவர் முதலானோரையும் சொன்னேனன்றோ. இனிச் சுவாரோசிஷ மனுவந்தரத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன் கேளும். அந்தச் சுவாரோசிஷமனுவந்தரத்திலே பாராவாரர் துஷிதர் என்கிற தேவதைகளும், விபச்சித் என்கிற இந்திரனும், ஊர்ஜஸ்தம்பன், பிராணன், தத்தன், அக்கினி, ரிஷபன், நிஸ்வரன், சார்வரீவான் என்கிற சப்தரிஷிகளும் இருந்தார்கள். அந்த மனுவுக்கு சைத்திரன் கிம்புருஷன் முதலான சில குமாரரும் இருந்தார்கள். இப்படி இரண்டாம் மனுவந்தரம் நடந்தது. மூன்றாவது உத்தம மனுவந்தரம். அதில் சசாந்தி என்பவன் தேவராசனாக இருந்தான். சுதாமாக்கள், சத்தியர், சிவர், பிரதர்த்தனர், வசவர்த்திகள் என்ற ஐந்து கண தேவதைகள் கணமொன்றுக்குப் பன்னிருவராகச் சேர்ந்து இருந்தார்கள். வசிஷ்டருடைய குமாரரேழுபேர் சப்தரிஷிகளானார்கள். அஜன் பரசுதிவியன் முதலானவர்கள் அந்த மனுவின் குமாரர்கள். நான்காவது தாமசமனுவின் அந்தரத்திலே சுபாரர், ஹரிகள், சத்தியர், சுதீகள் என்கிற கணதேவதைகள் கணமொன்றுக்கு இருபத்தேழுபேராக இருந்தார்கள். சிபிச்சக்கிரவர்த்தி நூறு அசுவமேதங்களைச் செய்ததனாலே வச்சிராயுத முதலான சின்னங்களோடு கூடி இந்திரனானான். ஜோதிர்த்தாமா, பிருது, காவியன், சைத்திரன், அக்கினி, தனகன், பீவான் என்கிற நாமதேயமுள்ள சப்தரிஷிகள் இருந்தார்கள். நரன், கியாதி, கேதுரூபன், சானு, சங்கன் முதலானவர்கள் அந்தத் தாமச மனுவின் புத்திரர். இவர்கள் மகாபல பராக்கிரமாதி குணமுள்ளவர்கள். ஐந்தாவது ரைவத மனுவந்தரம். இம்மனுவந்தரத்தில் விபு என்பவன் இந்திரன். அமிதாபர், பூதனயர், வைகுண்டர், சுசமேதர் என்பவர்கள் தேவகணங்களாய்க் கணமொன்றுக்குப் பதினன்கு பதினன்குபேர் இருந்தார்கள். இரணியரோமா, வேதசிரீ, ஊர்த்துவபாகு, அபரன், வேதபாகு, சுதாமா, பர்ச்சனியன் என்பவர்கள் சப்தரிஷிகள். பலபந்து சுசம்பாவியன் சத்தியகன் முதலானவர்கள் இந்தமனுவின்புத்திரர். இந்

தச் சுவாரோசிஷர், உத்தமர், தாமசர், ரைவதர் என்கிற மனுக்கள் நால்வரும் பிரியவிரதருடைய வமிசத்திற் பிறந்தவர்கள். அந்தப் பிரியவிரதர் என்னும் ராஜரிஷியானவர் தவத்தினாலே ஸ்ரீவிட்டுணுவை ஆராதித்துத் தன்குலத்தில் மனுவந்தராதிபதிகள் உதிக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றார். ஆறாவது மனுவந்தரத்தின் அதிபதி சாக்ஷுஷா என்கிற மனு. மனோஜவன் என்பவன் தேவேந்திரனானான். ஆப்பியர், பிரசூதர், பவியர், பிருதுகர், லேகர் இவ்வைந்து விதமான கண தேவதைகள் கணமொன்றுக்கு எட்டுப்பேராக விருந்தார்கள். இவர்கள் மகானுபாவர். சுமேதன், விரஜன், அவிஷ்மான், உந்தமன், மது, அதிநாமா, சகிஷ்ணு என்பவர்கள் சப்தரிஷிகள். ஊரு, பூரு, சதத்தியும்னன் முதலான அந்த மனுவின்புத்திரர் ராஜாக்களானார்கள். இனி இப்போது நடக்கின்ற ஏழாவது மனுவந்தரத்திற்குச் சூரியகுமாரனான சிரார்த்த தேவன் மனுவாகி யிருக்கிறான். இதில் ஆதித்தியர், வசுக்கள், ருத்திரர் முதலானவர்கள் தேவதைகளா யிருக்கிறார்கள். புரந்தரன் என்பவன் தேவராஜனா யிருக்கிறான். வசிஷ்டர், காசிபர், அத்திரி, ஜமதக்கினி, கௌதமர், விசுவாமித்திரர், பரத்துவாசர் இவ்வெழுவரும் சப்தரிஷிகள். இக்ஷ்வாகு, நிருகன், திருஷ்டன், சர்யாதி, நரிஷ்யந்தன், நாபாகன், அரிஷ்டன், கரூஷன், விருஷத்திரன் இவ்வொன்பதின்மரும் அம்மனு புத்திரர். லோகரக்ஷணத்திற்காக இருக்கிற ஒப்பற்ற ஸ்ரீவிட்டுணுவினுடைய சாத்துவிக சத்தியானது சகல மனுவந்தரங்களிலே தேவதாவதாரத்தினாலே மனு முதலானோரையும் வியாபித்திருக்கின்றது. ஸ்ரீமகாவிட்டுணு சுவாயம்புவமனுவந்தரத்திலே ஆஹூதி என்பவளிடத்திலே யக்கியன் என்கிற திருநாமத்தோடு மனசினா லவதரித்தார். அவரே சுவாரோசிஷ மனுவந்தரம் வந்தபோது துஷிதை என்பவளிடத்திலே துஷிதர் என்கிற தேவதைகளோடுகூட அஜிதன் என்கிற திருநாம முள்ளவராய் அவதரித்தார். பின்பு உத்தம மனுவந்தரத்திலே சத்தியை என்பவளிடத்திலே சத்தியன் என்கிற திருநாம முள்ளவராய்ச் சத்தியர் என்னுந் தேவதைகளோடு

கூட அவதரித்தார். மறுபடியும் அவர் தாமசமனுவந் தரத்திலே ஹரியை என்கிறவன் கருப்பத்திலே ஹரி கள் என்கிற தேவர்களோடுகூட ஹரியென்கிற திரு நாம முடையவராய் அவதரித்தார். சாக்ஷுஷ மனுவந்த ரத்திலே விகுண்டையின் கருப்பத்தில் வைகுண்டர் என்கிற தேவதைகளோடு வைகுண்டன் என்றவதரித் தார். இந்த வைவசுவத மனுவந்தரம் வந்தபோது காசிபருக்கு அதிதியினிடத்திலே வாமனரூபியாய் அவ தரித்து, மூன்றடிகளாலே சகல லோகங்களையும் ஆக்கிர மித்து, அம்மூன்று லோகங்களையும் சத்துருவென்னும் பெயரேயில்லாம லிருக்கும்படி செய்து, புரந்தரனுக் குப் பிரசாதித்தருளினார். இப்படி ஸ்ரீ விட்டுணு பகவான் ஏழு மனுவந்தரங்களிலேயும் ஏழு திருவவ தாரஞ் செய்தருளி மனுமுதலான சகல பிரசைகளையும் வளர்த்து வருகின்றார். அந்த ஸ்வாமியானவர் தமது சத்தியினாலே மனுமுதலான சகல பிரபஞ்சத்தையும் அனுப்பிரவேசித்திருக்கிறபடியினாலே விட்டுணு என் கிற திருநாமத்தை யடைந்திருக்கின்றார். ஆதலாலே சகல தேவதைகளும் சகல மனுக்களும் சகல சப்தரிஷி களும் சகல மனு புத்திரர்களும் இந்திரர்களும் யாவ ரும் ஸ்ரீ விட்டுணுவினுடைய ஐசுவரியமானவர்கள் என்று அறியும்.

முதலாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இரண்டாம் அத்தியாயம்

# இனிவரும் மனுவந்தரங்களின் விவரம்

மயித்திரேயர், "சுவாமி! இதுவரையி லுண்டான மனுவந்தரங்களை யருளிச்செய்தீர்; இனிவரும் மனு வந்தரங்களையும் அடியேனுக்கு அருளிச்செய்யவேண் டும் என்று பிரார்த்திக்க, மகரிஷி யருளிச் செய் கின்றார்:—

சூரியனுக்குச் சமிக்கை என்று பத்தினி யொருத்தி யிருந்தாள். அவள் விசுவகர்மாவினுடைய புத்திரி.

அவளுக்கு முன் சொல்லப்பட்ட சிராத்ததேவன் என்கிற மனுவும் யமதருமராஜனும் யமுநாநதியும் ஆக மூவர் பிறந்தார்கள். அவள் தன் பர்த்தாவினுடைய தேஜஸைச் சகிக்கமாட்டாதவளாய்த் தன்னிழலென்று சொல்லும்படித் தன்னைப்போ லொருத்தியை யுண்டாக்கித் தன் பர்த்தாவுக்குச் சிசுருஷை செய்யும்படி வைத்துத் தான் தவஞ்செய்யக் காட்டுக்குப் போனாள். சூரியன் அவளைத் தன் பத்தினியாகிய சமிக்ஞை யென்றே நினைத்து அவளிடத்திற் சேர்ந்து சனியையும் மற்றொரு மனுவையும் தபதியென்பவளையும் பெற்றான். இப்படியிருக்க, ஒருநாள் யமன் இந்தச் சாயாதேவியைத் தன் தாயென்றே நினைத்து உதைக்கப்போகையில் அந்தச் சாயை கோபமுண்டவளாய்ச் சபிக்கக்கண்டு, இவள் கருணையில்லாதவ ளாகையாலே தன் தாயன்றென்று அனுமானித்தான். பின்பு அச்சாயை உண்மையைச் சொல்லக்கேட்டுச் சூரியன் யோகதிருட்டியினாலே யாலோசித்துச் சமிக்ஞை என்பவள் பெண்குதிரை வடிவாய் வனத்தில் தவஞ்செய்து கொண்டிருப்பதை யறிந்தான். பின்பு சூரியன் தானும் குதிரை வடிவெடுத்துக்கொண்டு அவளிருக்குமிடஞ் சென்று அவளிடத்தில் அசுவினி தேவதைக ளிருவரையும் வீரியன் கடைசிப் பாகத்தினாலே ரேவந்தன் என்னு மொருவனையு முண்டாக்கி, மறுபடியும் அந்தச் சமிக்ஞையைத் தன்னிடங்கொண்டு சேர்த்தான்.

பின்பு விசுவகர்மா வானவன் சூரிய மண்டலத்தைச் சாணைச்சக்கரத்தில் வைத்துத் தேய்த்து எட்டிலொரு பங்கு தேஜஸைக் குறைத்துவிட்டான். இப்படி விசுவகர்மாவினாலே தேய்த்துத் தள்ளப்பட்ட தேஜோபாகமானது வெகுப் பிரகாசத்தோடு பூமியில் விழுந்தது. பூமியில் விழுந்த தேஜோபாகத்தைக் கொண்டு விசுவகர்மா வானவன் ஸ்ரீ விஷ்ணுவுக்குச் சக்கரத்தையும் சிவனுக்குச் சூலத்தையும், சுப்பிரமணியனுக்கு வேலாயுதத்தையும், குபேரனுக்குச் சிபிகையென்னும் ஆயுதத்தையும், மற்றைத் தேவர்களுக்குஞ் சில வுபகரணங்களையும் விசேஷப்படுத்தினான்.

மேலே சாயை யென்பவளிட முதித்த இரண்டாங் குமாரர் மனுவென்றொருவ ருண்டன்றோ, அவர் முன் பிறந்த மனுவுக்குச் சமானமாயிருந்ததனாலே சாவர்ணி என்கிற பெயர் பெற்றனர். இனிவரும் எட்டாவது மனுவந்தரம் அந்தச் சாவர்ணியினுடையது. அந்த மனுவந்தரத்தில் சுதபர் என்றும் அமிதாபர் என்றும் முக்கியர் என்றுஞ் சொல்லப்பட்ட தேவர்களுண்டாவார் கள். அந்தத் தேவர்கள் கணம் ஒன்றுக்கு இருப திரு பதின்மராக இருப்பார்கள். தீப்திமான், காலவர், இரா மர், கிருபர், அசுவத்தாமா, என் குமாரரான வியாசர், ருசியசிருங்கர் ஆகிய இவர்கள் அந்த மனுவந்தரத்தின் சப்தரிஷிகள். ஸ்ரீவிஷ்ணுவின் அனுக்கிரகத்தினாலே பரிசுத்தனாய்ப் பாதாள மத்தியத்தில் வாசஞ்செய்து கொண்டிருக்கின்ற விரோசனகுமாரனான பலிச்சக்கிர வர்த்தி அந்த மனுவந்தரத்தில் தேவேந்திரனாவான். விரஜன், சாவரீவான், நிர்மோகன் முதலான அந்த மனுவின் குமாரர்கள் இராஜாக்களாவார்கள். இனி ஒன் பதா மனு தக்ஷசாவர்ணி என்பவராவார். அவரந்தரத் தில் வாரர், மரீசிகருப்பர், சுதர்மாக்கள் என்கிற தேவர் கள் கணமொன்றுக்குப் பன்னிருவராக இருப்பார்கள். அத்தேவதைகளுக்கு அற்புதன் என்பவன் அதிபதி யாவான். சவனன், தியுதிமான், அவியன், வசு, மேதா திதி, ஜோதிஷ்மான், சத்தியன் என்னப்பட்டவர்கள் அப்போது சப்தரிஷிகளாவார்கள். திருதகேது, தீப்த கேது, பஞ்சஹஸ்தன், நிராமயன், பிருதுச்சிரவன் முதலானவர்கள் அந்தத் தக்ஷசாவர்ணி மனுவின் புத் திரர். இனி பிரமசாவர்ணி என்பவர் பத்தாமனுவா வார். அவ்வந்தரத்தில் சுதர்மாக்கள், வீருதர் என்கிற தேவர்கள் நூறு நூறாய்ச் சேர்ந்த கூட்டமாயிருப்பார் கள். அவர்களுக்கு மகாபலவானான சாந்தி யென்ப வன் இந்திரனாவான். அந்த அந்தரத்தில் ஹவிஷ் மான், சுகிருதன், சத்தியன், தபோமூர்த்தி, நாபாகன், அப்பிரதிமௌஜன், சத்தியகேது என்பவர்கள் சப்த ரிஷிக ளாவார்கள். சுக்ஷேத்திரன், உத்தமௌஜன், பூரி ஷேணன் முதலாகப் பதின்மர் அம்மனுவின் குமார ராவார்கள். அவர்கள் இப்பூமியை ரக்ஷித்து வருவார்

கள். பதினோரா மனு தர்மசாவர்ணி என்பவர். அவருடைய அந்தரத்திலே விகங்கமரென்றும், காமகமரென்றும், நிர்வாணரென்றும், ருசிகளென்றுஞ் சொல்லப்பட்ட தேவகணங்கள் தாம் முக்கியமானவர்கள். அவர்கள் கணமொன்றுக்கு முப்பது முப்பதுபே ரிருப்பார்கள். விருஷா என்பவன் அவர்களுக்கு இந்திரன். அப்போது நிச்சரன், அக்கினிதேஜசன், வபுஷ்மான், கிருணி, ஆருணி, அவிஷ்மான், அனகன் என்பவர்கள் சப்த ரிஷிகளாவார்கள். அந்த மனுவின் மக்களான சர்வத்திரகன், ஸ்வதர்மா, தேவானீகன் முதலானவர்கள் ராஜாக்களாவார்கள். உருத்திர புத்திரராகிய ருத்திர சாவர்ணி என்பவர் பன்னிரண்டாமனு. அவருடைய அந்தரத்தில் ருதுதாமா என்பவன் இந்திரனாவான். அரிதர், ரோகிதர், சுமனசர், சுகர்மர், சுராபர் என்ற தேவர் கூட்டமொன்றுக்குப் பப்பத்துப்பேராக இருப்பார்கள். தபசுவீ, சுதபன், தபோமூர்த்தி, தபோரதி, தபோதிருதி, தபோதியுதி, தபோதனன் என்னுமிவ்வெழுவரும் சப்தரிஷிகள். தேவவான், உபதேவன், தேவசிரேஷ்டன் முதலான அந்த மனுபுத்திரர் அரசராவார்கள். பதின்மூன்றுமனு இரவுச்சியனென்னும் பெயரையுடையவர். சுத்திராமர், சுகர்மர் என்கிற தேவதைகள் கணத்துக்கு முப்பது மூவராக இருப்பார்கள். மகாவீரியவானான திவஸ்பதி யென்பவன் அவர்களுக்கு இந்திரனாயிருப்பான். நிர்மோஹனும், தத்துவதர்சியும், நிஷ்பிரகம்பியனும், நிருச்சுகனும், திருதிமானும், அவியயனும், சுதபனும் சப்தரிஷிகளாவார்கள். அம்மனுவின் புத்திரரான சித்திரசேனன், விசித்திரன் முதலானவர்கள் அப்பொழுது அரசர்களாவார்கள். பதினாலா மனுவந்தரத்திற்கு அதிபதி, பௌமனென்பவனாவான். அக்காலத்தில் சுசியென்பவன் இந்திரனா யிருப்பான். சாக்ஷுஷர், பவித்திரர், கனிஷ்டர், பிராசிதர், வாசாவிருத்தர் என்ற தேவகணங்கள் ஐந்துண்டு. அக்கினிபாகு, சுசி, சுக்கிரன், மாகதன், ஆக்கினீத்திரன், யுத்தன், ததாஜிதன் என்பவர்களே சப்தரிஷிகளாவர். அம்மனுவுக்கு உரு, கம்பீரபுத்தி முதலான குமாரர்கள் உண்டு. அவர்கள்தாம் பூமியைக்காத்து வருவார்கள்.

கிருதயுக முதலான நான்கு யுகங்களின் முடிவில் வேதங்களுக்கு அழிவு உண்டாகுமன்றோ. அப்போது அந்தச் சப்தரிஷிகள் சொர்க்கத்தினின்றும் பூமிக்குவந்து அவ் வேதங்களை மறுபடியும் வழங்கும்படிச் செய்வார்கள். கிருத யுகந்தோறும் அவ்வம்மனுக்கள் ஸ்மிருதி என்கிற தருமசாஸ்திரத்தைச் செய்து வருவார்கள். தேவதைகளோ மனுவந்தர முடியுமளவும் யாகங்களில் ஹவிர்ப் பாகங்களைப் புசித்து வருவார்கள். மனுபுத்திரர்களினாலும் அவர் குலத்திற் பிறக்குமரசராலும் மனுவந்தரத்தின் கடைசிவரையிலும் பூமியானது ரட்சிக்கப்பட்டு வரும். இப்படி மனுவந்தரந்தோறும் அவராலே லோகோபகாரம் நடந்துவருமென்றறியவும்.

மனுவும் சப்தரிஷிகளும் தேவதைகளும் இந்திரனும் மனுபுத்திரர்களும் எம்பெருமானுடைய சங்கற்ப காரியத்தை நிறைவேற்றும்படியான அதிகாரி புருஷர்களென்று நினையும். இவ்விதமாய்ப் பதினான்கு மனுவந்தரங்கள் கழியும்போது ஆயிரம் யுகங்களின் அளவுள்ளதான ஒரு கற்பகாலம் சம்பூர்ணமாகின்றது. இஃது ஒரு பகற்காலம். இவ்வளவுள்ள இராக்காலமும் கழிந்த பின்பு பிரமசொரூபத்தை அதிஷ்டித்து எழுந்தருளியிருப்பவனும் முதல் சிருஷ்டி கர்த்தாவும், சகல ஐசுவரியமுள்ளவனும், சகல சொரூபியுமான ஸ்ரீஜனார்த்தனன் திரிலோகங்களையும் உட்கொண்டு, யோகநித்திரையை விரும்பி உலகமெல்லாமழிந்த மகார்ணவ ஜலத்திலே ஆதிசேஷனாகிய படுக்கையிலே திருக்கண்வளர்ந்தருளுவன். பின்பு பகவான் யோக நித்திரையினின்றும் விழித்தவனாகி இரஜோகுணத்தை யாசிரயித்து முன்போலவே லோக சிருஷ்டியை நடத்துவன். மனுவந்தரந்தோறுமுள்ள மனு தேவ இந்திர சப்தரிஷி மனுபுத்திரர்களெல்லாம் ஸ்திதியைச் செய்யத்தக்க ஸ்ரீவிஷ்ணுவின் சாத்துவிக அம்சமாவார்கள். உலகங்களை நிலைபெறுத்துந் தொழிலுள்ள ஸ்ரீவிஷ்ணு சகல பிராணிகளுக்கும் இதமுண்டாகும்படியாகக் கிருதயுகத்திலே கபிலாதி சொரூபங்களைத் தரித்தவனாய் உத்தமமான ஞானத்தைப் பிரசாதித்தருளுகின்றான். திரேதாயுகத்

தில் அந்தச் சக்கிரவர்த்தி சொரூபம் உடையவனாகி துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்களைச் செய்து வருகின்றான். துவாபரத்திலே வேதவியாச ஸ்வரூபனாகி ஒன்றாயிருக்கும் வேதத்தை இருக்கு முதலான நான்கு முக்கியமான பிரிவுகளாகவும் சாகாபேதங்களாலே அநேகம் பிரிவுகளாலும் பிரித்து லோகத்தை யனுக்கிரகிக்கின்றான். கலியிலேயோ கற்கியவதாரஞ் செய்தருளி வேதசாஸ்திரங்களையும் தருமங்களையுங் கடந்து நடக்கிற துஷ்டர்களை வழியிலே நிறுத்துகின்றான். இவ்வாறு எம்பெருமான் அந்தந்த ரூபத்தினாலே உலகங்களைச் சிருட்டித்துங் காத்துஞ் சங்கரித்தும் வருகின்றான். ஆதலால் சர்வபூத சொரூபியான இவ் வெம்பெருமானைக் காட்டிலும் ஒரு வஸ்துவு மில்லையென்கிற வுண்மையை இந்தப் பிரகரணத்திலும் பின்பு நேர்ந்த பிரகரணங்களிலும் உமக்கு நன்றாய்த் தெரியச் சொன்னேன். நீர் கேட்டபடி மனுவந்தரங்களையும் அவற்றின் அதிகாரிகளையும் தெரிவித்தேன். ஓ மயித்திரேயரே! இனித் தெரிந்துகொள்ள வேண்டுவதைக் கேட்பீராகவென்று பராசர முனீந்திரர் திருவாய்மலர்ந்து அருளினார்.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்றாம் அத்தியாயம்

# வேதவியாசர்களின் விவரம்

"தேவரீர் அருளிச்செயலாலே சகமும் ஸ்ரீவிஷ்ணுவினிடத்தி லுண்டாகி அவனிடத்திலேயே நிலைபெற்று லயித்து அவருக்குச் சொரூபமா யிருக்கின்ற தென்பதை யறிந்துகொண்டேன். அந்த மகாத்துமாவான எம்பெருமான் யுகந்தோறும் வியாசரூபியாகி வேதங்களைப் பிரித்தருளுகிறானென்று அருளிச்செய்தீர். எந்த எந்த யுகத்தில் யார் யார் வியாசரானாரோ அவர்களையும், வேதத்தின் சாகா விசேஷங்களையும் அடியேனுக்குச் சொல்லி யருளவேண்டும்" என்று மயித்திரேயர்

விண்ணப்பஞ் செய்ய ஸ்ரீ பராசரர் அருளிச் செய்யலானார்:—

கேளும் மயித்திரேயரே! வேதமென்கிற மகா விருக்ஷத்திற்குக் கிளைகள் அநேகங்களுண்டு. அளவற்ற அவற்றை விரித்துச் சொல்வது கடினம்; ஆகையாலே சுருக்கமே சொல்லுகிறேன் கேளும். எம்பெருமான் துவாபர யுகந்தோறும் வியாசாவதாரஞ் செய்தருளி ஜனங்களுக்கு உற்சாகம், சாமர்த்தியம், ஓதித்தரிக்குஞ் சக்தி இவையெல்லாம் அற்பமா யிருப்பதைக் கண்டு அவர்களுக்கு இதத்திற்காக ஒன்று யிருக்கின்ற வேதத்தை அநேகம் பிரிவாக்கி யருளுகின்றான். அவ்வெம்பெருமான் எந்தச் சரீரத்தை அதிஷ்டித்து வேதபேதங்களைச் செய்தருளுகிறானோ அவையெல்லாம் வேதவியாசர் என்கிற திருநாமமுள்ள அவ்வெம்பெருமானுடைய திருமேனிகளென்று நினையும். இந்த மனுவந்தரத்தில் யார் யார் வேதவியாசரானார்களோ அவர்களைச் சொல்லுகிறேன்.

இந்த வைவச்சுத மனுவந்தரத்திலே துவாபரந்தோறும் மகரிஷிகளாலே இருபத்தெட்டுத் தரம் வேதம் பிரிக்கப்பட்டது. ஆதலால் இதுவரையிலும் இருபத்தெட்டு வியாசர்கள் சென்றிருக்கிறார்கள். முதல் துவாபரத்தில் பிரமா தானே வேதவியாசராயினார். இரண்டாவதில் வைவச்சுதமனு வியாசரானார். மூன்றாவதில் சுக்கிரன், நான்காவதில் பிரகஸ்பதி, ஐந்தாவதில், சூரியன், ஆறாவதில் இயமன், ஏழாவதில் தேவேந்திரன், எட்டாவதில் வசிட்டர், ஒன்பதாவதில் சாரசுவதர், பத்தாவதில் திரிதாமர், பதினோராவதில் திரிவிருஷா, பன்னிரண்டாவதில் பரத்துவாச மகா முனிவர், பதின்மூன்றாவதில் அந்தரிக்ஷர், பதினாங்காவதில் தருமி, பதினைந்தாவதில் திரையாருணி, பதினாறாவதில் தனஞ்செயன், பதினேழாவதில் உருகிதஞ்சயன், பதினெட்டாவதில் சஞ்சயன் என்பவனும் வேதவியாசரானார்கள். பின்புள்ள துவாபரங்களில் முறையே பரத்துவாஜர், கௌதமர், ஹரியாத்துமாவென்று வேறு புராணங்களிற் சொல்லப்பட்ட உத்தமரென்பவர் வாஜிசிரவன் என்று மறுபேருள்ள வேனன், திருணபிந்து என்று நாமாந்

தரம் பெற்ற சோமசுஷ்மாயணன், வால்மீகியென்னுந் திருநாமத்தால் பிரசித்தரான பார்க்கவரிக்ஷர், இவர்கள் வேதவியாச ராயினர்கள். இப்படி இருபத்துநான்கு துவாபரங்கள் கழிந்தபின்பு இருபத்தைந்தாவது துவா பரத்திலே என் பிதாவான சத்திமகரிஷியும், இருபத் தாறுவதில் நானும், இருபத்தேழாவதில் ஜாதுகர்ண னென்பவரும் வேதவியாசர்களாயினோம். பின்பு இரு பத்தெட்டாவதான இந்தத் துவாபரத்திலே என்குமார னை கிருஷ்ணத்துவைபாயனன் வேதவிபாகஞ் செய் தான். இப்படி இருபத்தெட்டு மகரிஷிகள் துவாபரயுக முடிவானகாலங்களில் வேதத்தை நான்காய்ப் பிரித்து லோகோபகாரஞ் செய்துவந்தார்கள். இனிவருந் துவா பரயுகத்தின் கடைசியில் துரோணகுமாரனை அசுவத் தாமா வியாசராவார்.

ஏகாக்ஷர ஸ்வரூபமாய் நாசவிகாரங்களை யடை யாமலிருந்த பிரணவமானது உச்சரிக்கப்படுமளவில் தான் விரிவதனாலும் வேதத்தை விரிப்பதனாலும் பிரமம் என்று சொல்லப்படும். எப்படியென்றால் அந்தப் பிரணவத்தினிடத்தே நித்தியமாயிருக்கிற முதல் மூன்று வியாகிருதிகளும் இருக்கு முதலான நான்குவேதங்களும் சொல்லப்படுகின்றன. ஆதலால் அப்படிப்பட்ட மகிமை யுள்ள பிரணவசொரூபமான சத்சப் பிரமத்தின்பொருட் டுத் தண்டம் சமர்ப்பிக்கின்றேன். உலகத்தின் பிரளயத் திற்கும் உற்பத்திக்கும் எது காரணமா யிருக்கின்றதோ எது மகத் தத்துவத்திற்கும் மேன்மையானதாய் மறைக் கப்படும் பொருளா யிருக்கிறதோ அப்படிப்பட்டபிரணவ பிரம்மத்திற்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றேன். அகாத மாயும் அபாரமாயும் அழிவில்லாததாயும் உலகத்தை மோகிப்பிக்கின்ற தமோகுணத்திற்கு இடமாயும் சத்துவ குண காரியமான பிரகாசத்தினாலும் ரஜோகுண காரிய மான பிரவர்த்தனத்தாலும் தருமமுதலான சகல புரு ஷார்த்த சாதகமாயும் சாங்கிய சாஸ்திர ஞான முடைய வர்களுக்குப் பிரகிருதி புருஷவிவேகத்தி னுபாயமாத லாலே நிலை பெறுமிடமாயும் சம தமாதி குணங்களைச் சாதிக்கவல்ல யோகிகளுக்கு அவற்றைச் சாதிக்குமுபாய மாயும் விளங்குகிற அந்தச் சத்தப் பிரமத்துக்குத் தண்

டம் சமர்ப்பிக்கிறேன். எஃது அவியத்தமாயும் அமிருத மாயும் சாசுவதமாயுமிருக்கிற பிரவர்த்தி பிரமமுண்டோ *அதற்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். சர்வ பிரபஞ்ச காரணமான பிரதானமாயும், பரமாத்தும ஸ்வரூபாதி களைக் காட்டுகையினுலே பரமாத்துமாவுக்குக் காரணமா யும், உபநிஷத்துக்களில் அக்ஷரமுதலாய்ப் பிரதான மீருகவுள்ள சொற்களாலே வெகுவிதமாய்ச் சொல்லப் படுவதாயும், பிரிவற்றதாயும், சுத்தமாயுமிருக்கிற அந்தப் பிரணவப் பிரமத்துக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றேன். பரமாத்துமாவான ஸ்ரீவாசுதேவனுக்கு ஸ்வரூபமா யிருக்கின்ற அந்தப் பிரணவரூபமான பரப்பிரமத்துக்கு நித்தியம் பலமுறைத் தண்டம் சமர்ப்பிக்கின்றேன். அவயவமான அக்ஷரவகையாலே மூன்ருய்ப் பிரிந் திருந்தாலும் அவய விஸ்வரூபத்தில் பிரிவற்றதா யிருக்கின்ற அந்தப் பிரணவமானது அந்த ஸ்ரீவாசு தேவனேயாம். அந்த ஸ்ரீவாசுதேவன் சகல பூதங்களி லும் ஒருவனு யெழுந்தருளியிருந்தாலும் பேதபுத்தி விஷயங்களான பிரம ருத்திர இந்திராதி மூர்த்திகளை யதிஷ்டித் திருக்கையாலே வெவ்வேருக எண்ணப்படு கின்ருன். அவனே இருக்குவேத சொரூபியும் யசுர்வேத சொரூபியும் சாமவேத சொரூபியுமாய் இம்மூன்று வேத சாரமான பிரணவஸ்வரூபியாயும் புருஷார்த்தஸ்வரூபி யாயு மிருக்கின்ருன். அவனே சகல ஆத்துமாக்களுக் கும் அந்தராத்துமாவா யிருக்கின்ருன். அவனே பிரி வற்ற வேதரூபமாயிருந்து பலவிதமான வேதங்களாகப் பேதிக்கப்படுகின்ருன். அந்த அனந்தனுன ஸ்ரீபக வானே வேதசாகைகளைப் பிரிக்கிற வியாசாதி ஸ்வரூபி யாகின்ருன். சகல வேதசாகைகளின் ஞானமும் அந்த ஸ்ரீ அனந்தனே என்றறியும்.

மூன்ரும் அத்தியாயம் முற்றிற்று.

---

* புருஷார்த்தப் பிரவர்த்தி ஹேதுவான பிரணவம்.

## நான்காம் அத்தியாயம்

# வேதசாகா பேதங்கள்



ஓ மயித்திரேயரே! ஆதியிலே பிரமாவினாலே அத்தியயனம் பண்ணப்பட்ட வேதமானது நான்கு பாதங்களுள்ளதாய் அனேகவாயிரங் கிளைகளை யுடையதாயுமிருந்தது. அதினின்றும் அக்கினி ஹோத்திரம், தரிச பூர்ணமாஸம், சாதுர்மாசியம், பசுபந்தம், சோமம் என்கிற ஐந்தும், தேவயக்கியம், பிதுர்யக்கியம், பூதயக்கியம் மனுஷ்யயக்கியம், பிரமயக்கியம் என்கிற பஞ்சமகா யக்கியங்களும், ஆகப் பத்துவிதமான சகல யக்கியங்களும், திரவியம், தேசம், பலம், காலம், ஞானம், கர்மம், காரகம், சிரத்தை, அவஸ்தை, ஆகிருதி, நிஷ்டை என்கிற அங்கங்களுடையனவாய் உண்டாயின. இவ் யாகங்களெல்லாம் சர்வாபீஷ்டங்களையும் கொடுக்குந் திறமுள்ளனவா யிருக்கும்.

பின்பு இருபத்தெட்டாவது யுகத்திலே என் புத்திரரான வியாசர் மகா சமர்த்தராகையாலே நான்கு பாதங்களோடு கூடியிருக்கும் ஒப்பற்ற ஒரு வேதத்தை நான்காகப் பிரித்தார். இவர் இப்போது எப்படிப் பிரித்தாரோ அப்படியே முன் யுகங்களிலும் நானும் மற்றுமுள்ள மகரிஷிகளும் பிரித்தோம். இதோ நிதர்சனமாக இந்த வியாசர் பிரித்ததுபோலவே ஸ்ரீமந் நாராயணாம்சம் பெற்று மற்ற வியாசர்களும் அப்போதப்போது வேதத்தைப் பிரித்தருளினார்க ளென்றறியும். ஓ மயித்திரேயரே! இந்தப் பூலோகத்தில் ஸ்ரீ வாசுதேவன் தவிர மற்றொருவன் மகாபாரதஞ் செய்ய வல்லவனாகான். ஆகையால் கிருஷ்ணத்துவைபாய னென்னும் பெயருடைய இந்த வியாசரை ஸ்ரீமந் நாராயணாம்ச மென்றறியும். இந்தத் துவாபரத்தில் என் குமாரனான வியாசர் வேதங்களைப் பிரித்துப் பிரவர்த்திப்பித்த விதஞ் சொல்கின்றேன், கேட்பீராக:—

வியாஸ மகாமுனிவர் வேதங்களைப் பிரிக்கும்படி சதுர்முகராலே நியமிக்கப்பட்டுத் தாம் பிரித்த வேத சாகைகளை அத்தியயன பரம்பரையினாலே பிரவர்த்திப்

பிக்க வல்லவர்களான சிஷ்யர்களை ஆராய்ந்து தேடி இருக்கு வேதத்திற்குப் பைலமகாமுனியையும், யசுர் வேதத்துக்கு வைசம்பாயன மகாமுனிவரையும், சாம வேதத்துக்கு ஜைமினி முனீந்திரரையும், அதர்வண வேதத்துக்குச் சுமந்து முனிவரையும், இதிகாசபுராணங்களுக்கு மகாபுத்திசாலியான உரோமஹர்ஷண ரென்கிற சூதரையும் பரிக்கிரகித்தருளினார். அத்துவர்யு, உக்காதா ஹோதா, பிரமா என்னப்பட்ட [சாதுர் ஹோத்திரம்] நால்வகையான இரித்துவிக்குகளின் காரியமுள்ளதாகையாலே யாக ஹேதுவா யிருந்த வேதமொன்றையே நான்காகப் பிரித்து அவைகளினாலே யக்கியங்களை நடத்தியருளினார். யசுர் வேதங்களினாலே அத்துவாயு காரியத்தையும், இருக்குவேதங்களினாலே ஹோதாவின் காரியத்தையும், சாமவேதங்களினாலே உத்காதாவின் காரியத்தையும், இந்த மூன்று வேதங்களினாலேயும் ராஜாக்களுக்கு வேண்டிய சாந்திக பௌஷ்டிகாதிகளையுடைய அதர்வண வேதத்தினாலேயும் பிரமாவின் காரியத்தையும் ஏற்படுத்தினார். வேதங்களைப் பிரித்தவித மெப்படியெனில், அகண்டமான வேதத்திலிருந்து இருக்குகளை யெல்லாம் பிரித்தெடுத்து ஒன்றாக்கி இருக்குவேத மென்றும், யசுசுகளைப் பிரித்தெடுத்துக் கூட்டி யசுர்வேதமென்றும், சாமங்களைப் பிரித்தெடுத்துச் சேர்த்துச் சாமவேதமென்றும் மூன்று வேதங்களைச் செய்து, முக்கியமாய் அரசர்களுக்கு வேண்டிய காரியங்களையும் புரோகித கிருத்தியத்தையும் நிறைவேற்றும் பொருட்டு அதர்வபாகங்களை யெல்லாஞ் சேர்த்தெடுத்து அதர்வண வேதத்தையுஞ் செய்தருளினார். இவ்வகையாக முன்பு ஒன்றாயிருந்த வேத விருக்ஷமானது நான்காகப் பிரித்து, பின்பு பெருங்காடாயிற்று. பைலமகாரிஷி, இருக்குவேதத்தை இரண்டு சம்ஹிதைகளாக்கி இந்திரப்பிரமிதி யென்பவருக்கு ஒன்றையும் பாஷ்களர் என்பவருக்கு மற்றொன்றையும் பிரசாதித்தார். அந்த மகாமதியான பாஷ்களமுனிவர் தாம் பெற்ற சம்ஹிதையை நான்காக்கிப் போத்தியர் முதலான நால்வருக்குப் பிரசாதித்தார். அந்தப் போத்தியரும் அக்கினிமாடகரும்

யாக்கிய வல்கியரும் பாராசரரென்று என் பெயர் கொண்ட மற்றொருவரும் இருக்குவேத சாகையின் பிரிவான சாகைகளைக் கிரகித்து நடத்தி வந்தார்கள். அந்த இந்திரப்பிரமிதி யென்கிற முனிவர் தாம் ஓதின இருக்குவேத சம்ஹிதையைத் தங்குமாரரான மாண்டூகேய ரென்பவருக்குப் பிரசாதித்தார். அந்தச் சம்ஹிதையானது புத்திரரும் சிஷ்யரும் ஆகிய முறையினாலே சிஷ்யப் பிரசிஷ்ய பரம்பரையிலே வந்து கொண்டிருந்தது. இப்படி யிருக்கையில் வேதமித்திர னென்கிற சாகல்யர் தாம் ஓதின இந்திரபிரமிதி சாகையை ஐந்தாகச்செய்து முத்கலன், கோமுகன், வாச்சியன், சாலீயன், சைசிரன் என்னும் தம்முடைய மாணாக்க ரைவருக்குக் கொடுத்தார். அந்தச் சாகலியருடைய சப்பிரமசாரியான சாகபூர்ண ரென்பவர் இந்திரபிரமிதி சங்கிதையை மூன்றாய்ச் செய்து நிருத்தமென்கிற வேதாங்கமொன்றுஞ் செய்து ஆக நான்கையும் தஞ்சீஷரான கிரவுஞ்சன், வைதாளிகன், பலாகன், நிருத்தன் என்னும் நால்வருக்கும் முறையே கொடுத்தார். முன் சொல்லப்பட்ட சாகலியருடைய சப்பிரமசாரியான பாஷ்கலி யென்பவர் அந்த இந்திரபிரமிதிசாகையை மூன்று சாகைகளாக்கி காலாயனி, கார்க்கினியர், ஜபர் என்கிற சிஷியர் மூவருக்குக் கொடுத்தார். இப்படியாக ருக்குவேதத்தில் சாகைகள் பிரதிசாகைகள் அனுசாகைகள் அநேக முண்டாயின. மயித்திரேயரே! நான் ருக்குவேத சாகா கர்த்தாக்களான பஹ்ருசரை உமக்குத் தெரிவித்தேன்.

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஐந்தாம் அத்தியாயம்

# யசுர்வேத சாகைகள்

பராசரர் அருளிச்செய்கின்றார்:—மயித்திரேயரே! யசுர்வேத விருக்ஷத்துக்குப் பிரதானமான இருபத்தேழு சாகைகளை வைசம்பாயன மகாமுனிவர் செய்து தம்

சிஷ்யர் அநேகருக்குக் கொடுத்தார். அவர்களும் கிரமப் படி ஓதி வந்தார்கள். அந்த வைசம்பாயன மகாமுனிக்கும் பிரமராதருடைய குமாரரான யாக்கியவல்கியர் என்கிறவர் சிஷ்யராயிருந்தார். அவர் முக்கியமான தருமங்களை யெல்லாம் அறிந்தவராய் எப்போதும் குருவுக்குப் பணிவிடை செய்துகொண்டு வந்தார். முன் பொருகால் மகாமேருவிலே இருடிகளெல்லாரும் கூடித் தம்முடைய சபைக்கு எந்த ரிஷி இன்று வாராமற் போவரோ அவருக்கு எழு தினங்களுக்குள்ளாக பிரமஹத்தி தோஷம் வரக்கடவதென்று ஒருசாப முண்டாக்கி யிருந்தார்கள். அந்த ஏற்பாட்டைக் கடந்திருந்த இந்த வைசம்பாயன மகாமுனி ஒருநாள் தம்முடன் பிறந்தாள் புத்திரனை பாலகனொருவனைக் காலினாலே தீண்ட, உடனே அப்பாலகன் மரணமடைந்தான். அதனாலே அவருக்குப் பிரமஹத்தி தோஷம் சம்பவித்தது. அப்போது வைசம்பாயனர் தஞ் சீடர்களை நோக்கி "ஓ சீடர்களே! எனக்காக நீங்கள் பிரமஹத்தி நீங்கும்படியான விரதத்தைச் செய்யுங்கள், வேறொன்றும் நினையாதேயுங்கள்" என்று நியமித்தார். அப்போது யாக்கியவல்கியர் குருவைநோக்கி "ஆசாரியரே! அற்பதேஜசு உள்ளவர்களான இவர்களை ஏன் வருத்தவேண்டும். அடியேன் ஒருவனே அந்த விரதத்தைச் செய்கிறேன்" என்றுசொல்ல, குருவானவர் கோபமடைந்து யாக்கிய வல்கியரைப்பார்த்து, "நீ பிராமணரை அவமானம்பண்ணினாய்; இப்படிப்பட்ட நீஎனக்குச் சிஷ்யனாயிருக்கத்தகாது; ஆகையால் என்னிடத்தில் ஓதின வேதங்களை விட்டுவிடு; உத்தமமான பிராமணர்களை நீதேஜசு இல்லாதவர்கள் என்று சொன்னாய்; இப்படிப்பட்ட சிஷ்யன் எனக்கிருந்தாவதென்ன? அன்றியும் என் ஆக்கினையையும் பங்கப்படுத்தினாய், ஆதலால் வேதங்களை விட்டுவிடு" என்று உறுத்திச் சொல்லக் கேட்டு, அவ் யாக்கியவல்கியரும் "ஓ ஆசாரியரே! தேவரீரிடத்தில் பக்தியினாலே இப்படிச்சொன்னேனேயல்லது வேறில்லை; அப்படியிருக்கக் கோபித்துக்கொள்கிற உம்மாலேயும் எனக்கு ஆகவேண்டுவதில்லை. உம்மிடத்தில் ஓதினவேதமும் எனக்கு வேண்டாம்" என்று

சொல்லி, உதிரத்தினுல் பூசப்பட்டு, உருவமுள்ளவைக ளாய்க் காணப்பட்ட யசுர்வேதங்களைக் கக்கிப்போட்டு, "இதோ உமது வேதத்தை உமக்குக் கொடுத்தேன்" என்று சொல்லிவிட்டுத் தம்முடைய மனதின்படி போய் விட்டார். பின்பு யாக்கியவல்கியர் கக்கிப்போட்ட வேதங் களை மற்றுமுள்ள பிராமணர், நேராக இக் கக்கலை யுண் பது தகுதியன்றென்று நினைத்துத் தித்திரியென்கிற பக்ஷிகளாகி யுண்டார்கள். ஆதலால் அவர்களுக்குத் தைத்திரீயர் என்று பெயர் வந்தது. அந்த யசுர்களுக் குத்தான் தைத்திரீய சாகையென்று பெயர். அந்த வைசம்பாயன சிஷ்யர்களெல்லாம் குருவினுலே கட் டளையிடப்பட்டபடி பிரமஹத்தி தீரும்படியான விர தத்தை யாசரித்து அத்துவர்யுகாரியஞ் செய்துவந்தார் கள். அதனுல் அவர்களுக்குச் சரணுத்துவர்யுக்கள் என்ற பெயர் வழங்கிற்று.

அந்த யாக்கியவல்கியரோ சூரிய பகவானிடத்தில் யசுசுகளைக் கிரகிக்கவேண்டிய பிராணுயாம பராயண ராய்ச் சூரியபகவானை நமஸ்கரித்துத் துதிக்கலாயினுர். மோக்ஷத்திற்கு வழியாயும், அளவற்ற தேஜசு உள்ளவ ராயும், இருக்கு யசுசு சாமங்களின் ரூபமாயும், இந்த வேதமயமான பிரகாசமுள்ளவராயும் இருக்கிற சூரிய பகவானுக்கு நமஸ்கரிக்கிறேன். வெயிலுக்கும் மழைக் கும் ஏதுவாகையாலே அக்கினி சோமரூபியாயும், ஆத லால் உலகத்துக்குக் காரணமாயும், வெளிச்சத்தைச் செய்பவராயும், அமிருதஹேதுவான காந்தியைப் பரிக் கிறவராயு மிருக்கிறவருக்குத் தண்ட மிடுகிறேன். கலை காஷ்டை நிமிஷம் முதலான காலங்களை யறிவிக்கும் சொரூப முடையவராயும், தியானிக்கத் தக்கவராயும், பிரணவரூபியாயும், பிரபஞ்சரூபியாயு மிருக்கிறவருக்கு வந்தனஞ் செய்கிறேன். தன் கிரணங்களினுலே சந்திர னைப் போஷித்துத் தேவதைகளையும், ஸ்வதாமிர்தத்தி னுலே பிதுர்க்களையும் ரக்ஷித்துவருகிற திர்ப்திரூப மானவர்க்கு நமஸ்காரஞ் செய்கின்றேன். பனி வெப் பம் மழை இவைகளை யுண்டாக்குகின்றவராயும், ஹரிக் கிறவராயும், மூன்றுகாலங்களின் ஸ்வரூபியாயு மிருக்

கிற சூரியபகவானுக்கு தண்டம் சமர்ப்பிக்கின்றேன். இவ்வுலகத்தின் இருளைப்போக்கி ஜகத்துக்கெல்லாம் அதிபதியாயும், சத்துவகுண சரீரமுள்ளவராயுமிருக்கிற ஆதித்தபகவானுக்கு நமஸ்காரங்கள் செய்கிறேன். எந்தத் தேவன் உதயமாகாமற்போனால் ஜனங்கள் சத்கருமங்கள் செய்ய யோக்கியராகமாட்டார்களோ தண்ணீரும் சுத்தி ஹேதுவாகமாட்டாதோ அப்படிப்பட்ட சூரியதேவனைத் தொழுகின்றேன். எந்தத் தேவனுடைய கிரணங்களினாலே பரிசிக்கப்பட்டு மனிதன் சத்காரியங்களுக்கு யோக்கியனாகின்றானோ அப்படிப்பட்ட சுத்திகாரணமான தேவனைத் தொழுகின்றேன். பிரேரகனாயும், உற்பத்தி செய்பவனாயும், அந்தகாரத்தைப் போக்குகிறவனாயு மிருக்கிற தேவனுக்கு வந்தனம். தேவர்களுக்கெல்லாம் ஆதியாயிருக்கிற ஆதித்த பகவானுக்கு அனேகந் தரம் வந்தனஞ் செய்கின்றேன். எந்தத் தேவனுடைய இரதமானது இகழும் இரமணீயமுமான தேஜோமயமா யிருக்கின்றதோ, குதிரைகள் ஞானரூபங்களாயும் அமிர்தங்களாயு மிருந்து அந்த ரதத்தை வகிக்கின்றனவோ, உலகங்களுக்கெல்லாம் பிரகாசமான கண்ணாயிருக்கிற அந்தப் பகவானைப் பணிந்து தொழுகின்றேன்" என்றிப்படி ஸ்தோத்திரஞ் செய்யவே அந்தச் சூரியபகவான் குதிரைவடிவாக அவருக்குப் பிரத்தியக்ஷமாகி வந்து, "ஓ முனிவரே! உமக்கு வேண்டும் வரத்தைக் கேளும்" என்று கட்டளையிட்டார். யாக்கியவல்கிய முனிவரும் அந்தச் சூரியனைத் தொழுது, "சுவாமி! என் குருவான வைசம்பாயன மகாமுனிக்குத் தெரியாத யஜுர் வேதங்களை எனக்குப் பிரசாதித்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அவ் வாதித்தியதேவன், அம்முனிவர் பிரார்த்தித்தபடி, வியாசோபதேச மில்லாமையாலே, வைசம்பாயனர்க்குத் தெரியாதவைகளான அயாத யாமங்கள் என்கிற யஜுசுகளைப் பிரசாதித்தான். அந்தச் சாகைகளை அத்தியயனஞ் செய்தவர்களுக்கு வாஜிகள் அல்லது வாஜசனேயர் என்று பெயர் வழங்கும். சூரியன் [வாஜி] குதிரை வடிவத்தோடு யசுர் வேதங்களை யுபதேசித்தானாதலாலென் றறியும் வாஜசனேய சங்கிதையை யாக்*

கியவல்கிய மகாமுனி, காண்வசாகை முதலான பதி னைந்து சாகைகளாகப் பிரித்தார். இவ்வாறுதான் யசுர் வேதத்தின் பிரிவுகள் ஏற்பட்டன வென்றறியவும்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆறாம் அத்தியாயம்

# சாமவேத அதர்வணவேத புராணங்களின் வரலாறு

ஸ்ரீபராசரர் அருளிச்செய்கிறார்:—மயித்திரேயரே! சாமவேத விருக்ஷத்தின் சாகாபேதங்களைக் கேளும். வியாச சிஷ்யரான ஜைமினியானவர் தம்முடைய குமார ரான சுமந்து வென்பவருக்கு ஒரு சங்கிதையை யுபதே சிக்க, அவரும் தம்முடைய புத்திரனை சுத்துவாவென் பவருக்கு உபதேசித்தார். பின்பு அந்தச் சுத்துவாவின் குமாரனை சுகர்மா வென்பவர் தம் பிதாவினிடத்திலே தாமோதின அந்தச் சைமினி சங்கிதையை ஆயிரம் பிரி வாகப் பிரித்துத் தஞ் சிஷ்யர்களான ஹிரண்ய நாப ரென்பவருக்கும் பௌஷ்பிஞ்சி யென்பவருக்கும்கொடுத் தார். கௌசல்யரென்னும் பெயர் பெற்ற அந்த இரணிய நாபருக்கு வடதிசையார் ஐந்நூறுபேர் சாமசாகையோது கிற சீடரானார்கள். அவர்கள் ஐந்நூறு சாகைகளை யோதிக்கொண்டு ஒரு காலத்தில் கீழ்த்திசையி லிருந்தத னால் கீழ்த்திசைச் சாமகர் என்றுஞ் சொல்லப்பட்டார் கள். அவரஷ்பிஞ்சி யென்பவருக்கும் லோகாக்ஷி, கவு முதி, கக்ஷிவான், இலாங்கலி முதலான அநேகர் சிஷ் யரா யிருந்தார்கள். அவர்கள் தாங்களோதின சங்கிதை களைப் பலவாக விரித்தார்கள். முன் சொன்ன இரணிய நாபருடைய சிஷர்களில் ஒருவரான கிருதநாமா வென் பவர் இருபத்துநான்கு சங்கிதைகளைத் தம்மாணாக்கருக்கு ஓதுவித்தார். அவர்களும் இந்தச் சாமவேதத்தை மிக வும் விரித்தார்கள். இப்படியாகச் சாமசாகைகளின் பிரி வுகள் உண்டாயின.

இனி அதர்வணவேதத்தின் விரிவைச் சொல்லுகின்றேன். வேதவியாச மகாமுனிவரிடத்திலே அதர்வண வேதமோதின சுமந்துவென்னு முனிவர் அவ்வதர்வண வேதத்தைத் தம்முடைய சீடரான கபந்த ரென்பவருக்குக் கொடுத்தார். அந்தக் கபந்தமுனியும் அவ்வேதத்தை இரண்டு பிரிவாக்கி தேவதரிசர், பத்தியர் என்கிற சீடருக்குக் கொடுத்தார். அந்தத் தேவதரிசருக்கு மேதன், பிரமபலி, சவுல்காயனி, பிப்பலாதன் என்று நால்வர் மாணுக்கரிருந்தார்கள். அவர்கள் தேவதரிசர் செய்த நான்கு சங்கிதைகளையு முறையே யோதினுர்கள். பத்தியருக்கும் ஜாபாலி, குமுதாதி, சவுனகர் என்று மூவர் மாணுக்கரிருந்தார்கள். அவர்கள் தமது குரு பிரித்த மூன்று சங்கிதைகளையும் அநேக சங்கிதைகளாகச் செய்தார்கள். அந்தச் சவுனகரென்பவர் தம்முடைய சங்கிதையை இரண்டாக்கி, பப்புரு வென்பவருக்கு ஒன்றும், சைந்தவ ரென்பவருக்கு மற்ருென்றுமாகக் கொடுத்தார். சைந்தவருடைய சிஷ்யரான முஞ்சிகேச ரென்பவர் தாம் பெற்ற சங்கிதையை இரண்டாகப் பிரித்தார். அந்தச் சங்கிதைகளிலே முக்கியமான பாகங்கள் ஐந்து. அவையாவன நக்ஷத்திர கற்பம், வேத கற்பம், சங்கிதா கற்பம், ஆங்கிரச கற்பம், சாந்தி கற்பம் என்பவைகளாம். நக்ஷத்திர கற்பமாவது நக்ஷத்திராதிகளுடைய சொரூபகுணுதிகளை விவரிப்பது. வேத கற்பமாவது பிரமத்துவ முதலான புரோகித காரியங்களைத் தெரிவிப்பது. சங்கிதா கற்பமாவது மந்திரங்களின் ஏற்பாட்டை யுணர்த்துவது. ஆங்கிரச கற்பமாவது ஸ்தம்பன மோஹன மாரணுதிகளான அபிசாரங்களைக் காட்டுவது. சாந்தி கற்பமாவது யானை குதிரை முதலானவைகளைப் பற்றிய பதினெட்டுச் சாந்திகளை விதிப்பது. அதர்வண வேதத்திலே இவைதாம் சிரேஷ்டமானவைகள் இவ்வாறு நான்கு வேதங்களின் விகற்பங்களை யெல்லாம் அறிவித்தேன்.

இனிப் புராணவரலாறு கேளும்: புராண மென்பது சாஸ்திரங்களுக் கெல்லாம் முதன்மையானது. அது கிருதயுகத்தில் பிரமாவினுல் நூறுகோடி கிரந்த

விஸ்தாரமாய்ச் செய்யப்பட்டுப் பிராம்மம் என்கிற பெய ருடையதாய் ஒன்றேயா யிருந்தது. பின்பு திரேதா யுகத்திலே அதை இருடிகள் நூற்றுப் பதினெட்டுச் சங் கிதைகளோடு கூடின பதினெட்டுப் பிரிவுள்ளதாய்க் கோடி கிரந்த விஸ்தாரமாய்ச் செய்தார்கள். பிற்பாடு வேதவியாசர் துவாபர யுகத்தின் கடைசியிலே அந்தப் புராணங்களின் சாரங்களை யெடுத்து நான்கு லக்ஷங் கிரந்த விஸ்தாரமுள்ளதாய்ப் பாரதாதி வியாக்கியானங் களும் இரு புதிதாக சரித்திராதி உபாக்கியானங்களும், பிருதிவீகீதை பிதுருகீதை முதலான காதைகளும், வராககற்ப முதலிய கற்ப நிர்ணயங்களும் சிருஷ்டி மனு வந்தராதிகளும், வமிச வமிசானு சரித்திரங்களும் விளங்கும்படிப் பதினெட்டுப் புராண சங்கிதைகளைச் செய்து, தம்முடைய சிஷ்யரான உரோமஹர்ஷணரென் கிறவருக்கு உபதேசித்தருளினார். ரோமஹர்ஷணருக் குச் சுமதி, அக்கினிவர்சன், மித்திராயு, சாம்சபாயனன், அகிருத விரணன், சாவர்ணி என்று ஆறு சிஷ்யரிருந் தார்கள். அவர்களில் அகிருத விரணரும், சாவர்ணி யும், சாம்சபாயனரும், வியாசகிருதமான புராண சங் கிதையைப் பற்றித் தாங்களும் சில சங்கிதைகள் செய் தார்கள். இவற்றிற்கு ஆதாரமாக ரோமஹர்ஷணராலே ஒரு சங்கிதை செய்யப்பட்டிருந்தது. இந்நான்கின் சாரத்தைக் கொண்டுதான் இந்தப் புராணத்தை நான் செய்தேன்.

எல்லாப் புராணங்களுக்கும் முதன்மையாயிருந் தது பிராம்ம புராணம். அதுமுதலாகப் பதினெட்டுப் புராணங்களுண்டென்று புராணமறிந்தவர் சொல்லு கின்றார்கள். அவையாவன: பிராம்மம், பாத்துமம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், நாரதீயம், மார்க் கண்டேயம், ஆக்கினேயம், பவிஷ்யத்து, பிரமகைவர்த் தம், இலிங்கம், வாராகம், ஸ்காந்தம், வாமனம் சௌர் மம், மாச்சியம், காருடம், பிரமாண்டம் என்கிற இவை யேயாம். அவற்றின் முறைமையும் இதுவே. இப்புரா ணங்களெல்லாம் சிருஷ்டி, சங்காரம், வமிசங்கள், மனு வந்தரங்கள், வமிசங்களின் சரித்திரம் என்கிற இவற் றைத் தெரிவிக்கின்றன.

ஓ மயித்திரேயரே! உமக்கு நான் இப்போது சொல்லிக்கொண்டு வருவது பாத்தும புராணத்திற்குப் பிற்படச் சொல்லிய விஷ்ணு புராணமாம். இது புராண வரிசையில் மூன்ருவதாம். எல்லாப் புராணங்களிலுஞ் சொல்லப்படுகிற சிருட்டி முதலானவைகளிலே ஸ்ரீவிஷ்ணுவே கர்த்துருத்துவாதி தருமங்களைக் கொண்டு சொல்லப்படுகிருர்.

ஆத்மகோடிகள் அறியவேண்டிய சகல தருமங்களையும் பிரதிபாதிக்கின்ற சாஸ்திரங்களாவன: முன் சொல்லப்பட்ட இருக்கு முதலான வேதங்கள் நான்கும், அவற்றின் அங்கங்களாகிய சிக்ஷை, வியாகரணம், சந்தம், நிருத்தம், சோதிடம், கற்பம் என்கிற ஆறும், மீமாஞ்சையும், நியாய நூலும், இதிகாச புராணங்களும், தரும சாஸ்திரங்களும் ஆகிய இப்பதினுன்குமாம். இவைகளுக்கு வித்தியா ஸ்தானங்களென்றும் பெயர். அன்றியும் ஆயுர்வேதம் என்கிற வைத்தியசாஸ்திரமும், தனுர் வேதமென்கிற ஆயுத சாஸ்திரமும், காந்தருவ மென்கிற சங்கீத சாஸ்திரமும், அர்த்தசாஸ்திர மென்கிற இராஜநீதி சாஸ்திரமும் உயவித்தைகளென்று சொல்லப்படும். ஆகப் பதினெட்டு வித்தைக ளுண்டென்பார்கள். இந்தச் சாஸ்திரங்களைப் பிரவர்த்திப்பித்தவர்கள் பிரமரிஷிகளென்றும் தேவரிஷிகளென்றும் ராஜரிஷிகளென்றும் மூன்று வகுப்புள்ள இருடிகளேயாம்.

ஓ மயித்திரேயரே! நீர் வினவியபடி மூலசாகைகளையும், சாகைகளின் பிரிவுகளையும், அவற்றின் கர்த்தாக்களையும், அவை பிரிவதன் காரணத்தையும் உமக்குத் தெரியச் சொன்னேன். சகல மனுவந்தரத்திலேயும் இப்படி சாகைகளின் பிரிவு சமானந்தான். ஆதியில் பிரமாவினலே அறியப்பட்ட வேதமானது நித்தியமேயாம். ஆதலின் இச்சாகைகளெல்லாம் அவற்றின் விகற்பங்க ளென்றறியும். * இப்படி வேதசம்பந்தமான

* புராணமென்பது ஆதியில் ஒன்ருயிருந்து பின்பு பலராலே பல பிரிவாகச் செய்யப்பட்டபடியால் ஒவ்வொரு புராணத்துக்கும் நாநான்கு சங்கிதைகளும் ஸ்ரீ விஷ்ணு புராணத்துக்குமாத்திரம் ஆறு சங்கிதைகளு முண்டென்று தெரிந்து கொள்ளுங்கள்.

சகலமுஞ் சொன்னேனே. இனி நான் உமக்குச் சொல்லக் கடவது என்னை? கேட்பீராகவென்று பாராசரர் திருவாய்மலர்ந்தருளினார்.

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஏழாம் அத்தியாயம்

# வைஷ்ணவப் பிரபாவம்

## யமகிங்கர சம்வாதம்

மயித்திரேயர் குருவைநோக்கி, "ஆசாரியரே! அடியேன் வினவிய எல்லாம் அருளிச் செய்யக் கேட்டறிந்தேன். இன்னுமொரு விஷயமிருக்கின்றது. அதை அடியேனுக்கு அருளிச் செய்யவேண்டும். அஃதாவது சப்தத்துவீபங்களும் பாதாளங்களும் மேலேழுலோகங்களு மடங்கி யிருக்கின்ற இந்தப் பிரமாண்டத்துக்குள்ளே, ஸ்தூலங்களும் சூக்ஷ்மங்களும் சூக்ஷ்மத்திற் சூக்ஷ்மங்களும் ஸ்தூலங்களில் ஸ்தூலங்களுமான அனேக பிராணிகள் வாசஞ் செய்கின்றன. இத்தனை பெரிய பிரமாண்டத்துக்குள்ளே அங்குலத்திலெட்டி லொருபங் கிடமானாலும் பிராணிக ளில்லாமலில்லையே. இந்தப் பிராணிகளெல்லாம் கர்ம பந்தத்தினாலே இங்கே பிறந்து ஆயுளின் முடிவிலே இயமனுக்கு வசப்பட்டவர்களாய், அவனாலே நியமிக்கப்பட்ட அந்த அந்த யாதனைகளை அனுபவித்து, அவ்யாதனாகாலந் தீர்ந்த பின்பு தேவர் முதலிய யோனிகளிலே பிறக்கிறார்களே, இவ்விதமாய் ஜனன மரண கிரமத்தில் சுற்றிக்கொண்டே யிருக்கிறார்களென்பதன்றோ சாஸ்திரங்களின் நிச்சயம். இப்படிப்பட்ட சம்சாரத்திலே சரீரிகள் எந்தக்காரியத்தினாலே யமனுக்கு வசப்படாமல் தப்புவார்கள்? அந்தக் காரியம் இன்னதென்பது நான் அறிய விரும்புகிறேன். அந்தப் பரிசுத்தமான காரியத்தை அடியேனுக்கு அருளிச் செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, மகரிஷி அருளிச் செய்யலானார்.

கேளும் முனிவரே! இந்தக் கேள்வியைத்தான் முன்பு நகுலன் பீஷ்மரைக் கேட்டபோது, அவர் நகுலனுக்குச் சொன்னதாவது, "குழந்தாய்! கலிங்க தேசத்திலிருந்து எனக்குச் சிநேகிதரான பிராமணர் ஒருவர் வந்திருந்தார். அவரை நான் கேட்டவைகளில் எவை எவை எப்படி யெப்படி யாகுமென்று சொல்லு வரோ அவையெல்லாம் அந்த அந்த விதமேயாகும். அவர் பூர்வஜன்ம ஞானங்களும் யோகதிருஷ்டியு முடையவராகையாலே நான் கேட்டவைகளுக்கு அவர் சொன்னது ஒருபோதும் பொய்த்ததில்லை. அந்த நம் பிக்கையினாலே ஒருகால் நீ கேட்ட இவ்வினாவையே அவரை நான் கேட்டேன். அந்த யோகி, நான் கேட்ட பிரசினத்தைக் குறித்து மிகவும் யமகிங்கரருக்குள் நடந்த இரகசியமான சம்வாதமொன்று சொன்னார். அஃதா வது, ஒருகாலத்தில் பாசத்தைக் கையிலெடுத்துக்கொண்டு பிராணிகளைக் கொண்டுவரப் புறப்பட்ட தன் சேவகனை யமதருமராஜனானவன் அந்தரங்கத்தி லழைத்து, "ஓ படனே! நீ உன் தொழிலை நடத்தி வருகையில் ஸ்ரீ மதுசூதனனை யாசிரயித்தவரைத் தொடாதே, விட்டு விடு, நான் மற்றவர்களுக்குப் பிரபுவே யல்லது வைஷ் ணவர்களுக்குப் பிரபுவல்லேன். சகல தேவதைகளாலும் ஆராதிக்கப்பட்ட எம்பெருமானாலே நான் யமனென்று பெயரிடப்பட்டுச் சகல பிராணிகளுடைய பாப புண்ணி யங்களை ஆராய்ந்து நடத்தும்படி நியமிக்கப்பட்டேன். ஆகையால் ஸ்ரீஹரிக்கு வசப்பட்டிருக்கிறேனே யல்லது சுதந்தரனா யிருக்கிறேனில்லை. எனக்கிட்ட அதிகாரத் தில் நான் பிசகினேனே யானால் என்னையும் ஸ்ரீவிஷ்ணு தண்டிப்பார். கடகம் மகுடம் குண்டலம் முதலான அனேக ஆபரணங்களிலேயும் காரணமான சுவர்ண மொன்றே வியாபித்திருப்பதுபோலே, சுரர் நரர் பசு முதலான சகல காரிய வருக்கங்களிலும் அந்த ஸ்ரீஹரி ஒருவனே வியாபித்திருக்கின்றான். ஆதலால் அவனே சர்வேசுவரன். மற்ற தேவரெல்லாம் அவனுடைய வியாப்தியைக் கொண்டு அவனிட்ட கட்டளைகளைச் செலுத்தி வருகிறார்கள்; காற்றினால் கிளப்பப்பட்ட பூமி யின் துகள்கள் அக்காற்றடங்கின போது மறுபடியும்

பூமியிலேயே லயித்துப் போவதுபோலே பகவத் சங்கற்பத்தினு லுண்டான குணவைஷமியத்தினுலே தோன்றிய சுரநராதிகளெல்லாம் அந்த குணவைஷமியம் அடங்கினபோது எம்பெருமானிடத்திலேயே லயிப்பார்கள். ஓ படனே! கேள் சகல தேவதைகளாலும் அர்ச்சிக்கப்பட்ட திருவடித் தாமரைகளுள்ள ஸ்ரீஹரியை எந்த மனிதன் நிருபாதிகமாய்ச் சேவித்துக் கொண்டிருக்கின்றுனே, சகல பாப பந்தங்களும் நீங்கியிருக்கிற அந்த மனிதனை நீ கண்டபோது, நெய்யாகுதி செய்யப்பெற்றுச் சொலித்துக் கொண்டிராநின்ற அக்கினியைக் கண்டாற்போலே தூரத்தில் விட்டோடிப் போகக்கடவாய்" என்று கட்டளையிடக் கேட்டு அந்தக் கிங்கரனைவன் தங்களரசனைப் பார்த்து, "சுவாமி! ஸ்ரீவிஷ்ணுவுடைய பக்தன் இன்னுனென்று அடியேன் அறிந்து நடப்பதற்காக அந்த மகாபுருஷனுடைய விலக்ஷணங்களைத் தெரிவிக்கவேண்டும்" என்று கேட்க, யமன் சொல்லத் :தொடங்கினுன். "கேளாய் படனே! எவன் தன்னுடைய வர்ணுச்சிரம தருமங்களைப் பகவானுடைய ஆக்கியா கைங்கரியமென்று கொண்டு அதனின்றுந் தவறி நடவாதவனும், தன்னுடைய மித்திரனிடத்திலும் சத்துருவினிடத்திலும் பக்ஷபாதமின்றிச் சமபுத்தி யுள்ளவனும், ஒரு பொருளையு மபகரியாதவனும், ஓருயிரையுங் கொல்லாதவனு மிருக்கிறுனே, மிகவும் பரிசுத்தமான இருதயமுள்ள அந்தப் புருஷனை ஸ்ரீ விஷ்ணு பக்தனென்றறிந்துகொள். பரிசுத்த ஞானமுடைய எவனது மனமானது கலி சம்பந்தமான இராகத் துவேஷாதி மலங்களாலே அழுக்கடையாமல் எப்போதும் ஸ்ரீமந்நாராயணன் உள்ளே வாசஞ்செய்யப் பெற்று விளங்குமோ அந்த மனுஷ்யனை ஸ்ரீஜனுர்த்தனனுடைய பரமபக்தனென்றறிந்துகொள். அன்பருடைய இருதய கமலத்தில் படிக மலைபோலே ஸ்ரீபகவான் நிர்மலனாய் எழுந்தருளி யிருக்கையில் மாச்சரிய முதலான தோஷங்கள் குளிர்ச்சியான சந்திரனுடைய கிரணங்கள் சூழ்ந்திருக்கு மிடத்திலே அக்கினியின் காந்தி மகிமைபோலத் தலையெடுக்கமாட்டாதாகையால், எவன்

இருதயத்தில் ஸ்ரீவாசுதேவன் எழுந்தருளி யிருப்பனே அந்தப் புருஷன் நிர்மலபுத்தியுடையனாகவும், மாச்சரிய முதலிய தோஷமில்லாதவனாகவும், மிகவுஞ் சாந்தனாகவும் சுத்தமான ஒழுக்க முள்ளவனாகவும் சகல பிராணிகளுக்கும் மித்திரனாகவும் இனிப்பாயு மிதமாயும் பேசுகிறவனாகவும் கருவம் வஞ்சனை யில்லாதவனாகவும் விளங்குவான். அந்த அநாதியான பகவான் எவனுடைய இருதயத்திலே எழுந்தருளி யிருக்கிறானோ அவன், இளமையான தேமாமரமானது தானிருக்குஞ் செழிப்பினாலேயே தனக்குள்ளேயிருக்கிற பூசாரத்தைக் காட்டுவதுபோலே, உலகத்திலுள்ள எவர்களுக்கும் சாந்தனாய்ப் பிரசன்ன முகமுடையவனாய்க் காணப்படுவான். அந்த அவியனாய் அநாதியான ஸ்ரீஹரிபகவான் சங்கசக்கிராதி ஆயுதசமேதனாய் ஒருவனுடைய இருதயத்தில் வீற்றிருப்பனானால் அந்தப் புருஷனுடைய பாவமெல்லாம் சூரியனிருக்கு மிடத்திலே அந்தகாரம் தலைகாட்ட மாட்டாததுபோல் பாப விநாசனான பகவானாலே கண்டிக்கப்பட்டுபோம். இயம நியமாதிகளாலே பாபத்தைக் கழித்தவர்களாயும், எப்போதும் ஸ்ரீ அச்சுதனிடத்திலே பற்றிநிற்கின்ற சித்தமுள்ளவர்களாயும், மாச்சரியம் மதம் முதலான குற்றங் கழித்தவர்களாயு முள்ள புருஷர்களைக் கண்டால், ஓ படனே! நீ மிகவுந் தூரத்தில் விலகிப் போய்விடு. எந்தப் புருஷன், யாருமில்லாத ஏகாந்த ஸ்தானத்திலே பிறர் பொருளான சுவர்ணராசி சொலித்துக் கொண்டிருக்கக் கண்டாலும் அதைத் திருமணம்போல் நினைத்துத் தீண்டாமற் போவனோ, மேலும் எம்பெருமானொருவனையே யன்றி மற்றெதையும் புத்தியிற் பற்றும விருப்பனோ, அவனை ஸ்ரீ விஷ்ணு பக்தனென்று தெரிந்து கொள்."

இனி ஸ்ரீ விஷ்ணு பக்தியில்லாத பாவியினுடைய இலக்கணமுஞ் சொல்லுகின்றேன்: எவன் பிறர் பொருளை எவ்விதத்திலாவது அபஹரிக்கிறவனாயும், உயிர்களைக் கொல்லுகிறவனாயும், கடினமாகப் பேசுகிறவனாயும், தீவினையால் வீணான மதம்பொருந்திச் சித்தங் கலங்கினவனாயும் இருக்கின்றானோ அவனிருதயத்தில்

ஸ்ரீ அநந்தன் வாசஞ்செய்யமாட்டான். எவன் நற்புத்தி யில்லாதவனாய்ப் பிறருடைய செல்வத்திலே பொறாமைப் படுகின்றவனாய், சத்புருஷரைத் தூஷிக்கின்றவனாய், எம்பெருமானை யாராதியாமலும் பாகவத விஷயத்தில் திரவியத்தை வினியோகப்படுத்தாமலு மிருக்கிறானோ அவ் அதமனுடைய மனதில் ஸ்ரீ ஜனார்த்தனன் எழுந்தருளமாட்டான். எவன் தன் மித்திரனிடத்திலும், பந்துக்களிடத்திலும், பெண்டாட்டியிடத்திலும், புத்திரன் புத்திரி தாய் தந்தை முதலானவர்களிடத்திலும் வஞ்சனை யுள்ளவனாய், பணமே பெரிதாகப் பேராசை கொண்டிருக்கின்றானோ அவ் அதமன் ஸ்ரீ விஷ்ணுபக்த னல்லனென்று தெரிந்து கொள். எவன் அயோக்கியமான நினைப்பும், அயோக்கியமான காரியங்களிலேயே இச்சையும், அயோக்கிய சகவாசத்தினாலே ஒப்பற்ற மதமும், எப்போதும் பாப கருமங்களைச் செய்வதுமாகிக் காலங் கழிக்கின்றானோ அந்த மனுஷிய மிருகத்தை ஸ்ரீ விட்டுணுபக்த னல்லனென் றறிந்துகொள்."

பரம புருஷனாயும் பரமேச்சுரனாயு மிருக்கிற ஸ்ரீ வாசுதேவ னொருவனே தாமும் சகல பிரபஞ்சமுமான திருமேனி யுடையவனா யிருக்கின்றானென்று எவர்களுக்கு ஸ்ரீ அநந்தனிடத்திலே சர்வ வியாபகத்துவ புத்தி ஸ்திரமா யிருக்கிறதோ, அப்படிப்பட்ட மகா புருஷரைக் கண்டால் தூரத்தில் விலகிப் போகக் கடவாய். ஓ கமலநயன, வாசுதேவ, விட்டுணுவே, தரணிதர, அச்சுத, சங்க சக்ரபாணி, நீ அடியேங்களுக்குச் சரணமாக வேண்டுமென்று எவர்கள் சொல்லிக்கொண்டே யிருப்பார்களோ அப்படிப்பட்ட மகா பரிசுத்த புருஷரை, ஓ படனே! நீ கண்ணெடுத்துப் பாராமல் தூரமாயோடிப்போ. விகார நாசாதிக ளில்லாமல் சத்திய ஞானானந்தமயனாய்ப் பிரகாசிக்கின்ற அந்த எம்பெருமான் எவனுடைய இருதயகமலத்தில் வாசஞ் செய்துகொண்டிருப்பனோ, அந்த மகாபுருஷனுடைய கடாக்ஷம் பிரஸரிக்கு மிடங்களி லெல்லாம் நீ செல்லத் தக்கவனல்லை; நானும் செல்லத் தக்கவ னல்லேன்; பதறிச் சென்றால் எம்பெருமானுடைய திருவாழியின்

தேஜோ விசேஷத்திருலே பதராக்கப்படுவோம். அம் மகா புருஷன் ஸ்ரீவைகுண்ட திவ்விய லோகத்துக்கு எழுந்தருளத்தக்கவன். ஆனதனுலே சூரியாதிலோகங் களைப் போலே நம்முடைய லோகம் அந்தப் பரம பாகவதன் பரமபதத்துக்கு எழுந்தருளும் வழி யாகாமையாலே அவன் கடாக்ஷத்துக்கும் பாத்திர மன்று” என்று சூரிய குமாரனை அந்த யமதர்ம ராஜன் தன் சேவகனுக்குக் கட்டளையிட்டு ஸ்ரீ வைஷ் ணவப் பிரபாவத்தைத் தெரிவித்தான். அந்த யம படன் இவ் விரகசியத்தை எனக்குப் போதித்தான். கேளும் பீஷ்மரே! உம்மிடத்தில் சிநேக வாச்சல்லியத்தி னுலே அதை நான் உமக்குப் போதித்தேன் என்று அந்த கலிங்க தேசத்துப் பிராமணேத்தமர் எனக்குச் சொன்னு ரப்பா. கேட்டையோ குழந்தாய்! இந்தப் பரமரகசிய த்தை நானுனக்குத் தெரியச் சொன்னேன். இந்தச் சம் சாரப் பெருங்கடலி லாழ்ந்து கிடக்கிற பிராணிகளுக்கு ஸ்ரீமந் நாராயணனைக் காட்டிலுங் கடைத்தேறு முபா யம் வேறில்லை. எவன் எம்பெருமானிடத்திலே ஆத் தும சமர்ப்பணம் பண்ணி யிருக்கின்ருனே அவன் திறத்திலே யமகிங்கரராலும் காலதண்டமாகிலும் கால பாசமாகிலும் யாதனு ஸ்தானங்களாகிலும் ஒன்றுஞ் செய்ய வல்லவையல்ல. இதை நீ நன்ருு யறிந்து கொள்” என்று ஸ்ரீ பீஷ்மர் நகுலனுக்குப் போதித் தார். கேட்டீரோ மயித்திரேயரே! நீர் செய்த பிரசினத் திற்கு உத்தரமாக அந்த யமகீதத்தைச் சொன்னேன். இன்னுமேது நான் சொல்லவேண்டும், அதைக் கேட் டறிந்து கொள்ளக் கடவாயாக.

*ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

## எட்டாம் அத்தியாயம்

# பிராமணதி வர்ணதர்மம்

“சுவாமி! இந்தச் சம்சாரத்தை வெல்ல வேண்டு கிறவர் ஸ்ரீ விட்டுணு பகவானை ஆராதிக்க வேண்டுமென் பது சித்தமாயிற்றன்ருே. அந்த லோகநாதனை ஆரா

திக்க வேண்டியவழி எதுவோ அதையும், அப்படி யாரா திக்கப்படும் ஸ்ரீகோவிந்தனிடத்தில் ஆராதிக்கு மனிதர் எந்தப் பயனை யடைவார்களோ அதையும் அறிய விரும்புகின்றேனாதலால், இவ்விரண்டையும் அடியேனுக்கு விளக்கியருளவேண்டும்' என்று மயித்திரேயர் பிரார்த்திக்க ஸ்ரீ பராசரப் பிரமரிஷி யருளிச் செய்கின்றார்:—

ஓ முனிவரே! நீர் என்னை வினவிய விஷயத்தைத் தான் பூர்வத்தில் சகரமகாராஜன் ஔர்வ மகாரிஷியை வினவினான். அதற்கு அம்மகாமுனிவர் கொடுத்த விடையை உமக்குச் சொல்லுகின்றேன் கேளும்:—சகர மகாராஜன் பிருகு மகாரிஷியின் குமாரரான ஔர்வ மகா முனிவரைத் தண்டம் சமர்ப்பித்து, ஸ்ரீவிஷ்ணுவின் ஆராதன சம்பந்தமான காரியத்தையும், அந்தப் பகவானுடைய ஆராதனத்தில் வரும் பயனையும் வினவ, அம்முனிவர் அருளிச்செய்கிறார் கேள். "சகர மகாராஜனே! ஸ்ரீமந்நாராயணனை யாராதிக்கிறவன் இந்தப் பூலோக சம்பந்தமான ஐசுவரிய முதலானவைகளையும், சுவர்க்கத்திலிருப்பவரும் விரும்பத் தக்க சதுர்முகாதி பதங்களையும், எல்லாவற்றிற்கும் மேலான மோக்ஷானந்தத்தையும் பெறுவான். சுருக்கமாகச் சொல்லுகிறேன். ஆராதிக்கிறவன் எதை யெதை எவ்வள வெவ்வளவு விரும்புகிறானோ அற்பமானாலும் பெரிதானாலும் அதையதை அவ்வள வவ்வளவும் பெறுவான், சந்தேகமில்லை.*

* இவ் வத்தியாயத்திலும் மேலத்தியாயங்களிலுஞ் சொல்லப்பட்ட வர்ணாச்சிரம தருமங்களும் சிரார்த்த கிரமங்களும் கருமிகளுக்கும் ஞானிகளுக்கும் பொதுவாயிருக்கின்றன. இவற்றுள் காமியங்கள் தவிர மற்றைக் கருமங்களைப் பரமைகாந்திகள் பலாபிசந்தியும் கர்த்துருத்துவாதி அபிமானமுமில்லாதே யனுஷ்டிக்கவேண்டும். பரமைகாந்திகளிலும் பக்தி நிஷ்டருக்கு இக்கருமங்கள் உபாயகோடியிலும் பிரபன்னருக்கு கைங்கரிய கோடியிலுஞ் சேரும். வைதிக சப்தங்களெல்லாம் முக்கியமாய் எம்பெருமானுடைய திருநாமங்களாகையாலே முமுக்ஷுக்களுக்கு அக்கருமங்கள் நேரே எம்பெருமானுடைய திருவாராதனங்களேயாம். கர்மிகளுக்கோ தேவதாந்தரங்களின் ஆராதனங்களாம். அத்தேவதாந்தரங்கள் மூலமாய் ஆராதிக்கப்பட்டுப் பலப்பிரதானஞ் செய்தருளுகிறவன் அவ் வெம்பெருமானே யல்லாமல் வேறன்று. இவ்வர்த்தம் இவ்வத்தியாயங்களிலுமன்றிக் கீதாதிகளிலும் விளக்கப்பட்டிருக்கிறபடி ஆசாரியர்களுடைய ஸ்ரீ சூக்திகளிலுங் கண்டுகொள்க.

அந்தச் சுவாமியை ஆராதிக்கும் வகை யெப்படியெனில், வர்ணாச்சிரமங்களுக்கேற்ற ஒழுக்க முள்ளவனாலேயே அந்தப் பரமபுருஷன் ஆராதிக்கப்படுவான். இந்த வழியேயல்லது வேறுவழி எம்பெருமானுடைய திரு வுள்ளத்துக்கு உகப்பன்று இந்திராதி தேவாந்தர சம் பந்த முடையவைகளாய்த் தோன்றுகிற சகல யாகங்களி னாலேயும் எவனும் எம்பெருமானையே பஜிக்கிறான். அப்படியே எந்த மந்திரங்களை ஜபித்தாலும் அவனையே ஜபிக்கிறான். இப்படியே அன்னியரை இம்சை செய்தாலும் அவனையே இமிசித்தவனாகிறான். ஏனெ னில், எம்பெருமான் அந்த அந்தத் தேவதைகள் முத லான பாவற்றிலும் வியாபித்து அந்த அந்த ரூப மாய் விளங்குகிறதினாலே யென்றறி. ஆதலால் எவ னும் தனக்குள்ள வர்ணாச்சிரமங்களுக்குரிய நல் லொழுக்க முடையவனாயிருந்தே அந்தச் சுவாமியை ஆராதிக்க வேண்டும். பிராமணனாலும் க்ஷத்திரிய னாலும் வைசியனாலும் சூத்திரனாலும் தனக்குரிய தருமத்தோடு எம்பெருமானை யாராதிக்க வேண்டுமே யல்லது வேறுவிதமா யாராதித்தல் கூடாது. எவன் பிறர்மேல் அபவாதஞ் சொல்லுதலும் கோட்சொல்லு தலும் பொய் பேசுதலும் பிறர் நடுங்கும்படியாகப் பேசு தலுமாகிய குற்றங்களில்லாதவனோ அவனாலே தான் எம்பெருமான் ஆராதிக்கப்படுவன். எவன் பிறர் மனை யாளிடத்திலும் பிறர் பொருளிடத்திலும் பிறரை இமிசித் தலிலும் மனம் பற்றாமலிருப்பனோ அப்படிப்பட்டவனா லேயே பரமபுருஷன் உகப்பிக்கப்படுவன். எவன் பிரா ணிகளை அடியாமலும் இமிசைப்படுத்தாமலும் கேடு நினையாமலு மிருப்பனோ அவனைத்தான் புருஷோத்த மன் ஆதரிப்பான். தேவர் விப்பிரர் ஆசாரியர் இவர்க ளுடைய சிசுருஷையில் எவன் நிரதனாயிருப்பனோ அவ னாலேதான் ஸ்ரீயப்பதி உவப்பெய்துவன். எவன் தன் னுடைய புத்திர களத்திராதிகளிடத்திலே அன்போடு நன்மை நினைப்பதுபோலே பிறரிடத்திலும் நன்மை நினைத்திருப்பனோ அவனே ஸ்ரீபகவானுக்கு உகப்புண் டாக்க வல்லவன். எவனுடைய மனம் இராகத்துவே ஷாதிகளாலே கெட்டுப்போகாம லிருக்குமோ அந்தச்

சுத்த மனத்தினாலேயே ஸ்ரீகோவிந்தன் சந்தோஷிப்பிக்கப்படுவன். ஓ ராஜாதி ராஜனே! வருணாச்சிரமங்களின் சாஸ்திரங்களினாலேற்பட்ட தருமங்களெவையுண்டோ அவைகளிற் பிசகாமல் நிற்கிறவனே ஸ்ரீ விஷ்ணுவை ஆராதிக்க யோக்கியனல்லது வேறுவிதமா யிருப்பவனாகமாட்டான்" என்று ஔர்வ மகாமுனி சொல்லக் கேட்டுச் சகரமகாராஜன், "முனீந்திரரே! வர்ணாச்சிரம தருமங்களை அறிய விரும்புகிறேன். ஆதலால் அவைகளை அடியேனுக்கு அருளிச் செய்யவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய, அந்த ரிஷி அருளிச்செய்யத் தொடங்கினார்.

"அரசனே! பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்கிற நான்கு வருணத்தாருடைய தருமங்களையும் சொல்லுகிறேன் மனமுற்றுக்கேள்:—பிராமணனானவன் தானங் கொடுக்கவும் யாகங்கள் செய்யவும் அதிகாரமுடையவனாய், வேதாத்தியயனம் விடாமற் செய்து கொண்டு, தினமும் ஸ்நான தர்ப்பணாதிகளையும் சிரவுதஸ்மார்த்த அக்கினிஹோத்திரங்களையுஞ் செய்து வரவேண்டும். ஜீவனத்திற்காகப் பிறருக்கு வைதிக கருமங்களைச் செய்வித்தலும், வேதசாஸ்திரங்களை யோதுவித்தலும், நியாய வழியிற் சம்பாதித்த பொருளைக்கொண்டு பிறர் கொடுக்கிற யோக்கியமான தானங்களை யேற்றுக் கொள்ளுதலுமாகிய காரியங்களைச் செய்யலாம். பிராமணன் சகல பிராணிகளுக்கும் இதமே செய்யவேண்டு மல்லது ஒன்றுக்கும் அஹிதஞ் செய்யலாகாது. ஏனெனில் சகல பிராணிகளுக்கும் மித்திரனாயிருப்பதே பிராமணனுக்கு மேலான பொருளாகும். இத்தன்மைதான் அந்தணனென்கிற பெயருக்குக் காரணம். பிறருடைய ரத்தினத்திலும் பருக்காங்கல்லிலும் பிராமணன் சமமான நினைப்புள்ளவனா யிருக்க வேண்டும். இருது காலத்திலே தன் பத்தினியோடு சேர்தல் பிராமணனுக்கு நியாயம். இனி க்ஷத்திரியனும் தன்னிஷ்டப்படிப் பிராமணருக்குத் தானங்கள் கொடுக்கவும் யாகங்கள் செய்யவும் வேதசாஸ்திரங்களை யோதவும் அதிகார முள்ளவனா யிருக்கிறான். அவனுக்கு

ஆயுதமெடுத்துச் சேவிப்பதும், பூமியைக் காப்பதும் ஜீவனங்கள். ஆனாலும் பூமியை இரட்சிப்பதே முக்கியமாம். இராஜாக்களெல்லாம் பூமியைப் பரிபாலனம் பண்ணியே கிருத கிருத்தியராகிறார்கள். ஏனென்றால் அத்தேசத்தில் நடக்கிற யாகம் தவம் முதலான புண்ணிய கருமங்களிலும் அரசனுக்குப் பங்குண்டாயிருக்கிறதனாலென்றறி. எந்த அரசன் துட்டரைச் சிட்சித்துச் சிட்டரைப் பரிபாலனஞ் செய்து வர்ணாச்சிரம கருமங்களை நிலைநிறுத்துகிறானோ அந்த அரசன் தனக்கு இஷ்டமான புண்ணிய லோகங்களை யடைவான். இனி வைசியனுக்குப் பிரமதேவன் பசுக்களைப் பரிபாலனஞ் செய்தலும், வர்த்தகஞ் செய்தலும், பயிர் செய்தலுமாகிய காரியங்களைச் சீவனமாகக் கற்பித்தான். அவனுக்கும் வேதாத்தியயனமும் தானமும் யாகமும் செய்ய அதிகாரமுண்டு. அன்றியும் அவன் முந்தினவர்களைப் போலே நித்திய நைமித்திக கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டும் வரவேண்டும். சூத்திரனோ முந்தினவர்க்கு ஊழியஞ் செய்து பிழைத்தலும் அவர்களுக்குச் சேஷபூதனா யிருந்து அவரால் போஷிக்கப்படுதலும் அல்லது சரக்குகளைக் கொண்டு விற்றுவரும் பொருளினாலாவது பிழைத்தலுமே நியாயமான ஜீவனமாகக் கொண்டிருக்கிறான். அன்றியும் அவனுக்கு தானங் கொடுக்கவும் யாகயக்கிய விதியினாலே பிதுர்க்கிரியை முதலான கருமங்களைச் செய்யவும் அதிகாரமுண்டு. வேதவேதாங்கங்க ளொழிந்தவற்றை யோதலாம். சகல வர்ணத்தாரும் தங்கள் ஊழியக்காரர் முதலானவர்களைப் போஷிப்பதற்காக வேண்டும் பொருள்களை நியாயவழியிற் சம்பாதிக்கலாம். சந்ததிக்காகத் தத்தம் பெண்டிரிடத்தில் இருதுகாலங்களிற் சேரலாம். எல்லா வருணத்தாருக்கும் பொதுவா யிருக்கவேண்டும் குணங்களாவன: சகல பூதங்களிலுந் தயை, பொறுமை, கர்வமில்லாமை, சத்தியம், சித்தி, வீண்வருத்தமின்மை, மங்களச்செய்கை, இனிமையாய்ப்பேசுதல், சிநேகிக்குங் குணம், வீணாசையின்மை, உலோபியாகாமை, அழுக்காறின்மை ஆகிய இவைகளேயாம். பிரமசரிய முதலிய ஆச்சிரமங்களுக்கும் இத்தருமங்களெல்லாம் பொதுவே

யாம். ஆனாலும் பிராமணாதிகளுக்கு ஆபத் கருமங் களைச் சொல்லுகிறேன் கேள்: பிராமணன் இராஜ கருமத் தையும் க்ஷத்திரியன் வைசிய கருமத்தையும் வைசியன் சூத்திர கருமத்தையுஞ் செய்யலாம். பிராமண க்ஷத் திரிய ரிருவரும் ஒருபோதும் சூத்திர கருமஞ் செய்ய லாகாது. பிராமண க்ஷத்திரியர் சத்தியுடையவரா யிருந்தால் தங்கள் கீழோருடைய கருமங்களை விட வேண்டும். ஆபத்திலேயோ சூத்திர கருமந் தவிர மற் றைக் கீழ்த்தருமங்களைச் செய்யலாம். இப்படியே யல்லாமல் அவனவன் நினைத்தபடி அந்தந்தத் தொழில் களைச் செய்து சாதிசங்கரஞ் செய்யலாகாது. ஓ அர சனே! இப்படி வருணதருமங்களை யுனக்குத் தெரிவித் தேன். இனி ஆச்சிரம தருமங்களைச் சொல்லுகிறேன், நன்றாய்க் கேட்டறிந்துகொள்," என்று ஔர்வ மகா முனிவர் சகரமகாராஜனுக்குச் சொன்னார்.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

# ஆச்சிரமதருமம்

ஔர்வர் இன்னுஞ் சொல்லுகின்றார்; "சகரமகா ராஜனே! கேள். சிறுவனாயிருப்பவன் உபநயனஞ் செய் யப் பெற்று விரத நியமத்தோடு வேதங்களை யோதிக் கொண்டு குருவின் கிருகத்தி லிருக்கவேண்டும். சவுசா சாரசம்பன்னனாய்க் குருவுக்குப் பணிவிடைசெய்யவேண் டும். விரதானுஷ்டான முள்ளவனாய் வேதங்களை யோத வேண்டும். காலை மாலை யிரண்டிலும் சூரியனையும் அக்கினியையும் மனம் பொருந்திப் பூசித்துக்கொண்டு குருவந்தனமுஞ் செய்துகொண்டு வரவேண்டும். சிஷ் யன், குருநிற்குமளவில் தான் நிற்கவும், அவர் போகும் போது தான் கூடப்போகவும், அவர் மேலே யுட்கார தான்கீழே யுட்காரவும் வேண்டும். ஒருபோதும் அவ ருக்கு விரோதமான காரியஞ் செய்தல் கூடாது. அவ ரோதென்று கட்டளையிட்டவுடனே அவர்க்கு எதி

விருந்துகொண்டு வேறு நினைப்பில்லாமல் வேதத்தை யோதி யுணரவேண்டும். ஓதினபின் குருவினால் அனுக்கிரகம் செய்யப்பெற்றுப் பிக்ஷையிற்கொண்டுவந்த அடிசிலை உண்ணவேண்டும். ஆசாரியர் நீராடின பின்பு அந்தத் தீர்த்தத்தில் சிஷ்யன் நீராடவேண்டும். காலை தோறும் சமித்து தருப்பை முதலானவைகளைக் குருவுக்குக் கொணர்ந்து கொடுக்கவேண்டும். இவ்விதமாய்க் குருவினிடத்தில் ஓதவேண்டிய வேதங்களை அர்த்தஞானம் வருமளவும் ஓதியபின்பு அவரிடத்திற் கட்டளை பெற்றுக் குருவுக்குத் தக்ஷிணை கொடுத்துக் கிருகஸ்தாச்சிரமத்திற் போகவேண்டும்.

இனிக்கிருகஸ்தாச்சிரமமென்கிற இல்லற வொழுக்கஞ் சொல்லுகின்றேன் கேள். பிரமசரியத்தைக் கழித்த பின் விதிப்படி ஒரு பெண்ணை விவாகஞ் செய்து கொண்டு, தனக்குத் தகுந்த காரியத்தினாலே திரவியஞ் சம்பாதித்து, இல்லற வொழுக்கத்தைச் சத்தியுள்ளமட்டும் நடத்திவரவேண்டும். பருவகாலங்களில் பிண்டமிடுதலினாலும் எள்ளோடுகூடின தண்ணீரினாலும் பிதுர்க்களையும், யாகங்களினாலே தேவர்களையும், அன்னங்களினாலே அதிதிகளையும், வேதாத்தியயனத்தினாலே இருஷிகளையும், சந்ததியினாலே பிரமதேவனையும், மேலும் பூதபலி கருமத்தினாற் பூதங்களையும், வாச்சலியமென்கிற அன்பினாலே சகல லோகங்களையும் திருப்திபடுத்திக்கொண் டிருக்கவேண்டும். இப்படிச் செய்துவருகிற கிருகஸ்தன் தன் சுகருமங்களினாலே சம்பாதிக்கப்பட்ட அநேக புண்ணியலோகங்களை யடைவான். சந்நியாசிகளும் பிரமசாரிகளுமான பிக்ஷான்ன போசனர் யாருண்டோ அவரெல்லாம் கிரகஸ்தனிடத்திலேயே நிலைபெற் றிருக்கின்றார்கள். ஆதலால் இவ்வில்லறமானது மேலானதா யிருக்கின்றது. அன்றியும் வேதங்களைக் கிரகிப்பதற்காகவும் தீர்த்த க்ஷேத்திர யாத்திரைக்காகவும் பூமியைப் பார்ப்பதற்காகவும் பிராமணர் சுதேசம்விட்டுத் திரிந்துகொண் டிருக்கிறார்கள். சிலர் ஓரிடமென்றில்லாமலும் ஆகார மில்லாமலும் அஸ்தமயமாகு மிடமே வீடாகக்கொண்டு நிற்கிறவர்களாகவும் திரிந்துகொண் டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட சகல

மான பேருக்கும் கிருகஸ்தரே சார்பாகவும் போஷண மாகவு மிருக்கிறார்கள். அப்படிப்பட்ட தேசாந்தரிகள் வருமளவில் நல்வரவு கேட்டல் முதலாக இனிமையான வார்த்தைகளைக் கிருகஸ்தன் பேசி ஆசனம் போசனம் சயனம் முதலானவைகளைக் கொடுக்கவேண்டும். அதிதி யானவன் எவனிடத்திற்கு வந்து தன்னாசைகெட்டுத் திரும்பிப்போகிறானோ அவ்வதிதி அவ்வில்லறத்தானுக் குத் தன் பாவத்தைக் கொடுத்து அவன் புண்ணியத் தைத் தான் கொண்டுபோகிறான். இல்லறத்திலிருப்பவ னுக்கு பிறரை யவமதித்தல், அகங்காரம், டம்பம் கொடுத்துவிட்டோமேயென்று மனந்தவித்தல், அடித் தல், வைதல் இவையெல்லாம் மேன்மையாக மாட்டா. இவ்வகையான துர்க்குணங்களில்லாதே சற்குணமுடை யவனாய் எந்தக் கிருகஸ்தன் தனக்குரிய தருமங்களை நன்றாய்ச் செய்து வருகின்றானோ, அவன் சகல இடை யூறுகளினின்றும் விடுபட்டு உத்தமமான உலோகங்களை அடைவான். இப்படிக் கிருகஸ்தாச்சிரமத்திலிருந்து செய்யவேண்டு மவைகளைச்செய்து வயது முதிர்ந்த போது புத்திரர்வசத்தில் பத்தினியை ஒப்புவித்தாகி லும் அவளோடுகூடவாகிலும் வனத்திற்குப்போகலாம்.

இனி வானப்பிரஸ்த ஆச்சிரம தருமங்களைச் சொல்லுகிறேன். வானப்பிரஸ்தனானவன் இலை கனி கிழங்குகளைப் புசித்துக்கொண்டு, மயிர், தாடி, சடைக ளைத் தரித்தவனாய், எல்லாப் பொருள்களிலும் பற் றற்று, முனியாய் அக்காட்டில் தரையிற் படுத்துக் கொள்ளவேண்டும். முனியானவன் தோலையாகிலும், நாணற்புல் மரவுரி முதலானவைகளையாகிலும் உடுக்க வேண்டும். முச்சந்திகளிலும் நீராடவேண்டும். இவ் வானப்பிரஸ்தனுக்குத் தேவதாராதனமும் ஹோமமும் தம்மிடம் வருமவரைப் பூசிப்பதும் பிச்சையிடுவதும் முக்கியமான காரியங்கள். ஓ அரசனே! முனியானவன் அப்பியங்கனஞ் செய்துகொள்ள வேண்டின் காட் டெண்ணெயினாற் செய்துகொள்வதே தகும். தவஞ் செய்தலும் குளிர் வெப்ப முதலானவற்றைப் பொறுத் தலும் முனிக்குச் சிறப்பான தருமங்கள். இவ்வாறு வானப்பிரஸ்த தருமத்தை எந்த முனிவன் சரியாய்

அநுஷ்டிப்பானோ அவன் தோஷங்களை யெல்லாம் அக்கினி தகிப்பதுபோலே தகித்து நிலைபெற்ற லோகங் களையுஞ் ஜயிப்பான்.

நான்காவது சந்நியாசிக்கு உரிய ஆச்சிரமமென்று சொல்வார்கள். எவன் புத்திர களத்திராதிகளிலும் பொருள் முதலானவைகளிலும் மனப் பற்றில்லாத வனோ, அவன் நான்காவ தாச்சிரமத்திற் பிரவேசிக்க வேண்டும். இப்படிக் காமக் குரோத மாச்சரியாதிக ளில்லாமல் சந்நியாசம் பெற்றுத் தருமார்த்த காமங் களுக்குரிய சகல யத்தினங்களையும் விட்டுப் பிரமஞான நிஷ்டைசெய்து வரவேண்டும். அந்தச் சந்நியாசி சத் துரு மித்திரர்களிடத்தில் ஒரேவிதமானவனாய் மித்திர பாவமா யிருந்து, மிருகம் பக்ஷி முதலான யாவற்றுக் கும் வாக்கு மனம் காயம் என்கிற மூன்றினாலும் துரோ கஞ் செய்யாதிருக்கவேண்டும். புத்திராதி சம்பந்தங் களையும் விடவேண்டும். கிராமத்தில் ஓரிரவும், பட்ட ணத்தில் ஐந்திராத்திரியும், இப்படியாக இடத்துக் குத் தகுந்தபடி வாசஞ் செய்துகொண்டு ஒருவ ருடைய துவேஷமாவது சிநேகமாவது வராமலிருக் கும்படி நடக்கவேண்டும். யதியானவன், வீட்டா ரெல்லாம் புசித்திருக்குங் காலம்பார்த்துச் சாதி குலா சாரங்களிலே சிறந்தவர்களுடைய மாளிகைக்குப் பிட்சைக்காகப் போகலாம். யதி, காமக் குரோத லோப மத மோகங்களை விட்டு, ஒன்றிலும் எனது என்னு மபிமான மில்லாதவனா யிருக்கவேண்டும். எந்த யதி சகல பூதங்களுக்கும் அபயங் கொடுத்துச் சஞ்சரிக் கிறானோ அவனுக்குச் சகல பூதங்களினின்றும் பய மில்லை. இப்படிப் பிராமணன் சந்நியாசியாகித் தன் னுடைய அக்கினிஹோத்திரத்தைத் தன் சரீரத்தி லிருக் கச்செய்து சரீரத்தி லிருக்கிற அக்கினியைக் குறித்துத் தன் முகமாகிய குண்டத்திலே பிக்ஷையினால் வந்த ஹவிசுகளை விதிப்படி ஹோமஞ்செய்து வருவனாகில் அவன் அக்கினி சயனஞ் செய்தவர்க ளடையும்படி யான லோகங்களையடைவான். இது சாதாரண சந் நியாசிகளைக் குறித்தது. விசேஷ சந்நியாசிக் கிரமங் கேள். எவன் நன்றாய் நிச்சயிக்கப்பட்ட புத்தியுள்ளவ

னுய்ப் பரிசுத்தனுய் மோக்ஷாச்சிரமமாகிய இந்தச் சந்நியாசத்தை விதிப்படி ஆசரிக்கிறுனே அவன் எரிகரும்பில்லாத அக்கினியைப் போல மிகவுஞ் சாந்தமான் சோதியாய் விளங்குகிற பிரமலோகத்தை யடைவான்.

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தாம் அத்தியாயம்

# *ஷோடசக் கிரியைகள்

சகரமகாராஜன் வினவுகிறுன்: "ஓ ஔர்வ மகா முனிவரே! வர்ணுச்சிரம தருமங்களை அருளிச் செய்யக் கேட்டேன். இனிப் புருஷனுக்குச் செய்யவேண்டிய கிரியைகளைக் கேட்க விரும்புகின்றேன். தேவரீர் சகல தருமங்களையு மறிந்தவராகையால் அடியேன் விரும்பியவைகளை அருளிச் செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க ஔர்வர் சொல்லத் தொடங்கினுர்.

"ஓ அரசனே! நீ கேட்ட தருமங்களைச் சொல்லுகிறேன், கவனித்துக்கேள். தகப்பன் முந்திக் கர்ப்பாதான முதலானவைகளைச் செய்து பிள்ளை பிறந்த உடனே அதற்கு ஜாத கருமாதிகளான சகல கிரியைகளையும் அப்பியுதயங்களையும் செய்யவேண்டும். பிராமணர்கள் தேவக்கிரியையாகிலும் நாந்தீ பிதுர்க்கிரியையாகிலும் செய்யும்போது, பிராமணர்களை இரட்டையாகவும் கிழக்கு முகமாகவும் எழுந்தருளப் பண்ணித் திருப்தியாம்படி அமுது செய்விக்கவேண்டும். †நாந்தீ

---

* ஷோடசக்கிரியைகளாவன—கருப்பாதானம், பும்ஸவனம், சீமந்தம், உன்னயனம், விஷ்ணுபலி, ஜாதகர்மம், நாமகரணம், உபநிஷ்கிரமணம், அன்னபிராசனம், சவுளம், உபநயனம், பிரஜாபத்தியம், ஸௌமியம், ஆக்கினேயம், வைசுவதேவிகம் என்கிற நான்கு வேதவிரதங்கள், விவாகம் என்பவைகளாம். இவை பதினுறும் ஷோடச ஸம்ஸ்காரமென்று சொல்லப்படும்.

† நாந்தீ-சுபம் உத்ஸவம், அதற்குப் பிரதானமான தேவதைகள் நாந்தீமுகர், இவர்கள் பிதுர்தேவதைகளிற் சேர்ந்தவர்கள்.

முகர்களான பிதுர்க்களைக் குறித்து தயிர்யவங்கள் இலந்தை இவைகளோடு கலந்த பிண்டங்களைச் சந்தோஷத்தோடு தேவதீர்த்தத்திலேயாகிலும் பிரஜாபத்திய தீர்த்தத்திலாகிலும் பிரதக்ஷிணமாய்க் கொடுக்கவேண்டும். இப்படியே மற்றும் விருத்திகளிலும் செய்ய வேண்டும். பின்பு தகப்பன் பத்தாநாள் முதலாகச் சாஸ்திரங்களிற் சொல்லிய நாட்களிலே தகப்பனே அப்பிள்ளைக்குப் பெயரிடவேண்டும். அப்பெயர், தன் குலதேவதையின் பெயரையாவது தன் பெரியோருடைய பெயரையாவது முன்னிட்டதாயும், புருஷனுக்குப் புருஷவாசகமாயும், ஸ்திரீக்கு ஸ்திரீவாசகமாயும், அர்த்தஹீனமாகாததாயும், வெட்கமுறும்படியாகிலும் அமங்கலமாகவாகிலும் அருவருக்கத்தக்கதாகவாகிலும் இராததாயும், வழுவல்லாததாயும், சமமான எழுத்துள்ளதாயும், மிகநீளாததாயும், மிகக் குறுகாததாயும், அதிகடினாக்ஷரமில்லாததாயும், சுகமாயுச்சரிக்கத் தக்கதாயும், கடின சந்தியில்லாததாயும் இருக்க வேண்டும். அப்பெயரானது, பிராமணருக்கு (சர்ம) என்கிற சொல்லோடும், க்ஷத்திரியருக்கு (வர்ம) என்கிற சொல்லோடும், வைசியருக்கு (குப்த) என்கிற சொல்லோடும், சூத்திரருக்கு (தாச) என்கிற சொல்லோடும் கடைசியில் கூடியிருக்கவேண்டும். விஷ்ணுசர்மா, இந்திரவர்மா, சந்திரகுப்தன், ஹரிதாசன், இவ்வாறு கண்டுகொள்க.

இப்படி நாமகரணமான பின்பு உபநிஷ்கிரமணமுதல் உபநயன மீறாகவுள்ள சம்ஸ்காரங்களைப் பிதாவினால் செய்யப்பெற்று, அக்குமாரன் குருவினிடத்திலிருந்து முன்சொல்லிய விதிப்படி வேதசாஸ்திரங்களை ஓதி, குருதக்ஷிணை கொடுத்து, வேதவிரதங்களை அநுஷ்டித்து, கிருகஸ்தாச்சிரமத்திற்போக இச்சிப்பானாகில விவாகஞ் செய்துகொள்ளவேண்டும். அல்லது நைஷ்டிகப் பிரமசாரியாய்க் காலமோட்டவேண்டும். அப்படியானால் குருவுக்காகிலும் குருபுத்திராதியர்க்காகிலும் பணிவிடை செய்துகொண்டிருக்கவேண்டும். அல்லது தனக்கு இஷ்டமெப்படியோ அப்படியே வானப்பிரஸ்தனாகிலும் யதியாயாகிலும் ஆகலாம்.

விவாகஞ் செய்துகொள்ளும் விஷயத்திலே தன் வயதுக்கு மூன்றிலொருபங்குக்கு மேற்படாத வயதுள்ளவளாயும், அதிக விஸ்தாரமான கூந்தலும் மிகக் குறைவான கூந்தலு மில்லாதவளாயும், அதிக கறுப்பாயாவது அதிக பசுமையாவதில்லாமல் நல்ல நிறமுடையவளாயும், அளவுக்கு மேற்பட்டவையாயும் குறைந்தவையாயுமுள்ள அவயவங்க ளில்லாதவளாயும், சூத்திராதிகளாலே வளர்க்கப்படாதவளாயும் இழிகுலத்திற் பிறவாதவளாயும், உடம்பில் மிகவும் மயிர் மொய்த்தவ ளாகாதவளாயும், வியாதி யில்லாதவளாயும், துஷ்டத்தனமும் துஷ்ட வார்த்தையு மில்லாதவளாயும், குஷ்ட முதலிய வியாதியுள்ள தாய் தந்தைகளுக்குப் பிறவாதவளாயும், மீசை முதலான புருஷலக்ஷணங்களில்லாதவளாயும், ஆண் பிள்ளையைப் போன்ற தோற்றமற்றவளாயும், (கர்க்கர) என்று அழுந்திப் பருத்த குரலில்லாதவளாயும், மெலிவில்லாதவளாயும், காக்கையின்கத்துதலோ டொத்த சுரமில்லாதவளாயும், இமைகளில் மயிர்ச்செறி வுள்ளவளாயும், வட்டமாயாகிலும் வேறுவிதமாயாகிலும் அவலக்ஷணப்படாத நேத்திரங்களுடையவளாயும், மயிர்மொய்த்த கணைக்கால்களும் உயர்ந்து காணப்படும் புறங்கால்களு மில்லாதவளாயும், சிரிக்குமளவில் கபோலங்கள் பாழிபோற் குழிந்து போகாதவளாயும், உக்கிரமான காந்தியும் மிக வெண்மையான நகங்களும் மிகச்சிவந்த கண்களும் மிகப் பெருத்த கைகால்களு மில்லாதவளாயும், மிக உயரமும் மிகக்குறுமையு மில்லாமல் சமமான பிரமாணமுடையவளாயும், இரண்டு புருவங்களும் ஒன்றோடொன்று கூடப்பெறுதவளாயும், மிகவு மிடைவெளியுள்ள பற்களில்லாதவளாயும், கொடுமையும் பயங்கரமுமான தோற்றமில்லாத முகமுடையவளாயுமுள்ள பெண்ணைக் கலியாணஞ் செய்துகொள்ளவேண்டும். மேலும் அந்தப்பெண் தாய்வரிசையில் ஐந்து தலைமுறைக்கும், தகப்பன் வரிசையில் ஏழு தலைமுறைக்கும் உட்படாதவளா யிருக்கவேண்டும். இப்படிப்பட்ட கன்னிகையை நியாயமான விதியின்படி விவாகஞ்செய்து

கொள்ளவேண்டும். * இந்த விவாகமானது, பிராம்மம் தைவம் ஆரிஷம் பிரஜாபத்தியம் ஆசுரம் காந்தருவம் ராக்ஷசம் பைசாசம் என்று எட்டுவகைப்பட்டிருக்கும். இவைகளுக்குள்ளே எந்த வருணத்திற்கு எது தகுமென்று ரிஷிகள் விதித்திருக்கிறார்களோ அந்த விவாகமே செய்யவேண்டும். மற்றதைத் தள்ளவேண்டும். இவ்விதமாக விவாகஞ் செய்துகொண்டு அவளுடனே கூட யாதொரு குறைவுமில்லாமல் இல்லறம் நடத்திவருவானாயின் வெகு சுகபலன்களைப் பெறுவான்.

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினோராம் அத்தியாயம்

# ஆன்னிகம்



சகரமகாராஜன் ஔர்வரை நோக்கி, "சுவாமி! கிருகஸ்தன் அனுஷ்டிக்கவேண்டிய நல்லொழுக்கங்களைக் கேட்க விரும்புகிறேன்; எப்படிப்பட்ட நல்லொழுக்கத்திலிருப்பவன் இம்மை மறுமைகளில் துன்பமடைய மாட்டானோ அப்படிப்பட்டவைகளை அருளிச்செய்யவேண்டும்" என்ன, அம்முனிவர், சொல்லுகிறார்; "கேள். அரசனே! நல்லொழுக்க முறைமைகளைச் சொல்லுகிறேன்; நல்லொழுக்க முள்ளவனாலே இம்மை மறுமைகள் சாதிக்கப்படும். (சத்) என்றால் சாதுக்கள் என்றருத்தம். ஆதலால் சத்துக்களாவார் சாதுக்கள்;

---

* பிராம்மமாவது, வரனை வலுவில் கூப்பிட்டுத் தன் சக்திக்குத் தக்கபடி அலங்காரஞ்செய்து கன்னிகையைக் கொடுப்பது. தைவமாவது, யாகஞ் செய்தற்கு ருத்துவிக்கா யிருந்தவனுக்குக் கன்னிகையைக் கொடுப்பது. ஆரிஷமாவது, இரண்டு கோக்களைப் பெற்றுக்கொண்டு கன்னிகையைக் கொடுப்பது. பிராஜாபத்தியமாவது, இருவரும் கூடத் தருமமாசரிக்கவேண்டுமெனச் செய்தது. ஆசுரமாவது, பணம் வாங்கிக்கொண்டு கன்னிகையைக் கொடுப்பது. காந்தருவமானது, இருவரும் ஒருமனப்பட்டபோதே சேர்வது. ராக்ஷசமாவது, சண்டையில் வலியே கன்னிகையைக் கொண்டுவந்து கலியாணஞ் செய்வது. பைசாசமாவது, மோசஞ்செய்து கன்னிகையைக் கொண்டு போகிறது. இவ்வெட்டுவகையுள் முதனான்கும் பிராமணருக்கு அடுக்கும். காந்தர்வ ராக்ஷஸங்களும் அரசர்க் கடுக்கும். வைசியருக்கு ஆசுரமும் கூடும். பைசாசம் எவர்க்கும் தகுதி யன்று. அது மிகவும் அதமமென உணரவேண்டும்.

சாதுக்கள் என்பவர் தோஷமில்லாதவர். அவர்களுடைய ஒழுக்கந்தான் சதாசாரம் என்னப்படும். இந்தச் சதாசாரத்தைச் சொன்னவர்களும் செய்தவர்களும் யாரென்றால், சப்தரிஷிகளும், மனுக்களும், பிரசாபதிகளுமே.

புத்திசாலியானவன் பிராம்ம முகூர்த்தத்தில் விழித்து எழுந்திருந்து, மனசினாலே தருமத்தையும் அதனோடு விரோதப்படாத அர்த்தத்தையும் சிந்திக்க வேண்டும். இவ்விரண்டிற்கும் யாதொரு விரோதமுமுண்டாக்காத காமத்தையும் சிந்திக்கலாம். இவற்றையிப்படிச் சிந்திப்பதினாலே இம்மை மறுமைகளின் பிரயோசனம் கெடாமலிருக்கும். தரும விரோதிகளான அர்த்த காமங்களை விடவேண்டும். தருமமானாலும் பின்பு சுகத்தை யுண்டாக்கமாட்டாததாயும் லோக விரோதமாயுமிருக்குமானால் அதையும் விடவேண்டும். இப்படிச் சிந்தித்தெழுந்தபின் தன்னிடத்திற்கு நைருதி மூலையிலே அம்புபாயு மவ்வளவு தூரத்திற்கு அப்புறமே போய் ஜலமலாதிகளை விடவேண்டும். வீட்டினிடத்தில் கால் கழுவுதல் முதலான அசுத்த காரியங்களைச் செய்யலாகாது. தன்னிழல் மரத்துநிழல் பசு சூரியன் அக்கினி காற்று பெரியோர் முதலானவர்கள் ஆகிய இவற்றுக்கு எதிரா யிருந்து மல மூத்திரங்களை விடலாகாது. உழுத நிலத்திலும் பயிர் நடுவிலும் பசுக்களிருக்கு மிடத்திலும் ஜனசமூகத்திலும் வழியிலும் ஆறு முதலானவற்றின் கரைகளிலும் தண்ணீரிலும் மயானத்திலும் இவை முதலிய இடங்களில் மலமூத்திரங்களை விடலாகாது. அன்றியும் யக்கியோபவீதத்தைக் காதில் சுற்றிக்கொண்டு வஸ்திரத்தினால் தலையை மூடிக்கொண்டு பகலில் வடக்கு முகமாயும் இரவில் தெற்கு முகமாயு மிருந்து ஜலாதிகளை விடவேண்டும். இப்படிச் செய்யச் சங்கடமிருக்குமாயின் தகுந்தபடிச் செய்யலாம். அந்த இடங்களில் நெடும்போதிராமலும் ஒன்றும் பேசாமலும் காரியந் தீர்ந்தவுடனே செத்தைகளினாலே அவ்விடத்தை மறைத்து வரவேண்டும். பின்பு புற்றுமண் பெருச்சாளி தோண்டித் தள்ளின மண் தண்ணீருக்குள்ளிருக்கிற மண் சௌசஞ்செய்து மிகுந்தமண் அசுத்த பூமியிலிருக்

கிற மண் மிகச்சிறிய பூச்சிகளோடு கூடியமண் கலப்பையினால் கிளப்பப்பட்ட மண் ஆகிய இவைகளை விட்டு வேறு மண் கொணர்ந்து, முந்தி அசுத்தத்தின் நாற்றமும் பற்றுமறும்படியான சௌசஞ்செய்து பிந்திச் சுத்திக்காக இலிங்கத்தி லொருதரமும், அபானத்தில் மூன்றுதரமும், இடக்கையில் பத்துத்தரமும், மறுபடி இரண்டு கைகளிலும் ஏழுதரமும் மண்ணிட்டுச் சுத்தமான நீரினாற் கழுவிக் கை கால்களைக் கழுவிக்கொண்டு, சுத்தமாயும் அசுத்தமான கந்த சம்பந்தமில்லாததாயும் குமிழி கிளம்பாததாயுமுள்ள ஜலத்தினாலே மும்முறை ஆசமனஞ் செய்து, வாய்துடைத்தல் சிரசில் புரோக்ஷித்தல் இருதய முதலான அங்கங்களைத்தொடுதல் முதலிய செய்கைகளை விதிப்படி செய்து, பின்பு அகமர்ஷண சூக்த முதலான மந்திரங்களை யுச்சரித்துக்கொண்டே நீராடிச் சந்தியாவந்தன முதலான கிரியைகளை விதிப்படி அனுஷ்டிக்க வேண்டும். பின்பு மயிராற்றி அலங்கரித்தல் முதலான மங்கள வியாபாரங்களைச்செய்துகொண்டு, தனக்கு விதித்திருக்கிற வகையால் திரவிய சம்பாதனஞ் செய்ய வேண்டும். சோமசம்ஸ்தைகள், ஹவிஸ் ஸம்ஸ்தைகள், பாகசம்ஸ்தைகள் என்று சொல்லப்பட்ட யாகங்களெல்லாம் திரவியங்களைக் கொண்டே செய்ய வேண்டியவைகளாகையால் பிராமணன் தனத்தைச் சம்பாதிக்கவேண்டும். நியாயவகையினாலே தனத்தைச் சம்பாதிக்கு முயற்சி செய்துகொண்டு, மத்தியான்னமானவுடனே மறுபடி நீராடவேண்டும். எப்போதும் நதிகள், நதங்கள், தடாகங்கள், தேவகாதங்கள் இப்படிப்பட்டவைகளின் தீர்த்தங்களிலே நீராடவேண்டும். இவை கிடையாமற்போனால் கிணற்றிலிருந்து தண்ணீரை யெடுத்துக் கொண்டாகிலும், அதற்குச் சக்தியில்லாதே போனால் ஒரு பாத்திரத்திற் கொண்டுவந்தாகிலும் நீராடலாம். இப்படி நீராடினபின் பரிசுத்தமான வஸ்திர முதலானவைகளைத் தரித்துக்கொண்டு தேவதைகளுக்கும் இருடிகளுக்கும் பிதுர்க்களுக்கும் அவரவர் தீர்த்தத்தினாலே விதிப்படித் தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

மேலும் பிதுர்க்கள், பிதாமகர், பிரபிதாமகர், மாதாமகர், மாதுருபிதாமகர், மாதுருப்பிரபிதாமகர் என்கிற

இவர்களுக்குத் தர்ப்பணஞ்செய்யவேண்டும். காமியமாய் மாதா, மாதாமகி, அவளுடையதாய், குருபத்தினி, குரு, அம்மான் முதலானவர்கள், இஷ்டமான மித்திரன் அரசன், இவர்களுக்கும் பிரீதியுண்டாகும்படி தர்ப் பணஞ் செய்யலாம். அப்போது ஜபிக்கவேண்டிய தென்னவெனில், "தேவாசுர யக்ஷ நாக கந்தருவ ராக்ஷச பிசாச குஹ்யக சித்த கூச்மாண்ட தருக்களும் ஜலம் பூமி காற்று இவைகளைப்பற்றிய செந்துக்களும் என் னால் கொடுக்கப்பட்ட இத்தண்ணீரினால் திருப்தியடைய வேண்டும். நகரங்களில் பல யாதனைகளி லிருக்கிறவர் களுக்குச் சோர்வு நீங்கும்பொருட்டு இத்தண்ணீரை யான் விடுகின்றேன். எனக்குப் பந்துக்களா யிருப்பவர் களுக்கும் பந்துவாகாதவர்களுக்கும் ஜன்மாந்தரத் தில் பந்துக்களா யிருந்தவர்களுக்கும் என்னிடத்தில் தண்ணீரை வேண்டுகிறவர்களுக்கும் எங்கேயாவது பசி தாகங்களினால் வருந்தியிருக்கிறவர்களுக்கும் நான் விடு கிற இந்த எள்ளுந் தண்ணீரும் திருப்தியை யுண்டாக் கக்கடவன்" என்றிப்படி சொல்லித் தர்ப்பணஞ் செய்ய வேண்டும். அரசனே! இது காமிய தர்ப்பணம். இத னால் சகலலோகத்துக்கும் பிரீதியுண்டாக்கும். அதனால் மகாபுண்ணியம் கிடைக்கும். இப்படி மனப்பூர்வமாய் சிரத்தையோடு காமிய தர்ப்பணஞ்செய்து, பின்பு மாத்தி யான்னிகஞ் செய்து, "வேதங்களினாலே பிரகாசித் துக்கொண்டு லோகசிருஷ்டி கர்த்தாவாய் மகாசுத்தியுள் ளவராய்க் கர்ம சாக்ஷியாய் ஸ்ரீவிஷ்ணு தேஜோமய ராய் விளங்குகிற சூரியபகவானுக்கு நமஸ்காரம்" என்று சொல்லிச் சூரியார்க்கியம் விடவேண்டும்.

அப்புறம் தன் கிருகத்திலிருக்கிற தேவதா பிம்பத் துக்குத் திருமஞ்சனம் திருமாலை தூபதீபாதிகள் தளிகைகள் முதலான வுபசாரங்களினாலே ஆராதனஞ் செய்யவேண்டும். இப்படித் தேவாராதனஞ் செய்த பின்பு, பிராமாகுதி முதலாக வைசுவதேவஞ்செய்து, கிரகங்கள் காசியபர் அனுமதி இவர்களுக்கு அன்னபலி யிட்டு, அதன் மிகுதியை பிருத்துவீபர்ச்சனியர்களுக் காக ஒளபாசன சமீபத்திலிடவேண்டும். பின்பு கிருகத் தின் துவாரத்தில் தாதாவிதாதாக்களும், நடுவில் பிரமா

வுக்கும், நான்கு திசைகளில் இந்திரன் யமன் வருணன் சந்திரன் என்ற நான்குதிக்குத் தேவதைகளுக்கும், சகல திசைகளிலும் வாயுவுக்கும், பிரமா அந்தரிக்ஷம் சூரியன் இவர்களுக்கும், வடகிழக்கில் தன்வந்தரிக்கும் அன்ன பலி யிடவேண்டும்.

இப்படி வைசுவதேவ பூதபலி கருமத்தைச்செய்து விசுவதேவர் விசுவபூதங்கள் விசுவபதி பிதுர்க்கள் இயக்கர் இவர்களைக் குறித்தும் பலியிட்டுப் பின்பு அன்னத்தை யெடுத்து இருதய நிலைமையோடு சுத்தமான பூமியிலே சகல பூதங்களுக்காகப் போட்டு, "தேவதைகள், மனிதர், மிருகங்கள், பறவைகள், சித்தர், யக்ஷர், நாகர், தயித்தியர், பிரேதங்கள், பிசாசங்கள், மரங்கள், எறும்புகள், பூச்சிகள், புழுக்கள் முதலான சகல ஜந்துகளுக்குள்ளும், யார் என்னாலே கொடுக்கப்படும் அன்னத்தை இச்சிக்கிறார்களோ அவர்களுக்கும், எவர்களுக்குத் தாய் தந்தை சுற்றத்தார் யாருமில்லாமலும் அன்னங் கிடையாமலு மிருக்கிறார்களோ அவர்களுக்கும், இதோ இங்கு நான் அன்னத்தைக் கொடுத்தேன், இதனாலே அவர்கள் திருப்தியடைந்து சுகமாயிருக்கக் கடவர். சகல பூதங்களும் நானும் இந்த அன்னமும் எல்லாம் ஸ்ரீ விஷ்ணு ஸ்வரூபமேயல்லது வேறில்லாமையாலே சகல பூதங்களுக்கும் சரீரமான இந்த அன்னத்தை அவர்கள் சௌக்கியத்திற்காக இங்கே இடுகிறேன். எட்டுவிதமான தேவகணங்களும், ஒருவிதமான மனுஷ்யகணமும், ஐந்துவிதமான திரியக்குக் கணமுமாகிய பதினன்கு பூத கணங்களிலுஞ் சேர்ந்த சகல பிராணிகளுக்கும் திருப்திக்காக இந்த அன்னத்தை இங்கிட்டேன். இதனாலே அவர்களெல்லாம் சந்தோஷ மடையக்கடவர்" என்று சொல்லித் தரையில் அன்னத்தைப் போடவேண்டும். கிருகஸ்தனல்லவோ எல்லாருக்கும் ஆதாரமா யிருக்கின்றான்.

பின்பு நாய் சண்டாளன் பக்ஷிகள் இவைகளுக்காகவும், பதிதர்களானலும் புத்திரரில்லாம லிருக்கிறவர் யாருண்டோ அவர்களுக்காகவும், நிலத்தில் அன்னத்தைப் போடவேண்டும். இப்படியெல்லாஞ் செய்தபின்

ணர் கால்நாழிகையாவது மேலாவது அதிதிகளுக்காக எதிர்பார்த்திருந்து, வந்த அதிதிகளை நல்வரவு வினவுதல் முதலானவைகளினாலேயும், காலலம்பத் தண்ணீர் கொடுப்பதினாலேயும், ஆசனங்கொடுத்து உட்காரவைப்பதினாலேயும், அன்போடு அன்னமிடுவதினாலேயும், அவர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பிரியமா யுத்தரஞ் சொல்வதினாலேயும், போகும்போது பின்சென்று வழிவிடுவதினாலேயும், சந்தோஷப்படுத்தவேண்டும். குலமும் பெயருந் தெரியாதவனாய், வேறிடத்திலிருந்து வந்தவனாய், வழக்கமா யோரூரிலே வாசஞ் செய்யாதவனாயிருக்கிற அதிதியை நன்றாய்ப் பூசிக்கவேண்டும். அன்னிய தேசத்தி லிருந்து வந்தவனாய்த் தனக்கு யாதோ ருறவு மில்லாதவனாய், தரித்திரனா யிருந்து போஜனஞ் செய்யவந்த அதிதியை பூசித்துப் போஜனஞ் செய்வியாமல் தான் சாப்பிடுகிறவன் நரகமடைவான். இவ்விதம் வந்த அதிதியை குலகோத்திர சாகாதிகளை விசாரியாமல் சதுர்முகனைப்போல் பாவித்துப் பூசிக்கவேண்டும். மேலும் சுதேசியாய்ப் பஞ்ச யக்கிய பராயணனாய்க் குலகோத்திர ஆசாரங்களிலே தனக்கு நன்றாய்த் தெரிந்தவனா யிருக்கிற ஒருவனையாகிலும் பிதுருக்களுக்காகப் போஜனஞ் செய்விக்கவேண்டும். இதுவுமன்றி உண்டு மிகுந்ததாகாத அன்னத்தைத் தனியே யெடுத்து வைத்திருந்து, அதை நன்றாய் வேதமோதிய பிராமணனுக்குக் கொடுக்கவேண்டும். சந்நியாசி பிரமசாரிகளுக்கும் மும்மூன்று கவளங்களுக்குக் குறையாமல் கொடுக்கவேண்டும். விபவமிருந்தால் தடையில்லாமல் எவ்வளவாகிலும் யாவருக்கும் வேண்டியமட்டும் கொடுக்கலாம். இப்படியாக முன்சொன்னவர்க ளுள்பட நான்குவகைப்பட்ட அதிதிகளைப் பூசிக்கிறவன் அதிகடினமான பாதகங்களினின்றும் நீங்குவான். அதிதியானவன் எவன் கிருகத்துக்கு வந்து தன்னைசை முறிந்து போகிறானோ அந்தக் கிருகஸ்தனுடைய புண்ணியங்களை யெல்லாம் அவ்வதிதி எடுத்துக்கொண்டு, தன் பாவங்களை அவனுக்குக் கொடுத்துவிட்டுப் போகிறான். தாதாவும் பிரமனும் இந்திரனும் வசுக்களும் அக்கினியும் சூரியனும் ஆகிய

இவர்கள் அதிதியினிடத்திற் பிரவேசித்து, கிருகஸ்தன் கொடுக்கின்ற அன்னத்தைப் புசிக்கிறார்கள். ஆதலாலே அதிதி பூசைசெய்ய முயலவேண்டும். எவன் அதிதியை விட்டு உண்கிறானோ, அவன் அன்னத்தை யுண்கிறவனல்ல. பாவத்தையே யுண்கிறான். பின்பு புக்ககம் போகாத கன்னிகைகளையும் கருப்பவதியையும் கிழவர்களையும் பாலகரையும் முந்திப் புசிக்கும்படிச்செய்து பிந்தித் தான் புசிக்கவேண்டும். இவர்களெல்லாம் உண்ணாமலிருக்கத் தான் முந்தி யுண்கிறவன் இங்கே பாவத்தையே யுண்டு மரணமடைந்தபின் நரகத்துக்குப் போய்ச் சிலேஷ்மத்தை யுண்பான். நீராடாமல் உண்பவன் மலத்தை யுண்கிறான். ஜபஞ் செய்யாமல் உண்கிறவன் சீ ரத்தங்களை உண்கிறான். வைசுவதேவாதி சுத்தியில்லாம லுண்கிறவன் மூத்திரத்தை யுண்ணுகிறான். பாலர் முதலானோர்க்கு முன் உண்கிறவன் மிருகமலத்தை யுண்கிறான். ஓமஞ் செய்யாமற் புசிக்கிறவன் கிரிமிகளைப் புசிக்கிறான். அதிதிகளுக்குக் கொடாமற் புசிக்கிறவன் விஷத்தைப் புசிக்கிறான்.

அரசனே! கேள். கிருகஸ்தன் எப்படிப் புசிக்கவேண்டுமோ எப்படிப் புசித்தால் பாபசம்பந்தம் வராமல் இம்மையில் ஒப்பில்லாத ஆரோக்கியமும் பலவிருத்தியும் அனிஷ்டசாந்தியும் உண்டாகுமோ அம்முறையைச் சொல்லுகிறேன். கிருகஸ்தன் விதிப்படி ஸ்நானஞ்செய்து, தேவரிஷி பிதுர்த்தர்ப்பணம்பண்ணி, ஜபத்தையும் ஓமத்தையும் நிறைவேற்றி, சுத்தமான வஸ்திரந் தரித்துக்கொண்டு, அதிதிகளுக்கும் சுரோத்திரியருக்கும் குருமாருக்கும் அடுத்தவர்களுக்குங் கொடுத்துத் தானும் நல்ல கந்தத்தையும் புஷ்பத்தையுந் தரித்துக் கொண்டு, சிறந்த ரத்தினாதி உத்தம வஸ்துக்களைக் கையில் இட்டுக்கொண்டு நிலையுள்ளவனாய்ப் புசிக்கவேண்டும். ஒற்றை வஸ்திரமுள்ளவனாகவும் ஈரமான கைகால்களுள்ளனவாகவும் புசிக்கலாகாது. முகசுத்தியுள்ளவனாகவும் சந்தோஷமுடையவனாகவுமே யிருந்து புசிக்கவேண்டும். கிழக்குமுகமாகவாகிலும் வடக்குமுகமாவாகிலும் புசிக்கவேண்டும். மூலைக் கெதிராய்ப் புசிப்பதும் மனக்கவலையோடு புசிப்பதுங்கூடா. மேலும்

சிறந்ததும் இதமுமான அன்னத்தையே சுத்தநீர்த்தத்தினாலே புரோக்ஷித்துப் புசிக்கவேண்டும். அங்கஹீனர் வியாதி பிடித்தவர் முதலானவர் கொண்டுவந்ததும், அருவருப்பாயிருப்பதும், நன்றாய்ச் சம்பாரஞ் சேர்த்துப் பாகஞ் செய்யப்படாததுமான அன்னத்தைப் புசிக்கலாகாது. முக்காலி நாற்காலி முதலானவைகளின் மேல் வைத்திருக்கும் பாத்திரங்களிலேயும், அசுத்தமான தேசங்களிலேயும், சந்தி முதலான காலங்களிலேயும், நானாவித ஜனங்கள் சேர்ந்த சங்கத்திலேயும் போசனஞ் செய்யலாகாது. அக்கினிக்கும் பசித்திருக்கிறவர்களுக்கும் யோக்கியர்களுக்கும் இட்டுக் கோபதாபாதிக ளில்லாதவனாகிச் சிறந்ததும் சுத்தமுமான பாத்திரத்திலே பழையதல்லாத யோக்கியமான அன்னத்தை மந்திரங்களாலே மந்திரித்துப் போசனஞ் செய்யவேண்டும். கனிகள் கிழங்குகள் வற்றல்கள், நெல்லி வடக முதலான வடகங்கள், இலட்டுவ முதலான பணியாரங்கள் தவிர மற்றப் பழைய வுணவுகளையும், சாரமற்ற வுணவுகளையும் ஒருபோதிலும் உண்ணலாகாது. மேலும் விவேகமுள்ளவன் தேன் நெய் மாவு இவைகளைத் தவிர மற்ற உண்டு மிகுந்தவைகளையு முண்ணலாகாது. உண்கையில் மதுரமானவைகளை லிலும், புளிப்பு உப்புகளை இடையிலும், கைப்பு முதலானவைகளைக் கடையிலும் உண்ணவேண்டும். அன்றியும் முன்னே நீர்த்தவைகளையும் பின்பு கடினமானவைகளையும், மறுபடியும் நீர்த்தவைகளையும் புசிக்கவேண்டும். இப்படி யுண்பதினாலே பலமும் ஆரோக்கியமும் குறையமாட்டா. போசனாரம்பத்தில் அன்னத்தை நிந்தை செய்யாமலும் மௌனத்தோடும் பிராணாதி ஐந்தாகுதிகளை வெகு நியமமாய்ச் செய்யவேண்டும். இவ்விதமாக நன்றாய்ச் சாப்பிட்டு ஆபோசனம் பண்ணிக் கைகளை அடிவரையிலும் நன்றாய்ச் சுத்தி செய்துகொண்டு, மறுபடி யாசமனஞ்செய்து, சொஸ்தமும் சாந்தமுமான மனதோடு கிழக்கு முகமாயாவது வடக்கு முகமாயாவது ஆஸனத்தின்மே லுட்கார்ந்து, இஷ்டமான தேவதைகளைச் சிந்திக்கவேண்டும்.

அன்றியும் "அக்கினியானது காற்றினாலே வளர்க்கப்பட்டு ஆகாசத்தினால் இடங்கொடுக்கப் பெற்றிருக்கிற அன்னத்தைச் சீரணஞ்செய்து என் தேகத்தைத் திருப்திப்படுத்த, அதனால் எனக்குச் சுகமுண்டாகக் கடவது, அன்னமானது சீர்ணித்து என் உடற்கூறான பிருதிவி அப்பு தேயு வாயுக்களுக்குப் பலமுண்டாக்க, அதனாலே, எனக்குக் குறைவற்ற சுகமுண்டாகக் கடவது; இவ்வன்னமானது என்னுடைய பிராணம் அபானம் வியானம் உதானம் ஸமானம் என்னும் பஞ்சப் பிராணங்களுக்கும் புஷ்டியுண்டாக்க எனக்கு இடையூறில்லாத சுகமுண்டாகக்கடவது, உத்ராக்கினியும், வடவாக்கினியும் நான் உண்ட அன்னத்தையெல்லாம் சீர்ணஞ்செய்து அவ்வன்னத்தின் திரிபினாலுண்டான சுகத்தையெனக்கு உண்டாக்க ஆரோக்கியம் என்னுடம்பில் உண்டாகக்கடவது, ஸ்ரீவிஷ்ணு ஒருவரே சகல இந்திரியங்களுக்கும் தேகங்களுக்கும் ஆத்துமாவாகி, ஞானசத்தி பல ஐசுவரிய வீரிய தேஜசென்கிற ஷட்குண பரிபூரணராய்ச் சகலத்துக்கும் முக்கியரா யிருக்கிறாரென்கிற யாதொரு சத்தியமுண்டோ அந்தச் சத்தியத்தினாலே நான் உண்ட அன்னமானது எனக்கு ஆரோக்கிய முண்டாகும்படி சீர்ணமாகக் கடவது," என்று உச்சரித்து வயிற்றைத் தடவிப் பின் எழுந்திருந்து ஆயாசமுண்டாக்க மாட்டாத காரியங்களைச் சோம்பலின்றிச் செய்யலாம். வேத மார்க்கத்துக்கு விரோதமாகாத நல்ல சாஸ்திரங்களைப் பார்த்துக் கொண்டிருத்தல் முதலான சத்காரியங்களாலே நாளைக் கழித்து நிலைபெற்ற சித்தத்தோடு சந்தியாவந்தனஞ் செய்ய வேண்டும்.

சாயங்கால சந்தியைச் சூரியன் பாதிமறைத்துக் கொண்டிருக்கையிலும், உதயகால சந்தியை நக்ஷத்திரங்கள் மறையாமலிருக்கையிலும், நன்றாய்க் கை கால்களைச் சுத்திசெய்துகொண்டு விதிப்படி உபாசிக்க வேண்டும். பிள்ளைபெற்ற தீட்டு, சாத்தீட்டு, உன்மாத முதலானவைகளினாலே வந்த மனோவிகாரம், வியாதி, பெரும்பாவம், இவைகளுள்ள காலமொழிந்த மற்றக் காலங்களி லெல்லாவற்றிலும், காலை மாலைச்

சந்திகளிலேயே சூரியோப ஸ்நானஞ் செய்யவேண்டும். எவனாகிலும் முன்பு சொன்ன நோய் முதலான துன்பங்களில்லாத காலத்தில் சூரியனாலே உதயஞ் செய்யப்பெற்றும் விடப்பெற்றுந் தூங்குவானாகில், அவன் பிராயச்சித்தத்திற்கு உட்படுவான். ஆதலால் அரசனே! சூரியன் உதயஞ் செய்யா முன்னமே எழுந்திருந்து காலைச் சந்தியையும், அஸ்தமய மாகா முன்னமே மாலைச் சந்தியையும் உபாசிக்கவேண்டும். எவர்கள் இச் சந்தியாவந்தனங்களைச் செய்யாம லிருக்கின்றார்களோ அந்தந் துராத்துமாக்கள் தாமிசிரம் என்கிற நரகம் புகுவார்கள். இப்படிச் சந்தியாவந்தனஞ் செய்தபின்பு, பாகஞ் செய்த அன்னத்தைக் கொண்டு தன் பத்தினியோடுகூட வைசுவதேவத்திற்காகப் பலியிடவேண்டும். அப்போதும் சண்டாளாதிகளுக்கும் அன்னந் தரையிற் போடவேண்டும். வந்த அதிதிகளையும் காலலம்பத் தண்ணீர் கொடுப்பது ஆசனம் போடுவது வணக்கத்தோடு நல்வரவு விசாரிப்பது முதலானவைகளினாலேயும், அன்னங்கொடுப்பது படுக்கை கொடுப்பது முதலான உபசாரங்களினாலேயும், தனக்குச் சக்தியுள்ள மட்டும் பூசிக்கவேண்டும். பகற்காலத்தில் வந்த அதிதியைப் பூசியாமற் போவதினாலே என்ன பாதகமுண்டென்று சொல்லப்பட்டதோ அதிலும் எட்டுப்பங்கு அதிகமான பாதகம் இரவில் அதிதிபூசை செய்யாதவனுக்கு நேரிடும். ஆதலால் இரவில் வந்த அதிதியை நன்றாய்ப் பூசிக்கவேண்டும். அதனாலே சகல தேவதைகளும் பூசிக்கப் பட்டவராவார்கள். அதிதிக்கு அன்னங் கொடுக்கச் சக்தி யில்லாவிடின் ஏதாகிலும் கிஞ்சித்து உணவு அல்லது தண்ணீர் படுக்கை அல்லது இடமாகிலுங் கொடுத்துப் பூசிக்கவேண்டும்.

அதிதிபூசை செய்து தானுமுண்டு பாதசவுச முதலானவை செய்துகொண்டு வெடிப்பில்லாததும், யானைத்தந்த முதலியவைகளாலாவது நல்ல மரத்தினாலாவது செய்யப்பட்டதும், விசாலமானதும், ஒடியாததும்; மேடு பள்ளங்களில்லாமற் சமமானதும், அழுக்கில்லாததும், ஜந்து மயமாகாததும், மேலே வஸ்திராதிகளினாலே பரப்பப் பெற்றதுமான படுக்கையில்

படுத்துக்கொள்ள வேண்டும். படுக்குமளவில் கிழக்கிலாவது தெற்கிலாவது தலைவைப்பது நல்லது. மற்றைத் திசைகளில் வைப்பது ரோக காரணமாகும். ருது காலத்தில் தன் பத்தினியிடத்திற் சேர்வது நல்லது. அப்படிச் சேரும்போதும் புருஷ நக்ஷத்திரத்திலே சுபமான காலத்திலே ஷஷ்டிமுதலாக மேன்மேல் சுபமான இரட்டைப்பட்ட ராத்திரிகளிலே சேர்வது சிறப்பு. அநுகூலப் படாதவளையும், வியாதியினால் துன்பப் படுகிறவளையும், ருதுவுடையவளையும், இஷ்டப்படாதவளையும், கோபித்திருப்பவளையும், யோக்கிய மாகாதவளையும், கர்ப்பிணியா யிருப்பவளையும், திறமில்லாதவளையும், பிறனிடத்தில் மனம் வைத்திருப்பவளையும், காமமில்லாதவளையும், ஒருவனுடைய ஸ்திரீயையும், பசியால் வருந்துகிறவளையும், மிகப்புசித்திருப்பவளையும், ஜல மலாதி யுபத்திரவ முள்ளவளையும் சேரலாகாது. தானும் இப்படிப்பட்ட குணங்களுடையவனானால் சேரலாகாது. மற்றெப்படியிருந்து சேரவேண்டுமென்றால், ஸ்நானாதிகளினாலே நிர்மலனாய்க் கந்த புஷ்பாதிகளைத் தரித்தவனாய்த் தகுந்த ஆகாரமுண்டவனாய் ஆசையுங் காமமு முள்ளவனாய்ச் சேரவேண்டும். சதுர்த்தசி அஷ்டமி அமாவாசை பூர்ணமை சூரிய சங்கிராந்தி ஆகிய இந்தப் பர்வகாலங்களில் எண்ணெயிட்டுக் கொள்ளுதல், பெண்டிரோடு புணர்தல், மாமிசமுண்ணுதல், இப்படிப்பட்ட செய்கைகளைச் செய்கிறவன் மல மூத்திர போஜனம் என்று சொல்லப்பட்ட நரகத்தை யடைவான். ஆதலால் இப்படிப்பட்ட பருவகாலங்களிலே விவேகிகள் நியமமுள்ளவர்களாய் நல்ல சாஸ்திரங்களை யோதிக்கொண்டும், எம்பெருமானைத் தியானஞ்செய்து கொண்டும், மந்திரஜபஞ் செய்துகொண்டும் இருக்க வேண்டும். அன்னிய ஸ்திரீசம்போகஞ் செய்தலும், மிருகாதிகளோடு புணர்தலுங் கூடா. தேவதைகள் பிராமணர் ஆசாரியர் இவர்களுக்கு ஆசிரயமான இடங்களிலும், நாற்சந்திகளிலும், தீர்த்தங்களிலும், ஆலயங்களிலும், கொட்டில்களிலும், ஜனங்கள் வந்து சேருமிடங்களிலும், மயானங்களிலும் அவற்றைச் சேர்ந்த தோட்டங்களிலும், சலங்களிலும், புண்ணிய

காலங்களிலும், பகலிலும், தரையிலும், சந்திகளிலும், மனதினாலும் ஸ்திரீ போகத்தைச் செய்யலாகாது. பிறன் மனையாளை மனதினால் நினைப்பதுங் கூடாது. வாக்கினாற் சொல்வதும் மகாபாவமாம். அப்படிப் பட்டவர்கள் இங்கேயும் ஆயுசு க்ஷீணிக்கப் பெற்று, இறந்தபின் நரகயாதனைகளையும் அனுபவித்துப் பின்பு எலும்பில்லாதவைகளாகிய புழு முதலிய ஜந்துக்களிலே பிறப்பார்கள். இப்படி பரஸ்திரீகமனம் இருமையிலுங் கேட்டைத் தருவதென்று நினைத்து, ஸ்வஸ்திரீகளிடத் திலேயே இருதுகாலங்களிற் புணரவேண்டும். இருது காலமல்லாதபோதும் முன்னுரைத்த குற்றங்களில்லாத விஷயத்திற் புணரலாம்.

பதினோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பன்னிரெண்டாம் அத்தியாயம்

# நல்லொழுக்கம்

கேள், சகரமஹாராஜனே! தேவதைகள், கோக்கள், பிராமணர், சித்திபெற்ற பெரியோர்கள், ஆசாரியர் இவர்களைப் பூசித்துவரவேண்டும். இரண்டு காலங் களிலும் சந்தியை வணங்கவேண்டும். அக்கினி பரி சரியையுஞ் செய்துவரவேண்டும். எப்போதும் நல்ல வஸ்திரங்களையும், சுபகரமான விஷ்ணுகிராந்த முத லான ஔஷதிகளையும், விஷநாசகமான கருடப்பச்சை முதலானவைகளையும் தரிக்கவேண்டும். நன்றாயலங் கரிக்கப்பட்ட தலைமயிரும், உடம்பிலும் உசிதமான அலங்காரமு முடையவனாய் நல்ல பூமாலைகளைத் தரித் திருக்கவேண்டும். கொஞ்சமாகிலும் பிறர் பொருளை அபகரியாமலும், அற்பமாகவாகிலும் பிரியமில்லாத பேச்சைச் சொல்லாமலுமிருக்கவேண்டும். பிரியமான பேச்சைப் பேசுவதிலும் பொய்யைப் பேசலாகாது. பிறனுடைய குற்றங்களை யெடுத்துச் சொல்லுவதுங் கூடாது. அயலான்மனையாளை விரும்புவதும், பகையை விரும்புவதும் கூடாத காரியங்கள். துஷ்ட வாகனத் தின்மேலேறுவதும், தண்ணீர் அலைப்பியடித்த ஆற்

றங்கரை முதலானவைகளைச் சேர்வதும் தகாத காரியங்களாம். துவேஷியா யிருக்கிறவன், பதிதன், பைத்தியம் பிடித்தவன், பலரோடு பகைகொண்டவன், அதிக துன்பப் படுத்துந் தன்மையுள்ளவன், விபசாரியைச் சேர்ந்தவன், வெள்ளாட்டிக்கொண்டவன், அற்பன், பொய்யன், மிகச் செலவு செய்பவன், அபவாத முண்டாக்குகிறவன், வஞ்சகன், இப்படிப்பட்டவர்களோடு சிநேகஞ் செய்யலாகாது. ஒன்றியாய் வழிப்பயணம் போகலாகாது. ஜலப்பிரவாகத்திற்கு எதிராய் நீந்தக்கூடாது. தீப்பட்ட வீட்டிற் பிரவேசித்தலையும், மரத்தி னுனியிலேறுவதையும், பற்கடித்தலையும், மூக்கைத் தூக்கி யிழுப்பதையும் தவிரவேண்டும். வாயை மூடிக்கொள்ளாமல் கொட்டாவி விடுவதையும், பெருமூச்செறிவதையும், இருமுவதையும் செய்யவேண்டாம். இரைச்சலிட்டுச் சிரிப்பதையும், ஓசையுடன் அபானவாயு விடுவதையும் நகங்களைக் கடிப்பதையும், செத்தையைக் கிள்ளிக் கொண்டிருப்பதையும், மீசையைக் கடிப்பதையும், உதட்டைக் கசக்கிக் கொண்டிருப்பதையும் செய்யாதொழிய வேண்டும். அசுத்தமும் அயோக்கியமுமான வெளிச்சங்களைப் பார்க்கலாகாது. அப்படியே அம்மணமாயிருக்கிற பெண்பிள்ளையையும் உதயாஸ்தமய காலத்துச் சூரியனையும் பார்க்கலாகாது. சவத்தைக் கண்டு உங்காரம் பண்ணவேண்டாம். அச்சவத்தின் தேகமானது *சோமனுடைய அமிசமாயிருக்கின்றது. நாற்சந்தி, மேடை போட்டு வைத்துப் பூசிக்கப் படுகிற விருக்ஷம், மயானம், உத்தியானவனம், கெட்ட பெண்களுடைய சமீபம் இவற்றை இரவில் எப்போதும் விடவேண்டும். பூசிக்கத்தக்கவர், தேவர், பிராமணர், சோதிகள், இவற்றின் நிழலைக் கடக்கலாகாது. ஒன்றியாய்ப் பாழுங் காட்டுக்குப்போதல், பாழும் வீட்டில் வாசஞ்செய்தல் இவையும் நன்மையன்று. மயிர், எலும்பு, முள்ளு, அசுத்தம், பலியிட்ட

*சுக்கிலமாகிய உஷ்ணம் அக்கினியம்சம். சோணிதமாகிய ரசம் சந்திராமிசம். ஆதலால் அக்கினி சோமசம்பந்தமான சரீரத்தில் அக்கினி யம்சமான உஷ்ணம் பிராணனோடு கூடப் போன பின்பு மிகுந்திருப்பது சந்திராம்சமான ரசமென்பது கருத்து.

சாம்பல், உமி, குளிர்ந்தநீரானனைந்த பூமி, இவற்றைத் தூரத்தில் விட்டு ஒதுங்கிப் போகவேண்டும். எப்படிப் பட்டவர்களானாலும் அயோக்கியரா யிருப்பவர்களைப் பற்றவேண்டாம். சூதான மார்க்கங்களை நினைக்கவேண்டாம். சர்ப்பங்கள் மதயானைகள் முதலான செந்துக்களைத் தொடர்தலும், அவற்றினெதிரிலே எழுந்து நெடுநேர நிற்றலுஞ் செய்யவேண்டாம். மிகவும் விழித்திருத்தல், மிகத்தூங்கல், மிகவுட்கார்ந்திருத்தல், மிகநிற்றல், மிகப்படுத்திருத்தல், மிகவருந்தல், இவையெல்லாம் நன்மையல்ல. பற்களினாலே துன்பஞ்செய்யுஞ் ஜெந்துக்களையும், கொம்புகளினாலே துன்பஞ்செய்யுஞ் ஜெந்துக்களையும், பனியையும், எதிர்காற்றையும், வெய்யிலையும், தூரத்தில் விடவேண்டும். அம்மணமாயிருந்துகொண்டும், கச்சத்தைவிட்டுக்கொண்டும், குளித்தல், தூங்கல், ஆசமனஞ் செய்தல், தேவபூசைசெய்தல் முதலானவைகளை ஆசரிக்கவேண்டாம். அப்படியே ஹோமம், தெய்வபூசை, ஆசமனாதிகிரியைகள், ஜபம் இவைகளை ஒற்றை வஸ்திரத்தோடுஞ் செய்யவேண்டாம். நன்மையல்லாத நடக்கையுடையவரோடு ஒருக்ஷணமாகிலுஞ் சேர்ந்திருக்கவேண்டும். இமைப்பொழுதாகிலும் நன்னடக்கையுள்ளவரோடு சேர்ந்திருப்பதே சிறப்பாம். உத்தமரோடும் அதமரோடும் பகைகொள்ளவேண்டாம். விவாதமானாலும் தனக்குச் சமானமானவரோடு செய்தலேநல்லது. கலகத்துக்குஆரம்பஞ்செய்யவேண்டாம். வீணனவிரோதத்தை விட்டுவிடவேண்டும். ஒருவர் பகையினாலே சிறிதளவு நஷ்டம் வந்தாலும் சகித்துக் கொள்ளலாமே யல்லாமல், அதனால் வரும் லாபத்தைக் கைக்கொள்ளலாகாது. ஸ்நானஞ் செய்தவுடனே வஸ்திரத்தினால் உடம்பைத் துடைக்கவேண்டுமே யல்லாமல் கையினால் துடைத்துக் கொள்ளக்கூடாது. பிறர்மேல் நீர்தெறிக்கும்படி மயிரை உதறலாகாது. நின்றுகொண்டு ஆசமனாதிகள் செய்யலாகாது. பாதத்தினாற் பாதத்தை மிதித்துக்கொள்ளவேண்டாம். பெரியோர்களுக்கு எதிரிலே பாதத்தை நீட்டலாகாது. குருவுக்கு எதிரில் படுப்பதும், உட்காருவதும் வேண்டாம். குருவினிடத்தில் வினயத்தோ

டிருக்கவேண்டும். தேவாலயத்தையும், நாற்சந்தியை யும், மங்களமானவைகளையும், பூசிக்கத்தக்கவர்களை யும், வலஞ்சுற்றிப் போகவேண்டுமேயல்லாமல் இடஞ் சுற்றிப் போகலாகாது. அல்லாதவைகளை இடஞ்சுற்றிப் போகவேண்டும். சந்திரன், சூரியன், அக்கினி, தண் ணீர், காற்று, பெரியோர், இவர்களுக்கு எதிரில் காறி யுமிழ்வதும் மல மூத்திரங்களை விடுவதும் செய்யக் கூடாது. நின்றுகொண்டே மூத்திராதிகளை விடுதலும், வழியிலே அப்படி செய்தலும் கெட்ட காரியமாம். கோழை, மலம், மூத்திரம், உதிரம், இப்படிப்பட்டவை மிதித்துப் போகவேண்டாம். போசனாதி காலங்களி லும், ஜப ஹோமார்ச்சனாதி காலங்களிலும், கோழை யுமிழ்தல் மூக்குச்சிந்தல்முதலான செய்கைகளைச் செய்ய லாகாது. ஜனங்களின் சமூகத்திலேயும் அப்படி செய்ய லாகாது. பெண்டிர்களை அவமதிக்கவுமாகாது. அவர்க ளிடத்தில் நம்பிக்கை வைக்கவுமாகாது. அவர்களிடத் தில் பொறாமைப்படுவதும், அவர்களை யிகழ்வதும் நன் றல்ல. நல்லொழுக்கத்தை வேண்டுகிற விவேகியான வன் மங்களகரமானவைகளையும், புஷ்ப ரத்நாதிகளை யும், பெரியோர்களையும் சேவியாமல் வெளியிற் போக லாகாது. மஹாஜனங்கள் சேருமிடங்களை வணங்க வேண்டும். ஹோமாதிகளைக் காலத்திற் செய்யவேண் டும். மெலிந்துபோன யோக்கியருக்கு உதவி செய்ய வேண்டும். வேதசாஸ்திரங்களில் வல்லவரான சான் றோரை அடுத்திருக்கவேண்டும். எவன் இப்படி தேவ தைகளையும் இருடிகளையும், பிதுர்க்களையும், அதிதிகளை யும், பெரியோர்களையும், அந்த அந்த விதிப்படி பூசித் துக்கொண்டு வருவானோ அவன் உத்தமமான உல கங்களை யடைவான்.

மேலும் மனவசியமுள்ளவனாகித் தகுந்த காலங் களில் இதமாயும் பிரியமாயும் மிதமாயும் பேசுகிறவன் மகா சந்தோஷ காரணங்களாயும் அக்ஷயங்களாயு மிருக்கிற உலகங்களைப் பெறுவான். எவன் விவேக மும், தீயொழுக்கத்தில் நாணமும் பொறுமையு முடை யவனாய் வேதத்தில் நம்பிக்கையோடுகூடி, கல்வியிலுங் குலத்திலும் மேலானவரிடத்தில் வணக்கமாய் நடக்கின்

ருனே, அவன் ஒப்பற்ற உத்தம லோகங்களைச் சேருவன். அகாலத்தில் மேககர்ச்சனை முதலானவை யுண்டாதலாலும், அமாவாசை முதலான பருவகாலங்களிலும், ஆசவுசங்களிலும், கிரண முதலானவை யுண்டானபோதும், வேதாத்தியயனஞ் செய்யா திருக்க வேண்டும். எவன் கோபித்தவர்களைச் சமாதானப் படுத்துகிறதும், யாரிடத்தும் மாச்சரியமில்லாமல் சகலருக்கும் உறவினர் போலிருப்பதும், பயப்பட்டவர்களுக்குத் தேறுதல் சொல்லுகிறதுமாய்ச் சாதுவா யிருக்கின்ருனே, அப்படிப்பட்டவனுக்குச் சொர்க்கமும் அற்ப பலமென்றே சொல்லவேண்டும். மழை வெயில் முதலானவைகளிலும், இரவிலும், காடுகளிலும், குடை பாதரட்சை தடி இவைகளைத் தரித்தவனுகித் தேகத்திற்குத் தீங்கு நேரிடாதபடிச் சஞ்சரிக்கவேண்டும். சஞ்சரிக்கும்போது மேற்பார்வையும் பக்கத்துப்பார்வையும் தூரப்பார்வையும்விட்டு, நுகத்தடியளவுதூரம் வழியை நன்ருய்ப் பார்த்துப்போகவேண்டும். இப்படி தீமைக்கு ஏதுவான சகலங்களையும் விட்டு எவன் நடக்கின்ருனே அவனுக்குத் தருமார்த்த காமங்களில் கிஞ்சித்தாகிலும் குறைவு நேரிடாது. எவன் நல்லொழுக்கமும் விவேகமுமுடையவனுய், வித்தை வினயம் இவைகளிலே தேர்ந்தவனுயிருந்து, தனக்குத் துரோகஞ் செய்தவனிடத்திலேயுந் துரோக சிந்தையில்லாதவனும், தன்னை வைதவனிடத்திலும் பிரியமாய்ப் பேசுகிறவனுமாகி யாவரிடத்தும் கருணையென்கிற சற்குணத்தினுலே மனவுருக்கத்தோடிருப்பனே அவனுக்கு மோக்ஷமானது கையினிடத்திலேயே யிருக்கின்றது. எவர்கள் காமக்குரோத லோபாதிகளுக்கு உட்படாதவர்களாய் நல்லொழுக்கத்தில் நின்றிருக்கிருர்களோ அவர்களுடைய சத்திய பிரபாவத்தினுலேதான் பூமி நிலைபெற்றிருக்கின்றது. ஆதலால் பிறர்க்குப் பிரீதிகாரணமான சத்தியமே பேசவேண்டும். சத்தியமானுலும் பிறர்க்குத் துக்ககாரணமாகுமாயின், அந்த விஷயத்தில் ஒன்றும் பேசாமல் மௌனமாயிருக்கவேண்டும். ஒன்று ஒருவனுக்கு மிகவும் அப்பிரியமாயிருந்தாலும், அது அவனுக்கு நன்மைக்குக் காரணமானதானுல் அப்படிப்பட்டதை அவசியம்

சொல்லவேண்டும். அரசனே! முடிவைச் சுருக்கிச் சொல்லுகிறேன் கேள், இம்மையிலும் மறுமையிலும் எது பிராணிகளுக்கு நன்மை யுண்டாக்கத் தக்கதோ அப்படிப்பட்ட காரியத்தையே மனோவாக்குக் காயமென்கிற மூன்று கரணங்களினாலுஞ் செய்து வரவேண்டும்.

*பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

## பதின்மூன்றாம் அத்தியாயம்

# சிரார்த்த பேதங்கள்

ஔர்வ மகாமுனி சொல்லுகிறார்: பிள்ளை பிறந்தவுடனே பிதாவானவர் உடுத்த வஸ்திரத்தோடு நீராடவேண்டும். உடனே ஜாதகருமமும் அப்யுதய சிரார்த்தமுஞ் செய்யவேண்டும். அந்தச் சிரார்த்தத்தில் தேவர்க்காகவும் பிதுர்க்களுக்காகவும் இரட்டையாகவே பிராமணரை வரித்துப் பராக்கின்றி அவர்களைப் பிரதக்ஷிண வரிசையாய்ப் பூசித்துப் போசனஞ்செய்விக்கவேண்டும். கிழக்குமுகமாகவாகிலும் வடக்குமுகமாகவாகிலும் இருந்துகொண்டு, இலந்தையோடு கூடின தயிர் அக்ஷதைகளினாலே செய்த பிண்டங்களைத் தேவதீர்த்தத்தினாலாவது பிரம்மதீர்த்தத்தினாலாவது கொடுக்கவேண்டும். இந்தச் சிரார்த்தத்தினாலே நாந்தீமுகமாயிருக்கிற பிதுர்கணமானது மிகவுந் திருப்தியடையும். ஆனதனாலே புத்திரன் புத்திரிகளுக்கு விவாகஞ் செய்கையிலும், கிருகபிரவேசங்களிலும், சிறுவர்க்கு நாமகரண சவுளங்கள் செய்யும்போதும், சீமந்தத்திலும், உன்னயனத்திலும், புத்திரன் முதலானோருடைய முகதரிசனத்

---

* இங்கு அனுஷ்டானங்களையும் கருமங்களையும் ஒருவாறு சொல்லியிருக்கிறதேயன்றிப் பூரணமாய்ச் சொல்லியிருக்கவில்லை. இக் கருமாதிக் கிரமங்களை விவரிக்கப் புகுந்தால் கிரந்தம் விஸ்தாரமாவதுமன்றி, அவ்விஷயம் அநேகருக்குத் தெரிந்துக்கொள்ளக்கூடாமையாயுமிருக்குமாதலால், அவற்றை விவரியாமல் இருக்கிறபடியே எழுதினோம். முன்புள்ள யாகாதிகளையும், பின்புள்ள சிரார்த்தங்களையும் விளக்காமைக்கும் இதுவே நியாயமென்றறிந்து கொள்க.

திலும், மற்றுமுள்ள விருத்திகளிலெல்லாம் நாந்தீ சிரார்த்தம் அவசியஞ் செய்யவேண்டும்.

கேள், அரசனே! விருத்தியிற் செய்யவேண்டிய பிதுர் பூசாக்கிரமத்தைச் சொன்னேன். இனி இறந்தாரைப்பற்றிச் செய்யவேண்டுங் கருமவிதிகளைச் சொல்லுகிறேன்:—

இறந்துபோனவர்களுடைய தேகத்தை நல்லதண்ணீர் முதலானவைகளினாலே நீராட்டி, மாலை முதலானவைகளினாலே அலங்கரித்து, விதிப்படித் தகனஞ் செய்து, பந்துக்களெல்லாம் உடுத்த வஸ்திரத்தோடேயே ஸ்நானம்பண்ணி, தெற்குமுகமா யிருந்துகொண்டு "இஃது இன்னானுக்கு" என்று இருகைகளினாலும் தண்ணீரெடுத்துத் தர்ப்பணமாய் விடவேண்டும். அப்படிக்குச் செய்தபின், மாடுகள் பிரவேசிக்கும் போதாகிலும் நக்ஷத்திரங்கள் காணப்படும் போதாகிலும் கிருகத்தினுள்ளே பிரவேசித்துத் தரையில் புல் முதலானவைகளின்மேற் படுத்துக்கொள்ளவேண்டும். இப்படியே யிருந்து தீட்டைப்பற்றின காரியங்களைச் செய்யவேண்டும். அஃதாவது: பகலிலே மாத்திரம் ஒருதரம் புசித்துக்கொண்டு, தினந்தோறும் இறந்தவனுக்குத் தரையிற் பிண்டம் போடவேண்டும். அன்றியும் அந்நாட்களில் பந்துக்களுக்கு அவர்கள் கருத்தின்படிப் போசனம் போடவேண்டும். பந்துக்கள் புசிப்பதனால் இறந்தவனுக்கு திருப்தி யுண்டாகும். முதலில், மூன்றாவது, ஏழாவது, ஒன்பதாவது நாட்களில் வஸ்திரத் தியாகமும், ஊருக்கு வெளியில் ஸ்நானமும் பண்ணி, எள்ளுந் தண்ணீரும் விடவேண்டும். நாலாநாளில் அஸ்தி சஞ்சயனம் செய்யவேண்டும். சஞ்சயன மானதின் மேல் ஏழுதலைமுறைக்கு உட்பட்டவர்களான சபிண்டரைத் தொட்டாலும் குற்றமில்லை. ஏழு தலைமுறைக்கு மேற்பட்டவர்களான சமானோதகரோ வாசனைப் பூச்சி பூமாலை முதலான போகங்கள் தவிர மற்றெல்லாக் கிரியைகளுக்கும் யோக்கியராவார். சபிண்டரும் சஞ்சயனங் கழிந்தபின்பு படுக்கையிற்படுக்கவும் ஆசனத்திலுட்காரவுங் கூடும். ஸ்திரீபோகமாத்திரங்கூடாது. சிறுவனும் மகாநதி பருவதங்களிடையி லிருக்கப்பெற்ற தேசாந்த

ரத்திற் போனவனும், ஜாதிகுலாசாரங்களைவிட்டுப் பதிதனானவனும், சந்நியாசியும் மரணமடைந்தாலப்போது ஸ்நானஞ் செய்வதனாலேயே தீட்டுப்போம். இப்படியே மனப்பூர்வகமாய் ஜலம் விஷம் உறிபோட்டுக்கொள்ளுதல் முதலானவைகளினாலே இறந்தவர்களைப்பற்றியும் தீட்டுக்கொண்டாட வேண்டுவதில்லை. இப்படியல்லாமலிறந்தவர்களைப்பற்றி ஞாதிகளுக்குப் பத்துநாள் தீட்டுண்டாதலால், அப்பத்துநாளும் அவர்களுடைய அன்னத்தைப் பிறர் புசிக்கக்கூடாது. அவர்களும் தானங் கொடுத்தல் தானம்வாங்கல் யாகஞ்செய்தல் வேதமோதல் முதலான கருமங்களைச் செய்யக்கூடாது. பிராமணருக்குத் தீட்டுப் பத்துநாள்; க்ஷத்திரியருக்குத் தீட்டுப் பன்னிரண்டுநாள்; வைசியருக்கு அரைமாதம்; சூத்திரருக்கு ஒருமாதமாம். இப்படித் தீட்டிருந்து அது கழியுங் கடைசிநாளில் ஒற்றைப்படைப் பிராமணரை வைத்து விதிப்படி போஜனாதிகள் செய்வித்து, அந்தப் பிராமணர் புசித்த பாத்திரத்தின் சமீபத்தில் தருப்பைகளைப் பரப்பி இறந்தவனுக்குப் பிண்டம் போட்டு, ஆதி ஏகோத்திஷ்ட சிரார்த்தத்தை நிறைவேற்றவேண்டும். இது செய்தபின்பு பிராமணர் முதலிய நான்கு வருணத்தாரும் முறையே தண்ணீர், ஆயுதம், கசை, தடி, இவற்றைப் பரிசித்துச் சுத்தராகவேண்டும். பின்பு யாவரும் தங்கள் வர்ணங்களுக்குரிய வைதிக கருமங்களையும் ஜீவனகாரியங்களையுஞ் செய்து வாழலாம். கர்த்தாவானவன் மாதந்தோறும் இறந்த திதிகளில் ஏகோத்திஷ்ட விதியினால் மாசிகஞ் செய்துவரவேண்டும். அந்த ஏகோத் திஷ்டங்களில் ஆஹவானம், அக்கிநௌகரணம், வைசுவதேவிக விப்பிர நிமந்திரணம் ஆகிய இவைகளைச் செய்யக்கூடாது. மேலும் அதில் ஒரு பவித்திரத்தோடு ஒரு அர்க்கியமே கொடுக்கவேண்டும். பிராமணர் புசித்தபின்பு பிரேதனுக்கு ஒரே பிண்டம்போடவேண்டும். எஜமானன் "அபிரம்யதாம்" என்றுகேட்க, பிராமணர்கள் "அபிரதாஸ்ம:" என்று பிரதியுத்தரஞ் சொல்லவேண்டும். கடைசியில் "இன்னானுக்கு அக்ஷயம் இது" என்று சொல்லவேண்டும். இப்படி வருஷ முடிவுவரைக்கும் ஏகோத்திஷ்ட விதி

யால் சிரார்த்தஞ்செய்து, பின்பு சபிண்டீகரணஞ்செய்ய வேண்டும். அதுவும் வருஷ முடிவிலாகிலும், ஆறுமாதத்திலாகிலும், பன்னிரண்டா நாளிலாகிலும் ஏகோத்திஷ்ட விதியினாலேயே செய்யவேண்டும். அதில் எள்ளும் வாசனை வஸ்துவுங் கலந்த ஜலத்தினால் நிறைக்கப்பட்டவைகளாய் பிதுர்க்களுக்காக மூன்று அர்க்கிய பாத்திரமும், பிரேதனுக்காக அப்படிப்பட்ட ஒரு அர்க்கிய பாத்தியமும் வைத்து, அந்தப் பிரேத பாத்திர ஜலத்தை பிதுர்பாத்திர மூன்றிலுங் கலக்கவேண்டும். இவ்வாறு அர்க்கிய சம்யோஜனஞ் செய்வதனாலே அந்தப் பிரேதன் பிதுர்த்துவத்தை யடைய, அவன் முதலான பிதுர்க்களைப் பார்வண முதலான சிரார்த்த விதிகளினாலே அர்ச்சிக்கவேண்டும்.

இறந்தவனுக்குக் கருமஞ் செய்யவேண்டிய கர்த்தாக்கள் யாரென்றால்: புத்திரன், பௌத்திரன், புத்திரனுடைய பௌத்திரன், சகோதரன், அவனுடைய சந்ததி, சபிண்டருடைய சந்ததி, ஆகிய இவர்களுள் முந்தினவரில்லாதபோது பிந்தினவர் முறையே கர்த்தாக்களாவார்கள். இவர்களெல்லாரு மில்லாதபோது சமானோதகருடைய சந்ததியும், அதன்பின் தாயின் பக்ஷத்துச் சபிண்டருடைய சந்ததியும், அதன்பின் அந்தப் பக்ஷத்துச் சமானோதக சந்ததியும், முறையே கிரியை செய்யவேண்டும். இவ்விரண்டு குலங்களும் நசித்துப் போனால் பெண்டுகள் கிரியை செய்யலாம். அப்புறம் பிதாவின் பக்ஷத்திலும் மாதாவின் பக்ஷத்திலுமுள்ள சபிண்ட சமானோதகர்களாகிலும், அல்லது சஹாத்தியாயி சிஷ்யன், முதலானவர்களாகிலும், ஒரு கூட்டத்திற் சேர்ந்தவர்களாகிலும் கருமஞ் செய்யலாம். அல்லது எந்த பந்துக்களு மில்லாத இறந்தவனுக்கு அவனுடைய பொருளைக் கொண்டு அரசன் கருமஞ் செய்விக்கலாம். இந்தக் கிரியைகளில் பூர்வங்களென்றும் மத்திமங்களென்றும் உத்தரங்களென்றும் மூன்றுவிதங்களுண்டு. தகனந் தொடங்கித் தண்ணீரைத் தீண்டுமளவிலுள்ளவைகள் பூர்வக்கிரியைகள். மாதந்தோறுஞ் செய்யத்தக்க மாசிகங்கள் மத்திமக்கிரியைகள். பிரேதன் பிதுர்க்களிற் கலக்கத்தக்கதான சபிண்டீகரணத்திற்குப்

பின்பு செய்யவேண்டிய பிதுர்க்கிரியைகளெல்லாம் உத்தரக் கிரியைகளாம். தந்தை தாய்களுடைய சபிண்ட சமானோதர்களினாலேயும், சகாத்தியாயி முதலானவர்களினாலேயும், பொருளெடுத்துக்கொள்ளுகிற ராஜாவினாலேயும், பூர்வக்கிரியைகள் செய்யப்படலாம். உத்தரக் கிரியைகளோ புத்திரன் முதலானவர்களினாலேயே செய்யப்படவேண்டும். அல்லது புத்திரியின் புத்திரர்களாலும், அவர்களுடைய புத்திரராலும் செய்யப்படலாம். பெண்டுகளுக்கும் வருஷந்தோறும் இறந்த திதிகளிலே ஏகோத்திஷ்டவிதியினால் உத்தரக்கிரியைகள் செய்யவேண்டும். ஆதலால், அரசனே! அந்த உத்தரக்கிரியையை எப்போதெப்போது எப்படியெப்படி செய்யவேண்டுமோ அந்தக் கிரமங்களைச் சொல்லுகிறேன் கேள்.

*பதின்மூன்ரும் அத்தியாயம் முற்றிற்று.*

---

## பதினலாம் அத்தியாயம்

## சிரார்த்தகாலம்

ஒருவன் சிரத்தையோடு சிரார்த்தஞ் செய்வதனாலே பிரமா, இந்திரன், ருத்திரன், அசுவினி, தேவர், சூரியன், அக்கினி, வசுக்கள், வாயு, விசுவதேவர், பிதுர்க்கள், இருடிகள், மனிதர், மிருகங்கள், பக்ஷிகள், சர்ப்பங்கள் முதலான ஊருகிற ஜந்துக்கள், மற்றுமுண்டான பூதங்கள், ஆகிய யாவற்றையும் சந்தோஷப்படுத்துகிறான். மாதந்தோறும் அபரபக்ஷத்திலும் அமாவாசையிலும் அஷ்டகைகளிலும் சிரார்த்தஞ் செய்யவேண்டும். காமியமான காலத்தைச் சொல்லுகிறேன் கேள்: சிரார்த்தத்துக்கு யோக்கியமான வஸ்து கிடைத்தபோதும், யோக்கியனான பிராமணன் நேர்ந்தபோதும் வியதீபாதத்திலும், அயனத்திலும், விஷுவத்திலும், சந்திரசூரிய கிரணங்களிலும் சூரியன் பன்னிரண்டு இராசிகளிற் பிரவேசிக்கிற காலங்களிலும், நக்ஷத்திர பீடையுங் கிரகபீடையு முண்டாகுங் காலங்களிலும்

கெட்ட கனவு கண்டபொழுதிலும், புதிதாய்த் தானியத்தைக்கொண்டு வந்தபோதும், காமிய சிரார்த்தங்கள் செய்யலாம். அமாவாசையானது அனுடம், விசாகம், சுவாதி, இந்த நக்ஷத்திரங்களோடு கூடுமேயானால், அப்போது செய்கிற சிரார்த்தம் பிதுர்க்களுக்கு எட்டு வருஷத்துத் திருப்தியை யுண்டாக்கும். திருவாதிரை, புனர்பூசம், பூசம் இந்த நக்ஷத்திரங்களோடு கூடிய அமாவாசையிற் செய்த சிரார்த்தத்தினால் பிதுர்க்கள் பன்னிரண்டுவருஷ திருப்தியைப் பெறுவார்கள். அவிட்டம், சதயம், பூரட்டாதி, இவைகளோடு கூடின அமாவாசை தேவர்களுக்குங் கிடையாத புண்ணியகாலம். இந்த ஒன்பது நக்ஷத்திரங்களிலும் அமாவாசை கூடினபோது சிரார்த்தஞ் செய்வதனாலே பிதுர்க்களுக்கு விசேஷமான திருப்தி யுண்டாகும்.

ஓ மகாராஜனே! இன்னுங் கேள்: பிதுர்க்களிடத்திலே அதிக பக்தி யுள்ளவனை புரூரவச்சக்கரவர்த்தியினுவை, சனத்குமாரர் சொல்லிய பாடல்களைச் சொல்லுகிறேன்: "வைகாசி மாதத்தில் சுக்கிலபக்ஷத் திரிதியையும், கார்த்திகை மாதத்தில் சுக்கிலபக்ஷ நவமியும், புரட்டாசி மாதத்தில் கிருஷ்ணபட்சத் திரயோதசியும், மாசி மாதத்து அமாவாசையுமாகிய இந்நான்கு திதிகளும் யுகாதிகளென்றும், அளவற்ற புண்ணியகாலமென்றும் புராணங்களினாலே சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளிலும், சந்திர சூரிய கிரகணங்களிலும், மூன்று அஷ்டகைகளிலும், இரண்டு அயனங்களிலும் எள்ளுடன் கூடிய தண்ணீரையாகிலும், பிதுர்க்களை யுத்தேசித்து ஒருவன் பக்தியோடு விடுவனாகில், அவன் ஆயிரம் வருஷம் சிரார்த்தஞ்செய்தபலனை யடைவன். இஃது இரகசியமான சங்கதியென்று பிதுர்க்கள் சொல்லுகிறார்கள்." மாசிமாதத்து அமாவாசை எப்போதேனும் சதய நட்சத்திரத்தோடு கூடுமாயின், அது பிதுர்க்களுக்கு மகாதிருப்தி ஹேதுவானகாலம். அற்ப புண்ணியமுள்ள மனிதருக்கு அது கிடையாது. ஓ அரசனே! அந்தக் காலத்திலேயே அவிட்டம் சேர்ந்ததாகில் அப்போது அன்னமாவது ஒருகைத் தண்ணீராவது பிதுர்க்களைக் குறித்துக் கொடுத்தவனுக்கு பதி

ணுயிரம் வருஷம் பிதுர்திருப்தி செய்த புண்ணியங் கிடைக்கும். அக்காலத்திலேயே பூரட்டாதி சேருமாகில், அதிற்செய்த சிரார்த்தத்திஞலே பிதுர்க்கள் திருப்தியடைந்து ஆயிரம் யுகமளவும் சுகமாகத் தூங்குவார்கள். கங்கை, சதத்துரு, யமுனை, விபாசை, சரஸ்வதி, கோமதி என்கிற நதிகளுக்கும், நைமிசம் என்கிற க்ஷேத்திரத்திற்கும் ஒருவன் சென்று ஸ்நானஞ்செய்து, அன்போடு பிதுர் பூசை செய்தாஞகில், அவன் தன் பாவங்களையெல்லாம் போக்கிக்கொள்ளுகிருன். அரசனே! பிதுர்க்கள் "நாம் எப்போது புரட்டாசி மாதத்தில் புத்திராதிகள் செய்த அபரபக்ஷத்திரயோதசி சிரார்த்தத்திஞல் திருப்தியடைந்து, மாசி யமாவாசையிலும் புத்திராதியர்செய்த புண்ணிய தீர்த்த ஜல தர்ப்பணங்களிஞலும் திருப்தியடைவோம்" என்றும் பாடுகிருர்கள். மனிதருக்குப் பரிசுத்தமான சித்தமும் பரிசுத்தமான பொருளும், மேன்மையான காலமும், சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட விதியும், சற்குணமுள்ள பாத்திரமும், சிறந்த அன்பும் கூடுமாயின் சகல இஷ்டங்கள் சித்திக்கும். ஓ மகாராஜனே! இந்த விஷயத்தில் பிதுர்க்கள் கீதஞ் செய்திருப்பவைகளைக் கேள்: நீ அப்படியேசெய்து அதில் மனவூக்கமுள்ளவஞ யிருக்கக்கடவை.

பிதுர்கீதங்கள்:—"எவன் திரவிய வஞ்சனை செய்யாமல் நமக்குப் பிண்டங்களைப்போடத் தக்கவனே, விபவமுண்டாகில் வஞ்சனையின்றி இரத்தினம் வஸ்திரம் வாகனம் தனம் மற்றுமுள்ள சகலபோகங்களையும் நமக்காகப் பிராமணருக்குத் தானஞ்செய்யும்படியானவனே, அன்னம் போடுவதற்கு மாத்திரமே தகுதியான விபவமுடையவஞகில் இப்படிப்பட்ட காலங்களில் மிகுந்த அன்போடு நல்ல பிராமணருக்கு அன்னமிடத் தக்கவனே, அதற்குஞ் சக்தியில்லாமற்போஞல் தனக்கு இயன்ற அளவு தானியத்தையாகிலும் பிராமணருக்கு ஆமமாய்க் கொடுக்க வல்லவனே, அல்லது சிறிது தக்ஷிணையாவது கொடுக்கும்படியானவனே, அதற்குஞ் சக்தியீனஞஞல் நுனிக்கையிஞலே சில எள்ளுகளை

யாவது ஒரு நல்ல பிராமணனுக்கு நமஸ்கரித்து பக்தியினால் வணங்கிக் கொடுப்பானே, இதுவு மிசையாத போது எழெட்டு எள்ளுகளுடனே நமக்கு ஒருகைத் தண்ணீரையாவது பூமியில் விடமாட்டுவானே, இதுவு மில்லாதபோது எங்கிருந்தாகிலும் பசுக்களுக்குத் தக்க வுணவைச் சம்பாதித்து நம்முடைய உகப்புக்காகச் சிரத்தையுடனே பசுக்களுக்குக் கொடுப்பானே, ஒன்று மில்லாதேபோனால் காட்டுக்குப்போய்க் கைகளை நன்றா யுயா வெடுத்துக்கொண்டு சூரியன் முதலான உலக பாலகரைப் பார்த்து உரத்த சத்தத்துடனே "எனக்கு பிதுர்ச் சிரார்த்தஞ் செய்யத்தக்க தனமாவது மற்றெந் தப் பொருளாவது ஒன்றுமில்லை; என் பிதுர்க்கள் திருப்தியடையவேண்டும், எனக்கு ஒன்றுமில்லையென்று இதோ என்னிரண்டு கைகளையும் வாயுவின் மார்க்க மான ஆகாசத்தில் தூக்கிவிட்டேன்" என்றுஇவ்வசனங் களைப் படிப்பானே, அப்படிப்பட்ட புண்ணியவானும் புத்திமானுமான ஒருவன் நம்முடைய குலத்திற் பிறக்க வேண்டும் என்று பிதுர்க்கள் பாடியிருக் கிறார்கள். கேட்டாயோ புரூரவனேயென்று சனத்குமாரர் அவ்வரசனுக்குச் சொன்னதை, சகரமகாராஜனே நானு னக்குச் சொன்னேன். இப்படிப் பிதுர்க்கள் தனமுள்ள போதும் இல்லாதபோதும் நடக்கவேண்டிய முறை யைச் சொன்னவிதமாய்ச் செய்பவன் பூரணமாகச்சிரார்த் தஞ்செய்த பலனை யடைவான்.

பதினாலாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினைந்தாம் அத்தியாயம்

# சிரார்த்தஞ் செய்யுமுறை

சகரமகாராஜனை நோக்கி அவுரவர் பின்னு மருளிச்செய்கிறார்:—அரசனே! சிரார்த்தத்தில் வரித்துப் போசனஞ் செய்விக்கவேண்டும் பிராமணர் மூன்று நாசிகேதானு வாகங்களை யோதி அதின்படி நடக்கிறவனும், மூன்று மதுருக்குகளை யோதி அதின்படி நடக்கிறவனும், அல்லது மதுவித்தையில் நிஷ்டைபெற்றவ

னும், திரிசுபர்ணனுவாகங்களை யோதி அதின்படி யனுஷ்டானமுள்ளவனும், ஷடங்கவேதாத்தியயனஞ் செய்தவனும் அவ்வேதத்தின் பொருளை யறிந்தவனும், வேதவிதிப்படி அனுஷ்டான முடையவனும், பரப்பிரமத்தை தியானஞ் செய்பவனும், ஜ்யேஷ்டசாமத்தை யோதவல்லவனும், ஆகிய இவர்களே முக்கியமானவர்களாம். இருத்துவிக்கும் உடன் பிறந்தாளுடைய குமாரனும், புத்திரியின்மகனும், மருமகனும், மாமனும், அம்மானும், தவசியும், பஞ்சாக்கினியுபாசனை செய்கிறவனும் அல்லது பஞ்சாக்கினி வித்தையிலே நிஷ்டைபெற்றவனும், சிஷ்யனும், சம்பந்தியும், மாதா பிதாக்களைப் பூசிப்பவனுமாகிய இவர்களை, முந்தினவர் நேர்படாதபோது வரிக்கலாம். இவர்களும் நேர்படாதபோது சுத்தரான பிராமணரைத்தேடி வரிக்க வேண்டுமே யல்லது தகாதவர்களைச் சிரார்த்தத்தில் வைக்கலாகாது. தகாதவர் யாரென்றால்: மித்திரத் துரோகஞ் செய்பவன், புழுத்த நகமுள்ளவன், சொத்தைப் பல்லுடையவன், நபுஞ்சகன், கன்னிகையைக் கெடுத்தவன், அக்கினியையும் வேதத்தையும் அகாரணமாய் விட்டவன், சோமவிக்கிரயஞ் செய்தவன், மெய்யாகவாகிலும் பொய்யாகவாகிலும் பதிதனென்று தள்ளப்பட்டவன், திருடுகிறவன், கோட்சொல்லிக் கெடுக்கிறவன், ஊராருக்காகக் கூலிவாங்கிக்கொண்டு யாகஞ் செய்கிறவன், வேதத்தைக் கூலிக்கு ஓதுவிப்பவன், கூலிவாங்கிக்கொண்டு வேதமோதினவன், கைம்பெண்ணைக் கலியாணஞ்செய்தவன், தாய் தந்தைகளை விட்டவன், தனக்குக் கீழ்க்குலத்துக்குழந்தைகளையெடுத்துவளர்க்கிறவன், தன்குலத்துக்குத் தாழ்ந்தவளை கலியாணஞ்செய்துகொண்டவன், தேவதாந்தரங்களைப் பூசித்துப் பிழைப்பவன், இப்படிப்பட்டவர்கள் சிரார்த்தத்தில் நிமந்திரணத்திற்குத் தகுந்தவர்களல்லர். சிரார்த்தத்திற்காகமுதனாளிலேயே யோக்கியரான பிராமணரை வரித்துத் தேவார்த்தமாகவும் பிதுரார்த்தமாகவும் முடிக்கும்படித் தனித் தனியே பிரார்த்திக்கவேண்டும். பின்பு கோபதாபத்தையும், ஸ்திரீ சங்கமத்தையும், வருந்துவதையும் சிரார்த்தஞ் செய்கிறவனும் வரிக்கப்பட்டவனும்

செய்யாமல் நியமத்தோ டிருக்கவேண்டும். சிரார்த்தஞ் செய்பவனாகிலும் வரிக்கப்பட்டவனாகிலும் ஸ்திரீ சம்போகஞ்செய்தல் மகாதோஷமாம். அப்படிச் செய்கிறவன் தன் பிதுர்க்களை இரேதசின் குழியிலே தள்ளின பாபத்தை யடைவான். ஆகையாலே தரும சீலரான பிராமணரைப் பூர்வதினத்திலே நிமந்திரணஞ் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரிய நிக்கிரகஞ் செய்து, யதிகளாயிருக்கிற பிராமணரை முன்னே நிமந்திரணஞ் செய்யாமற் போனாலும், அன்று அவர்கள் வீட்டுக்கு வருவராகில் அவர்களைச் சிரார்த்தத்தில் வைக்கலாம்.

இப்படிப் பிராமணார்த்தமாய் வந்தவர்களுக்குக் காலலம்பல் முதலான வுபசாரங்கள் செய்து, பவித்திரந் தரித்து ஆசமன முதலானவைபண்ணிச் சுத்தர்களாயிருக்கின்ற அவர்களை ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து, அமுது செய்விக்கவேண்டும். பிதுர் ஸ்தானத்தில் ஒற்றையாயும், தேவஸ்தானத்தில் இரட்டையாயும், அல்லது இச்சையின்படி ஒவ்வொருவரையாவது வைக்கவேண்டும். அப்படியே மாதாமஹனுடைய சிரார்த்தத்தையும் பக்தியுடனே தேவ வரணத்தோடு கூடினதாகச் செய்யவேண்டும். அல்லது பிதுர்சிரார்த்தம் மாதாமகசிரார்த்தம் இவ்விரண்டுக்கும் ஒரே விசுவ தேவவரணஞ் செய்யவுங் கூடும். பிதுர்வருக்க மாதாமகவருக்கங்களைச் சேர்ந்த தேவதாஸ்தானத்துப் பிராமணரைக் கிழக்குமுகமாயும், பிதுர்ஸ்தானத்துப் பிராமணரை வடக்குமுகமாயும் உட்காருவித்து அமுது செய்விக்கவேண்டும். இவ்விருவர்க்கும் சிரார்த்தத்தைத் தனித்தனியே செய்யவேண்டுமென்று சில ரிஷிகள் சொல்லுகிறார்கள். மற்றுமுள்ள மகாரிஷிகள் ஓரிடத்திலே ஒரு பாகத்தினாலேயே செய்யலாமென்று சொல்லியிருக்கிறார்கள். ஆசனத்துக்காகத் தருப்பைகொடுத்து, அர்க்கியவிதியினாற் பூசித்து, அவர்களுடைய அனுக்கிரையினாலே ஆவாகனஞ் செய்யவேண்டும். யவோதகத்தினாலே தேவர்களுக்கு அர்க்கியங் கொடுத்துக் கந்த புஷ்ப தூப தீபாதிகளினாற் பூசிக்கவேண்டும். பிதுர்க்கள் விஷயத்தில் செய்வதையெல்லாம் அப்பிர

தக்ஷிணமாய்ச் செய்யவேண்டும். அந்தப் பிதுர்க்க ளிடத்திலும் அனுக்கிரகம் பெற்றுக்கொண்டு, இரட்டிப் பான தருப்பைகளை ஆசனத்திற்காகக்கொடுத்து, மந்திர பூர்வகமாக ஆவாகனஞ்செய்து, திரிலோதகத்தினாலே அர்க்கியமுதலானவை கொடுத்து, மற்ற உபசாரங்களை யுஞ் செய்யவேண்டும். அக்காலத்தில் யாராவது ஒரு பிராமணன் அன்னத்தை விரும்பி அதிதியாக வருவ னாகில் முன்பு வரிக்கப்பட்ட பிராமணரிடத்தில் அங்கீ காரம் பெற்றுக்கொண்டு, அவனையும் சுகமாகப் புசிப் பிக்கலாம். சிலயோகிகள் நானாவித வேஷமுடையவர் களாய்த் தங்கள் சொரூபமின்னதென்று அறியப்படாத படி மனிதருக்கு உபகாரிகளாய்ச் சஞ்சரித்துக் கொண் டிருப்பார்கள். ஆதலால் சிரார்த்தகாலத்தில் நேரிட்ட அதிதியை அவசியம் பூசிக்கவேண்டும். அரசனே! அத்தகைய அதிதியைப் பூசியாமற்போனால் சிரார்த்தஞ் செய்த பலனெல்லாம் அழிந்துபோம். பின்பு அக்கினி யிலே கறியமுதும் காரமான வஸ்துவுஞ் சேராத சுத்த மான அன்னத்தை அந்தப் பிராமணர்களுடைய அங்கீ காரத்தைப் பெற்றுக்கொண்டு அக்கினிக்கும் சோம னுக்கும் இயமனுக்கும் மந்திரங்களோடு மூன்றுதரம் ஆகுதி செய்யவேண்டும். இப்படி ஓமஞ்செய்து மிகுந்த அன்னத்தைப் பிராமணருடைய பாத்திரத்திற் சேர்க்க வேண்டும். பின்பு நன்றாய்ப் பாகஞ் செய்யப்பட்டும் உருசிகரமாயும் இஷ்டமாயுமிருக்கிற அன்னங்களைச் சம்பூர்ணமாக அந்தப் பிராமணருக்குப் பரிமாறி, "இதைத் தேவரீர்கள் திருவுள்ளப்படி அங்கீகரிக்க வேண்டும்" என்று வணக்கமுள்ள வார்த்தைகளினாலே பிரார்த்திக்கவேண்டும். அவர்களும் அங்கீகரித்து மௌ னத்தோடும் முகமலர்ச்சியோடும் நன்றாய் அமுதுசெய்ய வேண்டும். கர்த்தாவும் கோபாதிகளில்லாமலும், துரி தப்படாமலும் அன்போடு வேண்டியவைகளைப் பரி மாறவேண்டும். பின்பு இரக்ஷோக்கின மந்திரம் படித் துப் பூமியில் எள்ளைப் பரப்பி அந்தப் பிராமணரைத் தன் பிதுர்க்களாகப் பாவிக்க வேண்டும்.

இப்படிச் செய்யுஞ் சிரார்த்தத்தில் அவ்வந்தத் தருணங்களிற் "பிதாவும் பிதாமகனும் பிரபிதாமகனும்

இப்போது பிராமணருடைய தேகங்களி லிருந்து கொண்டு என்னால் திருப்தியைப் பொருந்தக்கடவர். பிதாவும் பிதாமகனும் பிரபிதாமகனும் இப்போது என்னுடைய ஓமத்தினாலே ஆப்பியயனஞ் செய்யப்பட்ட மூர்த்திகளாகித் திருப்தியடையக் கடவர். பிதாவும் பிதாமகனும் பிரபிதாமகனும் நான் பூமியிலிட்ட பிண்டத்தினாலே திருப்தியடையக் கடவர். பிதாவும் பிதாமகனும் பிரபிதா மகனும் அன்போடு நான் சொன்ன இந்த வாக்கியங்களினாலே திருப்தியடையக் கடவர். மாதா மகனும் அவன் பிதாவும் அவனுக்குப் பிதாவும் விசுவதேவர்களும் இந்தச் சிரார்த்தத்தினாலே மிகுந்த திருப்தியை யடையக் கடவர். யாக விக்கின காரிகளான அரக்கரெல்லாம் நாசமடையக் கடவர். யக்கியங்களுக்கு ஈசுவரனும் விகாராதிகளில்லாத ஸ்வரூபமுடையவனுமான ஸ்ரீஹரியே இங்கே சகல அவியங்களையும் கவியங்களையும் அமுதுசெய்துகொண் டெழுந்தருளி யிருக்கிறான். அவ் வெம்பெருமானுடைய சான்னித்தியத்தினால் சகலமான ராக்ஷதரும் அசுரரும் உடனே ஓடிப் போகக்கடவர்” என்று சொல்லிப் பிரார்த்திக்கவேண்டும். அந்தப் பிராமணர் அமுது செய்து திருப்தி யடைந்த பின்பு விகிரான்னமிடவேண்டும். பின்பு அவர்களுக்குக் கை முதலானவை சுத்திசெய்து கொள்ளும் பொருட்டுத் தனித்தனியே ஒவ்வொருவருக்கும் தண்ணீர் கொடுக்கவேண்டும். பிறகு திருப்தியடைந்திருக்கிற அந்தப் பிராமணருடைய நியமனம் பெற்று வியஞ்சனாதிகளோடும் எள்ளோடும் கூடின அன்ன பிண்டங்களைச் சாந்தசித்தனாய்ப் போட்டு, பிதுர் தீர்த்தத்தினாலே திலோதகம் விடவேண்டும். மாதா மக விஷயத்திலும் இந்தத் தீர்த்தத்தினாலேயே பிண்ட நிர்வபணஞ் செய்யவேண்டும். தெற்கு நுனியாய்ப் போடப்பட்ட தருப்பைகளில் புஷ்ப தூபாதிகளாலே பூசிக்கப்பட்ட பிண்டத்தைச் சுவாமிகள் அமுதுசெய்த பாத்திர சமீபத்தில் முதன்மையாய்ப் பிதாவுக்கும் பின்பு முறையே பிதாமஹ பிரபிதாமகருக்கும் போடவேண்டும். பிண்டத்துக்காகப் பரப்பப்பட்ட தருப்பைகளின் அடியிலே நாலாவர் முதலானவர்களை

லேபகர்ஷணங்களினாலே உகப்பிக்கவேண்டும். அப்படியே மாதா மஹரையும், கந்தமாலியாதிகளோடு கூடின பிண்டங்களினாலே திருப்தி யடைவிக்கவேண்டும். அரசனே! முதலிலே பிதுர்க்களுக்கு அன்போடு ஸ்வதாகாரஞ்செய்து, அந்தப் பிதுர்க்கள் ஸ்வதாங்கீகாரத்துடன் ஆசீர்வதிக்கப்பெற்று, இயன்றமட்டுந் தக்ஷிணை கொடுக்கவேண்டும். இப்படி தட்சிணை கொடுத்த பின், தேவதிருப்தியைக் காட்டும்படியான வாக்கியங்களை அவர்கள் சொல்லும்படிசெய்து, அவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பிரார்த்தித்துப் பெற்றுக் கொண்டு, முந்திப் பிதுர்க்களுக்கும் பிந்தித் தேவர்களுக்கும விசர்ச்சனஞ் செய்யவேண்டும். மாதாமகருக்கும் அமுதுசெய்வித்தல் தக்ஷிணை கொடுப்பித்தல் விசர்ச்சனம் செய்தல் முதலான வைகளிலே இதுவே கிரமமென் றறிந்துகொள். விசுவதேவதந்திர பக்ஷத்திலே தேவார்த்தமான பிராமணரை முந்தி யர்ச்சித்துப் பின்பு பிதுர் வர்க்கத்தையும் அதன் பின்பு மாதா மஹவர்க்கத்தையும் அர்ச்சிக்க வேண்டும். விசர்ச்சனமோ முந்திப் பிதுர்க்களுக்கும், பிந்தி மாதா மகர்களுக்கும், அதற்கும் பிறகு விசுவ தேவருக்குஞ் செய்யவேண்டும். இவ்வாறு முடித்தபின் இனிமையும் வணக்கமுள்ள வசனங்களினாலே அவர்களை மேன்மைப் படுத்தி வாசல்வரைக்கும் பின்றொடர்ந்துபோய் அவர்கள் விடைகொடுக்கத் திரும்பிவந்து வைசுவ தேவக் கிரியைசெய்து, தனக்குப் பூச்சியரும் பந்துக்களும் பிருத்தியருமான இஷ்டர்களோடு போசனஞ் செய்யவேண்டும். இவ்வாறாகப் பிதுர் சிரார்த்த மாதா மஹ சிரார்த்தங்களைப் பண்ணுவானாகில், அவனுக்குப் பிதுர்க்க ளனுக்கிரகத்தினால் சர்வாபீஷ்ட சித்தியுமுண்டாகும்.

சிரார்த்தத்தில் தௌகித்திரன், குதபம், திலம், இம் மூன்றும் பவித்திரங்கள். அன்றியும் வெள்ளியைச் சொல்லுதல் கொடுத்தல் காட்டல் முதலானவைகளும் பவித்திரங்கள். சிரார்த்தஞ் செய்தவனுக்கும் புசித்தவனுக்கும் குரோதம், வழிநடை, துரிதம், இம்மூன்றும் விடவேண்டியவையாம். விசுவதேவரும் பிதுர்க்களும் மாதாமகரும் சிரார்த்தஞ் செய்பவருடைய குலமெல்லா

வற்றையும் போஷிப்பார்கள். பிதுர்க்களுடைய கணமானது சோமனை யாதாரமாகக் கொண்டது. அந்தச் சந்திரனோ யோகத்தை யாதாரமாகக் கொண்டிருக்கிறான். ஆதலால் சிரார்த்தத்திலே யோகியை நிமந்திரிப்பது மிகச் சிறப்பானது. ஆயிரம் பிராமணருக்கு முன்னே ஒரு யோகி எழுந்தருளியிருந்தால் அவர்களையும் அந்த யஜமானனையும் கடைத்தேறச்செய்ய வல்லவரென்று அறிந்துகொள்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினாறாம் அத்தியாயம்

# சிரார்த்த திரவியங்கள்

சகரமகாராஜனே! கேள். ஹவிசினாலே மாத்திரமன்று. மாமிசங்களினாலேயும், சிலர் காமிய சிரார்த்தஞ் செய்வதுண்டு. இதுநிற்க, சிரார்த்தத்துக்கு மிகவும் விசேஷமான பொருள்கள் எவையென்றால், காலசாகமென்கிற ஒருவகைக் கீரையும், நல்ல தேனும், பிரசாந்திகங்கள் என்கிற ஒருவகைக் காட்டுத் தானியமும், செந்நெல்லும், வெண்சாமை கருஞ்சாமைகளும் வழுதுணை பிரண்டை முதலான காட்டு ஓஷதிவருக்கங்களும், கிழங்குகளும், யவதானியங்களும், உழுந்தும், பயறும், கோதுமையும், நல்லநெல்லும், எள்ளும், மலையகத்தியும், கடுகும், பாகல், பலா, கதலி, அவரை முதலானவைகளும் சிறந்தவையாம். கயை என்னும் திவ்விய க்ஷேத்திரத்தை யடைந்து செய்யுஞ் சிரார்த்தமானது மகா விசேஷமுடையது அதனால் ஜன்மம் சபலமுமாம். இனி ஆகாதவைகளைச் சொல்லுகிறேன். ஆக்கிரயணமென்னுஞ் சடங்கு செய்யாமலறுத்த தானியமும், காராமணியும், அணிவென்கிற அற்பதானியமும், மசூரங்களுடசுரையும், வெண்காயமும், வெள்ளைப்பூண்டும், முள்ளங்கியும், காந்தாரகம் என்கிற சம்பாவும், கரம்பமென்கிற தானியமும், உப்பு மிகுந்த வஸ்துக்களும், உவர் நிலத்தி

லுண்டான வஸ்துக்களும், சிவப்பல்லாத பிசின் களும், பிரத்தியக்ஷமான உப்பும், வாயினுற் சொல்ல நன்ருயிராதவைகளும், கண்ணுக் கினிமையாகாதவை களும், இரவு கொண்டுவந்து சேமித்து வைத்த ஜல முதலானவைகளும், கன்றில்லாத பசுவின்பாலும், பசு மாடு குடித்துத் திருப்தி யடையக்கூடாத அற்பஜலமும், யாருங் கையாளாமல் விட்டிருக்கிற கிணறு முதலானவற் றின் நீரும், துர்க்கந்தமுள்ள ஜலமும், நுரைத்த ஜல மும், ஒற்றைக்குளம்புள்ள மிருகங்களின் பாலும், ஒட்ட கத்தின்பாலும், ஆட்டுப்பாலும், எருமைப்பாலும், மான் பாலும் இவையெல்லாம் சிரார்த்த கருமங்களிலே சேர்க்கலாகா. அன்றியும் நபும்ஸகன், குலத்தாராலே தள்ளப்பட்டவன், சண்டாளன் [மகாபாபி] பாஷண் டன், அருவருக்கத்தக்க நோயுடையவன், வேத தருமங் களை விட்டவன் ஆகிய இவர்களாலும், கோழி நாய் குரங்கு ஊர்ப்பன்றி ஆகிய இவைகளினுலும், இராஜஸ் வலையான ஸ்திரீ, சௌசாசாரஹீனன், பிணமெடுத்துப் பிழைக்கிறவன் என்னும் இவர்களாலும் பார்க்கப்பட்ட இடங்களிலே பிதுர்க்களும் தேவர்களும் அமுதுசெய்ய மாட்டார்கள். ஆதலால் யாரும் பார்க்கக்கூடாத மறை விடத்திலேமிகுந்த பக்தியுடனே பூமியில் எள்ளிறைத்து இராக்கதரை ஓட்டிச் சிரார்த்தஞ் செய்யவேண்டும். நகம் முதலானவைகளோடும், மயிர் பூச்சி முதலான வைகளோடும், கஞ்சி முதலானவைகளோடுங் கூடினது தும் பழயதுமாகாத அன்னத்தைச் சிரத்தையோடு நாம கோத்திரங்களைச் சொல்லி இட்டால், அந்த அன்னம் பிதுர்க்கள் உண்கிற அமிருதாதி யுணவாகப் பரி ணமிக்கும்.

ஓ மகாராஜாவே! கலாபக்கிராமத்தின் உபவனத் திலே மனுபுத்திரனை இக்ஷ்வாகு மகாராஜனுக்குப் பிதுர்க்கள் பாடித்தந்த கீதமொன்று வழங்குகின்றது; "எவர் கயைக்குப்போய் நமக்குப் பிண்டம் போடுவார் களோ, அப்படிப்பட்ட யோக்கியர் நம்முடைய குலத் திற் பிறப்பார்களா? எவர் பாத்திரபத கிருஷ்ணத் திரயோ தசியிலும், மாக அமாவாசையிலும், தேன் நெய்களுட னே பாயசான்னங் கொடுப்பார்களோ, அப்படிப்பட்டவர்

நங் குலத்திற் பிறப்பார்களா? எவர் * கௌரியென்கிற கன்னிகையை நல்ல பாத்திரத்தில் தானஞ் செய்து விவாகம் பண்ணுவிப்பார்களோ, † நீலமென்கிற விருஷபத்தையாவது விடுவார்களோ, விதிப்படி தக்ஷிணை கொடுத்து அசுவமேதமாவது செய்வார்களோ, அப்படிப்பட்டவர் நம்முடைய குலத்திற் பிறப்பார்களா?" என்றிப்படித் தங்கள் மனோரதத்தைக்காட்டி அவற்றைச் சிறப்பித்திருக்கிறார்கள். $

பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

## பதினேழாம் அத்தியாயம்

# நக்கினசொரூபம்

ஸ்ரீ பராசர மகாமுனிவர் தம்முடைய சீஷரை நோக்கி, ஓ மயித்திரேயரே! பூர்வத்தில் சகரமகாராசனுக்கு ஔர்வர் அருளிச்செய்த சதாசாரத்தை உமக்கு நன்றாய்ச் சொன்னேன். இந்தச் சதாசாரத்தைக் கடந்தால் எவனும் நன்மையைப் பெறமாட்டான் என்று அருளிச்செய்ததைக் கேட்டு, மயித்திரேயர் வினவுகிறார். "சுவாமீ! ஷண்டன், அபவித்தனென்று சொல்லப்பட்ட நபும்ஸகன், தள்ளப்பட்டவன் முதலானவர்களை அருளிச்செய்தீர். நக்கினன் என்பவனை அருளிச்செய்தீரில்லை. நக்கினனென்பவன் யார்? எவ்வித நடக்கையினால் அப்பெயர் வந்தது? இந்த நக்கின ஸ்வரூபத்தைத் தேவரீர் அருளிச்செய்யக் கேட்க வேண்டுமென்று விரும்புகிறேன். தருமவான்களுக்கெல்லாம் சிரேஷ்டரான தேவரீருக்குத் தெரியாத விஷயமில்லையாகையால் கிருபைசெய்து நக்கின ஸ்வரூபத்தை

* கௌரி என்றால் பத்து வயதுள்ள பெண்.

† நீலம் என்றால் உடம்பெல்லாஞ் சிவந்து முகமும் வாலும் வெண்மையாய் கொம்புங் குளம்பும் ஒருவாறு வெளுத்திருக்கிற எருது.

$ பிதுர்லோகத்திலுள்ள அக்கினிஷ்வாத்தாதி பிதுர்க்கள் கர்மிகள் செய்யுஞ் சிரார்த்தத்தினால் திருப்தியடைந்து, கர்த்தாவின் பிதா முதலானவர்க்கு அங்கங்கே தகுந்த திருப்தியை யுண்டாக்குவார்களென்பது சித்தாந்தம்.

யருளிச்செய்யவேண்டும்'' என்று பிரார்த்திக்க, ஸ்ரீபராசரமகரிஷி அருளிச் செய்யலாயினர்:—

இருக்கு யசுர் ஸாமம் என்கிற பெயரையுடைய வேதமானது பிராமணாதி வர்ணங்களுக்கு மறைவாயிருக்கின்றது. அப்படிப்பட்ட வேதத்தை விட்டவன் யாரோ அவனே நக்கினன் என்று அறியும். நக்கினன் என்கிற சொல்லுக்கு உலகத்தில் வஸ்திர மில்லாமல் திகம்பரனாயிருக்கிறவன் என்று அர்த்தமானாலும், சாஸ்திரத்தில் நக்கினனென்கிறது வேதரூபமான மறைவை இழந்தவனுக்கே யென்று உணர்ந்துகொள்ளும். திரய என்கிற இம்மூன்று வேதமும் வருணங்களுக்கு மறைவு மாத்திர மன்று, சம்ரக்ஷணமாயுமிருக்கிறது. இப்படிப்பட்ட இதை மோகத்தினாலே விட்டு விடுகிறவன் எவனோ அவன் நக்கினனென்று சொல்லப்படுவான். இன்னு மொன்று சொல்லுகிறேன் கேளும். சகல தருமங்களையும் அறிந்த என் பிதாமஹரான வசிஷ்ட மகாமுனிவர் பீஷ்மருக்கு அருளிச்செய்த நக்கினஸ்வரூப சம்பந்தமான விஷயத்தைச் சொல்லுகிறேன்: பூர்வத்தில் ஒருகாலத்தில் தேவதைகளுக்கும் அசுரருக்கும் தேவமானத்தினாலே நூறுவருஷமளவும் மகத்தான யுத்தம் நடந்தது. அதில் ஹ்ராதன் முதலான அசுரராலே தேவதைகள் தோற்கடிக்கப்பட்டு, மிகுந்த துக்கமுள்ளவர்களாய்த் திருப்பாற்கடலின் வடகரையிற் சென்று, ஸ்ரீவிஷ்ணுவின் திருவுள்ள முகக்கும் பொருட்டுத், தவஞ்செய்து, "சகல லோகநாசனான ஸ்ரீவிஷ்ணுவின் உகப்புக்காக நாங்கள் எந்த வார்த்தையைச் சொல்வோமோ அதனாலே இப்போதே ஸ்ரீவிஷ்ணுபகவான் பிரசன்னனாகக் கடவன். எந்த மகாத்துமாவி னிடத்திலிருந்து சகல பிரபஞ்சமும் தோன்றினவோ, அவையெல்லாம் மீண்டும் எங்கே ஒடுங்குமோ, அப்படிப்பட்டவனை ஸ்தோத்திரஞ் செய்யவல்லவன் யாருண்டு? ஆனாலும் சத்துருக்கள் செய்த அவமானத்தினாலே அடியேங்கள் தேஜோபலங்களை இழந்தவர்களாய் அபயம் வேண்டிச் சக்தியுள்ளமட்டுந் துதிக்கின்றோம். எம்பெருமானே! உனது உண்மைநிலை வாக்குக்கு எட்டுமோ? எம்பெருமானே!

நீயே பூமியும் ஜலமும் அக்கினியும் வாயுவும் ஆகாச மும், மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களாகிய நான்குவித அந்தக்கரணமும், பிரகிருதியும், அந்தப் பிரகிருதிக்கு மேற்பட்ட புருஷனுமா யிருக்கிறாய். பிரம முதல் திருணமீறாக உருவப்பட்டதும் உருவம்பெறாதது மாய்க் கால தேசபேதமுள்ளதா யிருக்கிற இந்தப் பிர பஞ்சமெல்லாம் உன்னுடைய ஒரு திருமேனியா யிருக் கின்றது. அதற்குள்ளே ஆதியில் உன் நாபிக்கமலத்தி லிருந்து சிருஷ்டி நிமித்தமாய் உண்டான எந்த உருவ முளதோ அந்தப் பிரமஸ்வரூபத்துக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றோம். இந்திரன் சூரியன் உருத்திரன் வசுக்கள் அவிசுகள் மருத்துக்கள் சந்திரன் என்ற பேதங்களை யுடைத்தாய், நாங்களாகிற உன்னுடைய ஒரு ரூபம் யாதுண்டோ அந்தத் தேவஸ்வரூபத்துக்கு தண்டம் சமர்ப்பிக்கின்றோம். கோவிந்தனே! ஜம்பமே மேலிட்டதாய் விவேகங் குறைந்ததாய் பொறுமையும் மனதையடக்கலு மில்லாததாய் உன்னுடைய உருவம் எதுவோ அந்த அசுர ஸ்வரூபத்தைச் சேவிக்கின் றோம். மந்தவிவேகமான எந்த ரூபத்திலே நாடிகள் அதிக ஞான வோட்ட மற்றவைகளா யிருக்கின்றனவோ அப்படிப்பட்ட சப்த முதலிய விஷய ருசியுள்ள உனது யக்ஷஸ்வரூபத்துக்குப் பிரணமம் பண்ணுகின்றோம். ஓ புருஷோத்தமனே! மிகக் கொடுமையுள்ளதாயும் பயங் கரமாயும் மாயாமயமாயும் உன்னுடைய கறுத்தரூபம் யாதுண்டோ அந்த ராக்ஷசஸ்வரூபத்துக்கு வந்தனஞ் செய்கின்றோம். ஓ ஜனார்த்தனனே! சுவர்க்கஞ் சேரத் தக்கபுண்யவானுடைய புண்ணியபலத்தை யுண்டாக்கு கின்றது எதுண்டோ உன்னுடைய தரும ஸ்வரூப மாகிய அதற்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றோம். சந் தோஷமே மிகுந்ததும் ஜலாதிகளோடு சேராததும் எங்குஞ் சஞ்சரிக்கிற சக்தியுள்ளதும் சஞ்சாராதி கிரியைகளில் நிச்சயமான பிரயோசன முள்ளதுமான உன்னுடைய சித்தஸ்வரூபத்தைத் தொழுகின்றோம். பொறுமைக்கு இடமாயும் கொடியதாயும் அனுபவத் தைச் சகிக்கிறதாயும் இரு நாக்குடையதாயுமுள்ள உனது நாகஸ்வரூபத்துக்கு வந்தனஞ் செய்கின்றோம்.

மகாஞானமுடையதும் சாந்தமானதும் இராகத்துவேஷாதி தோஷங்களில்லாததுமான ரிஷிரூபமான உன்னுடைய வியாபகஸ்வரூபத்துக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றோம். ஓ புண்டரீகாக்ஷனே! கற்பத்தின் முடிவிலே எந்த ஸ்வரூபமானது தடையில்லாமற் சகல பூதங்களையும் பக்ஷிக்கின்றதோ உன்னுடைய காலஸ்வரூபமாகிய அதற்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றோம். எந்த ரூபமானது முடிவில் தேவர் முதலான யாவற்றையும் பட்சித்துவிட்டு நர்த்தனஞ் செய்கிறதோ அப்படிப்பட்ட உன்னுடைய உருத்திர ரூபத்துக்குப் பிரணமஞ் செய்கின்றோம். இரஜோகுணப் பிரவிர்த்தியினாலே கருமங்களைச் செய்யுந்தன்மையுள்ள உன்னுடைய நரஸ்வரூபத்தைப் பணிகின்றோம். ஓ சர்வாந்தர்யாமியே! * இருபத்தெட்டு வதங்களோடு கூடினதாய் சாஸ்திர வழியைக் கடந்து நடக்குந் தன்மையுள்ள பசுரூபம் யாதுண்டோ உன்னுடைய தாமஸ ஸ்வரூபமாகிய அதற்கு நமஸ்காரஞ் செய்கின்றோம். யாகங்களுக்கெல்லாம் அங்கமாயும் உலகத்தில் பிரயோஜனத்துக்குச் சாதகமாயும் மரம் கொடி செடி பூண்டு புல் மலை என்கிற அறுவகைகளை யுடையதாயு மிருக்கிற உனது முக்கிய சொரூபத்தை வணங்குகின்றோம். திரியக்கு மனுஷ்யன் தேவன் முதலாகவும், ஆகாயம் சத்தம் முதலாகவும் உள்ள எல்லாவற்றிற்கும் முதற்காரணமான வுன்னுடைய சர்வஸ்வரூபத்தை அடிபணிகின்றோம். ஓ பரமாத்துமாவே! பிரதானம் புத்தி இவை முதலான வடிவுள்ள யாவற்றையுங் காட்டிலும் வேறாய் மேன்மையான உருவம் யாதுண்டோ, ஒப்பற்றதும் காரணமான பிரதானத்திற்குங் காரணமான உன்னுடைய அந்தப் புருஷரூபத்தைத் திருவடி தொழுகின்றோம். வெண்மை முதலானவையும் நெடுமை முதலானவையும் கனம் முதலானவையும் இல்லாதே யாதொரு விசேஷணமும் பொருந்தக் கூடாததாய்ச் சுத்தமான பக்தஸ்வரூபத்தைக்காட்டிலும் சுத்தமாய் மகா யோகிகளுக்கே விஷயமாகத் தக்கதாயிருக்கிற உன்னுடைய முக்த புருஷ ஸ்வரூபத்தைக் குறித்து வந்த

* இருபத்தெட்டு வதங்களை 27-பக்கத்திற் காண்க.

னஞ் செய்கின்றோம். எங்களுடைய தேகங்களிலும் அன்னியருடைய தேகங்களிலும் மற்றுமுள்ள எல்லா வற்றிலும் நாசமில்லாததாயும் இயற்கையாயும் ஒரே தன்மையாயும் இருக்கின்றதும், வேறாய்ப் பிரிக்கத்தக்க ஒரு வஸ்துவாக இல்லாததும் ஆகிய உன்னுடைய பரப்பிரம சொரூபத்துக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றோம். சேதனு சேதனத்துமகமான இந்தச் சகல பிரபஞ்சமும் பரமபதத்திலிருக்கிற சகல ஆத்துமாக்களும் அவிகாரியும் நித்தியனுமான எவனுடைய சொரூபமோ, அந்த சகல நித்தியகாரணமாயும் சர்வ ஸ்வாமியாயும் சர்வசக்தனுயு மிருக்கிற ஸ்ரீ வாசுதேவனைச் சரண மடைகின்றோம், என்று ஸ்தோத்திரஞ் செய்தனர்.

உடனே அந்தத் தேவதைகள் எதிரிலே திருவாழி திருச்சங்கு முதலான திவ்வியாயுத சமேதனாய்ப் பெரியதிருவடி நயினார் திருத்தோளின்மேல் எழுந்தருளி, நீலமேகசியாமளனாய்ச் சேவைசாதிக்கிற ஸ்ரீமந் நாராயணனைக் கண்களாலே கண்டு, அநேகவாயிரந்தரம் தண்டம் சமர்ப்பித்து, "சுவாமீ! அடியேங்களை அனுக்கிரகித்தருளவேண்டும். உன்னையே தஞ்சமாகப் பற்றின அடியேங்களை அசுரரிலிருந்து காத்தருளவேண்டும். ஹராதன் முதலான அசுரரெல்லாம் பிரமாவின் ஆக்கினையையுங் கடந்து எங்களுக்குச் சேரவேண்டிய மூன்று லோக ஹவிர்ப்பாகங்களையும் அபகரித்துக் கொண்டார்கள். நாங்களும் அந்த அசுரரும் சர்வாத்துமகனான உன்னுடைய அமிசங்களே யாகின்றோம். ஆனாலும் அவித்தையினு லுண்டான பேதத்தினாலே இந்த லோகத்தை வேறாகப் பார்க்கிறோ மாகையால் இப்படிப் பிரார்த்திக்கலாயிற்று. நாங்கள் தேவர்களானாலும் வேதமார்க்கத்தை யனுசரித்துத் தங்களுக்குரிய தருமங்களில் நின்றவர்களாய்த் தவத்தோடுகூடி யிருக்கிற அவ்வசுரரை வெல்ல அடியேங்களுக்குச் சக்தியில்லை. சர்வாத்துமகனான ஓ பகவானே! அடியோமெல்லாம் அவ்வசுரரை எதனாலே வெல்லமாட்டுவோமோ அப்படிப்பட்ட வுபாயத்தை அடியேங்களுக்குக் கொடுத்தருளவேண்டும்" என்று பிரார்த்திக்க ஸ்ரீ விஷ்ணுபகவான் தமது திருமேனியிலிருந்து ஒரு மாயாமோகனை யுண்

டாக்கி, அந்தத் தேவதைகளுக்குக் கொடுத்து, அவர்களைக் கடாக்ஷித்து, "ஓ தேவதைகளே! இந்த மாயா மோகன் அந்தத் தைத்தியரை மோஹிக்கும்படிச் செய்வான். அதனாலே அவர்கள் வேதமார்க்கத்துக்குப் புறத்தவர்களாய் உங்களாலே கொல்லத்தக்கவராவார்கள். இப்படி செய்யலாமோவென்றால் லோகரக்ஷத்திலிருக்கிற எனக்கு பிரமாவின் கட்டளையைக் கடந்து நடக்கிறவர்கள் தேவராலும் அசுரராலும் மற்ற யாராலும் அவசியம் வதிக்கத்தகுந்தவர்களே யாகின்றார்கள். ஆதலால் நீங்கள் அஞ்சவேண்டாம். இந்த மாயாமோஹன் உங்களுக்கு முந்திப்போய் உங்களுடைய உபகாரத்துக்கு ஹேதுவாவான்" என்றிப்படி அருளிச்செய்யக் கேட்டுத் தேவரெல்லாம் சந்துஷ்டியடைந்தவர்களாய் அந்தப் பெருமாளைத் திருவடி தொழுது தங்களிடஞ் சென்றார்கள். அந்த மாயாமோகனும் அவர்களுடன் கூடவேசென்று அந்த மகா அசுரரிடத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினெட்டாம் அத்தியாயம்

# ஜயினபவுத்த மதப்பிரவர்த்தனையும் சததனு உபாக்கியானமும்

கேட்டீரோ மயித்திரேயரே! அந்த மாயா மோகன் நருமதை நதியின் கரைக்குப்போய், அங்கே சிரத்தையோடு தவஞ் செய்துகொண்டிருக்கிற அசுரரைக் கண்டு, திகம்பரனாகவும் மழுங்கச் சிரைத்த தலையுடையவனாகவும், மயிற்றோகைக்கற்றையைக் கையிலேந்தியவனாகவும் அவர்கள் கிட்டப்போய், "ஓ அசுர ராஜாக்களே! எதற்காகத் தவஞ்செய்கிறீர்கள்? நீங்கள் செய்யுந் தவத்திற்கு இம்மையிற் பயனை வேண்டுகிறீர்களா? மறுமையிற் பயனை வேண்டுகிறீர்களா? சொல்லுங்கள்" என்று இனிதாகச் சொல்லக்கேட்டு, அவ்வசுரர் "ஓ புத்திமானே! நாங்கள் பரலோக லாபத்திற்காகவே

தவஞ் செய்கின்ஹாரம். இவ்விஷயத்தில் நீர் என்ன சொல்ல நினைக்கின்றீர் சொல்லும்" என்று கேட்க, மாயாமோகன் சொல்லலுற்றான்: ஓ தைத்தியர்களே! உங்களுக்கு முத்தி வேண்டுமாகில் நான் சொல்லுந் தருமங்களைச் செய்யுங்கள்; மோக்ஷத்திற்கு வழியாயிருக்கிற இந்தத் தருமத்திற்கு ஏற்றிருக்கிறீர்கள், சந்தேகமில்லை; இத்தருமமே முத்திக்கு ஏற்றது. இதைவிட வேறான உயர்ந்த தருமமில்லை, இத்தருமத்தில் நீங்களிருப்பீராகில் சுவர்க்கமானாலும் மோட்சமானாலும் வேண்டியதைப் பெறுவீர்கள்; நீங்களெல்லாம் மகா பலவான்களும் புத்திசாலிகளு மாகையாலே இத்தருமத்திற்கே தகுந்திருக்கிறீர்கள்.

அன்றியும், இது தருமத்தின்பொருட்டுமாகும். அதருமத்தின்பொருட்டுமாகும்: இது சத்துமாயிருக்கும் அசத்துமாயிருக்கும். இது மோட்சத்தின் பொருட்டாகும் மோட்சத்தின் பொருட்டாகாது, இது மிகவும் பரமார்த்தமா யிருக்கும் பரமார்த்தமாயிராது, இது செய்யத்தகுந்ததுமாய் செய்யத்தகாததுமா யிருக்கும். இஃது இப்படிப்பட்டதன்று இப்படிப்பட்டது தான், இது திகம்பருடைய தருமமாயும் வெகு வஸ்திரந் தரித்தவருடைய தருமமாயு மிருக்கின்றது என்று ஏழு விதமான [அநேகாந்த] ஒருபடிப்படாத வாதங்களைக் காட்டினார் என்று சொல்லி அநேகவிதமான யுக்தி பிரமாண தர்க்கங்களினாலே அவர்களை வேதமார்க்கத்தினின்று மிழுத்துவிட்டு அவ்வசுரர் தருமங்களை விடும்படிச் செய்தான். [அர்ஹத] தகுந்திருக்கிறீர்கள் என்று அடிக்கடி சொல்லிவந்தபடியினாலே அவனுக்கு அருகனென்றும், அவர்களுக்கு ஆர்ஹதர் என்றும் பேருண்டாயிற்று. இப்படி *அருகமத போதனைகளாலே அத்தைத்தியர் கலங்கி வேததருமங்களை விட்டு, அந்தத் தருமத்தையே சிரத்தையோடு கைக்கொண்டு நடந்தார்கள். இப்படி இவர்களானதுமல்லாமல் இவர்களுடைய போதனையினாலே பிறரும் அவர்களினாலே மற்றும் பிறரும் அவர்களாலே இன்னும் பிறருமாகச் சிலநாட்களுக்குள்ளேயே அநேகர் அவ் வருகமதத்த ரானார்கள்.

* அருகமத மென்றாலும் ஜயினமத மென்றாலும் ஒன்றாம்.

ஓ மயித்திரேயரே! இப்படியானபின்பு அம்மாயா மோகனனவன் அவ்வேடத்தை விட்டுச் சிவந்த வஸ்திரந் தரித்தவனாய் ஜிதேந்திரிய ரூபங்கொண்டு, மற்றுமுள்ள அசுரரிடத்துக்குப் போய்ச் சாந்தமாயும், மதுரமாயும் சிலவார்த்தைகளைச் சொன்னான். அசுரரே! நீங்கள் இப்போது செய்துவருந் தருமம் சுவர்க்கத்திற்காகவா அல்லது மோட்சத்திற்காகவா? எதற்கானாலும் ஆகட்டும், ஜந்து ஹிம்சையுள்ள இந்தத் துஷ்ட தருமங்களாலே பயனுண்டோ? போதும் போதும். நான் சொல்வதை யறிந்துகொள்ளுங்கள். காணப்படுகின்ற சகலமும் விக்கியானமயமென்று அறியுங்கள். இது நல்ல ஞானிகள் சொன்னது. ஆதலாலே உலகமெல்லாம் விக்கியானமென்றே உணர்ந்து கொள்ளுங்கள். இவ்வுலகமெல்லாம் யாதொரு ஆதாரமுமில்லாததுமாய் பிராந்தி ஞானத்தினா லுண்டான பொருளாயு மிருக்கின்றது. இப்படி அநாதியாகவே தோஷமுள்ளதாய் மிகவும் சம்சார சங்கடத்திலே சுழன்றுகொண்டிருக்கின்றது. இக்காரியமெல்லாம் இப்படியே [புத்யத புத்யத] "அறிந்து கொள்ளுங்கள் அறிந்து கொள்ளுங்கள்" என்று அடிக்கடி சொன்னதனாலே, புத்தன் என்கிற பெயருள்ளவனாகி அந்த மாயாமோகன், வேதவிரோதமான யுக்திகளினாலே அந்த அசுரரையெல்லாம் மோகிப்பித்து, வேததருமங்களை விடச்செய்தான். இவ்வாறாகச் சொன்ன பலவகைப்பட்ட யுக்தி வார்த்தைகளினாலே அவ்வசுரர் வைதிக தருமங்களைத் தாங்கள் விட்டதுமன்றிப் பிறருக்கும் போதித்துவிடச் செய்தார்கள். இவ்விதமாக அவரவர்களாலே பிறர்பிறர் போதிக்கப்பட்டுப் பௌத்த சமயத்தைக் கைக்கொண்டு வந்தார்கள்.

மீண்டும் அந்த மாயாமோகன் வேறுவிதமான அநேக பாஷண்ட கற்பனைகளினாலே பற்பல அசுரரை மோகிப்பித்து, சொற்ப காலத்துக்குள்ளே வைதிக மார்க்கத்தை விடச்செய்தான். அதனால் அவ்வசுரர் வேதத்தையும் தேவர்களையும் யாகாதி கருமங்களையும், அந்தணரையும் தூஷிக்கத் தலைப்பட்டார்கள். எப்படியெனில், "இம்சை மகாபாவமென்று சொல்லிய வேதமே

மறுபடியும் அந்த இம்சையைத் தருமசாதனமாகச் சொன்னது எவ்வளவும் யுக்திக்கு ஒத்ததன்று; அக்கினியிற் சொரிந்த அவிசுகள் எரிக்கப்பட்டுச் சாம்பலாய்ப் போனவை பயனைத் தருமென்பது ஒன்று மறியாத பையல் பேச்சைப் போன்றதாம்; அநேக யாகங்கள் செய்து இந்திரத்துவம் அடைந்தவன் வன்னிக்கட்டை முதலான கட்டைகளைத் தின்னும்படி நேரிடுமானால் அக்கட்டைகளின் இலைகளைத் தின்னுகிற மிருகப் பிறப்பே இந்திர ஜனனத்திலும் விசேஷமன்றோ? யாகத்திற் கொல்லப்பட்ட பசுவுக்குச் சொர்க்கம் உண்டாகிறதானால் அந்த யஜமானன் தன் பிதாவையே யாகத்திற் கொல்லலாமன்றோ? சிரார்த்தத்தில் ஒருவன் புசிக்க மற்றொருவனுக்குத் திருப்தி யுண்டாகுமானால் வழிநடக்குந் தன் பந்துக்கள் சோற்று மூட்டை சுமந்து வருத்தப்படாம லிருக்கும்படி ஜனங்கள் ஏன் மற்றொருவருக்கு அன்னமிடக்கூடாது?" என்று இவ்விதமான தூஷணை செய்யும்படிக்குக் கற்பித்து, மாயாமோகன், "பார்த்தீர்களோ அசுரரே! புத்திசாலிகளான நீங்கள் இதை நம்பாமல் உபேக்ஷைசெய்வதே நல்ல காரியமாம். ஓ மகா அசுரரே! ஆப்தவாக்கியம் என்று நீங்கள் சொல்லுகிறீர்களே அஃதென்ன? ஆகாயத்திலிருந்து குதித்ததோ? இல்லையே. ஆதலால் யார் சொன்னாலும் யுக்தி யுக்தமா யிருக்கிற வாக்கியத்தைத்தான் நானும் உங்களைப்போன்ற புத்திசாலிகளும் அங்கீகரிக்க வேண்டுமேயல்லாமல் வீணே யொரு நம்பிக்கை வைத்து அங்கீகரிக்கலாகாது" என்று சொன்ன வஞ்சன வாக்கியங்களினாலே அவ்வசுரரி லொருவனாகிலும் வேதத்தை விரும்பினானில்லை.

இவ்வாறு அசுரரெல்லாம் வழிதப்பி நடக்கக் கண்டு அந்தத் தேவதைகள் மிகவு முயற்சியோடு யுத்தசன்னத்தங்கள்செய்து மகத்தான யுத்தத்தை நடத்த, அந்த யுத்தத்திலே நல்வழிக்கு விரோதிகளான அவ்வசுரரெல்லாம் மடிந்துபோனார்கள். பாரும் முனிவரே! முன்பு அவ்வசுரர் வைதிகமதாசாரமாகிய பலமுள்ள கவசத்தைப் பூண்டிருந்தபடியினாலே சத்துருக்களுக்கு அசாத்தியரா யிருந்தார்கள். பின்பு அக்கவசமாகிய

காப்பு இல்லாமையாலே எளிதிலே ஜயிக்கப்பட்டுப் போனார்கள். எந்தச்சனங்கள் அப்படிப்பட்ட துர்மதங் களிற் பிரவேசித்தவர்களோ அவர்களெல்லாம் வேத மென்னுங் காப்பை யிழந்தமையாலே நக்கினரேயாவார் கள். இங்குப் பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என்னும் நான்கு ஆச்சிரமத்தோரேயல்லாமல் ஐந்தாவனொருவனில்லை. ஒருவன் கிருகஸ்தாச்சிரமத்தை விடுவனாகில் அவன் வானப்பிரஸ்தாச்சிரமமாகிலும்யதி யாச்சிரமமாகிலும் உடனே யடையவேண்டும். அப் படியின்றி யாதோ ராச்சிரமத்தையும் அடையாமலிருப் பனாகில் அவனும் நக்கினனென்றே சொல்லப்படுவான். எவன் வேதம் விதித்த நித்தியகருமங்களைச் செய்யச் சத்தி யுள்ளவனாயிருந்தும் செய்யாமல் விடுகின்றானோ அவன் அந்த நாளிலேயே பதிதனாகின்றான். ஆகிலும் பிராயச்சித்தத்தினாலே அவன் சுத்தனாகலாம். ஒருவன் யாதொரு ஆபத்து மில்லாமலிருக்க ஒரு பக்ஷகாலம் நித் திய கருமங்களை விடுவனாகில் அவன் விசேஷமாய்ப் பதிதனாகின்றான். அப்படிப்பட்டவன் மகாப் பிராயச் சித்தத்தினாலே சுத்தியடையலாம். ஒருவருஷகாலம் எவன் நித்தியக்கிரியை செய்யாமல் விட்டானோ அவன் மகா பாதகமுள்ளவன். அவனைப் பார்த்தவன் அந் தத் தோஷம் நிவர்த்தியாகும்பொருட்டுச் சூரிய தரிச னஞ் செய்யவேண்டும். அந்த மகாபாவியைத் தீண்டி னால் உடுத்த வஸ்திரத்தோடு ஸ்நானஞ் செய்யவேண் டும். அந்தப் பாவிக்கோ யாதொரு பிராயச்சித்தமு மில்லை. தேவரிஷி பிதுர்பூதங்கள் எவன் வீட்டில் பூசிக் கப்படவில்லையோ அவனைக்காட்டிலும் பாவி யுலகத்தி லில்லை. எவனுடைய வீடும் உடம்பும் தேவர் முதலானா ருடைய இன்பமில்லாத பெருமூச்சினாலே கெட்டிருக் கின்றனவோ அந்தப் பாவியோடுகூட உட்காருதல் முத லான சம்பந்தத்தைச் செய்யலாகாது. அப்படிப்பட்ட பாவிகளோடு ஒரு வருஷகாலம் சம்பாஷித்தல் க்ஷேம விசாரணை செய்தல் கூடவிருத்தல் முதலானவைகளைச் செய்பவனுக்கு அவனோடு சமானமான பாதகமே யுண் டாகும். அந்த மகா பாதகன் வீட்டிலுண்பதும் ஒரு படுக்கையிற் படுப்பதும் ஓரிடத்திலே கூடியிருப்பது

மாகிய விசேஷ சம்பந்தங்களைச் செய்பவன் உடனே அவனைப்போல மகாபாதகனாவான். அந்தணர் முதலிய நான்கு வருணத்தாரும் தங்களுக்குரிய தருமத்தை விட்டு இழிவான கருமங்களி லிருப்பாராகில் அவர்கள் நக்கினர் என்ற பெயரை யடைவார்கள். எவ்விடத்தில் நான்கு வருணத்தாருக்கும் அத்தியந்த சங்கரமுண்டாயிருக்கிறதோ அங்கே நன்னடக்கை யுள்ளவரிருப்பது மிகக் கேட்டிற்குக் காரணமாகும். ஏனென்றால், இருடி தேவாதி முதலானவரைப் பூசியாமற் புசிக்கிறவனோடு பேசினாலும் நரகமுண்டாகு மல்லவோ. ஆதலால் யோக்கியரா யிருப்பவர்கள், இவ்வகையான பலவித நக்கினரோடு சம்பாஷண முதலான சகல சம்பந்தங்களையும் எப்போதும் விட்டிருக்கவேண்டும். தேவ பிதுர்க்களைக் குறித்துச் செய்யுஞ் சிரார்த்தமும் இப்படிப்பட்ட நக்கினராலே பார்க்கப்படுமாயின் அவர்களுக்குப் பிரீதியை யுண்டாக்கமாட்டாது.

ஓ மயித்திரேயரே! ஒருகதை கேட்டீரோ? பூர்வ காலத்திலே சததனென்று பிரசித்தனான அரசன் ஒருவனிருந்தான். அவனுக்குப் பத்தினி சைப்பியை என்பவளொருத்தி தன் கணவனுக்கு உரிய தருமங்களையே முக்கியமாகக் கொண்டவளா யிருந்தாள். அவளோ மகா பதிவிரதை. சகல லக்ஷணங்களோடுங் கூடியவள். இப்படிப்பட்ட மனையாளோடுகூட அவ்வரசன் மிகுந்த மன நிலமை யுள்ளவனாய் ஜபங்கள் ஓமங்கள் தானங்கள் உபவாசங்கள் அர்ச்சனைகள் முதலானவைகளினாலே தேவ தேவனாய் எங்கும் நிறைந்தவனான ஸ்ரீ ஜனார்த்தனனை ஆராதித்து வந்தான். இப்படி யிருக்க, ஒருகாலத்தில் அந்தத் தம்பதிக ளிருவரும் கார்த்திகை ஏகாதசியில் உபவாசமிருந்து கங்காநதியின் தீர்த்தத்தில் ஒருமிக்க நீராடிக் கரையேறினார்கள். அப்போது அங்கே யொரு பாஷண்டி எதிராக வரப்பார்த்து அவ்வரசன் பத்தினியானவள் அவனோடு பேசாமல் மௌனமாகவே யிருந்து அவனைப் பார்த்ததோஷம் போவதற்குச் சூரியதரிசனஞ் செய்தாள். அவ்வரசனோ தனக்கு வில்வித்தை கற்பித்த ஆசிரியனுக்கு அப்பாஷண்டி சிநேகிதனென்கிற கௌர

வத்தை முன்னிட்டுச் சற்றுநேரம் அவனோடு சம்பாஷித்துக் கொண்டிருந்தான். பின்பு அவ்விருவருங் கூடி ஸ்ரீமந் நாராயணனுக்குத் திருவாராதன முதலானவை செய்து வந்தார்கள். பின்பு காலமுறையிலே அவ்வரசன் மரணமடைய அவளும் அவனோடு உடன்கட்டையேறினாள். பின்பு அவ்வரசனானவன் உபவாச விரதத்திலே பாஷண்ட சல்லாபஞ்செய்த அபசாரத்தினாலே நாயாகப் பிறந்தான். அவ்விராஜபத்தினியோ காசிராஜாவுக்குப் புத்திரியாய்ப் பிறந்து சர்வலக்ஷண சம்பூர்ணையாய் மிகுந்த கல்வித்தேர்ச்சியுமுடையவளாய்ப் பூர்வஜன்ம ஞானமுமுள்ளவளா யிருந்தாள். அவளை அவளுடைய தகப்பனாகிய காசிராஜன் கலியாணஞ் செய்துகொடுக்க எத்தனப்படுகையில் அந்தப்பெண், தனக்கு இப்போது கலியாணம் வேண்டுவதில்லையென்று சொல்லித் தகப்பனுடைய முயற்சியைத் தடுத்து விட்டாள். பின்பு அவள் தன் பர்த்தா நாயாயிருப்பதைத் திவ்விய ஞானத்தினாலறிந்து விதிசையென்கிற நகரத்திற்போய் நாயாயிருக்கிற தன் பர்த்தாவைக் கண்டு தினந்தோறும் அன்போடும் மரியாதையோடும் நல்ல உணவுகளைக் கொடுத்துவந்தாள். அந்த நாயானது அவள் கொடுக்கு முணவுகளையுண்டு, வெகு சந்தோஷத்தினாலே அவளுக்குத் தன்சாதி யியல்பின்படி மிகப்பணிவான செய்கைகளைச் செய்து வந்தது. அதைக்கண்டு அவ்விராஜ கன்னிகையானவள் மிக வெட்கமுற்றவளாய் அந்நாயை நோக்கிக் கும்பிட்டு "ஐயா, மகாராஜாவே! நீர் விரததினத்திலே தீர்த்தஸ்நானஞ் செய்தபின் ஒரு பாஷண்டியோடு தாக்ஷிணியத்தினாற் பேசினீரே; அந்தப் பாதகத்தினாலன்றோ இவ் ஈனமான நாய்ப் பிறப்பிற்பிறந்து உம்மடியாளாகிய எனக்கு வணக்கஞ் செய்கிறீர். இதை நீர் நன்றாய் நினைத்துக்கொள்ளும்" என்று சொல்லி நினைப்பு மூட்டினாள். இப்படி அவள் சொன்னதைக்கேட்டு அந்நாயுருவமான அரசன் நெடுநேரஞ் சிந்தித்து முன் ஜனனத்து நினைப்பைக் கொண்டு மிகுந்த வெறுப்படைந்து அப்பட்டணத்தை விட்டு வெளியிலோடி மலைத்தடத்தினின்றுங் கீழே வீழ்ந்து மரித்து நரிப்பிறப்பை யடைந்தான். பின்பு அவ்

விராச குமாரி ஞானதிருஷ்டியினாலே தன் புருஷனுக்கு நேரிட்ட இரண்டாம் பிறப்பையறிந்து கோலாஹலமெனும் பருவதத்திற்குப்போய் நரியாயிருக்கிற தன்புருஷனைக்கண்டு முன்போலவே வணக்கத்துடனே "ஐயனே! நீர் சுனகமா யிருந்தபோது நான் பாஷண்ட சம்பாஷணத்தால் நேர்ந்ததை உமக்கு நினைப்பு மூட்டினேனே, அதை இப்போது நினைக்கிறீரா?" என்று சொன்னாள். அதைக்கேட்டு அந்த நரிப்பிறப்புடைய வேந்தன் அப்பேச்சைச் சத்தியமென்று நினைத்து அக்காட்டிலே இரையெடாமற் பட்டினியிருந்து உயிர்துறந்து அந்த மனிதரில்லாக் காட்டிலேயே செந்நாயாகப் பிறந்தான். அப்போதும் அக்குற்றமற்ற பெண் அங்குச்சென்று "நீர் செந்நாயன்று. மற்றை யாரென்றால், சததனுவென்கிற மகாராஜனல்லவோ? நாயாய் நரியாய் இப்படி யானீர்" என்று தன் கணவனுக்குப் பூருவ ஜனனங்களை நினைப்பித்தாள். அரசனும் பூர்வஜனனங்களை நினைத்து உடலைவிட்டுக் கழுகாய்ப் பிறந்தான். அப்போதும் அரசகுமாரி அவ்விடம்போய் "ஐயா நீர் கழுகு செய்யுஞ் செய்கைகள் செய்தவை போதும், நீர் முன் பிறப்பிற் பாஷண்டனோடு உரையாடின பாபமன்றோ இப்படிச்செய்தது" என்று சொல்ல, அவனும் அதை நினைத்து இறந்து காகமாகப் பிறந்தான். அதிலும் அப் பதிவிரதைகண்டு அவனைநோக்கி "சகல அரசர்களும் வசப்பட்டு உமக்குப் * பலி கொடுக்கப் பெற்றிருந்த நீர் இப்போது பல போஜனஞ் செய்கிற காகமானீரே இதை நினையும்" என்று ஸ்மரிப்பிக்கவே, அரசனும் ஸ்மரித்து மரித்துக் கொக்காகி, அச்சனனத்திலும் மனையாள் நினைப்பூட்டப் பெற்று, உயிர்விட்டு மயிலாய்ப் பிறந்தான். அப்போது அழகுசிறந்த அக்கன்னிகை அம்மயிலைத் தன்னிடத்திற் கொண்டுவந்து, அதற்கு இன்பமான உணவுகளை அப்போதப்போது கொடுத்துப் போற்றி வளர்த்துவந்து, தன் பிதா செய்த அசுவமேதயாகத்தின் அவபிரத தீர்த்தத்திலே நீராட்டித் தானும் நீராடி மயிலா யிராநின்ற அம்மகாராஜ

* பலி என்றால் அரசர்க்குக் கொடுக்கும் இறைக்கும் வைதிக கிரியைகளில் காக்கைக்குப் போடுஞ் சோற்றுக்கும் பெயர்.

னுக்கு நாயாய்பிறப்பு முதல் மயூரப் பிறப்பீருக நேர்ந்த பிறப்புக்களை நினைப்பித்தாள். அந்த வேந்தனும் தானெடுத்த ஜனனவரிசையை நினைத்துத் துயருற்றுத் தன் சரீரத்தைவிட்டு ஜனகமகாராஜாவுக்கு மகனுகப் பிறந்தான்.

இப்படியாகி அவன் வளர்ந்து வந்தபோது அந்தப் பதிவிரதா சிரோமணி தனக்குக் கலியாண யத்தினஞ் செய்யும்படித் தன் பிதாவைத் தூண்டினுள். அவ்வார்த்தையின்படி அந்த ராஜா சுயம்வரங் கோடிக்க, அச்சுயம்வரத்திற்கு வந்த அனேக ராஜகுமாரர்களுக்குள்ளே அவ்விதேக ராஜகுமாரனை தன் கணவனையே அப்பெண்மணி வரித்து, அவனேடுகூட மறுபடியும் சகல போக பாக்கியங்களையும் அனுபவித்துக்கொண்டு வாழ்ந்திருந்தாள். அவ்வரசனும் தன் தந்தை சுவர்க்கஞ் சேர்ந்தபின் அவ்விதேக ராச்சியத்திற்கு அரசனுகி, அநேகரை வென்று திறைபெற்று, பல யாகங்களையுஞ் செய்து பல தானங்களையும் வழங்கிப் புத்திரரையும் பெற்று, நீதிப்படியே துரைத்தன நடத்திவந்து, ஒரு யுத்தத்திலே தருமவழியினுலேயே உயிரை விட்டான். அப்போதும் அவனுடைய பத்தினி வெகுசந்தோஷமாய் உடன்கட்டை யேறினுள். பின்பு அவ்வரசன் அந்தத் தருமபத்தினியோடு கூடவே இந்திரலோகத்தையுங் கடந்துபோய்ச் சகல இஷ்டங்களும் பெறும்படியான மகா புண்ணியலோகங்களை யடைந்தான். இப்படி அந்தத் தம்பதிகள் முன் சொல்லியபடி மகா சுத்தியைப் பெற்றுப் பிரியாமலே அக்ஷயமான புண்ணிய லோகம் பெற்றூர்கள்.

ஓ பிராமணேத்தமரே! இப்படியாகப் பாஷண்டி சம்பாஷணத்தினு லுண்டான பாபத்தையும் அசுவமேத யாகத்தின் அவபிரத ஸ்நானத்தினுலுண்டான புண்ணியத்தையும் விவரித்தேன். ஆதலால் மகாபாவிகளான பாஷண்டிகளோடு பேசுவது முதலானவற்றை விடவேண்டும். மற்றக் காலங்களிற் சிறிது செய்தாலும் வைதிக அனுஷ்டான காலத்தில் விசேஷமாய் அதை விடவேண்டும். யாகங்களினுல் தீக்ஷிதனுயிருப்ப

வன் அதிலும் விசேஷமாய் விடவேண்டும். எவன் வீட்டில் ஒருமாதம் வைதிக கர்மலோபம் உண்டா கிறதோ அவனைக் கண்டால் உடனே சூரியபகவானைப் பார்க்கவேண்டுமே, அப்படியிருக்க வேத சம்பந்தத் தையே முழுவதும் விட்டிருக்கிற பாஷண்ட சம்பந்தத் திற்குக் கேட்கவேண்டுமோ. அதிலும் பாஷண்டரோடு நேசித்து அவர் சோற்றை யுண்பதும், அவரைத் தன் வீட்டி லுண்பிப்பதும், வேதவாதங்களை இகழ்ந்து விரோதமாய்ப் பேசுவதுமான அசத்காரியஞ் செய்கிற வர்களுடைய சம்பாஷணை, கூடியிருத்தல் முதலான வைகளைக் கனவிலுஞ் செய்யாமல் விட்டொழிய வேண் டும். இன்னுஞ் சொல்லுகிறேன் கேளும். * பாஷண்டி களையும், தவிரத்தக்க காரியங்களைச் செய்கிறவர்களையும், பிடாலவிரதத்தி லிருப்பவரையும், சடரையும், ஹைது கர்களையும், பகவிருத்திகளையும் வாயாலுங் கூடப் பூசிக்க லாகாது. அதிக பாவிகளும் துராசார முடையவரு மான அந்தப் பாஷண்டருடைய சம்பந்தத்தை வெகு தூரத்தில் விட்டிருக்கவேண்டும்.

இப்படியாகப் பலவகைப்பட்ட நக்கினரையும் உமக்கு அறிவித்தேன். இவர்கள், பார்ப்பதனாலேயே சிரார்த்தம் அழிந்துபோம். இவர்களுடைய சம்பா ஷணத்தினாலே அந்த நாள் செய்த புண்ணியம் நசிக் கும். இவரோடு ஒருதரஞ் சம்பாஷணையினாலேயே அந்த அந்த நாட் புண்ணியங் கெடுமாதலால் அதைத் தவிரவேண்டும். கடைசியாய்ச் சொல்லுகிறேன் கேளும்: வீணுக்குச் சடை வளர்ப்பவரும், முண்டிதஞ் செய்து

* வேதசாஸ்திர மார்க்கத்தைத் துறந்தவன் பாஷண்டன். பூனை, வேடம்போட்டது போலே தண்ட கமண்டலாதி தருமக்குறிகளைப் பகிரங்க மாகத் தரித்து யார்க்குந் தெரியாதபடி பாபங்களைச் செய்துவருபவன் பிடால விரதன்; [பிடாலம் - பூனை.] எதிரில் பிரியமாய்ப் பேசுவதும் மறைவில் தீங்குசெய்வதுமாய் வெளிப்பட்ட அபாதச் செய்கை யுடையவன் சடன். சத்கருமங்களைச் செய்யுமளவில் துஷ்டஹேதுக்களைக்காட்டி அவற்றில் ஐயமுண்டாக்குகிறவன் ஹைதுகன். கொக்கைப்போலே ஒன்று மறியாத வனா யுட்கார்ந்திருந்து சமயம் பார்த்து மோசஞ் செய்கிறவன் பகவிருத்தி [பகம் - கொக்கு.]

கொள்பவரும், தேவாதி உபயோகஞ் செய்யாமலே சோற்றை யுண்பவரும், உள்ளும் புறமுஞ் சுத்தியற்றவரும், பிதுர்க்களுக்குப் பிண்டந் தண்ணீர்க ளிடுவதைத் தவிர்ந்தவர்களுமான அசத்துக்களுடன் எவ்வித சம்பந்தமுடையவரும் நரகம் புகுவார்கள். ஆனல் சத்புருஷரோடு சேருகிறவர் மேன்மையான பதங்களைப் பெறுவார்கள்.

*பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

## ஸ்ரீ விஷ்ணுபுராணம் மூன்றும் அம்சம்

*முற்றிற்று.*

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ விஷ்ணு புராணம்

நான்காம் அம்சம்-இராஜவமிச சரிதங்கள்

## முதலாம் அத்தியாயம்

## ககுத்துமி சரித்திரம்

மயித்திரேயர் வினவுகிறார்: "சுவாமி, ஆசாரியரே! சத்கருமஞ் செய்யப் புகுந்தவர்க்குச் செய்யத்தக்க நித்திய நைமித்திக ரூபமான கருமங்களின் சொரூபத்தையும் வருணாச்சிரம கிரமங்களையும் தேவரீர் அடியேனுக்கு அருளிச் செய்தீர்; இனி இராஜாக்களின் வமிசங்களைக் கேட்க விரும்புகிறேன்; கிருபைசெய்து திருவாய் மலர்ந்தருளவேண்டும்" என்று சிஷ்யர் வேண்ட, குருவான பராசரமுனீந்திரர் அருளிச் செய்யலாயினார்:—

"மயித்திரேயரே! கேளும்; வைவச்சுத மனு வமிசமானது மகாயாகத்துக் கதிபதிகளும் மகாவீரரும் மகாசூரரும் மகாதீரருமான அனேக அரசர்களினாலே அலங்காரமுற்றது. இவ்வமிசத்தின் வரலாற்றைச் சகல பாபங்களும் நசிக்கும்பொருட்டு நீர் கேட்கக் கடவீர்.

சகல ஜகத்காரணரும் ஆதிமத்தியாந்த ரகிதரும் இருக்கு யஜுஸ் ஸாமாதிமயருமான ஸ்ரீ விஷ்ணுபகவானுடைய மூர்த்தஸ்வரூபமாய் இரணிய கருப்பரென்கிற பெயரை யுடையவராய் இந்தப் பிரமாண்டத்தின் அதிபதியான பிரமா பூர்வத்தில் உண்டானாரன்றோ? அந்தப் பிரமாவின் வலக் கட்டைவிரலிலிருந்து தக்ஷப் பிரசாபதி பிறந்தார். தக்ஷருடைய புத்திரி அதிதி, அதிதியின் குமாரன் விவசுவானென்கிற சூரியன், அவன் குமாரன் மனு, மனுவுக்கு இக்ஷ்வாகு, நிருகன், திருஷ்டன்,

சர்யாதி, நரிஷ்யந்தன், நாபாகன், திஷ்டன், கருசன், பிரஷத்திரன் என்று ஒன்பது மக்கள் பிறந்தார்கள். இவர்கள் பிறப்பதற்கு முன்னே அந்த மனு புத்திரனுக்காக் மித்திராவருணனைக் குறித்து ஓர் இஷ்டி செய்ய அதில் ஹோதாவின் அபசாரத்தினாலே இளை யென்கிற கன்னிகைபிறந்தாள். அவள் மித்திராவருணர்களுடைய அனுக்கிரகத்தினாலே சுத்தியும்னன் என்ற ஆண்மகனாகிச் சிவனுடைய சாபத்தினாலே மறுபடியும் பெண்ணாகிச் சந்திரபுத்திரனான புதனுடைய ஆச்சிரம சமீபத்தில் திரிந்து கொண்டிருந்தாள். புதன் அவளிடத்திலே காமமுடையவனாகிப் புரூரவ னென்ற குமாரனைப் பெற்றான். புரூரவன் பிறந்தபின், மகா தேஜோவான்களான இருடிகள் பெண்ணாய்ப் போன சுத்தியும்னன் மறுபடி ஆணாகவேண்டுமென்று யாகமயனாயும் இருக்கு யசுஸ் ஸாமஅதர்வண மயனாயும் மனோமயனாயும் ஞான விஞ்ஞான மயனாயும் அன்னமயனாயும் அமிருதமயனாயும் சர்வமயனாயும் இவையொன்று மாகாதவனாயும் அறுகுணங்களும் பொருந்தியு மிருக்கிற யக்கிய புருஷனைக் குறித்து யாகஞ் செய்ய, அவ் யாகத்தில் பிரசன்னனான ஸ்ரீயப்பதியினுடைய அநுக்கிரகத்தினால் இளை மீண்டும் ஆண்பிள்ளையாய்ச் சுத்தியும்ன னென்னும் பெயரைப் பெற்றாள். அந்தச் சுத்தியும்னனுக்கு உத்கலன், கயன், விதானன் என மூவர் பிறந்தார்கள். அந்தச் சுத்தியும்னனோ முன்பு பெண்ணாயிருந்ததினாலே இராச்சியம் பெறவில்லை. ஆனாலும் வசிஷ்ட மகாமுனியின் வசனத்தின்படி அந்தச் சுத்தியும்னனுக்கு அவன் பிதா பிரதிஷ்டான மென்னு நகரத்தைக் கொடுத்தான். அவனும் அதை யாண்கொண்டிருந்து அந்த நகரத்தைப் புரூரவனுக்குக் கொடுத்தான். பிருஷத்திர னென்பவன் ஒரு காலத்தில் தன் குருவாகிய வசிஷ்டருடைய பசுக்களைக் காத்துக் கொண்டிருக்கையில், இரவில் அப் பசுக்கூட்டத் திடையிற் புகுந்த புலியைக் கொல்லப்போய்ப் பிசகிப் பசுவைக் கொன்றதனால், குரு சாபமிடப்பெற்றுச் சூத்திரனாயினன். கருசனிடத்திலிருந்து கருசதேசத்தைக் காத்துவந்த மகா பராக்கிரமவான்களான க்ஷத்திரியர்

பிறந்தார்கள். திருஷ்டனென்பவனுக்கு நாபாகன் பிறந்தான். அவனுக்குப் பலந்தனன் பிறந்தான். பின்பு நாபாகன் தன் செய்கையில் தாழ்ந்ததனாலே வைசியனானான். பலந்தனனுக்கு மகன் மிகப் புகழ்பெற்ற வச்சப்பிரீதி யென்பவன். வச்சப்பிரீதிக்கு மகன் பிராம்சு, பிராம்சுவுக்கு மகன் பிரசாபதி. அவனுக்கு கனிமித்திரன், அவனுக்குச் சக்ஷுஷன், சக்ஷுஷனுக்கு அதிபல பராக்கிரமசாலியான விமிசன், அவனுக்கு விம்சகன் அவனுக்கு கனிநேத்திரன், அவனுக்கு அதிவிபூதி, அவனுக்கு மகாவீரனான கரந்தமன், அவனுக்கு அவிக்ஷித்து, என முறையே தோன்றினர் அவிட்சித்துக்கு மிகுந்த சௌரிய தைரியம் முதலிய குணங்களுள்ள மருத்தனென்னும் புத்திரனுண்டானான். இம்மருத்தனைப்பற்றி இரண்டு பாட்டுகள் இப்போதும் வழங்குகின்றன. அவைகளாவன, "இவ்வுலகத்தில் மருத்தனுடைய யாகத்தைப்போலே யாருடைய யாகமிருந்தது? அந்த யாகத்திற்கு வேண்டுங் கருவிகளெல்லாம் செம்பொன்னாற் செய்யப்பட்டு விளங்கின. அந்த யாகத்திலே சோமபானத்தினாலே இந்திரனும், தட்சிணைகளினாலே அந்தணரும், உடம்பு தெரியாதிருக்கும்படிக் களித்தார்கள். அன்றியும் அதில் வாயுக்களே உணவுகளைப் பரிமாறுகிற வேலைக்காரரானார்கள். தேவரெல்லாரும் சபையாரானார்கள்."

அந்த மருத்தன் சக்கரவர்த்தியாயிருந்து நரிஷ்யந்தனென்னுங் குமாரனைப் பெற்றான். நரிஷ்யந்தனுக்கு மகன் தமன்; தமனுக்கு மகன் இராஜவர்த்தனன், இராஜவர்த்தனுக்கு சுவிருத்தி; சுவிருத்திக்குக் கேவலன்; கேவலனுக்குச் சுதிருதி; அவனுக்கு நரன்; அவனுக்குச் சந்திரன்; அவனுக்கு கேவலன்; அவனுக்குப் பந்துமான்; அவனுக்கு வேகவான்; வேகவானுக்குப் புத்திரன் புதன், அவனுக்குத் திருணபிந்து; எனப் பிறந்தனர். திருணபிந்துக்கு இலிபிளை யென்று ஒரு பெண்பிள்ளை பிறந்தாள்; அந்தத் திருணபிந்துவை அலம்புசை யென்கிற அப்சரசு விரும்பிப் புணர்ந்து விசாலனென்கிற மகனைப் பெற்றாள். அவன்றான் வைசாலி யென்கிற நகரத்தை யுண்டாக்கினவன். விசால

னுக்கு ஹேமசந்திர னென்னும் புத்திர னுண்டானான். அவன் மகன் சந்திரன்; அவனுக்கு மகன் தூமிராக்ஷன், அவனுக்குச் சிருஞ்சயன்; சிருஞ்சயனுக்குச் சகாதேவன்; அவனுக்குக் கிருசாசுவ னென்பவன் முறை முறையே பிறந்தார்கள். கிருசாசுவனுக்குச் சோமதத்த னென்னும் புத்திரன் பிறந்து, பத்து அசுவமேதயாகங்களைச் செய்தான். அவனுக்குக் குமாரன் ஜனமேஜயன். ஜனமேஜயனுக்குச் சுமதி. இவர்களெல்லாம் வைசாலி நகரத்தை யாண்ட அரசர்கள். இவர்களைப்பற்றி ஒரு சுலோகம் வழங்கி வருகின்றது. அதாவது "வைசாலி நகரத்தை யாண்ட ராஜாக்கள் யாவரும் மூலபுருஷனை திருணபிந்து மகாராஜனுடைய அனுக்கிரகத்தினாலே தீர்க்காயுசு உள்ளவர்களாயும் மகாத்துமாக்களாயும் வீரத் தன்மையுடையவர்களாயும் மிகவுந் தருமசீலராயு மிருந்தார்கள்."

இனிச் சர்யாதி யென்பவனுக்கு சுகன்னியை என்றொரு மகளுண்டானாள். அவளைச் சியவனரென்று மிகப் புகழ்பெற்ற மகாமுனிவர் கலியாணஞ்செய்து கொண்டார். அன்றியும் அந்தச் சர்யாதிக்கு ஆனர்த்த னென்றொரு மகனு முண்டானான். மேற்கடற்கரையில் அவனாண்ட தேசத்திற்கு ஆனர்த்தமென்ற பெயர் வழங்கிற்று. அவனுக்கு ரேவதனென்கிற குமாரனுண்டாகிக் குசஸ்தலியென்கிற நகரத்திலிருந்துகொண்டு ஆனர்த்த ராச்சியத்தை யாண்டுவந்தான். இரேவதனுக்கு நூற்றுவர் மக்களுண்டானார்கள். அவர்களுக்கெல்லாம் மூத்தவன் தருமாத்துமாவான ககுத்துமி என்பவன். அவனுக்கு இரைவதனென்ற பெயரும் வழங்கும். அவனுக்கு இரேவதி என்ற புத்திரியொருத்தி பிறந்தாள். அவ்வரசன் தன் கன்னிகையை யாருக்குக்கொடுக்கலாம் என்று கேட்கும்பொருட்டு அவர்களை அழைத்துக் கொண்டு பிரமலோகத்துக்குச் சென்றான். அவ்வளவில் ஹாஹா ஹூஹூ என்கிற கந்தருவ ரிருவர் திவ்விய சங்கீதத்தைப் பாடிக்கொண்டிருந்தார்கள். பிரமாவின் சபையில் அதிதானமென்று சொல்லப்படும் அது, சித்திரை தட்சிணை வார்த்திகை என்ற மூன்று மார்க்கங்களின் பரிவிர்த்தங்களாலே சுற்றிக்கொண்டு

வருவதை அநேக யுககாலங் கேட்டுக்கொண்டிருந்தும் அவ்வரசன் அவ்வளவு பெரியகாலத்தை ஒரு முகூர்த்த காலம்போல நினைத்தான். பின்பு அந்தக் கீதமுடிந்த வுடனே சதுர்முக பகவானை வந்தனஞ்செய்து அந்த ரைவதமகாராஜன், "இக்கன்னிகைக்கு யோக்கியமான வரன் யார்?" என்று வினவினான். பிர்ம்மாவானவர், "நீ நினைத்திருக்கிற வரன்களைச் சொல்" என்று நிய மிக்க, அவன் மறுபடியும் அவரைத் தொழுது தான் நினைத்திருந்த சிலது நாமங்களைச் சொல்லி, "சுவாமீ! இவர்களிலே யாருக்கு அடியேன் இந்தக் கன்னிகை யைக் கொடுக்கலாம்? அவனை அருளிச்செய்யவேண் டும்" என்று கேட்டான். பின்பு அக்கமலாசனர் சிர சைக் கொஞ்சம் வணங்கிக்கொண்டு புன்சிரிப்போடு, "ஓ அரசனே! நீ யாரை நினைத்தாயோ அவர்களுடைய பிள்ளை பிள்ளைகளுடைய சந்ததிகளும் இப்போது பூமி யிலில்லை. நீ சங்கீதங் கேட்டுக்கொண்டிருக்கையிலேயே அநேக யுகங்கள் கழிந்தன. உனக்குத் தெரியாது. இப் போது பூலோகத்திலே வைவச்சுத மனுவந்தரத்திலே இருபத்தெட்டாவது சதுர்யுகம் முடியக்காத்திருக்கிறது. கலியுகங் கிட்டியிருக்கிறது. இப்போது பூர்வகாலத் தாருக்குள்ளே நீ யொருவனே யிருப்பதனாலே இக்காலத் தாரான யாருக்காகிலும் இக்கன்னிகையை நீ யொருவ னாகவே கொடுக்கவேண்டும். இப்பொழுது உன்னு டைய புத்திரர் மித்திரர் களத்திரங்கள் மந்திரிகள் பந் துக்கள் ஏவலாட்கள் சேனைகள் பொக்கிஷங்கள் முத லானவற்றின் பெயர்கூட இல்லாமல் காலபேதத்தினால் ஒழிந்துபோயின" என்று உரைக்கக்கேட்டு, அவ்வேந் தன் மிக நடுங்கிப்போய் வாய்குளற அத்தேவனை நமஸ் கரித்து, "சுவாமீ! இப்படியானால் அடியேனுக்குக் கதி யென்ன? இக்கன்னிகையை யாருக்குக் கொடுப்பேன்?" என்று கேட்க, சர்வலோக குருவான சதுர்முகபகவான் முடிவணங்கிக் கைகளைக் கூப்பிக்கொண்டு அருளிச் செய்யலாயினர்:

"கேளாய் அரசனே! அஜனும் சர்வமயனு மிருக்கிற எவனுக்கு ஆதி மத்திபம் அந்தம் என்கிற இம்மூன்றையும் யானும் மற்றவரும் அறியோமோ,

அப்படியே பரமேச்சுரனுை எவனுடைய ஸ்வரூபத்தையும் மேலான பிரபாவத்தையும் பலத்தையும் அறியோமோ, கலாமுகூர்த்தாதி மயமான காலமானது பரமபதமென்று சொல்லப்பட்ட எவனுடைய திரிபாத்விபூதியை மாற்றமாட்டாதோ, உற்பத்தி நாசங்களில்லாதவனுயும் சர்வசரீரகனுயும் கர்மவசமான நாம ரூபங்களில்லாதவனுயும் என்றும் ஒருபடியே யிருக்கிறவனுயுமுள்ள எவனுடைய பிரசாதத்தினுலே நான் சிருஷ்டி கர்த்தாவாக ஆனேனே, எவனுடைய குரோத அம்சத்தினுலே ருத்திரன் சங்கார கர்த்தாவாக ஆயினுனே, எந்தப் பரம புருஷன் எங்க ளிருவர்க்கு மிடையிலே ஸ்திதி கர்த்தாவாக அவதரித் தெழுந்தருளி யிருக்கிருனே, எவன் தன் அம்சத்தினுலே என்னில் அர்ப்பவித்துச் சிருஷ்டிக்கிருனே, தானே புருஷ ஸ்வரூபியாயிருந்து இரக்ஷிக்கிருனே, உருத்திரனிடத்தில் அம்சாவிர்ப்பாவத்தினுலேயிருந்து யாவற்றையுஞ் சங்கரிக்கிருனே, எவன் இந்திரன் முதலானுருடைய உருவத்தினுலே உலகத்தைக் காத்தருளுகிருனே, சூரிய சந்திரரூபியாகி இருளைப்போக்குகிருனே, அக்கினி ரூபமாகிப் பாகத்திற்கு உபயோகமாகிருனே, பூமி ரூபியாகி எல்லாவற்றையுஞ் சுமக்கிருனே, வாயுரூபியாகி யாவற்றையும் அசைக்கிருனே தண்ணீருஞ் சோறுமாகி உலகத்தின் திருப்திகாரணமாகிருனே, ஆகாசரூபியா யிருந்து எல்லாவற்றுக்கும் இடங் கொடுக்கிருனே, எவன் யாவற்றையும் தன்னையும் தானே சிருஷ்டிக்கிருனே, எவன் சமவதத்தையுந் தன்னையும் தானே பரிபாலிக்கிருனே, எவன் இதரர்களையுந் தன்னையுந் தானே சங்கரிக்கிருனே, எவன் இந்தச் சிருஷ்டி ஸ்திதி சங்கார கர்த்தாக்களாகிய மூவர்க்கும் சிருட்டிக்கப்படுவனவும் இரட்சிக்கப்படுவனவும் சங்கரிக்கப் படுவனவுமான மூன்றுக்கும் வேருய் விகாராதிகளில்லாமல் விளங்கிருே, எவனிடத்திலே உலகமெல்லாமிருக்கின்றனவோ, எவன் சகலலோக சொரூபியாயிருக்கிருனே, எவன் எல்லாவற்றிற்கு முதலாயிருக்கிருனே, எவன் இவ்வுலகத்திலெங்கு மிருக்கிருனே, அந்தச் சர்வேசுவரனுை ஸ்ரீவிஷ்ணுபகவான் இப்போது பூலோகத்தில் தனது அம்சத்தினுலே ஒரு திருவவ

தாரஞ் செய்திருக்கிறான். முன்பு உன்னுடைய இராஜ தானியான குசஸ்தலியானது இப்போது யாதவ ராஜாக்கள் வாசஞ்செய்யப்பெற்று, அமராவதி யென்ற தேவநகரம்போலே மிகவும் இரமணீயமாய்த் துவா ரகையென்கிற திருநாமத்தோடு விளங்காநின்றது. அதில் எம்பெருமான் ஆதிசேஷனது அம்சத்தினா லவதரித்துப் பலதேவ னென்னுந் திருநாமத்தோ டெழுந்தருளி யிருக்கிறான். ஓ அரசனே! அந்த மாயா மனுஷியனுக்கு உன்னுடைய புத்திரியைப் பத்தினி யாகச் சமர்ப்பிக்கக்கடவாய். உனக்கு இவர் மகா சிலாக் கியமான வரன். உனது புத்திரியும் பெண்களுக்குள் ஓர் இரத்தினம் போன்றவள். ஆதலால் இருவர்க்கும் பொருத்தம் மிக நன்றாயிருக்கின்றது" என்று பிரம தேவராலே நியமிக்கப்பட்டு, அந்த அரசன் பூலோ கத்துக்கு வந்து, பூமியிலுள்ளவர்கள் மிகக்குறுமை யான வடிவும் அற்பமான தேஜசும் அற்பமான ஞானசக்திகளு முடையவர்களா யிருப்பதைக் கண்டு, அதிசயப்பட்டுக்கொண்டே துவாரகாபுரியா யிருக்கிற பழைய குசஸ்தலிபுரிக்குப்போய், ஸ்படிக பர்வதம் போலே விளங்குகிற ஸ்ரீபலராமனுக்குத் தன் கன்னி கையைச் சமர்ப்பித்தான். தாலத்துவசரான அந்தப் பலராமன் அக்கன்னிகையைத் திருவுளம்பற்றி அவள் அதிக வுயரமா யிருந்தபடியினாலே தம்முடைய ஆயுத மான கலப்பையினாலே வணங்கியருள அந்தப் பொற் கொடியானவள் அவர் திருவளர்த்திக்கு ஏற்ற பிர மாணமுடையவளாய் வேறு கன்னிகைபோல் ஆய் விட்டாள்.

பின்பு ஸ்ரீபலபத்திரர் இரேவதியைத் திருக் கலியாணம் பண்ணிக்கொண்டு லோகசம்ரக்ஷணஞ் செய் தருளிக்கொண்டிருக்க, அந்தக் ககுத்துமி மகாராஜனும் அடியேன் தன்யனானேனென்று மகிழ்ந்து, தவஞ் செய்யும்பொருட்டு இமய பருவதத்திற்குப் போய்ச் சேர்ந்தான்.

முதலாம் அத்தியாயம் முற்றிற்று.

## இரண்டாம் அத்தியாயம்

# சசாத, கருத்ஸ்த, மாந்தாதா, ஸௌபரி இவர்களுடைய சரிதம்

அந்தக் கருத்துமி மகாராஜன் பிரமலோகத்தி லிருந்து வராமலிருக்கையில் புண்ணியஜனர் என்கிற அரக்கர் அவனுடைய குசஸ்தலி பட்டணத்தை அழித் தார்கள். அதிலிருந்த அவன் தம்பிமாரெல்லாம் அந்த ராட்சசருக்குப் பயப்பட்டு நாற்றிசைகளிலும் ஓடிப் போனதனால் அந்தக் குலத்தரசர் எவ்விடத்திலு மிருந் தார்கள். விருஷ்டனென்பவனிடத்திலிருந்து வார்ஷ்ட கம் என்ற அரசகுல மூண்டாயிற்று. நாபாகனென்பவ னுக்குக் குமாரன் நாபாகனென்றே பெயர்பெற்றிருந் தான். அவனுக்கு அம்பரீஷன்; அம்பரீஷனுக்கு விரூ பன்; விரூபனுக்கும் பிரஷதசுவன் பிறந்தான். அவ னுக்கு இரதிதரன் உண்டானான். இவன் விஷயத்தி லொரு சுலோகம் வழங்கும். அதாவது இரதீதர கோத்தி ரத்திற் பிறந்தவர்கள் சத்தியராயிருந்தாலும், அங்கி ரசு என்கிற பிராமணரிஷி சம்பந்தத்தினாலும் தபோ பலத்தினாலும் பிராமணருமாகி, க்ஷத்திரிய சம்பந்த முள்ள பிராமணரென்று பெயர்பெற்று விளங்கினார் கள். வைவச்சுத மனுவானவர் தும்மும்பொழுது அவர் மூக்கினின்று இக்ஷ்வாகு என்ற புத்திரன் ஜனித்தான். அவனுக்கு நூறு மக்களுண்டு. அவர்களிலே விகுக்ஷி நிமி தண்டன் என்பவர்கள் முக்கியமானவர்கள். சகுனி முதலிய ஐம்பது பிள்ளைகள் உத்தராபதம் என்கிற வடநாட்டின் அரசரானார்கள். நாற்பத்தெட்டுபேர் தக்ஷிணாபதம் என்கிற தென்னாட்டை யாண்டுவந்தார் கள். அந்த இக்ஷ்வாகு மகாராஜன் அஷ்டகையிலே புதிதாய் மாமிசத்தைச் சம்பாதித்துக் கொண்டுவரும் படி விகுக்ஷியென்பவனுக்குக் கட்டளையிட்டான். அந்த விகுக்ஷியும் தகப்பனுக்கிணையைச் சிரமேற்கொண்டு, காட் டுக்குப்போய் அநேக மிருகங்களைக் கொன்று மிகவு மிளைப்படைந்து, பொறுக்கக்கூடாத பசியினாலே அவற்

றுள், ஒரு முயலைத் தின்றுவிட்டு, மற்ற மாமிசங்களைக் கொண்டுவந்து தகப்பனுக்கு அறிவித்தான். அவ்வரசனும் அவைகளைப் புரோக்ஷிக்கும் பொருட்டுத் தன் குலகுருவான வசிஷ்டமாமுனிவரை வேண்ட, அம்முனிவர் அப்படியே போய் அவைகளைப் பார்த்து அரசனை நோக்கி, "அரசனே! போதும் போதும், இவ்வசுத்த மாமிசம் ஏதுக்கு? துராத்துமாவான உன்மகன் இவற்றுள் ஒரு முயலின் மாமிசத்தை யுண்டதனாலே மற்றெல்லா மாமிசங்களும் அசுத்தமாய்க் கெட்டுப் போயின" என்று சொல்லினர். அதனாலே அந்த விகுக்ஷிக்குச் * சசாதன் என்று நாமதேய முண்டாயிற்று. இப்படி குரு சொல்லக்கேட்டு இக்ஷ்வாகுவும் தன் மகனாகிய அந்த விகுக்ஷியைத் தள்ளிவிட்டான். தந்தை இறந்தபின் சசாதன் மன்னவனாகிப் பூமிமுழுவதையும் தருமநீதிகள் பிசகாமல் ஆண்டுவந்தான்.

சசாதகனுக்குப் புரஞ்செயனென்ற மகன் பிறந்தான். புரஞ்சயனுக்குப் பின்வருங் காரணத்தினாலே ககுத்ஸ்தனென்னு மொருபெயர் உண்டாயிற்று. அஃதாவது திரேதாயுகத்திலே தேவர்க்கும் அசுரர்க்கும் கொடிய யுத்தமுண்டாகி, அதில் மகா பலவான்களான அசுரராலே தேவர் வெல்லப்பட்டவராகிப் பகவானை ஸ்ரீ விஷ்ணுவை ஆராதித்தார்கள். ஆதிமத்தியாந்த ரஹிதனாய் எல்லாவற்றுக்கும் ஆதார பூதனான ஸ்ரீமந் நாராயணன் அந்தத் தேவதைகளுக்குப் பிரசன்னனாகி அவர்களை நோக்கி, "ஓ தேவதைகளே! உங்களுடைய கருத்தை யறிந்தேன்; நீவிர் அஞ்சன்மின்; நான் பூமியில் சசாதனுடைய குமாரனாகிய புரஞ்சயன் என்னும் க்ஷத்திரிய சிரேஷ்டனுடைய சரீரத்திலே அமிசத்தினாலே பிரவேசித்து அவ்வசுரரைச் சங்கரிப்பேன்; ஆகையாலே நீங்கள் அந்தப் புரஞ்சயனை உங்களுக்குச் சகாயமாய் யுத்தத்துக்கு வரும்படி முயற்சி செய்யுங்கள்" என்றருளிச் செய்தார். இதைக்கேட்டு அமரரெல்லாம் ஸ்ரீயப்பதியை யடிதொழுது விடைபெற்றுப் புரஞ்சயனிடம்வந்து அவ்வரசனைப் பார்த்து, "ஓ இராஜசிரேஷ்

* சசம் என்றால், முயல், அத என்றால் பக்ஷித்தவன்.

டனே! சத்துருக்களை வெல்ல முயன்றிருக்கிற எங் களுக்கு நீ சகாயஞ்செய்ய வேண்டுமென்று பிரார்த்திக் கிறோம். உன்னிடத்திற்கு இப்படி வேண்டிவந்த எங் களுக்கு நீ மறுத்துச் சொல்லாமல் எங்களது பிரார்த் தனையை நிறைவேற்ற வேண்டும்" என்றனர். அது கேட்டு அந்த மகிபாலன் "ஓ தேவதைகளே! உங்களுக்கு நான் துணைசெய்யவேண்டுமானால் உங்களுக்கு அரச னும், நூறு அசுவமேதஞ் செய்ததனாலே மூவுலகங்களை யும் ஆளும்படியான பாக்கியமுள்ளவனுமான இந்தி ரனே எனக்கு வாகனமாக வேண்டும். அவனது தோ ளின்மேலேறிக்கொண்டால் அவ்வசுரரோடு நான்போர் செய்ய மாட்டுவேன்" என்றனன். அதைத் தேவர்க ளெல்லாம் அங்கீகரிக்க, தேவேந்திரன் விருஷப ரூபி யானான். பின்பு அப்புரஞ்சயன் அந்த விருஷபத்தின் நுசுப்பின்மேல் அதிக சந்தோஷத்தோடு ஏறிக்கொண்டு, சராசரங்களுக்கெல்லாம் குருவாயும் ஷட்குண சம்பன்ன னுயுமிருக்கிற ஸ்ரீ அச்சுதனுடைய தேஜஸினாலே பூரிக் கப்பட்டவனாய், அந்த அசுரர் யாவரையும் எளிதிலே சங்கரித்தான். விருஷபத்தின் [ககுத்] நுசுப்பின்மேல் [ஸ்த] ஏறியிருந்ததனாலே அவனுக்குக் ககுத்ஸ்தன் என்கிற பெயருண்டாயிற்று. அந்தக் ககுத்ஸ்தன் மகா ராஜனுக்கு அனேனசு என்ற குமாரன் உண்டானான். அவனுக்குப் பிருது பிறந்தான். பிருதுவுக்கு விஷ்ட ராசுவன் ஜனித்தான். அந்த விஷ்டராசுவனுக்கு யுவ னாசுவனென்பவன் உண்டானான். அவன் சந்திரா மிசையிற் பிறந்ததனால் அவனுக்குச் சாந்திரனென்றும் பெயருண்டு. சாந்திரனுக்குச் சாபஸ்தியென்பவன் குமாரன். அவன் சாபஸ்தி என்ற ஒரு மகா நகரத்தை ஏற்படுத்தினான். அவனுக்கு பிருகதசுவன் பிறந்தான். அவனுக்குக் குவலயாசுவன் பிறந்தான். அவன் ஸ்ரீ விஷ்ணு தேஜோபலம் பொருந்தினவனாய் உதங்க மகாரிஷிக்குப் பகைவனாயிருந்த துந்து என்கிற அசுரனைத் தன் இருபத்தோராயிரம் புத்திரரோடு கூடிச் சென்று கொன்றதனால் துந்துமாரனென்கிற பெயரைப் படைத்தான். அப்புத்திரரில் திருடாசுவன், சந்திராசுவன், கபிலாசுவன் என்னு மூவர் தவிர மற்றை

யாவரும் அவ்வசுரனுடைய உயிர்ப்பாகிய நெருப்புக்காற்றினால் வெந்துபோனார்கள். அவர்களுக்குள் திருடாசுவனுக்கு அரியசுவன் பிறந்தான். அவனுக்கு நிகும்பன்; நிகும்பனுக்கு அமிதாசுவன், அவனுக்குக் கிருசாசுவன்; அவனுக்கு பிரசேனசித்து; பிரசேனசித்துக்கு யுவனாசுவன் எனப்பிறந்தனர். யுவனாசுவன், நெடுநாள் புத்திரனில்லாமைபற்றி வெறுப்படைந்தவனாய் முனிவருடைய ஆச்சிரம மண்டலத்திலேயே திரிந்து கொண்டிருக்க, அங்கிருந்த இருடிகள் அவன்மேல் கிருபை கூர்ந்து புத்திரனுண்டாகும்படி ஒரு யாகஞ் செய்தார்கள். அவ் யாகமானது நள்ளிரவில் முடிந்தவுடனே அத்தவசிகளெல்லாம் மந்திரஜபத்தினாலே பரிசுத்தமாக்கப்பட்ட ஒரு ஜல கலசத்தை யாகவேதிகையி னடுவில் வைத்துவிட்டு நித்திரை செய்து கொண்டிருந்தார்கள். அப்படி யிருக்கையில் அவ்வரசன் அதிக தாகமுள்ளவனாய் அங்கு வந்து அம்முனிவர்களை எழுப்ப அஞ்சி அளவற்ற மகத்துவமுள்ள மந்திரங்கள் ஜபிக்கப்பெற்று விளங்கா நின்ற அக்கலச ஜலத்தைப்பானஞ் செய்துவிட்டான். விடிந்தவுடனே அம்முனிவ ரெழுந்திருந்து, "இக்கலசத்து நீரை யார் குடித்தார்? அதை யுவனாசுவனுடைய பத்தினி குடிப்பளாயின் மகாபல பராக்கிரமாதிகளுள்ள புத்திரனைப் பெறுவாளே? ஐயோ! யார் இதை நாசஞ்செய்தார்கள்?" என்று கேட்க, அவ்வரசன் "சுவாமிகளே! அடியேன் தாகம் பொறுக்கமாட்டாமல் இதைக் குடித்து விட்டேன், இதன் மகத்துவம் எனக்குத் தெரியாமற் போயிற்று" என்றனன். இப்படியிருக்க அவ்வரசனுடைய வயிற்றிலே நாளேறவேறக் கருப்பம் வளர்ந்துகொண்டு வந்தது. மாதங்கள் பூர்ணமானவுடனே அந்தக் கருப்பமானது அவ்வரசனுடைய வயிற்றை வலக்கட்டை விரலினாலே கிழித்துக்கொண்டு வெளியில் வந்தது. அரசனோ மரணமடைந்தான். இவ்விதமாகக் குழந்தை பிறந்தவுடனே அம்முனிவர்கள் கூடி, "பிறந்த இக்குழந்தையார் முலையை உண்ணும்" என்று சொன்னார்கள். அத்தருணத்தில் அங்கே தேவேந்திரன் [மாம்தாதா] என்னைத் தாயாகவைத்து முலையுண்ணும்"

என்று சொல்லித் தன் பவித்திரவிரலை அக்குழந்தையின் வாயிற்கொடுக்க, அப்பிள்ளை அவ்விரலினின்று மொழுகின அமிருதத்தையுண்டு ஒரேநாளில் வளர்ந்தது. இந்திரன் "மாந்தாதா" என்றதனாலே அந்த ராஜகுமாரனுக்கு மாந்தாதா என்று நாமதேயமுண்டாயிற்று. அந்த மாந்தாதாவானவன் சக்கிரவர்த்தியாகிச் சகலமான பூமண்டலத்தையும் ஆண்டுவந்தான். இவனைப்பற்றி ஒரு சுலோகம் உண்டு. அஃதாவது, "எவ்வளவிலே சூரியன் உதயமாகிறானோ, எவ்வளவில் அஸ்தமயமாகிறானோ, இவ்வெல்லைகளுக்கு உட்பட்ட பூமண்டலமுழுவதும் மாந்தாதாவின் இராச்சியமாயிற்று" என்பதாம்.

மாந்தாதா சசபிந்து வென்பவனுடைய மகளாகிய இந்துமதி யென்பவளைக் கலியாணஞ் செய்து கொண்டு அவளிடத்தில் புருகுச்சன், அம்பரீஷன், நாபாகன், என்கிற மூவரையும், ஐம்பது பெண்பிள்ளைகளையும் பெற்றான். அக்காலத்திலே இருக்குவேத மறிந்தவரான செளபரியென்னு முனிவர் தண்ணீரில் முழுகிப் பன்னிரண்டு வருஷகாலந் தவஞ்செய்துகொண்டிருந்தார். அந்தத் தண்ணீரிலே சம்மதனென்கிறமீனொன்று மிகப் பெரிய உருவமுள்ளதாய், பிள்ளைகள் பெண்கள் பேரன்மார்களாகிய தன் கிளைகளனேகம் முன்னும் பின்னும் பக்கங்களிலும் சிறகுகளிலும் வாலிலும் தலையிலும் ஏறி ஓடிவிளையாடிச் சஞ்சரித்துக்கொண்டிருக்கப் பெற்று, அவைகளைப் பிரியாமலே எப்போதும் மிகுந்த சந்தோஷமுள்ளதாய் அம்முனிவர்க்கு எதிரிலேயே திரிந்துகொண்டிருந்தது, அந்த மகாரிஷியோ தவத்திலிருந்த மனதின் ஒருமைப்பாடு குலைந்து, அந்த மச்சம் கிளைகளோடுகூடியனுபவிக்கிற சந்தோஷ விலாசத்தைக்கண்டு, "ஓ! ஓ! இந்த மீன் விரும்பத்தகாத ஈனமான பிறப்பிற் பிறந்ததானாலும் மகா பாக்கியமுள்ளது; ஏனென்றால் புத்திரபௌத்திராதிகள் விளையாடிக்கொண்டிருக்க அவற்றோடு பிரியாமற் சஞ்சரித்துக்கொண்டு சுகானந்தத்தை யனுபவிக்கிறதன்றோ, இதைப்பார்க்க நமக்கு எவ்வளவு ஆசையுண்டாகிறது; ஆதலால் நாமும் இப்படியாவதற்காக முயலவேண்

டும்" என்று ஆலோசித்து, அத்தடாகத்தினின்றும் வெளியில்வந்து சந்தானத்திற்காகக் கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று மாந்தாதாவினிடத்திற்கு வந்தார். இவர் வந்தசெய்தி கேட்டவுடனே அவ்வரசன் எதிர்கொண்டுவந்து, அர்க்கிய முதலான உபசாரங்களினாலே நன்றாய்ப் பூசித்து, ஆசனங்கொடுக்க, அம்முனிவர் அதிலுட்கார்ந்து, அரசனை நோக்கி "ஓ அரசனே! நான் விவாகஞ்செய்துகொள்ள விருப்பமுற்றிருக்கிறேனாதலால் நீர்எனக்குக் கன்னிகாதானஞ் செய்யவேண்டும். என்னுடைய வேண்டலை வீணாக்க வேண்டாம். ககுத்ஸ்த வமிசத்தாரிடத்து வந்த யாசகர் தங்கள் இஷ்டத்தைப் பெறுமற் போனதில்லையன்றோ? இவ்வுலகத்திலே மற்று மநேக மன்னர்களிருக்கிறார்கள். அவர்களுக்குங் கன்னிகைகள் உண்டு. ஆகிலும் யாசிப்பவருடைய இஷ்டத்தை நிறைவேற்றும் விரதமுடையது உமது குலமாகையாலே மிகச் சிலாக்கியமென்று உம்மிடம் வந்தேன். உமக்கு ஐம்பது புத்திரிளிருக்கிறார்கள் அல்லவா? அவர்களுள் ஒருத்தியை எனக்கு நீர் பத்தினியாக அளிக்கவேண்டும் நானோ பிரார்த்தனைக்குப் பங்கம் நேரிடுதலாகிய அதிக துக்கத்துக்குப் பயந்துகொண்டிருக்கிறேன். ஆதலின் எனக்கு நீர் அளிக்கவேண்டும். அவ்விதம் அளித்து எனக்கு நீர் அந்தத் துன்பம் வராமலிருக்கும்படிச் செய்யவேண்டும்" என்றனர். இப்படி சௌபரி ரிஷி சொன்ன வார்த்தையைக் கேட்டு அந்த மாந்தாதா மகாராஜன், மூப்பினாலே தளர்ந்து, நரைத்திருக்கிற தேகமுள்ளவரான அம்முனிவரைப் பார்த்துச் சாப பயத்தினாலே மறுக்கமாட்டாதவனாய், ஒன்றுந் தோன்றாமல் தலையை வணங்கிக் கொண்டு, நெடுநேரஞ் சிந்தித்துக் கொண்டிருந்தான். அதுகண்டு அத்தபோதனன், "ஓ நரேந்திரா! நீர் என்ன சிந்திக்கிறீர்? நானொன்றும் தகாதது சொல்லவில்லையே. அவசியம் யார்க்காகிலுங் கொடுத்துத் தீரவேண்டிய கன்னிகையை எனக்குக் கொடுக்கும்படிச் சொன்னேன். இதனாலே நீர் கிருதார்த்த ராகமாட்டீரோ" என்றுரைக்கக் கேட்டு, அந்த மகி

பதி, இவர் ஒருவேளை சாபமிடுவரோயென்று அஞ்சி மிக வணக்கத்துடனே அவரைப் பார்த்து, "ஓ முனீந்திரரே! எங்கள் குலத்துமுறை யென்னவென்றால், கன்னிகை யார்மே விஷ்டப்படுகிறாளோ அந்த வரனுக்கே அக் கன்னிகையைக் கொடுப்பது. இஃதிப்படியிருக்கத் தேவரீருடைய வேண்டுதலோ அடியேங்களுடைய எண்ணங் களுக்கு மேற்பட்டது. இவ்விடத்தில் என்ன செய்யத் தக்கதோ தெரியவில்லை. இதைக் குறித்தே சிந்திக் கிறேன்" என்று கூறினான். இதுகேட்டு அம்முனி வரர், அரசன் நம்முடைய வேண்டுதலை மறுக்க ஒரு பாயந் தேடினான். எப்படியென்றால் இவன் முழுக் கிழவனுகையால் எப்படிப்பட்ட பெண்பிள்ளையு மிவனை விரும்பமாட்டாள். இப்படியிருக்கப் பருவமுள்ள கன்னிகைகள் விரும்புவார்களோ? ஆதலால் தானே ஆசை யற்றுப் போகட்டுமென்று யோசித்து இப்படிச் சொன் னான். ஆகட்டும் இதற்கேற்றபடி நடக்கக் கடவோ மென்று மனதில் நினைத்துக்கொண்டு, இராஜாவைப் பார்த்து "ஓ மகாராஜாவே! அப்படியானால் உங்கள் குலவிரதத்தை நான் அழிக்கவில்லை. என்னைக் கன்னிகைகளிருக்கும் அந்தப்புரத்திற்குப் போகும்படி அந்தப்புரக் காவலாளிக்குக் கட்டளையிடும். கன்னிகையே என்னைக் காதலிப்பளாயின் நான் விவாகம் பண்ணிக்கொள்ளுகிறேன். இல்லாவிட்டால் முதிர்ந்த வயதில் இவ்வெத்தனம் எனக்கு ஏதுக்கென்று விட்டுவிடுகிறேன்" என்று சொன்னார். பின்பு அரசன் அப்படியே செய்யும்படி அந்தப்புரக் காவற்காரனுக்குக் கட்டளையிட்டான். அக் காவற்காரனோடுகூட அம்மகா முனி போய்க்கொண்டே யிருக்கையில் சகலமான சித்த கந்தர்வாதிகளினு மேம்பட்ட அழகுள்ள ரூபத்தை யெடுத்துக் கொண்டார். அந்தச் சேவகன் இம்முனிவரை அந்தப்புரத்திற் கொண்டுபோய்விட்டு அங்கிருந்த கன்னிகைகளை நோக்கி "ஓ கன்னிகா ரத்தினங்களே! உங்கள் தகப்பனாராகிய மகாராஜாவினிடம் இம்முனிவர் கன்னிகை வேண்டிவந்தார். கன்னிகைகளுள் யார் பிரியப்பட்டு இவரை வரிக்கிறார்களோ அவர்களை அவர்களிஷ்டப்படி இம்முனிவருக்குக் கொடுப்பேன்

என்பது உங்கள் பிதாவின் கட்டளை" என்று சொல்லக் கேட்டு அக்கன்னிகைகள் வந்து அம்முனியைப் பார்த்துக் காமாவேச முடையவர்களாகி, நல்ல மதத்த ஆண் யானையைப் பெண்யானைகள் சூழ்வதுபோல் சூழ்ந்து கொண்டு, நான் நானென்று பரபரப்புடனே யாவரும் வரித்தார்கள். அப்போது அவர்கள் சொல்லிக்கொண்டதைக்கேளும். ஒருத்தி, "என் சகோதரிகளே! இவரை நானே வரிக்கிறேன். நீங்கள் சும்மா விருங்கள்" என்றாள். மற்றொருத்தி, "என் அக்கைமார்களே! தங்கைமார்களே! இவரை நீங்கள் வரித்தது போதும், இவர் உங்களுக்குத் தக்கவரல்ல, எனக்கே தக்கவர்" என்றாள். இன்னொருத்தி, என்னுடன் பிறந்தீர்களே! இவரை எனக்குத் தெய்வம் பர்த்தாவாகச் சிருட்டித்தது பாருங்கள், அதனாலேதான் இவருக்கும் எனக்கும் ரூபம் ஒத்திருக்கின்றது" என்று சொன்னாள். வேறொருத்தி, "என் தங்கைகாள்! நீங்களிவரை இனி வரிக்கக்கூடாது, ஏனெனில் முந்தி நான் வரித்தேன்" என்றுரைத்தாள். அதுகேட்டு அவள் தங்கை, "அக்காய்! நீ யப்படிச் சொல்லாதே, அவர் வரும்போதே பார்த்து நான் மனதில் வரித்துவிட்டேன், ஆகையால் மற்றை யாவரும் வரிக்கக்கூடாது" என்று கூறினாள். இவ்வாறு ஒருவரை யொருவர் மறுத்துக்கொண்டு கலகப்பட்டு அந்தப் பெண்கள் யாவரும் மிகுந்த விருப்பத்தோடு தனித்தனியாக வரித்திருப்பதை அக்காவற்காரன் அரசனுக்குத் தெரிவிக்க, அதைக்கேட்டு அந்த வேந்தர் வேந்தன், "என்ன இது? என்ன செய்வேன்? என்னசொல்லிவிட்டேன்?" என்று மனங்கலங்கித் தனக்கு விருப்பமில்லாதிருந்தும் வாக்குத்தத்தத்திற்குப் பயந்து அக்கன்னிகைகளையெல்லாம் சௌபரி மகாரிஷிக்குக் கொடுத்துவிட்டான்.

அம்முனிவர் அந்தப் பெண்களை விவாகஞ்செய்து கொண்டு வெகுசந்தோஷத்தோடு அவர்களைத் தமதாச்சிரமத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சகல சிற்பநிர்மாண சாமர்த்தியமுள்ள விசுவகர்மாவைக் கூப்பிட்டுத் தம்முடைய பத்தினிகளுக்குத் தனித்தனியே அன்ன முதலான நீர்ப்பறவைகள் சப்திக்கப்பெற்ற தாமரைத்தடாக

முள்ளவைகளாய் அனேகவித புஷ்ப விருக்ஷங்களிலும் பல விருக்ஷங்களிலும் மயில் குயில் முதலானவை ஆடிப் பாடிக் களித்திருக்கப் பெற்றவைகளான உத்தியான வனங்களோடுகூடி விசாலமான மெத்தை மேடை மாட கூட முதலானவைகளும், ஆசன சயன முதலானவை களுமுள்ள மகா ரமணீயங்களான மாளிகைகளை நிரு மிக்கும்படி கட்டளையிட்டார். விசுவகர்மாவு மப்படியே செய்தான். பின்பு சௌபரி மகாமுனிவனுடைய ஆக் கினையினுலே அந்த மாளிகைகளில் நந்தனமென்கிற மகா நிதியானது நித்தியமாயிருந்து கொண்டிருந்தது. பின்பு அம்மாளிகைகளில் அந்த இராஜகன்னிகைகள் வாசஞ் செய்துகொண்டு, திவ்வியமான பலவகைப் போசன பானுதிகளினுலே திருப்தியடைந்து சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

பின்னர் ஒருகாலத்தில் அந்தச் சக்கரவர்த்தி புத்தி ரிகளிடத்தி லன்பினுலே அவர்களென்ன வருத்தப்படு கிருர்களோ வென்று அவர்களைப் பார்க்க நினைத்து, அவ்வாச்சிரமத்தண்டைவந்து ஸ்படிக மயமாய் விளங் கா நின்ற வுபரிகைகளைக் கண்டு, அதிசயித்து ஒரு மாளி கையில், நுழைந்து, அங்கிருந்த மகளைக்கண்டு கட்டிக் கொண்டு, அவளால் ஓராசனங் கொடுக்கப்பெற்று அதி லுட்கார்ந்து, சிநேகத்தினுலே கண்களில் நீர் ததும்ப அவளைநோக்கி, "அடி என் குழந்தாய்! நீ சுகமாயிருக் கிருயா? அல்லது அசுகமா யிருக்கிருயா? இருடி உன் னிடத்தி லன்பாயிருக்கிருரா? நீ நம்முடைய அந்தப் புரவாசத்தை நினைக்கிருயா?" என்று கேட்க, அவள் சொல்லுகிருள், "என்றந்தாய்! நான் சுகமாயிருக்கி றேன். எனக்கு இரமணீயமான உப்பரிகையும், அழ கான தோட்டமும், நீர்ப்பறவைகளோடு தாமரை முத லானவைகளும் விளங்கா நின்ற தடாகங்களும், மன திற்கு இன்பமான பக்ஷியபோச்சிய முதலான வுணவுக ளும், திவ்வியமான வஸ்திராபரணங்களும், மகாபரிமள முள்ள கந்தபுஷ்பாதிகளும், மிகவு மெதுவான சயனு சயனங்களும், இன்னும் இல்லறத்துக்குரிய சகல சம் பத்துமுண்டு. உமது அனுக்கிரகத்தினுல் எல்லாம்நன்ரு யிருக்கின்றன. ஒரு குறையுமில்லை. ஆகிலும் பிறந்த

விடம் எப்படி மறந்துபோகும்? ஆனால் துக்கத்திற்குக் காரண மொன்றிருக்கின்றது. என்னவெனில், என் கணவனாகிய அம்முனி எப்போதும் என்னிடத்திலேயே காதலாய் என்னைவிட்டுப் பிரியாம லிருக்கிறார். என் சகோதரிகளை நினைப்பதுமில்லை. இதுதானொன்று என் மனதை வருத்துகின்றது” என்றாள். பின்பு அரசன் மற்றொருமகள் வீட்டுக்குட் சென்று அவளையுங் கட்டி முகந்து முன்போலவே சுகத்தை வினவினான். அவ ளும் தனக்குக் கிருக வஸ்திர பூஷண சயன போசனாதி சௌக்கியங்களி லொன்றுங் குறைவில்லை; ஆனால் தன் புருஷன் தன்னைவிட்டுப் பிரியாம லிருப்பதனாலே தன் சகோதரிகளுக்கு நேர்ந்த துக்கமொன்றே தனக்குத் துக்ககாரணமா யிருக்கிறதென்று சொன்னாள். அப் புறம் அரசன் ஒவ்வொருத்தி மனைக்கும் சென்று வினவ, யாவரும் அப்படியே சொல்லக்கேட்டு, மிகுந்த ஆனந்த மும் சந்தோஷமும் உண்டாகி, இருதயம் பரவசமாய் ஏகாந்தத்தி லுட்கார்ந்திருந்த சௌபரி மகா ரிஷியி னிடம் போய், அவராலே மரியாதை செய்யப் பெற்று, வெகு வினயத்தோடு அவரை நோக்கி, “ஓ மகாநு பாவரே! தேவரீருடைய மேலான சித்தியின் பிர பாவத்தைக் கண்டேன். நான் மற்றொருவருக்கும் இப்படிப்பட்ட சம்பத்தின் விலாச மிருந்ததாகக் கண் டது மில்லை கேட்டது மில்லை. இது அளவற்ற தேவரீருடைய தவத்தின் பயனென்று சொல்லி, அவரை மிகவும் புகழ்ந்து மேன்மைப் படுத்தி, அங் கேயே அவரோடு கூடச் சிலகாலமிருந்து, இஷ்டமான போகங்களை யனுபவித்துப் பின்பு தன் பட்டணம் போய்ச் சேர்ந்தான்.

பின்பு காலமுறையிலே அவ்விராச குமாரிகளுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தனர். அம்முனிவர் நாளுக்கு நாள் அப்பிள்ளைகளிடத்திலே ஆசை யதிகரித்து மமதையினாலே மனமிழுக்கப்பட்டவராய், “இக்குழந் தைகள் மழலைச் சொற்களைச் சொல்லிக்கொண்டு சிற்றடி களினால் நடக்குமோ? இப்பிள்ளைகள் யவ்வனமுடைய வர்களாவார்களோ? இவர்கள் மணம் புரிந்து தக்க பெண்டிரோடுகூடி யிருக்கக் காண்பேனோ? இவர்களுக்

ருக் குழந்தைகள் உண்டாகுமோ? அக்குழந்தைகளும் வளர்ந்து மனைவிகளோடுசேர்ந்து சந்தானமுடையவர்களாகக் கண்டு களிப்பேனோ?" என்றிப்படி காலஞ் செல்லச் செல்ல மனோரதங்கள் வளர்ந்துகொண்டே வர வேறு சிந்தை யில்லாமலிருந்தார்.

இப்படியிருக்கையில் அம்முனிவர் தனக்குள்ளே தானே யிப்படி யாலோசிக்கலாயினார். "ஓ! ஓ! எனக்கு நேர்ந்த மோகவிலாசத்தை யென்சொல்லுவேன்? பதினாலாயிரம் வருஷம் அல்லது லக்ஷ வருஷகாலந்தான் சென்றாலும் இம்மனோரதங்கள் ஒழியவில்லை. ஏனெனில் முன்னுண்டாகிய மனோரதங்கள் நிறைய நிறைய நூதனமாய் வெவ்வேறு மனோரதங்களுண்டாய்க் கொண்டிருக்கின்றன. நாம் முன்பு கோரினபடி குழந்தைகள் பிறந் தூர்ந்து தவிழ்ந்து தத்தடிவைத்து நடந்து வளர்ந்து பருவமடைந்து மணம்புரிந்து மக்களையும் பெறக்கண்டோம். இப்போதோ மனமானது பேரன்மாருக்கும் சந்ததி யுண்டாகக் காணவிரும்புகின்றது. அதுவுங் கண்டாலும் வேறொரு மனோரத முண்டாகும். அதுவு நிறைய மற்றொன்றுண்டாகும். இப்படி மேன்மேலே மனோரத முண்டாவதைத் தடுக்க யாராலாகும்? மரண மடைவதினாலே மாத்திரம் இம்மனோரதங்களுக்கு முடிவுண்டேயல்லாமல் மற்றொன்றினாலு முடிவுண்டாகமாட்டாது. இப்போது இது நன்றாயெனக்குத் தெரிந்தது. இவ்வாறு கோரிக்கைகளிலே அழுந்தி நிற்கிறவனுக்கு ஒருபொழுதும் மனம் பரமார்த்தத்தைப் பற்றமாட்டாது. தண்ணீரிலே வாசஞ் செய்கையில் மித்திரனை மச்சத்தினுடைய சேர்க்கையா லன்றோ எனது சமாதிநிஷ்டை குலைந்து போயிற்று. சகவாச தோஷத்தினாலன்றோ நான் பெண்டிரைக் கொள்ளலாயிற்று. அப்பெண்டிரைக் கொண்டதனாலன்றோ மேன்மேல் ஆசைப்பெருக்க முண்டாயிற்று. ஒரு பெண்டிரைக் கொள்வதும் ஒரு புத்திரனைப் பெறுவதுமே வெகு துக்க காரணமாயிருக்க, ஐம்பது பெண்டிரையும் நூறு புத்திரரையும் பெற்று அந்தத் துக்கத்தைப் பெருக்கிக்கொண்டேன். மமதையென்று சொல்லப்பட்ட இப்பரிக்கிரகமானது

புத்திரரும் பௌத்திரரும் பௌத்திரருடைய புத்திரரும் ஆகிய இவர்களினாலும் இவர்களுடைய புத்திராதிகளினாலும் வளர்ந்துவிட, அதி துக்க ஹேதுவாகுமன்றோ. நான் தண்ணீரிலிருந்து செய்த தவத்திற்கு இச்செல்வப் பேறு இடையூறாயிற்றே. என் செய்வேன்! மச்சத்தின் கூட்டுறவினால் உண்டான மக்கட்பேற்றின் விருப்பத்தினாலே கவரப்பட்டுப் போனேனே! சங்கமற்றிருப்பதே முனிவர்க்கு மோட்ச காரணமாகும். சங்கமத்தினாலேயோ குற்றங்களே யுண்டாகும். யோக நிஷ்டை கைகூடினவனும் சங்கமத்தினால் கீழே வீழ்வானானால், அற்ப சித்தியுள்ள எம்போலியோர்க்குக் கேட்க வேண்டுமோ? புத்திர களத்திராதி பரிக்கிரகமாகிற முதலையினாலே பிடித்துக் கொள்ளப்பட்ட புத்தியுடையவனான நான் சகல தோஷங்களும் நீங்கினவனாய் மீண்டும் பரிக்கிரக துக்கங்களைக் கொண்டு துக்கமடையாம லிருக்கும்படி இனியாகிலும் தக்க முயற்சிசெய்து ஆத்துமாவைக் காப்பாற்றவேண்டும். ஆகையால் எல்லாவற்றையும் அளிக்க வல்லவனும், இப்படிப்பட்டதென்று சிந்திக்கவொண்ணாத திவ்விய சொரூபமுள்ளவனும், அணுவுக் கணுவாயும் மகத்துக்கு மகத்தாயு மிருப்பவனும், முன்பு ஒரு யுகத்திலே வெண்மையாயும் இந்த யுகத்திலே கருமையாயு மிராநின்ற திவ்விய மங்கள விக்கிரகமுள்ளவனும், பிரகிருதிக்கு உட்படாத சுத்த சொரூபமும் பிரகிருதிக்கு உட்பட்ட சுத்தமல்லாத சொரூபமுடையவனும், லோகேசுவரரென்று புகழப்பட்ட பிரமருத்திராதிகளுக்கும் ஈசுவரனுமா யெழுந்தருளி யிருக்கிற ஸ்ரீவிஷ்ணுபகவானை ஆராதிக்கக்கடவேன். சகல தேஜோரூபியாயும் சர்வஸ்வரூபியாயும், வெளிப்படாததும் வெளிப்பட்டதுமான திருமேனியுடையவனாயும், காரியகாரண ரூபியாயும், தேசகாலாதி பரிச்சேத மில்லாதவனாயும் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீவிஷ்ணுவினிடத்திலே எனக்கு மீண்டும் பிறவியில்லாமையின் பொருட்டு என் சித்தமானது சஞ்சலமின்றி ஸ்திரமா யிருக்கக்கடவது. சர்வ பூதாத்துமகனாயும் நிர்மலனாயும் சர்வேசுவரனாயும் ஆதிமத்தியாந்தரகிதனாயுமிருக்கிற எந்த அநந்தனைக்காட்டிலும் வேறாய்த் தோன்றும்படியான பொருளொன்று

மில்லையோ, அந்தத் தேசிகருக்கெல்லாந் தேசிகனு யெழுந்தருளி யிரா நின்ற ஸ்ரீவிஷ்ணுவைச் சரணமாகப் பற்றுகின்றேன்" என்றிப்படித் தனக்குள்ளே தானே சிந்தித்துச் சொல்லிக்கொண்டு அந்த மகாரிஷி புத்திரர்களையும் வீடு தோட்ட முதலான சகல சம்பத்துக்களையும் பற்றற விட்டு, தம்மனைவியரோடுகூட வனத்திற் பிரவேசித்து, வானப்பிரஸ்தர் செய்யவேண்டிய சகல கிரியா கலாபங்களையுந் தினந்தோறுங் குறைவறச் செய்துவந்து சகல பாபங்களையும் போக்கிக்கொண்டவராய், அதனாலே பக்குவமான சித்த நிலையுள்ளவராய், அக்கினிகளை ஆத்துமாவிலே யேற்றிவிட்டுச் சன்னியாச ஆச்சிரமத்திற் பிரவேசித்தார். அப்படியாகிச் சகல கிரியா கலாபத்தையும் எம்பெருமானுக்கு ஆராதனமாய்ச் சமர்ப்பித்து நாசமில்லாததும் விகார சூனியமும் மரணாதிகளுக்கு இடமாகாததும் அளவற்றதும் எல்லாவற்றிற்கு மேலானதும் பாகவதர்கள் அடையும்படியானதுமாய் விஷ்ணு லோகமென்று சொல்லப்பட்ட பரமபதத்தையடைந்தார்.

மயித்திரேயரே! இப்படி மாந்தாதாவைப்பற்றிய தாகையாலே இந்தச் சௌபரி சரித்திரமுஞ் சொன்னேன். யார் சௌபரி சரிதத்தை ஸ்மரிக்கிறானோ படிக்கிறானோ, படிப்பிக்கிறானோ, கேட்கிறானோ, கேட்பிக்கிறானோ, தரிக்கிறானோ, எழுதுகிறானோ, எழுதுவிக்கிறானோ, அதின்படி நடக்கிறானோ, நடத்துகிறானோ, உபதேசிக்கிறானோ, அவர்களுக்கெல்லாம் எட்டுப் பிறப்பு வரையிலும் தீயசிந்தையும் தீயொழுக்கமும் வாக்குமனந் தீயவழியிற் செல்லுதலும், பரித்தியாகம் பண்ணவேண்டியவைகளிலே அபிமானமும் உண்டாவதில்லை.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

## மூன்றும் அத்தியாயம்

# புருகுச்ச, சகரமகாராஜாக்களுடைய சரித்திரம்

ஓ மயித்திரேயரே! இனி மாந்தாதாவின் சந்ததியைச் சொல்லுகிறேன். மாந்தாதாவின் குமாரனான அம்பரீஷனுக்கு யுவனாசுவனென்கிற புத்திரனுண்டானான். அவனுக்கு அரிதன் பிறந்தான். இதனாலேதான் அங்கிரசுகள் ஆரீதரானார்கள். அக்காலத்திலே பாதாள லோகத்தில் மௌனேயரென்கிற ஆறுகோடி கந்தருவரிருந்தார்கள். அவர்கள் நாககுலத்தாருடைய பிரதானமான இரத்தினங்களையும் ஆட்சியையும் அபகரித்துக் கொண்டார்கள். அதனால் அந்த நாககுலத்தாரெல்லாம் திருப்பாற்கடலிற் சென்று சகல தேவதைகளுக்கும் நாதனான எம்பெருமான் சன்னிதியிலே அநேக ஸ்தோத்திரங்களைச் செய்ய, அவ் வெம்பெருமான் அந்த ஸ்தோத்திரங்களைத் திருச்செவி சாற்றி யோகநித்திரையைவிட்டுத் தாமரை மலர்ந்தாற்போலே திருக்கண் மலர்ந்தருளி அவர்களைக் கடாக்ஷிக்க, அந்நாகர் பலமுறைத் தண்டம் சமர்ப்பித்து "சுவாமி, பகவானே! அடியேங்களுக்கு இந்தக் கந்தருவரிடத்தினின்றும் மிகுந்த பயமுண்டாயிருக்கிறதே, இஃது எப்படித் தீரும்" என்று விண்ணப்பம் பண்ணிநிற்க, முதலு முடிவுமில்லாத எம்பெருமான் அவர்களைக் குறித்து "ஓ நாகர்களே! மாந்தாதாவின் குமாரன் புருகுச்சனென்பவனிடத்திலே நான் ஆவேசித்து உங்கள் சத்துருக்களை யடக்குவேன்" என்று அருளிச் செய்யக்கேட்டு, அவர்கள் பகவானைத் திருவடிதொழுது மறுபடியும் பாதாளத்துக்குச் சென்று, தங்கள் சகோதரியான நர்மதையை அந்தப் புருகுச்ச மகாராஜனுக்குப் பத்தினியாகும்படி யனுப்பினார்கள். அந்த நர்மதாதேவியும் புருகுச்சமகாராஜனோடு சேர்ந்து அவனைப் பாதாள லோகத்துக்குக் கொண்டு வந்து விட்டாள். பின்பு புருகுச்சமகாராஜன் எம்பெருமானுடைய தேஜோ விசே

ஷத்தினாலே ஆவேசிக்கப்பட்டு, அந்தத் துஷ்ட கந்தருவர் யாவரையும் நாசஞ்செய்து, மறுபடியும் தன் பட்டணம் வந்து சேர்ந்தான். அப்போது சர்ப்பராஜாக்களெல்லாங்கூடி, "ஓ நர்மதாய்! யார் உன்னை நினைத்து உன்பேரைக் கீர்த்தனஞ் செய்கிறாரோ, அவனுக்குச் சர்ப்பத்தாற் பயமில்லாமற் போகக்கடவது" என்று நர்மதைக்கு வரங்கொடுத்தார்கள். இங்கொரு சுலோகமுண்டு. அஃதாவது, "காலையில் நர்மதைக்கு நமஸ்காரம். இரவில் நர்மதைக்கு நமஸ்காரம். ஓ நர்மதாய்! உனக்கு நமஸ்காரம், நீ என்னை விஷ சர்ப்பங்களினின்றும் இரக்ஷிக்கவேண்டும்" என்றிப்படி இதைச் சொல்லிக்கொண்டு இராப்பகல்களில் இருள் மூடின விடத்திற்குச் சென்றாலும் அவனைப் பாம்புகள் கடிப்பதில்லை. அன்றியும் நர்மதையை இவ்விதமாகத் தியானித்துக்கொண்டு விஷத்தைப் புசித்தாலும் அவ்விஷத்தினா லொருதீங்கு முண்டாவதில்லை. அந்த நாகேந்திரர் நர்மதைக்கு இவ்வாறு வரங்கொடுத்தது மன்றி அவ்வரசனுக்கும் சந்ததி அற்றுப் போகாமற் பெருகும்படி வரங்கொடுத்தார்கள்.

புருகுச்சன் நர்மதையினிடத்திலே திரசதஸ்யு என்பவனைப்பெற்றான். திரதஸ்யுவுக்கு அநரண்யன் ஜனித்தான். அவனை இராவணன் திக்குவிஜயஞ் செய்து வருகையிற் சண்டையிற் கொன்றான். அவ்வரண்யனுக்குப் பிரஷதசுவன் பிறந்தான். அவனுக்கு மகன் ஹரியசுவன். அவனுக்குப் புத்திரன் ஹஸ்தன். அவனுக்கு வசுமனசு, அவனுக்குத் திரிதன்வா, திரிதன்வாவுக்குத் திரையாருணி, திரையாருணிக்குச் சத்தியவிரதனென்பவன் பிறந்தான். அவன்தான் திரிசங்குவென்று பெயர்படைத்தவன். அவன் தன் பிதாவின் சாபத்தினாலே சண்டாளத்துவ மடைந்து பன்னிரண்டு வருஷமளவு மழையில்லாமையா லுண்டான ஒரு பெரும் பஞ்சத்திலே விசுவாமித்திர முனிவருடைய பாரியா புத்திரர்கள் பிழைக்கும்பொருட்டுத் தினந்தோறு மிருக மாமிசங்களைக் கொண்டுவந்து, சண்டாளனிடத்தில் வாங்குகிற குற்றம் அவர்களுக்கு நேரிடாதபடி, அம் மாமிசங்களைக் கங்கைக்கரையி லிருந்த ஓர் ஆல

மரத்திலே கட்டிக்கொண்டு வந்தான். இதனாலே விசுவாமித்திர முனிவர் மிகவுஞ் சந்தோஷித்து அந்தத் திரிசங்குவை உடலோடு சொர்க்கலோக மேற்றினார். அத்திரிசங்குவின் குமாரன் ஹரிச்சந்திரமகாராஜன். அவன் மகன் உலோகிதாசுவன். அவனுக்கு ஹரிதன், ஹரிதனுக்குச் சஞ்சு, சஞ்சுவுக்கு விஜயன், வாசுதேவன் என்றிரண்டு குமாரர் பிறந்தார்கள். அவருள் விஜயனுக்குக் குருகன் பிறந்தான். குருகனுக்கு விருகன், விருகனுக்குப் பாகு பிறந்தான். அந்தப் பாகுமகாராஜன் ஹேஹயதால ஜங்காதிகளாலே வெல்லப்பட்டுக் கர்ப்பிணியாயிருந்த தன் மனைவியோடுகூட வனத்திற் பிரவேசித்தான்.

அவ்வியத்தில் அவளுடைய சக்களத்தியானவள் அவளுடைய கருப்பம் அழிந்துபோம்பொருட்டு அவளுக்கு விஷத்தைக் கொடுத்தாள். அதனாலே அந்தக் கருவானது ஏழாண்டளவு வயிற்றிலேயே இருந்தது. அந்தப் பாகுவும் வயதுசென்றமையாலே ஔர்வமகாமுனிவருடைய ஆச்சிரம சமீபத்திலே மரித்தான். அப்போது கருப்பவதியான அவன் மனைவி, சிதையடுக்கித் தன் புருஷனை யதன்மேல் வைத்துத் தானு மவனுடனே அநுமாணஞ் செய்வதாக எத்தனப்பட்டிருந்தாள். அப்போது சென்றது செல்கிறது செல்வது ஆகிய முக்காலக் காரியங்களையு மறிந்த மகாத்துமாவான ஔர்வ மகாமுனிவர் தம்மாச்சிரமத்தினின்றும் அங்குவந்து அப்பெண்பிள்ளையைப் பார்த்து, "பெண்ணே! இந்த வீணெண்ண மெண்ணினது போதும். சகல பூமண்டலத்தையு மாளத் தக்கவனாய், மகா பல பராக்கிரமசாலியாய், சத்துருவருக்கத்தை நாசஞ்செய்ய வல்லவனாய், அனேகயாககர்த்தாவாய், கீர்த்தி பெறும்படியான சக்கிரவர்த்தி உன்வயிற்றிலிருக்கிறான். ஆதலால் இந்தச் சாகசஞ்செய்ய வேண்டாம்" என்று அருளிச் செய்யக் கேட்டு, அப் பெண்மணியும் அந்தக் கொடிய எத்தனத்தை ஒழித்துவிட்டாள். அம்முனிவர் அவளைத் தமதாச்சிரமத்திற்கு அழைத்துக்கொண்டு போய் இரக்ஷித்துவர, சிலநாளுக்குப் பிறகு அவள் வயிற்றினின்றும் விஷத்தோடுகூடிய மகாதேஜசுள்ள

பாலகன் பிறந்தான். அந்தப் பிள்ளைக்கு தபோ நிதியானவர் ஜாதகர்மாதிகளைச் செய்து, விஷத்தோடு கூடப் பிறந்ததனாலே சகரனென்று பெயரிட்டார். [கரம்—விஷம்] பின்பு அந்த இருடி அப்பாலகனுக்கு உபநயனமுஞ் செய்து, சகல வேதசாஸ்திரங்களையு மோதுவித்துப் பிருகு மகாரிஷியினா லுபதேசிக்கப்பட்ட மேன்மையான ஆக்கினேயாஸ்திரத்தையும் உபதேசித்தார்.

இப்படியாக எல்லாவற்றையும் ஓதியுணர்ந்து பருவமடைந்த அச்சிறுவன், தன் தாயைநோக்கி "அம்மா! என் தந்தை எங்கே? நாம் அரசர்களாயிருந்து இக்காட்டில் ஏன் வந்திருக்கிறோம்?" என்று கேட்க, அவள் நடந்த காரியத்தையெல்லாம் அறிவித்தாள். இது கேட்டபின் அவ்விராசகுமாரன் வெகு கோபமும் பொறாமையு முள்ளவனாகி, ஹேஹய தால ஜங்காதிகளைத் துவம்சஞ் செய்வதாகப் பிரதிக்கினை செய்து, அப்படியே அந்தச் சத்துருக்களைப் பெரும்பாலும் அழித்து ஒழித்தான். அன்றியும் அச்சத்துருக்களோடு சேர்ந்த சகர், யவனர், காம்போஜர், பாரதர், பப்பிலவர்களையும் நாசஞ்செய்துவர, அவர்களெல்லாம் இவன் பராக்கிரமத்திற்கு எதிரே நிற்கமாட்டாமல் இவனுடைய குலகுருவான வசிஷ்டமகா முனிவரைத் தஞ்சம் புகுந்தார்கள். வசிஷ்டபகவானும் இவர்களைப் பிழைத்திருக்கிற பிணங்களாக நினைத்துச் சகரனிடத்தில் வந்து, "குழந்தாய்! இவர்கள் பிழைத்திருந்து மிறந்தவர்கள். இவர்களை மறுபடியும் இறக்கச்செய்வதிற் பயனென்ன? நானே உன் பிரதிக்கினைக்கு விரோதம் வராதபடி இவர்களை வைதிக சம்பந்த சூனியராகச் செய்தேன். நீ இவர்களை இனிவிட்டுவிடு" என்று சொல்ல சகரமகாராஜன் "அப்படியே யாகட்டும்" என்று குருவாக்கியத்தைச் சிரமேற்கொண்டு, அவர்களில் யவனரை மொட்டைத் தலையராகவும், சகரரைப் பாதித்தலை சிரைத்தவராகவும். பாரதரைத் தலைமயிர் தொங்கவிட்டவர்களாகவும், பப்பிலவரைத் தாடி வளர்ப்பவராகவுஞ் செய்து, வேஷங்களை மாற்றி, இவர்களையும் மற்றவர்களையும் வேதாத்தியய

னுதிகளினின்று விலக்கிச் சூனியராக்கிவிட்டான். அவர்களெல்லாம் இவ்வாறு தரும மிழந்ததனாலே மிலேச்சராய்ப் பிராமணரால் கைவிடப்பட்டார்கள்.

சகரமகாராஜன் தன்னிடத்திற்குப் போய் எங்குமெப்போதும் தன்னுக்கினைக்குப் பங்கம் வாராதபடிச் சகல துவீப சமுத்திராதிகளோடு கூடின இந்தப் பூமியை நீதியோடு பரிபாலனஞ் செய்துகொண்டு வாழ்ந்திருந்தான்.

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## நாலாம் அத்தியாயம்

# சகர புத்திரர் சரித்திரமும் சக்கரவர்த்தித் திருமகனார் வைபவமும்

சகரமகாராஜனுக்குக் காசியப புத்திரியாகிய சுமதியென்பவளும் விதர்ப்பராஜன் மகளாகிய கேசினி யென்பவளும் பத்தினிகளா யிருந்தார்கள். அவ்விரண்டு பெண்களும் சந்தான நிமித்தம் ஔரவரை ஆனந்திக்க, அவரும் சந்துஷ்டியடைந்து அவ்விருவரையும் நோக்கி இராஜபத்தினிகளே! ஒருத்தி வமிசம் விளங்கும்படியான ஒரு குமாரனையும், மற்றொருத்தி அப்படியல்லாத அறுபதினாயிரங் குமாரர்களையும் பெறவேண்டும். இவ்விரண்டுள் யாருக்கு எஃது இஷ்டமோ அதைப் பெறலாம்" என்று வரங்கொடுக்க, கேசினியென்பவள் வமிசகாரணமான ஒருவனை விரும்பினாள். சுமதியோ அறுபதினாயிர மக்களை விரும்பினாள். அம்முனிவர் அப்படியே யாகட்டுமென்று அனுக்கிரகிக்க, அவ்விருவரும் சிலநாட்களுக்குள்ளேயே பிள்ளைகளைப் பெற்றார்கள்.

அவர்களுள் கேசினியின் குமாரனான அசமஞ்சனுக்கு அம்சுமானென்பவன் பிறந்தான். அவ் அசமஞ்சுசுகன் சிறுவனாயிருக்கும்பொழுதே மிகவுந் தகாத தீங்குகளைச் செய்துவந்தான். அதனாலே அப்பெயருண்டா

யிற்று. [அசமஞ்சகம் - தீயது] இப்படித் தீமையான நடக்கையுள்ள மகனைத் தகப்பனான சகரமகாராஜன், இவன் பாலியத்தைப்பற்றிப் புத்தியில்லாமல் இப்படிப் பட்ட தீங்கு செய்கிறான், பருவம் வந்தால் புத்திசாலி யாகி நன்னடக்கை யுடையவனாவானென்று நினைத் திருந்தான். பின்பு அவன் யவ்வன வயதை யடைந் திருக்கையிலும் அப்படிப்பட்ட தீங்கையே செய்துவந்த தனாலே அவனை அவன் பிதாகாட்டுக்கு அடித்துத் துரத்திவிட்டான். பின்பு அவ்வறுபதினாயிரவரும் அசமஞ்சனைப்போலவே துஷ்டகாரியங்களைச் செய்யத் தலைப்பட்டார்கள். அப்படிப்பட்ட தீமைகளினாலே உலகத்தில் யாகாதி சத்காரியங்களும் சத்திய சௌசாதி ஆசாரங்களும் ஒழிந்துபோகக் கண்டு தேவதைகள், சகல வித்தைகளும் நிறைந்தவராய் சகல தோஷங்களு மில்லாதவராய் பகவானான ஸ்ரீபுருஷோத்தமனுடைய அம்சமாய் விளங்கா நின்ற கபிலமகாமுனிவர் சன்னிதி யிற் போய்த் தொழுது, "ஓ கபிலபகவானே! சகரகுமார ரெல்லாம் அசமஞ்சக ஒழுக்கமுடையவர்களாய் உல கத்தை யழித்து வருகிறார்கள். இதுவரையிலேயே அவர்களாலே அழிந்த வுலகம் இனி யெப்படியாமோ தெரியவில்லை. துன்பமுற்ற ஜகத்தைக் காப்பாற்றும் பொருட்டல்லவோ தேவரீர் அவதரித்திருப்பது" என்று விண்ணப்பஞ் செய்ய அந்தப் பகவான் "சிலநாட்களுக் குள்ளேயே அவர்களெல்லாம் மாண்டுபோவார்கள்" என்று அருளிச் செய்ததைக் கேட்டுத் தேவதைகள் சமா தான மடைந்திருந்தார்கள்.

இப்படியிருக்கச் சகரமகாராஜன் அசுவமேதஞ் செய்யத் தொடங்கினான். அதனிமித்தம் தன் குமாரர் களின் காவலிலே குதிரையைவிட, அக்குதிரையை யாரோ வொருவன் கொண்டுபோய்ப் பாதாளத்திலே விட்டுவிட்டான். பின்பு அவர்கள் அக்குதிரையின் குளப்படியைப் பிடித்துக்கொண்டு, ஒவ்வொருவர் ஒவ் வொரு காதமாகப் பூமியி னுள்ளிடத்தை வெட்டித் தோண்டி, உள்ளேபோய், அங்குத் திரிந்து கொண்டிருந்த யாகக் குதிரையையும் அதற்குக் கொச

தூரத்திலே மேகங்களொழிந்த சரத்காலத்துச் சூரியனைப்போல மேலுங் கீழும் பக்கங்களிலும் மிகுந்த தேஜஸோடு சொலித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீ கபிலபகவானையுங் கண்டார்கள். பின்பு அந்தத் துராத்துமாக்கள் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு "இதோ இவன் தான் நம்முடைய குதிரையைத் திருடிக்கொண்டு யாகத்தைத் தடுத்து நமக்கு அபகாரஞ் செய்தவன். ஆதலால் இவனைக் கொல்லுங்கள் கொல்லுங்கள்" என்று கூவிக்கொண்டே பாய்ந்தார்கள். இப்படி யவர்கள் ஓடிவருகையில் அந்த மகாரிஷி சிறிது உக்கிரமான பார்வையினால் தாக்க, அவர்கள் அப்படியே பற்றியெரிந்து சாம்பலாய்க் குவிந்தார்கள். இப்படித் தன் யாகக் குதிரை போனதும் புத்திரர் இறந்ததும் அறிந்து, சகர மகாராஜன் தன் பேரனாகிய அம்சுமானை அக்குதிரையைக் கொண்டுவரும்படி ஏவினான். அவனும் சகரகுமாரர் தோண்டின வழியாகவே கபில மகாரிஷி சன்னதியிற் சென்று தொழுது துதிக்க, அம்மகாத்துமா அம்சுமானை நோக்கி, "பிள்ளாய்! நீ குதிரையைக் கொண்டு போய் உன் பாட்டனாருக்குக் கொடுத்து யாகத்தை நிறைவேற்றிவை உன்பேரன் சொர்க்கலோகத்தி னின்றும் கங்காநதியைப் பூலோகத்துக்குக் கொண்டுவரக் கடவன் என்கிற வரத்தையும் உனக்குத் தந்தேன், போ" என்று அருளிச்செய்தார்.

அதுகேட்டு அசமஞ்சச குமாரன் மறுபடியும் அம்முனிவரை வணங்கி, "சுவாமி! பிராமண சாபத்தினாலே அழிந்த அடியேன் பாட்டன்மார் சுவர்க்க மடையும்படியாக ஒரு வரமளிக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, கபில பகவான், "பிள்ளாய்! முன்னமே சொன்னேனே. உன் பேரன் கங்கையைக் கொண்டுவருவானென்று, அந்த மகாநதி தீர்த்தத்தினாலே இறந்தவர்களுடைய இங்குக் குவிந்துள்ள எலும்புஞ் சாம்பலும் பரிக்கப்பட்ட மாத்திரத்திலே அவர்கள் தேவலோகம் புகுவார்கள். பக்தி சிரத்தைகளோடு நீராடுகிறவர்களைப் பாவந்தீர்த்துக் கடைத்தேற்றும். இவ்வளவு தானோ ஸ்ரீ விஷ்ணுவின் திருவடிக் கட்டைவிரலினின்று மவதரித்த அந்த மகாநதிக்கு மகாத்துமியம்! இன்

னம் விசேஷமுண்டு. தன்னிடத்திற் கருத்தேயின்றி இறந்தவனுடைய சரீரத்தைச் சார்ந்த எலும்பு தோல் நரம்பு மயிர் சாம்பல் முதலியவற்றுள் ஏதாகிலும் அத் தீர்த்தத்தாற் பரிசிக்கப்படுமாயின் அவ்வுடலுக்குரியவன் உடனே சுவர்க்கம் புகுவான்" என்று அருளிச் செய்தார். அதுகேட்டு அவ்விராஜகுமாரன் அவரைத் திருவடிதொழுது அசுவத்தைக் கொண்டுவந்து பாட்டனுருக்குக் கொடுத்தான். சகரனும் யாகத்தை நிறைவேற்றித் தன்மக்கள் தோண்டிய பள்ளத்துப் பாய்ந்த கடலைத் தனக்குப் புத்திரனாகப் பாவித்துக்கொண்டிருந்து உலோகாந்தரஞ் சென்றான்.

அம்சுமானுக்குத் திலீபனென்னு மரசன் பிறந்தான். திலீபனுடைய மகன் பகீரதன். அவன் சுவர்க்கத்திலிருந்து கங்கையைப் பூமிக்கு வருவித்துப் பாகீரதியென்னும் பெயர் பெறும்படிச் செய்தான். அந்தப் பகீரதனுக்குச் சுஹோத்திரன் பிறந்தான். அவனுக்கு நாபகன்; அவனுக்கு அம்பரீஷன், அவனுக்கு சிந்துத்துவீபன், அவனுக்கு அயுதாயு, அவனுக்கு உருதுபர்ணன் பிறந்தான். அவன் அக்ஷஹிருதயமென்கிற சூதாட்டுநூலை நன்கறிந்தவனாயிருந்து நளனுக்குச் சகாயமானான். உருதுபர்ணனுடைய மகன் சர்வகாமன். அவன் மகன் சுதாசனன், சுதாசனுக்கு சௌதாசன் என்றும் மித்திர சஹனென்றும் பேர்பெற்ற குமாரனுண்டானான். அவன் வேட்டைக்குக் காட்டிற்சென்று திரிந்துகொண்டிருக்கையில், இரண்டு புலிகளைக் கண்டு, அவ்விரண்டினாலேயே அக் காட்டிலுள்ள மிருகங்களெல்லாம் அழிக்கப்பட்டனவாக நினைத்து, அவ்விரண்டிலொன்றை அம்பினாலெய்தான். அவ்வம்பு பாய்ந்து இறக்கும் அப்புலி, மகாபயங்கரமான முகத்தோடு கூடிய ஓர் அரக்கரூபமாய் விழுந்தது. இரண்டாம் புலியோ அரசனை நோக்கி "உன்னிடத்தில் நான் பகை தீர்த்துக் கொள்வேன்" என்று சொல்லி மறைந்து போயிற்று.

பின்பு சிலகாலங்கழிய அந்தச் சௌதாசன் யாகஞ் செய்யத்தொடங்கினான். அவன் குலகுருவான வசிஷ்டமுனிவர் யாகத்துக்கு வேண்டிய காரியங்களைச் சித்தஞ்செய்து அப்புறம் போயிருக்குமளவில், அந்த அரக்கன்

வசிஷ்ட ரூபங்கொண்டு வந்து யாகத்தின் முடிவில் எனக்கு மனுஷ்ய மாமிசங் கொடுக்கவேண்டும்; ஆதலால் முன்னதாகவே அதைக் கொணர்ந்து பாகஞ்செய்துவை, நான் சீக்கிரத்தில் வருவேன்" என்றுசொல்லிப் போய் உடனே சுயம்பாகி வேடம்பூண்டு வந்து நின்று குருபக்தியினலே அரசன் கட்டளையிட்டதைக் கைக்கொண்டு மனுஷ்யமாமிசத்தைச் சமைத்து அரசனிடத்தில் கொண்டுவந்து வைத்தான். அரசனும் பொற்பாத்திரத்தி லம்மாமிசத்தை வைத்துக்கொண்டு வசிஷ்டர் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்து, அவர் வந்தவுடனே அதை யவருக்குக் கொடுத்தான். இதைக் கண்டவுடனே அம்முனிவர் ஈதென்ன இவ்வரசனுடைய துன்மார்க்கம்; திடீரென்று ஒரு மாமிசத்தை ஏன் நமக்குக் கொடுக்கின்றான்? இஃது என்ன மாமிசம்? என ஐயுற்று யோகதிருஷ்டியால் இது நரமாமிசமென்று தெரிந்து கொண்டு மிகுந்த குரோதமுற்றவராய், அரசனைநோக்கி, "இது தவசிகள் புசிக்கத்தகாதது என்று நீ அறிந்திருந்தும் எனக்கிதைக் கொடுக்க வந்தா யாகையால் நீயே இதில் மிகுந்த விருப்பமுள்ளவனுகக் கடவை" என்று சாபங்கொடுத்தார். இதைக்கேட் டவ்வரசன் "தேவரீர் நியமனப்படி யன்றோ அடியே னிப்படிச் செய்தேன்" என்றுசொல்ல, அம்முனிவர் சமாதியிலிருந்து நிகழ்ந்த வுண்மையைத் தெரிந்துகொண்டு, இராஜாவினிடத்திலே அனுக்கிரக முடையவராய் "ஓ அரசனே! நீ அரக்கனல் வஞ்சிக்கப்பட்டாய்; உன்மேல் குற்றமில்லை; ஆனலும் நான் முந்திச்சொன்ன வார்த்தை வீணுகமாட்டா தாகையால் நானிட்ட சாபம் உனக்குப் பன்னிரண்டு வருஷமளமே இருக்கும்" என்று சொன்னர். அதைக்கேட்டு அவ்வரசன் குற்றமில்லாத எனக்குச் சாபமிட்டது அநியாயமாகையால் நானும் உம்மைச் சபிப்பேன் என்று கையில் நீரையெடுத்துக் கொள்ள, அவர் மனைவியாகிய மதயந்தி என்பவள் தன் நாயகனுடைய கையைப் பிடித்துக்கொண்டு "மகாராஜனே! நமது குலத்திற்குத் தெய்வமாயும் ஆசாரியராயுமிருக்கின்ற ஸ்ரீ வசிஷ்டபகவானை நீர் இப்படி செய்வது தகாது என்று சமாதானம்பண்ணித் தடுத்

தாள். பின்பு அவ்வேந்தன் தன்கையிலெடுத்தசாபஜலத்தைத் தரையில்விட்டால் பயிர் அழியுமென்றும் வானத்தில் விட்டால் மழை அழியுமென்றும் நினைத்து, அவ்விரண்டிடங்களிலும் விடாமல் தன் பாதங்களின் மேலேயே விட்டுக்கொண்டான். கோபாக்கினியினுற் காய்ந்த அந்தத் தண்ணீர் பட்டதனுல் அவன் பாதங்களிரண்டும் ஒளியற்றுக் கருமைகலந்த வெண்மையுடையவைகளாயின. அதனுல் அவனுக்குக் கல்மாஷபாதன் என்கிற பெயர் வழங்கிற்று. வசிஷ்டரிட்ட சாபத்தின்படி அம்மன்னவன் ஆறுங்காலந்தோறும் இராக்ஷச சுபாவமடைந்து காட்டிற் புகுந்து மனிதரைத் தின்றுகொண்டேவந்தான்.

இப்படி நடந்துவருகையில் ஒருநாள் இருதுகாலத்திலே தன் பாரியையோடு புணர்ந்துகொண்டிருந்த முனிவனொருவனைக் கண்டு மிகவும் பயங்கரமான தன்னுருவத்தைப் பார்த்து பயந்தோடின அத்தம்பதிகளுக்குள்ளே அந்தப் பிராமணனைப் பிடித்துக்கொண்டான். அப்போது அந்தப் பிராமணப்பெண் அவ்விராக்கதனைப் பார்த்து, "ஐயனே! நீ அரக்கனல்லையே? மித்திரசகனென்கிற அரசனுமே? ஆதலால் நீ சகலமு மறிந்தவன். மேலும் ஸ்திரீதருமத்தின் சௌக்கியத்தை விசேஷமா யறிந்தவன். அப்படியிருக்க நான் கருதிய பயனை யடையாம லிருக்கையிலே நீ என் பர்த்தாவை நாசஞ் செய்வது நியாயமல்லவே? விட்டுவிடு" என்றிப்படிப் பலவகையாய்ச் சொல்லி வேண்டிப் புலம்பிக்கொண்டிருக்கையிலே, அவ்விராக்கதன் கிஞ்சித்தும் உணர்வில்லாதவனுகி, ஒரு வியாக்கிரம பசுவைப்பிடித்துப் புசிப்பதுபோல அந்தப் பிராமணனைக்கொன்று புசித்துவிட்டான். பின்பு அந்தப் பார்ப்பினி மிகக் கோபமூண்டவளாகி அவனை நோக்கி "அடபாவி! என்னை யிப்படி வீணுக்கி என் புருஷனைப் பட்சித்தாயாகையால் நீ காமபோகத்திற்காக எத்தனஞ் செய்யுமளவில் மரணமடைவை" என்று சாபமிட்டுப் பின்பு தீக்குதித்து இறந்தாள்.

பின்பு பன்னிரண்டாண்டுஞ் சென்று சாபந்தீர்ந்தவளவில் சம்போகவாசை கொண்டிருந்த அவ்வரச

னுக்கு அவன் பத்தினியாகிய மதயந்தியானவள் பிராமணத்தியிட்ட சாபத்தை நினைப்பு மூட்டினுள். அதனுலே அவ்வரசனும் ஸ்திரீபோகத்தை விட்டிருந்தான். இப்படியானதனுலே சந்ததியில்லாமற் போனதைப் பற்றி அவ்வரசன் குருவாகிய வசிஷ்டரை வேண்ட, அம்முனிவரும் அவன் பத்தினியாகிய மதயந்தியினிடத்திலே புத்திரனுண்டாகும்படி யருளினுர்.

அந்தக்கருப்பமானது ஏழுவருஷமளவும் வெளிப்படாம லிருந்தமையாலே அவள் ஒருகல்லினுலே வயிற்றை யிடித்துக்கொண்டாள். புத்திரனும் பிறந்தான். அவனுக்கு அச்மகன் என்கிற பெயரிடப்பட்டது. [அச்மா—கல்.] அந்த அச்மகனுக்கு மூலகனென்ற மகன் பிறந்தான். பரசுராமனுல் பூமியில் க்ஷத்திரிய வம்சமெல்லாம் அழிக்கப்படுமளவில் பெண்பிள்ளைகள் அம்மணக் கோலத்தோடு அவனைச் சூழ்ந்து கொண்டு பரசுராமன் கண்ணுக்கு அகப்படாமற் செய்தார்கள். அதனுல் அவனுக்கு நாரீகவசன் என்கிற பெயருண்டாயிற்று. அந்த மூலகனுக்குத் தசரதன் உண்டானுன். அவனுக்கு இலிபிளி யென்பவன் மகன். அவனுக்கு விசுவஸஹன்; அவனுக்குக் கட்வாங்கன் பிறந்தான். முன்னொரு காலத்திலே தேவாசுர யுத்தம் நேர்ந்தபோது தேவதைகள் வேண்டினமையால் அவர்களுக்கு உதவியாகச் சென்று அசுரரைச் செயித்தான். அதனுலே தேவதைகள் அவனைத் தங்களுடைய உலகத்திற்கு அழைத்துச் சென்று "நீ இஷ்டமான வரத்தைக் கேட்டுக்கொள்" என்று சொல்ல, அவ்வரசன் தேவதைகளை நோக்கி "நீங்கள் எனக்கு வரமளிக்கவேண்டுமென்னுங் கருத்துடையீராகில், என் ஆயுள் எவ்வளவு சொல்லுங்கள்?" என்றுன். தேவதைகள் "உனக்கு இன்னுமொரு முகூர்த்தகாலந்தான் ஆயுள் இருக்கிறது, என்று சொல்ல, அவர்களிடத்தில் விடைபெற்று அதிவேகமுள்ள வொரு விமானத்தின் மேலேறி வெகு சீக்கிரத்தில் பூலோகத்துக்குவந்து "பிராமணரைக் காட்டிலும் ஆத்துமாவும் எனக்குப் பிரியமில்லாம லிருந்ததும், நான் என் வர்ணுச்சிரம தருமங்களைக் கடவாமலிருந்ததும், தேவ மனுஷ்ய பசு

பக்ஷி விருக்ஷமுதலான சகலத்திலும் எம்பெருமானுடைய சான்னித்தியமே நித்தியமாயுள்ளதென்று நினைத்திருந்ததும் சத்தியமானல், முனிசிரேஷ்டரால் தியானஞ்செய்யப்பட்ட அந்தப் பகவானை யாதொரு தடையுமின்றி நான் அடையக்கடவேன்" என்று சொல்லிச் சகல தேவசிரேஷ்டனாய், சர்வ விலக்ஷணமாயும் சர்வாச்சரியகரமாயும் யாவற்றுக்கும் ஆதாரமாயுமுள்ள திவ்விய மங்கள விக்கிரகமுடையவனாய், யாதொரு மாறுதலுமின்றி ஒரே தன்மைப்பட்ட சொருபமுள்ளவனாய், ஸ்ரீவாசுதேவன் என்கிற திருநாமத்தோடு விளங்காநின்ற பரமாத்துமாவினிடத்திலே வேதாந்த வாக்கியத்தின்படி ஆத்தும சமர்ப்பணம்பண்ணி, அங்கேயே லயப்படுவதாகிய மோக்ஷானந்தம் பெற்றான். இவ்வரசன் விஷயமாக முன்பு சப்தரிஷிகள் பாடின சுலோக மொன்றுண்டு. அஃதாவது: "கட்வாங்கனென்ற இராஜரிஷிக்குச் சமானமாய் இந்தப் பூமியில் யாரும் உண்டாகமாட்டான். ஏனென்றால் ஒரு முகூர்த்த காலம் ஆயுளிருக்கையில் சுவர்க்கத்தினின்றும் பூமிக்கு வந்து, தன்னுடைய ஞானசத்தியங்களாலே சகல கதிகளையும் சகல லோகங்களையுந் தாண்டி, அவற்றையெல்லாம் ஸ்ரீவாசுதேவனிடத்திலே லயித்திருக்கிற தனக்குள்ளேயே கண்டானன்றோ" என்பதுதான்.

அந்தக் கட்வாங்க மகாராஜனுக்குத் தீர்க்கபாகு என்ற புத்திரன் பிறந்தான். அவனுக்கு இரகுமகாராஜன் பிறந்தான். அவனுக்கு அஜமகாராஜன் உண்டாயினன். அவன் குமாரன் தசரதமகாராஜன்.

சகல சுகுணபூர்ணனை ஸ்ரீபதுமநாபன் உலக ரக்ஷணத்திற்காகத் தன்னமிசத்தைக்கொண்டு ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்துருக்கினர் என்கிற நான்கு ரூபமாக அத்தசரதமகாராஜனிடத்தில் அவதரித்தான். [இவர்களுள் ஸ்ரீராமன் நேரான பகவானுடைய அவதாரம். லக்ஷ்மணர் சேஷாவதாரம். பரத சத்துருக்கினர்கள் சுதரிசன பாஞ்சசன்னியங்களின் அவதாரமாம். ஆனாலும் லக்ஷ்மணாதியரிடத்திலும் பகவானுடைய அமிசமிருந்ததனல் நான்கு ரூபமாக அவதரித்தானென்று

[சொல்லுகிறது] அந்தச் சக்கரவர்த்தித் திருமகனார் இளமையிலேயே விசுவாமித்திர மகாமுனிவருடைய யாகசம்ரக்ஷணத்திற்காக எழுந்தருளுமளவில், வழியில் தாடகையென்கிற கொடிய அரக்கியையும், அவ்யாகத்தில் கொடுமை செய்யவந்த தாடகையின் குமாரனை சுவாகு முதலான அநேக அரக்கரையுஞ் சங்கரித்து, தாடகையின் மற்றொரு குமாரனை மாரீசனை வாயவ்ய அஸ்திரத்தினாலே சமுத்திரத்திலே தள்ளிவிட்டார். தமது திருவடிப் பெருமையினாலே அகலிகையின் சாபத்தைப் போக்கிப் பரிசுத்தையாக்கி யருளினார். பின்பு ஜனக மகாராஜனுடைய நகரத்திற்கு எழுந்தருளி, அங்கே பூசித்து வைக்கப்பட்டிருந்த சிவதனுசை முறித்து, அந்த ஜனகமகாராஜாவின் திருமாளிகையில் அயோநிஜையாய் அவதரித்து அவ்வரசனுக்கு மகளாய் வீரிய சுல்கையாய் விளங்கிக்கொண்டிருந்த சீதையென்கிற ஸ்ரீமகாலக்ஷ்மியின் அம்சமான பெண்மணியைத் திருக்கலியாணஞ் செய்தருளினார். பிறகு அயோத்தியா நகரத்திற்குவருகையில் பொருமையா லெதிர்த்துவந்தவராய்ச் சகல க்ஷத்திரிய குலங்களையும் நாசஞ்செய்தவராய் ஹேஹயகுலத்தை வேரோடழித்தவராயுமுள்ள பரசுராமரைப் பலபராக்கிரமங்களாலுண்டான செருக்கிழக்கும்படிச் செய்தார். யுவராச்சிய பட்டாபிஷேகத்தையும் விரும்பாமல் மாற்றாந்தாயின் பேச்சுக்கிணங்கின பிதாவின் வாக்கியத்தையே சிரமேற்கொண்டு பிராட்டியோடும் இளையபெருமாளோடுங் கூடத் தண்டகாரணியத்திற் பிரவேசித்து விராதனைக் கொன்று காமாதுரையாய்த் தீங்கு செய்யத்துணிந்த சூர்ப்பணகையை இலக்குமணர் விரூபப்படுத்தியதனால் மிகக் கோபங்கொண்டு பதினாலாயிரஞ் சேனையோடு யுத்தத்திற்கு வந்த கரதூஷணர்களையும் கபந்தனையும் சங்கரித்தருளினார். அதன்பின் சுக்கிரீவனைத் தோழனாகக் கொண்டு. அவனுக்குப்பகைவனான வாலியைக்கொன்று சுக்கிரீவனால் அனுப்பப்பட்ட வானரவீரருக்குள்ளே அனுமானாலே இலங்கையில் இராவண னபகரித்துக் கொண்டுபோன சீதாப்பிராட்டி காவல் செய்யப்பட்டிருப்பதை யறிந்து, வானர சேனைகளோடு புறப்

பட்டுச் சமுத்திரத்தை அணையாற்கட்டி, இராவண கும்ப கர்ணுதிகளை மூலநாசமா யழித்து, உலகத்தாருடைய ஒப்புரவுக்காக அக்கினிப்பிரவேசஞ்செய்து, அக்கினியினுல் துதிக்கப்பட்டு விளங்கின சீதாதேவியைத் திருவுள்ளம் பற்றி, மறுபடி திருவயோத்திக்கு எழுந்தருளிப் பட்டாபிஷேகங் கண்டருளினுர்.

அந்தப் பெருமாள் பிராட்டியார்களுக்கு நடந்த பட்டாபிஷேக மகோச்சவத்தை நூறுவருஷ காலஞ் சொன்னுலும் முடியாது. ஆகிலும் மயித்திரேயரே! சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேளும். திவ்வியாலங்கார சோபிதமான மகாமண்டபத்திலே நவரத்தின சிங்காதனத்தின்மேல் சக்கரவர்த்தித் திருமகனுர் சீதா பிராட்டியோடே வீற்றிருக்க, இளையபெருமாளும் ஸ்ரீபரதாழ்வானும் சத்துருக்கினுழ்வானும் சத்திரசாமரங்களை யேந்திப் பக்கங்களில் முகமலர்ந்து நிற்க, விபீஷணுழ்வானும் சுக்கிரீவமகாராஜனும் அங்கதன் ஜாம்பவான் முதலானோர்களும் ஆலவட்ட முதலானவைகளை யேந்தி மிகுந்த மகிழ்ச்சியோடு படைசூழ்ந்து நிற்க, சிறிய திருவடியென்கிற அனுமான் திருவடிவாரத்து இரத்தினபீடத்திலிருந்து ஆனந்தபரவசராய்ச் சேவித்துக்கொண்டிருக்க, பிரமாவும், இந்திர னக்கினி யம நிருதி வருண வாயு குபேர ஈசானர் என்கிற அஷ்டதிக்குப்பாலகரும், மற்றுமுள்ள சகல தேவதைகளும், வசிஷ்ட வாமதேவ வால்மீகி மார்க்கண்டேய விசுவாமித்திர பரத்துவாஜ அகஸ்தியாதிகளான முனிவரும், இருக்கு யசுர் சாமம் என்கிற வேதவாக்கியங்களைக்கொண்டு ஸ்தோத்திரஞ் செய்துகொண்டிருக்க, வீணை வேணு மிருதங்கம் பேரி படஹ சங்க காஹளகோமுக முதலான சகல திவ்விய வாத்தியங்களுமுழங்க, நிருத்த கீத முதலான மங்களச் செய்கைகளெல்லாம் நிகழ, கப்பமேந்திக் காத்திருக்குஞ் சகல தேசத்து இராஜாக்களின் நடுவில் ஆசாரியர் மந்திரிமார் முதலானவர்கள் முறையே விதிப்படி திவ்விய தீர்த்தங்களினுலே சகல லோகரக்ஷணஞ் செய்தருளவேண்டும் ஸ்வாமீ என்று பிரார்த்தித்துப் பட்டாபிஷேக மகோச்சவத்தை நடத்தினுர்கள். இவ்வாறு தசரதகுமாரராய்க் கோச

லாதிபதியாய் இரகுகுலதிலகராயிருக்கிற ஸ்ரீராமபத்திர பகவான் ஸ்ரீ ஜானகிதேவியோடுகூடப் பட்டாபிஷேக மகோச்சவங் கண்டருளித் திருத்தம்பிமார்கள் அதிகப் பிரீதியோடே ஏவல் செய்யப்பெற்றுப் பதினோராயிரம் வருஷகாலம் யாவரும் குறைவற்றுக் களித்துப் பெருகும்படி சகல பூமண்டலத்தையும் ஆண்டருளினார்.

இளவரசாய் நின்ற ஸ்ரீ பரதாழ்வான் மிகக் கொடியவர்களாயிருந்த மூன்றுகோடி கந்தருவர்களைச் சங்கரித்து, அவர்கள் வசமாயிருந்த இராச்சியங்களைக் கைவசஞ் செய்தருளினார். சத்துருக்கினாழ்வானும் யமுனையாற்றங்கரையில் ஒரு பெரிய வனத்தி லிருந்துகொண்டு மிகக் கொடுமை செய்துவந்த மதுபுத்திரனை இலவணாசுரனைச் சங்கரித்து அக்காட்டை அழித்து மதுரையென்ற ஓர் திவ்விய நகரஞ் செய்தருளினார். இளையபெருமாளோ ஸ்வாமியைவிட்டுப் பிரியாமல் கைங்கரிய நிரதராய் எழுந்தருளியிருந்தார். இப்படி ஸ்ரீராம லட்சுமண பரத சத்துருக்கினர் என்கிற இந் நால்வரும் அதிபல பராக்கிரமாதிகளைக் கொண்டும் காருணிய வாச்சலிய சௌலப்பிய சௌசீலியாதிகளைக் கொண்டும் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்களைச் செய்தருளி லோகத்திற்கு இதத்தையும் தருமத்தையும் நிலைநாட்டித் தம்மூலகத்திற் கெழுந்தருளினார்கள். அந் நால்வரிடத்தில் மிகுந்த பத்தியுள்ளவராயிருந்த அக் கோசல நாட்டாரும் அவர்களுடைய சாலோக்கியம் பெற்றார்கள்.

மகானுபாவனான அந்த ஸ்ரீராமச் சந்திரனுக்கு குசன், லவன் என்றிரண்டு குமாரரும், லட்சுமணப்பெருமானுக்கு அங்கதன், சந்திரகேது என்றிரண்டு புத்திரரும், பரதருக்கு தக்ஷகன், புஷ்கலன் என்றிரு தனயரும், சத்துருக்கினருக்கு சுபாகு, சூரசேனன் என்றிருமக்களுமுண்டானார்கள். அவர்களுக்குள்ளே ஸ்ரீ ராமகுமாரனான குசனுக்கு அதிதியென்கிற குமாரன் பிறந்தான். அதிதிக்கு நிஷதன், நிஷதனுக்கு அனலன், அவனுக்கு நபசு, நபசுக்குப் புண்டரீகன், புண்டரீகனுக்கு க்ஷேமதனுவா, அவனுக்குத் தேவானீகன், அவனுக்கு

அகீனகு, அகீனகுவுக்குக் குரு என்பவன் பிறந்தான். அவன்மகன் பாரியாத்திரன். அவன்மகன் பலன், அவன் புத்திரன் சலன், அவனுக்குப் புத்திரன் உற்கன், அவனுக்குக் குமாரன் வச்சிரநாபன், வச்சிரநாபனுக்குப் புதல்வன் சங்கணன், அவனுக்குமகன் வியுஷிதாசுவன், அவனுக்கு விசுவயஹன் பிறந்தான். அவன் புத்திரனாகிய இரணியநாபன் மகா யோகிகளுக்குச் சிரேஷ்டராய் ஜைமுனியின் சிஷ்யராயுள்ள யாக்கியவல்கிய மகா முனிவரிடத்தினின்றும் யோகவித்தையைப் பெற்றான். அவனுக்குத் தனயன் புஷ்யன், அவனுக்குத் துருவசந்தி, அவனுக்குச் சுதரிசனன், அவனுக்கு அக்கினிவர்ணன், அவனுக்குச் சீக்கிரகன், சீக்கிரகனுடைய குமாரன் மருவென்பவன், அவன் யோகபலத்தைப் பற்றிக் கொண்டு இமயமலையின் பக்கத்திலுள்ள கலாபக்கிராமத்திலே இப்போதும் யார்க்குந் தெரியாமல் வாசஞ் செய்துகொண்டிருக்கிறான். அவன்றான் இனிவருங் கிருதயுகத்திலே சூரியவமிச க்ஷத்திரியருக்கு முதல்வனாவான். அவனுக்குப் பிரசுசுருகன் என்னு மகனொருவனிருந்தான். அவனுக்குச் சுசந்தியென்பவன் மகன் அவனுக்கு அமர்ஷன், அவனுக்கு ஸஹஸ்வானென்பவன், அவனுக்கு விசுவபவன், அவனுக்கு பிரகத்பலன், அவன் பாரத யுத்தத்திலே அர்ச்சுனன் குமாரனை அபிமன்யுவினாலே கொல்லப்பட்டான். இப்படியாக இட்சுவாகு குலத்திற்பிறந்த இராஜாக்களில் முக்கியமான சிலரைச் சொன்னேன். இவர்கள் சரிதங்களைக் கேட்பதனாலே பாவங்கள் தீரும். எவன் இவர்களுடைய சரித்திரங்களைச் சிரத்தையோடு படிக்கிறானோ அவன் இம்மையில் வேண்டியவைகளைப் பெற்று வாழ்ந்து கடைசியில் சுவர்க்கமுஞ் சேர்வான்.

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

## ஐந்தாம் அத்தியாயம்

# நிமி வமிசகதை

இக்ஷ்வாகுவின் குமாரனுன நிமியென்பவன் ஆயிரம் வருஷகாலஞ் செல்லத்தக்க ஒரு யாகத்தை யாரம்பித்து, அதற்கு வசிஷ்டரை ஹோதாவா யிருக்கும்படி வரித்தான். அப்போது வசிஷ்டர் அரசனை நோக்கி, "அரசனே! என்னைத் தேவேந்திரன் ஐந்நூறு வருஷஞ் செய்யும்படியான யாகத்திற்காக முந்தி வரித்திருக்கின்றான். ஆதலால் அதுவரையில் நீ பொறுத்திருக்க வேண்டும். உடனே வந்து உன் யாகத்தையும் நிறைவேற்றுவேன்" என்று சொல்லக்கேட்டு அவ்வரசன் ஒன்றும் பேசாமற் சும்மா இருந்துவிட்டான். வசிஷ்டரோ தமது இஷ்டப்படி அரசன் ஒத்துக்கொண்டானென்று நினைத்துக்கொண்டு இந்திரனுடைய யாகத்தைச் செய்விக்கப்போனர். அவ்வரசனும் அக்காலத்திலேயே கௌதமர் முதலானவர்களைக்கொண்டு யாகத்தை நடத்தினன். வசிஷ்டமுனிவர் தேவேந்திரனுடைய யாகமுடிந்தவுடனே நிமி மகாராஜனுடைய யாகத்தைச் செய்விக்க வேண்டுமென்று வெகு துரிதமாய் ஓடிவந்து, அக்காரியத்தைக் கௌதமர்க்கு அரசன் கொடுத்ததாகத் தெரிந்துகொண்டு, கோபமுண்டவராய் அவ்வரசன் தூங்கிக்கொண்டிருக்கையில் அவனுக்கு ஒரு சாபமிட்டார். அஃதாவது, "என்னைத் திரஸ்காரஞ்செய்து இவ்வியாக காரியத்தைக் கௌதமருக்குக் கொடுத்தானகையாலே இவ்வரசன் உடம்பில்லாமற் போவான்" என்பதுதான். விழித்துக்கொண்டபின்பு அரசன் சாபம் நேர்ந்ததை யறிந்து தானும் குருவுக்கு ஒரு சாபமிட்டான். அஃதாவது, "இந்தத் துஷ்ட குருவானவர் என்னேடு பேசிக் காரியமறிந்துகொள்ளாமல் தூங்கிக்கொண்டிருந்த என்னைச் சபித்ததனுல் அவருக்கும் உடம்பு போகக்கடவது" என்பதாம். இப்படி குருவுக்குச் சாபங்கொடுத்து அவ்வரசன் தன்தேகத்தை விட்டுவிட்டான். அம்முனிவரும் இவ்வுடம்பைவிட்டு, ஊர்வசியைக் கண்டதனுற் சிதறி வீழ்ந்திருந்த மித்திரா

வருணருடைய வீரியத்திற் பிரவேசித்து வேறு தேகங் கைக்கொண்டார். நிமியென்னு மரசனுடைய தேகமோ திவ்விய கந்த தைலத்தினுற் சீர்படுத்தப்பட்டதாகிச் சுருங்குதன் முதலான குற்றங்களில்லாமல் அப்போ திறந்தவனுடைய தேகம்போ லிருந்தது. இப்படியிருக்க அவ்வியாகமுடிவில் பாகம் பெறும்பொருட்டு வந்த தேவர்களை நோக்கி இருத்துவிக்குகள்,* "நீங்கள் எசமானனுக்கு வரங்கொடுக்கவேண்டும்" என்று சொன்னார்கள். பின்பு தேவதைகள் என்ன வரம்வேண்டும் என்று கேட்க, நிமி சொல்லுகிறான்: "ஓ தேவர்களே! நீங்கள் சகல சமுசார துக்கத்தைப் போக்குகிறவர்கள். சரீரமும் ஆத்துமாவும் பிரிந்திருப்பதைக் காட்டிலும் மனிதருக்கு வேறு துக்கமுண்டோ? ஆகையால் எனக்குத் தேகம் வேண்டுவதானாலும் மறுபடி இந்தச் சரீரத்தில் வசிப்பதற்கு விருப்பமில்லை. யாவருடைய கண்களிலுமே வசிக்க விரும்புகிறேன். அப்படியாக வரமளிக்கவேண்டும்" என்று சொன்னதைக் கேட்டு, அத்தேவரெல்லாம் அவனிஷ்டப்படி அவனைச் சகல ஜனங்களுடைய நேத்திரங்களிலு மிருக்கச் செய்தார்கள். அதனாலேதான் சகல பூதங்களும் கண்களை இமைக்கின்றனர்.

அவனுக்குப் புத்திரனில்லாமற் போனபடியினாலே இருடிகளெல்லாம் இராச்சியத்திற்கு அரசனில்லாமற் போவதனால் நேரிடுந் துன்பத்திற்குப் பயந்து அவனுடைய உடலை அரணியிலிட்டுக் கடைய, அதினின்று மொரு குமாரன் பிறந்தான். அப்படிப் பிறந்ததனாலே அவனுக்கு ஜனகன் என்கிற பெயர் உண்டாயிற்று. மேலும் இவன் பிதா விதேகனாகையால் வைதேகன் என்றும், கடையப்பட்டதனாலே மிதி என்றும் நாமதேயங்களுண்டாயின. இவன் பெயராலே இவனுடைய பட்டணத்திற்கு மிதிலை என்றும், இவன் பிதாவின் பெயராலே அவ்விராச்சியத்திற்கு விதேகதேசமென்றும் பெயர் வழங்கின. ஜனகனுடைய மகன் உதாவசு, அவனுடைய குமாரன் நந்திவர்த்த

* ருத்துவிக்குகள் - அத்துவர்யு, ஹோதா, உத்காதா, பிரமா முதலான வர்கள் யாகஞ் செய்விக்கிறவர்.

னன், அவன் குமாரன் கேது, அவனுக்குத் தேவ ராதன், அவனுக்குப் பிருகதுத்தன், அவனுக்கு மகா வீரியன், அவனுக்குச் சுகிருதி, அவனுக்கு திருஷ்ட கேது என்கிற மகன் பிறந்தான். திருஷ்டகேதுவுக்கு அரியசுவன், அவனுக்கு மரு, மருவுக்குப் பிரதிகன், அவனுக்குக் கிருதரன், அவனுக்குத் தேவமீடன், அவன் புதல்வன் விபுதன், விபுதனுக்கு மகாதிருதி யென்பவன் பிறந்தான். அவனுக்குக் கிருதராதன் ஜனித்தான். அவனுக்கு மகாரோமா, மகாரோமாவுக்கு சுவர்ணரோமா, அவன் புத்திரன் இருசுவரோமா. அந்த இருசுவ ரோமாவின் குமாரன்தான் சீரத்துவச னென்கிற ஜனக மகாராஜன். அவர் யாகத்திற்காகப் பூமியை உழும்போது அக்கலப்பையின் வழியிலே சீதா பிராட்டி அவதரித்தருளினாள்.

அந்தச் சீரத்துவச மகாராஜனுக்குத் தம்பி குசத் துவசனென்பவன் சாங்காசியமென்னும் பட்டணத்தை யாண்டுகொண்டிருந்தான். சீரத்துவச ஜனகருடைய குமாரன் பானுமான். பானுமானுக்குச் சுத்தியும்னன், அவனுக்குச் சுசி, அவனுக்கு ஊர்ஜனென்பவன் மகன். அவன் குமாரன் சதத்துவசன். அவனுக்குக் கிருதி, அவன் புத்திரன் இரஞ்சனன். அவன் புத்திரன் புருஜித்து. அவனுக்கு அரிஷ்டநேமி. அவனுக்குச் சுருதாயு. அவனுக்குச் சுபார்சுவன். அவனுக்குச் சிருஞ்சயனும் அவனுக்கு க்ஷேமாவியும், க்ஷேமாவிக்கு அனேனசுவும் அவனுக்குப் பௌமரதனும், பிறந்த னர். அவனுக்குச் சத்தியரதனும் அவனுக்கு உபகு வென்பவனும் உபகுவுக்கு உபகுப்த்தனும், அவனுக்கு மகன் சுவாகதனும் அவனுக்குச் சுவாங்கதனும் தோன் றினர். சுவாங்கனுக்கு சுபானனும், அவனுக்குச் சுவர்ச்சசுவும், சுவர்ச்சசுக்குச் சுபாஷனும், அவனுக் குச் சுசுருதனும், அவனுடைய மகன் ஜயனும், ஜயன் புத்திரன் விஜயனும் விஜயனது புத்திரன் இருதனும் இருதனுக்குச் சுநயனும் சுநயனுக்கு வீதஹவ்யனும், அவனுக்குத் திருதியும் திருதிக்குப் பகுளாசுவனும் அவனுக்குப் புத்திரன் கிருதியும் ஆக முறை முறையா கத் தோன்றினார்கள். இந்தக் கிருதியினிடத்திலே நிற்

கின்றது ஜனகவமிசம். இவர்கள் தாம் மிதிலாநகரத்தை யாண்ட அரசர்கள். இவர்கள் பெரும்பாலும் ஆத்தும வித்தையில் நிஷ்டை பெற்ற மகானுபாவர்களென் றறியும்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

## ஆறும் அத்தியாயம்

# புரூரவன் சரித்திரம்

மயித்திரேயர் வினவுகிறார்: "சுவாமி பராசரபகவானே! சூரியவமிசத்திற் பிறந்த மன்னர்களை அடியேனுக்கு அருளிச்செய்தீர். இனிச் சந்திர வமிசத்திற் பிறந்த இராஜாக்களையும் கேட்க விரும்புகிறேன். நிலையான கீர்த்திபெற்றவர்களாகிய சந்திரகுலத் தரசருடைய சந்ததி இக்காலத்திலும் புகழோடிருக்கின்றதன்றோ. ஆகையால் அடியேனிடத்திற் கிருபைகூர்ந்து அச் சந்ததியி லுதித்த அரசரையும் அருளிச்செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்த சிஷ்யரை நோக்கிப் பராசரர் அருளிச்செய்யலாயினர்.

கேளும் மயித்திரேயரே! இவ்வமிசமும் அதிபல பராக்கிரமங்களும் தேஜசும் நற்குண நற்செய்கைகளுமுள்ள நகுஷ, யயாதி, கார்த்தவீரியார்ச்சுனன் முதலான மகாராஜாக்களினாலே அலங்காரமுடையது. அதனை முதலிலிருந்து சொல்லுகிறேன். சகல லோக கர்த்தாவாயும் பகவானுமா யிருக்கிற ஸ்ரீமந்நாராயணனுடைய நாபிக்கமலத்தி லுதித்தவரான சதுர்முகதேவருடைய குமாரர் அத்திரி என்னு முனீந்திரர். அந்த அத்திரிமகாமுனிவருடைய மகன் சந்திரன். அவனைச் சதுர்முகபகவான் சகல ஓஷதிகளுக்கும் பிராமணர்களுக்கும் நக்ஷத்திரங்களுக்கும் அதிபதியாகப் பட்டாபிஷேகஞ் செய்தார். இப்படிப் பட்டாபிஷேகஞ் செய்யப்பட்டு அச்சந்திரன் மேன்மைக்காக ராஜசூயயாகஞ் செய்தான். பின்பு இதன் மகிமையினாலேயும் மேலான அதிகாரம் பெற்றிருப்பதனாலேயும் மதமுங் கர்வமுமுடையவனாகிச் சகல தேவர்களுக்குங் குருவாகிய பிர

கஸ்பதியின் மனைவியான தாரையென்பவளை அபகரித்துக்கொண்டான். இச்செய்தியை பிரகஸ்பதி பிரமாவுக்கு அறிவிக்க, அவர்வந்து வெகுவாய்ப் புத்திசொல்லியதையும் தேவரிஷிகளெல்லாரும் வேண்டிக்கொண்டதையுங் கேளாதவனாய் அச்சந்திரன் அவளை விடாமலே இருந்தான்.

அதனாலே யுத்தத்திற்கு இடமுண்டாயிற்று. அப்போது பிரகஸ்பதியினிடத்துப் பகைகொண்ட சுக்கிரன் சந்திரனுக்குப் பக்கபலமானன். குருவான சுக்கிரன் சேர்ந்ததனாலே சிஷரான ஜம்பன், கும்பன் முதலிய சகல தைத்திய தானவர்கள் சந்திரன் பக்ஷத்திற்சேர்ந்து யுத்தசன்னகஞ் செய்தார்கள். ஸ்ரீருத்திரபகவான் அங்கிரசினிடத்தில வித்தியாத்தியயனஞ் செய்தவராகையால் குருபுத்திரராகிய பிரகஸ்பதிக்குத் துணைசெய்யலாயினர். அசுரரெல்லாம் சந்திரன் பக்கத்திற் சேர்ந்ததனால் தேவேந்திரன் சகல தேவ சைனியங்களோடுகூடப் பிரகஸ்பதி பக்கத்திற் சேர்ந்து யுத்தசன்னகஞ் செய்தான். இவ்வாறு தேவதைகளுக்கும் அசுரருக்கும் தாரையின் நிமித்தம் உண்டானதால் தாரகாமயம் என்று பெயர் பெற்ற மகாயுத்த மொன்றுண்டாக, அதில் தேவதைகள் மேல் அசுரரும் அசுரர்மேல் தேவர்களும் அநேக அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகித்து மும்முரமாயிருக்க, உலகமெல்லா மனக்கலக்கமுற்றுப் பிரமதேவனைச் சரண புகுந்தனர். அப்போது கமலாசனர் வந்து சுக்கிரனையும் சிவனையும் அசுரரையும் தேவர்களையுந் தடுத்துச் சந்திரனுக்குப் புத்திசொல்லி தாரையைப் பிரகஸ்பதிக்குக் கொடுப்பித்தார். சண்டையும் ஒழிந்தது.

பின்பு அத்தாரை கருவுற்றிருந்ததைக் கண்டு குருவானவர் அவளை நோக்கி "அடி பெண்ணே! என் க்ஷேத்திரத்தில் நீ மற்றவனுடைய மகனை வைத்திருக்கக்கூடாது, இதுவரையில் நீ செய்த சாகசம் போதும், இனி யக்கருவை விட்டுவிடு" என்று சொன்னர். அது கேட்டு தாரை மிகவும் பதிவிரதை யாகையாலே பர்த்தாவின் வாக்கியத்தின்படி அக்கருவை ஒருநாணற்

செத்தையின்மேல் எறிந்துவிட்டாள். அக்குழந்தை பிறந்த மாத்திரத்திலேயே சமஸ்த தேவர்களையுந் தோற்கடிக்கும்படியான தேஜசோடு விளங்கக் கண்டு பிரகஸ்பதி, தன் பிந்துவுக்குப் பிறந்திருக்கலாமென்று நினைத்து அக்குழந்தையின்மேல் விருப்பமுற்றிருந் தார். சந்திரனு மப்படியே யிருந்தான். இவ்வாறு இருவரும் அப்பாலகன்மேல் விருப்பமுற்றிருக்கை யாலே தேவதைக ளெல்லாரும் சந்தேகப்பட்டுத் தாரையை, "பெண்ணரசே இவன் சந்திரனுக்குப் பிறந்தவனோ? குருவுக்குப் பிறந்தவனோ? எங்களுக்குச் சொல்" என்று வெகுவாய்க் கேட்டார்கள். எவ்வளவு கேட்டும் அவள் வெட்கத்தினால் ஒன்றுஞ் சொல்லாம லிருக்க, அக்குமாரன் கோபமூண்டு அவளைச் சபிக்கும் படியாக எத்தனித்து அவளைப்பார்த்து "ஓ துஷ்டை யான என்தாயே! நீ யேன் என் தந்தையைத்தெரிவியாம லிருக்கிறாய்? இன்னமும் நீ சொல்லத் தழதழத்திருப் பையானால் பொய்யான வெட்கமுள்ள உனக்குத் தகுந்த சிக்ஷைசெய்வேன்" என்று உருத்துச்சொன்னான். அப் போது பிரமதேவர் அக்குமாரனைத் தடுத்துத் தாம் அவளைக்கேட்டார். அதற்கு அவள் மிகவும் வெட்கத் தினால் தலையை வணங்கிக்கொண்டு "சந்திரனுடைய மகன்தான்" என்று சொல்லிவிட்டாள். பின்பு சந்திரன் மலர்ந்து விளங்காநின்ற கபோல காந்தியுடையவ னைப் புத்திரனைக் கட்டியணைத்து முத்தமிட்டு, "குழந் தாய்! நீ மிகுந்த புத்தியுள்ளவனாகையால், புதன் என்று உனக்குப் பெயர் தந்தேன்" என்றான்.

அந்தப் புதன் இளை யென்பவளிடத்திலே காமுற் றுப் புரூரவனைப் பெற்றானென்று முன்னமே உனக்குச் சொல்லியிருக்கிறேன். புரூரவமகாராஜன் மகா தாதா; வெகு யாகங்கள் செய்தவன்; மிகுந்த காந்தியுள்ள வன். ஒரு காலத்தில் மித்திராவருணர் ஊர்வசி யின்மேற் காதலுற, அதற்கவ ளிணங்காமையினாலே அவர்கள் "நீ மனுஷியனுக்கு மனைவியாகக் கடவை" என்று சபித்தார்கள். அதனாலே அவள் சிலகாலம் பூலோகத்தி லிருக்கும்படி வந்தாள். வந்தவிடத்தில் மகாரூபவானாயும் மிகுந்த நன்மனதுள்ளவனாயும் சத்

தியவாதியாயு மிருந்த புரூரவச்சக்கிரவர்த்தியைக் கண்ட மாத்திரத்திலே மனமுருகினவளாய், பெண்மைக்குண்டாகிய பெருமையையும் சுவர்க்க சௌக்கியத்தி லுண்டாயிருந்த விருப்பத்தையும் விட்டு, அவனை யனுசரிக்கும்படி அருகில் வந்தாள். அவ்வரசனும் உலகத்திலுள்ள எல்லாப் பெண்களுக்கு மேலான * காந்தி, சுகுமாரத்துவம், இலாவண்யம், விலாசம் முதலான குணங்களினாலே விளங்கிக் கொண்டிருந்த அவ் வப்சரசைப் பார்த்து மனம் அவளிடத்திலேயே பற்றி நின்றான். இவ்வா றவ்விருவரும் ஒரேமனதாய் வேற்று நோக்கமில்லாதவராய் மற்றெல்லாப் பிரயோஜனங்களையும் விட்டிருந்தார்கள். அரசன் அவளை நோக்கித் தைரியமாய், "ஓ பெண்ணரசே! உன்னை நான் காதலிக்கின்றேன். நீ அனுக்கிரகத்தோடு என்னிடத்தில் மனம் வைக்கவேண்டும்" என்று சொல்ல, அவ்வப்சரசு "ஓ மகாராஜனே! நான் கேட்டுக்கொள்ளுகிற சங்கேதப்படி நீர் நடப்பீராயின் உமது இஷ்டப்படியே யாகட்டும்" என்று நாணத்தினால் தழதழக்கச் சொன்னாள். அதுகேட் டரசன் "உன் சங்கேதத்தைச் சொல்லடி கண்ணே" என்று சொல்ல, அத் தெய்வப்பெண் சொல்லுகிறாள். "ஓ மகாராஜனே! இரண்டு ஆடுகள் என்னால் குழந்தைகள் போல் வளர்க்கப்படுகின்றன. அவை எப்போதும் என் படுக்கையின் சமீபத்திலே யிருக்கவேண்டும். அங்கிருந்து அதனை யாரும் அபகரிக்கக்கூடாது; இஃது ஒரு நிபந்தனை. நீர் திகம்பரராயிருக்க நான் உம்மைப் பார்க்கக்கூடாது; இஃது இரண்டாவது நிபந்தனை. எனக்கு நெய்தவிர வேறு ஆகாரம் ஒன்றுங்கூடாது; இது மூன்றாவது நிபந்தனை. இம்மூன்றில் எது தவறினாலும் உம்மிடத்தி லிருக்கமாட்டேன்" என்று சொல்ல, அதற்கு "அப்படியே யாகட்டுமென் கண்மணியே" என்று அரசன் ஒத்துக்கொள்ள, அவ்வப்சரசும் அவனிஷ்டத்திற்கு இணங்கினாள்.

* காந்தி - யவ்வனத்தினால் உள்ள ஒருவகைத்தோற்றம். சுகுமாரத்துவம்- தொட்டால் கைசுறுக்கும்படியான மென்மை. லாவண்யம்-முத்தினுள்ளே நீரினாலே தோன்றும் பளபளப்புப்போன்ற தோற்றம். விலாசம் - சிரிப்பு, நடை, பேசுதல், கைவீசல் முதலானவற்றா லுண்டாகு மழகு.

பின்பு அந்தச் சக்கரவர்த்தி அவளோடுசேர்ந்து அளகாபுரியிலும் சைத்திரரதமுதலான திவ்வியோத்தியானங்களிலும் திவ்விய தாமரை முதலானவைகளோடு கூடி விளங்காநின்ற மானசமுதலான தடாகங்களிலும் வேடிக்கையாய் விளையாடிக்கொண்டு, நாளுக்குநாள் களிப்பு வளர்ந்து வரும்படி அறுபத்தொரு வருஷ காலம் வாழ்ந்துகொண்டிருந்தான். அப்படியே ஊர்வசியும் அவனோடுகூட அனுபவித்துவரும் போகாநந்தத்தினால் சுவர்க்கலோக வாசத்தையுஞ் சிறப்பாயெண்ணாமலிருந்தாள். இவளில்லாமையினாலே மற்ற அப்சரசுகளுக்கும் சித்தர் கந்தருவர் முதலானவர்களுக்கும் தேவலோகமானது இரமணீயமாக விளங்கவில்லை. ஆனதனால் கந்தருவராஜனாகிய விசுவாவசுவானவன், அவளை மறுபடியும் சுவர்க்கத்திற்குக் கொண்டுபோக உபாயமென்னென்று யோசித்து, அவள் புரூரவனோடு செய்திருக்கும் நிபந்தனைகளை யறிந்து, ஓரிரவில் கந்தருவர்களோடு சேர்ந்து வந்து, படுக்கையின் அருகில் இருந்த ஆடுகளிலொன்றை அபகரித்துக்கொண்டுபோனான். ஆகாசத்திற் கொண்டுபோகும்போது அவ்வாடு அபயக்குரலாய்க் கத்த; அதை ஊர்வசிகேட்டு ஐயோ! என் குழந்தையை யாரோ கொண்டுபோகிறானே, அநாதையான நான் இத்தருணத்தில் யாரைச் சரணமடைவேன்" என்று கூவினாள். அதனைக் கேட்டும் அவ்வரசன், அம்மணமாயிருக்கிறதினால் தன்னை யவள் பாராமலிருக்கவேண்டுமென்று அதைக் குறித்துப் போகாமற் சும்மா விருந்தான். பின்பு கந்தருவர் மற்றைய ஆட்டையுங் கொண்டுபோனார்கள். அதுவும் ஆகாசத்திற் கத்தினதை அவள் கேட்டு "ஐயையோ! என் மற்றொரு குழந்தையையுங் கொண்டு போகிறார்களே, என்ன செய்வேன்? நான் திக்கில்லாதவள், எனக்குப்புருஷனுமில்லை, அற்பமான ஒருவனைச் சேர்ந்து நான் இப்படியானேன்" என்று கதறியழுதாள். அவ்வரசன் அதைக் கேட்டுச் சகிக்கமாட்டாமல் சத்துருவின்மேற் கோபமூண்டவனாகி, இருட்டுள்ள இரவாகையால் தன்னையவள் பார்க்கமாட்டாளென்று அப்படியே எழுந்து கையிற் கத்தியெடுத்துக்கொண்டு "அடாயாரடா திருடுகிறவன்? கொன்றேனுன்னை" என்

ரூரவாரத்தோடுசென்ருன். அத்தருணத்தில் கந்தருவர் மிகப் பிரகாசமான ஒரு மின்னலை யுண்டாக்கிஞர்கள். அதன் வெளிச்சத்தால் வஸ்திரமில்லாதிருந்த சக்கர வர்த்தியை ஊர்வசி கண்டதனல் "தன்சங்கேதத்திற்குப் பங்கம் வந்தது,' என்பதுகொண்டு உடனே அவனை விட்டுச் சொர்க்கலோகம் போய்ச் சேர்ந்தாள். அக் கந் தருவரும் அவ்வாடுகளை அங்கேதானே விட்டுத் தாங்க ளும் தேவலோகத்துக்குப் போஞர்கள்.

அரசனே அந்த ஆடுகளைக் கைக்கொண்டு சந் தோஷத்தோடு வந்து பார்த்துப் படுக்கையில் அப்சர சைக் காணமல் விசனமுற்றுத் திகம்பரனுகவே அங் கங்கே தேடிப்பார்த்தும் அவள் அகப்படாமையால் பைத்தியம் பிடித்தவனைப்போலே அக்கோலத்தோ டேயே கண்டவிடமுந் திரிந்துகொண்டிருந்தான். இப்படியிருக்க ஒருநாள் குருக்ஷேத்திரத்திலே தாமரைத் தடாகத்திலே வேறு நான்கு அப்சரசுகளோடுகூட ஊர் வசியு மிருக்கக்கண்டு அருகிற் பயித்தியமுள்ளவன்போ லவே அவள் கிட்டச்சென்று "அடியென்காதலி!பிராண நாயகி! சற்றுநேரம் நில். சற்று என்னேடு பேசு. சற்று நேரமாகிலும் கூடியிருப்போம்" என்று பலபல நல் வார்த்தைகளைச் சொல்லித் துதித்து வேண்டிக்கொண் டான். அதற்கு ஊர்வசி சொன்னதாவது, "ஓ மகா ராஜனே! உமது விவேகமில்லாத செய்கைபோலும், நான் கர்ப்பிணியா யிருக்கிறேன், இவ்வருடத்தின் முடி வில் இங்கே வாரும், உமக்கு நல்லபுத்திரன் பிறப் பான், பின்பு உம்மோடு ஒருநாளிருப்பேன் போம்" என்றுசொல்லக்கேட்டு வெகு சந்தோஷமுடையவனுகித் தன் பட்டணம் போய்ச் சேர்ந்தான்.

அப்போது அந்த ஊர்வசி தன் தோழிமாரை நோக்கி "தோழிமார்களே! இவர்தாம் சகல சுகுணங்க ளோடுகூடின புரூரவச்சக்கரவர்த்தி. இவரோடு கூடத் தான் இத்தனைநாளும் விருப்பமுங் களிப்புமாயிருந் தேன்" என்று சொல்லக்கேட்டு, அத்தெய்வப்பெண் களும், "இவனுடைய ரூபம் வெகு சிலாக்கியமா யிருக் றது, இதனலே இவனேடுகூட இருக்க நாங்களும்

விரும்புகிறோம்" என்று சொன்னார்கள். பின் அவ்வரசன் ஊர்வசியின் சொற்படி வருடத்தின் முடிவில் அவ்விடத்துக்குப் போனான். அவ்வப்சரசும், ஆயுசு என்கிற குமாரனைப்பெற்று அவன் கையிற் கொடுத்து, ஓரிரவு அவனோடு கூடியிருந்து * ஐந்து பிள்ளைகளைப் பெறும்படியான கர்ப்பமடைந்தாள். அன்றியும் அரசனை நோக்கி, "ஓ மகாராசனே! நம்மிடத்தில் அன்பினால் கந்தருவர் உமக்கு வரங்கொடுக்க வந்திருக்கிறார்கள். வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளும்" என்று சொன்னாள். அதுகேட்டரசன் சொன்னது, "நான் சகல சத்துருக்களையுஞ் ஜயித்து இந்திரியசக்தி தப்பாதவனாய் பந்துக்களிலும் சேனைகளிலும் பொக்கிஷத்திலும் குறைவில்லாதவனா யிருக்கிறேனாகையால் யான் வேண்டுவது யாதுமில்லை; ஆனால் எனக்குவேண்டியது ஊர்வசியின் சாலோக்கியம் ஆதலால் என்காலத்தை ஊர்வசியோடுகூடக் கழிக்க விரும்புகின்றேன்" என்று பிரார்த்திக்கக் கேட்டுக் கந்தருவர் அவ் அரசனுக்கு ஓர் அக்கினிஸ்தாலி கொடுத்து "ஓ அரசனே! நீர் வேதத்தை யனுசரித்து இவ்வக்கினியை மூன்றாக்கி ஊர்வசி சாலோக்கியமாகிற பயனைக் கருதி நன்றா யாகஞ்செய்யும், இஷ்டத்தைப் பெறுவீர்' என்று சொன்னார்கள். அதுகேட்டு அவ்வரசனும் அக்கினிஸ்தாலியைக் கைக்கொண்டு வரும்போது நடுக்காட்டில் "என்ன என் மூடத்தனம், ஊர்வசியை இங்கேயிட்டுக்கொண்டு வராமல் அக்கினிஸ்தாலியையன்றோ கொண்டுவந்தேன், என்ன பயன்" என்று நினைத்துப் பித்தன்போல் அந்த ஸ்தாலியை அங்கே வைத்துவிட்டுப் பட்டணம் போய்ச்சேர்ந்தான். அங்கே பாதிராத்திரியான பின்பு விளித்துக்கொண்டு "ஓகோ ஊர்வசிசாலோக்கியம்பெறுவதற்குக் கந்தருவர் தமக்குக்கொடுத்த அக்கினிஸ்தாலியைக் காட்டிலே போட்டுவிட்டு வந்தேனே, அதை இப்போது போய் எடுத்துக்கொண்டு வரக்கடவேன்"என்று

* ஊர்வசியின் தோழிமார் நால்வரும் விரும்பியபடி அவ்வரசனோடுபுணர்ந்து கருவுற்றனர்; ஊர்வசி தானுங் கருவுற்றதனால், ஐந்து பிள்ளைகளைப் பெறும்படியான கர்ப்பமடைந்தாளென்றது. தோழிமார் புணர்ச்சிக்கும் ஊர்வசியே காரணமானதால் அவளையே பிரதானமாகக்கொண்டு இங்குச் சொல்லியிருப்பதென அறிக.

நினைத்துக்கொண்டு ஓடிப்போய் ஸ்தாலி வைத்தவிடத்திலே பார்த்து ஸ்தாலியைக்காணுமல் அங்கே வன்னி மரத்தை நடுவிற்கொண்ட அரசமர மிருக்கக்கண்டு, "நம்முடைய அக்கினிஸ்தாலிதான் இந்த மரமாயிருக்கும், ஆதலால் நாம் அக்கினி ரூபமான இதனையே கொண்டுபோய் அரணியாக்கிக் கடைந்து அக்கினியை யெடுத்து அதனை உபாசிக்கக் கடவோம்" என்று நினைத்து, அப்படியே அதைக்கொண்டு பட்டணம்வந்து காயத்திரி மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டே அரணிகடைய, அவ்வரணியும் காயத்திரியின் எழுத்தின் கணக்குப்படி இருபத்துநான்கு அங்குல அளவுள்ளதாய் ஏற்பட்டது. பின்பு அவ்வரணியைக் கடைந்து அக்கினியை யெடுத்து மூன்ருக்கி வேதவிதிப்படி ஊர்வசி சாலோக்கியத்தைக் கருதிப் பல யாகங்கள் செய்து அப்பிரபாவத்தினுலே கந்தருவலோகஞ் சென்று ஊர்வசியோடு இணைபிரியாமற் சுகமாய் வாழ்ந்துகொண்டிருந்தான். ஆதியில் அக்கினி ஒன்றே யிருந்தது. அவ்வொன்றினுலே இந்த மனுவந்தரத்தில் மூன்றக்கினிகள் ஏற்படுத்தப்பட்டன.

ஆரும் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஏழாம் அத்தியாயம்

# கௌசிகவமிசத்தின் வரலாறு

கேளும் மயித்திரேயரே! அந்தப் புரூரவ மகாராஜனுக்கு ஆயுசு, அமாவசு, விசுவாவசு, சுருதாயு, சுதாயு, அயுதாயு, என்று அறுவர் மக்களுண்டானுர்கள். அவர்களுள் அமாவசு என்பவனுக்குப் பீமன் என்கிற புத்திரன் பிறந்தான் பீமனுக்குக் காஞ்சனன், காஞ்சனனுக்கு சுகோத்திரன். அவனுக்கு ஜன்னு பிறந்தான். அந்த ஜன்னுவென்னும் இராஜரிஷி யாகஞ்செய்துகொண்டிருக்கையில் கங்கை அவ்யாக சாலையின்மேல் வந்து எல்லாவற்றையும் முழுகடிக்கக்கண்டு, கோபத்தினுற் கண் சிவந்து பகவானுகிய ஸ்ரீயக்கிய புருஷனைத் தியான பலத்தினுலே இருதயத்தில் நிறுத்தி, அத்தேஜசினுலே சூழப்பட்டவராய் அக்கங்கையைப் பானஞ் செய்துவிட்

டார். பின்பு தேவரிஷிகள் அவரைப் பிரார்த்தித்துக் கங்கையை விடுவித்து அக்கங்கையை அவருக்கு மகளாக வைத்தார்கள் அதனாலே தான் கங்கைக்கு ஜான்னவி என்கிற நாமதேய மூண்டாயிற்று. அந்தச் ஜன்னுவுக்குச் சுமந்து என்பவன் ஜனித்தான். அவனுக்கு அசகன், அவனுக்குப் பலாகாசுவன், அவனுக்குக் குசன், அவனுக்குக் குசாம்பன், குசநாபன், அநூர்த்தரஜசு, வசு என்று நால்வர் புத்திரர் உண்டானார்கள். அவருள் குசாம்பனானவன், "எனக்கு இந்திர சமானனான புத்திரன் பிறக்கவேண்டும்" என்று தவஞ்செய்யக்கண்டு, தேவேந்திரன் "நமக்குச் சமானமாய் மற்றொருவன் உண்டாகவேண்டாம்" என்று தானே அவனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்தான். அவன் பெயர் காதி; கவுசிகன் என்றுஞ் சொல்லப்படுவான். அந்தக்காதிக்குச் சத்தியவதி யென்கிற கன்னிகை பிறந்தாள். அவளைப் பிருகுவின் குமாரராகிய இரிசீகமகாமுனிவர் தமக்குக் கொடுக்கும்படிக் கேட்டார். காதியானவன், இம்முனிவர் பிராமணராகையாலும் கிழவராகையாலும் வெகு கோபமுள்ளவராகையாலும் மகளை இவருக்குக் கொடுக்கச் சம்மதிப்படாமல் முனிவரை நோக்கி "ஒரு காதுமாத்திரங் கறுப்பாயிருக்கப்பெற்று மற்றை அவயவங்களெல்லாம் சந்திரன்போலே பிரகாசித்துக் கொண்டிருக்கிறவைகளும், காற்றையொத்த வேகமுள்ளவைகளுமான ஆயிரங் குதிரைகளைக் * கன்யாசுல்கமாகக் கொடுத்தால் இக்கன்னிகையைத் தருவேன்" என்றான். அம்முனிவரும் "அப்படியே யாகட்டும்" என்று ஒத்துக்கொண்டு வருணனிடத்திற்போய் அசுவதீர்த்தத்திற் பிறந்த அவ்வாயிரங் குதிரைகளையுங் கொண்டுவந்து கொடுத்து அக்கன்னிகையைக் கலியாணஞ் செய்துகொண்டார். பின்பு அந்த இரிசீகமுனிவர் அவளுக்குப் புத்திரோற்பத்திக்காக † சருவைச் செய்துவைத்தார். அதைக் கண்டு அவருடைய பத்தினியாகிய சத்தியவதி யென்பவள் அவரை வேண்டிக்கொண்டு தன் தாயாருக்கும் ஒரு சருவைச் செய்வித்தாள். இப்படியாக அம்முனி

* கன்னியாசுல்கம் - கன்னிகையைக் குறித்துக் கொடுக்கும்பொருள்.

† சரு - ஒருவகைச் சோறு.

வர் தன் பத்தினிக்குப் பிரமதேஜசோடுகூடின புத்திரன் உண்டாவதற்காகவும் சருக்களை யேற்படுத்தித் தன் மனைவியைநோக்கி, "நீ இந்தச் சருவையும், உன் தாய் அந்தச் சருவையும் புசிக்கக்கடவீர்கள்" என்று கட்டளையிட்டுத் தாம் வனத்திற்குச் சென்றார்.

பின்பு அவ்விருவரும் சருவைப் புசிக்கத் தொடங்குகையில் தாய் மகளை நோக்கி "அடி என்புத்திரி! உலகத்தில் எவனும் தன் புத்திரனுக்கு மேன்மையான குணமிருக்கவேண்டுமென்று விரும்புவானே யல்லாமல், தன் பத்தினியின் தம்பிக்கு அக்குண மிருக்கவேண்டுமென்று விரும்பமாட்டான். ஆதலால் உனக்கு உன் கணவன் கொடுத்த சரு விசேஷமா யிருக்கும், க்ஷத்திரிய ஜாதியான என் மகன் பூமண்டலத்தை யாளவேண்டியவனாகலால் அப்படிப்பட்டவனுக்கு மேலான குணங்க ளிருப்பதனாலே விசேஷ பிரயோஜனமுண்டு. பிராமணனுக்குப் பலபராக்கிரமாதி சம்பத்திருப்பதனால் என்ன பிரயோசனம், ஆதலால் உன்னுடைய சருவை எனக்குக்கொடுத்து என் சருவை நீ வாங்கிக் கொள்வது தகுதியா யிருக்கின்றது" என்று சொன்னாள். அதுகேட்டு மகளான சத்தியவதியும் "சரிதான்" என்று ஒப்புக்கொண்டு, தன் சருவைத் தன் தாய்க்குக் கொடுத்து அவள் சருவைத் தான் வாங்கிப் புசித்தாள். பின்பு அம்முனிவர் காட்டினின்றுந் திரும்பிவந்து, கருவுற்றிருக்குந் தமது பத்தினியின் தேகத்தைக்கண்டு, அவளைக் குறித்துச் சொல்லுகிறார். "அடி பாதகி! நீ செய்யக்கூடாத காரியத்தை யேன் செய்தாய்? ஏனென்றால் உன் தேகமானது மிகவும் இரௌத்திர ரூபமாய்க் காணப்படுகிறது. அதன் காரணம், உன் தாயின் சருவை நீ புசித்திருக்கிறதாய்த் தோன்றுகிறது. இது தகுதியன்று. ஏதனாலென்றால் நான் அந்தச்சருவில் சகல ஐசுவரிய வீரிய பலங்களை யேற்றி யிருக்கின்றேன். உன் சருவிலேயோ ஞானம் சாந்தி பொறுமை முதலான பிராமணகுணங்களை யேற்றியிருக்கின்றேன். இதை நீ மாற்றினா யாகையால் உனக்கு உக்கிரமான அஸ்திரதாரணஞ்செய்து க்ஷத்திரியாசாரமாய் நடக்கத்தக்க புத்திரன் பிறப்பான். உன் தாயாருக்கோ பொறுமை முத

லான குணங்களுடையவனும்ப் பிராமணுசாரமுள்ள குமாரன் உண்டாவான்" என்று தன் பர்த்தா சொன்னதைக்கேட்டு, அப்பெண் அவருடைய திருவடிகளிலே வீழ்ந்து பிடித்துக்கொண்டு, "சுவாமி! அடியேன் தெரியாமையால் அப்படிச் செய்துவிட்டேன். அடியேன் மேல் அனுக்கிரகம் வைக்கவேண்டும். அப்படிப்பட்ட புத்திரன் பிறக்கவேண்டாம். சருவின் பலம் நம்பாதாகையால் என் பேரன் அப்படியாகட்டும்" என்று பிரார்த்தித்தாள். அம்முனிவரும் அவள்மேல் கிருபை கூர்ந்து "நல்லது அப்படியே யாகட்டும்" என்றனுக்கிரகஞ்செய்தார். பிறகு அந்தச் சத்தியவதி ஜமதக்கினி என்கிற குமாரனைப் பெற்றுள். அவளுடைய தாய் விசுவாமித்திரரைப் பெற்றுள்.

சத்தியவதி சிலகாலத்துக்குப் பின்பு கௌசிகி யென்கிற நதியாய் விட்டாள். அவள் புதல்வன் ஜமதக்கினி முனிவர் இக்ஷவாகு வமிசத்தனுன இரேணுவென்னும் அரசனுடைய மகளாகிய இரேணுகையை விவாகஞ் செய்துகொண்டார். அவள் வயிற்றில் சகலலோக குருவான ஸ்ரீமந் நாராயணனுடைய அமிசத்தினுலே சகல க்ஷத்திரியவமிச நாசகாரணரான ஸ்ரீபரசுராமர் அவதரித்தார். அந்த விசுவாமித்திரருக்குப் பிருகு வமிசஸ்தனுன சுனச்சேபனே தேவதைகளினுலே மகனுகக் கொடுக்கப்பட்டான். அவன் தேவரால் கொடுக்கப்பட்டதனுல் தேவராதன் என்னும் பெயரை யடைந்தான். பின்பு விசுவாமித்திரருக்கு மதுச்சந்தன், தனஞ்சயன், கிருததேவன், அஷ்டகன், கச்சபன், ஹரிரன் என்கிற வேறு புத்திரரும் உண்டானுர்கள். அவர்கள் சம்பந்தமாய் அநேக கௌசிககோத்திரங்கள் உண்டாயின. அக்கோத்திரத்தார்களெல்லாம் வெவ்வேறு * பிரவரமுள்ள குலங்களில் விவாகஞ் செய்துகொள்ள வேண்டியவர்களா யிருக்கிறுர்கள்.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

* பிரவரம் - கோத்திரத் தலைவர்முறை. இஃது ஒவ்வொரு கோத்திரத்திற்கே யன்று. சகல கோத்திரங்களுக்கும் பொதுவானவிதி என்றறிக.

## எட்டாம் அத்தியாயம்

# காசிராஜாக்களின் வமிசம்

கேளும் மயித்திரேயரே! புரூரவசினுடைய மூத்த குமாரன் ஆயுவென்பவ னொருவனுண்டன்றோ? அவன் இராகுவின் மகளைக் கலியாணஞ்செய்து நகுஷன், க்ஷத்திரவிருத்தன், இரம்பன், இராஜி, அனேனசு, என்ற குமாரரைவரைப் பெற்றான். அவருள் க்ஷத்திர விருத்தனுக்குச் சுஹோத்திரன் பிறந்தான். சுஹோத்திரனுக்கு காசியன், காசன், கிருச்சமதன் என்று மூவர் மக்கள் பிறந்தார்கள். கிருச்சமதனுக்குச் சௌனகன் ஜனித்தான். அவன் நான்கு வருணங்களையும் உண்டாக்கினான். காசியன் என்பவனுக்குக் காசிராஜாவான காசேயன் உண்டானான். அவனுக்கு மகன் இராஷ்டிர னென்பவன். இராஷ்டிரனுக்குப் புத்திரன் தீர்க்கதபசு. தீர்க்கதபசுக்குத் தன்வந்தரி உதித்தார். சுவாதீனமான கரண களேபரங்களுடையவராய் முன் திருப்பாற்கடலி லுதித்தபோது எல்லாப் பிறப்புக்களிலும் எல்லா ஞானமு மறிந்த ஸ்ரீமந் நாராயணன் தந்தவக்தரிருக்கு, "நீ காசிராஜ வமிசத்திற் பிறந்து எண் வகைப்பட்ட வைத்திய சாஸ்திரங்களையும் நன்றாய்ச் செய்யக்கடவாய், யக்கியத்தில் அவிர்ப்பாகமும் புசிக்கக் கடவாய்" என்று வரமளித்திருந்தார். அந்தத் தன்வந்தரியின் புத்திரன் கேதுமான். கேதுமானுக்குப் பீமரதன். அவனுக்குத் திவோதாதன். அவனுக்குப் பிரதர்த்தனன். பிரதர்த்தனன். பத்திரசிரேணிய வமிசத்தை நாசஞ்செய்தமையால் சகல சத்துருக்களையும் நாசஞ் செய்தானென்று கொண்டு சத்துருஜித்து என்னும் பெயரை யடைந்தான். மேலும் அவன் பிதாவான திவோதாசன் அதிக அன்பினால் அவனை வத்ச என்று அழைத்து வந்தமையாலே, வத்சன் என்னும் பெயரையும் அடைந்தான். அன்றியும், மிகவும் சத்தியவானாகையால் சத்தியத்துவசனென்ற பெயரையும் பெற்றான். குவலய மென்னும் பெயர்பெற்ற குதிரை யொன்றை வைத்திருப்பதனால் குவலயாசுவ னென்ற

நாமதேயத்தையும்பொருந்தினன். அவனுக்கு அளர்க்க னென்கிற புத்திர னுண்டானன். அவனைப்பற்றி யொரு சுலோகம் இக்காலத்தும் வழங்குகின்றது. அஃதாவது "அளர்க்கனைக்காட்டிலும் மற்றெவன் அறுபத்தாறாயிரம் வருஷகாலம் இப்பூமியை யாண்டான்" என்பது அளர்க்க னென்பவனுக்குச் சன்னதி யென்னு மகன் பிறந்தான். அவனுக்குச் சநீதன், அவனுக்குச் சுகேது, அவனுக்குத் தருமகேது என்பவர்கள் முறையே பிறந்தார்கள். தருமகேதுவுக்குச் சத்தியகேது உண்டானன். அவனுடைய புதல்வன் விபு. அவனுடைய தனயன் ஸ்வவிபு. அவனுக்குச் சுகுமான். அவனுக்குத் திருஷ்டகேது. அவனுக்கு வீதியோத்திரன். அவனுக்கு பார்க்கன். பார்க்கனுக்கு பார்க்கபூமி யென்பவன் இவனிடத்தினின்றும் நான்கு வருணங்களு முண்டாயின. இவர்கள் தாம் காசிராஜாக்கள்.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

# இ ர ஜி ச ரி த் தி ர ம்

---

இராஜி யென்பவனுடைய சந்ததியைச் சொல்லுகிறேன் கேளும்: இராஜிக்கு ஒப்பற்ற பலபராக்கிரம வீரியங்களுள்ள ஐந்நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். இப்படியிருக்க, ஒருகால் தேவாசுர யுத்தம் நேர்ந்தபோது, தேவரும் அசுரரும் பிரமதேவனிடம்போய் "சுவாமி! இந்த யுத்தத்தில் யாருக்கு ஜயம் உண்டாகும்" என்று கேட்டார்கள். அதற்கு அத்தேவன், இராஜிமகாராஜன் ஆயுத மெடுத்துக்கொண்டு யார்பக்கத்திற் சேர்ந்து யுத்தஞ் செய்வானே அவர்களுக்கு ஜயமுண்டாகும்" என்று சொல்ல, அதுகேட்டு முந்தி அசுரர் இராஜியினிடத்துக்கு வந்து எங்களுக்கு "நீ யுத்த சகாயஞ் செய்யவேண்டும்" என்று கேட்டார்கள். அதுகேட்டு இராஜி "ஓ அசுரரே! நான் தேவதைகளை வென்றபிறகு உங்களுக்கு இந்திரனயிருக்க நீங்கள் சம்மதிப்பட்டால் அப்படியே

உங்கள் பக்கத்திற் சேர்வேன்" என்றான். அதற்கு தைத்தியர் "அரசனே! நாங்கள் காரியவசத்திற்கு ஒன்று சொல்லிப் பின்னொன்று செய்யமாட்டோம். எங்களுக்குப் பிரகலாதரே இந்திரனு யிருக்கவேண்டும், அதற்காகத்தான் இந்த முயற்சி" என்று சொல்லிப் போய் விட்டார்கள். பின்பு அமரரும் வந்து தங்கட்குத் துணை செய்யவேண்டும் என்று அவ்வரசனை வேண்டிக் கொண்டார்கள். அவர்களோடும் அவ்வரசன் தன்னிஷ்டத்தை முன் சொன்னபடி சொல்ல, அவர்கள் ஒத்துக்கொண்டார்கள். அதனால் அம்மன்னவன் தேவசைனியங்களைக் கூட்டிக்கொண்டு போர்செய்து, அநேக மகாஸ்திரங்களினாலே அசுரசேனைகளையெல்லாம் நாசஞ்செய்தான். பிறகு தேவேந்திரன் வந்து அவ்வேந்தன் பாதங்களில் வீழ்ந்து "ஓ மகாராஜனே! ஆபத்திற் காத்ததனாலும் அன்னமிட்டதனாலும் நீ எங்களுக்குப் பிதாவானாய்; இதனாலே சகல லோகங்களுக்கும் மிகமேலானவனுமானாய்; நானே உனக்கு மகன்; மகன் திரிலோகாதிபதியா யிருப்பது பிதாவுக்குச் சிறப்பன்றோ?" என்று துதித்து வேண்டி யுரைத்தான். இதைக்கேட்டு இராஜியானவன் நகைத்து "இந்திரனே நல்லது அப்படியே யாகட்டும், பகைவனானாலும் இச்சகம் பேசிக் காலில் வீழ்ந்து வேண்டிக்கொண்டானானால் அதனை மறுத்தல் கூடாதகாரியம். ஆதலால் ஒப்புக்கொண்டேன் போ" என்று சொல்லிவிட்டுத் தன் பட்டணம்போய்ச் சேர்ந்தான். இந்திரன் சுகமா யாண்டு கொண்டிருந்தான்.

சிலகாலத்துக்குப்பின் இராஜி லோகாந்தரஞ் சேர, அவன் குமாரரை நாரதமுனிவர் தூண்டிவிட்டார். அதனாலே அவர்கள் இந்திரனிடம்போய் "நீ எங்கள் பிதாவின் புத்திரனானகையால் எங்களுக்கு இராச்சியத்திற் பங்கு கொடுக்கவேண்டும்" என்றுகேட்டு, இந்திரன் அதற்கு இணங்காமையாலே அவனை வென்று தாங்கள் அவ்வதிகாரத்தைச் செலுத்தினார்கள். இவ்வாறு வெகு காலங் கழிந்து போகையில் தேவராஜன் தன் குருவாகிய பிரகஸ்பதியினிடம் போய் "ஸ்வாமீ! அடியேன் இப்படி அலைகிறேனே, அடியேன் திருப்தி யடையும்படி

இலந்தைப் பழத்தளவாகிலும் புரோடாசங் கொடுக்கும் படிச் செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, தேவன் தேவ குரு "ஓ அமராராஜனே! முன்னமே நீ யென்னைக் கேட்டிருப்பையாகில் இவ்வாபத்து உனக்கு நேரிடாதபடி செய்திருப்பேன். உன் விஷயத்தில் நான் செய்யக்கூடாத தென்ன இருக்கிறது? பார்; சிறிது நாளுக்குள்ளேயே உன் ஐசுவரியம் உனக்கு வரும்படிச் செய்கிறேன்" என்று சொல்லி, இந்திரனுக்குத் தேஜசு வளரவும் சத்துருக்களுக்குப் புத்திமயங்கவும் ஓர் அபிசார ஓமஞ்செய்தார். அதனால் இராஜியின் மக்களெல்லாம் புத்தி மயங்கிப் பிராமணத் துவேஷ முண்டானவர்களாயும் வர்ணாச்சிரம தருமங்களை யிழந்தவர்களாகவுமாகி வேதத்திற்குப் புறமானார்கள். இப்படி யானதனால் அவர்களை இந்திரன் ஜயித்துப் புரோகிதருடைய ஹோம பலத்தினாலே மகா தேஜசுள்ளவனாய் மறுபடியும் சுவர்க்கராச்சியத்தை யாண்டு வந்தான். இப்படி இந்திரன் மறுபடியுஞ் சுவர்க்கம்பெற்ற சரித்திரத்தைக் கேட்பவனுக்கு ஸ்தானப் பிரம்சமும் துராத்துமாவா யிருத்தலு முண்டாவதில்லை.

ஆயுவின் குமாரனான இரப்பனுக்குச் சந்ததியில்லை. க்ஷத்திரவிருத்தனுடைய சந்ததி கேளும். க்ஷத்திரவிருத்தனுடைய மகன் * பிரதிக்ஷத்திர னென்பவ னிருந்தான். அவன் புத்திரன் சஞ்சயன். அவன் புத்திரன் ஜயன். அவன் மகன் விஜயன். அவனுக்குக் கிருதன் பிறந்தான். அவனுக்கு ஹரியதனன். அவன் தனயன் சகதேவன். அவனுக்கு அதீனன். அவனுக்கு ஜயத்ஸேநன். அவனுக்குச் சங்கிருதி. அவன் குமாரன் க்ஷத்திர தருமன். இவர்கள் தாம் க்ஷத்திரவிருத்தனுடைய வமிசத்திற் பிறந்தவர்கள்.

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

* முந்திச் சொன்ன வமிசம் பிராமணாசாரமுடையவரைப்பற்றினது. இதுவோ சுத்த க்ஷத்திரியவமிசம் என்றறிந்துகொள்க.

## பத்தாம் அத்தியாயம்

# யயாதிமகாராஜனுடைய சரித்திரம்

மயித்திரேயரே! நகுஷவமிசஞ் சொல்லுகிறேன். நகுஷமகாராஜனுக்கு யதி, யயாதி, சம்யாதி, ஆயாதி, வியாதி, கிருதி என்று அறுவர் புதல்வர் தோன்றினர். அவர் யாவரும் மிகுந்த வலிமையும் வீரமுமுடையவர். அவருள் யதியென்போன் இராச்சியத்தை விரும்பினானில்லை. ஆதலின் யயாதி யென்பவன் பூமியாளப் பெற்றனன்: அவன் சுக்கிரன் மகளாகிய தேவையானியையும் விருஷபருவாவின் மகளாகிய சருமிஷ்டையையு மணந்தனன். இங்கு இவ்வம்சத்தைப்பற்றிய சுலோகமொன்றுண்டு. அஃதாவது, "தேவயானி யது தூர்வசு என்னு மக்களையும், சருமிஷ்டை துருகியு அனுபூரு என்னு மக்களையும் பெற்றனர்" என்பதேயாம்.

அவ்வரசன் சர்மிஷ்டையினிடத்து அன்புகூர்ந்திருந்ததை தேவயானி தன் றந்தைக்குத் தெரிவிக்க, சுக்கிராசாரியர் அவ்வரசனுக்கு ஜரையை யடையும்படியாகச் சாபமிட்டார். அதுகேட்டு அம்மன்னவன் தனக்கு அகாலத்தில் மூப்பு நேரிடும்படிச் செய்ததனல் மனவருத்தமுற்று அவர் பாதங்களில் வீழ்ந்து வேண்டிக்கொண்டான். அதனல் அவர் மனமிரங்கி, மூப்பை ஒருவர்க்குக் கொடுத்து அவருடைய யவ்வனத்தைக் கைக்கொள்ளும்படியாக அவ்வரசனுக்கு அனுக்கிரகஞ் செய்தார். பின்பு அம்மகாராஜன் தன் மூத்த குமாரனை யதுவை நோக்கி, "பிள்ளாய்! உன் மாதாமஹனுடைய சாபத்தினல் எனக்கு நேர்ந்த இம் மூப்பை அவரனுக்கிரகத்தின்படியே உனக்குக் கொடுத்து உன் இளம் பருவத்தைக் கைக்கொண்டு இன்னுமோராயிர வருஷகாலம் உலகவின்பங்களை யனுபவிக்க விரும்புகின்றேன். எனக்கு இப்போது உலகவின்பங்களில் திருப்தியுண்டாயிருக்கவில்லை. ஆதலால் நீயென் விருப்பத்துக்கு இணங்க வேண்டும்" என்றுரைத்தான். அதற்கு யது சம்மதிக்கவில்லை. அதுபற்றிப் பிதா "உன் சந்ததி இராச்சிய மிழந்திருக்கக் கட

வது" என்று சபித்தான். பிறகு துர்வசு, துருகியு, அனு என்கிற குமாரர்களையும் இப்படியே தன் மூப்பை வாங்கிக்கொண்டு யவ்வனத்தைக் கொடுக்கும்படி முறையே வேண்டினான். அவர்களும் அங்கீகரியாமற் போனதனால் அவர்களையும் சபித்தான். அப்புறம் சர்மிஷ்டையின் வயிற்றிற் பிறந்த தன் கடைசிக்குமாரனை பூருவையும் இப்படியே வேண்டினான். பூருவானவன் தந்தையின் வேண்டுகோளுக்கு வெகு வணக்கமாயும் மேன்மையாயுமிணங்கி "என் தந்தாய்! இதுசெய்வது எனக்கு மகா பிரசாதம். அப்படியே யாகட்டும்" என்று பிதாவின் ஆஜ்ஞையைக்கைக்கொண்டு, தன் யவ்வனத்தைக் கொடுத்தான். அதைப்பெற்று அம்மகிபதிதருமவிரோதமின்றித் தக்க காலங்களில் தனக்கு இஷ்டமானபடி சகலபோகங்களையும் அனுபவித்துக்கொண்டு செங்கோலையுஞ் செவ்வையாய்ச் செலுத்தி வந்தான். அவன் விசுவாசியென்கிற அப்சரசோடும் தேவயானியோடும் அனுபவித்துக் காமங்களின் முடிவை அடைவேனென்று எண்ணித் தினந்தோறும் அதே மனதாயிருந்தான். நாளுக்கு நாள் அனுபவத்தினால் காமங்கள் மிக இனியவைகளாகவே அவனுக்குத்தோன்றின. ஆதலால் இப்பாடல்களைப் பாடினான்.

"காமமானது காமபோகத்தினாலே ஒருபோதும் அடங்குகிறதில்லை. மற்றென்னவாகிறதென்றால் அவிகளைச் சொரியச் சொரிய அக்கினி வளர்வதுபோல் வளர்ந்தே வருகின்றது. இப்பூமியிலுள்ள சகல தானியங்களும் பொன் முதலான சிறந்த பொருள்களும் குதிரை முதலிய பசுக்களும் அழகிய பெண்டிர்களும் ஒருவனுடைய ஆசைக்கும் போதாம லிருக்கின்றன. ஆதலின் அவ்வாசையை நிறைவேற்ற முயல்வது கூடாதகாரியம். ஆகையினால் அதனை யொழித்தலே வேண்டும். சகல பூதங்களிலும் விருப்பும் வெறுப்புமாகிய கருத்தை வையாமல் சமமான தோற்றமுள்ளவனை புருடனுக்கு எத்திசையிலும் சுகமே தோன்றும்; புத்தியீனருக்கு விடக்கூடாததாயும் உடையவன் தளர்ந்தாலுந் தளராததாயு மிருக்கின்ற ஆசையை விட்டால் சுகமடையலாம். மனிதன் மூப்பினால் மெலிந்துபோக

அவனுடைய மயிர்களும் பற்களும் உதிர்ந்து போகின்றன. உயிராசை பொருளாசை என்னுமிவ்விரண்டுமோ ஒருபோதும் மெலிவதுமில்லை; இளைப்பதுமில்லை. இதுவே திருஷ்டாந்தம். ஓராயிரவருஷகாலம் போகானுபவஞ் செய்துவந்த எனக்கு ஆசை கிஞ்சித்தும் ஒழியாமல் வளர்ந்துகொண்டே வந்ததன்றோ? ஆதலால் நான் இனி இவ்வவாவென்னும் பிசாசத்தை விட்டு ஒழித்து, மனதைப் பரப்பிரமத்தினிடத்திற் செலுத்தித் தொந்தங்களும் மமதையும் நீங்கினவனாய், மிருகங்களோடு திரிந்துகொண்டிருக்கக் கடவேன்" என்றிப்படிச் சிந்தித்தவனாகி, யயாதிமகாராஜன் பூருவின் யவ்வனத்தை யவனுக்குக் கொடுத்துத் தன் மூப்பைத் தான் பெற்றுக்கொண்டு, தென்கிழக்கில் துர்வசுவையும், மேற்கில் துருகியுவையும், தெற்கில் யதுவையும் சிற்றரசராக்கிச் சகல பூமண்டலத்துக்கும் பூருவை அதிபதியாக வைத்து இராச்சிய பட்டாபிஷேகஞ் செய்துவிட்டுத் தான் தவஞ் செய்யும் பொருட்டு வனத்திற்குச் சென்றான்.

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினோராம் அத்தியாயம்

## கார்த்த வீரியார்ச்சுனன் சரித்திரம்

இனி யயாதிமகாராஜாவின் மூத்தகுமாரனை யதுவின் குலமுறை சொல்லுகிறேன் கேளும்: அந்த வமிசத்தில் சகல லோகங்களுக்கு மிருப்பிடமாய் மனிதர், சித்தர், கந்தருவர், இயக்கர், இராக்கதர், குகியகர், கிம்புருஷர், அப்சரசுக்கள், நாகர், விஹகர், தைத்தியர், தானவர், ஆதித்தியர், உருத்திரர், வசுக்கள், அசுவினிகள், மருத்துக்கள், தேவரிஷிகள் ஆகிய இவர்களினாலும், மோக்ஷம் பெற முயன்றவர்களாலும், தருமார்த்த காமங்களை விரும்பியவர்களாலும், தங்க டங்களிஷ்ட சித்தியின் பொருட்டுத் துதிக்கப்பட்டவராய் ஆதிமத்தியாந்தரகிதராய் அளவிடக்கூடாத மகத்துவமுள்ளவரான ஸ்ரீமகா விஷ்ணுபகவான் உலக அனுக்

கிரக காரணமான திருவிளையாட்டுக்கேற்ற ஒரு திவ்விய மங்கள விக்கிரகத்தோடு அவதரித்தருளினார். இவ்விடத்தில் ஒரு சுலோகம் வழங்கும்: அஃதாவது, "யதுவின் வமிசத்தை ஒருவன் கேட்பதனாலே, சகல பாதகங்களினின்றும் விடுபடுவான்; ஏனெனில் அதில் பரப்பிரமமானது ஸ்ரீ கிருஷ்ணனென்னுந் திருநாமத்தினால் விளங்கின மனுஷியரூபியாக அவதரித்ததன்றோ?" என்பதாம்.

யதுவுக்கு சகஸ்ரஜித்து, குரோஷ்டு, நளன், நகுஷன் என்ற நான்கு குமாரர் உண்டானார்கள். அவருள் சஹஸ்ரஜித்தின் மகன் சதஜித்து. அவனுக்கு ஹைஹயன், ஹேஹயன், வேணுஹயன் என்று மூவர் மக்களுண்டானார்கள். ஹைஹயனுடைய மகன் தருமனென்பவன். அவனுக்குத் தருமநேத்திரன். அவனுக்குக் குந்தி. குந்திக்குச் சஹஸ்ரஜித்து. அவன் மகன் மகிஷ்மான். அவன் மாகிஷ்மதி யென்கிற பட்டணமொன் றுண்டாக்கினான். அவன் குமாரன் பத்திரசிரேணியன், அவனுக்குத் தனகன். தனகனுக்குக் கிருதவீரியன், கிருதாக்கினி, கிருததருமன், கிருதவுஜசு என்று நால்வர் புத்திரர் பிறந்தார்கள். கிருதவீரியனுடைய குமாரன் அர்ச்சுனனென்பவன். அவன் ஸ்ரீமந் நாராயணாமிசமாய் அத்திரி குமாரராய் விளங்கா நின்ற தத்தாத்திரேய மகா முனிவரை யாராதித்து, அவருடைய அனுக்கிரகத்தினாலே அதருமத்திற் புகாமையும், ஸ்வதருமத்திற் பற்றுண்மையும், ஆயிரங்கைகளுடைமையும், யுத்தத்தில் வெற்றியும், பூமியைத் தருமத்தினாற் காத்தலும், சத்துருக்களினால் அவமானப்படாமையும், சகல லோகங்களுங் கொண்டாடும்படியான மகா புருஷனால் மரணமுமாகிய இவ்வரங்களைப் பெற்றான். அதனால் சகல தீவுகளோடுங் கூடின பூமண்டலமெல்லாம் பரிபாலனஞ்செய்து, பதினாயிரம் வேள்விகளையு மியற்றினான். அவன் விஷயமான சுலோகம் இக் காலத்திலும் வழங்குகிறதைக் கேளும்: "எந்த மன்னர்களும் யாகங்களினாலும் தானங்களினாலும் தவங்களினாலும் வணக்க முதலிய சற்குணங்களினாலும் சாஸ்திரக் கேள்விகளினாலும் கார்த்தவீரியார்ச்

சுனனை யொவ்வார்கள். அவனுடைய இராச்சியத்தில் ஒருவனும் பொருளிழந்ததில்லை. இக்காலத்திலும் அவனது நாமத்தைச் சங்கீர்த்தனம் பண்ணுகிறவனுக்கு இழந்த பொருள் கைகூடும்" என்று ஹரிவம்சாதிகளிலே சொல்லப்பட்டிருக்கின்றது. இப்படி எண்பத்தையாயிர வருஷகாலம் ஆரோக்கியம் செல்வம் பலம் பராக்கிரமம் இவற்றில் யாதொரு குறைவுமில்லாதவனாய்ச் செங்கோல் செலுத்தி வந்தான்.

ஒருகாலத்தில் கார்த்தவீரியார்ச்சுனன் நருமதையாற்றில் ஜலக்கிரீடை செய்துகொண்டு மதுபானத்தினால் மதித்திருக்கையில், சகல தேவ தைத்திய கந்தர்வர் முதலானோரை வென்றதனாற் செருக்கடைந்திரா நின்ற இராவணன் திக்குவிஜய யாத்திரையாய் அங்கும் வரக்கண்டு, பசுவைப்போலே எளிதிலே அவனைப் பிடித்துக் கட்டிக்கொண்டுபோய் மாகிஷ்மதி யென்கிற தன் பட்டணத்தில் ஒரு மூலையிற் போட்டிருந்தான். அம் மன்னவனை அவனிஷ்டப்படியே ஸ்ரீமந் நாராயண வம்சத்தினு லவதரித்த பரசுராமர் எண்பத்தையாயிரம் வருஷத்தின் முடிவில் சங்கரித்தருளினார். அவனுக்கு நூறு பிள்ளைகளுண்டு. அவர்களில், சூரன், சூரசேனன், விருஷசேனன், மது, ஜயத்துவசன் என்பவர்கள் முக்கியமான ஐவர். அவரவர்களுக்குள்ளே ஜயத்துவசனென்பவனுக்குத் தாளசங்கன் என்பவன் பிறந்தான். அவனுக்கு அப்பெயரே கொண்ட நூறு மக்களிருந்தார்கள். அவர்களுக்கு மூத்தவன் வீதிஹோத்திரன். இரண்டாவான் பரதன். பரதனுக்கு விருஷன். விருஷனுக்கு மது. அவனுக்கு விருஷ்ணி முதலான நூறு குமாரர் உதித்தார்கள். அதனாலே அந்தக் குலத்தார்க்கு விருஷ்ணிகள் என்றும் மதுவென்பவனைப் பற்றி மதுக்கள் என்றும் பெயர் விளங்கின. யதுவைப் பற்றி அவனுக்கு யாதவர் என்ற பெயரும் வழங்கலாயிற்று.

பதினோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# ஜியாமகன் சரித்திரம்

யதுவின் புத்திரனான குரோஷ்டு என்பவனுக்குத் துவஜினீவான் என்ற புத்திரன் உண்டானான். அவனுக்குச் சுவாதி. அவனுக்கு இருசங்கு. இருசங்குவுக்குச் சித்திராதன், அவனுக்குச் சசபிந்து. அவன் சக்கிரம் இரசம்மணி கட்கம் சருமம் கொடி நிதி என்னுமேழு அப்பிராணிகளும், மனைவி, புரோகிதன் சேனாபதி ரதகாரன் காலாள் குதிரை யானை என்னு மேழு பிராணிகளுமாகிய பதினான்கு ரத்தினங்களை யுடையவனாய்ச் சக்கரவர்த்தியாயிருந்தான். அவனுக்கு லக்ஷம் பத்தினிகளும் பத்துலக்ஷம் பிள்ளைகளுமுண்டு. அவர்களுக்குள்ளே பிருதுசிரவன், பிருதுகர்மா, பிருதுகீர்த்தி, பிருதுயசன், பிருதுஜயன், பிருதுதானன் என்கிற அறுவர் முக்கியமானவர்கள். அவருள் பிருது கீர்த்தியின் மகன் பிருதுதமன். அவனுக்கு உசனன். அவன் நூறு அசுவமேத யாகங்கள் செய்தான். அவனுக்குச் சிதபு என்னு மகன் பிறந்தான். அவனுக்கு ருக்குமகவசன். அவனுக்குப் பராவிருத்து. அந்தப் பராவிருத்துக்கு உருக்குமேஷு, பிருதுருக்குமன், ஜியாமகன், பலிதன், ஹரிதன் என்கிற ஐவர் பிறந்தார்கள். அவருள் ஜியாமகனைப்பற்றி ஒரு சுலோகம் உண்டு: என்னவென்றால் "பெண்டாட்டிக்கு வசப்பட்டவர்கள் யாராருண்டோ அல்லது உண்டாவார்களோ அவர்கள் யாவருக்கும் சைப்பியையின் கணவனான ஜியாமகனே மேலானவன்." அவனுடைய பத்தினியான சைப்பி யென்பவள் பிள்ளைபெறாம லிருந்ததனாலே அவ்வரசன் பிள்ளைக்காக வேறு கலியாணஞ்செய்ய மனமுடையவனாயிருந்தும் அவளுக்கு அஞ்சி அப்படிச் செய்யாமலிருந்துவிட்டான். அவனொருகால் மிகுந்த இரதகஜதுரகபதாதிகளோடு கூடிப் பயங்கரமா யிருக்கிற ஒரு மகாயுத்தத்திற் புகுந்து சத்துருக்களை யெல்லாஞ் ஜயித்தான். அப்போது அப்பகைவர் தம்முடைய பந்துக்

களையும் பொருள்களையும் விட்டு ஓட, அங்கொரு சுந்தரமான பெண் பயத்தினுற் கண் கலக்கமுற்று "என்னைக் காப்பாற்றவேண்டும், தந்தையே! தாயே! உடன் பிறந்தவனே!" என்று அழுதுகொண்டு திசைகளைப் பார்த்துப் பார்த்துக் கூவி நடுக்கமுற்றிருக்கக் கண்டு, அந்தப்பெண் மணியினிடத்துக் காதலுற்றவனாய்ச் சிந்திக்கலாயினான் "மலடியின் புருஷனாய்ப் பிள்ளையில்லாம லிருக்கின்ற எனக்குத் தெய்வ மிப்பெண்கள் நாயகத்தைப் பிள்ளைக்காக அளித்தது; ஆதலின் இவளை விவாகஞ்செய்துகொள்வேன்; ஒருவேளை 'சைப்பியை கோபிப்பாளோ என்னமோ; அதற்காக இக் கன்னியா ரத்தினத்தைக் கொண்டுபோய்ச் சந்ததிக்காக அவளிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டாயினும் இவளைக் கலியாணஞ்செய்துகொள்வேன்" என்று சிந்தித்து, அப்பெண்ணைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு தன் பட்டணத்துக்குப்போனான். அப்போது அரசன் ஜயசாலியாய் வருவதைக் கேட்டு அவன் மனைவியான சைப்பியை சகலமான பரிஜனங்கள், சேவகர் பட்டணத்தார் முதலானவர்களோடு அவனைப் பார்க்கும்பொருட்டு அரண்மனைவாசலில் வந்து நின்று, தேரின்மேல் அரசனது இடப்பக்கத்திலிருந்த அக்கன்னிகையைப் பார்த்துக் கொஞ்சம் கோபத்தினு லுதடு துடிக்க அரசனை நோக்கி "ஓ சபலசித்தமுடையவனே! தேரின்மேல் எவளை யேற்றிக்கொண்டு வந்தாய்?" என்றாள். இதைக் கேட்டவுடனே அரசன் மிகவும் பயமுற்றவனாய்ப் பின்வார்த்தை யொன்றும் யோசியாமல் "இவள் என் மருமகள்" என்றான். அதற்கு அவள் "அரசனே! நான்பிள்ளை பெறவில்லை, உனக்கு வேறொரு பெண்டாட்டியு மில்லை, இப்படி யிருக்க எந்தப் புத்திரனுக்கு இவளைக் கலியாணஞ் செய்யப்போகின்றாய்" என்றாள். அரசன் அவளுடைய கோபத்தினுற் கலங்கின வார்த்தையினாலே விவேகத்தையுந் தைரியத்தையு மிழந்து, முன்னுரைத்த பொருந்தாமொழிக்குப் பரிகாரமாய் மனைவியை நோக்கி "என் பிராணநாயகி! இனி உனக்குப் பிறக்கப்போகிற மகனுக்கு மனைவியாகவே இவளைக் கொண்டு வந்தேன்" என்றான். அதுகேட்டுச்

சைப்பியை புன்னகை கொண்டவளாய் "நல்லது அப்படியே யாகட்டும்" என்று ஒத்துக்கொண்டாள்.

பின்பு அரசனை யிட்டுக்கொண்டு அந்தப் புறத்திற் பிரவேசித்தாள். இப்படி சிலகாலஞ் சென்றபிறகு அந்தச் சைப்பியை வயது முதிர்ந்தவளா யிருந்தும் புத்திர வுற்பத்தியைப்பற்றி அரசன் சொல்லியிருந்த வாக்கின் குணத்தினாலே கருப்பமடைந்து, அதிசுத்தமான லக்கினம், ஓரை, திரேக்காணம், நவாம்சம் முதலான அவயவங்களை யுடைத்தான நல்ல காலத்திலே உலகங்களிக்க ஒரு குமாரனையும் பெற்றாள். அந்தக் குமாரனுக்கு விதர்ப்பன் என்ற பெயரைப் பிதா கொடுத்தான். பிறகு முன்கொண்டுவந்த கன்னிகையையே அக்குமாரனுக்கு விவாகஞ் செய்வித்தான். அவளுக்கு ஸ்நுஷை என்பதே பெயராயிற்று. அந்த விதர்ப்பராஜனும் அவளிடத்திலே கிருதன், கைசிகன் என்னும் இரு குமாரரைப்பெற்றுப் பின்பு உரோமபாத னென்பவனையும் பெற்றான். உரோமபாத மகாராஜன் நாரதமகாமுனிவரிடத்தில் ஞானத்தைப் பெற்றான். உரோம பாதனுக்கு மகன் பப்புரு. பப்புருவுக்குத் திருதி. திருதிக்கு கைசிகன், கைசிகனுக்குச் சேதி. அவனுடைய சந்ததியிற் பிறந்தவர்கள் சைத்தியர் என்னப்படுவார்கள்.

முன்சொன்ன ஸ்நுஷையின் புத்திரனான கிருதனென்பவனுக்குக் குந்தி யென்பவன் பிறந்தான். குந்திக்குத் திருஷ்டி. திருஷ்டிக்கு விதிருதி. விதிருதிக்குத் தசார்ககன். அவனுக்கு வியோமன். அவனுக்கு நீமூதன். அவனுக்கு விகுருதி. அவனுக்குப் பீமரதன். அவனுக்கு நவரதன். அவனுக்குத் தசரதன். அவனுக்குச் சகுனி, அவன் மகன் காம்பி, காம்பிமகன் தேவராதன். அவன் குமாரன் தேவக்ஷத்திரன். அவனுக்குப் புத்திரன் மது. மதுவுக்குக் குருவமிசன். குருவமிசனுக்கு அநு. அநுவுக்குப் புருஹோத்திரன். அவனுக்கு அம்சன். அவனுக்குச் சத்துவதன். அந்தச் சத்துவதனைப்பற்றித்தான் இனிச்சொல்லப்படும் அரசர்களுக்குச் சாத்துவதர் என்கிற நாமதேய முண்டாயிற்று. இவ்

வாறிந்த ஜியாமகனுடைய சந்ததியைச் சிரத்தையோடு கேட்கிற புருஷன் பாவந்தீர்ந்தவனுவான்.

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

# சிமந்தகமணி விருத்தாந்தம்

கேளும் மயித்திரேயரே! முன்சொன்ன சத்துவதனுக்கு பஜனன், பஜமானன், திவியன், அந்தகன், தேவாபிருதன், மகாபோஜன், விருஷ்ணி என்கிற புத்திரர் பிறந்தார்கள். அவருள் பஜமானனுக்கு நிமி, கிருகணன், விருஷ்ணி என மூவர். ஒருத்தி வயிற்றிலும், சதஜித்து, சகஸ்ராஜித்து, அயுதஜித்து என்பவர்கள் மற்றொருத்தி வயிற்றிலு முண்டானார்கள். அந்தத் தேவபிருத னென்பவனுக்குப் பப்புரு வென்பவன் மனிதர்களிற் சிறந்தவ னென்றும், தேவாபிருதன் தேவர்களுக் கொப்பானவனென்றும் தூரத்திலிருந்து கேள்விப்படுகின்றபடியே சமீபத்திலே போனபோதும் சரியாய்க் காண்கிறோம். பப்புருவினாலும் தேவாபிருதனாலும் உபதேசிக்கப்பட்ட வழியினுல் எழுபத்து நாலாயிரம்பேர் மோக்ஷத்தை யடைந்தார்கள். ஆதலின் இவர்கள் மகாசிரேஷ்ட ரெனப்பட்டனர். மகாபோஜன் என்கிறவன் அதிதருமவான். அவன் வமிசத்திற் பிறந்தவர்கள் போஜர் என்றும், மிருத்திகாவாமென்று சொல்லப்பட்ட பட்டணத்தில் வாசஞ்செய்ததனுல் மார்த்திகாவார் என்றும் சொல்லப்படுவார்கள். விருஷ்ணிக்குச் சுமித்திரனென்றும், யுதாஜித்தென்றும் இருவர் குமாரருதித்தனர். சுமித்திரனுக்கு அனமித்திரன், அனமித்திரனுக்கு நிக்கினன், நிக்கினனுக்குப்பிரசேனனும், சத்திராஜித்து முண்டானார்கள், அந்தச் சத்திராஜித்து என்பவனுக்குச் சூரியபகவான் மித்திரனயிருந்தார். ஒருகாலத்தில் அந்தச் சத்திராஜித்து, கடற்கரையிலிருந்துகொண்டு வெகு பக்தியோடு சூரியபகவானைத் துதித்தான். அந்தச் சூரியபகவானும்

அவனுடைய ஸ்தோத்திரத்திற்கு மெச்சி, அவனுக்கு எதிரில் வந்து தோற்றினர். இப்படியென் றறியக் கூடாத வடிவுடையராய்ச் சுத்த தேஜோமயமாய் விள ங்கா நின்ற அவ்வாதித்தியனை நோக்கி, சத்திராஜித்து "பகவானே! உம்மை வானத்தில் நெருப்புக் கட்டி போலக் காண்கின்றேனன்றோ? அப்படித்தான் இப் போதும் உம்மைப் பார்க்கின்றேனேயல்லது வேறில்லை ஆதலால் நீர் என்னிடத்தில் அநுக்கிரகஞ் செய்ததின் பயனென்றுமில்லையே?" என்று சொன்னன். அது கேட்டு இரவிபகவான் தன் கழுத்திலிருந்த சிமந்தக மென்கிற இரத்தினத்தைக் கழற்றி ஒரு மறைவிடத் தில் வைக்க, பின்பு சத்திராஜித்துக் கொஞ்சம் சிவந்து பிரகாசிக்கிற குறுகிய தேகமும் பூனைக்கண் போலே கொஞ்சம் பொன்னிறமான கண்களுமுடைய சூரியனைப் பார்த்துச் சாஷ்டாங்கமாய்த் தெண்டமிட்டுத் துதித்து நின்ருன். அப்போது சூரியன் அவனைப் பார்த்து "ஓ சத்திராஜிதனே! உனக்கு வேண்டும் வரத் தைக் கேள், தருவேன்" என்றான். அதற்கு அந்த யாத வன் அந்த சிமந்தக மணியைத் தரும்படிக் கேட் டான். தினகரனும் அந்தமணியை அவனுக்குக்கொடுத் துத் தன் ஸ்தானத்திற்குப் போனன்.

பின்பு சத்திராஜிதன் அந்தத் திவ்வியரத்தினத்தை தரித்ததனலே சூரியனைப்போலவே நாற்புறங்களையும் காந்திகளினலே விளக்கிக்கொண்டு துவாரகா நகரத் திற்கு வருகையில், துவாரகையி லிருக்கிறவர்கள் ஆதி புருஷனையும் புருஷோத்தமனையும் பூபார நீக்குவதற் காக மனுஷ்யாவதாரஞ் செய்தருளியிருக்கிற பகவா னை கண்ணன் சன்னிதியிற் சென்று, "சுவாமீ! தேவரீ ரைச் சேவிக்கச் சூரியபகவான் வருகிருப்போ லிருக் கிறது" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அது கேட்டுச் சுவாமியானவர் "வருகிறவன் சூரியனன்று, நம்முடைய சத்திராஜிதன், சூரியனலே கொடுக்கப்பட்ட சிமந்தகமென்னு மணியைத் தரித்துக்கொண்டு வரு கின்ருன், ஆதலின் அச்சமின்றிப் பாருங்கள்" என்று அருளிச்செய்ததைக் கேட்டு, அப்படியே அவர்களெல் லாம் பார்த்திருந்தார்கள். சத்திராஜிதன் துவார

கைக்கு வந்து அந்தச் சிறப்பான இரத்தினத்தைத் தன் மாளிகையிலே வைத்தான். அந்த மணியோ நாளொன்றுக்கு எட்டுப்பாரம் பொன்னை யுண்டாக்கத் தக்கது; மேலும் அதன் மகிமையினாலே இராச்சியத்தில் வியாதி, மழையின்மை, நெருப்பு, பாம்பு முதலானவைகளினின்றும் பயம் பஞ்சம் முதலானவைகள் உண்டாவதில்லை. ஸ்ரீ கிருஷ்ணபகவானோ "இந்த வுத்தமமான வஸ்து உக்கிரசேன மகாராஜனுக்குத் தகுந்தது" என்று திருவுள்ளம்பற்றி யிருந்தார். ஆயினும் குலத்தில் பேதமுண்டாகக் கூடாதென்பதுபற்றித் தாம் சக்திமானாயிருந்தும் அதைக் கவராமற் சும்மா எழுந்தருளியிருந்தார். அந்தச் சத்திராஜித்தும் "ஒருவேளை கண்ணன் இதை நம்மைக் கேட்பார்" என்று நினைத்து அம்மணியைத் தன் சகோதரனான பிரசேனனுக்குக் கொடுத்துவிட்டான். அந்தப் பிரசேனனோ, "இது மகா பரிசுத்தனாலே தரிக்கப்பட்டால் பொன்னை யுண்டாக்கும், அசுத்தனாலே தரிக்கப்பட்டால் தரித்தவனுக்கே தீங்கை வருவிக்கும்" என்பதை யறியாதவனாய் அந்த இரத்தினத்தைத் தன் கழுத்தில் தரித்துக்கொண்டு, குதிரையேறி வேட்டைக்காகக் காட்டிற்சென்று, அங்கே வேட்டையில் ஒரு சிங்கத்தினாற் குதிரையோடுகூடக் கொல்லப்பட்டான். அச் சிங்கம் அவ் விரத்தினத்தை வாயினாற் கவ்விக்கொண்டு போகையில் கரடி யரசனான ஜாம்பவான் அச் சிங்கத்தைக் கொன்று அவ் விரத்தினத்தை யெடுத்துக்கொண்டு தனது குகைக்குச்சென்று, சுகுமாரன் என்ற தன் மகனுக்கு விளையாட்டுக் கருவியாக்கி வைத்தார். இப்படியிருக்கக் காட்டுக்குப்போன பிரசேனன் வாராம லிருந்ததனால், யாதவரெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணன் "இரத்தினத்தின்மேல் விருப்பம் வைத்திருந்தார், அவர்தாம் அதை யடைந்திருப்பார் இஃது அவருடைய காரியந்தான்" என்று காதின்மேற் காதாய்ச் சொல்லிக் கொண்டார்கள். கண்ணன் தமக்கிப்படி உலக அபவாத முண்டாயிருப்பதை யறிந்து, சகல யாதவசேனைகளோடு கூடப் பிரசேனனுடைய குதிரை போனவழியைத் தொடர்ந்தெழுந்தருளிக் காட்டில் ஓரிடத்திலே குதிரையோடுகூடச் சிங்கத்தினாற் கொல்லப்

பட்டு விழுந்திருந்த பிரசேனனையுங் கண்டார். யாவரும் அங்கே சிங்கத்தின் காலடிகளையும் அவன்மேல் தாக்கியிருக்குஞ் சிங்கத்தின் காலடிகளையும் சிங்கத்தின் நகக்குறி முதலானவற்றையும் கண்டதனால் கண்ணன் தமக்குண்டாயிருந்த அபவாதத்தினின்றும் நீங்கினார்.

பின்பு அந்த மிருகராஜன் போனவழியையும் பிடித்துச் செல்லுகையில் சிறிது தூரத்திலேயே அச்சிங்கத்தை யொரு கரடி கொன்றதாகத் தெரிந்து கொண்டு, அந்த இரத்தினத்தின் மகிமையை நினைத்து அக்கரடிபோன வழியையுந் தொடர்ந்து, அங்கிருந்த மலையினிடத்திற் சேனைகளெல்லாவற்றையும் நிறுத்தித் தாமொருவராய் அந்தக் கரடியின் குகைக்குள் எழுந்தருளினார். உள்ளே எழுந்தருளினபோது சுகுமாரன் என்னுங் குழந்தையை லாலனை செய்துகொண்டிருந்த செவிலித்தாயின் வாக்கில் "சிங்கம் பிரசேனனைக் கொன்றது, சிங்கத்தை நம்முடைய ஜாம்பவான் கொன்றார். ஆதலின் சிமந்தகமணி உனக்கே யாயிற்று. குழந்தாய்! அழாதே" என்கிற வாக்கியத்தைக் கேட்டருளி, அங்கே அச்செவிலித்தாயின் கையில் சொலித்துக்கொண்டிருந்த சிமந்தகத்தைக் கண்டார். அப்போது அச்செவிலி சிமந்தகத்தின்மேற் கண்ணோடி நிற்கிற வொரு புதிய புருஷனைக்கண்டு அச்சமுற்று "என்னைக் காக்கவேண்டும் காக்கவேண்டும்" என்று கூவினாள். அந்த அபயக் குரலைக் கேட்டுச் ஜாம்பவான் வெகு கோபத்தோடு அங்கே வர, அவ்விருவருக்கும் இருபத்தொரு நாள் வரையில் கொடிய யுத்தமுண்டாயிற்று. இப்படியிருக்க வெளியிலிருந்த யாதவர்களெல்லாம் ஏழெட்டு நாள் வரையிலும் பார்த்துச் சுவாமி வராமையினாலே "ஓகோ! கிருஷ்ணன் இந்தப் பிலத்தில் நாசமுற்றிருப்பான்; இல்லாவிட்டால் அவனுக்குச் சத்துருக்களைச் சயிக்கத் தடையிருக்கமாட்டாது" என்று கருத்துக் கொண்டவர்களாய்த் துவாரகைக்கு வந்து, "கிருஷ்ணன் முடிவடைந்தான்" என்று சொல்லிவிட்டார்கள். அதுகேட்டு அவருடைய பந்துக்களெல்லாம் செய்ய வேண்டிய சாமக்கிரியைகளைச் செய்துவிட்டார்கள். அவர்கள் அப்படி வெகு சிரத்தையோடு சிரார்த்தஞ்

செய்துவந்தமையால் யுத்தஞ்செய்கிற ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் திருப்தியும், பலபுஷ்டியு முண்டாயிருந்தன. ஜாம்பவானுக்கோ இந்த மகா புருஷனாலே புடைக்கப்பட்டு அவயவ பந்தங்களெல்லாந் தளர்ச்சியடைந்ததனாலும், ஆகாராதிகள் இல்லாமையாலும், நாளுக்குநாள் மெலிவு மிகுந்து வந்தது. இவ்வாறு சுவாமியினால் வெல்லப்பட்டபடியினாலே அந்தச் சாம்பவான் சுவாமி திருவடிகளிலே வீழ்ந்து தண்டம் சமர்ப்பித்து விண்ணப்பஞ் செய்யலாயினான்:—

"சுவாமி! தேவரீர் சுராசுர இயக்க அரக்க கந்தருவாதிகளினாலும் வெல்லக்கூடாதவராயிருக்க, இப்பூமியிற் சஞ்சரிக்கிற மனிதர்களாலும் அவர்களுக்கு உள்ளடங்கின விலங்குகளிற்சேர்ந்த எம்போலியோராலும் வெல்லப்படுவீரோ? ஆதலின் தேவரீர் அடியேங்களுடைய சுவாமியான ஸ்ரீராமரைப்போல் சகல லோகங்களுக்கும் ஆதாரபூதரான ஸ்ரீமந் நாராயணனுடைய திருவவதாரமா யிருக்கவேண்டும்" என்று விண்ணப்பம் பண்ணி நின்றார். ஜாம்பவானைக் கடாக்ஷித்து ஸ்ரீகண்ணன் "ஆம் நீர் நினைத்தபடி நாம் உலகத்தை இரக்ஷிக்கும் கருத்தோடு இந்த அவதாரஞ் செய்தோம்" என்று அருளிச்செய்து, விசேஷ வாச்சல்லியத்தினாலே தமது திருக்கைகளைக்கொண்டு அவருடம்பைத் தடவியருளி, யுத்தத்தினா லவருக்கு நேர்ந்த நோயெல்லாம் நீக்கியருளினார். பின்பு அக்கரடியரசன் சுவாமிக்குத் தண்டம் சமர்ப்பித்துத் தமது மாளிகைக்கு அதிதியாயெழுந்தருளின அவருக்கு அர்க்கியம்போலத் தம்முடைய குமாரிகையான ஜாம்பவதி யென்பவளைக் கொடுத்து, மறுபடியுந் தண்டம் சமர்ப்பித்து, இதையுந் திருவுள்ளம் பற்றவேண்டும்" என்று பிரார்த்தித்து அம் மணியையுங் கொடுத்தார். ஸ்ரீபகவானும் அவருடைய பக்திக்கு இணங்கி அம்மணியைக் கொள்ளக்கூடாததானாலும் தனக்கு வந்திருக்கும் அபவாதத்தைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டுக் கைக்கொண்டு, ஜாம்பவதியோடுகூடத் துவாரகைக்கு எழுந்தருளினார். இப்படி எழுந்தருளிய பகவானைச் சேவித்து அந்தத் துவாரகா ஜனங்களெல்லாம் அதிக சந்தோஷப் பூரிப்

பினுல் மூப்படைந்தவர்களுங்கூட யவ்வனமுற்றவர் போலாகி, "மகாபாக்கியம். மகாபாக்கியம்" என்று கோலாஹலப்பட்டிருந்தார்கள். யாதவர்களும் பெண்டிர்களும் ஆனந்தபாஷ்பம் பெருகவும் மெய்பொடிக்கவு நின்று மிகவும் வாழ்த்தி வணங்கினுர்கள்.

பகவானும் நடந்த காரியங்களையெல்லாம் யாதவ சமூகத்துக்குச் சொல்லி, சிமந்தகத்தைச் சத்திராஜித னுக்குக் கொடுத்துத் தமக்குக் கிடைத்த வீண் அபவாதத்தைப் போக்கிக்கொண்டு ஜாம்பவதியை அந்தப்புறத்திற் சேர்த்துச் சுகமாய் எழுந்தருளியிருந்தார்.

இப்படியிருக்கச் சத்திராஜித்து "நம்மாலே கண்ணன்மேல் வீணபவாதம் ஏற்றப்பட்டதே, அந்த அபவாதத்தை யெப்படியாவது நிவர்த்தி செய்துகொள்ள வேண்டும்" என்று நினைத்துத் தன் புத்திரியான சத்தியபாமையைச் சுவாமிக்குச் சமர்ப்பித்தான். அப் பெண்மணியை முன்பு அக்குரூரன், கிருதவர்மா, சததனுவா முதலான யாதவர்கள் கேட்டிருந்தார்கள். அவளைத் தங்களுக்குக் கொடாமற் போனதனுல் அவர்களெல்லாம் சத்திராஜித்துவின்மேற் பகைபாராட்டி வந்தார்கள். ஒருகால் அக்குரூரன் கிருதவர்மா முதலானவர்கள் சததனுவாவி னிடத்துக்குப்போய் "ஓ சததனுவாவே! இந்தச் சத்திராஜித்தினுடைய துர்மார்க்கத்தைப் பார்த்தையா? வெகுநாளாய்க் கேட்டுக்கொண்டிருந்த உன்னையும் எங்களையும் அவமானம் பண்ணிக் கன்னிகையைக் கிருஷ்ணனுக்குக் கொடுத்துவிட்டானே? இந்த அயோக்கியன் இருந்தாவதென்ன? நீ மகா சமர்த்தனுகையால் இவனைக் கொன்றுவிட்டு அந்தத் திவ்விய இரத்தினத்தை யெடுத்துக்கொள்; கிருஷ்ணன் அதற்காக உன்னை எதிர்ப்பானென்று நீ நினைக்கிருயோ, ஆகட்டும் அப்படி நேரிட்டபோது நாங்கள் யாவரும் உனக்குப் பக்கபலமாய் வருகின்ருேம்" என்று தூண்டினுர்கள். அவனும் அப்படியே செய்கிறேனென்று ஒப்புக்கொண்டு ஒருநாள் சத்திராஜித்து தூங்கிக் கொண்டிருக்கையில் அவனைக் கொன்றுபோட்டு அவ்விரத்தினத்தையுங் கவர்ந்துகொண்டு போனுன்.

அக்காலத்திற் பாண்டவர்கள் அரக்குமாளிகையில் வெந்துபோனார்களென்கிற செய்தி கேட்டு சுவாமி அவர்கள் வாசஞ்செய்து கொண்டிருந்த வாரணாவத புரத்துக்கு எழுந்தருளி யிருந்தார். சுவாமிக்கோ பாண்டவர்கள் வெந்து போகாமல் தப்பியிருக்கிறார்களென்பது தெரிந்திருந்தும் உலக மரியாதைக்காகவும், தாமெழுந்தருளாத பக்ஷத்தில் பாண்டவர் பிழைத்திருக்கிறார்களென்று துரியோதனன் சந்தேகித்து அவர்களைக்கண்டு பிடிக்கவேண்டிய முயற்சி செய்வானாதலால் அப்படிச் செய்யவொட்டாமற் செய்வதற்காகவும் எழுந்தருளினார். ஆதலால் சத்திராஜித்துக்கு இப்படிப்பட்ட ஆபத்து நேரிட்டது. சத்தியபாமையோ தகப்பனார் கொலையுண்ட துக்கம் பொறுக்கமாட்டாமல், அதிக கோபங் கொண்டவளாய் இரதத்தின் மேலேறிக்கொண்டு வாரணாவதத்துக்குப் போய்க் கண்ணுந் தண்ணீருமாய்க் கண்ணனைக் கண்டு, “என் பிராணநாயகனே! என்னைத் தேவரீருக்குக் கொடுத்து விட்டாரென்ற பொறாமையினாலே சததன்வா வந்து என் தகப்பனாரைச் சங்கரித்து விட்டுச் சூரியனைப்போல் இருளை நீக்கி யுலகத்தை விளக்கும்படியான இரத்தினத்தையுங் கொண்டுபோய் விட்டான். இது தேவரீருக்குச் செய்த அவமானமே யல்லாமல் வேறன்று. இதைத் திருவுள்ளத்திலாலோசித்து அதற்குப் பதிலென்ன செய்யக்கூடுமோ அதைச் செய்தருளவேண்டும்” என்று விண்ணப்பம் பண்ணிக் கொண்டாள். இதுகேட்டுச் சுவாமி திருவுளத்தில் உபேக்ஷை யுள்ளவராயிருந்தும் சத்தியபாமையின் விண்ணப்பத்திற்காகச் சத்துருக்களின்மேல் மிகக்கோபமூண்டு சத்தியபாமையை நோக்கி, “பெண்மணியே! நீ சொன்னபடி இஃது எனக்குச்செய்த அவமானந்தான். அந்தத் துராத்துமா இப்படிச் செய்ததை நான் சகிப்பேனோ? மரத்தைவிட்டு அதிற் கூடுகட்டிக்கொண்டிருக்கிற பக்ஷிகளைக் கொல்லக்கூடாதன்றோ? நீ யேன் என்முன் வீணாய்க் கதறிப்பேசுகிறாய்? வேண்டாம்நில்” என்று அவளைச் சமாதானப்படுத்தித் துவாரகைக்கு எழுந்தருளிப் பலராமரோடு ஏகாந்தத்திற் பேசினதாவது: “வேட்டைக்குப் போய்ச் சிங்கத்தின்கையி லடி

பட்டிறந்தான் பிரசேனன். சத்திராஜித்தும் சததனு வாவினு லிறந்தான். அவ்விருவரும் இறந்ததனுல் அம் மணிரத்தினம் நமக்குப் பொதுவா யிருக்கின்றது. மற்றொருவன் கொண்டுபோக நிமித்தமில்லை. ஆதலால் எழுந்திரும், தேரின்மேலேறிச் சததனுவாவைக்கொல் வதற்கு முயலும்" என்று தம்பி சொல்லக்கேட்டுப் பல ராமர் "அப்படியே யாகட்டும்" என்று அங்கீகரித்தார்.

இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ண ரிருவரும் பிரயத்தி னஞ் செய்திருப்பதை யறிந்து சததனுவா, கிருதவர்மா வினிடம்போய் தனக்குப் பக்கபலஞ் செய்யும்படிக் கேட்டுக் கொண்டான். அதற்குக் "கிருதவர்மாவான வன், கேளப்பா! நான் பலபத்திர வாசுதேவர்களோடு பகைக்கத் தக்கவனல்லேன் போ" என்றான். அது கேட்டு சததனுவா அக்குரூரனிடம் போய் அப்படியே சொல்ல, அவனும் "கேளப்பா! திருவடித் தாக்குதலி னலேயே பூமியையெல்லா நடுங்கச்செய்யுந் திற முடையவரும், தேவசத்துருக்களின் மனைவிகளைக் கைம்பெண்களாக்க வல்லவரும், எப்படிப்பட்டவர்க ளாலேயுந் தடைசெய்யக்கூடாத சக்கிராயுத முடைய வருமான ஸ்ரீகிருஷ்ணனேடும், மதத்தினுற் சுழல்கின்ற கண்களாற் பார்த்தமாத்திரத்தினலே சத்துரு சமூ கத்தை யெரிக்கவல்லவரும், மிகவும் பிரபலரான சத்து ருக்களாகிய மதயானைகளை வசப்படுத்துந் திறனேடு விளங்காநின்ற மாவெட்டிபோன்ற கலப்பை யாயுத முடையவருமான பலராமரோடும் யுத்தஞ்செய்ய உல கத் துதிக்கப்பெற்ற தேவர்களுக்குள்ளும் ஒருவனுகி லுஞ் சக்திமானில்லையே? அப்படிப்பட்டவர்களுக்கு எதிரில் நான் எவ்வளவு? ஆதலின் வேறு யாரையாகி லும் சரணமாகக்கொள்" என்று சொல்லிவிட்டான். அதுகேட்டுச் சததனுவா "ஓ அக்குரூரனே! நீயென் னைக் காக்கும்படியான திறனில்லாதவனென்று நினைத் தாலும் இந்த இரத்தினத்தையாவது என்கையிலிருந்து வாங்கிக் காப்பாற்றி வைக்கவேண்டும்" என்று வேண் டிக்கொள்ள, அக்குரூரன் "நல்லது அப்படியே யாகட் டும், நீ மிகுந்த துன்ப நேரிட்டபோதும் இந்த இரகசி யத்தை யாரோடுஞ் சொல்லாம லிருப்பையானுல் நான்

காப்பாற்றுகிறேன்" என்று சொன்னான். "அப்படியே யாகட்டும்" என்று சததனுவா ஒப்புக்கொள்ள, அக்குரூரனும் அந்த மணிரத்தினத்தை வாங்கிக் கொண்டான். பின்பு சததனுவாவானவன் ஒப்பற்ற வேகமுள்ளதாயும் நூறுகாதமளவும் இளையாமற் சுமக்குந் திறமுள்ளதாயுமிருந்த ஒரு பெண் குதிரையின்மேலேறிக்கொண்டு ஓடிப் போய்விட்டான்.

அவன் ஓடிப்போனானென்பதை யறிந்து பலதேவ வாசுதேவரிருவரும் சைனிய சுக்கிரீவ மேகபுஷ்ப வலாகங்களென்கிற நான்கு குதிரைகள் கட்டியிருக்கிற தேரின்மேலேறி அவனைப் பின்றொடர்ந்தார்கள். சததனுவா வானவன் ஏறிக்கொண்டுபோன பெண்குதிரை நூறுகாதவழி சுமந்துபோனபின்பும் செலுத்தப்பட்டபடியினாலே நடக்கமாட்டாமல் மிதிலா பட்டணத்தின் சமீபமான வொருவனத்தில் இறந்துபோயிற்று. ஆனதனால் சததனுவாவானவன் கால் நடையாக அப்புறமுமோடத் தலைப்பட்டான். அப்போது ஸ்ரீகிருஷ்ணன் தமயனாரோடு சொன்னதாவது "பதாதியா யோடிப் போன அந்த அதமனை நானும் பதாதியாகவே தொடர்ந்து ஓடிப்பிடித்துக் கொன்று வருகிறேன். அதுவரையில் நீர் இங்கேயே இந்தத் தேரிலே யிரும், இவ்விடத்தில் இக்குதிரைகள் குதிரை செத்திருப்பதைக் கண்டு மிக அச்சமுள்ளவைகளா யிருக்கின்றமையால் அவற்றை இவ்விடத்தினின்று மப்புறங் கொண்டுபோக வேண்டாம்" என்று தம்பி யுரைத்ததைக்கேட்டு, ஸ்ரீபலதேவரும் "அப்படியே யாகட்டும்" என்று இரதத்திலேயே எழுந்தருளி யிருந்தார். ஸ்ரீகிருஷ்ணனும் இரண்டு குரோசந் தாண்டிப்போய் தூரத்திற் காணப்பட்ட சததனுவாவைக் குறித்து அங்கிருந்தே சக்கிரத்தைப் பிரயோகித்து, அவன் சிரசைச் சேதித்துப் பின்பு அருகிற்சென்று அவனுடைய உடம்பையும் வஸ்திராதிகளையுஞ் சோதித்துப் பார்த்தும் சிமந்தகமணியைக் காணமல் திரும்பிவந்து தமையனாரோடு "அண்ணா! சததனுவாவை வீணாகத்தான் கொன்றோம். எவ்வளவு தேடியும் சகலலோக சாரபூதமான அந்த மகாரத்தினம் அகப்படவில்லை" என்று உரைக்கக்கேட்டுப் பலபத்திரர்

மிக வெகுண்டவராய்த் தம்பியைநோக்கி "இப்படி நீ பொருளுட்ட முடையவனாய்த் தீயவழியில் நடக்கின்றாய், சீச்சீ இப்படிப்பட்ட நீ நிந்திக்கத்தக்கவன், இதையெல்லாம் உடன்பிறந்த தோஷத்துக்கு நான் பொறுத்தேன். ஆதலின் இனி நீ உன்னிஷ்டப்படி எங்கேயாகிலும் போகலாம், நானுன்னுடன் சேரமாட்டேன். துவாரகைக்கும் வரமாட்டேன், எனக்குத் துவாரகையினாலாவது உன்னாலாவது மற்றுமுள்ள பந்துக்களினாலாவது ஆகவேண்டியதென்ன? என் எதிரில் வந்து என் அநேகம் பொய்ச் சத்தியங்கள் செய்கின்றாய்? உன் சரித்திரம் எவ்வளவும் நன்றா யிருக்கவில்லை" என்று நிந்தித்துத் திரஸ்காரஞ் செய்யக் கண்ணன் முடிவணங்கி வெகுவாய் வேண்டிக்கொண்டார். ஆகிலும் அவர் எவ்வளவும் சமாதானப் படாதவராய்த் தம்பியோடு பேசாமலே மிதிலாபட்டணம்போய்ச் சேர்ந்தார்.

அங்கே ஜனகமகாராஜன் அவரை அர்க்கியாதி உபசாரங்களினால் உபசரித்துத் தமது மாளிகைக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோகப் பலதேவரும் உவப்போடு அங்கேயே எழுந்தருளி யிருந்தார். அத்தருணத்தில் துரியோதனன் அஸ்திஞபுர பட்டணத்தினின்றும் அங்குவந்து பலபத்திரிடத்திற் கதாயுத்தாப்பியாசஞ் செய்துகொண் டிருந்தான். ஸ்ரீவாசுதேவரோ துவாரகைக்கு எழுந்தருளிவிட்டார்.

இவ்வாறு மூன்று வருஷகாலஞ் சென்ற பிறகு பப்புரு, உக்கிரசேனன் முதலான யாதவர்களெல்லாம் அம்மணியைக் கிருஷ்ணன் அபகரிக்கவில்லை யென்று தெளிந்தவர்களாய், அக்கருத்தைப் பற்றித் தம்பியினிடத்து மனமுறிந்து மிதிலையி லெழுந்தருளியிருக்கிற பலராமர் சன்னிதிக்குச்சென்று அவருக்கு நம்பிக்கையுண்டாகும்படி சொல்லித் துவாரகைக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்தார்கள். அக்குரூரரோ அந்தச் சிமந்தகமணியின் மகிமையால் உண்டாகின்ற பொன்னைக்கொண்டு எம்பெருமானிடத்திற் சித்தநிலையுள்ளவராய் எப்போதும் யாகங்கள் செய்துகொண்டு வந்தார். "யாகஞ் செய்துகொண்டிருக்கையில் க்ஷத்திரியனையா

வது வைசியனையாவது கொன்றவன் பிரமஹத்தி தோஷ மடைவான்" என்று சாஸ்திரமிருக்கிற நம்பிக்கையினால் ஸ்ரீகிருஷ்ணனாலே தனக்கு யாதொரு துன்பமும் நேரிடமாட்டாதென்றெண்ணி அக்குரூரர் யாகதீக்ஷையாகிற கவசத்தைப் பூண்டு நின்றார். அவ்வரதனத்தின் பிரபாவத்தினாலே அவ்விடத்தில் அறுபத்திரண்டு வருஷகாலம் வியாதிகளும் பஞ்சமும் கொள்ளைநோயும் உண்டாகாம லிருந்தன.

இப்படியிருக்கச் சத்துவதனுடைய பேரனுக்குக் குமாரனான சத்துருக்கினனை அக்குரூரரைச் சேர்ந்த போஜர்கள் சங்கரித்து விட்டதனால் சாத்துவதருடைய பகையை வைத்துக்கொண்டு துவாரகையில் வாசஞ்செய்வது நியாயமன்றென்று எண்ணி அக்குரூரர் தன்னினத்தாரோடுகூட துவாரகையைவிட்டு அப்புறம் போய்விட்டார். அவர் அப்பட்டணம் விட்டுப் போனதுமுதல் அங்கே வியாதி பஞ்சம் முதலான சகலவுபத்திரவங்களு முண்டாய்க் கொண்டே வந்தன. இதைக்கண்டு யாதவர்களெல்லாம் பலபத்திரர் உக்கிரசேனன் முதலானவர்களோடு சேர்ந்து இதன் காரணத்தை ஆலோசிக்கத் தொடங்கினார்கள். அச்சங்கத்தில் கருடத்துவஜனான சுவாமி மற்றவர்களை நோக்கி, "இஃதென்ன இவ்விடத்தில் அநேக துன்பங்கள் ஒருமிக்க வந்து சேர்ந்தன. இதை யாலோசியுங்கள்" என்று அருளிச்செய்ய, அந்தகனென்னும் பெயர்கொண்ட யாதவ மூப்பனொருவன் சொல்லத்தொடங்கினான்:—

"கேளுங்கள், யாதவர்களே! அக்குரூரனுடைய தந்தை சுவபல்கனென்பவ னிருந்தானே, அவனிருந்த விடத்திலெல்லாம் துர்ப்பிக்ஷாதி யுபத்திரவம் உண்டானதில்லை; ஒருகால் காசிராஜனுடைய ராச்சியத்தில் மழையில்லாமல் துன்பம் நேரிட, சுவபல்கனை அவ்வரசன் தன்னிராச்சியத்திற்கு அழைப்பித்தான். அதனாலே மழைபெய்து இராச்சியத்திற் க்ஷேமமுண்டாயிற்று; அந்தக் காசிராஜனுக்கு ஒரு மகளிருந்தாள். அவளைத் தன்னிராச்சியத்திற்கு நன்மை செய்ததற்காகக் காசிராஜன் சுவபல்கனுக்குக் கொடுத்தான்;

அவள் கருப்பத்திலிருந்து பிரசவகாலம் நேர்ந்த போதும் வெளிக்கு வாராமல் தாய்க்கு அதிக துன்ப முண்டாக்கிக் கொண்டிருந்தாள். இப்படியே பன்னிரண்டு வருஷகாலஞ் சென்றன; இப்படியிருக்க அவ்வரசன் கருப்பத்திலிருந்த சிசுவைக்குறித்து, "மகளே! நீயேன் இன்னும் பிறக்கவில்லை? சீக்கிரம் வெளியில்வா உன் முகத்தைப் பார்க்க விரும்புகின்றேன், உன் தாயை நெடுநாள் ஏன் வருத்துகின்ருய்?" என்று சொல்ல, வயிற்றிலிருந்த அக்கன்னிகை "ஐயா! இதுமுதல் தினந் தோறும் ஒவ்வொரு பசுவைப் பிராமணருக்குத் தானஞ் செய்து வருவீராயின் மூன்று வருஷங்கழித்து நான் வெளிப்படுவேன்" என்று சொன்னதைக் கேட்டு, அந்தப் பூபதி அப்படியே தினந்தோறும் ஒரு கோதானஞ் செய்துவந்தான். குறித்த காலத்திற் கன்னிகையும் பிறந்தாள். தினந்தோறுங் கோதானஞ் செய்ததனுற் பிறந்தாளென்பது கொண்டு பிதா மகளுக்குக் காந்தினியென்று பெயரிட்டான். அப்படிப்பட்டவள் வயிற்றில் இப்படிப்பட்ட சுவபல்கனுக்குப் பிறந்தவன் அக்குரூரன்; இப்படிப்பட்ட சுத்தமான பிறப்பும் நல்லொழுக்கமுமுள்ளவன் இங்கு நின்று நீங்கினதனுல் இவ்வுபத்திரவங்களெல்லா முண்டாகின்றன; குணவானிடத்திற் குற்றம் பாராட்டல் தகுதியன்று. ஆகையால் அக்குரூரனை இங்கேவரும்படிச் செய்ய வேண்டும்" என்று விருத்தன் சொன்னதைக் கேட்டு இராமகிருஷ்ண உக்கிரசேனுதியர் அவனிடத் தபராதத்தைப் பொறுத்து அவனுக்கு அபயங்கொடுத்துத் துவாரகைக்குச் சுவபல்க குமாரனை அக்குரூரனை அழைத்துக்கொண்டு வந்தார்கள். அவர் வந்தமாத்திரத்திலேயே சிமந்தகமணியின் பிரபாவத்திஞலே மழையின்மை கொள்ளைநோய் முதலான துன்பங்கள் நீங்கிப் போய்விட்டன.

அப்போது சுவாமி அக்குரூரனுக்கு இவ்வளவு மகிமையிருப்பதற்கு இவன் சுவபல்கனுக்குக் காந்தினியினிடத்திற் பிறந்தா னென்பது போதுமான காரணமன்று; இது மிக அற்பம்; மழையின்மை முதலிய துன்பங்களை நீக்கும்படியான மகிமையோ மகா

யோகிகளுக்கும் அருமை யாதலால் காரியம் மிகப் பெரிதா யிருக்கின்றது; ஆதலால் அந்த மகா ரத்தினம் இவனிடத்தி லிருக்கவேண்டும்; சந்தேகமில்லை; அதற் குத்தான் இப்படிப்பட்ட மகிமையுண்டென்று அறிந் திருக்கிறோம்; மேலும் இந்த அக்குரூரன் யாகத்தின் மேல் யாகமாய் இடைவிடாமற் செய்துவருகின்றான்; இதற்கெல்லாங் காரணம் வெகுபொருளைக் கொடுக்கத் தக்கதான அந்த அரதனந் தவிர வேறில்லை; ஆகை யால் அந்த மகாரத்தினம் இங்குள்ள அக்குரூரனை விட்டுப்போனதன்று" என்று உறுதியான அபிப்பிராய முள்ளவராய் வேறொரு காரியத்தைச் சாக்கிட்டு யாதவர் களையெல்லாந் தமது திருமாளிகையிலே சங்கங்கூட் டினார். யாவரும் கூடினபின்பு சொல்லவேண்டிய சங்கதியைச்சொல்லி நிறைவேற்றினவுடனே வேறொரு சங்கதியைக் கொண்டுவந்து, சில பரிஹாச வார்த்தைக ளோடு சுவாமி அக்குரூரனை நோக்கி "ஓ தானபதியான அக்குரூரரே! சததனுவா அந்தச் சிமந்தகமணியை உமக்குக் கொடுத்தது நமக்குத் தெரியும், அந்த மகாபிர பாவமுள்ள இரத்தினம் உம்மிடத்திலிருக்கிறது, அப் படியே யிருக்கட்டும், அதின் பிரயோஜனத்தை இவ் விராச்சியத்தில் நாமெல்லாம் அநுபவித்து வருகின் றோம். ஆனால் நம்முடைய பலபத்திரருக்கு அதை நான் எடுத்துக்கொண்டதாய் ஒரு நினைப்பிருக்கின்றது. அதற்காக அதனை என்னிடத்தில் அனுக்கிரகம் வைத் துக் காண்பிக்கவேண்டும்" என்று அருளிச்செய்து வாய் மூடிக்கொண்டு எழுந்தருளியிருந்தார். அதுகேட்டு அக் குரூரர் "இப்போது நாம் என்னசெய்கிறது? இல்லை யென்றோமானால் அப்படி யிப்படி நம்முடைய வஸ் திரங்களைச்சோதித்து இரத்தினத்தைச் சுவாமி எடுப்பார், பின்போ அவருக்கு விரோதியாகின்றோம், அது நல்ல தன்று" என்று ஆலோசித்துச் சகல ஜகத்காரணரான ஸ்ரீவாசுதேவனை நோக்கி விண்ணப்பஞ் செய்யலாயினார்.

"சுவாமி! சிமந்தகத்தைச் சததனுவா அடியேனுக் குக்கொடுத்தான். அவன் போனபின்பு இன்றைக்கோ நாளைக்கோ சுவாமி கேட்பாரென்று நினைத்துக்கொண்டு மிகவும் வருந்தியே இத்தனைநாள் வரையில் இதனைத்

தரித்திருந்தேன். அதைத் தரிக்கும் வருத்தத்தினால் சகல போகங்களிலும் மனப்பற்றில்லாதவனாகிச் சிறிதும் சுகமறியா திருக்கின்றேன். பகவானே! இந்த இரத்தினத்தைத் தரித்துக்கொண்டாகிலும் இராச்சியத்துக்கு க்ஷேமத்தை யுண்டாக்கு முபகாரத்தைச் செய்ய மாட்டாமல் நம்முடைய கையிற் கொண்டுவந்து கொடுக்கின்றானேயென்று தேவரீர் நினைப்பீரே யென்கிற பயத்தினால், நானே வலுவிலே இதை இத்தனை நாளும் தேவரீர் சந்நிதியிற் சமர்ப்பியாம லிருந்தேனே யல்லாமல் வேறன்று; ஆதலால் இப்போது இந்த இரத்தினத்தைத் திருவுள்ளம் பற்றி யாருக்காகிலும் திருவுளளத்தின்படி கொடுக்கலாம்" என்று விண்ணப்பஞ்செய்து, தமது மடியில் வஸ்திரத்தில் முடிந்து வைத்திருந்த மிகச்சிறிய பொற்சிமிழை யெடுத்து அந்தச்சபையிலேயே அதைத்திறந்து அந்த இரத்தினத்தை வைத்தார். எடுத்து வைத்தபோதே அந்தச் சபையெல்லாம் அதன் காந்தியினால் பளபளவென விளங்கிற்று. இவ்வாறு அக்குரூரர் இதனை வெளியி லெடுத்து வைத்து "இந்தச் சியமந்தகமணியைச் சததனுவா எனக்குக் கொடுத்துப்போனான். இதோ அதை யிங்கே வைத்துவிட்டேன். இஃதுயாருக்குச் சேரவேண்டியதோ அவர் எடுத்துக் கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டார். அதைக்கண்டு சகல யாதவர்களும் "நன்றாயிருக்கின்றது, நன்றாயிருக்கின்றது" என்று களகளப்பாய்ப் பேசினார்கள். பலபத்திரர் "இம்மணி நமக்கும் தனக்கும் பொதுவாயிருக்கட்டும் என்று கிருஷ்ணரே யங்கீகரித் திருக்கின்றானன்றோ" என்று அதன்கண் அவாவுற்றிருந்தார். சத்தியபாமையோ "நமக்கிது பிதுருதனமன்றோ? ஆதலின் நமக்கு" என்று ஆசைகொண்டிருந்தாள். கண்ணன் இவ்விருவருடைய கருத்தையு மறிந்து எருதுக்கும் சக்கரத்திற்கும் நடுவிலகப்பட்ட ஜந்துவைப்போல் மிகவும் மனச்சங்கடப்பட்டு யாதவர்களெல்லாம் கேட்கும்படி அக்குரூரரை நோக்கி, "கேளும் அக்குரூரரே! இப்போது இந்த மணிரத்தினத்தை நான் யாவர்க்கு மெதிரில் எடுத்துக் காண்பிக்கச் சொன்னது ஏதுக்கென்றால், நான் அதனை யபகரித்

திருக்கிறேனென்று சிலருக்குண்டாயிருக்கிற எண்ணத்தை மாற்றி யான் பரிசுத்தனானவன் என்று நிரூபிப்பதற்கே யன்றி மன்றொன்றிற் கன்று; இதுவோ என் தமயனாருக்கும் எனக்கும் பொதுத்தான், நன்றாயோசித்தால் இது சத்தியபாமைக்குப் பிதுரு தனமானதுபற்றி அவளுக்கே யுரியது. இதனால் சகலராச்சியத்திற்கும் விசேஷ நன்மையுண்டு. அதற்காக இதை மகா பரிசுத்தனாய்ப் பிரமசாரி விருதத்தை யனுஷ்டிப்பவனே தரித்திருக்கவேண்டும். அசுத்தனாயிருப்பவன் தரிப்பனாகில் அவனுக்கே தீங்குண்டாகும். நானோ பதினாயிரம் பெண்டீர்களை வைத்துக்கொண்டிருக்கிறேனாகையால் இம் மணியை வைத்திருக்க யோக்கியனல்லேன். சத்தியபாமை தான் எப்படித் தரிக்கமாட்டுவாள்? பலபத்திரரோ இதைத் தரிப்பதற்காகச் சுராபான முதலான போகங்களை யிழக்கவேண்டியவராய் இருக்கின்றார். ஆதலின் ஓ தானபதியே! இந்த யாதவகூட்டமும் பலராமரும் நானும் சத்தியபாமையும் உம்மைப்பிரார்த்திப்பதென்னவெனில், இத்தனை நாளும்போலே இனிமேலும் சகல இராச்சிய க்ஷேமார்த்தமாய் நீரே தரித்திருக்கவேண்டும், மறுத்தொன்றுஞ் சொல்லவேண்டாம்" என்று பகவான் அருளிச்செய்ததைக்கேட்டு, அக்குரூரர் "சுவாமி நிய மனத்துக்கு அடியேன் மாறாய் நடக்கக்கடவேனல்லேன், ஆதலின் அப்படியே யாகட்டும்" என்று அந்த அரதனத்தை எடுத்து,தமது கழுத்தில் தரித்துக்கொண்டு சூரியன்போலே மகாவிளக்கத்தோடு சஞ்சரித்துக்கொண்டிருந்தார்.

மயித்திரேயரே! இவ்வாறு ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு நேர்ந்த வீணபவாத நீக்கத்தை நினைப்பவர்களுக்கு ஒருபோதும் அபவாதம் கிஞ்சித்தும் நேரிடுவதில்லை; கரணகளேபரங்கள் மெலிவுறாமல் வாழ்ந்திருந்து சகல பாபங்களினின்றும் விடுபடுவார்கள்.

பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

## பதிநான்காம் அத்தியாயம்

# அனமித்திரவம்ச சரித்திரம்

அனமித்திரனுடைய மகன் சினி என்பவ னிருந்தான். அவனுக்குச் சத்தியகன் பிறந்தான். சத்தியகனுடைய மகன் சாத்தியகி. அவனுக்கு யுயுதானனென்கிற பெயருமுண்டு. அவனுக்குச் சஞ்சயனென்பவன் பிறந்தான். அவனுக்குக் குணி பிறந்தான். குணிக்கு யுகந்தரன். இவர்கள் தாம் சைனேயர்.

அனமித்திரனுடைய குலத்திலே விருஷ்ணியென்பவ னுண்டானான். அவன் குமாரன் சுவபல்கன். அவன் பிரபாவத்தை உமக்கு முன்பே சொன்னேன். அந்தச் சுவபல்கனுக்குச் சித்திரகன் என்று தம்பி யொருவனுண்டு. சுவபல்கனுக்கு அக்குரூரன் என்பவர் காந்தியினிடத்திற் பிறந்தார். அந்தச் சுவபல்கனுக்கே மற்றொருத்தியின் வயிற்றில் உதமத்கு என்பவ னொருவன் பிறந்தான். அவ்வுபமத்குவுக்கு மிருதாமிருதன், விசுவன், அரிமேஜயன், கிரிக்ஷத்திரன், உபக்ஷத்திரன், சத்துருக்கினன், அரிமர்த்தனன், தருமதிருக்கு, திருஷ்டதருமன், கந்தமன், ஓஜவாஹன் என்கிற புத்திரரும், சுதாரை என்கிற கன்னிகையும் உண்டானார்கள். அக்குரூருக்கு தேவவான், உபதேவன் என்பவர்கள் சனித்தார்கள். சித்திரகன் என்பவனுக்கு பிருது, விபிருது முதலிய மக்கள் அநேகருண்டானார்கள். முன்சொன்ன சத்துவத குமாரனான அந்தகனுக்குக் குகுரன், பஜமான், சுசி, கம்பலன், பார்ஹிஷதன் என்று நால்வர் உதித்தார்கள். அவருள் குகுரனுக்குத் திருஷ்டன் ஜனித்தான். அவனுக்குக் கபோதரோமா. அவனுக்கு விலோமா. அவனுக்குத் தும்புருவென்னும் கந்தருவனுடைய மித்திரனான அநு என்பவன் பிறந்தான். அநுவுக்கு ஆனகதுந்துபி, அவனுக்கு அபிஜித்து, அபிஜித்துவுக்குப் புனர்வசு, அவனுக்கு ஆகுகன் என்கிற மகனும், ஆகுகி என்கிற மகளுமுண்டானார்கள். ஆகுகனுக்குத் தேவகன் உக்கிரசே

னன் என்று இரண்டு புத்திரர். அவருள் தேவகனுக்கு தேவவான், உபதேவன், சகதேவன், தேவரக்ஷிதா என நால்வர் புத்திருண்டு. அவர்களுக்கு விருக தேவை, உபதேவை, தேவரக்ஷிதை, ஸ்ரீதேவை, சாந்தி தேவை, சகதேவை, தேவகி என்று ஏழுடன் பிறந்தார்களுண்டு. அவ்வேழு பெண்களையும் வசுதேவர் கலியாணஞ் செய்துகொண்டார். உக்கிரசேனனுக்கும் கம்சன், நியக்ரோதன், சுநாமா, அனகாஹ்வன், சங்கு, சுபூமி, ராஷ்டிரபாலன், யுதததுஷ்டி, சுதுஷ்டிமான் என்கிற குமாரர் பிறந்தார்கள்; அன்றியும், கம்சை, கம்சவதீ, சுதனு, இராஷ்டிரபாலிகை என்று நால்வர் பெண்பிள்ளைகளும் பிறந்தார்கள். பசமானனென்பவனுக்கு விடூரதனென்னும் புத்திரனுண்டானன். விடூரதனுக்குச் சூரன், சூரனுக்குச் சமி, சமிக்குப் பிரதிக்ஷத்திரன், அவனுக்குப் போஜன், அவனுக்கு இருதிகன், அந்த இருதிகனுக்குக் கிருதவர்மா, சததனு, தேவார்ஹன், தேவகர்ப்பன் முதலான சிலகுமாரருண்டானர்கள். அவருள் தேவகருப்பனுக்குச் சூரனென்பவன் பிறந்தான். அந்தச் சூரனுக்கு மாரிஷை யென்னு மனைவியிருந்தாள். சூரன் மாரிஷை யென்பவளிடத்திலே வசுதேவன் முதலான பத்துப்பிள்ளைகளைப் பெற்றான். அந்த வசுதேவர் பிறக்குங்காலத்திலே தேவதைகள் இவரிடமாய்ச் சுவாமி திருவவதாரஞ் செய்வதை யறிந்து ஆனகம், துந்துபி என்கிற வாத்தியங்களை முழக்கினர்கள். அதனல் வசுதேவருக்கு ஆனகதுந்துபி என்கிற நாமதேய முண்டாயிற்று. அந்த வசுதேவருக்குத் தேவபாகன், தேவசிரவன், அஷ்டகன், கருச்சக்கிரன், வச்சதாரகன், சிருஞ்சயன், சியாமன், சமிகன், கண்டூஷன் என்கிற ஒன்பது சகோதரர்களும், பிருதை, சுருததேவை, சுருதகீர்த்தி, சுருதசிரவை, இராஜாதிதேவி என்கிற ஐந்து சகோதரிகளுமிருந்தார்கள். சூரமகாராஜனுக்குக் குந்தி யென்று மித்திரனொருவ னிருந்தான். அவன் அபுத்திரனயிருந்ததனலே சூரன் பிருதை யென்னுந் தன் தலைமகளை மகளாகத் தத்தஞ்செய்தான். அந்தப் பிருதை யென்பவளைப் பாண்டுமகாராஜன் விவாகஞ்

செய்துகொண்டான். அவளுக்கு, தருமன், வாயு, இந்திரன், இவர்களினுலே யுதிஷ்டிரன், பீமசேனன், அர்ச்சுனன் என்கிற மூன்று குமாருண்டாக்கப்பட்டார்கள். அன்றியும் அவள் கன்னிகையா யிருந்தகாலத்திலே சூரியபகவானுலே கர்ணனென்பவனுண்டாக்கப் பட்டிருந்தான். அக் குந்திக்கு மாத்திரியென்று சக்களத்தி ஒருத்தியிருந்தாள். அவளுக்கு நாசத்தியன், தசிரன் என்கிற தேவர்களால் நகுலன், சகதேவன் என்னு மிரண்டு குமாருண்டாக்கப்பட்டார்கள். குந்தியின் சகோதரியான சுருததேவையை யென்பவளைக் காருச தேசத்து இராஜனுன விருத்ததர்ம மகாராஜன் விவாகஞ் செய்துகொண்டான். அவள் வயிற்றில் தந்தவக்கிரன் என்கிற மகா அசுரன் பிறந்தான். சுருதகீர்த்தியைக் கேகயராஜன் கலியாணஞ் செய்துகொண்டான். அவள் வயிற்றில் சந்தர்த்தனன் முதலான ஐவர் குமாரர் பிறந்தார்கள். இராஜாதி தேவியானவள் அவந்திராஜனுக்கு மனைவியாகி விந்தன், அனுவிந்தன் என்பவர்களைப் பெற்ருள். சிருதசிரவசு என்பவள் சேதி தேசத்திராஜனுகிய தமகோஷனுக்குப் பத்தினியாகிச் சிசுபாலனென்கிற குமாரனைப் பெற்ருள்.

அவன் முற்காலத்தில் அசுரருக்கெல்லாம் அரசனுயிருந்த இரணியகசிபு என்பவன். அவன் சகல லோக குருவான ஸ்ரீநரசிம்ம மூர்த்தியால் சங்கரிக்கப்பட்டு மறுபடியும் அளவற்ற வீரிய சௌரிய பராக்கிரம சம்பத்துக்களை யுடையவனுய் மூன்றுலகத்தாரையுந் தன் வசப்படுத்தி யாளுந் திறனுள்ள இராவணனுகப் பிறந்தான். அப்போது வெகுகால மனுபவிக்கப்பட்டதும் எம்பெருமானுலே நேர்ந்த சரீர நாசத்தினு லுண்டானதுமான புண்ணியவசத்தினுலே ஸ்ரீராமாவதாரஞ் செய்த எம்பெருமானுலேயே சங்கரிக்கப்பட்டான். அவன் சிசுபாலனுய்ப் பிறந்தபோதும் பூமிபாரந் தீர்க்கும் பொருட்டு அவதரித்தருளிய தாமரைக்கண்ணனை பகவானிடத்திலே பகைமைபாராட்டி வந்தான். அதனுல் அக்கண்ணனுலேயே சங்கரிக்கப்பட்டு எப்போதும் அவ்வெம்பெருமானையே நினைத்திருந்ததனுல் அந்தப் பரமாத்துமாவினிடத்திலே சாயுச்சியம்

பெற்றான். எம்பெருமான் பக்தியோடு தன்னைத் தியானிப்பவர்களுக்குத் திருவுள்ள முவந்து மோக்ஷமளிப்பது போலவே விரோதத்தினாலே யாகிலும் தன்னை யிடைவிடாது நினைத்திருந்தவர்களுக்கும் * திருவுள்ள முகக்காமலே அந்த மோக்ஷத்தையே யளிக்கின்றான்.

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினைந்தாம் அத்தியாயம்

# சிசுபால மோக்ஷகாரணமும் பகவானுடைய திருவமிசமும்

மயித்திரேயர் வினவுகிறார்:- "பராசர மகாமுனிவரே சிசுபாலன் இரணியகசிபுவா யிருந்தபோதும் இராவணனா யிருந்தபோதும் ஸ்ரீ விஷ்ணுபகவானாலே சங்கரிக்கப்பட்ட புண்ணியத்தினாலே மகா போகபாக்கியங்களைப் பெற்றிருந்தானே யல்லது சாயுச்சியத்தை யடையவில்லையே; அப்படியிருக்க, இப்போது மாத்திரம் சாயுச்சியத்தை யடைந்த விதமென்ன? இதை அறிய மிகவும் விருப்பத்துடனிருக்கிற அடியேனுக்கு இதை விளக்கி யருளவேண்டும்; தேவரீர் சகல தருமங்களையு மறிந்தவர்களுக் கெல்லாம் சிரேஷ்ட ராதலால் இவ் விஷயத்தின் உண்மையையும் அறிந்திருக்கிறீர் அல்லவா?" என்று வேண்டி வினவின சிஷ்யருக்கு ஆசாரியர் அருளிச் செய்யலாயினார்:—

கேளும்; மயித்திரேயரே! † ஸகலலோகங்களுக்குஞ் சிருஷ்டி ஸ்திதி சம்ஹார கர்த்தாவான சுவாமி

---

* எவ்விதத்திலும் சேதனரை உஜ்ஜீவிப்பது எம்பெருமானுடைய சுபாவமென்பது கருத்து.

† சுவாமியின் துவாரபாலகர் சாபத்தினால் இரணியகசிபு முதலாக மூன்று ஜனனமெடுத்துக் கடைசியில் முத்தியடையும்படி அனுக்கிரகமும் இருந்ததனாலே அப்படி நடந்தாலும், அதற்குக் காரணமான தியான சங்கீர்த்தனாதிகளும் பகவத் கடாக்ஷத்தினாலுண்டாயிருந்தன வென்பதை அருளிச் செய்த மகாரிஷியின் திருவுள்ள மென்னவென்றால், ஏதேனுமொரு வியாஜத்தை யபேக்ஷிக்கு மெம்பெருமான் த்வேஷாதிகளினாலாவது செய்யுள் நாம சங்கீர்த்தனாதிகளையுந் திருவுளம்பற்றி யருளும்படியான சிறந்த உதாரணகுணத்தினால் என்பதேயாம்.

ஹிரணியகசிபுவைச் சங்கரிக்கும்பொருட்டு நரசிம்மாவதாரஞ் செய்கையில், அவ்வசுரனுக்கு இவர் ஸ்ரீமகாவிஷ்ணுவென்கிற அறிவு உண்டாயிராமல், புண்ணிய வசத்தினல் மகிமைபெற்ற ஒரு ஜெந்து என்கிற நினைப்பே யுண்டாயிருந்தது; ஆதலால் அவ்வசுரன் இரஜோ குணத்தின் மிகுதியால் அப்படிப்பட்ட விபரீத பாவனையைப் பெற்றிருந்து, நரசிம்ம மூர்த்தியாலே சங்கரிக்கப்பட்ட புண்ணியத்தின் காரணமாய் மூவுலகங்களையும் ஆளத்தக்க மேன்மையான செல்வத்தைப் பெற்றனேயல்லது, ஆதிமத்தியாந்த ரஹிதனும் பரப்பிரமமாயும் இருக்கிற பகவானிடத்தில் லயமடையவில்லை. இப்படியே இராவணனுயிருக்கையிலும் அவன் காம பரவசனாகிச் சீதாபிராட்டியினிடத்தில் மிக அன்புள்ள ஸ்ரீராமரூபியான எம்பெருமானலே வதைசெய்யப் பட்டபோதும் அவனுக்கு அந்த ஸ்வாமியிடத்தில் எம்பெருமானென்கிற ஞானமுண்டாகாமல் மனுஷியனென்ற ஞானமே யுண்டாயிருந்தது. மறுபடியும் எம்பெருமானலே வதைசெய்யப்பட்ட சுகிருத மகிமையினல் சேதியரசகுலத்திற் பிறந்து பூமண்டலத்தோர் கொண்டாடும்படியான ஐசுவரியத்தைப் பெற்றான். ஆனல் அந்தச் சனனத்தில் எம்பெருமானுடைய சகலமான திருநாமங்களையும் நிந்திப்பதற்குக் காரணமானன். எப்படியென்றால், அநேக சன்மங்களால் வளர்ந்துவந்த மிகுந்த பகையைப்பற்றி எம்பெருமானுடைய சகலமான திருநாமங்களையும் நிந்திப்பதிலும் வெருட்டுவதிலும் மற்றுமுள்ள செய்கைகளிலும் உச்சரித்து வந்தான். மேலும் மலர்ந்த செந்தாமரைப் பூவோடொத்த திருக்கண்களுள்ளதும், பிரகாசித்துக்கொண்டிருக்கிற பீதாம்பரத்தைத் தரித்ததும், திவ்விய கிரீட கேயூர ஹார கடகங்கள் முதலான திருவாபரணங்களை யணிந்ததும், திரண்டு பருத்து நீண்ட நான்கு திருக்கைகளோடும் திருவாழி திருச்சங்கு முதலிய திவ்வியாயுதங்களோடுங் கூடி விளங்கிக்கொண்டிருப்பதுமான அந்தக் கண்ணனுடைய திவ்விய ரூபத்தையே, உண்கையிலும் இருக்கையிலும் படுக்கையிலும் உலாவுகையிலும் மஞ்சன

மாடுகையிலும் மற்றெல்லா வவஸ்தைகளிலும் விடாமல் ஓரேபிடிப்பாய் மனதில் நினைத்திருந்தான். அதனால் எங்கு மந்தத் தோற்றமே விளங்கப்பெற்று, கோபதாபாதிகளில் அவனையே உச்சரித்து, அந்தப் பாவனையே பொருந்தினவனாய்த் தன்னைச் சங்கரிக்கும்பொருட்டு எறியப்பட்ட திருவாழியின் காந்திமாலைகளினாலே சொலித்துக் கொண்டு, அழியாத தேஜோரூபமாயும் பகை முதலிய குற்றங்களற்றதாயும் பரப்பிரமமாயும் உள்ள அந்தப் பகவானுடைய சொரூபத்தை எப்போது உள்ளபடி கண்டானோ, அந்தக் காலத்தில் எம்பெருமானுடைய திவ்விய சக்கரத்தினாலே சிசுபாலன் சங்கரிக்கப்பட்டவனாய், அவ்வெம்பெருமானுடைய ஸ்மரணாதிகளாலே சகல பாபங்களும் நசிக்கப்பெற்று, ஸ்ரீமந் நாராயணனிடத்திலேயே லயத்தை யடைந்தான்.

மயித்திரேயரே! சிசுபால மோக்ஷத்தைதப்பற்றின விஷய முற்றிலும் உமக்கு நன்றாய்ச் சொன்னேன்; எம்பெருமான் பகைபற்றியாவது சங்கீர்த்தனஞ் செய்பவர்களுக்கும் நினைப்பவர்களுக்கும் சுராசுரர்களு மடையமாட்டாத பெரும்பயனை அளிப்பனானால் நன்றாய்ப் பக்தி செய்பவர்களுக்கு அளிக்கக் கேட்கவேண்டுமோ?

இந்தச் சங்கதி யிருக்கட்டும். ஆனகதுந்துபி என்கிற வசுதேவருக்குப் பௌரவி, ரோஹிணி, மதிரை, பத்திரை, தேவகீ முதலாக அநேக பத்தினிகள் உண்டு. அவருள் உரோகிணிக்குப்பலபத்திரன், சடன், சாரணன் துர்மதன் முதலான புத்திரர் உண்டானார்கள். பலபத்திரரும் இரேவதியினிடத்தில் விசேடன், உல்முகன் என்ற பிள்ளைகளைப் பெற்றார். சாரணனுக்குச் சாஷ்டி, மாஷ்டி, சிசு, சத்தியன், சத்தியதிருதி முதலான புத்திரர் உண்டானார்கள். பத்திராசுவன், பத்திரபாகு, துர்த்தமன், பூதன் முதலானவர்களும் உரோகிணியின் வமிசத்திற் பிறந்தவர்கள். மதிரை யென்பவளுக்கு நந்தன், உபநந்தன், கிருதகன் முதலான சிலமக்கள் பிறந்தார்கள். பத்திரைக்கும் உபநிதி, கதன், முதலிய குமாருண்டு. வைசாலி யென்பவளுக்குக் கௌசிகன் என்ற மகன் ஒருவன் உண்டானான். * தேவகியி

ணிடத்திலும் கீர்த்திமான், சஷேணன், உதாயு, பத்திரசேனன், இருஜு*தாசன், பத்திரதேவன் என்ற ஆறுபிள்ளைகள் பிறந்தார்கள்; அவர்கள் யாவரையும் கம்சன் கொன்றான். பின்பு ஏழாவது கர்ப்பத்தை எம்பெருமானுடைய நியமனத்தின்படியே யோகநித்திரையானது நள்ளிரவில் தேவகியின் வயிற்றினின்றும் பெயர்த்து உரோகிணியின் வயிற்றிலே சேர்த்துவிட்டது. அப்படி யிழுக்கப்பட்டதினால் அந்த ஏழாவது பிள்ளைக்கு ஸங்கர்ஷணன் என்கிற திருநாமமுண்டாயிற்று. [ஸங்கர்ஷணம் - இழுத்தல்.]

பின்பு சகல லோகங்களாகிய மகாவிருட்சங்களுக்கு வேராயும், இருந்தவர்களு மிருப்பவர்களுமான சகல சுராசுர முனி ஜனங்களுடைய மனதுக்கும் எட்டாதவனும், ஆதிமத்தியாந்தரகிதனும், சகலகுண ஐசுவரிய சம்பன்னனுமுள்ள ஸ்ரீவாசுதேவன், பிரமா முதலான சகல தேவதைகளினாலும் பூமிபாரத்தை நீக்கும் பொருட்டுப் பிரார்த்திக்கப்பட்டவனாய்த் தேவகியின் கர்ப்பத்தில் எழுந்தருளினான். எம்பெருமானுடைய அனுக்கிரகத்தினால் வளரப்பெற்ற மகாமகிமையுள்ள அந்த யோகநித்திரையும் நந்தகோபனுடைய பத்தினியான யசோதையின் வயிற்றிலே பிறந்தது. அந்தத் தேவகி கர்ப்பத்தினின்றும் அத்தாமரைக்கண்ணனான எம்பெருமான் திருவவதரித்தபோது சகல உலகமும் தெளிந்த பிரகாசமுள்ள சூரியசந்திராதி கிரகங்களுள்ளதாகவும் சர்ப்பாதி பயமில்லாததாகவும் சொஸ்தமான மனதுள்ளதாகவும் அதர்மம் நீங்கினதாகவும் ஆயிற்று. அந்தச் சுவாமி யவதரித்து யாவரையும் ஸன்மார்க்கஸ்தராகத் திருத்தி யருளினார்.

இவ்வாறு பூலோகத்தி லவதரித்த எம்பெருமானுக்குப் பதினாயிரத்து நூற்றொரு பத்தினிகள் இருந்தார்கள். அவர்களுள் உருக்குமணி, சத்தியபாமை, ஜாம்பவதி, சாருஹாசினி முதலான எண்மர் முக்கியமானவர்கள். இப்பத்தினிகள் யாவரிடத்தும் சகலரூபியான எம்பெருமான் இலக்ஷத்தெண்பதினாயிரம்

* இப்பெயர்கள் அவர்களுக்குப் பூர்வஜன்மத்தி லிருந்தவைகள்.

பிள்ளைகளை யுண்டாக்கினர். அந்தப் பிள்ளைகளுக்குள் பிரத்தியும்னன், சாருதேஷ்ணன், ஸாம்பன் முதலான பதின்மூவர் பிரதானமானவர்கள். அந்தப் பிரத்தியும்னன் உருக்குமியின் மகளாகிய உருக்குமவதி யென்பவளைக் கலியாணஞ்செய்து அனிருத்தனென்னும் புத்திரனைப்பெற்றான். அவ்வனிருத்தனும் அந்த ருக்குமியின் பௌத்திரியான சுபத்திரை யென்பவளைக் கலியாணஞ்செய்துகொண்டு வச்சிரன் என்னும் மகனைப்பெற்றான். வச்சிரனுக்குப் பிரதிபாகு வென்பவன் மகன். அந்தப் பிரதிபாகுவுக்குக் குமாரன் ஸுசாரு. இவ்வாறு அநேகமாயிரங் கிளைகளுள்ள யதுகுலத்தின் புத்திர சங்கியைச் சொல்ல அநேக வாயிர வருஷகாலமும் போதாது. இவ்விஷயத்தில் இரண்டு சுலோகங்கள் பயன்பட்டிருக்கின்றன. "யதுகுலத்துப் பிள்ளைகளுக்கு வில்வித்தை கற்பிக்கும் ஆசிரியர் * மூன்றுகோடி யெண்பத்தெட்டு லக்ஷம் பெயர். மகாத்துமாக்களான யாதவரை எண்ணுவதற்கு யார்திறம்? அக்குலத் தலைவனை ஆகுகனொருவனே பதினயிர லட்சம்பேரோ டிருக்கின்றார்."

கேளும், மயித்திரேயரே! முன்பு தேவாசுரயுத்தத்தில் இறந்த மகா பலவான்களான அசுரரெல்லாம் லோகோபத்திரவம் பண்ணும்படியாக மனிதவருக்கத்தில் பிறந்தார்கள். அவர்களை நாசஞ் செய்யும்பொருட்டுத் தேவதைகளெல்லாம் யதுவம்சத்தில் நூற்றொரு குலத்தராகப் பிறந்தார்கள். இவர்கள் யாவர்க்கும் ஸ்ரீ விஷ்ணு பகவான் அதிபதியாகி ஆண்டுவந்தபடியால் அவருடைய நியமனத்துக்கு உள்ளடங்கி நடந்து வந்த யாதவர்கள் குறைவற்று நாளுக்குநாள் விருத்தியானார்கள். ஆதலால் அவ்வம்சம் மிகப்பெருகி அளவற்றிருந்தது. இவ்வாறு வளர்ந்து வந்த விருஷ்ணி வம்ச வரலாற்றை எவன் அன்போடு கேட்கிறானோ அவன் சகல பாவங்களு மொழிந்தவனாகி ஸ்ரீவிஷ்ணு லோகத்தை யடைவான்.

திணைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

* இங்குக்கோடி லக்ஷம் என்கிற கணக்குகளுக்கு அநேக மென்பதே கருத்தாம்.

## பதினாறும் அத்தியாயம்

# துர்வசுவம்ச சரித்திரம்

பராசரர் அருளிச்செய்கிறார்: மயித்திரேயரே! இப்படியாக யதுவம்சத்தை உமக்கு விசதமாய்ச் சொன்னேன். இனித் துர்வசு வம்சத்தைக் கேளும். துருவசுவுக்கு வன்னியென்பவன் மகனொருவ னிருந்தான். அவ்வன்னியின் மகன் பார்க்கன். பார்க்கனுக்குப் பானு. அவனுக்குத் திரயீசானு. அவனுக்குக் கரந்தமன். கரந்தமனுக்கு மருத்தன். அவன் சந்ததியற்றவனாகிப் புரு வம்சஸ்தனான துஷ்யந்தனைப் புத்திரனாக ஏற்படுத்திக் கொண்டான். இவ்வாறு அந்த வம்சமானது யயாதி சாபத்தினால் விருத்தியில்லாமற் பௌரவ வம்சத்தையே சேர்ந்துவிட்டது.

பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினேழாம் அத்தியாயம்

# துருகியுவம்ச சரித்திரம்

துருகியுவின் குமாரன் பப்புரு. அவனுக்குச் சேது. சேதுவின் குமாரன் ஆரப்தன். ஆரப்தனுடைய குமாரன் காந்தாரகன். காந்தாரகனுக்குக் கர்மன். கர்மனுக்குக் கிருதன். கிருதனுக்குத் தூர்த்தமன். அவனுக்குப் பிரசேதன், பிரசேதனுடைய குமாரன் சததருமன். அவன் மேற்கு வடநாட்டிலுள்ள அநேக மிலேச்சருக்கு அதிபதியா யிருந்தான்.

பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினெட்டாம் அத்தியாயம்

# அனுவம்ச சரித்திரம்

யயாதி மகாராஜனுடைய நான்காம் மகனான அனுவென்பவனுக்கு சபாநலன், சட்சு, பரமேஷு என்ற குமாரர் மூவருண்டானார்கள். அவர்க்குள் சபாநலனுடைய புத்திரன் காலாநலன், காலா நலனுக்குச் சிருஞ்சயன். சிருஞ்சயனுக்குப் புரஞ்சயன், புரஞ்சயனுக்குச் சனமேஜயன். அவனுக்கு மகன் மகாசாலன். அவன் குமாரன் மகாமனசு. அவனுக்கு உசீநரன், திதிட்சு என்றிரண்டு குமாரருண்டானார்கள். உசீநரனுக்குச் சிபி, திருகன், நவன், கிருமி, வர்மன் என்ற ஐவர் பிறந்தார்கள். சிபிக்குப் பிரஷதர்ப்பன், சுவீரன், கேகயன், பத்ரகன் என்று நால்வர் குமாரருண்டு. திதிக்ஷுவுக்கும் இருஷத்திரதன் என்கிற மகன் பிறந்தான். அவனுக்கு ஹேமன், ஹேமனுக்குச் சுதமசு, சுதமசுக்குப் பலி, அவனுடைய மனைவியிடத்தில் தீர்க்கதமசு என்ற இருடியினால் அங்கன், வங்கன், களிங்கன், சிம்மன், பௌண்டரன் என்கிற குமாரர்கள் உண்டாகி அப்பெயர்கொண்ட தேசங்களை ஆண்டுவந்தார்கள். அந்தச் சந்ததிகளுக்கும் அப்பெயர்களே யுண்டு. அங்கசந்ததியில் அனபானன் ஜனித்தான். அவனுக்குத் திவிரதன் என்கிறவன் பிறந்தான். அவனுக்குத் தர்மரதன், அவனுக்குச் சித்திரரதன், அவனுக்கு உரோமபாதனென்கிற பெயருமுண்டு. அவனுக்குத் தசரதமகாராஜன் சிநேகிதனாயிருந்ததனால் சந்ததியில்லாத அவனுக்குச் சாந்தையென்கிற தன்மகளை அவனுக்கு மகளாகக் கொடுத்தான். அவ்வுரோமபாதனுக்கு மகன் சதுரங்கன். அவனுக்கு மகன் பிருதுலாக்ஷன். அவனுக்குச் சம்பன். அவன் சம்பையென்னும் பட்டணத்தை யேற்படுத்தினான். அச்சம்பனுக்கு அரியங்கன் என்கிற குமாரனுண்டானான். அரியங்கனுக்குப் பத்திரரதன். அவனுக்குப் பிருகத்திரதன். அவன் குமாரன் பிரகத்கருமன். அவன் புத்திரன் பிரகத்பா. அவனுக்குப் பிருகன்மனன். அவனுக்கு ஜயத்ரதன். அந்தச் சயத்ரதன் பிராமண க்ஷத்

திரிய வம்சங்கள் கலந்து பிறந்த ஒரு ஸ்திரீயை விவாகம் பண்ணிக்கொண்டு, அவளிடத்தில் விஜயன் என்கிற புத்திரனைப் பெற்றான். அவ்விஜயனுக்கு மகன் திருதி அவனுக்குப் புத்திரன் திருதவிரதன். அவனுக்குச் சத்தியகர்மா, அவனுக்கு அதிரதனென்பவன் பிறந்தான். அவன்றான் கங்கையினிடத்திலே பெட்டியிற்போட்டுக் குந்தியினால் எறிந்து விடப்பட்ட கர்ணன் என்பவனையெடுத்துப் புத்திரனாகவைத்துக்கொண்டான். அக்கர்ணனுடைய மகன் விருஷசேனன். இவ்விருஷசேனனளவு முள்ளவர்தாம் அங்கநாட்டை யாண்ட அங்க வம்சஸ்தர்.

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

பத்தோன்பதாம் அத்தியாயம்

## பூருவம்ச சரித்திரமும், பரத சரித்திரமும்

மயித்திரேயரே! இனி யயாதியின் கடைசிக் குமாரனை பூருவின் வம்சத்தைக் கேளும். பூருமகாராஜனுடைய குமாரன் ஜனமேஜயன். அவன் குமாரன் பிரசின்வான். அவனுக்கு மகன் பிரவீரன். பிரவீரனுக்கு மனசியு. அவனுக்கு அப்தன். அவனுக்குச் சுத்தியு. சுத்தியுவுக்குப் பகுகதன். அவனுக்கு ஸம்யாதி. ஸம்யாதிக்கு அஹம்யாதி. அவனுக்கு இரௌத்திராசுவன். இரௌத்திராசுவனுக்கு இருதேபு, கக்ஷேபு, தண்டிலேபு, கிருதேபு, ஜஜேபு, தர்மேபு, திருதேபு, தலேபு, சன்னதேபு, வனேபு. என்று பத்துப் புத்திரர் பிறந்தார்கள். இருதேபுவுக்கு இரந்திநாரன் என்பவன் பிறந்தான். இரந்திநாரன் சுமதி, அப்பிரதிரதன் துருவன் என்ற பிள்ளைகளைப் பெற்றான். அப்பிரதிரதனுக்குக் குமாரன் கண்ணுவன். அவனுக்கு மேதாதிதி. அவன் முதலாகக் கண்ணுவ வம்சஸ்தரெல்லாம் பிராமணரானார்கள். அந்த அப்பிரதிரதனுக்கு

ஐலீனன் என்ற மற்றொரு குமாரனுண்டானன். ஐலீன னுக்குத் துஷியந்தன் முதலான நால்வர் புத்திரர் பிறந் தார்கள். துஷியந்த மகாராஜனுக்குப் பரதசக்கிரவர்த்தி பிறந்தான். அந்தப் பரதனென்னும் பெயருக்குக் காரண மாகத் தேவர்களாலே சுலோகம் பாடப்பட் டிருக்கின் றது. "தாயானவள் தோற்பை, எவனாலே புத்திரனுண் டாக்கப் பட்டானே அவனுக்கே அவன் புத்திரன் ஆத லால் ஓ துஷியந்த மகாராஜனே! பிள்ளையைப் பரித்துக் கொள்; சகுந்தலையை அவமானப் படுத்தாதே; ஓ அர சனே! முன்பு யமசபையிலிருந்து புத்திரனை வீரியத்தை விட்டவனே கொண்டுபோவான்; இந்தக் கர்ப்பத்தை நீயே யுண்டாக்கினாய்; சகுந்தலை சத்தியமே சொன்னாள்" [பா—காப்பாற்று.]

அந்தப் பரதமகாராஜனுக்குப் பத்தினிகளான மூவ ரிடத்தில் ஒன்பது புத்திரர் பிறந்தார்கள். அப்பிள்ளை களைப் பார்த்து, "இவர்கள் எனக்குத் தக்கவரல்லர்" என்று பிதாசொன்னதனால், அப்பிள்ளைகளின் தாய்கள் விபசார ஸந்தேகத்தினால் தங்களைப் புருஷன் தள்ளிப் போடுவானென்றஞ்சி அப்பிள்ளைகளைக் கொன்று விட் டார்கள். பின்பு புத்திரோற்பத்தி வீணாகியதனால் புத்தி ரன் வேண்டுமென்று மருத்துக்களை நோக்கிச் சோம யாகஞ் செய்த அந்தப் பரதனுக்குத் தீர்க்கதமசு என்பவ ராலே பக்கத்தில் தள்ளப்பட்ட பிருகஸ்பதி வீரியத்தி னால் உசத்திய பத்தினியான மமதை யென்பவளிடத்தில் பிறந்த பரத்துவாஜனென்பவனைப் பிள்ளையாக அந்த மருத்துக்கள் பிரசாதித்தார்கள். "ஓ மூடையான பெண் பிள்ளாய்! நம்மிருவராலும் பிறந்த இப்பிள்ளையை நீ பரி" என்று பிருகஸ்பதியும், அப்படியே பிருகஸ்பதியை நோக்கி மமதையும், ஆகத் தந்தைதா யிருவரும் சொல் லிப் போட்டுப் போனதனால் அந்தப் பிள்ளைக்குப் பரத் துவாஜனென்கிற நாமதேயம் வந்தது. [பர-பரி, துவா ஜம்-இருவராற்பிறந்தவன்.] பரதனுக்குப் புத்திரோற் பத்தி வீணானபோது பிள்ளையானதனாலே அந்தப் பரத் துவாஜனுக்கு விததன் எனப் பெயருமுண்டாயிற்று. [விததன்—வீண்.] விததனுக்கு மன்யு என்பவன்

பிறந்தான். மன்யுவுக்கு பிரகத்க்ஷத்திரன், மகாவீரியன், நகரன், கர்க்கன் என்ற பிள்ளைகள் பிறந்தார்கள். நகரனுக்கு ஸங்கிருதி பிறந்தான். அவனுக்குக் குரும்பிருதி, இரந்திதேவன் என்னு மிரண்டு குமாரர் உண்டு. கர்க்கனுக்குச் சினி பிறந்தான். அதனால் கார்க்கியர் என்றும் சைனியர் என்றும் சொல்லப்பட்ட அந்த வம்சஸ்தரெல்லாம் க்ஷத்திரியரா யிருந்தும் ஒருகாரணத்தினால் பிராமணரானார்கள். மகாவீரியனுக்கு துருக்ஷயன் என்னும் மகன் பிறந்தான். அவனுக்குத் திரையாருணி, புஷ்க்கரிணன், கபி என்று மூன்று பிள்ளைகள் பிறந்து பின்பு மகிமையினால் பிராமணரானார்கள். பிகத்க்ஷத்திரனுக்கு மகன் சுஹோத்திரன். சுஹோத்திரனுக்கு ஹஸ்தியென்பவன் பிறந்தான். அவன்தான் இந்த ஹஸ்தினாபுரத்தை யுண்டாக்கி வாசஞ்செய்தவன். ஹஸ்திற்கு அஜமீடன்; துவிஜமீடன், புருமீடன் என்ற மூன்று குமாரர் உண்டானார்கள். அஜமீடனுடைய புத்திரன் கண்வன், கண்வனுக்கு மேதாதிதி. அவன் முதல் கண்வகுலத்தார் பிராமணரானார்கள். அவ்வஜமீடனுக்கே பிருகதிஷு என்று வேறொரு மகனிருந்தான். அவனுக்குப் பிருகத்தனு, பிருகத்தனுவுக்கு பிருகத்கர்மன், அவனுக்கு ஜயத்திரதன், அவனுக்கு விசுவஜித்து அவனுக்கு சேனஜித்து, சேனஜித்தினுடைய குமாரர் இருசிராசுவன் காசியன் திரிடஹனு வத்சஹனு என்பவர்கள். இருசிராசுவனுக்குப் புத்திரன் பிருதுசேனன். பிருதுசேனனுக்குப் பாரன், அவனுக்கு நீலன். அவனுக்கு நூறுபிள்ளைகளுண்டு. அவர்களுக்குள் பிரமானமானவன் காம்பீலிய நகராதிபதியான சமரன். சமரனுக்கு பாரட்சுபாநன், ஸதசுவன் என மூன்று புத்திரர் உண்டு. சுபாரனுக்கு ஸுகிருதி என்று சொல்லப்பட்ட பிருது, அவனுக்கு விப்பிராசனென்பவன் பிறந்தான். அவனுக்கு அணுஹன். அவன் சுகருடைய மகளாகிய கீர்த்தியென்பவளை விவாகஞ் செய்துகொண்டான். அவ்வணுஹனுக்குப் பிரதத்தன் பிறந்தான். அவனுக்கு விஷ்வக்சேனன். அவனுக்கு உதகஸேனன். அவனுக்கு மகன் பல்லாடன். முன் சொல்லப்பட்ட துவிஜமீடன்

என்பவனுக்குப் புத்திரன் யவீநரன். அவனுக்குப் புத்திரன் திருதிமான். அவனுக்கு ஸத்யதிருதி. அவனுக்குத் திரிடநேமி. அவனுக்குச் சுபாரிசுவன். அவனுக்குச் சுமதி, அவனுக்குச் சன்னதிமான். சன்னதிமானுக்குப் புத்திரன் கிருதன். அவன் இரணியநாபனால் யோகாப்பியாசம் செய்விக்கப்பட்டு பிராச்சியசாமகருடைய இருபத்துநான்கு சங்கீதங்களைச் செய்தான். கிருதனுக்கு உக்கிராயுத னென்பவன் மகன். அவன் பெரும்பாலும் நீபரென்பவர்களை அழித்துவிட்டான். உக்கிராயுதனுக்குத் தனயன் க்ஷேமியன். அவனுக்குச் சுதீரன். அவனுக்கு இரிபுஞ்சயன். அவனுக்குப் பஹுரதன். இவர்கள் தாம் புருவம்சஸ்தர். பௌரவர் என்று சொல்லப்படுவார்கள்.

முன் சொல்லப்பட்ட அஜமீடனுக்கு நளினீ யென்று ஒரு பத்தினியிருந்தாள். அவள் வயிற்றில் நீலன் என்பவன் பிறந்தான். அவனுக்குச் சாந்தி பிறந்தான். அவனுக்குச் சுசாந்தி. சுசாந்திக்குப் புரஞ்சயன். அவனுக்கு ரிக்ஷன். அவனுக்கு அரியசுவன். அவனுக்கு முத்கலன், சிரஞ்சயன், பிருகதிஷு, யவீநரன், காம்பீரியன் என்ற ஐவர் பிறந்தார்கள். இவர்கள் "என்னுடைய ஐந்து ராச்சியங்களையும் ஆளப் போதுமானவர்கள்" என்று பிதாவினால் சொல்லப்பட்டபடியினாலே பாஞ்சாலரென்னும் பெயரைப் பெற்றார்கள். முத்கலனுடைய வம்சஸ்தர் மௌகலியரென்று சொல்லப்பட்டு க்ஷத்திரியத் தன்மையோடு கூடின பிராமணராயிருந்தார்கள். முத்கலனுக்கு அரியசுவன் மகன். அரியசுவனுக்கு திவோதாஸன் என்கிற புத்திரனும், அகலியை யென்கிற புத்திரியும் பிறந்தார்கள். அகலியை சரத்துவான் யென்கிற கௌதமருக்குப் பத்தினியாகிச் சதாநந்த ரென்பவரைப் பெற்றாள். சதாநந்தருக்குச் சத்தியதிருதி என்கிறவர் பிறந்து தனுர்வேதத்தை முற்றுங் கற்றார். சத்தியதிருதிக்கு ஊர்வசி யென்கிற அப்சரசைக் கண்டபோது வீரியமானது நழுவி நாணற்கட்டையிலே இரண்டு பிரிவாய் விழுந்தது. அதினின்றும் ஒரு புத்திரனும், ஒரு புத்திரியும் பிறந்தார்கள். அவர்களை வேட்டைக்கு வந்த சந்தனு

மகாராஜன் பார்த்துக் கிருபையினாலே பரிக்கிரகித்தான். அதனால் அப்புத்திரனுக்குக் கிருபன் என்றும், அக்கன்னிகைக்கு கிருபியென்றும் பெயருண்டாயின. கிருபி துரோணாசாரியருக்குப் பத்தினியும் அசுவத்தாமனுக்குத் தாயுமானாள்.

திலோதாச னென்பவனுக்குப் புத்திரன் மித்திராயு. மித்திராயுவுக்குச் சியவனனென்பவன் பிறந்தான். சியவனனுக்குச் சுதாசன். அவனுக்குச் சௌதாசன். அவனுக்குச் சகதேவன். அவனுக்குச் சோமகன். சோமகனுக்கு நூறு மக்களுண்டு. மூத்தவன் ஜந்து. கடைசியவன் பிருஷதன். பிருஷதனுக்குத் துருபதன். துருபதனுக்குத் திருஷ்டத்துயும்னன். அவனுக்குத் திருஷ்டகேது. அஜமீடனென்பவனுக்கு இரிக்ஷனென்று மற்றொரு குமாரனிருந்தான். அவனுடைய மகன் சம்வரணன். சம்வரணனுக்குக் குரு பிறந்தான். அவன்றான் இந்தத் தருமக்ஷேத்திரத்தைக் குருக்ஷேத்திர மாக்கினான். அந்தக் குருவுக்குச் சதனு, ஜன்னு, பரிக்ஷித்து முதலான புத்திரர் உண்டானார்கள். அவருள் சுதனுவின் புத்திரன் சுகோத்திரன். அவனுக்குச் சியவனன். சியவனனுக்குக் கிருதகன். அவனுடைய குமாரன் உபரிசரவசு. அந்த வசுவுயகுப் பிருகத்திரதன், பிரத்தியக்கிரன், குசரம்பன், குசேலன், உபரிமார்ச்சியன் முதலாக ஏழுபிள்ளைகள் பிறந்தார்கள். பிருகத்திரதனுக்குக் குசாக்கிரன் குசாக்கிரனுக்கு விருஷபன். விருஷபனுக்குப் புஷ்பவான். அவனுக்குச் சத்தியஹிதன். அவனுக்குச் சததனுவா. அவனுக்குச் சந்து. அந்தப் பிருகத்திரதனுக்கே இரண்டு பாதியாய் மற்றொரு குமாரனுண்டானான். அவன் ஜரையென்கிற இராக்ஷசியினாற் கூட்டப்பட்டபடியால் ஜராசந்தனென்கிற பெயரைப் பெற்றான். சராசந்தனுடைய குமாரன் சகதேவன். அவன் குமாரன் சோமபன். அவனுக்குக் குமாரன் சுருதிசிரவசு. இவர்கள்தாம் மகததேசத்தையாண்டதனால் மாகதர் என்னும் பெயர் பெற்ற அரசர்கள்.

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

## இருபதாம் அத்தியாயம்
# சந்தனு வம்சம்

பரீக்ஷித்துக்கு ஜனமேஜயன், சுருதசேனன், உக்கிர சேனன், பீமசேனன் என நான்கு பிள்ளைகள் உண்டு. ஜன்னு என்பவனுக்கு சுரதன் என்னும் புத்திரன் பிறந்தான். அவனுக்கு விடூரதன். அவனுக்குச் சார்வபௌமன். சார்வபௌமனுக்கு ஜயத்சேனன். அவனுக்கு ஆராதித்தன். அவனுக்கு அயுதாயு. அயுதாயுவுக்கு அக்கிரோதனன். அவனுக்குத் தேவாதிதி. அவனுக்கு உருக்ஷனென்பவன் பிறந்தான். அவனுக்குப் பீமசேனன். அவனுக்குத் திலீபன். திலீபனுக்குப் பிரதீபன். பிரதீபனுக்குத் தேவாபி, சந்தனு, பாகிலீகன் என மூன்று புத்திரர் உதித்தார்கள். தேவாபி யென்பவன் சிறுவனு யிருக்கையிலேயே காட்டிற்சென்று வாசஞ் செய்துகொண்டிருந்தான். சந்தனுவோ அரசனானான். அவனைப்பற்றி பூமியிலொரு சுலோகம் வழங்குகின்றது. அஃதாவது "அவ்வரசன் மூப்படைந்த எவனைக் கைகளாற் பரிசிக்கிறானோ அவன் யௌவனத்தை யடைகிறான். அன்றியும் மிகுந்த சாந்தியையும் பொருந்துகிறான். ஆதலாற் சந்தனுவென்னும் பெயரை யடைந்தான்" என்பதுதான்.

சந்தனுமகாராஜாவின் இராச்சியத்தில் பன்னிரண்டாண்டளவு மழை பெய்யாம லிருந்தது. அதனால் இராச்சிய முழுவதற்கு முண்டான தீங்கைக்கண்டு அவ்வரசன் பிராமணரை நோக்கி "சுவாமிகளே! ஏன் நம்முடைய இராச்சியத்தில் மழை பெய்யாம லிருக்கின்றது? என்னுடைய அபராதம் யாது?" என்று வினவினான். அதற்கந்தப் பிராமணர்கள் "அரசனே! மூத்தவனிருக்க இளையவனாகிய நீ இந்தப் பூமியை யனுபவிக்கின்றாய். ஆதலால் மூத்தவனுக்கு விவாக மில்லாதிருக்க இளையவன் விவாகஞ் செய்துகொண்டால் எந்தப் பாதகமுண்டோ அதை நீ யடைந்திருக்கிறாய்" என்று சொன்னார்கள். அதுகேட் டரசன் "ஆகில் நான் செய்யவேண்டுவதென்ன?" என்று அந்தப் பிராமணரைக் கேட்க, அந்தப் பிராமணர் சொன்னதாவது:

"உன் தமையனான தேவாபி யென்பவன் பாதக முதலாகிய யாதொரு குற்றமுமில்லாமல் பரிசுத்தனா யிருக்கிறபடியால் அவனுக்கே யுரியது இவ்விராச்சியம். ஆகையால் இதுவரையில் நீ யனுபவித்ததே போதும். இனி இவ் விராச்சியத்தை யவனுக்குக் கொடுத்துவிடவேண்டும்" என்ன, அதுகேட்டு அச்சந்தனுமகாராஜன் தான் செய்த அக்கிரமத்துக்காக மனஸ்தாபத்தையும் விசனத்தையு மடைந்தவனாகி, அந்தப் பிராமணர்களையே முன்னிட்டுக்கொண்டு தமயனுக்கு இராச்சியம் கொடுக்கும்பொருட்டு அவனிருக்கு மரணியத்தைத் தேடிச் சென்றான். இவ்வளவுக்குள்ளே சந்தனுவின் மந்திரியாகிய அசுமராவியென்பவன் அக்காட்டிற்கு வேதவாத விரோதஞ் சொல்லும்படியாகச் சில தபசிகளை அனுப்ப, அவர்கள் போய்ச் சரியான புத்தியுள்ள அந்தத் தேவாபியென்னு மிராஜகுமாரனுக்கு வேத மார்க்கத்திற்கு விரோதமான சில கெட்ட யுக்திகளைப் போதித்து அவனுடைய மனம் வேதத்தைப் பற்றாமல் விரோதமான மார்க்கத்தைப்பற்றி யிருக்கும்படிச் செய்துவிட்டார்கள். இப்படி இருக்குங்காலத்தில் அவ்வரசனிருக்கு மாச்சிரமத்திற்குச் சந்தனுமகாராஜனோடு கூடப்போன பிராமணர்கள் அந்த ராசகுமாரனைக் கண்டு தகுந்த மரியாதையோடு "மூத்தவன் இராச்சியத்தை யாளவேண்டும்" என்பதைப்பற்றின வேதப் பிரமாண நியாயவாக்கியங்களைச் சொன்னார்கள். அந்தத் தேவாபி அவ்வாக்கியங்களைக் கேட்டு வேதத்திற்கு விரோதமான துர்ப்புத்திகளைக் கொண்டு அநேகவித தூஷணங்களைச் செய்தான். அதைக்கேட்டவுடனே பிராமணரெல்லாம் வெறுப்படைந்து, சந்தனுமகாராஜனை நோக்கி "அரசனே! இந்தவிஷயத்தில் நிர்ப்பந்தஞ் செய்தது போதும் வா; இனி உன் ராச்சியத்தில் மழையின்மையாகிய குற்றம் நீங்கிற்று. ஏனெனில் அநாதி சித்தமான வேதவாக்கியங்களுக்குத் தூஷணத்தைச் சொன்னதனால் உன் தமையன் பதிதனானன் தமையன் பதிதனானதனால் உனக்குப் * பரிவேத்துருத்வ

* பரிவேத்தருத்துவம் - அண்ணன் பிரமசாரியாயிருக்கத் தம்பி கலியாணஞ் செய்துகொள்வது.

மென்னுங் குற்றமில்லை; அதலால் நீயே அரசினையாள வேண்டும்" என்று சொன்னார்கள். அதனால் அவ்வரசன் தன் பட்டணத்திற்கு வந்து அரசாளத்தொடங்கினன். வேததூஷணையால் பதிதனான மூத்தவனிருக்கையிலும் இளையவனுடைய இராச்சியத்தில் எல்லாப் பயிர்களுஞ் செழித்து வளரும்படி மேகம் மழை பொழிந்தது.

பாகிலீகனுடைய மகன் சோமதத்தன். அவனுக்குப் பூரி, பூரிசிரவன், சல்லியன் என்று மூன்று புத்திருண்டானார்கள். சந்தனுவுக்கும் தேவநதியான கங்கையினிடத்தில் சகல சாஸ்திரங்களையு மறிந்தவராய் மகாபல பராக்கிரம கீர்த்திகளோடுகூடி விளங்காநின்ற பீஷ்மரென்பவர் உதித்தார். அந்தச் சந்தனுவுக்கே சத்தியவதி யென்பவளிடத்தில் சித்திராங்கதன், விசித்திரவீரியன் என்றிரண்டு மக்களுண்டானார்கள். சித்திராங்கதனென்பவன் இளமையிலேயே சித்திராங்கதனென்னுங் கந்தருவனால் யுத்தத்திலகொல்லப்பட்டான். விசித்திர வீரியன் காசிராஜனுடைய புத்திரிகளான அம்பாலிகை அம்பிகை யென்பவர்களைக் கலியாணஞ் செய்துகொண்டு, மிகவும் காமபோகங்களில் உழன்றதனால் பெரும்வியாதி பிடித்து மரணமடைந்தான். பின்பு சத்தியவதியின் கட்டளையினால் என்குமாரனான கிருஷ்ணத்துவைபாயனன் தாயின் பேச்சைத் தள்ளக் கூடாதென்பதுபற்றி விசித்திர வீரியனுடைய க்ஷேத்திரங்களில் திருதராஷ்டிரன் பாண்டு என்பவர்களையு மந்த ராஜபத்தினிகளால் ஏவப்பட்ட ஒரு தாசியினிடத்தில் விதுரனையும் உண்டாக்கினன். திருதராஷ்டிரன் காந்தாரியென்பவளிடத்தில் துரியோதனன் துச்சாதனன் முதலான நூறு பிள்ளைகளைப் பெற்றான். பாண்டுமகாராஜன் காட்டில் மிருகரூபமான ஓர் இருடியின் சாபத்தினால் புத்திரோற்பத்தி பண்ணும்படியான சாமர்த்திய மிழந்திருந்தபடியால் அவனுடைய பத்தினியான குந்தியினிடத்தில் தருமன், வாயு, இந்திரன் என்னுந் தேவர்களால் யுதிட்டிரன், பீமசேனன், அர்ச்சுனன் என்பவர்களும், மற்றொரு பத்தினியான மாத்திரி யென்பவளிடத்தில் அசுவினி தேவர்களாலே நகுலன்,

ஸஹதேவன் என்பவர்களும், ஆக ஐவர் புத்திரர் உண்டாக்கப்பட்டார்கள். அவ்வைவர்க்கும் துரௌபதியினிடத்தில் யுதிட்டிரருக்குப் பிரதிவிந்தியன், பீமசேனனுக்குச் சுருதசேனன், அர்ச்சுனனுக்குச் சுருதகீர்த்தி; நகுலனுக்குச் சதானீகன், ஸஹதேவனுக்குச் சுருதகர்மா என்னும் ஐந்து புத்திரரே யுண்டானார்கள். இவர்களன்றி அந்தப் பாண்டவர்களுக்கு வேறு புத்திரருமுண்டு. யுதிஷ்டிரருக்கு யௌதேயி என்பவளிடத்தில் தேவகன் என்பவன் பிறந்தான். பீமசேனனுக்கு இடிம்பை என்பவளிடத்தில் கடோற்கஜனும், காசி என்பவளிடத்தில் சாவகன் என்பவனும் பிறந்தார்கள். சஹதேவனுக்கு விஜயை யென்பவளிடத்தில் சுஹோத்திரனும், நகுலனுக்கு இரேணுமதியினிடத்தில் நிசமித்திரனும் பிறந்தார்கள். அர்ச்சுனனுக்கு உலூபி என்னும் நாககன்னிகையினிடத்தில் இராவான் என்பவனும் மணலூறுபட்டணத்திபதியான பாண்டியன் மகளிடத்தில் புத்திரிகா புத்திரனாய்ப் பப்புருவாகன னென்பவனும் பிறந்தார்கள். அன்றியும் அவ்வர்ச்சுனனுக்கே சுபத்திரை என்பவளிடத்தில் இளமையிலேயே மகாபல பராக்கிரமசாலியாய்ச் சமஸ்த சத்துருக்களையுஞ் ஜயிக்கும் வல்லமையுள்ளவனான அபிமன்யுவென்பவன் பிறந்தான். அபிமன்யுவுக்கு உத்தரை யென்பவளிடத்தில் பரீக்ஷித்து பிறந்தான். அவன் கர்ப்பத்திலிருக்கையில் குருவம்சஸ்தரெல்லாம் நாசமாய்ப் போன பின்பு அசுவத்தாமா பிரயோகித்த பிரம்மாஸ்திரத்தினால் எரிக்கப்பட்டுப் போய்ச் சகல சுராசுரர்களாலும் வந்தனஞ் செய்யப்பட்ட திருவடித் தாமரைகளையுடையவரும், தமது திருவுள்ளத்தாலேயே சில காரணங்களுக்காக மனுஷியாவதாரஞ் செய்தருளினவருமான ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பிரபாவத்தினால் மறுபடியும் பிராணனை யடைந்தான். அதனாலே அவனுக்குப் பரீக்ஷித்து என்னும் பெயர் வந்தது.

ஓ மயித்திரேயரே! அந்தப் பரீட்சித்து மகாராஜன் றான் இப்பொழுது இந்தப் பூமண்டலத்தையெல்லாம் ஈதொரு குறைவுமில்லாமல் மேன்மேல் தருமம்

வளர்ந்து வரும்படியாகப் பரிபாலனஞ் செய்துகொண்டிருக்கின்றான்.

இருபதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்தோராம் அத்தியாயம்

# பின்னிட்ட பாண்டவ வம்சம்

ஸ்ரீபராசர் அருளிச்செய்கின்றார்: மயித்திரேயரே! இனிவரும் ராஜாக்களைச் சொல்லுகிறேன் கேளும்:— இப்பொழுது அரசனாயிருக்கிற பரீக்ஷித்து மகாராஜாவுக்கு ஜனமேஜயன், சுருதசேனன், உக்கிரசேனன், பீமசேனன் என்று நால்வர் புத்திரர் பிறப்பார்கள். ஜனமேஜயனுக்குச் சதானீகனென்பவன் பிறப்பான். அவன் யாக்கியவல்கியரிடத்தில் வேதத்தையும் கிருபாசாரியரிடத்தில் அஸ்திரங்களையும் பெற்று கொடியவைகளான விஷயங்களில் விரக்தியுள்ளவனாகிச் சௌனக மகாரிஷியின் உபதேசத்தினாலே ஆத்தும ஞானத்தில் தேர்ந்து உத்தமமான மோக்ஷத்தையடைவான். அந்தச் சதானீகனுக்குக் குமாரன் அசுவமேததத்தன். அவனுக்கு அதிசீமகிருஷ்ணன். அவனுக்கு நிசக்குனு. அவன் காலத்தில் அஸ்தினபட்டணமானது கங்கையினால் அழிக்கப்படும். பின்பு அவன் மௌசாம்பியென்னும் பட்டணத்தில் வாசஞ்செய்வான். அவனுக்கு உஷ்ணன் என்கிற மகன் உண்டாவான். உஷ்ணனுக்கு விசித்திராதனன். அவனுக்கு விருஷ்ணிதான். அவனுக்குச் சுஷேணன், அவனுக்குச் சுனீதன். சுனீதனுக்கு நிருபசக்ஷு. அவனுக்குச் சுகிபலன். அவனுக்குப் பாரிபிலவன். அவனுக்குச் சுநயநன், அவனுக்கு மேதாவி, மேதாவிக்கு ரிபஞ்சயன், அவனுக்கு மகன் அருவன். அவன் குமாரன் திக்குமன், அவன் புத்திரன் பிருகத்திரதன். அவனுடைய தனயன் வசுதாசன். அவனுக்கு வேறொரு சதானீகன். அவனுக்கு உதயனனென்பன் ஜனிப்பான். அவனுக்கு

விஹீநரன் பிறப்பான். அவனுக்குத் தண்டபாணி யென்னுங் குமாரனுண்டாவான். அவனுக்குத் தனயன் நிமித்தன். அவனுக்கு க்ஷேமகனுண்டாவான். இங்கொரு சுலோகமுண்டு. அஃதாவது "பிராமண க்ஷத்திரியர்களுக்கு ஆதாரமாய்த் தேவரிஷிகளினாலும் பூசிக்கப்பட்டிருந்த பாண்டவ வமிசமானது கலியுகத்தில் க்ஷேமகனோடு முடிவைப்பெறும்" என்பதுதான்.

இருபத்தோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# பிற்பட்ட இக்ஷ்வாகு வம்சம்

இனிவரும் இக்ஷ்வாகு வமிசத் தரசரைச் சொல்லுகிறேன். முன்பு அவ்வமிசத்தில் பிருகத்பலன் என்பவனுண்டானானென்று முடித்தேனே. அவனுக்குப் புத்திரன் பிருகத்க்ஷணன். அவனுக்கு உருக்ஷயன். அவனுக்கு வச்சவியூகன். அவனுக்குப் பிரதிவியோமன். அவன் மகன் திவாகரன். அவனுக்குச் சகதேவன். சகதேவனுடைய புத்திரன் பிருகதசுவன். அவனுக்குக் குமாரன் பானுரதன். அவனுக்குப் பிரதீதாசுவன். அவனுக்குச் சுப்பிரதீகன். அவனுக்கு மருதேவன். அவன் புத்திரன் சுநக்ஷத்திரன். அவனுக்குக் கின்னரனென்பவன் பிறப்பான். கின்னரனுக்கு அந்தரிக்ஷன் புத்திரன். அவனுக்குச் சுபர்ணன். அவனுக்கு அமித்திரஜித்து. அவனுக்குப் பிருகத்பாஜன். அவனுக்குத் தருமி. தருமிக்குக் கிருதஞ்சயன். கிருதஞ்சயனுக்கு இரணஞ்சயன். இரணஞ்சயனுக்குச் சஞ்சயன். அவனுக்குச் சாக்கியன். சாக்கியனுக்குச் சுத்தோதனன். அவன் மகன் இராகுலன். அவனுடைய மகன் பிரசேனஜித்து. அவனுக்கு க்ஷுத்திரகன். அவனுக்குக் குண்டகன். அவன் மகன் சுரதன். அவன் புத்திரன் சுமித்திரன். இவர்கள்தாம் பிருகத்பல குலத்திற் பிறந்த

இக்ஷ்வாகு வமிசத்தர். இங்கொரு சுலோகம், "இக்ஷ்வாகுவின் குலம் கலியுகத்தில் சுமித்திரனோடு முடிவு பெறும்" என்றுண்டு.

இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்துமூன்றாம் அத்தியாயம்
# பின்னிட்ட மாகதவமிசம்

இனிப் பிரகத்திரதன்முதல் உண்டாகும் மாகதருடைய வமிசத்தைச் சொல்லுகிறேன். இவ்வமிசத்தில் ஜராசந்தன் முதலிய மகாபல பராக்கிரமசாலிகளான அரசர்கள் உண்டானார்கள். ஜராசந்தனுடைய மகன் சகதேவன். அவன் மகன் சோமாபி. அவன் புத்திரன் அனுசுருதசிரவன். அவனுக்கு அயுதாயு. அவனுக்கு நிரமித்திரன். அவன் தனயன் சுநேத்திரன். அவன் சுதன் பிருகத்கருமா. அவன் புதல்வன் சியேனஜித்து. அவன் குமாரன் சுருதஞ்சயன். அவன் புத்திரன் விப்பிரன். அவனுக்குச் சுசியென்பவன் பிறப்பான். அவனுக்கு க்ஷேமியன் உண்டாவான். அவனுக்குச் சுவிரதன் ஜனிப்பான். சுவிரதனுக்குத் தருமனுதிப்பான். தருமனுக்குச் சுசிரவன் தோற்றுவான். அவனுடைய மகன் திருடசேனன். அவனுடைய குமாரன் சுபலன். சுபலனுடைய புத்திரன் சுநீதன். அவனுக்குச் சத்தியஜித்தென்பவன் புதல்வன். அவனுக்கு விசுவஜித்து, அவனுக்கு ரிபுஞ்சயன். இவர்கள்தாம் பிருகத்திரத வமிசத்து அரசர்கள். இவர்கள் இனி ஓராயிரமாண்டளவு பெருகியிருப்பார்கள்.

இருபத்துமூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்துநாலாம் அத்தியாயம்

### க்ஷத்திரியருக்குப் பின்வரும் ராஜபரம்பரை

## கல்கியவதாரம்



பிருகத்திரத வமிசத்தின் கடைசியில் இரிபுஞ்சய னென்பவனொருவனுண்டே, அவனுக்குச் சுனகனென் றொரு மந்திரி யுண்டாவான். அவன் தன்னரசனைக் கொன்று பிரத்தியோதனென்னுந் தன் புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வான். அந்தப் பிரத்தியோதன னுக்குப் பாலகனென்பவன் மகன். அவனுக்கு விசாக யூபன். அவன் மகன் ஜனகன். அவனுக்குப் புத்தி ரன் நந்திவர்த்தனன். ஆக இவ்வைவரும் பிரத்தி யோதரென்றே சொல்லப்பட்டவராய் நூற்றுமுப்பத் தெட்டு வருஷகாலம் அரசாள்வார்கள். பின்பு சிசுநாப னென்பவனுண்டானான். அவன் மகன் காகவர்ணன். அவன் குமாரன் க்ஷேமதருமன். அவனுக்கு க்ஷதௌ ஜசு, அவனுக்கு விதிசாரன். அவனுக்கு அஜாதசத் துரு. அவனுக்கு அர்ப்பகன். அவனுக்கு உதயனன். அவனுக்கு நந்திவர்த்தனன். அவனுக்கு மகாநந்தி. இவர்களெல்லாம் சைசுநாபர் என்று சொல்லப்பட்டு முந்நூற் றறுபத்திரண்டு வருஷகால மாள்வார்கள். அந்த மகாநந்திக்கு ஒரு சூத்திரப்பெண் வயிற்றிற் பிறந்தவனாய்ப் பேராசையுடையவனாய் மகா பலமுள் ளவனாய் மகா பத்துமனென்கிற பெயரையுடைய நந் தன் மற்றொரு பரசுராமன்போல் க்ஷத்திரியரையெல் லாம் நாசஞ்செய்யத் தலைப்படுவான். அதுமுதல் க்ஷத் திரியர் நசித்துப்போகச் சூத்திரர் அரசாள்வார்கள். அந்த மகாபதுமன் தன்னுக்கினைக்கு ஒருவராலுந் தடை நேரிடாதபடி இப்பூமியை ஒரு குடையின்கீ ழாண்டு வருவான். அவனுக்குச் சுமாலிமுதலாக எட் டுப் பிள்ளைகளுண்டாகி, அவனுக்குப் பின்பு நூறு வருஷமாண்டு வருவார்கள். பிறகு இவ்வொன்பது நந்தர்களையும் கௌடிலியன் என்றும் விஷ்ணுகுப்த னென்றுஞ் சொல்லப்பட்ட பிராமணனொருவன் நாசஞ்

பவன் கொன்று இராச்சியத்தைத் தான் கட்டிக் கொள்வான். பின்பு அவன் தம்பி கிருஷ்ணனென்கிறவன் அரசனுவான். அவனுடைய மகன் சாதகர்ணி. அவனுக்கு பூர்ணோச்சங்கன், அவன் மகன் சாதகர்ணி, அவனுக்கு இலம்போதரன், அவனுக்குப் பாலகன். அவனுக்கு மேகசுவாதி. அவனுக்குப் படுமான். அவனுக்கு அரிஷ்டகருமன். அவனுக்கு ஹலாஹலன். அவன் மகன் பல்லகன். அவனுக்கு மகன் புளிந்தசேனன். அவனுக்குப் புத்திரன் சுந்திரன். அவனுக்குச் சாதகர்ணி. அவனுக்குச் சிவசுவாதி. அவனுக்குக் கோமதி புத்திரன். அவனுடைய குமாரன் பூளிமான். அவனுக்குச் சாந்தகர்ணி. சாந்தகர்ணிக்குச் சிவஸ்ரீ. அவன் மகன் சிவஸ்கந்தன். அவனுக்கு யக்கியஸ்ரீ. அவன் புத்திரன் துவியக்கியன். அவனுக்குச் சந்திரஸ்ரீ. அவனுக்குப் புலோமாபி. ஆக இம்முப்பதின்மரும் நானூற்றெண்பத்தாறு வருஷகாலம் பூமியை யனுபவிப்பார்கள்.

பின்பு இவ்வாந்திரருடைய சேவகரான ஆபீரன் முதலிய ஏழுபேரும் கர்த்தபிகள் என்னப்பட்ட பதின்மரும் அரசராவார்கள். அப்புறம் ஒரு குலத்துப் பதினறுவர் ஆள்வார்கள். பின்பு எட்டு யவனரும், பதினன்கு துருஷ்கரும், பதின்மூன்று முருண்டரும், பதினொரு மௌனரும் ஆயிரத்துத் தொண்ணூற்றென்பது வருஷகாலம் இராஜாக்களாவார்கள். பிறகு மௌனரிலேயே ஒரு குலத்துப் பதினொருவர் முந்நூறு வருஷகால மாள்வார்கள். இவர்களெல்லாம் நசித்தபின்பு கிங்கிலையென்னு நகரத்தாராய் ராஜகுல சம்பந்தமில்லாதவரான யவனரே மறுபடியும் அரசராவார்கள். அவர்களாவார்:—விந்தியசத்தி, புரஞ்சயன், இராமசந்திரன், தருமவர்மா, வங்கன், நந்தனன், சுநந்தி, அவன் தம்பியான நந்தியசன், சுக்கிரன், பிரவீரன் என்னுமிப்பதின்மரும் நூற்றாறு வருஷகாலம் ஆள்வார்கள். இவர்களுக்குப் பிற்காலத்தில் அவர்கள் குலத்திற் பிறந்த பதின்மூவரும், பாகிலீக தேசத்தார் மூவரும், புஷ்யமித்திரர் படுமித்திரர் என்கிற பதின்மூவரும், ஆந்திரர் ஏழுபேரும் சிற்றரசராய் ஆண்டுவருவார்கள்.

எப்படியெனில், ஒருகோசலநாட்டை ஒன்பதின்மரும், நைஷததேசத்தை ஒன்பதின்மரும் ஆள்வார்கள். மகதபட்டணத்தில் வசுவஸ்படிகனென்பவனொருவன் உண்டாகி, செம்படவர் வேடர் முதலானவர்களோடு கலந்த பார்ப்பாரை இராச்சியத்திலே ஸ்தாபிப்பான். பத்துமவதியென்கிற பட்டணத்தில் நாகரென்று சொல்லப்பட்ட ஒன்பது மாகதர் சகல ராஜவமிசங்களேயும் அழித்துக் கங்கையின் உற்பத்திமுதல் பிரயாகம் வரையிலுள்ள இராச்சியத்தை அனுபவிப்பார்கள். கோசலம், ஆந்திரம், புண்டரம், தாமிரலிப்தம், சமதடபுரி இவற்றைத் தேவரக்ஷிதனென்பவன் ஆளுவான். கலிங்கம், மாகிஷம், மகேந்திரபூமிகள் இவற்றைக் குகர் என்பவர் ஆளுவார்கள். நிடதம், நைமிஷகம், காலகோசகம் என்னும் இராஜியங்களே மணிதானியக வமிசத்தார் அனுபவிப்பார்கள். திரைராச்சியம், மூஷிகம் என்னுமிடங்களேக் கனகப் பெயருடையவன் புசிப்பான். சௌராஷ்டிரம், அவந்தி, சூத்திரம் ஆபீரம் என்னும் நாடுகளேயும், நருமதையாற்றைச் சேர்ந்த பாலே நிலங்களேயும், கெட்டுப்போன பார்ப்பாரும் இடையர் சூத்திரர் முதலானவர்களும் ஆளுவார்கள். சிந்து, தேவிகை, சந்திரபாகை, இந்நதிகளின் கரை நாடுகளேயும் கெட்டுப்போன சூத்திரர் மிலேச்சர் முதலானவர்கள் கைக்கொள்ளுவார்கள். இவ்வாறு சொல்லப்பட்ட அரசரெல்லாம் ஒரே காலத்தில் ஆண்டு வருவார்கள். இவர்களெல்லாம் மிகுந்த கோபமும் அற்ப அனுக்கிரகமும் உடையவர்களாய், பொய்யிலும் அதருமத்திலும் மனம் பற்றியவர்களாய், ஸ்திரீகளேயும் பாலகர்களேயும் கோக்களேயும் வதைக்குந் தன்மையராய், பிறர் பொருளேக் கவருந் திறத்தினராய், அற்பசத்தி யுடையராய், இருளுக்குச் சமானமானவர்களாய், உண்டானவுடனே யழியும் பொருள் போன்றவராய், பேராசை கொண்டவராய் இருப்பார்கள். அவர்களேச் சேர்ந்த இராச்சியத்தாரெல்லாம் அந்த மிலேச்ச வொழுக்கத்தையே கைக்கொண்டவர்களாய், இராஜாக்களேப்பற்றி யிருப்பதே பலமாக்கொண்டு, தருமத்திற்கு விபரீதமா யிருந்துகொண்டு, பிரஜைகளே நாசஞ் செய்வார்கள். அதனல் தினந்தோறுங் கொஞ்சங்

கொஞ்சமாய்த் தருமமும் அர்த்தமும் குறைந்துபோக உலகத்திற்கு நஷ்டமே யுண்டாகும்.

அப்போது பொருளே உயர்குலத்திற்குக் காரண மல்லது நற்குலப் பிறப்பன்று வலிமையே சகல தரும காரணமாமன்றி நல்லொழுக்க மன்று. மனமொத்து வருவதே ஒருவரை யொருவர் விவாகஞ்செய்யக் காரண மல்லது குலகோத்திராதிகளன்று. பெண்டன்மையே போகத்திற்கு ஏதுவல்லது விவாக முறைமை யன்று. பொய்சொல்லுந் திறமே விவகாரத்தில் ஜயமடையக் காரணமன்றி நியாயதருமங்க ளன்று. மேனிருடை மையே ஒருநிலத்தைக் கைக்கொள்ளக் காரணமல்லது க்ஷேத்திர சுத்தி முதலியவை யன்று. முப்புரிநூலை யணிந்திருத்தலே பார்ப்பாரத் தனத்திற்குக் காரணமன்றி வேதசாஸ்திர ஆசார முதலியவையல்ல. குறிகளைத் தரித் திருப்பதே பிரமசாரி முதலிய ஆச்சிரம காரணமன்றி விரதங்களல்ல. அநியாய வழியிற் செல்வதே விருத்தி காரண மல்லது நியாயத்தைப் பார்ப்பதன்று. வலியில் லாமையே ஜீவனமில்லாமைக்கு ஏதுவாமே யல்லது பயிர் முதலியவை யில்லாமை யன்று. அச்சமின்றி யுரத் துப் பேசுவதே பாண்டித்திய ஏதுவன்றி நூற்பயிற்சி யன்று. பொருளின்மையே சாதுவாயிருத்தற் கேதுவல் லது நற்குணமன்று. பொருளகப்படத் தக்கதா யிருப் பதே வாசஸ்தானத்தின் மேன்மைக்குக் காரணமல்லது புண்ணிய தீர்த்தாதிகளுடைமையன்று. ஈகை மாத்தி ரமே தருமகாரணமன்றி யாகாதிகளல்ல. அங்கீகரிப் பதே விவாகத்துக்குக்காரணமன்றி வைதிகமுறையன்று. நன்றாய் வேடந்தரித்தவனே பாத்திரமாவதற் கேது வன்றி யோக்கியதையன்று. தூரமான விடத்திலிருந்து கொண்டுவருந் தண்ணீரே தீர்த்த ஏதுவன்றி சுத்தி யன்று. கபடவேடந் தரித்தலே மகத்துவத்திற்குக் கார ணமல்லது தவமுதலியவை யன்று.

இவ்வாறு அநேக தோஷங்களினால் மிகுந்திருக் கும் பூமியில் எந்தச் சாதியிலானாலும் எவன் பலவானோ

அவனே யரசனுவான். அப்படியாகும்போது அதி விருத்தரான அனேக சனங்கள் அவர்களுடைய கையின் கீழிருக்கமாட்டாமல் மலைகளின் நடுச்சாரல்களிலே போய்க் காய் கிழங்கு கீரை யிலை தேன் முதலானவை களை ஆகாரமாகவும், மரப்பட்டைகள் தழைகள் இவை களை வஸ்திரமாகவுங்கொண்டு, காற்று வெய்யில் மழை முதலானவைகளினுல் துன்பப்படுவார்கள். எவனும் இருபத்துமூன்று வருடமளவும் பிழைத்திருப்பதே அரிதாம். இப்படி இந்தக் கலியுகத்தில் ஜனமெல்லாம் நிலைகமடைந்துவரச் சிரௌதசுமார்த்த தருமங்களெல் லாம் மிகவும் அழிந்துபோகக் கலியுகமும் முடியலாகும்.

அப்போது, சகலலோக சிருஷ்டிகர்த்தாவும் சரா சரங்களுக்கெல்லாம் குருவாயும் ஆதிமத்தியாந்தரகித ராயும் சாக்ஷாத் பிரமமாயும் இருக்கின்ற ஸ்ரீவாசுதேவ பகவான், தன் அம்சத்தாலே சம்பளமென்னுங் கிரா மத்தில் முக்கியராயுள்ள விஷ்ணுயசஸு என்கிற பிரா மணருடைய மாளிகையில் அஷ்டகுணைசுவரிய சம் பன்னராய் கற்கிருபியாய் அவதரித்து, அளவற்ற மகத் துவமுடையவராய் மிலேச்சராயும் திருடராயும் துஷ் டாசாரமுள்ளவர்களாயும் உள்ள எல்லாரையும் நாசஞ் செய்தருளி, உலகமெல்லாம் தனது தருமத்தில் நிலைக் கச்செய்வர். பின்பு கலிமுழுதும் முடிவாகும்போது, இரவின் முடிவில் எழுந்தவர்களுக்கு உண்டாவது போலே, அந்தச் சகல ராச்சியத்தாருக்கும் நிர்மலமான படிகக்கல்போலே சுத்தமான புத்திகளுண்டாகும். இனி யுண்டாமவர்க்குக் காரணராயிருக்கும் அக்காலத்து மனி தர் மிகுந்த கிழவராய்ப் போயிருந்தாலும், தற்காலத் தில் புத்திரோற்பத்தி யுண்டாகும். அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகளெல்லாம் கிருதயுகத்தை யனுசரித்த வர்களாயே யிருப்பார்கள். இவ்விஷயத்தில் சொல்லப் படுஞ் சுலோகமாவது, "எப்போது சந்திரனும், சூரிய னும், பிரகஸ்பதியும், புஷிய நக்ஷத்திரத்தில் ஒரே காலத்தில் பிரவேசிப்பார்களோ அப்போது கிருதயுக முண்டாகும்" என்பதுதான்.

மயித்திரேயரே! சென்றவர்களும் இருக்கின்றவர் களும் வருமவர்களுமாகிய அவ்வந்தவம்சத்து இராஜாக்

களை யுமக்குச் சொன்னேன். பரிக்ஷித்து மகாராஜாவின் உற்பத்திகாலந்தொடங்கி நந்தனுக்குப் பட்டாபிஷேக மாகுங் காலம்வரையில் ஆயிரத்தைந்நூறு வருஷம் ஆகும் என அறியும்.

ஆகாசத்தில் வடபுறத்தில் கிழக்குநுனியாய்ப் பெட்டிப் பண்டிபோலே காணப்படும் ஸப்தரிஷி மண்டலத்தில் கிழக்கின் நுனியிலுள்ளவர் மரீசி, அவருக்கு மேற்கில் கொஞ்சந் தாழ்ந்து காணப்படுகிறவர் அருந்ததியோடு கூடின வசிஷ்டர், அவருக்கு மேற்கில் கொஞ்சமுயர்ந்து காணப்படுகிறவர் அங்கிரசு, அவர்க்குச் சமீபமான மேற்கில் சதுக்கமாயுள்ள நான்கு நட்சத்திரங்களுள் ஈசானியத்தி லிருப்பவர் அத்திரி, அத்திரிக்குத் தெற்கிலிருப்பவர் புலஸ்தியர், அவருக்கு மேற்கிலுள்ளவர் புலகர் அவருக்கு வடக்காய் மண்டலத்திற்கு வாயவியத்தில்இருப்பவர் கிரது, வசிட்டருக்குத் தென்கிழக்கில் மிகச் சூட்சுமமாய்க் காணப்படு நட்சத்திரம் அருந்ததி. இந்தச் சப்த ரிஷிகளுக்குள்ளே முன்னிட்டு உதயமாகின்ற புலஸ்திய கிரதுக்களுக்குச் சமமான தக்ஷிணோத்தர ரேகையில் தென்புறத்தில் அசுவனியாதி நட்சத்திரங்களுள் எது காணப்படுமோ அந்த நட்சத்திரத்தோடு கூடினவர்களாகவே அந்தச் சப்தரிஷிகள் நூறுவருஷகால மிருப்பார்கள். அவர்கள் இந்தப் பரிக்ஷித்து மகாராஜாவின் காலத்தில் மகா நட்சத்திரத்திலிருக்கின்றார்கள். இப்போதுதான் தேவவிமானத்தினால் ஆயிரத்திருநூறு வருஷகாலமான கலியுகமானது பிரவர்த்திக்கத்தக்கது. அது முன்னமே யுண்டாயிருந்தாலும் எப்போது சாக்ஷாத் பகவானாகிய ஸ்ரீவிஷ்ணு வசுதேவகுலத்தில் கண்ணனாய் அவதரித்ததிலிருந்து மறுபடியும்தன்னடிச்சோதிக்கு எழுந்தருளினாரோ அப்போதுதான் கலிவந்ததென்று சொல்லவேண்டும். ஏனென்றால் அந்தச் சுவாமி, தன் திருவடித் தாமரைகளாலே இந்தப் பூமியைப் பரிசித்துக் கொண்டிருந்தவளவும் கலியானது இப்பூமியில் வியாபிக்கச் சக்தியற்றதா யிருந்தது. அந்த எம்பெருமானுடைய அம்சமான கண்ணன் தன்னடிசோதிக் கெழுந்தருளின பின்புதான் பாண்டவ சிரேஷ்டரான தருமபுத்திரர் விபரீதமான நிமித்தங்

களைக்கண்டு பயந்து, பரிக்ஷித்துக்குப் பட்டாபிஷேகஞ் செய்து, தம்பியரோடுகூட இராச்சியத்தைவிட்டு மகாப் பிரஸ்தானம் போய்விட்டார். இந்தச் சப்தரிஷிகள் பூர் வாஷாடா நட்சத்திரத்திற்கு எப்பொழுது போவார் களோ அப்பொழுதுதான் நந்தருடைய காலமாகும். அதுதொடங்கி இக்கலியானது விர்த்தியடைந்துவரும்.

எந்தத் தினத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் தமது திவ்விய லோகத்திற்கு எழுந்தருளினாரோ அந்த நாளி லேயே கலி பிரவர்த்தித்தது. மயித்திரேயரே! அதின் தொகையைக்கேளும்: சந்திசந்தியமிசங்களை விட்டுக் கலியுகத்தின் பிரமாணமானது மூன்றுலக்ஷத் தறுபதி னாயிரம் வருஷமாம். இதைத் தேவமானத்தினாற் கணக்கிட்டால் சந்தியாதிகளோடு கூட ஆயிரத் திரு நூறு வருஷமாம். இக்கலியுகமானது கிஞ்சித்து மில் லாமல் நீங்கினவுடனே மறுபடியும் கிருதயுக முண்டா கும். யுகந்தோறும் மகாத்துமாக்களான பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்கிற நான்கு வருணத் தாரும் அநேகர் கடந்துபோனார்கள். நான் அவர்கள் யாவரையும் குலந்தோறும் விவரப்படுத்தி உமக்குச் சொல்லினேனில்லை. ஏனெனில் அவர்களின் தொகை அனந்தமாகையாலும், பெயர்கள் அநேகருக்குச் சமா னமாயிருப்பதனாலே சொன்னதையேசொல்ல நேரிடுகிற படியினாலும், உத்தேசமாகப் பிரதானமான சிலரையே சொன்னேனென்றறியும். புருவமிசத்தனான தேவாபி யும், இக்ஷ்வாகுவமிசத்தனான புருவும், இவ்விருவரும் மகத்தான யோகபலத்தைக் கொண்டு கலாபக் கிராமத் தில் யார்க்குந் தெரியாமல் இருப்பவர்களாய், வருங் கிருதயுகத்தில் இங்கே வந்து க்ஷத்திரிய வமிசத்தைப் பிரவர்த்திப்பிப்பார்கள். இவர்களே உண்டாகும் மனு குலத்திற்கு விதையாக ஏற்படுத்தப்பட்டவர்கள். இந் தக் கிரமமாய் மனுவமிசஸ்தராலே கிருதயுகம் திரேதா யுகம் துவாபரயுகம் என்கிற மூன்று யுகங்களும் அனு பவிக்கப்படுகின்றன. கலியுகத்திலேயோ இப்போது தேவாபியும் புருவு மிருப்பதுபோல் சிலர் மாத்திரம் விதைபோலிருப்பார்கள். ஓ மயித்திரேய முனிவரே! இந்த மனுவமிசத்தைத் தூக்குத்தொகையா யுமக்குச்

சொன்னேன். முழுதுஞ் சொல்வதற்கு அநேகமாயிர வருஷகாலமும் போதாது. இவர்களும் மற்றுமுள்ள அரசரும் அஞ்ஞானத்தினுற் குருடராகி ஒழிக்கத்தக்க இவ்வுடம்பிலே விசேஷ அபிமானம் வைப்பார்கள். மேலும் அவர்கள், "இந்தப் பூமி எனக்கெப்படி வசப் படும்? என்புத்திரனுக்கு எப்படி வசப்படும்? என் குலத் தாருக்கெல்லாம் எப்படி வசப்பட்டிருக்கும்? அப்படிப் பட்ட வுபாயஞ் செய்யவேண்டும்" என்று கவலையுற் றவராகி யொழிந்தார்கள். இப்போதிருக்கின்ற அரச ருக்கு முன்னிருந்தவர்களும் அவர்களுக்கு முற்பட்ட வர்களும் இனி யுண்டாமவர்களும் அவர்களைப் பின் ருெடர்பவர்களும் யாவரும் பெரும்பாலு மிப்படிப் பட்டவர்களே. சரத்காலத்தில் ஜயம்பொருந்தும் பொருட்டு அங்கங்கே படையெடுத்துச் செல்கின்ற அரசரை நோக்கிப் பூத்த பலமலர்களாகிற பற்களி ஞலே பூமி சிரிக்கின்றதுபோலும். ஓ மயித்திரேயரே! இவ்விடயத்தில் பூமிதேவியினுல் பாடப்பட்ட பாடல் களைச் சொல்லுகிறேன் கேளும். இவைகளைப் பூர்வத் தில் தருமக்கொடி போட்டிருந்த ஜனகமகாராஜனுக்கு அசிதரென்கிற முனிவர் உரைத்தருளினுர்.

பூமிதேவிசொன்னது:- "மிகவும் புத்திசாலிகளான ராஜாக்களுக்கு ஏன் இப்படிப்பட்ட அஞ்ஞான மிருக் கின்றது. என்னவென்ருல் நீரிலுண்டான நுரைக்குச் சமானமான தங்களைச் சதமாக எண்ணுகிருர்களன்ருே. முன்பு தங்களைவென்று, பிறகு முறையே மந்திரிகளை யும் சேவகரையும் நாட்டாரையும் வென்று, அப்புறம் சத்துருக்களை வெல்ல நினைக்கிருர்கள். இப்படிச் சத் துருக்களை வெல்வதனுல் கடல்சூழ்ந்த பூமியையெல் லாம் கைவசப்படுத்துவோமென்று பேராசைகொண்டு முயலுகிருர்களே யல்லது, மிருத்தியு சமீபத்தில் வந் திருப்பதை யறிகின்ருரில்லை. நல்லது அவர்கள் நினைக் கிறபடி கடல்சூழ்ந்த பூமண்டலமானது அவர்களுக்குக் கைவசப்பட்டபோதிலும், இதற்கு முதற்காரணமான ஆத்துமஜயத்திற்கு இதுவொரு பயனுகுமோ? ஆக மாட்டாது. மோக்ஷமன்ருே ஆத்தும ஜயத்திற்குப் பயனுகும். ஓகோ இவ்வாறு நினைத்துப் பாடுபட்ட

பிதாமகன் பிதாமுதலானவர்களெல்லாங் கூடிக்கொண்டு போகமாட்டாமல் விட்டுப்போன என்னை அவர் மக்கள் வசப்படுத்த நினைக்கிறார்களே; இஃதென்ன மூடத்தனம்? அகங்காரங்கொண்ட இவ்வரசருக்குள் பிதாவுக்கும் புத்திரனுக்கும் அண்ணன் தம்பிமாருக்கும் என்னிமித் தம் மோகத்தினால் யுத்தமுண்டாகின்றதன்றோ? இந்தப் பூமியெல்லாம் எனதே, என் வமிசத்திற்கு மிது சாசு வதம், என்கிற இவ்வீனபுத்தியானது எல்லா அரசர் களுக்கும் முந்தினவனுடைய மரணத்திற்குப் பின் உண்டாகியேயிருந்தது. இது மகா ஆச்சரியம். இவ்வித மாய் மமதை கொண்டிருந்து என்னைக் கொண்டுபோக மாட்டாமல் விட்டு மரணமடைந்த வொருவனைப்பார்த் தும் பின்னுண்டாகிறவனுடைய சித்தத்தில் இப்படிப் பட்ட மமதை யெப்படி குடிகொள்ளுகின்றது? தன் னுடைய தூதரைக்கொண்டு பிறவரசருக்கு "இப்பூமி எனது, நீ விட்டுப்போ" என்று சொல்லியனுப்புகின்ற அரசரைநோக்க எனக்கு மிகுந்த நகைப்பு உண்டாகின் றது "இவைகளை நன்றாய்க் கேட்பவர்களுக்கு சூரிய னுக்குமுன் பனியழிவதுபோல் மமதையானது மிக அழிந்துபோம்."

உலகத்தை இரக்ஷிக்கின்ற ஸ்ரீ மகா விஷ்ணுவின் அமிசாமிசங்களினால் அநேக மகாராஜாக்க ளுண்டா கப்பெற்ற மனுவின் வமிசத்தை யுமக்குச் சொன்னேன். இவ்வமிசத்தை முறையே கேட்கிறவனுக்கு மனஞ் சுத்தப்படுவதன்றி பாவமெல்லாம் போய்விடும். இந் தச் சூரிய சந்திர குலங்களைக் கேட்கத் தனதானிய சம் பத்துகள் மிகவுண்டாகும். இந்திரியங்களுக்கும் குறைவு நேரிடாது. மகா பலவான்களாயும் மகா வீரியமுடைய வராயும் அளவற்ற பொருளுள்ளவர்களாயு மிருந்த இக்ஷுவாகு, ஜன்னு, மாந்தாதா, சகரன், ரகு, யயாதி நகுஷன் முதலானவர்களெல்லாம் காலபலத்தினாலே ஒன்றுமில்லாமல் மரணமுற்றுக் கதையிற் சொல்லத் தக்கவ ரானதைக் கண்டும் விவேகமுள்ள எவன்தான் பெண்டாட்டி பிள்ளை வீடு நிலம் பொருள் முதலானவை களிலே மமதை வைப்பான்? மகா பலமுள்ள புஜங்க ளோடு கூடியிருந்து அநேகவருஷகாலந் தவஞ்செய்து

பலபேறு பெற்று யாகாதிகளைப் பண்ணி மிகக் கியாதிமான்களா யிருந்தவர்களும் காலபலத்தினாற் கதையிலேயே சொல்லப்படும்படி யானார்கள். பிருது வென்பவன் சமஸ்த சத்துருக்களையுஞ் ஜெயித்துச் சகல லோகங்களிலும் போய்க்கொண்டிருந்தானன்றோ? அவனும் நெருப்பிற்பட்ட இலவம்பஞ்சு போலே காலசக்கிரத்திற்பட்டு ஒரு நிமிஷத்திலே மாண்டுபோனான். எவன் சமஸ்த சத்துருக்களையும் நாசஞ்செய்து சமஸ்த தீவுகளையுங் கைவசப்படுத்தி மேன்மையோடாண்டானோ அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனும் கதைகளிற் சொல்லப்படும்போது, இப்படிப்பட்டவ னொருவனிருந்தானென்று சந்தேகிக்கும்படியன்றோ ஆய்விட்டான். எல்லாத் திசைகளிலுங் கொண்டாடும்படியான செல்வமுங் கீர்த்திப் பிரதாபமுமுள்ள இராவணன், அவிக்ஷிதன், இரகுவமிசத்தார் முதலானவர்களுடைய சாம்பலும், இயமனுடைய சிறிது புருவநெறிப்புடன் கூடின பார்வையினால், இவ்வுலகத்தி லில்லாமற் போயிற்றன்றோ. சீசீ! என்னசெல்வங்கள்? மாந்தாதாவென்று பெயர்படைத்த சக்கரவர்த்தியும் கதைக்கே புலப்பட்டிருப்பதைக் கண்டு எந்தப் புத்தியீனனும் மமதையை வகிக்கமாட்டான். பகீரதன் முதலானோர்களும் சகரனும் ககுஸ்தனும் இராவணனும் ஸ்ரீராமலட்சுமணரும் யுதிட்டிரர் முதலானோரும் முன்னுண்டாயிருந்தாரென்பது மெய்யோ பொய்யோ? உண்டாயிருந்தது மெய்யானால் அவர்களிப்போ தெங்கேபோனார்கள்? நமக்குத் தெரியவில்லை. ஓ பிராமணோத்தமரே! மகா மகிமையுள்ளவர்களாக நான் உமக்குச் சொன்ன பூர்வீக ராஜாக்கள் அடைந்த கதியையே இப்போதிரா நின்ற அரசரும் இனிவருமரசரும் அடைவார்கள். இக்காரியத்தையறிந்து புத்திசாலியான மனிதன் தன்னிலும் மமதையைச் செய்யக்கூடாது; இப்படியிருக்க புத்திரன் மனைவி க்ஷேத்திர முதலானவற்றில் மமதை செய்யக்கூடாதென்பதற்குக் கேட்க வேண்டுமோ?

இருபத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

**ஸ்ரீ விஷ்ணுபுராணம் நாலாம் அம்சம் முற்றிற்று.**

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ விஷ்ணு புராணம்

## ஐந்தாம் அம்சம் - ஸ்ரீ கிருஷ்ண சரித்திரம்

### முதலாம் அத்தியாயம்

# தேவர்களுடைய பிரார்த்தனை முதலியவை

மயித்திரேயர் வினவுகிறார். "சுவாமி, பராசர மகா முனிவரே! தேவரீர் இராஜாக்களுடைய வமிச விஸ்தாரத்தையும் அந்த அந்த வமிசங்களைப் பற்றின சரித்திரத்தையும் உள்ளபடி அடியேனுக்கு அருளிச்செய்தீர். யதுகுலத்தில் சர்வ வியாபகனுயிருக்கிற ஸ்ரீமந் நாராயணன், பரிச்சேதப் பட்டுக் காண்கையாலே அமிசமென்று சொல்லத் தக்கதாய் யாதொரு அவதாரஞ்செய்தருளினுனே அதை யுள்ளபடி பரக்கக் கேட்க அடியேன் விரும்புகின்றேன். ஓ மகாமுனிவரே! புருஷோத்தமனுன ஸ்ரீபகவான் இந்தப் பூலோகத்தில் அமிசத்திலு மமிசமென்னும்படி அவதரித்து எந்த எந்தக் காரியங்களைச் செய்தருளினுனே அவற்றையெல்லா மடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்" என்றிப்படிப் பிரார்த்தித்த மயித்திரேயருக்கு ஸ்ரீபராச பிரமரிஷி அருளிச்செய்கிருர்.

ஓ மயித்திரேயரே! நீர் வினவியபடி லோகஹித மான ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய அம்சாவதாரத்தையும் சரித்திரத்தையும் சொல்லுகின்றேன் கேளும். முன்பு தேவகனுடைய குமாரிகையாயும் தேவகன்னிகைக்குச் சமானமுமாயுமுள்ள தேவகி என்பவளை வசு-

தேவர் விவாகஞ்செய்து கொண்டபோது அவளுடன் பிறந்தவனான கம்சனென்பவன் கலியாண ரதத்தில் அந்த மணமக்களை யேற்றித் தான் அந்த ரதத்தை நடத்தினான். அப்போது ஆகாசத்தில் ஒரு அசரீரி வாக்கு, கம்சனைத் தான் சொல்வதை யாதரவோடு கேட்கும்படி விளித்து "அடாமூடா! நீ எவளை அவள் புருஷனோடு தேரிலேற்றி வெகு பிரியமாய் நடத்துகின்றாயோ அவளுடைய எட்டாம்பிள்ளை உன்னுயிரைப் போக்கும்" என்று மேகம்போலே கம்பீரமான தொனியாய்ச் சொல்லிற்று. இதைக் கேட்டவுடனே கம்சன் கத்தியைக் கையிலெடுத்துக் கொண்டு உடன் பிறந்தாளைக் கொல்லத் துணிந்தான். அத்தருணத்தில் வசுதேவர் கம்சனை நோக்கி "ஓ மகானுபாவனே! நீ இவளைக் கொல்லவேண்டாம், இவள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளையெல்லாம் உனக்குத் தந்துவிடுவேன், நீ அவர்களை இஷ்டப்படிச் செய்துகொள்" என்று சொன்னார். இவ்வார்த்தையைக் கேட்டு அதனிடத்திலொரு பெருமை பாராட்டினவனாய் "அப்படியே யாகட்டும்" என்று ஒப்புக்கொண்டு தேவகியைக் கொல்லாமல் விடுத்தனன்.

இப்படிப்பட்ட காலத்திலேயே பூமிதேவி மிகுந்த பாரத்தினால் துன்பமுற்று மகாமேரு பருவதத்திலிருக்கின்ற தேவசபையிற் சேர்ந்து பிரமதேவன் முதலான தேவர்களுக் கெல்லாம் வந்தனஞ்செய்து சொல்லத் தொடங்கினாள்.

"ஓ தேவர்களே! பொன்னுக்கு அக்கினி பிதா, பசுக்களுக்குச் சூரியன் பிதா, எனக்கும் சகல லோகங்களுக்கும் ஸ்ரீமந்நாராயணன் பிதா. பிரசாபதிகளுக்கெல்லாம் பதியாயும், பூர்விகருக்கும் பூர்விகராயுமுள்ள சதுமுகரும், கலை காஷ்டை நிமிஷ முதலான உருவமுடையதாயுந் தோன்றாததாயு மிருக்கின்ற காலமும், ஆதித்தர், மருத்துக்கள், சாத்தியர், உருத்திரர், வசுக்கள், அசுவினி தேவதைகள், அக்கினிகள், பிதுருக்கள், உலகங்களுக்குச் சிருஷ்டிகர்த்தாக்களான பிரசாபதிகள், இயக்கர், அரக்கர், தைத்தியர், பிசாசர், நாகர், தானவர், கந்தருவர், அப்சரசுக்கள் என்கிற யாவரும் எம்

பெருமானாகிய ஸ்ரீ விஷ்ணுவின் உருவங்களன்றோ? மேலும் சூரியாதி கிரகங்களினாலும் அசுவினியாதி தாரகைகளினாலும் மற்றுமுள்ள நக்ஷத்திரங்களினாலும் விசித்திரப்பட்டிருக்கின்ற ஆகாயமும், தீயும், தண்ணீரும், காற்றும், நானும், சப்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்கிற விஷயங்களும், அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய திருமேனியே. இவ்வாறு எம்பெருமானுடைய அநேகவித ரூபங்களும் கடலிலுண்டாகின்ற அலைகளைப் போல ஒன்றுக்கொன்று பாதிக்கப்படுவனவும் பாதிப்பனவுமா யிருக்கின்றன. ஆதலின் இப்பொழுது காலநேமி முதலிய அரசரெல்லாம் பூலோகத்திற்பிறந்து இரவும் பகலும் பிரசைகளைத் துன்பப்படுத்திக்கொண் டிருக்கிறார்கள். முன்பு மகாசமர்த்தரான ஸ்ரீவிஷ்ணுவினாலே சங்கரிக்கப்பட்ட காலநேமியென்பவன் உக்கிரசேன புத்திரனான கம்சனாய்ப் பிறந்தான். இப்படியே அரிஷ்டன், தேனுகன், கேசி, பிரலம்பரன், நரகன், சுந்தன், உக்கிரனான பாணன் என்பவர்களும், இராஜகுலங்களிலே பிறந்து கொடுமை செய்து திரிகின்ற பலரும் உண்டு. அவர்களை நான் எண்ணச் சத்தியந் திருக்கின்றேன். ஓ திவ்விய ரூபந் தரித்த தேவதைகளே! முன்னுரைத்தபடிப் பலபராக்கிரமங்க ளுடையவர்களாயும் மிகுந்த செருக்குடையவர்களாயு மிருக்கிற அசுரேந்திரருடைய திரளான சேனைகள் என்மே லிருப்பதனாலே நான் வெகுவான பாரத்தைச் சுமக்கும் வருத்தமுடையவளாய், என்னையுஞ் சுமக்கச் சக்தியற்றவளா யிருக்கின்றேன். இந்தச் சங்கதியை உங்களுக்கு விண்ணப்பஞ் செய்தேன் ஆதலால் நீங்கள் என்மேல் அன்புகூர்ந்து நான்மெலிவடைந்து பாதாளஞ் சேராதபடி என் சுமையை இறக்கி யருளவேண்டும்" என்றிப்படி விக்கியாபனஞ்செய்த பூதேவியின் வாக்கியத்தைக் கேட்டுச் சகல தேவதைகளும் சதுர்முகன் சன்னதியில் பூபாரத்தைத் தீர்க்கவேண்டுமென்று பிரார்த்திக்க சதுர்முகர் அத்தேவதைகளை நோக்கிச் சொல்லுகின்றார்.

"ஓ தேவதைகளே! பூமிதேவி சொன்னதெல்லாம் சத்தியந்தான். நானும் உருத்திரனும் நீங்களும்

ஸ்ரீமந் நாராயணனுடைய சரீரங்களாகவே யிருக்கின் றோம். எம்பெருமானுடைய விபூதிகள் எவையுண்டோ அவைகளுடைய உயர்வுந் தாழ்வும் ஒன்றையொன்று பாதிப்பதற்கும் பாதிக்கப்படுவதற்குங் காரணமாயிருக் கின்றன. ஆகையால் வாருங்கள் திருப்பாற்கடற் கரைக் குப்போவோம். அங்கேபோய் ஸ்ரீயப்பதிக்குத் தண்டம் சமர்ப்பித்து, இவையெல்லாம்விண்ணப்பஞ்செய்வோம் அப்படி நாம் செய்தால் சர்வ ஸ்வரூபியான எம்பெரு மான் பூமிநிமித்தம் சாத்துவிக அவதாரஞ்செய்து தரு மத்தை நிலைநாட்டியருளுவன்'' என்றிப்படிச் சொல்லி, அத்தேவர்களையுங் கூட்டிக்கொண்டு அக்கமலாசனர் திருப்பாற் கடலுக்குச் சென்று யோகநிஷ்டையுள்ள மனசோடு ஸ்ரீ கருடத்துவசனைத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினார்:—

"சுவாமீ, வேதங்களுக்கும் எட்டாதவனே! பிரம்ம விஷயமான விவேகத்தினாலுண்டான ஞானமும் சப் தப்பிரம்ம விஷயமான ஆகமத்தினாலுண்டான ஞான முமாகிற பரமென்றும் அபரமென்றுஞ் சொல்லப் பட்ட இரண்டு வித்தைகளும் நீயே. ஓ பிரபுவே! உப நிஷத்துக்களிற்கூறப்பட்டவைகளாய்உருவப்பட்டதும் உருவப்படாததுமா யிருக்கின்றது இரண்டுபிரமமென்று சொல்லப்பட்ட பிரகிருதி புருஷர்களும் உன்னுடைய ரூபங்களேயாம். சூக்ஷுமங்களுக்கும் ஸ்தூலங்களுக் கும் ஆத்துமாவாயிருக்கின்றவனே! சர்வசொரூபியான வனே! எல்லா மறிந்தவனே! இருக்குவேதமும் யசுர் வேதமும் சாமவேதமும் அதர்வணவேதமும், சிக்ஷை, கற்பம், நிருத்தம், சந்தம், சோதிடம், வியாகரணம் என்னப்பட்ட வேதாங்கங்களும், இதிகாச புராணங் களும், மீமாஞ்சை, தருக்கம், தருமசாஸ்திரம் என் பவைகளும் நீயே. ஓ அதோக்ஷஜனே! ஓ முதல்வருக்கு மதிபதியே! ஜீவாத்தும பரமாத்துமாக்களையும் தூல சூக்ஷுமசரீரங்களையும் அவியத்தத்தையும் பற்றி விசா ரணை செய்கின்ற யாதொரு வேதாந்த வாக்கிய முண்டோ அதுவும் உன்னைக் காட்டிலும் வேறன்று. கண் முதலியவைகளா லுணரக் கூடாததும், ஒன்றிற்குச் சமானமாகக் காட்டக் கூடாததும், இப்படிப்பட்ட

தென்று மனதினால் நினைக்கக் கூடாததும், தேவாதி நாமங்களும் சுக்கிலாதி வர்ணங்களும் கை கால் முதலிய அவயவங்களு மில்லாததும், கிலேச கருமாதிகளற்றவையுமான முக்தரூபம் யாதுண்டோ அதுவும் நீயே. பரம சொரூபமென்பதும் நீயே. எம்பெருமானே! காதில்லாமலே கேட்கின்றாய். கண்ணில்லாமலே பார்க்கின்றாய். காலில்லாமலே ஓடுகின்றாய். கையில்லாமலே கிரகிக்கிறாய். ரூபமில்லாமலே இஷ்டமான அநேக ரூபங்களை யெடுக்கின்றாய். ஒருவராலும் அறியப்படாமல் எல்லா மறிகிறாய். ஓ பரமாத்துமாவே! அணுவுக் கணுவாயும் காணக்கூடாத சொரூபமுள்ளவனுமான உன்னைக் காண்பவனுக்கு மிகவும் அஞ்ஞான நிவிர்த்தி யுண்டாகின்றது. இவ்விதமான உபாசகனுடைய புத்தியானது உனது மேன்மையான ரூபத்தையேயன்றி மற்றொன்றையுங் கிரகிக்கின்றதில்லை. நீயே எல்லாவற்றிற்கும் ஆதாரபூதன். நீயே லோகங்களையெல்லாம் ரட்சிக்கிறவன். சகல பூதங்களும் உனக்கு உள்ளடங்கி யிருக்கின்றன. உண்டானது முண்டாவது மெதுவோ, அணுவுக் கணுவா யிருப்பதெதுவோ, பிரகிருதிக்கு மேற்பட்ட புருஷனெவனோ, இவையெல்லாம் நீயொருவனே யல்லது வேறன்று. எவன் ஒருவனாயிருந்தும் நால்வகைப் பட்டவனாகி உலகத்துக்குத் தேஜசையும் செல்வத்தையும் அளிக்கின்றானோ, அந்த அக்கினி பகவானும் நீயே. எல்லாப் புறங்களிலுங் கண்ணுடையவனும், அளவில்லாத சொரூப முடையவனுமான பகவானே! நீ திரிவிக்கிரமாவதாரஞ் செய்து மூவுலகங்களிலுந் திருவடியை வைத்தாய். அன்றியும் சுவாமி! அக்கினியானது ஒன்றாயிருந்தும் உருவம்வேறுபடாமலே அநேக வஸ்துக்களிலே பற்றி அநேக ரூபமாய் விளக்குவதுபோலே நீ யெங்கும் வியாபித்த வொரு சொரூபியா யிருந்தும், சகல சொரூபங்களிலேயும் பற்றிய வற்றைப் பெருமையோடு வளர்க்கின்றாய். பிரகிருதி சம்பந்த மில்லாததாயும் ஒப்பற்றதாயும் ஒன்றேயாயுமுள்ள உன்னுடைய மேன்மையான சொரூபம் யாதுண்டோ, ஞானத்தினாலேயே யறியத்தக்க அச்சொரூபத்தை ஞானிகளே காண்கின்றார்

கள். ஓ பரமாத்துமாவே! முக்காலப் பொருள்களி லும் உன்னைக் காட்டிலும் வேறான தொன்றுமில்லை. காரண:காரிய உருவங்களாய்ச் சமஷ்டி வியஷ்டியென்று சொல்லப்பட்ட அவியத்தமும் வியத்தமுமான சொரூப முடையவன் நீயே. அன்றியும் சகல வியூகாதிகளுக் குங் காரணமாய்ச் சமஷ்டியென்று சொல்லப்பட்ட ஸ்ரீவாசுதேவ மூர்த்தியாயும், காரியமாய் வியஷ்டி யென்று சொல்லப்பட்ட சங்கர்ஷண அநிருத்த பிரத்தி யும்ன மூர்த்தியாயு மிருக்கின்றாய். நீ யெல்லா மறிந் தவன். எல்லாவற்றையும் பொருந்தினவன். எல்லாஞ் செய்யவல்ல சத்திஞான பலாதிசய மேன்மை யுடை யவன். அன்றியும் நீ வளர்ச்சியுந் தேய்வு மில்லாத வன். ஒருவர்க்கு முள்ளடங்காமல் சுவாதீனமாயிருக் கின்றவன். ஆதியந்த சூனியனும் சகலத்தையுந் தன் வசத்தி லுடையவனுயு மிருக்கின்றாய். மேலும் நீ வாட் டம், சோம்பல், அச்சம், குரோதம், காமம் முதலான துர்க்குணங்களோடு கூடாமலிருக்கின்றாய். ஓ எம்பெரு மானே! நீ யாதொரு குற்றமு மில்லாதவனும், உன் கிருபையன்றி யடையக்கூடாதவனும், யாதோ ராதா ரமு மில்லாதவனும், நித்தியனும், தடையில்லாத வுச்சாக முடையவனுயு மிருக்கின்றாய். இதுவுமல்லாமல் யாவற்றுக்கும் ஈசுரனும் முக்கிய ஆதாரமாயும் தேஜசுகளுக்குத் தேஜசாயு மிருக்கின்றாய். பிரகிருதி முதலிய ஆவரணங்களினாலும் கருமங்களினாலும் மூடப் படாதவனே! வேறுபாய மில்லாதவராலே பாவிக்கக் கூடியவனே! திரிபாத்விபூதியிலே எழுந்தருளியிருப் பவனே! ஸ்ரீ புருஷோத்தமனே! உனக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றேன். ஓ ஸ்ரீயப்பதியே! நீ அநேகவித மாய்ச் செய்தருளு மவதாரங்களெல்லாம் தருமத்தை நிலைப்பிக்கும் பொருட்டுச் சுவேச்சையாலே யுண்டா கின்றவையே யன்றி, நரகானுபவஞ் செய்பவர்களுக் குப்போலே துக்கானுபவத்திற்காகவுமல்ல, சுவர்க் கத்தி லிருப்பவர்களுக்குப் போலே சுகானுபவத்திற் காகவுமல்ல, பூமியிலிருப்பவர்களுக்குப் போலே சுகதுக் கானுபவத்திற்காகவுமல்ல, தருமாதருமங்களாலுண்டா னவைகளுமல்ல" என்றிப்படி பிர்மா செய்த ஸ்தோத்

திரத்தை ஸ்ரீயப்பதி திருவுள்ளம் பற்றி உகப்போடு விசுவரூபங் காட்டிப் பிதாமகனை நோக்கி, "ஓ நான் முகனே! நீ தேவதைகளோடுகூட என்னிடத்தி லெதைப்பெறக் கருதினையோ அதைச் சொல்லக்கட வாய். அது கையிற் கிடைத்ததாகவே நினை" என்று அருளிச்செய்தார். அப்போது பிரமதேவன் சுவாமி யின் விசுவரூபத்தைச் சேவித்துத் தேவர்களெல்லாம் பயத்தினால் வணங்கிநிற்க மறுபடியுந் துதிக்கத் தொடங்கினார்.

"ஓ சுவாமி அநேகந் திருமுடிகளும் அநேகந் திருக்கைகளும் அநேகந் திருவடிகளுமுள்ள பக வானே! உனக்கு அநேக வாயிரந்தரந் தண்டம் சமர்ப் பிக்கின்றேன். ஓ சூட்சுமங்களுக்கும் சூட்சுமமானவனே! பெரியவைகளுக்கெல்லாம் பெரியவனே! கனமுள்ள வைகளுக்கெல்லாம் கனமானவனே! பிரகிருதி புரு ஷர்களுக்குப் பிரதானமானவனே. அவியத்தத்திற்கு வேறானவனே! ஓ பகவானே! அடியேங்கள் திறத்தில் நீ திருவுள்ள மிரங்கவேண்டும். ஓ சுவாமி! இந்தப் பூமி தன்மேலுண்டான பெரிய அசுரர்களாலே மஹா பர்வதங்களுடைய பந்தங்களையெல்லா மிழந்து உலகத் திற்கெல்லாம் முக்கிய ஆசிரயமான உன்னைத் தன்பாரம் நீக்கும்பொருட்டுச் சரணமடைகின்றான். ஓ அளவற்ற சத்தியுடையவனே! அடியேனும் இந்த இந்திரனும் அசுவினி தேவதைகளும் வருணனும் உருத்திரரும் வசுக்களும் ஆதித்தரும் மருத்துக்களும் அக்கினிகளும் மற்றுமுள்ள தேவர்களும் ஆகிய அடியேங்களெல்லாம் செய்யவேண்டிய தெதுவோ அதை நியமித்தருள வேண்டும். நீயிட்ட கட்டளையைப் பரிபாலனஞ் செய்து கொண்டு அடியேங்கள் குற்றமற்றவர்களாய் எப்போ தும் உன் கிங்கரராக வர்த்திக்கக்கடவோம்."

என்றிப்படி சதுர்முகனாலே துதிசெய்து பிரார்த் திக்கப்பட்டவராய் எம்பெருமான் தமது திருமேனியி னின்றும் வெண்மையுங் கருமையுமான மயிர்கள்போற் காணப்பட்ட தேஜசுகளை யெடுத்து, "ஓ வானவரே! இந்த என் தேஜசுகள் பூமியி லவதரித்துப் பூமிக்

குப் பாரத்தினு லுண்டான துன்பத்தை நீக்கும். இத்தேவர்களும் நமக்கு லீலாசாதனமாகத் தங்களமிசத் தினுலே பூமியிற் பிறந்து முன் பிறந்த துஷ்ட அசுர ரோடு யுத்தஞ் செய்யக்கடவர். அப்படி செய்வதனுலே அசுராமிசத்தினுற் பிறந்தவர்களெல்லாம் நாசமடை வார்கள். இப்போது தேவதைகளுக்கு அசாத்தியரான அசுரரெல்லாம் பின்பு பூமியில் வசுதேவருடைய பத் தினி தேவகியென்பவளுடைய எட்டாவது கர்ப்பத்தி லவதரிக்கு மென்னுடைய தேஜசுவின் கடைக்கண் பார் வையினுலே பலஹீனப்பட்டு சூர்ணமா யிருப்பார்க ளென் றறியும். அப்படி யவதரித்துக் கம்சனுய்ப் பிறந்திருக்கிற காலநேமியைச் சங்கரிக்கும்" என்று நியமித்துவிட்டு ஸ்ரீபகவான் அந்தர்த்தானமாயினுர்.

ஓ மயித்திரேயரே! இவ்வாறு நியமித்து மறைந்து போன எம்பெருமானுக்கு அநேகமாகத் தண்டம் சமர்ப்பித்து, அமரரெல்லாம் மேருபர்வதத்தில் தங்கள் ஸ்தானம் போய்ச்சேர்ந்து, பின்பு எம்பெருமா னுடைய நியமனப்படி பூமியில் அவதரித்தார்கள். இப் படியிருக்கப் பூமியைத் தாங்கிக் காக்கின்ற சுவாமியான வர் தேவகியின் எட்டாங் கர்ப்பத்தி லவதரிக்கப்போகி ருர் என்பதை நாரதமுனிவர் வந்து கம்சனுக்குத் தெரி வித்தார். இதைக் கேட்டவுடனே கம்சன் மிகுந்த கோப மடைந்து தேவகியையும் வசுதேவரையும் காவலிற் போட்டுவிட்டான்.

இப்படி யிருக்கையில் எம்பெருமான் சகலலோகங் களையு மோகிப்பியாநின்ற யோகநித்திரை யென்கிற தமது மாயையை நோக்கி "ஓ மாயையே! நீ பாதா ளத்தி லிராநின்ற இரணியகசிபுவின் குமாரர் அறு வரையும் முறையே தேவகியின் கருப்பத்திற் சேர். அவ்வறுவரும் சங்கரிக்கப்பட்டவுடனே என்னுடைய அமிசமாயிருக்கின்ற ஆதிசேஷன் தேவகியின் ஏழாங் கர்ப்பத்திற் சனிப்பான். வசுதேவனுடைய பத்தினி உரோகிணியென்பவ ளொருத்தி நந்தகோபனுடைய கோகுலத்திலே யிருக்கின்ருள். அவளுடைய வயிற்றி லிருக்கும் வாயுரூபமான ஏழுமாதத்துக் கருப்பத்தைக்

கலைத்து விட்டுத் தேவகியின் வயிற்றிலிருக்கும் சேஷாம்சமான ஏழுமாதத்துக் கருப்பத்தைக் கொண்டுபோய் உரோகிணி கருப்பத்திற் சேர்த்துவிடு. அப்போது காவலிற் போட்டிருக்கிற பயத்தினாலே தேவகிக்குக் கருப்பம் போய்விட்டதென்று உலகஞ் சொல்லிக்கொள்ளும். உரோகிணி கருப்பத்தி லவதரிக்குமவர் வெள்ளிமலைச் சிகரம்போலே விளங்கிக் கொண்டு கருப்பத்தினின்று மிழுக்கப்பட்டதனால் சங்கர்ஷணு னென்னும் பெயரையடைவர். உடனே நான் தேவகியின் வயிற்றிற் பிரவேசிப்பேன். நீயும் உடனே தானே நந்தனுடைய பத்தினியான யசோதையின் வயிற்றிற் பிரவேசிக்க வேண்டும். கேள் பெண்ணே! மாரிக் காலத்தில் ஆவணிமாதத்தில் கிருஷ்ணபட்ச அஷ்டமியில் இரவில் நான் அவதரிப்பேன். நீயும் அவ்விரவிலேயே நவமியில் ஜனிப்பாய். அப்போது வசுதேவன் என் சத்தியினாலே தூண்டப்பட்ட புத்தியுடையவனாய் என்னை யசோதையின் படுக்கையிலும் உன்னைத் தேவகியின் படுக்கையிலுங்கொண்டு போய் விட்டு விடுவான். உடனே கஞ்சன் வந்து உன்னைப் பிடித்துப் பாறுங்கல்லின்மேற் போட்டு வெட்ட எத்தனிப்பான். நீயோ வானத்திலே எழும்பி நிலை பெறுவாய். அத்தருணத்தில் ஆயிரங் கண்ணுள்ளவனை தேவேந்திரன் என்னிடத்திலிருக்கும் பெருமையினால் உனக்குத் தலைவணங்கிப் பிரணமஞ்செய்து உன்னை உடன்பிறந்தவர்களாக வைத்துக்கொள்வான். நீயும் சும்ப நிசும்பாதியரான அநேக அசுரரைச் சங்கரித்து, மிகப் பெருமையுற்றவளாய் விந்தியம் ஜாலந்தரம் முதலான யோக பீடங்களென்கிற ஆலயங்களிலே ஆவிர்ப்பவித்து, அந்த ஸ்தானங்களாலே பூமியையெல்லாம் விளங்கச் செய்வாய், பூதி, ஸன்னதி, க்ஷாந்தி, காந்தி [தியௌ] என்னப்பட்ட வானம், பூமி, திருதி, இலச்சை, புஷ்டி, உஷை என்பவைகள் முதலான ஸ்திரீயம்சமானவைகளெல்லாம் உன்னுடைய ஐசுவரியமாக விருக்கும் விபவங்களாகும். எவர்கள் உன்னை ஆரியையென்றும் துர்க்கையென்றும் வேதகர்ப்பை யென்றும் அம்பிகை யென்றும் பத்திரை யென்றும் பத்திரகாளி யென்றும் சேமதை யென்றும் பாக்கியதை யென்றும் நாமங்களைச்

சொல்லிக் காலையிலும் பகற்குப் பின்னும் மிகவணக்கத்தோடு துதிக்கின்றார்களோ, அவர்களுடைய பிரார்த்தனைகளெல்லாம் எனது அனுக்கிரகத்தினாலே தப்பாமற் கைகூடிவரும். மேலும் சூத்திராதிகளான எவர்கள் மதுமாமிசாதிகளினாலும், இன்னும் பலவித வுணர்வுகளினாலும் உன்னை யாராதிக்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் இஷ்டமான வரங்களைக் கொடுத்து வருவாய். இப்போது நான்சொன்ன காரியங்களெல்லாம் என்னனுக்கிரகத்தினாலே அவசியமா யப்படியே முடியுமாதலால் நீ சந்தேகப்படாமற்போய் நடத்து என்று நியமித்தருளினார்.

முதலாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இரண்டாம் அத்தியாயம்

# தேவகியைத் தேவர் துதித்தது

இப்படியாக எம்பெருமானாலே நியமிக்கப்பட்ட யோகநித்திரை அசுராம்சமான ஆறு கருப்பங்களையுந் தேவகியின் உதரத்திற் சேர்த்து, ஏழாங் கருப்பத்தையு மிழுத்துக் கொண்டுபோய் உரோகிணியினுதரத்திற் சேர்த்து விட்டாள். வசுதேவரும் முன் தான் கம்சனுக்கு வாக்குத் தத்தஞ் செய்தபடி அவ்வாறு சிசுக்களையுங் கொடுக்க அவன் அவற்றை வாங்கி வெட்டிப்போட்டான் ஏழாங்கருப்பம் ரோகிணிவயிற்றிற் சேர்ந்தவுடனே சகல லோக ரக்ஷணார்த்தமாய் ஸ்ரீஹரிபகவான் தேவகியின் கருப்பத்தி லெழுந்தருளினார். யோக நித்திரையும் சுவாமி நியமனப்படி யசோதையின் கருப்பத்திற் பிரவேசித்து, அவரவதரித்த தினத்திலேயே பிறந்தாள். ஸ்ரீவிஷ்ணுவின் அமிசம் பூலோகத்திற் சேர்ந்தவுடனே சூரியாதி கிரகங்கள் ஆகாசத்தில் விளக்கமாய்ச் சஞ்சரித்தன. வசந்தாதி ருதுக்களும் நன்றாய் விளங்கின. மிகுந்த தேஜசினாலே சூழப்பட்டிருந்த அந்தத் தேவகியைக் கண்களாற் காண யாவருஞ் சக்தியற்றிருந்தார்

கள். மேலும் பார்க்கின்றவர்களுடைய மனமெல்லாம் உடைந்துபோயின. ஸ்ரீ பகவானைத் தரிசித்து மேலான தேஜஸோடு விளங்கிக் கொண்டிருந்த தேவகியைத் தேவதைகள் அங்கிருந்த புருஷர்களாலும் ஸ்திரீகளாலுங் காணப்படாதவர்களாய்த் துதித்தார்கள்.

எங்ஙனமெனில், "ஓ தேவகித்தாயே! நீ பூர்வத்தில் மகத்துவத்தைக் கருப்பத்திற் கொண்டிருந்த சூக்ஷ்மப் பிரகிருதியா யிருக்கின்றாய். பின்பு சகல வேதங்களையுங் கருப்பத்தி லுடைத்தான பிரணவரூபமான லோகநாதனுடைய ஸ்ரீசுக்தியா யிருக்கின்றாய். மேலும் சிருஷ்டிக்கப்படுஞ் சொரூபங்களைக் கருப்பத்திலுடைய சிருஷ்டியாயும், எல்லாவற்றிற்குங் காரணமாக யக்கியங்களைக் கருப்பத்தில் வைத்துக்கொண்டிருக்கிற வேதமாயும், பலனைக் கருப்பத்திற் கொண்டிருக்கிற பூசையாயும், அக்கினியைக் கருப்பத்தி லுடைத்தான அரணியாயும், தேவதைகளைக் கருப்பத்திற் றரித்த அதிதியாயும், அசுரரைக் கருப்பத்திற் றரித்த திதியாயும், பகலைக் கருப்பத்தி லுடையபின் மாலையாயும், ஞானத்தை யுள்ளே கொண்டிருக்கின்ற பெரியோர்களின் பணிவிடையாயும், நியாயத்தை யுட்கொண்ட நீதிசாஸ்திரமாயும், வணக்கத்தை யுள்ளே தரித்த லச்சையாயும், ஆசைப்படத்தக்க பொருளை யுட்கொண்டிருக்கிற ஆசையாயும், சந்தோஷத்தை யுள்வைத்திருக்கிற திருப்தியாயும், அறிவை யுட்கொண்டிருக்கிற புத்தியாயும், சஞ்சலமின்மையை யுள்ளே வகித்திருக்கிற பத்திநிலைமையாயும், கிரக நக்ஷத்திராதிகளை யுள்ளே பொதிந்துகொண்டிருக்கிற ஆகாசமாயும் இருக்கின்றாய். அம்மா! இவ்விபூதிகளும் மற்றுமுள்ள அநேகவாயிரம் விபூதிகளும், கடல்கள் மலைகள் ஆறுகள் தீவுகள் காடுகள் பட்டணங்கள் கிராமங்கள் முதலானவைகளோடு கூடின பூமியும், இவையெல்லாம் இப்போது உன் வயிற்றிலிருக்கின்றன. அன்றியும் சகல அக்கினிகளும் ஜலங்களும் காற்றுகளும் நாகர்களும் இயக்கர்களும் இராட்சசர்களும் பிதுர்க்களும் குஹ்யகரும், கிரக நக்ஷத்திராதி விமானங்களினாலே சித்திரப்பட்டு விளங்குகின்றதாய் எல்லாவற்றிற்கும் இடங் கொடுத்துக்கொண்டிருக்கிற

வானமும் பூலோக புவர்லோகாதி யேழுலோகங்களும், இவற்றையெல்லாங் கொண்டிருக்கிற பிரமாண்டமும், இவற்றினுள்ளே யிருக்கிற தேவ தைத்திய கந்தர்வ சாரண உரக யக்ஷ ராக்ஷச பிரேத மனுஷ்ய பட்சி முதலான சகலவித ஜீவன்களும், எல்லாம் உன்வயிற்றி லிருக்கின்றன. எப்படியெனில் முன்னுரைக்கப்பட்ட வைகளை யெல்லாம் உதரத்தில் பொதிந்துகொண்டு எங்கும் வியாபித்தவனாய், யாவுமாகப் பாவிக்கப்பட்ட வனாய், பிரமாணங்களாலே பரிசோதிக்க வொண்ணாத நாம கர்மாதிகளுள்ளவனாய், ரூபகர்மாதி பிரமாணங்களினாலே பரிச்சேதப்படுத்தக் கூடாதவனாகை யாலே அனந்தனென்னுந் திருநாமமுள்ளவனா யெழுந் தருளியிருக்கிற ஸ்ரீ விஷ்ணுபகவான் உன் கருப்பத்தி லன்றோ எழுந்தருளி யிருக்கின்றான். ஆகையால் எல்லாம் உனக்குள்ளேயே யிருக்கின்றன. மேலும் நீ சுவாகை, சுவதை, வித்தை, சுதை இவைகளாகவுஞ் சொல்லத்தக்கவளா யிருக்கிறாய். நீ ஆகாசத்தி லிருந்த அதிதியென்கிற சோதியல்லவா? சகலலோக ரக்ஷணத் திற்காகப் பூமியி லவதரித்தாய்? அம்மா! நீ அடியேங்க ளிடத்தி லனுக்கிரக முடையவளாய் உலகத்துக்கு நன்மை செய்தருளவேண்டும். மேலும் சகல லோகங் களையுந் தரித்திருக்கின்ற எம்பெருமானை நீ மிக வுகப் போடு தரிக்கவேண்டும்.

*இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

மூன்றும் அத்தியாயம்

## கண்ணன் திருவவதாரம்

இப்படி வானவராலே துதிசெய்யப்பட்டுத் தேவகி யம்மை தாமரைக்கண்ணனை எம்பெருமானை உலக ரக்ஷணைக்காகத் தனது கருப்பத்திற் றரித்திருந்தாள். பின்பு முன் சங்கற்பித்த விதமான ஆவணிமாதத்தில் அமரபக்ஷத்தில் அஷ்டமிகூடின ரோகிணியில் இர

வில் உலகங்களாகிய தாமரைகளெல்லாம் மலரும் பொருட்டுத் தேவகியாகிய கிழக்குச்சந்தியில் ஸ்ரீமந் நாராயணனாகிய சூரியன் உதித்தருளினான். அந்தச் சுவாமி யவதரித்தருளிய தினமானது சகலதிசைகளும் நிர்மலமாகப் பெற்றதாய்ச் சந்திரனுடைய நிலாப் போலே யாவர்க்கும் சந்தோஷகரமா யிருந்தது. சுவாமி யவதரித்தவளவில் சத்புருஷரெல்லாம் மிகுந்த சந்தோஷத்தையும் உக்கிரமான காற்றுகளெல்லாந் தணிவை யும் நதிகளெல்லாந் தெளிவையு மடைந்திருந்தன. எம் பெருமான் அவதரித்ததற்காகச் சமுத்திரங்கள் தங்களு டைய கோஷத்தினாலே மனோகரமான வாத்தியத்தொனி யைச் செய்தன. கந்தருவராஜர் பாடினார்கள். அரம்பைய ரெல்லா மாடினார்கள். தேவரெல்லா மாகாயத்தினின்று பூமியிற் பூமழைபொழிந்தார்கள். அக்கினிகளெல்லாஞ் சாந்தங்களாகிச் சொலித்தன. சகல லோகாதாரனான ஸ்ரீஜனார்த்தன னவதரித்தருளின நள்ளிரவிலே மேகங்க ளெல்லாம் புஷ்பவர்ஷம் வருஷித்துக்கொண்டு மெல் லெனக் கர்ச்சித்திருந்தன. இப்படி லோகஹிதார்த்த மாய்க் கருநெய்தற் பூப்போன்ற திருமேனியும் நான்கு திருத்தோளும் ஸ்ரீவச்சமென்னு மறுப்பொருந்திய திரு மார்புமா யவதரித்த ஸ்ரீயப்பதியை வசுதேவர் சேவித்து மிகவும் பிரசன்னமான வாக்கியங்களாலே துதித்துப் பின்பு கஞ்சனிடத் தச்சத்தினாலே சுவாமி சந்நிதியி விண்ணப்பஞ் செய்ததாவது:—

“சுவாமீ! தேவதேவர்களுக்கும் அதிபதியே! அடி யேனுடைய பாக்கியவசத்தினா லவதரித்தருளினீர். ஆனாலும் திருவாழி திருச்சங்கு முதலான திவ்விய லக்ஷணங்களோடு கூடின இந்தத் திவ்விய ரூபத்தை அடியேனிடத்தி லனுக்கிரகத்தினாலே உபசம்ஹரிக்க வேண்டும். ஏனென்றால், தேவரீர் இந்த மாளிகையில் இப்படி யவதரித்ததை யறிந்தால் கம்ஸன் உடனே வந்து அடியேங்களைக் கொல்லுவான். ஆதலால் இந்த ஸ்வரூபத்தை மறைத்துவிடவேண்டும்” என்று வசு தேவர் விண்ணப்பஞ் செய்தவுடனே தேவகியும் பிரார்த் திக்கின்றாள். “முடிவில்லாத சொரூபத்தை யுடையவ

ராய்ச் சகலலோகங்களையும் உருவமாய்க் கொண்டவ ராய்க் கருப்பத்தி லிருக்கையிலும் சகல லோகங்களையுந் திருமேனியாலே தாங்கிக்கொண்டிருக்கிறவராய்த் தமது மாயையென்கிற ஆச்சரிய சத்தியினாலே பாலகனா யவ தரித்தருளின தேவாதி தேவனான சுவாமி அடியே னிடத்தில் அனுக்கிரகஞ் செய்யவேண்டும். எம்பெரு மானே! அசுரனாலே பிறந்த அந்தக் கம்சன் தேவரீர் திருவவதாரத்தை யறியாதிருக்கும்படி நான்கு திருத் தோள் முதலான விலக்ஷணங்களுள்ள இந்தச் சொரூ பத்தை யுபசரிக்கவேண்டும்" என்று தேவகியும் பிரார்த் தித்ததைத் திருவுளம்பற்றி, ஸ்ரீபகவான் அவளைப்பார் த்து "நீ பூர்வத்தில் புத்திரன் வேண்டுமென்று பிரார்த் தித்துத் துதித்தையே அதற்குப் பயனாக நான் உன் வயிற்றிற் பிறந்து காட்டினேன்" என்று அருளிச் செய்து அந்த ஸ்வரூபத்தைவிட்டுச் சாதாரண குழந்தை உருவோடு எழுந்தருளியிருந்தார்.

வாசுதேவர் உடனே அந்தக் குழந்தையை யெடுத் துக்கொண்டு வெளியில் வந்தார். காவலாட்களெல் லாம் யோக நித்திரையினால் மதிமயங்கிச் சும்மாவிருந் தார்கள். அப்படியே அந்த மதுராபட்டணத்து வாசற் காப்பாரும் மயங்கி யிருந்தார்கள். வசுதேவர் குழந் தையை யெடுத்துக்கொண்டு போகையில் உண்டாயிருந்த மழையைத் திருவனந்தாழ்வான் தந்திருமுடிகளாலே தடுத்துக்கொண்டே கூட எழுந்தருளினார். அப்போது சுழிந்து ஓடாநின்ற ஆழமான தண்ணீருள் யமுனாநதி யும் சுவாமியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகிற வசுதேவருக்கு முழங்காலளவாயிருந்தது. அவ் யமுனைக்கரையிலே கம்ஸனுக்கு இறை செலுத்துவதற்காக வந்திருந்த நந்தகோபர் முதலா னோரை வசுதேவர் கண்டார். அக்காலத்தில் நந்த ருடைய பத்தினியான யசோதையும் யோகநித்திரை யின் அம்சமான ஒரு கன்னிகையைப்பெற்றும், அவ் யோகநித்திரையினால் மயக்கமுற்றுப் பிறந்ததின்னதென் றறியாமலிருந்தாள். அங்கிருந்தவர்களும் அப்படியே மயங்கி யிருந்தார்கள். ஆகவே வசுதேவர் தடை யின்றி அங்குச் சென்று இப்பாலகனை யசோதையின்

படுக்கையில் விட்டு, அங்கிருந்த பெண்குழவியை யெடுத்துக்கொண்டு தம்மிடம்வந்துசேர்ந்தார். பின்புயசோதையானவள் மாயாமோகந் தெளிந்து, குவளைப்பூவிதழ்போல் விளங்காநின்ற குழந்தையைப் பார்த்துத் தனக்கு மகன் பிறந்தானென்று மிகமகிழ்ந்தாள். மதுரையில் வசுதேவர் அப்பெண்குழந்தையைத் தேவகியின் படுக்கையில் விட்டவுடனே, அது கூவா கூவாவென்று கத்தக் கேட்டுக் காவலாட்களெல்லாம் ஓடிப்போய்த் தேவகிக்குப் பிள்ளை பிறந்ததென்று கஞ்சனுக்கு அறிவித்தார்கள். உடனே கஞ்சனும் வெகு விரைவுடன் ஓடிவந்து "இது பெண்குழந்தையாயிற்றே, இதனாலுனக்கென்ன தீங்குவரும்? ஒன்றும் வாராது, விட்டுவிடு, கொல்லாதே" என்று தொனி தழதழக்கத் தேவகி வேண்டிக்கொள்வதையும் இலக்ஷியஞ்செய்யாமல், அப்பெண்குழந்தையைத் தூக்கிப் பாறாங்கல்லின்மேற் போட்டு வெட்ட யத்தனித்தான். அப்பெண்ணோ கல்லின்மேற் போட்டவுடனே எழும்பி வானத்திற்போய் ஆயுதங்களோடு கூடின எட்டுக்கைகளுள்ள ஒரு மகாரூபத்தோடு நின்று, வெகு கோபத்தோடு பேரிரைச்சலிட்டுச் சிரித்துக் கஞ்சனைநோக்கி, "அடாமூடா! என்னைக் கல்லின்மேலெறிந்து கொல்வதனாற் பயனென்ன? உன்னைக் கொல்லுகிறவன் பிறந்திருக்கின்றான்; அவன் யாரென்று கேட்கிறாயோ? அவன் சகலதேவதைகளுக்கும் சகல பாக்கியம்போலிருக்கின்ற மேன்மையுடையவன்; அவன்றான் பூர்வ ஜன்மத்திலும் உனக்குச் சத்துரு; இதை நீ நன்றாயறிந்து உனக்கு இதமெதுவோ அதைச்செய்துகொள்" என்று சொல்லிவிட்டுச் சித்தர் முதலான தேவகணங்களால் திவ்வியமாலை சந்தனமுதலியவைகளால் பூசித்துத் துதிக்கப்பட்டுக் கம்ஸன்கண்ணுக்கெதிரிலேயே ஆகாசமார்க்கமாய்ப் போய்விட்டாள்.

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## நாலாம் அத்தியாயம்

# கம்சன் அசுரருக்கு உரைத்தது

பின்பு கம்சன் மனதில் திகிற்பிடித்தவனாய்ப் பிரலம்பன் கேசி முதலான மகா அசுரரை அழைத்து "பெருமையான புசங்களையுடைய ஓ பிரலம்பனே! ஓ கேசி! ஓ தேனுகனே! ஓ பூதனாய்! ஓ அரிஷ்டன் முதலானவர்களே! நீங்கள் யாவரும் என்பேச்சைக் கேளுங்கள்; துராத்துமாக்களான அமரர் என்னைக் கொல்லும்படியான எத்தனஞ்செய்தார்களல்லவா? ஆனாலும் என் பராக்கிரமாக்கினியில் வெந்திருக்கிற அவர்களை மகா வீரனை நான் இலக்ஷியஞ்செய்கிறவனல்ல; ஏனெனில், அற்பவீரத்துவமுள்ள இந்திரனாலென்னாகும்? தவசியாய்த் திரிகிற சிவனாலேதான் என்ன? சோர்வான சமயம்பார்த்து அசுரரைக் கொல்லுஞ் சூதனான விஷ்ணுதான் என்னசெய்யமாட்டுவான்? இவர்களே இப்படியானால் இவர்களிற் குறைந்த பலமுடையவரான ஆதித்தர் வசுக்கள் அக்கினிகள் முதலானவர்களால் என்ன சாதிக்கப்படும்? அல்லது இவர்கள் யாவரும் ஒன்றாய்த் திரண்டுவந்தாலும் என் விஷயத்தில் என்னசெய்யமாட்டுவார்கள்? ஒன்றுஞ்செய்யமாட்டார்கள் என்று நம்புங்கள்; இதற்கொரு திருஷ்டாந்தம் பாருங்கள்; முன்னொருகால் தேவதைகளோடு நான் யுத்தஞ்செய்கையில் அவர்களுக்குத் தலைவனான இந்திரன் நான் எய்த அம்புகளில் ஒன்றையாகிலு மார்பினாலே தாங்காமல் முதுகிலேயே தாங்கிக்கொண்டு ஓடி யொளித்ததை யறியீர்களோ? அன்றியும் என்னிராச்சியத்தில் இந்திரன் மழையை நிறுத்தினபோது நான் பாணங்களினாலே மேகங்களைப் பிளந்து வேண்டியமட்டும் மழை பெய்வித்துக்கொண்டேனே, அதுதான் உங்களுக்குத் தெரியாதா? அதுகிடக்க; இவ்வுலகத்திலே என் மாமனாரான ஜராசந்த மகாராஜா தவிர மற்றெந்த இராஜாக்கள்தாம் என் புஜபலத்துக்கு அஞ்சி எனக்கு வணங்காமலிருக்கிறார்கள்? ஆகையால் எனக்குத்தேவர்களிடத்தில் அலக்ஷிய முண்டாகிறதுமன்றி, அவர்க

ளுடைய எத்தனத்தை நினைக்கும்போது, நகைப்பே யுண்டாகின்றது. ஆனாலும் அந்தத் துஷ்டர்களைக் குறித்து அவர்களிலும் அதிகமாய் நாம் ஜாக்கிரதை யோடு எத்தனஞ் செய்யவேண்டும். ஆகையால் அந்தத் துராத்துமாக்களுக்கு அபகாரமாக நாம் செய்யவேண் டும் காரியம் என்னவென்றால், இந்தப் பூமியில் விசேஷ தானசீலராயும் யாகசீலராயு மிருக்கிறவர்கள் எவ ருண்டோ அவர்களை வதைசெய்ய முக்கியமாய் எத்த னஞ் செய்யவேண்டும். அப்படிச்செய்தால் விருத்தியில் லாமையினாலே தேவர்கள் தாமே அழிந்துபோவார் கள். ஓ அசுரசிரேஷ்டர்களே! இன்னு மொன்று சொல்லுகிறேன் கேளுங்கள். தேவகி வயிற்றிற் பிறந்த பெண் "உனக்கு மிருத்துவா யிருக்கிறவன் முன்னமே பிறந்திருக்கிறான்" என்று சொல்லிற்றன்றோ, ஆதலால் இந்தப் பூமியிலே பிறந்திருக்கிற பாலகர் விஷயத்தி லும் எத்தனஞ் செய்யவேண்டும். எப்படியென்றால், எந் தப் பாலகனிடத்திலே விசேஷமான பலம் சாமர்த்தி யம் முதலானவை காணப்படுமோ அந்தப் பாலகனைத் தேடி யெப்படியாகிலும் கொன்றுபோடவேண்டும்" என்றிப்படி யசுரருக்குக் கட்டளையிட்டுக் கஞ்சனனவன் வீட்டிற்சென்று, தேவகியையும் வசுதேவரையும் காவலி னின்றும் விடுவித்து, அவர்களைநோக்கி "உங்களுடைய குழந்தைகளை யெல்லாம் நான் வீணாய்க் கொன்றேன். கடைசியில் எனக்கு மிருத்துவாக வேறொருவன் எப் படியோ பிறந்துவிட்டான். நீங்கள் சிசுக்கள் போய் விட்டதேயென்று விசனப்பட வேண்டாம். அவை களுக்கு அப்படி யாகவேண்டிய விதியிருந்ததனாலே அவசியம் அப்படியே முடிந்தது. மேலும் உங்களு டைய பாபபலனாகவும் அந்தக் குழந்தைகள் கொல்லப் பட்டன என்று சமாதான வார்த்தைகளைப் பேசி அவர் களுக்கு விடைகொடுத்துத் தன் மனதில்மட்டும் அச்சத் தோடுகூடினவனாய் தன் மாளிகைக்குச் சென்றான்.

நாலாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஐந்தாம் அத்தியாயம்

# பூதனையின் வதம்

இவ்வாறு கம்சனால் காவலினின்றும் விடப்பட்ட வசுதேவர் நந்தகோபருடைய வண்டிவிட்டிருக்குமிடத்திற்குப்போய்த் தனக்குப் பிள்ளைபிறந்ததென்று மிகுந்த சந்தோஷமடைந்திருக்கின்ற நந்தரைக்கண்டு வெகு அன்போடு "பகவத் சங்கற்பத்தால் உமக்குப் புத்திர சந்தானமுண்டாயிற்றே, மகாபாக்கியம் மகாபாக்கியம்" என்று சொல்லி மேலும் சொல்லுகிறார்: ஓ என் சிநேகிதரான நந்தகோபரே! உமக்கு இந்த வார்த்திகத்தில் ஓர் ஆண்பிள்ளை பிறந்தது. இது வெகுபேர்களுடைய கண் படும்படியானது. நீங்கள் அரசனுக்குச் செலுத்தவேண்டிய கப்பமெல்லாஞ் செலுத்திவிட்டீர்களே, இனி நீங்கள் இங்கிருப்பது நன்றன்று, ஏனெனில் பொருளுள்ளவர்கள் துஷ்டராஜாக்களுடைய சமீபத்தில் விசேஷமாயிருப்பது அபாயத்திற்கு ஏதுவாம். ஆகையால் வந்தகாரியம் நிறைவேறின. நீங்கள் இனியிங்கே நிற்காமல் துரிதமாய்க் கோகுலம் போய்ச் சேருங்கள். எனக்கு உரோகிணியின் வயிற்றிற் பிறந்த குழந்தையொன்று அங்கே இருக்கிறதன்றோ. அதை நீர் உம்முடைய பிள்ளையைப்போலே பாதுகாத்து வரவேண்டும்" என்று வசுதேவர் சொல்லிவிட்டுப் போனவுடனே, நந்தகோபர் முதலானவர்களும் வண்டிகளின் மேல் சாமக்கிரிகளைப் போட்டுக்கொண்டு கோகுலம் போய்ச் சேர்ந்தார்கள்.

இதற்குள்ளே பூதனையென்னும் ராக்ஷசி நல்ல பெண்ணுருவத்தோடு, இரவிலே அங்கங்கே சிறு குழந்தைகளுக்கு முலைகொடுத்துக் கொன்றுகொண்டே கோகுலத்திலும் வந்து, தூங்கிக்கொண்டிருந்த யசோதையின் குழந்தையையும் எடுத்து முலைகொடுத்தாள். அவள் எந்தெந்தக் குழந்தைகளுக்கு முலை கொடுக்கிறாளோ அந்த அந்தக் குழந்தைகள் உடனே ரக்த மாமிசமெல்லாஞ் சுண்டிப்போய் மரணமடையும். இந்

தப்பகவானுன குழந்தையோ அவ்வரக்கியின் முலைகளைக் கைகளாலே இறுகப் பிடித்து அவளுயிரோடு உறிஞ்சிற்று. உறிஞ்சவே அவள் தன்னியல்பான குரலோடு பேரிரைச்சலிட்டுக் கதறி நரம்புகளின் கட்டுகளெல்லாம் நீங்கிப் பயங்கரமான உருவத்தோடு தரையில் வீழ்ந்து இறந்தாள். அவ்விரைச்சலைக்கேட்டு, இடைச்சேரியிலிருந்தவர்களெல்லாம் நடுங்கித் திகைத்து எழுந்து வந்து, அப்பேயின் மடியிற் குழந்தை யிருப்பதையும் அவள் செத்துக்கிடப்பதையுங் கண்டார்கள். அசோதையும் பரபரப்போடு ஓடிவந்து அக்குழந்தையை யெடுத்துப் பசுவின் வாலைச்சுற்றி அப்பேயினாலுண்டான பாலதோஷத்தைப் போக்கினாள். உடனே நந்தகோபரும் வந்து அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு * கோமய சூர்ணத்தை அதன் சிரத்தில் காப்பாக வைத்து "எவனுடைய நாபிக்கமலத்தினின்றும் உலகமெல்லாமுண்டாயிற்றோ அப்படிப்பட்ட சகலோற்பத்தி காரணபூதனான ஸ்ரீஹரிபகவான் உன்னை இரட்சிக்கக்கடவன்; எவனது கோட்டின் நுனியாலே தாங்கப்பட்டு இப்பூமியானது சகல பிரபஞ்சத்தையும் தரிக்கின்றதோ அந்த மகா வராகரூபமுள்ள ஸ்ரீகேசவன் உன்னை இரட்சிக்கக்கடவன்; நகங்களி னுனிகளினாலே சத்துவின் மார்பைப் பிளந்த வைபவமுள்ள ஸ்ரீநரசிம்மரூபியான ஜனார்த்தனன் எங்கும் உன்னைக் காக்கக்கடவன்; முன் வாமனனாயிருந்து பின்பு ஒருக்ஷணத்திலே மூவடிகளினாலே முறையே மூன்றுலகங்களையு மாக்கிரமித்தவனாய் அநேக திவ்வியாயுதங்கள் திருக்கைகளிலே விளங்கப்பெற்றவனாயுமுள்ள பகவான் எப்போதும் உன்னைப்பாதுகாக்கக்கடவன்; உன்சிரத்தைக் கோவிந்தன் காக்க, உன் கண்டத்தைக் கேசவன் காக்க, குறியுள்பட வயிற்றினிடத்தையெல்லாம் ஸ்ரீவிஷ்ணுவும் முழந்தாள் அடிகள் இவற்றைச் ஜனார்த்தனனும் காக்கவேண்டும்; முகத்தையும் கைகளையும் அவற்றின் கீழ்ப்புறங்களையும் மனத்தையும் மற்றுமுள்ள பொறிகளெல்லாவற்றையும் தடுக்கக்கூடாத ஆட்சியுடைய ஸ்ரீமந் நாராயணன் இரட்சிக்கவேண்டும்; உனக்குப் பகையாளிகளாயுள்ள பிரேத கூசுமாண்ட

* கோமயசூர்ணம் - விபூதி.

இராட்சாதிகள் சங்கு சக்கரம் கதை முதலான திவ்வி யாயுதங்களைத் திருக்கைகளி லேந்திய எம்பெருமா னுடைய திருச்சங்கின் ஓசையினாலே அதஞ்செய்யப் பட்டு நாசமாகக்கடவர். ஸ்ரீவைகுண்டன் திசைகளிலே உன்னைப் பாதுகாக்கவேண்டும். மூலைகளில் மதுசூதனன் காக்கவேண்டும்; வானத்தில் இருடீகேசன் இரட்சிக்க வேண்டும்; பூமியிலே தரணிதரன் பாலிக்க வேண்டும்" என்று இப்படி நந்தகோபர் சாந்தி கருமங்களைச்செய்து பின்பு அக்குழந்தையைச் சகட்டின் கீழ்ப்புறத்திலே தொட்டிலில் வளர்த்தினார். அங்கு விழுந்திருந்த அப் பேய்ச்சியின் உடலைக்கண்டு வந்த இடையரெல்லாம் பயத்தையும் ஆச்சரியத்தையு மடைந்தார்கள்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆறும் அத்தியாயம்

## சகடயமளார்ச்சுன பங்கம்

முன்னுரைத்தபடி சகட்டின்கீழ்ப் பள்ளிகொண் டிருந்த ஸ்ரீ மதுசூதனன், ஒருகால் அச்சகட்டில் அசுர னொருவன் வந்து ஆவேசித்தது அறிந்து முலைப் பாலுக்கு அழுகிற பாவனையிலே தன்சிறிய திருவடிகளை மேலே தூக்கி யருளினான். அத்திருவடிகளா லுதை பட்டமாத்திரத்தில் அச்சகடானது திருப்பப்பட்டுஅதன் மேலிருந்த கும்பமுதலானவைகள் உடையக்கீழே விழுந் தது. உடனே இடையரும் இடைச்சிகளும் "ஹாஹா" என்று கூவிக்கொண்டு ஓடிவந்து, மல்லாந்து படுத்துக் கொண்டிருக்கிற குழந்தையையும் கீழே விழுந்திருக்கிற சகட்டையும் பார்த்துத் திகைத்து "யாரிந்தச் சகட்டை யிப்படித் திருப்பினார்?" என்றார்கள். அதுகேட்டு அங்கு விளையாடிக்கொண்டிருந்த சிறுவர், இக்குழந் தைதான் அழுதுகொண்டே காலைத்தூக்க, அதன் தாக்குதலினாலே இச்சகடு திரும்பிக் கீழே வீழ்ந்தது. நாங்கள் பிரத்தியட்சமாய்ப் பார்த்தோம்" என்று

சொன்னார்கள். அது கேட்டபின்பு கோவலர் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள். நந்தகோபரும் ஆச்சரியத்தோடு குழந்தையை யெடுத்துக்கொண்டார். யசோதையும் சகட்டின்மேலிருந்து விழுந்து உடைந்த பாண்டங்களின் ஓடுகளையும் அச்சகட்டையும் தயிர், பூ, அக்ஷதை, இவைகளினாலே பூசித்தாள்.

பின்பு வசுதேவர் கர்க்கர் என்கிற தம் புரோகிதரை அனுப்ப, மகாஞானியான அம்முனிவரும் கோகுலத்துக்கு வந்து, யாருக்குந்தெரியாமல் ஏகாந்தத்திலே அவ்விரண்டு குழந்தைகளுக்கும் ஜாதகருமாதி சடங்குகளைச் செய்து, மூத்த குழந்தைக்கு இராமன் என்றும் இளைய குழந்தைக்குக் கிருஷ்ணன் என்றும் திருநாமஞ் சாத்தினார். ஓ மயித்திரேயரே! பின்பு இவ்விரண்டு பாலகரும் முழந்தாட்களையுங் கைகளையும் ஊன்றித் தவழ்பவராகி விளையாடிக்கொண்டே வருகையில், கோமயம் சாம்பல் இவற்றை யுடம்பிற் பூசிக்கொண்டு, நிமிஷமாகிலும் ஓரிடத்திலே நிற்காமல், மாட்டுத் தொழுவத்திலிருந்து கன்றின் றொழுவத்திலும், அங்கிருந்து மறுபடி மாட்டின் றொழுவத்திலும் ஓடுகிறதும், பசுவின்வால் கன்றின்வால் இவற்றை யிழுத்துத் துன்பப்படுத்துவதுமாகவிளையாடிக்கொண்டிருக்கிறதினாலே, யசோதையும் உரோகிணியும் இக்குழந்தைகளைத் தடைபடுத்தச் சத்தியற்றவர்களா யிருந்தார்கள். இப்படி அதிசஞ்சலராய்த் தடுக்கக்கூடாம லிருந்தபடியினாலே யசோதையானவள் ஸ்ரீகிருஷ்ணனைத் திருவுதரத்திற் கயிற்றினாற் கட்டி ஒருரலிலே பிணித்துக் குழந்தையை நோக்கி "மிகச் சஞ்சலமான சேஷ்டையுள்ளவனே! இனிமேல் ஓடு பார்ப்போம்" என்று சொல்லிவிட்டுத் தான் செய்யவேண்டும் வேலையிலிருந்து விட்டாள். இவ்வாறு யசோதை யிருக்கக் கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு அங்கிருந்த இரட்டை மருத மரத்தினடுவே எழுந்தருளினார். எழுந்தருளும்போது அவ்வுரல் குறுக்காய் நின்றிழுக்கப்பட்டபடியினாலே அநேக பெருங் கிளைகளுள்ள அம்மரங்களிரண்டும் முறிந்து வீழ்ந்தன. அவை விழுமளவி லுண்டான கடகடாவென்ற தொனி

யைக்கேட்டு அங்கிருந்தவர்கள் ஓடிவந்து, பெரிய விருக்ஷங்க ளிரண்டு முறிந்து வீழ்ந்திருப்பதையும், அவற்றினிடையிலே உரலோடு கட்டுண்டு புதிதாய் முளைத்த சிறுபற்களின் வெண்மையான காந்தி தோன்றப் புன்சிரிப்புக்கொண்டு தவழ்கின்ற பாலகனையும் பார்த்து ஆச்சரியப்பட்டு நின்றார்கள். இதனாலும் சுவாமிக்குத் தாமோதரனென்கிற திருநாமமுண்டாயிற்று. [தாம—கயிறு, உதரம்—வயிறு.] பின்பு நந்தகோபர் முதலானவர்களெல்லாம் இப்படியாகக் காண்கிற பெரிய உற்பாதங்களைக் கண்டு பயந்து திகிற்பிடித்தவராய், ஆலோசிக்கத் தொடங்கினார்கள். "பூதனைவந்து செத்ததும், சகடுமாறி வீழ்ந்ததும், காற்று முதலிய உபத்திரவமில்லாதிருக்க மரங்கள் முறிந்ததும் ஆகிய நாசத்திற்குக் காரணமான உற்பாதங்க ளனேகங் காணப்படுகின்றன. ஆதலால் இவ்விடத்தினால் நமக்குப் பயனில்லை. இந்தப் பிருகத்வனத்தைவிட்டு நாம் சீக்கிரம் வேறிடத்திற்குப் போகவேண்டுவது அவசியம். அப்படிச்செய்யாமற்போனால் இப்படிப்பட்ட பூசம்பந்தமான மஹோத்பாதங்களால் நம்முடைய ஆய்ச்சேரிக்குத் தீங்குநேரிடும், ஆகவே நாம் இதை விட்டுப்போகவேண்டும்" என்று ஆலோசித்து, அத்தலைவர்கள் தம்தம் கூட்டங்களை நோக்கிச் சீக்கிரம் பிரயாண சந்நாகஞ் செய்யுங்கள்" என்று கட்டளையிட்டார்கள். பின்பு அந்தந்தக் கூட்டத்தாரும் வண்டிகளின் மேல் சாமக்கிரிகைகளைப் போட்டுக்கொண்டு, கூட்டங்கூட்டமாய் மாடுமேய்க்கிறவர்கள் மாடுகளையும் கன்று மேய்க்கிறவர்கள் கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு பிருந்தாவனம்போய்ச் சேர்ந்தார்கள். இவர்கள் போனவுடனே அந்தப் பிருகத்தவனமானது நெல் சோறு தயிர் முதலானவை அங்கங்கே சிந்தியிருந்ததனாலே, காக்கை முதலான குரூரபக்ஷிகள் நிறைந்ததாய் விகாரப்பட்டுப் போயிற்று. பிருந்தாவனமோ மேலான காரியஞ் செய்யவல்ல கண்ணனாலே பசுக்கள் முதலானவை விருத்தியடைந்து செழிக்கும்படி குளிர்ந்ததிருவுள்ளத்தோடு அனுக்கிரகிக்கப்பட்டதனால், மிகவுங்கொடிய கோடைகாலத்திலும் மாரிகாலத்திலுமுண்டாவதுபோலே இளம்புல் செழிக்கப்பெற்றிருந்

தது. அந்தப் பிருந்தாவனத்திற் சென்று அவ்வாயர்க ளெல்லாம் அர்த்தசந்திராகாரமாக வாசஸ்தான மேற் படுத்தி, அதின் ஓரமெல்லாம் பண்டிகள் விடுமிட மூண் டாக்கித் தகுந்தபடி குடியிருந்தார்கள்.

பின்பு சிறிதுகாலஞ் செல்ல ஸ்ரீராமகிருஷ்ணர்க ளிருவரும், கன்று மேய்க்கும் பருவமுடையவர்களாகிக் * காகபக்ஷங்களைத் தரித்தவராய், அக்கினிகுமாரனை சாகன் விசாகன் என்பவர்களைப்போல் விளக்கமுற்று, மயிற்றோகையை முடியிலும் காட்டுமலர்களைக் காதிலும் அணிந்தவராய், இடையர்க்குரிய புள்ளாங்குழல்களினு லும் இலைகளினாலும் பல வாத்திய வோசைகளைச் செய்து கொண்டும், கைகொட்டுவதுஞ் சிரிப்பதுமாக ஓடிக் கொண்டும், ஒருவரையொருவர் தூக்கிச் சுமந்துகொண் டும், அப்படியே மற்றுமுள்ள இடைப்பிள்ளைகளோடு விளையாடிக்கொண்டும், கன்றுகளை மேய்த்தும், ஒரு வரோடொருவர் இணைபிரியாமல் ஓரிடத்திலேயே விளை யாடிக்கொண் டிருந்தார்கள். மயித்திரேயரே! இந்த மாயாலீலையைப் பாரும், சகல லோகங்களையுங் காப்பவர் கன்று காப்பவரானார்.

இப்படியிருக்கையில் மேகக்கூட்டத்தினாலே வான முழுது மறைத்துக்கொண்டு நீர்த்தாரைகளினாலே திசைகளை யொன்றாக்குவதுபோல மாரிக்காலம் வந்தது. அக்காலத்தில் புதிய புற்கள் நிறைய முளைத்திருப்பதி னாலும், அதன்மே லாங்காங்கே தம்பலப்பூச்சிகள் வியா பித்திருப்பதினாலும், பூமியானது பச்சைக்கல்லினாற் செய்து இடையிடைப் பதுமராக மிழைத்ததுபோலிருந் தது. புதிதாய்ச் செல்வமடைந்த காலத்தில் அடக்க மொழுக்கங்க ளில்லாதவர்களுடைய மனம் எப்படி யாகுமோ, அப்படியே அக்காலத்தில் தண்ணீர் வழி முறை நோக்காமல் இசைந்தபடி யோடிக்கொண் டிருந் தது. தாங்கொண்டதை விடாத மூர்க்கருடைய உரத்து நெருங்கியுமிருக்கிற பேச்சுகளினாலே சுருதி நியாயங் களுக்கு ஒத்துப்பேசுகிற சத்புருஷருடைய பேச்சுக்கள் எப்படி அடக்கப்பட்டு விளங்காவோ, அப்படி நிரு மலனான சந்திரன் கறுத்த மேகங்களினாலே மூடப்

* காகபக்ஷம் - பக்கங்களில் வைக்கும் குடுமி, ஜில்ப்பா.

பட்டு விளங்கவில்லை, * குணஹீனமான இந்திர வில்லானது ஆகாயத்தில் நிலைபெற்றது எப்படியிருந்த தென்றால், விவேகமில்லாத அரசனுடைய ஆசிரய பலத்தினாலே குணஹீனனான வொருவன் ஒரு பெரும் பதத்தில் நிலைபெற்றதுபோ லிருந்தது. வானத்தில் மேகங்களின்கீழே நிர்மலமான கொக்குக்களின் வரிசை யானது அபகாரஞ்செய்தல் முதலான தீயொழுக்க முடையவனிடத்திலும் நற்குலத்தான் செய்யு நற்செய் கைபோல் மிகவும் பிரகாசித்துக்கொண் டிருந்தது. உத்தம புருஷனிடத்திலே துர்ச்சனன் செய்த நேசம் போலே வானத்தில் மின்னலானது தோன்றி மறை ந்து நிலையாமலிருந்தது. மிகவு மூடத்தன முடையா தாம் நினைத்த கருத்து விளங்கும்படி பேசத்தெரியாமல் வாய்க்கு வந்தபடிப் பேசுகிற பேச்சுக்கள் வேறுபொரு ளைக் காட்டி விளங்காமற்போவதுபோல அக்காலத்தில் புல் பூண்டு முதலியவைகளால் மூடப்பட்டு வழிகளும் விளங்காமலிருந்தன. இப்படியாக வுண்டாய மயில் களு மான்களு மதித்திருக்கப்பெற்ற அந்த வருஷா காலத்திலே கிருஷ்ணராம ரிருவரும் காட்டில் இடைப் பிள்ளைகளோடுகூடி வெகு சந்தோஷமாய்ச் சஞ்சரித்துக் கொண் டிருந்தார்கள்.

அங்கு அவர்கள் திருவிளையாட்டைக் கேளும்: ஓரிடத்தில் பசுக்களோடு கானம் பாடிக்கொண்டும், ஓரிடத்தில் மிகவுங் குளிர்ச்சியான மரத்தடிகளி லுலா விக்கொண்டு மிருந்தார்கள். மற்றோரிடத்திற் சென்று கடப்பம்பூ மாலைகளையும் மயிற்றோகை மாலைகளையுஞ் சாத்திக்கொண்டு பலநிறமான மாலைகளின் துகள் களைத் திருமேனியிற் பூசிக்கொண்டு ஆடினார்கள். மற்று மோரிடத்திற்போய்த் தழைகளினாலே படுக்கைபோட்டு அதிற்படுத்துத் திருக்கண் வளர்த்தி செய்தார்கள். இன்னுமோரிடத்தில் மேகங் கர்ச்சிக்கு மளவில் அஞ்சினவரைப்போலே ஹர ஹர வென்று கூவிக் கொண்டும், ஓரிடத்தில் இன்னான் பாடுவ திப்படி யென்று அந்தச் சிறுவர் பாடுந் திறத்தை யெடுத்துச்

* குணம் என்றால் நாணுக்கும் பேரதலால், குணமில்லாத வில்லென்று சிலேடை யொத்திருக்கும்.

சொல்லித் தாங்களும் பாடிக்கொண்டு மிருந்தார்கள். ஓரிடத்தில் மயில்கள் கூப்பிடக்கேட்டு அவைபோலத் தாம் குழலூதியருளினார்கள். இவ்வாறு அனேகவித பாவனைகளான திருவிளையாட்டுக்களினாலே அண்ணன் தம்பிக ளிருவரும் மிகுந்த நேசத்தோடும் சந்தோஷத் தோடும் மற்றோர்களையுங் களிப்பித்துக்கொண்டு, இரவி லுங்கூடச் சிறிதுபொழுது கோக்களோடுங் கோபால பாலகரோடுங்கூடி விளையாடித் தங்களிடஞ் சேருவார் கள். கேட்டீரோ மயித்திரேயரே! அக்குமார ரிருவரும் காந்தி பலம் முதலான குணங்களினாலே தேவாமிச மென்று தோன்றும்படி விளங்கிக்கொண்டு நந்தன் திருமாளிகையில் வளர்ந்து வந்தார்கள்.

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஏழாம் அத்தியாயம்

# காளியமர்த்தனம்

ஒருகால் கண்ணன் பலராமரைவிட்டுத் தனித்து வனத்துக்குச் சென்று, இடைப்பிள்ளைகளோடுகூடக் காட்டுப் பூமாலைகளை யணிந்து விளங்கிக்கொண்டு உலாவி நின்றார். அப்படி யுலாவுகையில் அலைகின்ற பேரலைகளோடு கூடினதாய்க் கரைகளில் ஒட்டியிரா நின்ற நுரைகளினாலே சிரிப்பதுபோ லிருக்கிற யமுனா நதியினிடத்துச் சென்று, அதில் விஷாக்கினியினாலே கொதிப்படைந்த நீருள்ளதாய் மிகவும் பயங்கரமா யிருக்கிற காளியமடுவையும், அதின் விஷாக்கினியின் வேகத்தினால் கரையிலுள்ள மரங்களெல்லாம் எரிக்கப் பட்டிருப்பதையும், காற்றிலகப்பட்ட நீர்த்துளிகளின் பரிசத்தினாலே வானத்திற் பறக்கிற பறவைகள் எரிந்து போவதையுங் கண்டு, இந்த மடு வெகுகொடுமையான மிருத்துவின் வாய்போ லிருக்கின்றதென்று நினைத் தருளி, பின்பு "ஓகோ! பரமதுஷ்டனாயும் விஷமே ஆயுதமாகக் கொண்டவனாயுமுள்ள காளியநாகன் இதி

விருக்கின்றானன்றோ? இவனை நாம் ஜயித்தால் இம் மடுவைவிட்டுக் கடலுக்குப் போய்ச்சேருவான். இம் மடுவி லவனிருப்பதனாலே இவ் யமுனாநதி கடலெட்டு மளவுங் கெடுக்கப்பட்டு நீர்வேட்கையுள்ள மனிதர் பசுக்கள் முதலானோர்க்குப் பானயோக்கிய மாகாம லிருக் கின்றன. ஆதலால் இந்தத் துஷ்டசர்ப்பத்துக்கு நாம் தண்டனை செய்யவேண்டும். அதனால் இவ்வாய்ப்பாடியி லிருப்பவரெல்லாம் அச்சமற இந்நதியை யனுபவிப் பார்கள். வழிதப்பி நடக்கிற துஷ்டர்களை நிக்கிரகிக்கும் பொருட்டன்றோ நாம் அவதரித்தருளியது. ஆதலால் கிஞ்சித்துச் சமீபத்திற் பெருங் கிளைகளோடுகூடி விளங்காநின்ற இந்தக் கடப்பமரத்தின் மேலேறி இச் சர்ப்பத்தின் மடுவிற் குதிப்போம்" என்று திருவுள்ளத் திற் சிந்தித்து, ஸ்வாமி திருப்பரிவட்டத்தை நன்று யிழுத்துக் கட்டிக்கொண்டு, அம்மரத்தின் மேலேறி, அதனின்றும் வேகமாய் மடுவிற் குதித்தார். அப்படி ஸ்வாமி குதித்ததனால் அந்த மடு மிகவும் அலைப் படைந்து, நீரின் பரவுதலினால் தூரத்திலிருந்த மரங் களையும் நனைத்துவிட்டது. அந்த மரங்களெல்லாம் சர்ப்பத்தின் விஷாக்கினிச் சுவாலைகளினாற் கொதித்த நீர் பட்டமாத்திரத்திலே தீ மூட்டியதுபோல நாற் புறங்களினாலுஞ் சுவாலைகள் பரவ எரிந்துபோயின. ஸ்வாமியோ அந்தக் காளியமடுவிற் குதித்தவுடனே உரக்கத் தோளைத் தட்டியருளினார். அந்தத் தோள் தட் டிய வோசையைக் கேட்டவுடனே, கோபத்தினாற் கண்க ளெல்லாஞ் சிவக்க முகங்களில் விஷச்சுவாலைகள் மிகுந்த வனாய் மகா விஷமுள்ள பல வேறு சர்ப்பங்களோடு கூடக் காளியனென்னுஞ் சர்ப்பராஜன் வெளியில் வந் தான். அந்த நாகனுடைய அனேக பத்தினிகளும் அழ கிய முத்துமாலைகள் அணிந்தவராய் உடம்பை யசைப் பதினாலே அசையாநின்ற குண்டலங்களின் காந்திகள் வீச வெளியில் வந்தார்கள். இவ்விதமாய் வெளியில் வந்த காளியனும் மற்றைச் சர்ப்பங்களும் தங்களுடைய உடல்களினாலே கண்ணனை இறுகப்பிணித்துக் கடித்தன. இவ்வாறு அம் மடுவில் வீழ்ந்து சர்ப் பங்களினாலே சுற்றப்பட்டுக் கிடக்கிற ஸ்ரீ கிருஷ்ண

னைப்பார்த்து இடைப்பிள்ளைகளெல்லாம் சோகமடைந்து, ஆய்ப்பாடியிற் சென்று "ஐயோ! நம்முடைய கிருஷ்ணன் மோகத்தினாலே காளியமடுவில் விழுந்து முழுகிப்போய் காளியனாலே விழுங்கப்படுகின்றான். ஓடிவாருங்கள், பாருங்கள்" என்று கூவினார்கள். இடி விழுந்ததற்கொப்பான அந்தப் பேச்சைக்கேட்டு அங்கிருந்த யசோதை முதலிய கோபிகைகளும் கோபாலரும் "ஐயோ! ஐயோ! கிருஷ்ணன் எங்கே? எப்படியிருக்கிறான்?" என்று கதறிக்கொண்டு ஒன்றுந் தோன்றாமல் பரவசராய்க் கால் இடற அம்மடுவண்டைக்கு வந்தார்கள். அப்படியே நந்தகோபரும் பலபத்திரரும் பரபரப்புடனே ஓடிவந்தார்கள். வந்தவர்களெல்லாம் சர்ப்பங்களின் உடல்களினாலே சுற்றப்பட்டு அசையமாட்டாமற் கிடக்கிற சுவாமியைப் பார்த்துக் கண்களில் தாரை தாரையாய் நீர்வடியக் கதறி யழுதுகொண்டு நின்றார்கள். நந்தகோபரும் யசோதையும் கண்ணன் திருமுக மண்டலத்திலேயே கண்களை வைத்து லயித்தவர்களாய் ஒரு செய்கையுமின்றி மரம்போலானார்கள். அப்போது கோவியர் சுவாமிக்கு நேரிட்ட ஆபத்து நீங்குவதரிது என்று அதைரியமும் பயமும் பற்றினவர்களாய் நாவுலர்ந்து வாய்குளற அழுதுகொண்டே சொன்னதாவது.

"நாமெல்லாம் யசோதையோடுகூட இந்தக் காளியமடுவில் விழுந்துவிடுவோம், திருவாய்ப்பாடிக்குப் போகக்கூடாது, ஏனெனில் சூரியனில்லாத பகலேதுக்கு? சந்திரனில்லாத இரவு ஏதுவுக்கு? இடபமில்லாத பசுக்களேதுக்கு? அப்படியே ஸ்ரீகிருஷ்ணனில்லாத திருவாய்ப்பாடி நமக்கேதுக்கு? ஆதலால் அங்கே நாம் மறுபடி போவது தகுதியன்று. ஸ்ரீகிருஷ்ணனைவிட்டுத் தண்ணீரில்லாத குளம்போலே அழகற்றதும், சுகஹேதுவாகாததுமான கோகுலத்திற்கு போகமாட்டோம். எங்கே கருநெய்தற்பூப்போலே மனோகரமான காந்தியுடையவனான கண்ணன் இல்லையோ, அது தாய்வீடானாலும் அதில் வசிப்பதனாற் சந்தோஷமுண்டாகமாட்டாது. ஓ கோவியரே! மலர்ந்த செந்தாமரை யிதழ்போன்ற திருக்கண்களையுடைய கண்ணனைக்

காணமல் மாடுகள் வாசஞ்செய்யும் அந்தவூரி லெப்படி வாசஞ் செய்வீர்கள்? தேன்போலே மிகமதுரமான சூத்திகளாலே யாவருடைய இருதயங்களையுங் கவர வல்லவனை செந்தாமரைக்கண்ண னில்லாத ஆயர் பாடிக்குப் போகக்கடவேமல்லோம். ஓ கோவியரே! பாருங்கள் மகாசர்ப்பத்தினுற் பிணிக்கப்பட்டு வருந்து கையிலும் நம்மைப் பார்த்துக் கண்ணன் புன்சிரிப்புள்ள திருமுகமண்டலத்தினுல் விளங்குகிருனே, இப்படிப்பட்டவனை விட்டு நாம் எப்படிக் கோகுலத்திற்குப் போகலாம்" என்றிவ்வாறு கோவியர் கதறுவதையும் பயத்தினுல் சோர்வடைந்து கண்ணுணியிட்டு நிற்கின்ற கோவிலரையும், மிகவுந் தீனராய மகன் முகத்தையே நோக்கிக்கொண்டிருக்கிற நந்தகோபரையும், மூர்ச்சை போய்க் கிடக்கிற யசோதையையுங் கண்டு ஸ்ரீ பலபத்திரர் ஸ்ரீகிருஷ்ணனேடு தங்களுக்குரிய சங்கேதவார்த்தைகளினுல் இவ்வாறு அருளிச்செய்ய லாயினுர்:—

"பிரம ருத்திராதிகளுக்கும் அதிபதியானவனே! சுவாமீ! நீயேன் அனந்தனை உன் சுவரூபத்தை மறந்து மனுஷியனயிருக்குந் தன்மையைக் காட்டுகிருய்? சக்கரத்தின் ஆரங்களுக்கு நடுக்கண்போலே உலகங்களுக்கெல்லாம் நீயே ஆதாரமாயிருக்கிருய். அன்றியும் சிருட்டிப்பவனும் சங்கரிப்பவனும் ரட்சிப்பவனும் நீயே. சகல வேதசொரூபியும் நீயே. சிந்திக்கக்கூடாத சொரூபமுடையவனும் நீயே. இந்திரன் உருத்திரன் அக்கினி வசுக்கள் ஆதித்தர் மருத்துக்கள் அசுவினி தேவதைகள் முதலானவர்களாலேயும் சனகாதி யோகிகளினுலேயும் தியானிக்கப்படுகிருய். ஓ ஜகந்நாதனே! நீ பூமியின் பாரத்தை நீக்கும்பொருட்டு மனுஷ்யாவதாரஞ் செய்தருளினுய். உனது விபூதியான நானும் உன் தமையனுகப் பிறந்தேன். ஓ பகவானே! நீ மனுஷ்ய லீலையை யனுசரித்து எழுந்தருளி யிருக்கையாலே சகல தேவதைகளும் இங்கவதரித்து நீ யனுசரித்த மனுஷ்ய லீலையைச் செய்து வருகிருர்கள். ஓ எப்பெருமானே! நீ உன்னுடைய லீலைக்கு உபயோகமாக முந்தித் தெய்வப்பெண்களைத் திருவாய்ப்பாடியில்

அவதரிப்பித்துப் பிந்தி நீ யவதரித்தாயன்றோ? இப்படி அவதரித்த வுனக்கும் எனக்கும் உன் சங்கற்பத்தினாற் பிறந்த கோபாலரும் கோபிகைகளுமன்றோ பந்துக்களாகிறார்கள். அப்படியிருக்க மிகவும் விசனமுற்று நிற்கிற இவர்களையேன் உபேட்சிக்கிறாய்? ஓ கிருஷ்ணா! இதுவரையில் நீ மனுஷ்ய பாவனையைக் காட்டினதும் பாலகனாயிருப்பதின் லீலையைக் காட்டியதும்போதும். இனிச் சீக்கிரமாய் மகா துஷ்டசொரூபமான இப்பாம்பை அடக்கியருள்” என்றிப்படி ஸ்ரீ பலபத்திரர் நினைப்பூட்ட, ஸ்ரீ கிருஷ்ணன் புன்னகை கொண்டவனாய் உடனே அந்தச் சர்ப்பத்தை ஓர் அறை அறைந்து அதின் உடம்பின் கட்டினின்றும் தன்னை விடுவித்தருளினான்.

பின்பு தமது இரண்டு திருக்கைகளினாலும் அக்காளியனுடைய நடுத்தலையை யமுக்கி வணக்கி யதன்மேலேறி நர்த்தனஞ் செய்தருளினான். இப்படிச் சுவாமி திருவடிகளைக்கொண்டு துவைத்ததனாலே அந்தச் சர்ப்பராஜனுக்குப் பிராணங்களெல்லாம் படத்திலே வந்தபடியால் துவைக்கப்படாத மற்றொரு படத்தை யவன் தூக்கியெடுக்கையில், அதனையு மிப்படியே சுவாமி தந்திருவடிகளினாலே வணக்கியருளினார். இவ்வாறு எந்த எந்தப் படத்தைத் தூக்குவனோ அந்த அந்தப் படத்தையும் நர்த்தனஞ்செய்யுந் திருவடிகளினாலே துவைத்து நிற்க, அந்தச் சர்ப்பராஜன் சக்தியற்றவனாய் மூர்ச்சை யடைந்ததுமன்றி, சுவாமி நர்த்தனமுறைமையில் வட்டமாய்ச் சுற்றுவது முதலான பிராந்தி கதிகளினாலும், ஒருபக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்குப் போவது முதலான இரேசக கதிகளினாலும், பாதத்தை முன்னீட்டி வைப்பதாகிய தண்டபாத கதியினாலும், நசுங்கி மிகுந்த உதிரத்தையுங் கக்கினான். இவ்வண்ணம் பலமற்று தலையுங் கழுத்தும் வணங்கிப்போய் அதிகமாய் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு சோர்வடைந்திருக்கிற தங்கணவனைப் பார்த்து, மிகவும் விசனமுடையவர்களாய் அந்நாகனுடைய பத்தினிகள் பரபரப்புடன்வந்து, ஸ்ரீகிருஷ்ண

னுடைய திருவடிகளைச் சரணம் புகுந்து, இவ்வாறு விண்ணப்பஞ் செய்தார்கள்.

"ஓ தேவதேவேசுரனே! அடியோங்கள் உம்மை யறிந்துகொண்டோம். எப்படியாகவென்றால் நீ சர்வக்கியனும் உத்தமருக்கெல்லாம் உத்தமனும் வாக்குக்கு மனசுக்கு மெட்டாத பாஞ்சோதியென்று சொல்லப்பட்ட பிரம்மத்தின் திருவவதாரமாயு மிருக்கின்றவனென்று தெரிந்துகொண்டோம். ஆதலின் நீயே பரமேச்சுரன். கர்மபந்தாதிகளாலன்றித் தனது திருவுள்ளத்தினாலேயே பலவிதமாய் அவதரிப்பவனும், எங்கும் வியாபித்திருப்பவனுமான வுன்னைத்தேவர்களுந் துதிக்கவல்லவ ரல்லாதிருக்கப் பேதைப் பெண்களாகிய நாங்கள் துதிக்கவல்லோமோ? பிருதிவி அப்பு தேஜசு வாயு ஆகாயம் ஆகிய பஞ்சபூத மயமான பிரமாண்டமெல்லாம் எவனுடைய சொரூபத்தின் அற்பாமிசத்தின் அமிசமோ, அப்படிப்பட்டவனை நாங்களெப்படி துதிக்கமாட்டுவோம்? அணுவுக்கு சூக்ஷுமமாயும் ஸ்தூலங்களுக்குப் பெரிதாயு மிருக்கிற எவனுடைய பாமார்த்தமான சொரூபத்தை யோகிகளும் அறியமாட்டார்களோ, அப்படிப்பட்ட வுன்னைச் சரணமடைகிறோம்? எவனுடைய உற்பத்திக்குப் பிரமாவும் விநாசத்திற்கு ருத்திரனும் இரக்ஷணத்திற்கு மற்றொருவனுங் காரணமாகமாட்டார்களோ, அப்படிப் பட்டவனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறோம். சுவாமீ! தேவரீருக்குக் கிஞ்சித்தாகிலும் கோபமென்பது இல்லை ஆனால் இந்தக்காளியனைத் தண்டித்த தெதனாலென்றால், உலகமரியாதையை ஸ்தாபிக்குந் தன்மையாலே தான். இனி அடியேங்கள் விண்ணப்பத்தைக் கேட்டருளவேண்டும். பெண்பிள்ளைகள் திறத்திலும் பேதைகள் திறத்திலும் இளைத்தவர் திறத்திலும் பெரியோர்கள் இரங்கவேண்டுமன்றோ? ஆதலின் மெலிந்து இளைத்த இக்காளியன் திறத்தில் இரக்கங் கொண்டருளவேண்டும். தேவரீர் பொறுமை யுடையவர்களுக்குள் சிறந்தவரன்றோ? நீ சகல லோகங்களுக்கும் ஆதாரமாகியவன். இந்த நாகனோ அற்பபலமுள்ளவன் இப்படிப்பட்ட இவன் உன் திருவடியினால் துவைக்கப்

பட்டதனுல் அரைமுகூர்த்தத்திலே பிராணனை யிழப் பான். எம்பெருமானே! அற்பவீரியனுன இச்சர்ப்ப ராஜ னெங்கே? உலகங்களுக்கெல்லாம் இருப்பிடமான நீ யெங்கே? பிரீதியானது சமனுயிருப்பவனிடத்திலும் துவேஷமானது மேலாயிருப்பவனிடத்திலும் பண் ணத் தக்கவையே யல்லாமல், தாழ்ந்தவனிடத்தில் பண் ணத் தகுமோ? ஆதலால் ஓ லோகநாதனே! மிக நொந்து கிடக்கிற இவன் விஷயத்தில் அனுக்கிரகஞ் செய்யவேண்டும். நாகன் உயிரிழக்கும்படியான நிலையி லிருக்கிருன். அடியேங்களுக்குப் பதிபிக்ஷை சாதிக்க வேண்டும். சகல லோகங்களுக்கு நாதனே! சகல ஆத்துமாக்களுக்கு நாதனே! மகா புருஷர்களுக்கு முன்னுனவனே! இந்நாகன் உயிரிழக்க விருக்கிருன். அடியேங்களுக்குப் பதிபிக்ஷை சாதித்தருளவேண்டும். வேதாந்தங்களினு லறியத்தக்கவனே! தேவதைகளுக் கெல்லா மதிபதியே! துஷ்டரான அசுரரை நாசஞ் செய்பவனே! இந்நாகன் உயிரிழக்க விருக்கிருன். அடியேங்களுக்குப் பதிபிக்ஷை யிட்டருள வேண்டும்.”

என்றிப்படி நாககன்னிகைகள் பிரார்த்தித்து விண் ணப்பஞ் செய்ததைத் திருவுள்ளம்பற்றிக் கண்ணன் தன் திருவடிகளால் குட்டுவதை நிறுத்தினதனுலே அந்தக் காளியன் மிகவு முடம்பு மெலிந்தவனு யிருந்தா லும் கிஞ்சித்துத் தைரியமடைந்து இளைப்பு நீங்கி, “தேவதேவர்களுக்கும் அதிபதியே! அனுக்கிரகிக்க வேண்டும்” என்று மெள்ள மெள்ளச் சிறிது விண் ணப்பஞ் செய்யலாயினுன்.

“எம்பெருமானே! எந்த உன்னுடைய அணிமா வாதி எண் குணங்களையுடைய ஐசுவரியமானது இயல்பாயும் மேலானதாயும் ஒப்பில்லாததாயு மிருக் கின்றதோ அப்படிப்பட்ட உன்னை யெப்படி ஸ்தோத் திரஞ் செய்வேன். நீ பிரகிருதிக்கு மேற்பட்ட ஆத் தும சுவரூபியாயும் அவனுக்கு மேற்பட்ட முக்த சொரூபியாயு மிருக்கிருய். இந்திரியாதிகளுக்கு மேம் பட்ட பிரதானமும் உன்னிலிருந்தே யுண்டாகின்றது. இப்படியாகச் சொல்லப்பட்ட பத்தன், முத்தன், பிர

தானம் ஆகிய இவைகளுக்கு மேலானவனென்று சொல்லப்பட்டவனும் நீயே; ஆதலின் உன்னை நானெப்படித் துதிக்கமாட்டுவேன்? எவனி லிருந்து பிரமதேவனும் உருத்திரனும் இந்திரன் சந்திரன் மருத்துக்கள் அசுவினிகள் வசுக்கள் ஆதித்தர் முதலானவர்களும் உண்டானார்களோ அத்தகையவுன்னை நானெப்படித்துதிக்கமாட்டுடேன். தன் திருவுள்ளத்தினாலே திருமேனியை யுடையவனை எவனுடைய ஓ இரவயவத்தின் சூக்ஷ்மாம்சமாய் இந்தச் சகல லோகமு மிருக்கின்றதோ அப்படிப்பட்ட வுன்னை நானெப்படி ஸ்தோத்திரஞ் செய்வேன். மூர்த்தமாயும் அமூர்த்தமாயுமுள்ள உருவமுடையவனை எவனுடையபாமார்த்த சுவரூபத்தைப் பிரமா முதலான தேவர்களு மறியமாட்டார்களோ அவனை நானெங்ஙனந் துதிப்பேன்? எவனைப் பதுமகர்ப்பன் முதலான தேவர்கள் நந்தநவனதிகளி லுண்டான திவ்விய புஷ்பகந்த முதலானவைகளினாலே ஆராதிக்கிறார்களோ அப்படிப்பட்டவனை நானெப்படி யாராதிக்கமாட்டுவேன்? யோகிகளெல்லாம் சகலேந்திரியங்களையும் விஷயங்களி னின்று திருப்பிச் செய்யுந் தியானயோகத்தினாலே எவனை யர்ச்சிக்கிறார்களோ அவனை நானெப்படி யர்ச்சிக்கமாட்டுவேன்? சனகாதி மகாயோகிகளெல்லாம் எவனுடைய சுவரூபத்தைத் தியானத்தினாலே தங்கள் இருதயங்களிலே நிறுத்தி * அஹிம்சை முதலான புஷ்பங்களினாலே யர்ச்சிக்கிறார்களோ அவனை நானெவ்வாறு அர்ச்சிப்பேன்? ஓ தேவதேவேசுவரனே! இவ்வளவு அற்பனாகிய நான் அவ்வளவு மேன்மையுள்ளவுன்னை யர்ச்சிக்கவுந் துதிக்கவும் பணியவும் வல்லமையுடையேனல்லேன். ஆகிலும் நீ உன்னுடைய கிருபையொன்றையே கொண்டு அடியேனை யனுக்கிரகித்தருள

* அஹிம்சையாவது கொலைசெய்யாமை, இது முதல் புஷ்பம், இந்திரியங்களைச் செயிப்பது இரண்டாம் புஷ்பம், சகல பிராணிகளிடத்திலு மிரக்கத்தோ டிருப்பது மூன்றும் புஷ்பம்; எப்பிழையும் பொறுத்திருப்பது நாலாம் புஷ்பம்; மனதை யடக்கி நிற்பது ஐந்தாம் புஷ்பம், தவம் ஆறும் புஷ்பம்; தியானம் ஏழாம்புஷ்பம்; சத்தியம் எட்டாம் புஷ்பம் ஆக இவ்வெட்டுப் புஷ்பங்களினாலே எம்பெருமான் உகந்தருளுவதுபோலே வேறு புஷ்பங்களினாலே உகப்பதில்லை.

வேண்டும். ஸ்ரீ கேசவனே! அடியேன் பிறந்தது கொடுமையான சர்ப்பஜாதியன்றோ? அதனாலே அந்தச் சுபாவ மிப்படி யிருக்கிறதேயல்லது அடியேனிடத்தில் அபராத மொன்றுமில்லை. ஓ அச்சுதனே! நீயே சகல லோகங்களையுஞ் சிருட்டித்துச் சங்கரிக்கிறா யாதலால் அந்தப் பொருள்களின் ஜாதி ரூப சுபாவங்களும் உன்னாலேயே யுண்டாக்கப்படுகின்றன. எந்த ஜாதி ரூப சுபாவங்களினாலே நான் சிருட்டிக்கப்பட்டேனோ அவைகளுக்கேற்ற நடக்கையே என்னிடத்தி லிருக்கின்றது. இதுதான் நன்மை. ஓ தேவதேவனே! அடியேன் நீ சிருட்டித்த ஜாதி முதலானவைகளுக்கு மாறாக நடப்பேனாகில் உன் கட்டளைக்கு மாறு நடத்தலாகிய குற்றம்பற்றி அடியேனை நீ தண்டிப்பது நியாயம். உன் ஸ்ரீசூக்தியும் அப்படித்தானன்றோ இருக்கிறது. ஆகிலும் ஓ சுவாமீ! நிர்மூடனான அடியேன் திறத்தில் தண்டனை செய்தருளினாய். இது அடியேனுக்குக் கொடுமை தீர்ப்பதா யிருந்ததனால் கொண்டாடும்படியான வரமேயாகின்றது. இது மற்றொருவராற் கிடைக்குமாகில் சிலாக்கிய மாகாது. ஸ்ரீபகவானே! நீ விஷமும் பலமும் அற்றுப்போகத்தக்கதாய் அடியேனைத் தண்டித்தருளினாய். பிராணனொன்றுதா னிருக்கின்றது. அதைப் போக்காமல் தந்தருளும்படி வேண்டுகிறேன். இனி அடியேன் செய்யத்தக்கது இன்னதென்று நியமித்தருளவேண்டும்" என்றிப்படிப் பிரார்த்தித்த காளியனிடத்திலே சுவாமி கிருபை கூர்ந்து, "ஓ சர்ப்பராஜனே! இனி நீ இவ் யமுனாநதியிலே க்ஷணகாலங்கூட இருக்கவேண்டாம். உன் புத்திர களத்திராதி பரிவாரங்களோடு சேர்ந்து சமுத்திரஞ் சேரக்கடவாய். நீ கருடனுக்குப் பயப்பட வேண்டாம். உன் சிரசில் என் திருவடி யடையாள மிருப்பதைக் கண்டு உன்னை யவன் ஒன்றுஞ் செய்ய மாட்டான்" என்றருளிச்செய்து அந்தக் காளியனை விட்டுவிட்டார்.

பின்பு அந்த நாகன் சுவாமியின் திருவடித்தாமரைகளிலே விழுந்து தண்டம் சமர்ப்பித்து என் புத்திர மித்திர களத்திராதிகளோடு யாவரும் பார்த்துக்

கொண்டேயிருக்க, அந்த மடுவைவிட்டுச் சமுத்திரம் போய்ச் சேர்ந்தான். இவ்விதமாய்ச் சர்ப்பம் போன பின்பு கரையேறிவந்த கண்ணனை இறந்துபோய் மறுபடியெழுந்து வந்தவனைக் கண்டதுபோலேகண்டு, நந்தன் முதலானோரெல்லாம் மிகுந்த அன்பினாலே கட்டிக்கொண்டு, ஆனந்தக்கண்ணீர்விட்டு நனைத்தார்கள். மற்றுமுள்ள கோபாலர்கள் கண்ணனுடைய மேன்மையான சேஷ்டிதங்களையும், அந்த யமுனையாற்று நீர் பரிசுத்தப்பட்டுப் போனதையுங் கண்டு, மிகுந்த ஆச்சரியமுற்றவர்களாய், அன்போடுஞ் சந்தோஷத்தோடும் கண்ணனைத் துதித்து நின்றார்கள். இவ்வாறு கோவலரும் கோவியரும் முன்னடந்ததும் இப்போது நடந்ததுமான சரித்திரங்களை யெடுத்துப் பாடித் துதித்துச் சூழ்ந்துவர மகாவிலாசத்தோடு சுவாமி திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளினார்.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## எட்டாம் அத்தியாயம்

# தேனுகாசுரவதம்

பின்பு மறுபடியும் ஸ்ரீபலபத்திர கிருஷ்ணர்களிருவரும் சேர்ந்து மாடுமேய்த்துக்கொண்டே அங்கிருந்த இரமணீயமான ஒரு பனங்காட்டிற் சென்றார்கள். அப்பனங்காட்டிலே தேனுகனென்னு மசுரன் கழுதையின் வடிவாய் மிருகங்களின் மாமிசங்களை ஆகாரமாகக் கொண்டு வாசமாயிருந்தான். அங்கு மனிதர் பிரவேசியாமையாலே அநேகமாய் பனம்பழங்கள் நன்றாய்ப் பழுத்துக் குமுகுமென்று வீசித்துக்கொண்டிருந்தமையால் அவ்விடைப் பிள்ளைகளெல்லாம் அக்கனிகளை விரும்பிச்சொன்னதாவது, "ஓபலபத்திரா! ஓகிருஷ்ணா! இக்காடு தேனுகனென்னு மசுரனால் எப்போதுங் காக்கப்பட்டிருக்கின்றது. அதனால் இங்கு நன்றாய்க்கனிந்த கனிகள் திரளாயிருக்கின்றன. பாருங்கள், திசைகளெல்லாங் கமழும்படிக் கிடக்கின்ற இக்கனிகளை யாங்கள்

விரும்புகின்றோம். உங்களுக்குச் சம்மதியிருந்தால் இவற்றை யுதிருங்கள். நீங்கள் வெகு சக்திமான்களாதலால் விண்ணப்பஞ் செய்தோம்" என்று கோபகுமாரர் செய்த விண்ணப்பத்தைக்கேட்டு ஸ்ரீசங்கர்ஷணர் "இது நாம் செய்யவேண்டியதுதான்" என்று அக்கனிகளை யுதிர்க்கத் தலைப்பட்டார். கண்ணனும் "சரிதான்" என்று சொல்லி யுதிர்த்தருளினர். இப்படியிவ்விருவரும் பழங்களை யுதிர்க்க, அவை விழுகின்ற ஓசைகேட்டு அண்டக்கூடாத துஷ்டாத்துமாவான அந்தக் கழுதையசுரன் கோபமூண்டு ஓடிவந்து பின்னங்காலிரண்டினாலும் பலராமனை மார்பி லுதைத்தான். உடனே அவரும் அதிலாகவமாய் அப்பின்னங்காலிரண்டையும்பற்றி யவ்வசுரக் கழுதையைச் சுழற்றி உயிரிழக்கும்படி அப்பனைமரத்தின்மே லெறிந்தார். எறியவே பெருங்காற்று மேகங்களை வீழ்த்துவதுபோல் அக்கழுதை அநேகம் பழங்களை வீழ்த்திக்கொண்டு தானுந் தரையில் விழுந்து உயிர்விட்டது. பின்பு அவ்வசுரனைச் சேர்ந்த கழுதைரூபந்தரித்த அசுரரனேகர் ஓடிவந்து, இவர்களோடு போரிடுகையில், ஸ்ரீகிருஷ்ண பகவான் சிலரையும் மூத்தவர் சிலரையுமாகப் பிடித்துச் சுழற்றி யவர்களுடைய தலைவனை யெறிந்ததுபோலவே வேடிக்கையாய் மரங்களின்மீதி லெறிய, அவர்களெல்லாம் பிராணம் போனவர்களாய்ப் பழங்களோடுகூடப் பூமியில் விழுந்தார்கள். அப்போது அந்நிலமானது பனம்பழங்களுங் கழுதை யுடல்களும் நிறைந்து ஒருவகையாய் விளங்கிற்று. பின்பு அக்கோவலரெல்லாம் வேண்டுமளவும் பழங்களைப் புசித்துக் களித்து அம்மகா புருஷரிருவரையுந் துதித்தார்கள். பசுக்களும் இதுவரையிலு மறியாத நல்ல புற்களை மேய்ந்து களித்திருந்தன.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

## ஒன்பதாம் அத்தியாயம்

# பிரலம்பாசுரவதம்

அவ்வசுரன் இறந்தபின்பு அப்பனங்காடு கோவலர்க்கும் கோவியர்க்கும் விளையாடு மிடமாய்விட்டது. பின்பு வசுதேவகுமாரரிருவரும் பாண்டீரமென்கிற ஆலமரத்தண்டை யெழுந்தருளி, தோளில் அணைக்கயிறும் மார்பில் வனமாலையும் அணிந்து, இளங்கொம்புள்ள விருஷபங்களைப்போலே பிரகாசித்துக்கொண்டு, வெகு சந்தோஷத்தோடு வேடிக்கையாய்ச் சிங்கநாதஞ் செய்வதும் பாடுவதும் மரங்களை யேறத் தேடுவதுமாய்ப், பசுக்களை யவற்றின் பெயராலே கூப்பிட்டு, மேய்த்துக்கொண்டு விளையாடினார்கள். மேலும் அவ்விருவரில் மூத்தவர் மைப்பொடியூட்டிய வஸ்திரத்தையும், இளையவர் பொற்பொடி யூட்டிய வஸ்திரத்தையுந் தரித்தவர்களாய், இந்திரவில்லுடன்கூடி வெண்மையாயுங் கருமையாயுமுள்ள மேகங்கள்போல் விளங்கினார்கள். இப்படிப்பட்ட அலங்காராதிகளோடு கூடிச் சகலலோகநாதருக்கு நாதர்களா யிருக்கின்ற அவ்விருவரும் பூலோகத்துக்கு ஏற்றபடியே மனிதத் தன்மையைப் பெருமைப்படுத்திக்கொண்டு மனுஷ்யபாவனையாகவே உலகத்திலுண்டான பல விளையாட்டுகளையும் விளையாடினார்கள். எப்படியெனில், இருவர் கைகளைத் தண்டிகைபோல் வைக்க அதில் தொங்கலாடுவதும், மரத்தின் விழுதுகளை முடிந்து அதிலுட்கார்ந்து வீசியாடுவதுமான ஆந்தோளிகைகளினாலும், ஒருவரோடொருவர் ஜட்டிகளைப்போலே கைச்சண்டை யிடுவதினாலும், கட்டைகளையுங் கற்களையு மெடுத்துச் சுழற்றுவதுமுதலான * குராளிச்செய்கைகளினாலும், இன்னும் பலவகை விளையாட்டுக்களினாலும் இடைப் பிள்ளைகளோடுகூட விளையாடிக்கொண்டிருந்தார்கள்.

இப்படியிருக்க, இவ்விருவரையும் பிடித்துக்கொண்டு போகவேண்டுமென்று பிரலம்பனென்ற

* குராளி—சாமம் பழகுதல்.

அசுரனொருவன் ஆயர்சிறுவன்போ லுருக்கொண்டு அங்குவந்து, அப்பிள்ளைகளி லொருவனாக நின்று, பார்த்துக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ணனை வெல்லக்கூடாதவனாக நினைத்துப் பலராமனைக் கொல்ல நினைத்தான். அங்குநின்ற அப்பிள்ளைகள் யாவரும் * ஹரிணாக்கிரீடனம் என்கிற சிறுவர் விளையாட்டொன்றை யாடத் தொடங்கி யாவரும் இரட்டை இரட்டையாய் நின்றார்கள். அவர்களுக்குள்ளே ஸ்ரீதாமா என்றவனோடு கண்ணனும், பிரலம்பனோடு பலராமனும் கூடி நின்று குதித்து வருகையில், ஸ்ரீதாமாவைக் கண்ணனும் பிரலம்பனைப் பலராமனுஞ் ஜயித்ததனால் ஜயிக்கப்பட்ட அவ்விருவரும் ஜயித்த இருவரையுந் தோளிலேற்றிச் சுமந்துக்கொண்டு பாண்டீரமென்னும் ஆலமரத்தடிக்கு வந்து மறுபடியு மங்கிருந்து திரும்பினார்கள். அத்தருணத்தில் அவ்வசுரன் மூத்தவரைத் தோண்மேலெடுத்துக்கொண்டு சந்திரனை யேந்தின மேகம்போலே சீக்கிரமா யாகாசத்தி லெழும்பினான். அதுகண்டு பலபத்திரர் தமது திருமேனியை வெகு பாரமாக்க, அந்தப் பாரத்தைச் சுமக்கமாட்டாமல் அவன் தன்னுடம்பையும் பெரிதாக வளர்த்தினான். இப்படி பருவக்கால மேகம்போலே வளர்ந்து எரிந்த மலைபோன்ற வுடம்பும், குறுகிய கிரீடங் கவிழ்ந்த தலையும், தொங்குகின்ற மாலையாபரணங்களும், வண்டிச் சக்கரம்போன்ற கண்களும், பயங்கரமான வடிவும், பூமி நடுங்கும்படியான நடையுமாய்க் காணப்பட்ட அவ்வசுரனையும், சிறிது மச்சமின்றித் தன்னைத் தூக்கிக்கொண் டெழும்பிப்போகுந் திறத்தையும் பார்த்துப் பலராமர் தம்பியை நோக்கி "ஓ கிருஷ்ணா! ஓ கிருஷ்ணா! மலைபோன்ற தேகமுள்ளவனாய் இடைப்பிள்ளையின் உருவத்தைத் தரித்துக் கொண்டுவந்த ஓரசுரனாலே நான் தூக்கிக்கொண்டு போகப்படுகின்றேனே பார். ஓ மதுசூதனனே! இப்போது நான் செய்யவேண்டியதென்ன சொல்; இந்தத் துராத்துமாவோ வெகுவிரைவாயோடுகின்றான்" என்று சொன்ன வார்த்தைகளைக் கேட்டு மகாத்துமாவான ஸ்ரீகோவிந்தன் அவருடைய

* ஹரிணாக்கிரீடனமாவது - மான்போல் துள்ளி விளையாடுதல்.

பலவீரியங்களின் திறமறிந்தவராகையால் புன் சிரிப்பி னால் இதழ்கள் மலர அருளிச்செய்யலாயினர்.

"ஓ சர்வாத்துமகனும் சகல சூக்ஷுமங்களுக்குங் காரணனும் இருக்கிறவனே! பிரளயத்திலு மிகுந் திருக்கும்படியான நித்தியனை நீ யேது மனுஷ்யத் தன்மையை மெய்யாகவே பற்றுகின்றாய்? நீயே சகல லோக காரணங்களுக்குங் காரணமாய் வியக்தப் பிர பஞ்சத்திற்கு முன்பே யிருக்கிறவனும், சகலமுங் கடலி னாலே முழுத்தப்பட்டு ஏகார்ணவமா யிருக்கையில் மிகுந்திருக்கின்றவனுமா யிருக்கின்றாய். இப்படிப்பட்ட வுன்றன்மையை நினைத்துக்கொள். மேலும் நாமிரு வரும் பூமியின் பாரத்தைப் போக்கும்பொருட்டு அவதரித்திருக்கிறோம் என்பதை நீ யறியாயோ? ஓ அனந்தனே! ஆகாசம் உன் திருமுடி, மேகங்கள் உன் கேசங்கள், பூமி உன் திருவடி, அக்கினி உனது திரு முகம், சந்திரன் உன் மனது, வாயு உன் மூச்சு, நான்கு திக்குகளும் உன்னுடைய நான்கு திருத்தோள், ஓ மகானுபாவனே! நீ ஆயிரந் திருமுகங்களும் ஆயிரந் திருக்கைகளும் ஆயிரந்திருவடிகளும் ஆயிரந் திருவுத ரங்களு முள்ளவனாய், ஆயிரம் பிரமாக்களுக்கு உற்பத்தி ஸ்தானமான முதல்வனாயிருக்கின்றாய். ஆதலின் உன்னை மகாரிஷிகள் அனேகவிதமாகச் சொல்லுகிறார்கள், உனது திவ்வியரூபத்தை யொருவனு மறியமாட்டான், தேவதைகளும் உன் திருவவதார உருவங்களையே அர்ச் சிக்கிறார்கள், இவ்வுலக மெல்லாம் முடிவில் உன்னிடத்தி லேயே லயப்படுகின்றன. இவையெல்லாம் நீ யறியா யோ? ஓ அனந்த மூர்த்தியா யிருப்பவனே! இந்தப் பூமி உன்னாலே தாங்கப்பட்டன்றோ சராசரமயமான பிரபஞ் சத்தைத் தாங்குகின்றது? ஓ உற்பத்தி விநாசங்க ளில்லாதவனே! நீயே கிருதயுகாதி பேதங்களினாலே பலவகைப்பட்டிருக்கிற காலரூபியா யிருந்து, எல்லா வற்றையும் விழுங்கிப்போடுகிறாய். தண்ணீரானது வடவாக்கினியினாலே உண்ணப்பட்டுக் காற்றினாலே எறியப்பட்டு இமயமலையிலே பனிரூபமாய் நின்று சூரிய கிரணங்களின் சம்பந்தத்தினால் உருகி மறுபடியுந் தண்ணீரேயாய் வருவதுபோல், சங்காரகாலத்தில் உன்

ஞாலே விழுங்கப்பட்ட பிரபஞ்சமெல்லாம் உயர்ந்த தாகவே யிருந்து மறுபடியுஞ் சிருட்டிக்க எத்தனிக் கின்ற வுனது சங்கற்பத்தினாலே முன்போலவே அவ் வவ்வுருக்கொண்ட பிரபஞ்சமாகத் தோன்றுகின்றன. ஓ ஈசுவரனே! கற்பந்தோறு மப்படியே சிருட்டிப் பிரளயங்கள் நடந்து வருகின்றன. நீயுநானுஞ் சேர்ந்து இவ்வுலகங்களுக்கு ஒரே காரணமாயிருந்து, இப்பூமியின் சுமை யிறங்கும் பொருட்டுப் பேதரூபமா யவதரித்தோமன்றோ? ஓ அமேயாத்துமகனே! இதை யெல்லாம் நீ நினைத்துக்கொண்டு இந்த மனுஷ்ய பாவனையை விடாமலே இவ்வசுரனைச் சங்கரித்துப் பந்துக்களுக்கு நன்மை செய்யவேண்டும்.''

என்றிப்படி மகாத்துமாவான கண்ணனாலே நினைப் பூட்டப்பட்டவராய்ப் பலராமர் நகைத்துக் கோபத்தினால் திருக்கண்கள் சிவந்து நிற்கத் தமது கைப்பிடியால் அவ் வசுரனைச் சிரத்தி லிடித்தருளினார். அவ்விடிபட்ட மாத்திரத்திலே பிரலம்பாசுரன் கண்ணிரண்டும் பிதுங்கி வந்து கபாலமுடைந்து உதிரங் கக்கிக்கொண்டு தரையில் விழுந்து இறந்தான். இப்படியாகப் பிரலம்பனைச் சங் கரித்ததனால் கோபாலரெல்லா மிகுந்த சந்தோஷமுற்று, "நல்லகாரியஞ் செய்தீர், நல்லகாரியஞ் செய்தீர், இப் படிச்செய்ய மற்றும் யாராலு மாகாது" என்று வியந்து துதிசெய்யா நிற்க, அந்தச் சங்கர்ஷண பகவான் கண்ணனோடுகூட மறுபடியுங் கோகுலத்திற்கு எழுந் தருளினார்.

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தாம் அத்தியாயம்

### சரத்காலவர்ணனை

# கோவர்த்தனோராதனம்

இவ்வகையாகத் திருவாய்ப்பாடியில் அவ்விரு வரும் விளையாடிக்கொண்டிருக்கையில் வருஷாகாலம் நீங்கி தாமரைகள் மலர்ந்துவிளங்கப்பெற்ற சரத்காலம்

வந்தது. அக்காலத்தில் சிறுகுளங்களி லிருந்த மீன்கள் புத்திர க்ஷேத்திராதிகளிலே பற்றிருத்தலினாலே இல்லறத்தான் தாபமடைவதுபோல் மிகுந்த தாபத்தை யடைந்தன. யோகிகள், சம்சாரம் அசார மென்பதை யறிந்து அதில் பற்றற்று மௌனமாயிருப்பதுபோலே காட்டி லிருந்த மயில்கள் மதநீங்கி மௌனத்தோடிருந்தன. மேகங்கள் தம்மிடத்திருந்த தண்ணீரை யெல்லாம் விட்டுவிட்டு நிர்மலங்களாய் வெண்மையான மேனியையுடையவைகளாய் வானத்தையும் விட்டு நீங்கின வை எப்படி யிருந்தனவென்றால், ஞானங் கைவந்தவர்கள் தங்கள் அகங்காரத்தோடு பொருண் முதலானவைகளை விட்டுச் சுத்த சத்துவமுடையவர்களாய்ச் சமுசாரத்தைத் துறப்பதுபோலிருந்தன. பல பொருள்களைப் பற்றி மமதையுற்றிருப்பதனாலே மனிதருடைய இருதயங்கள் வரண்டுபோவதுபோல் குளங்களெல்லாம் சூரியகிரணங்களினாலே தபிக்கப்பட்டு வரண்டுபோயின. அச் சரத்காலத்துத் தண்ணீர்கள் ஆம்பல்கள் மலர்ந்து விளங்கப்பெற்றமையாலே, நிர்மல குணமுள்ளவர்களுடைய மனங்கள் ஞானங்களினாலே ராகத்துவேஷங்களில்லாமல் சமத்துவமடைந்ததுபோல் யோக்கியதையின் லக்ஷணமான தன்மையை யடைந்தன. மேலும் நக்ஷத்திரங்களினாலே நிர்மலமா யிருக்கின்ற வானத்திலே பூரணமண்டலத்தோடு கூடிச் சந்திரன், நல்ல குலத்திலே ஒரு யோகியானவன் பிறந்து முத்திபெறத்தக்க கடைசித் திருமேனியோடு விளங்குவதுபோல விளங்கினான். அறிஞர், க்ஷேத்திர புத்திராதிகளிலேயிருக்கின்ற பற்றை நாளுக்குநாள் சிறிதுசிறிதாக எப்படி விடுவார்களோ அப்படியே குளமுதலானவைகள் நாளுக்குநாள், கொஞ்சங் கொஞ்சமாய்க் கரையை விட்டு வந்தன. அன்னப்பறவைகள் முன்பு தாங்கள் விட்டு நீங்கின தடாகத் தண்ணீர்களோடு மறுபடியுங் கூடினது எதுபோலென்றால் யோகத்தில் தேராதவர்கள் பல இடையூறுகளினாலே முட்டப்பட்டு முன் விட்ட சகல கிலேசங்களோடு மறுபடியுங் கூடினது போலவாம். அந்நாட்களில் சமுத்திரம் தண்ணீர் மிகப்பெற்றுத் தண்ணீர் ததும்புதலின்றி மதந்திரமு

லான யோகங்களின் முறையாலே மகாயோகத்தை யடைந்து ஒரு யதியானவன் எப்படி நிச்சலமா யிருப்பானோ அப்படி நிச்சலமா யிருந்தது. எங்கு நிறைந்தெழுந்தருளி யிருக்கிற ஸ்ரீவிஷ்ணுபகவானை யறிந்த பின் மகாத்துமாக்களுடைய இருதயங்கள்போலே எங்குந் தண்ணீர் தெளிவுற்றிருந்தது. அக்காலத்தில் மேகமென்னு மழுக்கு நீங்கி ஆகாசமானது யோகாக்கினியினாலே சகல கிலேசங்களு மெரிக்கப்பெற்ற யோகியின் மனம்போலே நிர்மலமாயிருந்தது. நானென்கிற அகங்காரத்தினாலே யுண்டான துக்கத்தை மகத்தான விவேகம் போக்குவதுபோல் சூரியகிரணங்களா லுண்டாகிய தாபத்தைச் சந்திரன் போக்கடித்தான். சத்த முதலிய விடயங்களினின்றும் சுரோத்திர முதலிய இந்திரியங்களைப் பிரத்தியாஹார மென்ற யோகாங்கம் இழுத்துப் போடுவது போல் வானத்தினின்று மேகத்தையும் பூமியினின்று சேற்றையும் தண்ணீரினின்று கலக்கத்தையும் அந்தப் பருவமானது இழுத்து விட்டது. பூரண ரேசக கும்பகமென்கிற வாயுவை நிறுத்தல் நிலைப்பித்தல் விடல்களினாலே பிராணாயாமம் பயில்வதுபோலத் தடாகங்களின் ஜலம் வாய்க்கால் முதலானவைகளில் நிறைக்கப் படுதலும், பின்போரிடத்தில் ஸ்தாபிக்கப் படுதலும் வேண்டுங் கழனிகளில் விடப்படுதலுமாகிய செய்கைகளினாலே பிராணாயாமஞ் செய்வனபோலிருந்தது.

இப்படியாக ஆகாய நட்சத்திர முதலானவை நிர்மலமாயிருக்கப்பெற்ற அந்தச் சரத்காலம் வந்தபோது ஆயர்பாடியில் இந்திரனைப் பூசிக்கும் பொருட்டு மிகுந்த முயற்சி யுள்ளவர்களாய் அவ்வுற்சவத்தில் அதிக ஆசையோடு குதுகலித்துக்கொண்டிருந்த ஆயர்களைக் கண்டு கண்ணன் அவர்களில் மூத்தவர்களை நோக்கி வெகு சந்தோஷமாய் "பெரியோர்களே! உங்களையெல்லா மிகவுங் களிக்கச்செய்யும் இந்திரோற்சவ மென்பது என்ன? அதின் சொரூப அனுஷ்டான பிரயோசனங்களைச் சொல்லவேண்டும்" என்று வினவ, அக்கண்ணனுக்கு நந்தகோபர் அதிக ஆதரத்தோடு சொல்லலாயினர்:—

"கேள் குழந்தாய்! தேவேந்திரன் மேகங்களுக்கும் ஜலத்துக்கும் அதிபதியாயிருக்கிறான். அந்த இந்திரனால் கட்டளை யிடப்பட்டவைகளாய் மேகங்கள் மழை பொழிகின்றன. அந்த மழையினாலே விளைகின்ற பயிர்களை நாமும் மற்றவர்களும் உபயோகப்படுத்திக்கொண்டு, தேவதைகளையும் ஆராதித்துக் கொண்டிருக்கிறோம். அன்றியும் அந்த மழையினால் வளர்ந்த புல் முதலானவைகளினாலே இந்த மாடுகளெல்லாம் வளர்க்கப்பட்டுப் புஷ்டியாய் நல்ல கன்றுகளைப்போட்டு மிகுந்த பால் கறந்துகொண்டு களித்துத் திரிகின்றன. எவ்விடத்திலே மழை யுண்டாயிருக்கிறதோ அங்கே பூமி பயிர் நிறைந்ததாயும் புல் நிறைந்ததாயும் இருக்கின்றது. அங்குள்ள பிரசைகளெல்லாம் பசிவருத்தமின்றி யிருக்கிறார்கள். இந்தப் பூமியிலுள்ள நீரைச் சூரியன் தன் கிரணங்களினாலே கிரகித்து மேகங்களில்விட, அதை மேகாதிபதியாகிய இந்திரன் உலக க்ஷேமத்துக்காகப் பெய்விக்கிறான். ஆதலால் இராஜாக்கள் முதலான ஜனங்கள் மழைக்கால முடிந்தவுடனே சந்தோஷத்தோடு யாகங்களினாலே இந்திரனைப் பூசித்து வருகிறார்கள். நாமும் அப்படியே செய்து வருகிறோம்" என்றிப்படி நந்தகோபர் சொன்னதைக் கேட்டுக் கண்ணன் இந்திரனுக்குச் செருக்கழியும் பொருட்டு இவ்வாறருளிச்செய்யலாயினார்.

"ஐயா நான் சொல்வதையுஞ் சற்றே கேட்க வேண்டும். நாம் பயிரிடுகிறவர்களு மல்லோம்; வாணிகத்தாற் சீவிக்கிறவர்களு மல்லோம்; நாம் காட்டில் திரிந்து மாடு மேய்த்துப் பிழைக்கிறவராதலால் நமக்குப்பசுக்கள் தெய்வம். உலகத்தில் பிரதானமாய் நான்கு வித்தைகளுண்டு. அவையாவன: ஆன்வீக்ஷகி என்ற தர்க்கவித்தை, இருக்கு முதலிய பிரிவுள்ளதனால் திரயீ என்னப்படுகிற வேதம், வார்த்தை என்னப்படுகிற பயிர் முதலிய சாஸ்திரம், தண்டநீதி என்கிற இராஜநீதி சாஸ்திரம், இந்நான்கிலுள்ள வார்த்தா சாஸ்திரத்தைப்பற்றி நான் விவரிப்பதைக் கேளும். ஓ மகானுபாவனே! [கிருஷி] பயிரிடுதல், [வணிஜ்யா] வாணிகம், [பசுபாலனம்] மாடுமேய்த்தல், ஆகிய இம்

மூன்று பிழைப்புகளா யிருப்பது வார்த்தை யென்கிற வித்தையாம். உழவர்க்குக் கிருஷியானது ஜீவனமாம். கடைத்தெரு வியாபாரிகளுக்கு வணிஜயை ஜீவனமாம். நமக்கோ பசுமாடே முக்கியமான ஜீவனமாம். ஆதலால் எவன் எந்த வித்தைக்கு உரியவனோ அவனுக்கு அதுவே பெரிய தெய்வமாதலின் அதையே கந்த புஷ்பாதிகளினாலே அர்ச்சித்துப் பூசிக்கவேண்டும். ஏனெனில் அவ்வித்தையின் மூலமாயன்றோ சுவாமி நமக்கு உபகாரஞ் செய்தருளினர். மேலும் எவன் எதன் பயனை அனுபவித்துக்கொண்டு மற்றொன்றைப் பூசிக்கிறானோ அவன் இம்மையிலு மறுமையிலுஞ் சுகத்தை யடையமாட்டான். உலகத்தில் எல்லையென்பது பயிரிடும் நிலம்வரைக்கு முள்ளது. காடென்பது அவ்வெல்லைக்குப் புறத்தே யுள்ளது. மலைகளென்பவைகளெல்லாம் காட்டின் புறத்தி லுள்ளவை. அக்காட்டில் வாசஞ்செய்கிற நமக்கு இஷ்டப்படித் திரியுமிடமான மலைகளே மேன்மையான கதியா யிருக்கின்றன. வாயில்களும் கதவடைப்பு மில்லாதவர்களாய் வீட்டிற் குடையவரும் நிலத்துக்குடையவரு மல்லாதிருக்கின்ற ஜனங்களே, எவ்வுலகத்திலும் பண்டியைக்கொண்டு இஷ்டமானவிடத்திற் சஞ்சரிக்கிற நம்மைப்போல் சுகமுடையவர்களே யல்லது மற்றவர்களல்லர். அன்றியும், இவ்வனத்தில் மலைகளெல்லாம் இஷ்டமானபடியே உருவமெடுக்க வல்லவைகளென்றும், அவ்வவ் வுருக்களைக்கொண்டு தம்தம் சாரல்களிலே விளையாடிக்கொண்டிருக்கின்றனவென்றுங் கேள்விப்படுகிறோம். இதற்குத் திருஷ்டாந்தம், காட்டில் வாசஞ்செய்கின்ற எவர்கள் அம்மலைகளுக்கு அபராதப்படுகிறார்களோ அவர்களை அந்தப் பர்வதங்கள் சிங்கமுதலிய உருவங்களைக்கொண்டு கொல்லுகின்றன. இப்படி யிருப்பதால் நமக்கு மிகவும் உபகாரியா யிருக்கின்ற மலையைக் குறித்தும் பசுக்களைக் குறித்தும் யாகங்களை நாம் செய்யவேண்டும். நமக்கு இந்திரனாலும் மற்றவர்களினாலுமென்ன? கோக்களும் பருவதங்களுமே நமக்குத் தெய்வங்கள். பிராமணர்களுக்கு மந்திர யக்கியம் முக்கியம். உழவருக்குக் கலப்பையைப் பற்றின யக்கியம்

முக்கியம். மலையையுங் காட்டையும் பற்றி யிருக்கின்ற நமக்குக் கோபர்வத யக்கியங்கள் முக்கியம். ஆகையால் இந்தக் கோவர்த்தனகிரியை நீங்கள் பலவகைப்பட்ட வுபசார வஸ்துக்களைக் கொண்டும் விதிப்படிப் பசு வாலம்பனஞ் செய்தும் பூசித்து அர்ச்சிக்க வேண்டும். இதற்காக எவ்வளவும் ஆலோசியாமல் இந்த இடைச் சேரியிலுள்ள தயிர் பால் வெண்ணெய் முதலானவை யெல்லாவற்றையும் எடுத்துப் பிராமணர்களுக்கும், அன்னம் விரும்பிவரும் பிறருக்கும் பரிமாறித் திருப் திப் படுத்தவேண்டும். இப்போது நாம் எத்தனஞ் செய்தபடி உபசார வஸ்துக்களைக்கொண்டு பர்வதத்தை யர்ச்சித்து ஓமத்தை வளர்த்திப் பிராமணரைப் புசிப் பித்தவுடனே சரத்காலத்துப் புஷ்பங்களினாலே கொம்பு களில் அலங்கரிக்கப்பட்டவைகளாய்ப் பசுக்களெல்லாம் வலம் வரவேண்டும். ஓ கோபாலர்களே! இதுதான் என்னுடைய மதம். நீங்களிதைப் பிரீதியோடு கைக் கொண்டு செய்வீர்களாகில் பசுக்களுக்கும் மலைக்கும் எனக்கும் பிரிதியா யிருக்கும்" என்று சுவாமி அருளிச் செய்ததைக் கேட்டு, நந்தர் முதலான கோபாலரெல் லாம் ஒரு விசேஷ சந்தோஷத்தினால் முகமலர்ச்சி யுடையவர்களாகச் சுவாமியை நோக்கி "குழந்தாய்! நன்றாயிருக்கிறது நன்றாயிருக்கிறது, நீ சொன்னமதம் வெகுநேர்த்தியா யிருக்கிறது, எங்கள் மனதிற்குப் பிடித் திருக்கின்றது; ஆதலால் அப்படியே செய்கிறோம், கிரி யக்கியம் ஆரம்பிப்போம்" என்றார்கள்.

பின்பு அவ்வாயரெல்லாம் பர்வதயாகத்தை ஆரம் பித்துக் கந்த புஷ்ப தூப தீபாதிகளினாலே பூசித்து ஓமமுஞ்செய்து தயிர் பாயசம் மாமிசம் இவை முதலிய வுணவுகளினாலே அப்பர்வதத்திற்குப் பலிபிண்டங்கள் செய்துபோட்டு அனேக பிராமணர்களுக்கும் போச னஞ் செய்வித்துக் கோக்களுக்கும் பூசைசெய்தார்கள். பின்பு நானாவித அலங்காரங்களை யுடையனவாய்ப் பசுக்களெல்லாம் அம்மலையைப் பிரதக்ஷிணஞ் செய்தன. அப்படியே இடபங்களும் நீர்நிறைந்த மேகங்களைப் போலே கர்ச்சித்துக்கொண்டு வலம் வந்தன. இவ்வாறு பர்வதபூசை செய்து வருகையில் கண்ணன் ஒரு

தேவதா ரூபமாய் அந்தக் கோவர்த்தனத்தின் சிகரத்தின்மேல் வீற்றிருந்து, "நான்தான் இந்தப் பர்வத தேவதை" என்று கோபாலர் போட்ட அன்னபலிகளையெல்லாம் அமுது செய்தருளினர். கீழே யிருந்து தாமே அதை யாவர்க்குங் காட்டி அவர்களோடு கூட மலையினுச்சிக்கு ஏறிப்போய் அந்தத் தமது சுவரூபத்தையும் அர்ச்சித்துப் பணிந்தருளினர். இவ்வாறு கோபாலரெல்லாம் பருவத யாகத்தை நிறைவேற்றி, அதன் சிகரத்திற் சேவைசாதித்த பகவத் சுவரூபத்தினிடத்திலே இஷ்டவரங்களையும் பெற்றுச் சந்தோஷமுடையவர்களாய் அந்தச் சுவரூபம் மறைந்தவுடனே திரும்பித் தங்கள் பாடிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினோராம் அத்தியாயம்

# கோவர்த்தனத்தை யெடுத்தது

ஓ மயித்திரேயரே! கேளும், சுவாமி இந்திரனுக்குச் செய்யும் யாகத்தை யொழித்ததனால் இந்திரன் அதிக கோபமுள்ளவனாய்ச் சம்வர்த்தகம் என்கிற மேகக்கூட்டத்தை யழைத்து, "ஓ மேகங்களே! நான் சொல்வதைக் கேளுங்கள்; உடனே என் கட்டளையின்படி தடையில்லாமற் செய்யுங்கள்; நந்தனென்கிற இடையன் புத்திகெட்டவனாய்க் கிருஷ்ணனென்கிற ஒருபையன் பலத்தைப் பெரிதாயெண்ணிக் கர்வித்து, மற்றுமுள்ள இடையரையுஞ் சேர்த்துக் கொண்டு, எனக்குச் செய்துவரும் யாகத்தை நிறுத்தி விட்டான்; ஆகையால் அந்த இடையருக்குப் பிழைப்பாயுள்ள மாடுகளையெல்லாம் பெருமழை பொழிந்து அழித்து விடுங்கள்; நீங்கள் பயப்படாதேயுங்கள்; உங்களுக்குச் சகாயமாய் நான் பர்வதசிகரம்போலிராநின்ற பெரிய யானைமேலேறிக்கொண்டு வாயுவையுந் தண்ணீரையும் விடுகிற வுதவியைச் செய்கிறேன்" என்று ஆக்கியாபித்தான். அதுகேட்டு அந்த

மேகங்களெல்லாம் இவ்வாய்ப்பாடி முழுதும்நாசமாகும் படிப் பெருங்காற்றுடன் பெருமழையைப் பெய்தன. பெய்யவே ஒரு க்ஷணமாத்திரத்திலே பூமியும் ஆகாசமும் திசைகளும் மழைத்தாரைகளின் பெருக்கு நிறைந்து ஒன்ருய்க் காணப்பட்டன. அப்போது அந்த மேகங்கள் பளபளத்து விளங்காநின்ற மின்னற் கொடிகளாகிய கசைகளின் அடிக்குப் பயப்பட்டவைகள்போலே திக்குகளெல்லாம் அதிரும்படி கர்ச்சனை செய்து மிகவும் கனமான தாரைகளாகிய சாரங்களைப் பெய்துவிட்டன. இப்படி ஒழிவில்லாமல் மழைபொழிவதனல் உலகமெல்லா மிருள்மூடிப்போக உலகம் கீழு மேலும் பக்கங்களிலும் ஜலமயமாகத் தோன்றிற்று. அப்போது பசுக்கள் மகா வேகத்தோடுண்டான காற்று மழையினலே அலைக்கப்பட்டு, இடுப்புந்தொடைகளுங் கழுத்துஞ் சுருங்கி மாண்டன்போலே மூர்ச்சித்துக்கிடந்தன. அனேக மாடுகள் இளங்கன்றுகளை வயிற்றிலணைத்துக் கொண்டு நடுக்கமுற்றுக் கிடந்தன. மற்றும் பலமாடுகள் கன்றுகளிறக்கக்கண்டு கதறிக் கொண்டு நின்றன. சில கன்றுகள் காற்றினலே உடம்பெல்லாம் நடுக்கமுறச் சோர்வடைந்து அற்பத்தொனியாய்க் கூவினதைப் பார்த்தால் கண்ணனை நோக்கி எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்றுவேண்டிக்கொண்டதுபோ லிருந்தது.

ஓ மயித்திரேயரே! கோக்களுங் கோபிகைகளுங் கோபாலரும் நிறைந்த அந்தக் கோகுலமெல்லாம் இப்படிப் பெருமழையினலே மிகவும் துன்பப்பட்டு நடுங்குவதைக் கண்டு, சுவாமி "இந்திரன் தனக்குப் பூசை நடக்கவில்லை யென்னும் கோபத்தினல் இப்படிச் செய்தானகையால் இதை நாம் அவசியம் பாதுகாக்கவேண்டும், அதற்காகப் பெரிய கற்பாறைகள் நிறைந்த இந்தப் பருவதத்தைப் பெயர்த்து இவ் இடைச்சேரிக்கு ஒரு பெருங்குடையாகப் பிடிக்கக்கடவோம்" என்று திருவுள்ளம்பற்றி, அந்த மலையைப் பெயர்த்து ஒரே திருக்கையினல் விளையாட்டுக் கருவியைத் தாங்குவதுபோல் தாங்கி, அந்தக் கோபாலரெல்லாரையுங் கூவி, நகைத்துக்கொண்டே "நீங்கள் யாவரும் உங்

கள் குழந்தை குட்டிகளோடும் பசுக்களோடுங்கூட இதனடியில் வந்து சேருங்கள், காற்று மழைக்குப் பயப்படவேண்டாம், அதைத் தடுத்து விட்டேன்; இதனடியில் நல்ல இடங்களில் அவரவர் இஷ்டப்படிச் சுகமா யிருக்கலாம், மலையானது மேலே விழுமென்று அஞ்சவேண்டாம், இதை நான் ஒரு சிறுபந்தைப் போல இலேசாய்த் தாங்கிக்கொண்டிருக்கிறேன்'' என்று அருளிச்செய்தார்.

இப்படி ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச்செய்யக் கேட்டு, இடையரெல்லாம் பண்டிகளில் தங்கள் பொருள்களை யெடுத்துப் போட்டுக்கொண்டு மாடுகளை யும் ஓட்டிக்கொண்டு அதன்கீழ் வந்துவிட்டார்கள். ஸ்ரீகிருஷ்ணன், இடையரும் இடைச்சிகளும் ஆச்சரி யத்தினாலுஞ் சந்தோஷத்தினாலுங் கண் மலர்ந்து நிச்சலமா யிருக்கப்பெற்று முன்னுற்ற தன் சரித்திரங் களையும் இந்த மகிமையையு மெடுத்துத் துதித்துப் பாடிக்கொண்டிருக்க, அந்த மலையை அசைவில்லாமல் தாங்கிக்கொண்டிருந்தார். இந்தப்படி ஏழுதினங்கள் ஓயாமல் மழைபெய்ய, சுவாமியும் அப்பருவதத்தைக் குடைபோலெடுத்து ஆயரைக் காத்தருளினார். இதைக் கண்டு தேவேந்திரன் தன்முயற்சி வீணாயிற்றென்று அந்த மேகங்களைத் தானே நிறுத்திவிட்டான். இந்தி ரன் இப்படி வீண் பிரதிக்கினை யுள்ளவனாகி மேகங் களைத் தடுத்துவிடவே ஆகாயமெல்லாம் நிர்மலமாய்த் திசைகளெல்லாம் தெரிய, அவ்வாயர்கள் யாவரும் அம்மலை யடியினின்றும் புறப்பட்டுச் சந்தோஷத் தோடு பழையபடி தங்கள் பாடிக்குப்போய்ச் சேர்ந் தார்கள். பின்பு சுவாமி அவர்களெல்லாம் பார்த்துக் கொண்டே யிருக்க அந்தப் பர்வதத்தை இருந்த விடத்திலேயே வைத்தருளினார்.

பதினோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# கோவிந்த பட்டாபிஷேகம்

கேட்டீரோ மயித்திரேயரே! முன்சொன்னபடியே எம்பெருமான் கோவர்த்தன பருவதத்தை யெடுத்துக் கோகுலத்தைக் காத்தது கண்டு, தேவேந்திரன் வெட்கி "சுவாமிக்குத் தண்டம் சமர்ப்பிக்க வேண்டும்" என்று ஐராவதத்தின்மே லேறிக்கொண்டு கோவர்த்தன கிரியிடத்துக்கு வந்தான். அங்கே சகல லோகங்களையுங் காப்பவனாகிய எம்பெருமான் கோபாலவேடம் பூண்டு கோபால குமாரரோடு கோக்களைக் காத்து நிற்பதையும், அந்தச் சுவாமியின் திருமுடிக்கு நேர் மேலாகத் தமது சிறகுகளினாலே வெயிற்படாவண்ணம் நிழல் செய்துகொண்டு பிறர்கண்களுக்குத் தெரிலாமலிருக்கிற பெரிய திருவடி என்னும் கருடனையுங் கண்டு, திடீரென்று யானையினின்று மிறங்கித் தேவேந்திரன் ஏகாந்தத்திலே சுவாமியைத் தண்டம் சமர்ப்பித்து, அந்தச் சந்தோஷத்தினாலே கண்கள் மலர்ந்து நிற்கப் புன்சிரிப்போடு இப்படி விண்ணப்பஞ்செய்யலானான்.

"சுவாமீ ஸ்ரீ கிருஷ்ணபகவானே! அற்புத திவ்விய சக்தியுள்ளவனே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருளவேண்டும். உன்சந்நிதிக்கு அடியேன் வந்தது விரோதபுத்தியாலென்று திருவுள்ளம் பற்றவேண்டாம். எல்லாவற்றுக்கும் ஆதாரபூதனான சர்வேசுவரனே! நீ கிருபாமயமான வுன்சங்கற்பத்தினாலேயே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்கள் செய்து பூமிபாரத்தை நீக்கும்பொருட்டு இங்கே யவதரித்தாயென்று அறிவேன். ஆகிலும் எனக்குச் செய்யும் யாகத்துக்குப் பங்கம் நேரிட்டதென்றதனால் தெரியாமல் கோபத்தை யடைந்து மேகங்களை யேவிக் கோகுலத்துக்கு நாசம் செய்யக்கருதினேன். மகாசத்திமானான நீ குன்றெடுத்து அதைக்காத்தீரே அற்புதமான அந்தத் திருவிளையாட்டினால் நான் மிக்க சந்தோஷத்தை

யடைந்தேன். ஏனெனில், அமரருடைய காரியத்தைச் சாதிப்பதற் கவதரித்த வுன்னாலே அந்தப் பிரயோஜன மெல்லாம் நிறைவேறுமென்று நிச்சய மடியேனுக் குண்டாயிற்று. அதற்குத் திருஷ்டாந்தமாக நீ யொரு திருக்கையினாலே இப்பெரு மலையைத் தூக்கிக்கொண்டாயன்றோ? அடியேன் உன்சந்நிதிக்குவந்த முக்கியகாரியங் கேட்டருள வேண்டும். கோ லோகத்திலிரா நின்ற கோக்களெல்லாம் தங்கள் சந்ததியை நீ நன்று காத்ததற்காக உனக்கொரு சத்காரஞ்செய்யவேண்டுமென்று அடியேனுக்கு நியமித்தன. அதனாலே கோக்களின் வாக்கியப்படி உன்னைக் கோக்களுக்கு இந்திரனாகப் பட்டாபிஷேகஞ் செய்கின்றேன். அதைத் திருவுள்ளம் பற்றியருளவேண்டும். அதனாலே நீ கோவிந்தனென்கிற திருநாமம் பெறுவாய்" என்று விண்ணப்பஞ்செய்து, தன் வாகனமான ஐயிராவதத்தின்மேலிருந்து தீர்த்தகும்பத்தை யெடுத்துக்கொண்டுவந்து * தனக்கு மேலாய்ச் சத்தியலோகத்துக்கு மேலிருக்கின்ற கோ லோகத்துக் கோக்களுக்கு இந்திரனாகையாலே உபேந்திரனென்று பட்டாபிஷேகஞ் செய்தான்.

இப்படி ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யும்போது பசுக்களெல்லாம் தங்கள் மடிகளில் அளவின்றிச் சுரந்துபெருகின பாலினால் பூமியை நனைத்துவிட்டன. உபேந்திரனென்றுங் கோவிந்தனென்றுந் திருநாமங்கள் வழங்கும்படிப் பட்டாபிஷேகஞ்செய்து, அமராஜன் கண்ணனை நோக்கி, மிக வணக்கத்துடனே மறுபடி யொரு விண்ணப்பஞ் செய்கிறான்: "ஓ மகானுபாவனான ஸ்ரீ கிருஷ்ணபகவானே! பசுக்களின் வாக்கியத்தைத் திருவுள்ளம் பற்றினாய். அடியேன் மற்றொரு விண்ணப்பஞ்செய்கிறேன். அதையுந் திருவுள்ளம் பற்றவேண்டும். அஃதென்னவென்றால், உனக்குத் துணையாயிருக்குங் கைங்கரியத்திலாசையி

* உப-மேலே, இந்திரன்-தேவேந்திரனுக்கு, மேற்பட்ட இந்திரன் என்பது பொருள். கோவிந்தன் முதலான திருநாமங்கள் எம்பெருமானுக்கு வெவ்வேறான அர்த்தங்களால் முன்பே யுண்டாயிருந்தாலும், இவ்வவதார சேஷ்டிதங்களாலும் அவை வந்திருக்கின்றன என்பது கருத்து. மற்றவிடங்களிலு மிப்படியே தெரிந்துகொள்ளவேண்டும்.

னுலே என்னுடைய அமிசத்தைக்கொண்டு பூமியில் அர்ச்சுனனென்பவனையுண்டாக்கியிருக்கிறேன். அவனை நீ யெப்போதும் சம்ரக்ஷித்தருளவேண்டும்; அவன் பூபாரம் நீக்குவதிலே உனக்குச் சகாயமாயிருக்கும்படித் திருவுள்ளம்பற்றி அவனை யுன்னைப்போலவே காத்தருளவேண்டும்" என்று இந்திரன் விண்ணப்பஞ் செய்யக்கேட்டு, சுவாமி திருவுள்ளமுவந்து இந்திரனை நோக்கி "ஓ தேவேந்திரனே! பாரதகுலத்திலே உன் னமிசத்தினுலே அர்ச்சுனன் பிறந்திருப்பது தெரியும். நான் பூலோகத்தி லிருக்குமளவும் அவனைக் காப்பாற்றுகிறேன். இந்த லோகத்திலே நானெவ்வளவு காலமிருப்பேனே அவ்வளவுகாலமும் அர்ச்சுனனை ஒருவனுஞ் ஜயிக்கமாட்டான். ஓ சுரபதியே! இவ்வுலகத்தில் மகா பலசாலியான கம்சன், அரிஷ்டன், கேசி, குவாலயாபீடம், நரகன் இவர்கள் முதலான அனேக அசுரர் இருக்கிறுர்களன்றே? அவர்களெல்லாம் ஹதஞ் செய்யப்பட்டபின் மகா யுத்தமொன்று நடக்கும். அதிலேதான் பூமியின் பாரந் தீருமென்றறி. ஆகையால் நீ புத்திரனுக்காகத் துன்பப்படாதே, உன் ஸ்தானத்திற்குப்போ, எனக்கு எதிரில் அர்ச்சுனனுக்குச் சத்துருவென்றெருவன் தலையெடுக்கமாட்டான். பாரதயுத்தம் நடந்தபின் இந்த அர்ச்சுனனுக்காகவே யுதிஷ்டிரன் முதலானுரையும் ஆயுதத் துன்பமொன்று மில்லாமற் காத்துக் குந்திக்குக் கொடுப்பேன்" என்று அருளிச் செய்யக்கேட்டு வானவர்க்கரசன் சுவாமியை ஆலிங்கனஞ்செய்து பணிந்து ஐராவதத்தின்மே லேலேறிக் கொண்டு மறுபடியுந் தன் உலகத்துக்குப் போய்ச் சேர்ந்தான். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் ஆயரோடும் ஆக்களோடுங் கூடித் தன் வரவை யெதிர்பார்த்திரா நின்ற கோவியருடைய பார்வைகளினுலே பரிசுத்தமா யிருக்கிற வழியால் கோகுலத்துக்கு எழுந்தருளினுன்.

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

# ரா ஸ க் கி ரீ டை

இவ்வண்ண மிந்திரன் வந்து போனபின்பு கோபாலரெல்லாம் கண்ணன் கோவர்த்தன பருவ தத்தை யெடுத்தது கண்டு வெகு ஆச்சரியமுடையவர்க ளாய் அவர் திறத்தில் மிகுந்த அன்புகூர்ந்து, அவரை நோக்கி "அப்பா கிருஷ்ணா! நீ இப்போது நேரிட்ட பெருமழையினின்று மெங்களையும் எங்கள் பசுக்களை யுங் கிரியைத் தூக்கிக் கொடைபோற் பிடித்துக் காத் தாயே? இப்படிப்பட்ட வுன் காரியங்கள் மகா அற்புதமா யிருக்கின்றன. உன் பிறப்போ இழிவான இடைக் குலமா யிருக்கின்றது. தண்ணீரிற் காளியனை யடக்கி னதும், பனங்காட்டில் தேனுகனைச் சங்கரித்ததும், கோவர்த்தனத்தை யெடுத்ததுமாகிய வுன்னுடைய பாலிய விளையாட்டுக்களைக் காண எங்களுடைய இரு தயங்களெல்லாம் சந்தேகமுற்றிருக்கின்றன. ஓ மகா பராக்கிரமமுள்ளவனே! சத்தியம் சத்தியம், ஸ்ரீஹரி யின் திருவடிகளின்மேலாணை, நீ மனுஷ்யனல்லை. ஓ கிருஷ்ண! பெண்டுகள் சிறுவர் முதலாக இவ்வாய்ப் பாடியி லிராநின்ற யாவர்க்கும் உன்னிடத்தில் மிகுந்த அன்பிருப்பதும் சகல தேவதைகள் கூடிச் செய்தாலும் இயலாத வுன் காரியங்களும் பாலியத்திலேயே இப்படி மகா வீரியமுண்டாயிருப்பதும், இழிவான எங்கள் குலத் திற் பிறந்திருப்பதும் யோசிக்குமளவில் எங்களுக்குச் சந்தேகம் அதிகப்படுகின்றது. நீ தேவனோ? தானவ னோ? இயக்கனோ? கந்தருவனோ? யாரோ தெரியவில்லை. யாராயிருந்தாலும் நாம் விசாரிப்பதிற் பயனென்ன? எங்களுக்கு உறவின்முறையானா யிருக்கிறாய், உனக்குத் தண்டமிடுகிறோம்" என்று கோபாலர் சொல்லியதைக் கேட்டுக் கண்ணன் சிறிதுபொழுது சும்மாவிருந்து, கொஞ்சம் சினேக கோபமுள்ளவராய் அருளிச்செய்த தாவது, "ஓ கோபாலரே! என் சம்பந்தத்தினாலே உங் களுக்கு வெட்கமுண்டாகாமலிருந்தால், நான் கொண் டாடும்படியானவனென்று தோன்றினால், உங்களுக்கு

இந்த விசாரணை யேதுக்கு? என்னிடத்தில் உங்களுக்கு அன்பிருந்தால், நான் உங்களுக்குக் கொண்டாடத் தக்கவனு யிருந்தால், நீங்கள் என்னை உறவுக்கேற்ற படி நினைத்திருங்கள்; நான் தேவனுமல்லேன், கந்தரு வனு மல்லேன், இயக்கனு மல்லேன், தானவனு மல் லேன், நான் உங்களுக்குப் பந்துவாகப் பிறந்தவனே யல்லது வேறன்று; ஆதலால் நீங்கள் வேறுவிதமாய்ச் சிந்திக்கவேண்டாம்" என்றிப்படிக் கண்ணன் அருளிச் செய்ததைக்கேட்டு அவர் சிநேக கோபமுள்ளவரா யிருக்கிறுரென்பதையு மறிந்து ஆயரெல்லாம் ஒன்றும் பேசாமல் வனத்துக்குப் போனுர்கள்.

பின்பு கண்ணன் அந்தக் கூதிர்ப்பருவத்திலே வானம் நிர்மலமாயிருப்பதையும், பால் பெய்ததுபோல் நிலவு காய்வதையும், திசையெல்லாங் கமழும்படி மலர்ந்த அல்லித் தடாகத்தையும், வண்டுகள் பாடப் பெற்று மனோகரமா யிருக்கின்ற வனவரிசையையுங் கடாக்ஷித்து, முன் தான் வரமளித்தபடி கோவியரோடு சேர்ந்து கிரீடிப்பதற்குத் திருவுள்ளம் பற்றித் தமைய னின்றித் தானென்றியாகவே வனத்திற்போய், பெண் கள் மனதை யிழுக்கத்தக்கதும், இன்னபடியென்று சொல்லக்கூடாம லினியதுமான தொனியுள்ளதாய்த் தாரமு மந்தரமுமான ஓசை வேற்றுமைகளினுன் முறைப்பாடுடையதாய் விளங்கும்படி வேணுகானஞ் செய்தருளினுன். இவ்வாறுன அந்த வேணுநாதத் தைக்கேட்டு ஆய்ச்சிகளெல்லாம் பரவசராகி மாளிகை களைத் துறந்து பரபரப்புடனே மதுசூதன னிருக்கு மிடம் வந்து சேர்ந்தார்கள். அவர்களுள் ஒருத்தி சுவாமியின் குழலிசையை யுற்றுக்கேட்டு அவனையே நினைத்துக்கொண்டிருந்தாள். பின்னுமொருத்தி அரு கில் வந்து "கிருஷ்ண கிருஷ்ண" என்று அழைத்துப் பின்னென்றும் பேசமாட்டாமல் நாணப்பட்டு நின் றுள். இன்னு மொருத்தி அவரிடத்தில் அன்பின் மிகுதியாலே ஒன்றுந் தெரியாதவளாகிப் பக்கத்திற் போய் நின்றுள். வேறொரு பெண் தன் மாளிகையி னின்றும் வெளியில் வந்து அங்கே தன் மாமனுரைப் பார்த்து அஞ்சி, கண்ணன் சந்நிதிக்குப் போகக்கூடா

மையாலே கண்களைக் மூடிக்கொண்டு தன்மயமாய் அந்தக் கோவிந்தனைத் தியானஞ் செய்துகொண்டிருந்தாள். வேறொருத்தி * அவனிடத்திலே சித்தம்பற்றியிருப்பதனாலுண்டான ஆனந்தத்தினாலே புண்ணியங்களும் அவனையடையாமற் போனதைப்பற்றி யுண்டான மகா துக்கத்தினாலே பாவங்களும் மாளப்பெற்றவளாய்ப் பரப்பிரம சொரூபியாய் ஜகத்காரணமான அவனையே சிந்தித்துக்கொண்டு மூச்சடங்கி முத்தியைப் பெற்றாள். இப்படியாக மெய்மறந்து தன்னைச்சேர்ந்த கோபிகாகன்னிகைகளால் சூழப்பட்டு ஸ்ரீராஜகோபாலன் ராஸக்கிரீடை என்கிற உற்சவத்திலே குதூகலமுடையவனாய் அதற்கேற்றதாய்ச் சரத்கால நிலவுபொருந்தி விளங்கிக்கொண்டிருந்த இரவைத் திருவுள்ள முகந்தருளினான்.

இப்படிச் சுவாமி ராஸக்கிரீடை செய்தருளி † மற்றோரிடத்தி லெழுந்தருளினபோது, அந்தக்கோபிகா கன்னியரெல்லாம் கூட்டமாய்க் கூடிக்கொண்டு கண்ணனுடைய திருவிளையாட்டிலேயே மனம் பற்றினவர்களாய், அந்தப் பிருந்தாவனத்தி னடுவில் திரிந்துகொண்டு ஒருவரோடொருவர் சொன்னதாவது:—

ஒருத்தி "ஓ தோழிமார்களே! கேளுங்கள். நான்தான் ஸ்ரீகிருஷ்ணன். ஆதலால் நான் லலிதமாய் நடக்கிறேன் பாருங்கள்" என்றாள். மற்றொருத்தி "நீயல்லடி கிருஷ்ணன், நானே கிருஷ்ணன், என்னுடைய பாட்டைக்கேள்" என்றாள். வேறொருத்தி "அடா துஷ்டனான காளியநாகனே! ஓடாதே, நில், நான் கிருஷ்ணன், இதோ உன்னைப் பிடிக்கிறேன் பார்" என்று தோளைத் தட்டித் தன் கையையே சர்ப்பத்தைப்போற் பிடித்து நின்றாள். இன்னுமொருத்தி "ஓ ஆயர்களே! நீங்கள்

* மனம் உள்ளடங்க அதைவிட்டுப் பிரியாத பிராணனுமுள்ளடங்கினதனால் மூச்சடங்கிற்று. முத்தி பெறுபவர்களுக்கு இருவினையும் நீங்கவேண்டும். ஆனந்தமும் ஆர்த்தியும் அனுபவிக்கப்பட்டதனால் முறையே தம்மினமான புண்ணிய பாவங்களைப் போக்கின.

† பிரிதல் இன்ப மதிகமாவதற்குக் காரணமாதலால், அவர்களுக்கு இன்பமிகும்பொருட்டுப் பிரிந்தானென அறிக. இதனைக் குறளில் ஊடலுவகை யென்னு மதிகாரத்திற் காண்க.

மழைக்கு அஞ்சவேண்டாம், சஞ்சலமற்றிருங்கள், இதோ இந்தக் கோவர்த்தனத்தை யெடுத்துக் குடையாய்ப் பிடிக்கிறேன்” என்றாள். மற்று மொருத்தி “ஓ இடைப்பிள்ளைகளே! தேனுகனை நான் சங்கரித்துப் போட்டேன், இனி நீங்க ளிப்பனங்காட்டில் வேண்டியவாறு சஞ்சரியுங்கள்” என்றாள். வேறொருபெண் கண்ணனைப்போல் நின்றுகொண்டு பசுக்களைக் கூப்பிட்டாள்.

* இப்படி யந்த இடைச்சிகள் கண்ணனுடைய பல வகைப்பட்ட திருவிளையாட்டுகளைச் செய்துகொண்டு மெய்மறந்த தன்மையராய்ப் பிருந்தாவனத்திலே திரிந்துகொண்டிருக்கையில், ஒருபெண் தரையைப்பார்த்து அங்கத்திற் புளகமுண்டாகவும் கண்கள் மலர்ந்து நிற்கவும் பக்கத்திலிருப்பவர்களை நோக்கி “ஓ தோழிமார்களே! பாருங்கள், இங்கே துவசம் வச்சிரம் கமலம் அங்குசம் முதலான இரேகைகளையுடைய கண்ணன் திருவடித் தாமரைகளின் சுவடுக ளிருக்கின்றன. இவ்வடி வைப்புக்களைப் பார்க்க அவன் விளையாட்டோடு விநோதமாய் நடந்திருக்கிறானென்று தோன்றுகின்றது. இன்னும் பாருங்கள், மகாபுண்ணியம் செய்த எவளோ ஒருத்தி அவனோடுகூடச்சேர்ந்து மதத்தினால் மெல்லச் சென்றிருக்கிறாள். ஏனெனில் இதோ பக்கத்தில் அவளுடைய அடிச்சுவடுகள் நெருங்கினவைகளுஞ் சிறியவைகளுமாகக் காணப்படுகின்றன. இங்கே கண்ணன் குந்திப் பூப்பறித்திருக்கிறான். அதனாலேதான் அந்த மகானுபாவனுடைய திருவடிகளி னுனிமாத்திரமே பூமியிற்பட்டிருக்கின்றன. இதோ பாருங்கள். இங்கே கண்ணன் உட்கார்ந்து அந்தப் பூக்களாலே ஒருத்தியை அலங்கரித்திருக்கிறான், அவளோ பூர்வசன்மத்திலே சர்வசரீரகனை ஸ்ரீமந்நாராயணனை

* அன்புமிகுந்து பரவசப்படும்போது அனுபவிக்கப்படும் பொருளின் பாவனை அனுபவிக்கிறவனுக்கு உண்டாகின்றது. அல்லது விரகத்தில் தரிப்பதற்காக ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இவ்வனுபவத்தைத்தான் ஆழ்வார் அஞ்சாம்பத்து ஆறாந்திருவாய்மொழியில் “கடல்ஞாலஞ்செய்தேனும் யானே யென்னும்” இத்தியாதியால் தாய்க்கூற்றில் அருளிச்செய்தார். இஃது யோக நிஷ்டையி லிருக்கு மவர்களுக்குண்டாக அவர்கள் தாமே ஈசுவரனென்றும் அவன் விபூதிகளெல்லாம் தம் விபூதியென்றும் சொல்லும்படியாகின்றது.

நன்ருய் ஆராதித்திருக்கிருள். ஓ கோபிகைகளே! இங்கே பாருங்கள். அந்தக் கோபால சூடாமணியானவன் தான் பூப்புனைந்து மேன்மைப்படுத்தின அவளை விட்டு இவ் வழியில் எழுந்தருளி யிருக்கின்ருன். இங்கே ஒருத்தி யின் அடிச்சுவடுகள் நுனியழுந்தியவைகளாகக் காணப் படுகின்றன. ஆதலின் அவள் முந்திச்சென்ற அந்தப் புண்ணியனைச் சேரும்பொருட்டு நிதம்ப பாரத்திஞல் வருந்திச் சீக்கிரமாய் நடந்திருக்கிருள். ஓ பாங்கிகளே! ஒருத்தி அவன் கைமேற் கைவைத்துக்கொண்டு கூட நடந்திருக்கிருள். அதனுலேதான் இங்கே அடிவைப் புகள் நீண்டிராமற் சிறிது நெருங்கி அசுவாதீனமாய்க் காணப்படுகின்றன. இங்கு பாருங்கள்; அந்த வஞ்ச கன் அவளுடைய கையைப்பரிசித்தது மாத்திரமேயன்றி வேறு பரிசொன்றுஞ் செய்யாமையாலே அவள் அவ மானப்பட்டு ஆசையற்றுத் திரும்பிவிட்டதாக அடிச்சுவ டுகள் தோன்றுகின்றன. இங்கே கண்ணனுடைய அடி வைப்புகள் மிகவிரைவாய் வைக்கப்பட்டனபோலும். இதனுலே அவன் இங்கொருத்தியை நோக்கி, நீ யிங் கேயேயிரு நான் சீக்கிரம்போய் நாமிருவருங் கூடுவதற் கேற்ற இடம் பார்த்துக்கொண்டு உன்னிடம் வந்து சேரு கிறேனென்று உரைத்துப் போனதாகத் தோன்ருகின் றது. ஓ பாங்கிமாரே! இதற்குமேலே அவனுடைய திருவடிச்சுவடு காணப்படவில்லை. அவன் எங்கேயோ மற்றவர்கள் புகக்கூடாத விடத்திற் சென்றிருக்கிருன். ஆதலால் திரும்புங்கள், இங்கேநாம் போவது கடி னம், இவ்விடம் நிலவும் புகக்கூடாததா யிருக்கின்றது" என்று சொல்லக்கேட்டு அவ்விடைச் சிறுமிகள் யாவரும் கண்ணனைக் காண்பதரிதென்று மனமழுங்கினவர்களாய் மீண்டும் யமுனையாற்றங்கரைக்குவந்து உட்கார்ந்து அவன் சரித்திரங்களைப் பாடிக்கொண்டிருந்தார்கள்.

இப்படி யிருக்கையில் தாமரை மலர்போல் மலர்ந்து விளங்காநின்ற திருமுக மண்டலத்தோடு சகல லோக ரட்சகனுந் திவ்விய சரித்திர முடையவனுயு மிருக்கிற கண்ணன் எழுந்தருளக்கண்டு, அக்கோவியர் மிகவுங் களிப்படைந்தார்கள். அவர்களுள் ஒருத்தி "கிருஷ்ண!

கிருஷ்ண! கிருஷ்ண!" என்று மாத்திரஞ்சொல்லி மற்றொன்றுஞ் சொல்லாமற் சும்மா விருந்து விட்டாள். மற்றொருத்தி புருவங்கள் நெறிக்கப் பார்த்துக் கண்களாகிய வண்டுகளினாலே அக்கண்ணனுடைய முகாரவிந்தத்தைப் பானஞ்செய்தாள். வேறொருத்தி அவனைக் கண்டு கண்களை மூடிக்கொண்டு அவனுடைய அந்தத் திவ்விய ரூபத்தையே தியானித்து யோகநிஷ்டையுடையவள்போ விருந்தாள். இப்படியாகத் தன்னைக் காதலித்துப் பலவகைச் சேஷ்டைகளோடுஞ் சூழ்ந்த அந்தப் பெண்களுள் சிலரைப் பிரியமான வசனங்களாலேயும் சிலரைப் புருவநெறிப்புள்ள நோக்கங்களினாலேயும் சிலரைக் கை தீண்டுவதினாலேயும் கண்ணன் சமாதானப்படுத்தி யருளினான். பின்பு கலக்கமின்றித் தெளிவான மனமுடைய அப்பெண்களோடு * ராஸக்கிரீடை செய்ய வாரம்பித்தான். ஆனால் அக்கன்னியர் யாவரும் கண்ணனிடத்திலேயே நிற்க மனமுள்ளவராய் அவன் பக்கத்தை விடாமலிருந்ததனால் வட்டமாக ராஸமண்டல கோஷ்டியும் ஏற்படவில்லை. ஆனதனால் சுவாமி ஒவ்வொருத்தியையுங் கைப்பிடித்து அந்தச் சுகத்தினாலே பரவசையாய்க் கண்களை மூடிக்கொண்டிருக்கு மவளவள் கையை மற்றொருத்தியின் கையோடு கூட்டி வட்டமாயவர்களை நிறுத்தி யருளினான். அவர்களோ ஆனந்த பரவசத்தினால் கண்ணனுடைய கையைப் பிடித்திருப்பதாய் நினைத்தார்களே யல்லது மற்றொருத்தி கையைப் பிடித்திருப்பதாக நினைக்க வில்லை. கண்ணனோ தான் விரைவாய்ப் பாயும் இலாகவ சமத்காரத்தினாலே யாவர்க்கும் பக்கத்தி லிருந்தவன் போலவே காணப்பட்டான். பின்பு சரத்கால வர்ணனையுள்ள பாட்டும், அதற்குத் தாளமாகக் கைவளைகளின் குலுக்குமுள்ளதாய் ராசக்கிரீடையானது விளங்கிற்று. ஆனாலும் கண்ணன் மாத்திரந் தான் சரத்காலத்துச் சந்திரனையும் அந்நிலாவையும் ஆம்பல் மலர்ந்து

* அநேக நாட்டியப்பெண்கள் வட்டமாய் நின்று, சித்திரமான தாளலயைகளோடு கூட மெதுவாகவும் உன்னதமாகவுஞ் செய்யுங்கூத்து, ராஸமென்று சொல்லப்படும்.

விளங்குந் தடாகங்களையும் பற்றிப் பாடியருளினான். கோபிகைகளோ, கண்ணன் திருநாம மொன்றையே பாடினார்கள். இப்படியாகப் பாடிச் சுற்றிவருகையில், அவ்வருத்தத்தினா லொருத்தி கங்கணங்க ளொலிக்கப் பெற்ற கொடிபோன்ற தன்கையை அவன் தோண்மே லிறுத்தினாள். மற்றொருத்தி பாடலைப் புகழ்கின்ற வியாஜத்தினால் யானைத் தும்பிக்கைபோல் விளங்கா நின்ற திருத்தோளுள்ள கண்ணனைக் கட்டிக்கொண்டு முத்தமிட்டாள். இன்னுமொருத்தி கண்ணன் கபோ லத்தோடு தன் கபோலஞ் சேர்த்துத் தனக்குண்டாகிய புளகமென்னும் பயிர்க்குத் தண்ணீர் பெய்யு மேகங்கள் போலே வியர்வையடைந்திருக்கின்ற அவன் திருத் தோள்களைக் கட்டிக்கொண்டாள். இப்படி அவரவர் ஆனந்த மனுபவித்துக்கொண்டு உரத்த நாதத்தினாலே கண்ணன் செய்த ராஸகானத்திற்கு அநுகீதமாக, "நன்றாயிருக்கிறது கிருஷ்ணா! நன்றாயிருக்கிறது கிருஷ்ணா!" என்று இரட்டித்த நாதத்தோடு பாடின வர்களாய், அவன் போகையிற் கூடப்போவதும் திரும்புகையில் எதிர்முகமாய்த் திரும்புவதுமாய் அவ னைப் பிரியாமலே யிருந்தார்கள். இவ்விதமாய்த் தன் னைப் பிரிந்தால் ஒருக்ஷணம் ஒருகோடி வருஷம் போலே தோன்றும்படி அந்தப் பெண்களுக்கு ஆனந் தத்தை வளர்த்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் ராஸக்கிரீடை செய்தருளினான். அப்பெண்கள் தங்க ளுடைய புருஷர்களாலும் தாய்தந்தையர்களாலும் உடன்பிறந்தாராலும் தடுக்கப்பட்டாலும் அவர்களை இலக்ஷியஞ்செய்யாமல் இரவுகளிலே கண்ணனிடஞ் சேர்ந்து மிக்க அன்போடு இரமித்துக்கொண்டிருந்தார் கள். அந்த ஸ்ரீமதுசூதனனும் மனுஷ்யாவதாரத்திற் கேற்றபடி அவ்விளமைக்குரிய சாபலியத்தைப் பெரு மைப்படுத்திக்கொண்டு இரவுதோறும் அக்கோப கன்னி களை இரமித்துவந்தான்.

ஓ முனிவரே! தருமத்தை ஸ்தாபிக்க அவதரித்த எம்பெருமான் தரும விரோதமான காரியஞ் செய்வது ஒக்குமோ? அக்கன்னிகளுக்கும் இதனாலே பாதக முண்டாகாதோ? என்று கேட்பீராகில் சொல்லுகிறேன்

கேளும். எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களுடைய சகல பாபங்களையும் போக்கடிக்கும்படியான பரிசுத்த முடையவனாகையாலேயும், அக்கன்னியர் வேதாந்த நிர்ணயத்தின்படி அன்பு செலுத்தவேண்டு மிடத்திலேயே அன்பைச் செலுத்தினார்களாகையாலேயும், அவர்களுக்குச் சகல பாபநிவர்த்தியே யல்லது பாபமுண்டாவதில்லை. எம்பெருமானுக்கோ ஜீவாத்துமாக்களுக்கு உண்டாவதுபோலே பாவபந்த முண்டாகாது. ஏனெனில் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்கிற பஞ்சபூதங்கள் எப்படி எல்லாப் பிராணிகளிலும் வியாபித்திருக்குமோ அப்படியே சுவாமி அந்தப் பெண்களிலும் அவர்களுடைய பர்த்தாக்களிலும் மற்றுமுள்ள ஆத்துமகோடிகளிலும் வியாபித்திருக்கும் பரமாத்துமாவாகையாலே அவனுக்குப் புதிதாய் ஒரு சம்பந்தம் வந்ததில்லை யென்றறி.

பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினான்காம் அத்தியாயம்

# அரிஷ்டாசுரவதம்

கேளும் மயித்திரேயரே! ஒருகால் சுவாமி சாயுங்காலமான வுடனே ராஸக்கிரீடைக்கு எத்தனமா யிருக்குமளவில், அரிஷ்டனென்னுமோர் அசுரன் எருதின் வேடம் பூண்டவனாய் அவ்விடைச் சேரியைப் பயப்படுத்தி, உல்லோல கல்லோலஞ் செய்துகொண்டு வந்தான். அவன் நீருண்ட மேகம்போலே கறுத்த நிறமும், கூர்மையான கொம்புகளும், சூரியன்போலே சிவந்து பளபளப்பான கண்களும், திண்மையான கழுத்துப்பிடியும், உயர்ந்த நுசுப்பும் வளர்ச்சியும், அண்டக்கூடாத பராக்கிரமமு முடையவனாய்க் குளப்படிகளினாலே பூமியைப் பிளக்கிறவன்போலே இடித்துக்கொண்டும், நாக்கினால் உதடுகளை யடிக்கடி நக்கிக்கொண்டும், வெகு பரபரப்பாய் வாலைத் தூக்கி யுத

றிக்கொண்டும், சாணமூத்திரங்களினாலே பின்புற முதலான அவயவங்கள் பூசப்பட்டு, பசுக்களுக்கெல்லாம் நடுக்கமுண்டாக்கத் தக்கவனாய், அதிகமாய்த் தொங்குகின்ற அலைதாடியுடனே மரங்களில் முட்டின அடையாளங்கள் முகத்திற்றோன்ற, மாடுகளையெல்லாம் முட்டிக் கருக்களை விழச்செய்துகொண்டு, வெகு மதோன்மத்தனாய் வந்தான். அவன் இப்படியே இடபரூபத்தோடு காடுகளிற்சென்று அங்குத் தவஞ்செய்யு முனிவர்களையெல்லாம் கொன்றுகொண்டிருக்கிறவன். இவ்வாறு பயங்கரமான கண்களோடு துள்ளிவரும் அவ்வசுர இடபத்தைக்கண்டு, இடையரும் இடைச்சிகளும் மிகவும் பயமடைந்து, நடுங்கிக் "கிருஷ்ணா! கிருஷ்ணா!" என்று கதறிக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணனைச் சரணமடைந்தார்கள். அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் கையைத்தட்டிச் சிங்கநாதஞ் செய்தருள, அதுகேட்டு அந்த விருஷபாசுரன் சுவாமியின் திருவுதரத்தின் மேற் கண்வைத்துக் கொம்புகளை நீட்டிக்கொண்டு பாய்ந்து வந்தான். அப்படியாகவரும் அந்தத் துராத்துமாவைப் பார்த்துக் கண்ணன் சற்றேனும் விலகாமல் இருந்த விடத்திலேயே சத்துருவினிடத்தில் அலக்ஷியத்தைக் குறிப்பிக்கும் விளையாட்டோடெழுந்தருளி யிருந்தார். பின்பு அவன் அருகில் வரப்பார்த்து யானையை முதலை பிடிப்பதுபோல அவனைக் கொம்புகளிற் பிடித்து அசையவொட்டாமற் செய்து, தன் முழங்காலினால் அவன் வயிற்றிலோரிடியிடித்து, அவனுடைய கொழுப்பையுங் கருவத்தையுமடக்கி, அழுக்கான வஸ்திரத்தைக் கசக்குவதுபோல் அவன் கழுத்தைப் பிடித்துக் கசக்கி, அவனுடைய கொம்புகளி லொன்றைப்பிடுங்கி, அதனாலேயே அவனையடித்தார். இப்படிச் செய்யவே அவ்வசுரன் உதிரங் கக்கிக்கொண்டு கீழேவிழுந்து இறந்தான். அதைக் கண்டு, முன்பு ஜம்பாசுரனை வதைசெய்தபோது தேவேந்திரனைத் தேவதைகள் துதித்ததுபோலக் கண்ணனைக் கோபாலரெல்லாந் துதித்தார்கள்.

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

பதினைந்தாம் அத்தியாயம்

# கம்சன் அக்குரூரருக்குக் கட்டளையிடுதல்

இவ்விதமாய் அரிஷ்டனென்கிற விருஷபாசுரனும், இதற்குமுன் சொல்லியபடி தேனுகனும் பிரலம்பனுஞ் சங்கரிக்கப்பட்டும், கோவர்த்தனாசலம் தூக்கப்பட்டும், காளியநாயகன் தண்டிக்கப்பட்டும், மிகவும் பெரிய மரங்களிரண்டுந் தள்ளப்பட்டும், பூதனை கொல்லப்பட்டும், சகடு திரும்பி வீழ்த்தப்பட்டும் நிகழுங் காலத்தில் நாரதமுனிவர் கம்சனிடத்துக்கு வந்து, தேவகியின் குழந்தையை யசோதையினிடத்தில் விட்டு, அவள் குழந்தையை இங்குக் கொண்டு வந்து விட்டதுமுதலான விருத்தாந்தங்களை ஆதியோடந்தமாக முறையாய்ச் சொன்னார். இப்படித் திவ்விய ஞானமுள்ள நாரதமுனிவர் சொன்னதைக் கேட்டுக் கம்சன் வசுதேவர்மேல் அதிககோபங்கொண்டு சபையிலே அவரையும் மற்றுமுள்ள யாதவரையும் நிந்தித்து, "இப்போது இளமைப்பருவத்தோடிருக்கின்ற இராமகிருஷ்ணர்கள் பலப்படுவதற்கு முன்னமே அவர்களைச் சங்கரிக்கு மெத்தனஞ் செய்யவேண்டும், அப்படி செய்யாமல் அவர்கள் யவ்வனவயது பெறுமட்டுஞ் சும்மா விருந்தோமாகில் அவர்கள் மிகவும் அசாத்தியராய் விடுவார்கள்; ஆதலால் அவர்களை நம்மிடத்திருக்கிற முஷ்டிகன், சாணூரன் என்றமல்லர்களைக்கொண்டு மல்யுத்தஞ் செய்வித்துக் கொல்லுவோம். அதற்காக நாம் வைத்திருக்கும் வில்லின் திருவிழாவைச் சாக்கிட்டு அவர்களை யிங்கே யழைப்பிப்போம். எப்படியாகிலும் அவர்கள் விரைவில் நாசமாகு முபாயத்தை நாம் தேடவேண்டும் என அவர்களை இவ்விடத்திற்கு அழைத்துக் கொண்டுவரச் சுவபல்க குமாரனை அக்குரூரனைக் கோகுலத்திற்கு அனுப்பவேண்டும். அல்லது பிருந்தாவனத்திற் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற கேசி யென்பவனுக்கே கட்டளையிட்டோமாகில் அவன்

அங்கே தானே அவர்களைச் சங்கரித்து விடுவான். அவர்களிங்கே வந்தபோதிலும் என்னுடைய குவலயா பீடமென்கிற யானை வசுதேவன் மக்களான அவ் விடைப் பிள்ளைகளிருவரையுஞ் சந்தேக மின்றி நாசஞ் செய்துவிடும்" என்று சிந்தித்து அந்தத் துராத்துமாவான கம்சன் ஸ்ரீராம ஜநார்த்தனர்களைக் கொல்வதற்கு அழைத்துவரும்படி அக்குரூரரை நோக்கிச் சொல்லுகின்றான்.

"ஓ தானபதியே! என் சந்தோஷத்திற்காக என் வார்த்தையை நீர் தடையின்றிச் செய்யவேண்டும்; அஃதாவது நீர் தேரின்மே லேறிக்கொண்டு நந்தனுடைய கோகுலத்திற்குப்போய் அங்கே என்விநாசத்திற்காக விஷ்ணுவின் அமிசத்தினாலே பிறந்த வசுதேவன் மக்களிருவர் துஷ்டர் வளருகிறார்களன்றோ, அவர்களை வருகிற சதுர்த்தசியன்றைக்கு இங்கே நடக்கப்போகிற தனுர்யாக மகோற்சவத்தில் மல்லயுத்தத்திற்கு வரும்படி நீர் அழைத்துக்கொண்டு வரவேண்டும்; கைச்சண்டையில் மிக வல்லவர்களாய் என்னிடத்தி லிராநின்ற சாணூர முஷ்டிகர்களோடுகூட அவர் சண்டையிடுவதை யாவரும் இங்கே வேடிக்கையாய்ப் பார்க்கட்டும். அல்லது என்னுடைய குவலயாபீடமென் கிற யானை மாவுத்தனால் தூண்டப்பட்டு அந்தப் பாவிகளான வசுதேவன் சிறுவர்களைக் கொன்றுவிடும். இப்படியாக அவ்விருவரையும் வதைத்தபின்பு துர்மதிகளான வசுதேவனையும் நந்தகோபனையும் மிகவுந் துர்ப்புத்தியான என்தகப்பன் உக்கிரசேனனையுங் கொன்று விடுவேன். பின்னர் என்னைக் கொல்ல நினைத்திருக்கின்ற இடையருடைய மாடுகளையும் பொருள்களையும் பறித்துக்கொண்டு பிறகு உம்மைத்தவிர மற்ற யாதவர்களைக் கொல்லவும் எத்தனிக்கிறேன். இப்படி யெல்லாஞ் செய்து இவ்விராச்சியத்தை யாதவப் பூண்டில்லாததும் சத்துருக்க ளில்லாததுமாக்கிச் சந்தோஷமா யாளு கிறேன். இதற்காக அக்குரூரரே! நீர் ஆயப்பாடிக்குப் போய் வரவேண்டும். மேலும் அங்கிருக்கு மிடையர்களுக்கு எருமைநெய் தயிர் பால்களை விசேஷமாய் நம் மிடத்திற்குக் கொண்டுவரும்படிக் கட்டளையிட்டுவாரும்"

என்றிப்படிக் கஞ்சன் சொன்ன வார்த்தையைக்கேட்டு மகாபாகவதரான அந்த அக்குரூரர் "நாளைக்குக் கண்ணனைச் சேவிப்போமன்றோ" என்று மிகவுங் களிப்படைந்து, அப்படியே செய்கிறேனென்று கஞ்சனுக்குச் சொல்லித் திவ்வியமான இரதத்தின்மேலேறிக்கொண்டு மதுராபுரியினின்றும் புறப்பட்டார்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினாறும் அத்தியாயம்

# கேசிவதம்

பின்பு பிருந்தாவனத்திலேயே சஞ்சரித்துக்கொண்டிருந்த கேசியென்னு மசுரன் கஞ்சனுடைய தூதனாலே ஏவப்பட்டவனாகி, ஸ்ரீ கிருஷ்ணனைச் சங்கரிக்கவேண்டுமென்று கருத்துக்கொண்டு குதிரையின் உருவத்தோடு சுவாமி எழுந்தருளியிருக்கு மிடத்திற்குச் சமீபத்தில் வந்து, குளம்புகளிலே பூமியை யிடித்துக்கொண்டும், பிடரிமயிர்களின் நெறிப்பினாலே மேகங்களைக் குத்திக்கொண்டும், தான் குதித்தோடுந் திறத்தினாலே சந்திர சூரியர்களுடைய மார்க்கங்களைத் தாவிக்கொண்டும், பெருங்கனைப்போடு அங்கிருந்த ஆயர்களைத் துரத்தினன். அந்த அசுரக்குதிரையின் கனைப்பைக் கேட்ட மாத்திரத்திலே ஆயரும் ஆய்ச்சிகளும் பயப்பட்டு நடுக்குற்று ஸ்ரீ கோவிந்தனைச் சரணம் புகுந்தார்கள். அப்போது கண்ணன் "காத்தருளவேண்டும், காத்தருளவேண்டும்" என்று கோபாலர் கூவுவதைக்கேட்டு நீருண்டமேகத்தின் கர்ச்சனைக்கு ஒப்பானதொனியோடு அவர்களை நோக்கி யருளிச் செய்கின்றார்:—

"ஓ கோபாலர்களே! நீங்கள் பயப்படவேண்டாம்; இந்தக் கேசிக்கு அஞ்சுகிற உங்களாலே வீரருக்குண்டான சக்தியெல்லாம் போக்கடிக்கப்படுகின்றன; அற்பபலமுள்ள இவனாலே என்ன ஆகும்? சும்மா கனைத்து ஆரவாரம் இடுகிறதேயல்லது மற்றொன்றுமில்லை. இவ

ஞொரு பலமற்ற அசுரன், சும்மாக் குதிக்கிருன்" என்று அருளிச்செய்து, கேசியைநோக்கி "அடா துஷ்டா! வா வா, நான் கிருஷ்ணன், முன் தக்ஷயாகத்திலே பூஷா வென்பவனுடைய பற்களை உருத்திரன் உதிர்த்தது போலே நான் உன் வாயிலிருந்து பற்களையெல்லா முதிர்த்துப் போடுகிறேன்" என்று வீரவாதம் பேசிக் கொண்டு, கோவிந்தன் அந்தக் கேசிக்கு எதிரில் எழுந் தருளினன். அந்த அசுரக்குதிரையும் வாயைத் திறந்து கொண்டு கண்ணன்மேற் பாய்ந்து வந்தது. அப் போது பகவான் தன் திருக்கையை நன்ருகப் பெருக்கி நீட்டி அந்தக் குதிரையின் வாயிற் கொடுக்க, அந்தக் கையின் தாக்குதலினலே அதன் பற்களெல்லாம் பெயர்ப் புண்டு வெண்முகிற் றுண்டங்கள்போலக் கீழே விழுந் தன. மேலும் கண்ணனுடைய திருக்கை அதன் வாயிற் புகுந்தவுடனே சிகிச்சை செய்யாத வியாதி வளர்வது போல வளர்ந்து நின்றதனலே, அந்த அசுர அசுவ மானது உதடுபிளந்து, கண்கள் பிதுங்க நுரைத்த உதிரத்தை மிகுதியாய்க் கக்கிக்கொண்டும், கால்க ளாலே பூமியை உதைத்துக்கொண்டும், மலமூத்திரங்களை விட்டுக்கொண்டும், உடம்பெல்லாம் வியர்த்துப் பல முங் கர்வமுமொடுங்கியும், யாதொரு முயற்சியுமின்றிச் சும்மாவிருந்தது. சுவாமியோ அப்படியே கையை வளர்த்தி அத்துரங்கத்தை இருபிளவாகப் பிளந்து தள்ளியருளினர். அப்போது அக்குதிரையின் உடலின் இருபிளவுகளும் ஒவ்வொரு கண்காதுகளுடையனவும், இவ்விரண்டு கால்களுடையனவும், பாதிப் பாதி வால் களுடையனவுமாய் விளங்கின. இப்படிக் கண்ணன் கேசி யசுரனைச் சங்கரித்து அதிக சந்தோஷமடைந்த கோபாலரெல்லாந் தன்னைச் சூழ்ந்துநிற்கத் திரு மேனியிற் சிறிது மாயாசமில்லாமல் சுவஸ்தமாய்ச் சிரித்துக்கொண்டு, அங்கேயே எழுந்தருளியிருந்தான். கோபாலருங் கோவியருமோ கேசிசங்காரத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டவர்களாய் ஸ்ரீபுண்டரீகாக்ஷனை அன் போடு துதித்து நின்ருர்கள்.

பிறகு நாரதமுனிவர் மேகத்திலே மறைந்து நின்றுகொண்டு அளவற்ற பலபராக்கிரம கீர்த்தியுள்ள

கேசியசுரன் பட்டபாட்டைக்கண்டு ஆனந்தபரவசராய்ச் சுவாமிக்கு விண்ணப்பஞ் செய்ததாவது:—

"ஓ ஜகந்நாதனே! சகல தேவதைகளுக்குந் துன்பஞ் செய்துகொண்டிருந்த கேசியைத் திருவிளையாட்டாகவே நீ சங்கரித்தது மிகநன்று, மிகநன்று. அடியேன் இதுவரையிலு முண்டாகாமல் அரிதாயுண்டான நராசுவ யுத்தத்தைப் பார்க்க மிகுந்த வுற்சாகத்தோடு சுவர்க்கத்தினின்று மிங்குவந்தேன்; ஓ மதுசூதனனே! இவ்வவதாரத்திலே நீ செய்தருளின அவ்வநந்தத் திவ்விய சேஷ்டிதங்களினாலே அடியேனுடைய உள்ளம் வியப்பையு முவப்பையு மடைந்திருக்கின்றது. ஓ கிருஷ்ணா! இந்தத் துரங்கம் பிடரிமயிரை யுதறிச் சிலிர்க்கச்செய்து வானத்தை நோக்கிக் கனைக்குமளவில் இந்திரன் முதலான சகலதேவர்களும் நடுங்கிப்போவார்கள். ஓ ஜநார்த்தனனே! இப்படிப்பட்ட துஷ்டாத்துமாவை நீ சங்கரித்தருளினதினாலே இவ்வவதாரத்திலும் உனக்குக் கேசவன் என்கிற திருநாமம் உலகத்தில் பிரசித்தமாகக்கடவது. ஓ கேசிசங்காரனே! நீ பல்லாண்டு பல்லாண்டாய் வாழக்கடவை. அடியேன் விடைகொள்ளுகிறேன், நாளைக்கு நடக்கப்போகிற கம்ச யுத்தத்திற்கு மறுபடியும் வருகிறேன். ஓ பூமிதரனே! உக்கிரசேனன் மகனாகிய கஞ்சன் அவனைச் சேர்ந்தவர்களோடுகூடச் சங்கரிக்கப்பட்ட பின்னேதான் நீ பூமி பாரங் கழித்தவனாவாய். ஓ பகவானே! அந்த விஷயத்தில் இராஜாக்களுக்கும் உனக்கும் உண்டாகும் யுத்தத்திலே நீ செய்தருளும் விசித்திரம் விசித்திரமான அனேகவிதங்களையெல்லாம் அடியேன் சேவிக்கக் காத்திருக்கின்றேன். ஓ கோவிந்தனே! நீ பெரிதுந் தேவ காரியஞ் செய்தருளினாய். அவையெல்லாம் உனக்கே தெரியும். உனக்குப் பல்லாண்டு, நான் விடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பஞ்செய்து, நாரதமுனிவர் சென்றபின் கிருஷ்ணன் கோபாலரோடுகூட கோவியர்கள் கண்ணினால் பானஞ்செய்யு மமுதுக்கொப்பாகத் திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளினார்.

பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினேழாம் அத்தியாயம்

# அக்ரூரர் சுவாமியைக் காணுதல்

முன் கம்சனிட்ட கட்டளைப்படி அக்ரூரர் மறுநாள் காலையிலேயே வேகமுள்ள ஓர் இரதத்தின்மேலேறிக் கொண்டு சுவாமியைச் சேவிக்க ஆசையோடு மதுரையை விட்டுப் புறப்பட்டுச் செல்லுகையில் அவர் மனதிற் சிந்தித்துக்கொண்டு போனதாவது. "இவ்வுலகத்தில் என்னைக் காட்டிலும் புண்ணியவான் வேறில்லை ஏனென்றால், தேவ அமிசத்தினாலே இங்கவதரித்திருக்கின்ற சக்கரபாணியின் திருமுக மண்டலத்தை நான் சேவிக்கப்போகிறேனன்றோ? மலர்ந்த செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண்கள் விளங்கப்பெற்ற ஸ்ரீவிஷ்ணுவின் திருமுக மண்டலத்தைக் காண்பேனாதலால் என்னுடைய ஜன்மம் இப்போதே நற்பலமடைந்தது; எனக்கு நற்பொழுதும் விடிந்தது; தேவகி முதலானவர்கள் செய்த ஆராதனத்துக்கு ஏற்றதும் உபாசிப்பவர் நினைத்தபடி தோன்றி விளங்குவதுமாய் ஸ்மரித்தமாத்திரத்திலே பாபத்தைப் போக்குவதாய்த் தாமரையொத்த திருக்கண்களோடுகூடி விளங்குகின்ற எம்பெருமான் திருமுகமண்டலத்தைச் சேவிப்பேனன்றோ? எதனின்றும் சகல வேதங்களும் வேதாங்கங்களும் உண்டாயினவோ, எது சூரியாதி தேஜசுகளுக்கு முக்கியஸ்தானமானதோ, அந்தச்சுவாமியின் திருமுகமண்டலத்தைக் காணப்போகிறேன்; யக்கியங்களுக்கு அதிபதியான எந்தப் புருஷோத்தமன் சகல யாகங்களிலும் புருஷராலே பூசிக்கப்படுகிறானோ, அந்தச் சகலாதார பூதனான உலகநாதனைச் சேவிக்கப் போகிறேன். எவனை இந்திரன் நூறு யாகங்களினாலே ஆராதித்துச் சகலதேவதைகளுக்கும் அதிபதியாயிருக்கும்படியான மேன்மையைப் பெற்றானோ, அந்த ஆதிமத்தியாந்த ரகிதனான ஸ்ரீகேசவனை நான் இந்தக் கண்களால் காண்பேனன்றோ? பிரமா சிவன் இந்திரன் அசுவினிகள் வசுக்கள் ஆதித்தர்

மருத்துக்கள் முதலானவர்களும் எவனுடைய சுவரூபத்தை யறியார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீ ஹரிபகவான் எனக்குப் பிரத்தியக்ஷமாகிருர்; சர்வத்துக்கும் ஆத்துமாவாய் எல்லாமறிந்தவராய்ச் சகலசுவரூபியாய்ச் சர்வபூதங்களிலு முள்ளவராய் இப்படிப்பட்டவனென்று நினைக்கக்கூடாதவராய் எங்கும் வியாபித்தவராய் விகாரமில்லாதவராய் விளங்காநின்ற பகவான் என்னேடு பேசுவாரன்றே? எவன் மச்சிய கூர்ம வராஹ ஹயக்கிரீவ நாசிம்மாதி திவ்வியாவதாரங்கள் செய்து லோகசம்ரக்ஷணஞ் செய்தருளினனே, அந்த ஸ்ரீமந் நாராயணன் என்னுடன் சம்பாஷிக்கப் போகிருன்; இப்போதும் எந்த லோகநாதன் தன் திருவுள்ளத்திலிருக்குங் காரியத்தை நிறைவேற்றும் பொருட்டுத் தமது திருவுள்ளத்தின்படியான திருமேனியோடு மனுஷ்யாவதாரஞ் செய்தருளி யிருக்கிருனே, அவன் இப்போது என்னுடன் சம்பாஷிப்பனன்றே? எவன் அனந்த சொரூபியா யிருந்துகொண்டு தன் திருமுடியினிலையினலே அசையாதிருக்கும்படி இப்பூமியைத் தாங்குகிருனே பூமிக்காக இப்போதிங்கே யவதரித்தருளின அவன் என்னை அக்குரூரர் என்று அழைப்பனன்றே? பிதாவென்றும் புத்திரனென்றும் சிநேகிதனென்றும் பிராதாவென்றும் மாதாவென்றும் பந்துக்களென்றும் பலவகைப்பற்ருக நிற்கிற எவனுடைய இந்த மாயையைக் கடப்பதற்கு உலகம் திறமுள்ளதன்றே: அந்த எம்பெருமானுக்கு நமோநம: என்று தண்டம் சமர்ப்பிக்கிறேன்; இப்படிப் பலவகையாய்ப் பரவியிருக்கின்ற அஞ்ஞானஸ்வரூபமான மாயைப் புருஷன், எவனை இருதயத்தில் நிறுத்தினவளவிலே கடக்கமாட்டுவானே, அந்த அளவற்ற ஞானரூபியான எம்பெருமானுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன்; எவன் யாகசீலரාலே யக்கிய புருஷனென்றும் ஸ்ரீபாஞ்சராத்திர நிஷ்டராலே ஸ்ரீ வாசுதேவனென்றும் வேதாந்த நிஷ்டராலே ஸ்ரீவிஷ்ணுவென்றும் சொல்லி ஆராதிக்கப்படுகிருனே, அவனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன்; லோகாதாரனும் லோகதாரகனுமிருக்கின்ற அவனிடத்திலே சேதனு சேதன ஸ்வரூபமாயிருக்கிற

இந்தப் பிரபஞ்சமெல்லாம் சர்வவிதத்தினாலேயும் நிலை பெற்றிருக்கின்ற சத்தியத்தினாலே அந்த எம்பெருமான் என்னைக் கம்சனைச் சேர்ந்தவனென்று திருவுள்ளஞ் சீறாமல் என்னிடத்தில் சாந்தனாயிருக்கவேண்டும்; எவனை நினைத்த மாத்திரத்திலே புருஷன் சகல நன்மைகளுக்கும் பாத்திரமாய் விடுவானோ, அந்த அஜனையும் நித்தியனையுமிருக்கிற ஸ்ரீஹரியை நான் அடைக்கலமாக அடைகிறேன்" என்று மனதிற் சிந்தித்துக்கொண்டே போயினார்.

இப்படி நினைத்துக்கொண்டே அந்த அக்குரூரர் சூரியன் அஸ்தமிக்கக் கொஞ்சநேர மிருக்குமளவில் திருவாய்ப்பாடிக்குப்போய், அங்கே பசுக்கறக்கு மிடத்திலே கன்றுகளினடுவில் நின்றுகொண்டு மலர்ந்த கருநெய்தற்பூப்போன்ற காந்தியும், மலர்ந்த செந்தாமரையொத்த திருக்கண்களும், ஸ்ரீ வச்சமென்னு மறுப் பொருந்திய திருமார்பும், திரண்டு நீண்டு தொங்குகின்ற திருத்தோள்களும், பரந்து முயர்ந்தும் விளங்காநின்ற திருமார்பும், நீண்டு உயர்ந்து கூர்மையான நாசிகையும், வெகு விலாசமான மந்தஹாஸமுள்ள திருமுகத்தாமரையும், உயர்ந்துஞ் சிவந்துமுள்ள நகங்களோடுகூடித் தரையிற்பதிந்த திருவடித் தாமரைகளுமாய்ப் பொன்னிறமான திருப்பரிவட்டங்களையும், வனமாலையையுஞ் சாத்திக்கொண்டு, வெண்டாமரை மலரைத் திருமுடியிற் சேகரமா யணிந்துகொண்டிருத்தலாலே, சந்திரன் முடியிலுதிக்கப்பெற்ற நீலமலைபோன்றவனான ஸ்ரீ கிருஷ்ணனை முதலிற் கண்டார். பின்பு அவன் பக்கத்திலே ஹம்சம் அல்லி சந்திரன் இவைகளைப்போலே வெண்மையான திருமேனியுள்ளவராய், நீலமான திருப்பரிவட்டங்களை யணிந்திருப்பதனாலே கருமுகில் வரிசை சூழப்பெற்ற கைலாச பர்வதம்போல் விளங்குகிறவராயும், உயரமானவராயும், உயர்ந்த தோளுள்ளவராயும், தாமரைபோன்று மலர்ந்த திருமுகமண்டல முடையவராயுமுள்ள பலபத்திரரையுங் கண்டார். ஞானவானான அந்த அக்குரூரர் அந்த மகாபுருஷரிருவரையுங்கண்டு, உள்ளக்களிப்பின் மிகுதியால் முகமலர்ந்து உடம்பெல்

லாம் மயிர் பொடிக்கப்பெற்று, "இதோ இரண்டுரு வாய்ப் பிரிந்திருக்கிற ஸ்ரீவாசுதேவபகவானுடைய அம்சம் யாது உண்டோ இதுதான் உத்தம தேஜசு; அடையத்தக்க மேன்மையான பொருள்; இதைக் கண்டதனாலே என்னிரண்டு கண்களும் மிகவும் நற்பலம் பெற்றன; இவ்வுடம்பும் எம்பெருமானுடைய அனுக்கிரகத்தினாலே அந்தத் திருமேனியைத் தீண்டப்பெற்று நற்பலனை அடையுமோ? எந்தத் திருக்கையின் விரல் பட்ட மாத்திரத்திலே புருஷர் சகல பாபங்களு நசிக்கப்பெற்றுக் குற்றமற்ற சித்தியைப் பெறுவார்களோ, அந்தத் திருக்கைத் தாமரை மலரை ஸ்ரீ மானுன அவ்வனந்தன் என்முதுகில் வைக்கப் பெறுவேனோ? இன்னும் அந்தத் திருக்கை எப்படிப்பட்டதென்றால், மின்னல்போலவும் சூரியகிரண மாலைபோலவும் உக்கிரமான ஜ்வாலா மாலைகளோடு கூடின சக்கராயுதத்தைப் பிரயோகித்து, அசுர ராஜாவின் சேனையை மடித்து, அசுரப்பெண்களுடைய கண்களிலிருந்த மை யெல்லாங் கரையச்செய்தது. * மேலும் அந்தத் திருக்கையிலே பலிச்சக்கரவர்த்தியானவன் பூதானத்திற்காகத் தண்ணீர் சமர்ப்பித்துப் பாதாள லோகத்திலிருந்துகொண்டு மனங்கவரத்தக்க போகங்களையும் பிந்தி ஒருமனுவந்தர் முழுதும் பகைவர் துன்பமில்லாமல் தேவசரீரமுந் தேவராஜனுயிருக்கையும் பெற்றான். இந்தச்சுவாமி சுபாவத்தில் குற்றமற்றவனுயிருக்கிற என்னைக் கஞ்சன் சார்பினுலே குற்றமுடையவனுகவெண்ணுவனே அறியேன். அப்படியானுல் இந்தச் சன்மத்தைச் சுடவேண்டும். ஏனெனில், யோக்கியராலே அங்கீகரிக்கப்படாமல் துறக்கப்பட்டவனுடைய ஜன்மம் ஏதுக்கு? நாமிப்படி யெண்ணக்கூடாது. ஏனெனில் ஞானசொரூபியாய்ச் சுத்த சத்துவமயனுய் இராக துவேஷாதி தோஷங்களில்லாமல் எப்போதுந் தன் சுவரூபம் விளங்கப்பெற்றவனுய்ச் சகல புருஷருடைய இருதயத்திலும் எழுந்தருளியிராநின்ற எம்பெருமானுக்குத் தெரியாத தொன்றுண்டோ? ஆகையால்

* கணவரிறந்ததனுல் அவர்கள் மை கரையும்படிக் கண்ணீர்விட்டழுதார்களென்றும், அப்பெண்கள் கைம்பெண்டுகளாய் மை முதலிய வல்லாசங்களை யிழந்தார்களென்றும் கருத்துக்கொள்க.

என்னுடைய இருதயத்தில் வஞ்சமிருப்பதும் இல்லாததும் அறிந்துகொள்வானுகையால் என்னைத் தள்ளாமல் திருவுள்ளம் பற்றுவான். ஆகையால் நான் பிரம ருத்திராதிகளுக்கும் ஈசுவரனும் புருஷோத்தமனுமிருக்கிற ஸ்ரீவிஷ்ணுவின் அமிசாவதாரமாய் ஆதிமத்தியாந்த மில்லாதிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனைப் பத்தியால் மன வணக்கத்தோடு அணுககடவேன்" என்று மனதில் சிந்தித்தார்.

பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினெட்டாம் அத்தியாயம்

### அக்ரூருக்குச் சுவாமி பிரத்தியக்ஷமானதும்

# அக்ரூரர் துதித்ததும்

கேளும் மயித்திரேயரே! இப்படி அக்ரூரர் நினைத்துக்கொண்டு சுவாமியைச் சேர்ந்து "அடியேன் அக்ரூரன் தண்டம் சமர்ப்பிக்கிறேன்" என்று முடி வணங்கித் தண்டமிட்டார். சுவாமியும் துவஜம் வச்சிரம் அம்புஜம் முதலான இரேகைகளினுலே விளங்கா நின்ற தமது திருக்கையினுலே அவரைத் தீண்டியெடுத்து வெகு பிரீதியோடு நெருங்கத் தழுவியருளினர். பின் அக்ரூரர் மூத்தவரையுந் தண்டம் சமர்ப்பித்து நிற்க, அந்த மகாபுருஷரிருவரும் வெகு சந்தோஷத்தோடு அவரை யிட்டுக்கொண்டு தம்மாளிகைக்கு எழுந்தருளினர்கள். பின்பு அக்ரூரர் அவர்களால் க்ஷேமாதிகள் வினவப்பட்டவராய் அவர்களோடு கூடத் திவ்வியான்னத்தைச் சாப்பிட்டு உட்கார்ந்திருக்கும்போது, அசுராம்சமான கம்சன் வசுதேவரையும் தேவகியையும் நிந்தித்துத் துன்பப்படுத்தியதையும், உக்கிரசேனனிடத்திலே மனப்பகை கொண்டிருக்கும் விதத்தையும், எது நிமித்தமாய்த் தன்னை யவனனுப்பினுனே அதையும் விளக்கமாய் அவர்களுக்கு விண்ணப்பஞ் செய்தார். இவற்றையெல்லாம் நன்ருய்க் கேட்டுத்

தேவகீநந்தனனான ஸ்ரீபகவான் அக்குரூரரை நோக்கி "ஓதானபதியே! நானிவைமுற்றும் அறிவேன். இதற்குத் தக்க தேதுவோ அதைச்செய்யச் சித்தமாயிருக்கிறேன். ஓ மகானுபாவரே! நீர் வேறே நினைக்கவேண்டாம். கம்சன் மடிந்தானென்று நினையும். நானும் இராமனும் நாளைக்கு உம்மோடுகூட மதுரைக்கு வருகிறோம்; கோபால விருத்தரும் வேண்டு முலுப்பைகளைக்கொண்டு நாளைக்கே வருவார்கள். இவ்விரவை இங்கே தானே போக்கும்; ஒன்றுஞ் சிந்திக்கவேண்டாம்; இவ்விரவு முதல் மூன்றிரவுக்குள்ளே கம்சனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் நாசஞ்செய்கிறேன்" என்று அருளிச்செய்து, பின் கோபால மூப்பர்களுக்கு அக்குரூரரைக்கொண்டும் தாமும் கட்டளையிட்டுத் தமயனருடனேயும் அக்குரூரருடனேயும் நந்தர் திருமாளிகையிலே திருக்கண் வளர்ந்தருளினார். பின்பு விடிந்தவுடனே பலபத்திரரும் கண்ணனும் அக்குரூரரோடுகூட மதுரா நகரத்திற்குப் புறப்பட்டருளினார்கள். அதைக்கண்டு கோபிகைமாரெல்லாம் மிகுந்த விசனமடைந்து கண்களில் நீர்ததும்பவும் கைகளில் வளைகள் நெகிழ்ந்து படவும் பெருமூச்செறிந்துகொண்டு ஒருவரோடொருவர் பேசிக்கொண்டதாவது:—

"ஓ தோழிமார்களே! கோவிந்தன் மதுரைக்குப் போனால் மீண்டு மிங்கே எப்படி வருவான்? அந்நகரத்துள்ள மங்கையருடைய மதுரமான பேச்சுக்களாகிய அமுதத்தைப் பானம் பண்ணுவானன்றோ? அப்படி நகரப்பெண்களுடைய விலாச வாக்கியங்களிற் பற்றின அவனுடைய மனம் மறுபடியும் நாட்டுப்புறத்துக் கோபிகைகளிடத்திற் பற்றுமோ? இவ்வாய்ப்பாடிக்கெல்லாம் ஒரு சாரவஸ்துவான இந்தக் கண்ணனை இவ்விடத்தினின்று நீக்குகின்ற கொடிய தெய்வம் கோபிகைகளெல்லாம் ஒருமிக்க மடியும்படி யோரடி யடித்ததென்று நினைக்கவேண்டும். நகரத்துப்பெண்களுடைய வாக்கியமெல்லாம் கருத்து உள்ளடங்கித் தொனிக்கப் பெற்றதான புன்னகையோடு கூடியிருக்கும், நடையோ விலாசங்களினாலே வெகு சுந்தரமா யிருக்கும், கடைக்கண் பார்வையோ மனதைக் கவரத்தக்கதா யிருக்கும்.

ஆதலால் இதுவரையிலும் அவற்றையெல்லா மறியா மல் நாட்டுப்புறத்திலே வாசஞ்செய்துகொண்டிருந்த கண்ணன் அங்கே போனபின்பு அவர்களுடைய விலாச மாகிய விலங்கினாற் கட்டப்படுவனாதலால் மறு படியும் உங்கள் பக்கத்திற்கு வருவனென்று எந்தப் புத்தியாலே சொல்லலாம்? இதோ பாருங்கள் அக் குரூரனென்று பேர்கொண்ட இந்தக் குரூரனாலே என்னமோ வஞ்சனை செய்யப்பட்டுக் கண்ணன் தேர் மேலேறி மதுரைக்குச் சென்றான். கிஞ்சித்துந் தயை யில்லாத இந்தக் காதகன் நாமெல்லாம் கண்ணனிடத்தி லன்பினால் உருகுகின்றவரென்ப தறியானோ? அறிந்தா னாகில் நம்முடைய கண்களின் களிப்பாகிய அவனை மற்றோரிடங் கொண்டுபோவானோ? அடி இந்தக் கிருஷ்ணன்தான் நம்முடைய அன்பைச் சற்றேனும் பாராமல் பலராமனோடு தேர்மேலேறிச் செல்லுகின் றான், மிகவும் இரக்கமற்றவனா யிருக்கிறான், இவனைப் போகவொட்டாமல் தடுக்கச் சீக்கிரம் எத்தனப்படுங்கள்; ஓ பெண்களே! மாமனார் முதலானவர்களுக்கு எதிரில் இதைக்குறித்துப் பேசவொண்ணா தென்பீராகில், விரகாக்கினியினாலே நாம் வெந்துபோமளவில் அந்தப் பெரியோர் என்ன செய்யமாட்டுவார்கள்? நந்தகோபன் முதலானவர்களெல்லாம் தாங்களுங் கூடப்போக முயல் கின்றார்களே யல்லாமல் ஒருவராகிலும் கோவிந்தனைத் தடுக்க முயற்சிசெய்வாரில்லை. கேளீர் தோழிமாரே! மதுரையில் வாசஞ்செய்யு மங்கையர்க்கு இப்போது நற்பொழுது விடிந்தது. ஏனெனில் அவர்களுடைய கண்களாகிய வண்டுகள் இன்றைக்குக் கண்ணனுடைய முகாரவிந்தத்தைப் பானம் பண்ணுமன்றோ? இங் கிருந்து தடுக்கப்படாமல் கண்ணனோடுகூட யார்போகி றார்களோ அவர்கள் மகா புண்ணியஞ் செய்தவர்கள். ஏனென்றால் அவனுடைய வடிவழகைப் பார்த்துக் கொண்டே தம் தேகங்களெல்லாம் புளகமுண்டாக மகிழ்வார்களல்லவோ? இன்றைக்கு மதுராநகரத்தா ருடைய கண்களெனத்தும் இந்தக் கோபாலசூடாமணியி னுடைய அவயவங்களைக்கண்டு மகோற்சவத்தை அனு பவிக்கும், மகா பாக்கியவதிகளான அந்நகரத்துப்

பெண்கள் எந்த நற்கனவு கண்டார்களோ அறியோம்? அதன் பயனாகத் தடுக்கப்படாதவர்களாகிக் கண் மலர்ந்து காந்திவிளங்கக் கண்ணைக்கண்டு களிப்பார் களே. ஐயோ! இரக்கமற்ற தெய்வம் இந்தக் கோபிகா ஜனத்துக்கு ஒரு மகாநிதியைக் காட்டிப் பின்பு கண் களைப் பிடுங்கிவிட்டது. பாருங்கள் நம்மிடத்திற் கண்ணனுக்கு அன்பு தளரத்தளர அவனன்பைப் பெறாத நம்முடைய கைகளில் வளையல்களும் நம்மோ டிருக்கப்பொறாமல் தளர்கின்றன. இவ்வக்குரூரன் குரூர ஹிருதயனாகையால் தேரையாகிலு மெல்லச் செலுத்தாமல் விரைவாய்ச் செலுத்துகின்றான். இப்படிப் புலம்புகின்ற நம்மிடத்தில் யாருக்குத்தான் இரக்கமுண்டாகாது? என்ன செய்வோம் பாங்கி மார்களே? சிறிது பொழுது கண்ணன் காணப்பட் டுக்கொண்டிருந்தான். பின் அவனுடைய திருத்தேர் மாத்திரங் காணப்பட்டது. இப்போது அத்தேரின் உருளைகளா லெழுப்பப்பட்ட துகள் காணப்படுகிறது. நிமிஷத்தில் இதுவு மறைந்துபோம். கண்ணனோ வெகுதூரஞ் சென்றுவிட்டான் என்று கோபகன்னிகை மிகுந்த அன்போடு பார்த்துப் புலம்பிக்கொண்டிருக்கக் கண்ணன் அத்திருவாய்ப்பாடியின் எல்லை தாண்டி யமுனாநதிக்கரைக்கு எழுந்தருளிவிட்டான்.

இப்படியாக மத்தியான்ன காலத்துக்கு யமுனா நதிக்கரையில் அம்மூவரும் எழுந்தருளின பின்பு, அக் குரூரர் சுவாமிகளிருவரையுநோக்கி, அடியேன் இவ் வாற்றிற்சென்று மாத்தியான்னிக ஆராதனத்தைச் செய்து வருகிறேன், சுவாமிகள் அதுவரையில் இங்கே தானே எழுந்தருளி யிருக்கவேண்டும் என்று விண் ணப்பஞ் செய்தார். அவர்கள் "அப்படியே போய் வாரும்" என்று நியமித்ததனாலே அந்தச் சுவல்பக்க புத்திரர் அந்நதிக்குப்போய் நீராடி ஆசமனாதிகளைச் செய்து மந்திர ஜபத்தோடு பரப்பிரமத்தைத் தியா னஞ் செய்து கொண்டிருந்தார். அப்படி தியானஞ் செய்கையில் பலபத்திரரை ஸஹஸ்ர பணாமண்டல மண்டிதராய் மல்லிகைமாலைபோல் வெண்மையான

திருமேனியும் விகசித்த பதுமம்போன்ற திருக்கண்களு முடையவராய், மகாபரிமளமுள்ள வனமாலையையும் நீலப்பட்டாடைகளையும் திவ்விய குண்டலங்களையும் திவ்விய கிரீடத்தையுந் தரித்தவராய் வாசுகிமுதலான சர்ப்பராஜாக்களாலே சேவிக்கப்பட்டு அந்த யமுனா நதியின் ஜலத்தினுள்ளே விளங்கினவராகவும், அவருடைய மடியிலே கண்ணனை நீலமேகசியாமளராய்ச் செந்தாமரைபோற்சிவந்த திருக்கண்களும் நான்கு திருத்தோள்களுங் கம்பீரமான திருமேனியு முடையவராய், திருவாழி முதலான திவ்வியாயுதங்களையுந் திவ்விய பீதாம்பரங்களையும் விசித்திரமான வனமாலையையுந் தரித்து இந்திரவில்லினாலும் மின்னற்கொடிகளினாலும் விசித்திரமா யிருக்கின்ற மேகம்போலே தோன்றினவராய், திருமார்பில் ஸ்ரீவச்சமென்கிற மறுப்பொருந்தித் திருக்காதுகளில் மணிமயமான மகரகுண்டலங்களும் திருமுடியில் வெண்டாமரைபோன்ற கிரீடமு மிலங்க யோக சித்திபெற்றுச் சகல கல்மஷங்களுமற்றவர்களான சனக சனந்தனாதி முனிவர்களாலே மூக்குநுனியிற் கண்வைத்துத் தியானஞ் செய்யப்பட்டுக்கொண்டு வீற்றிருக்கின்றவராகவுங்கண்டார். இப்படியாக அந்தக் காந்தினிசுதர் அந்த நதியின் தீர்த்தத்திலே ஸ்ரீராம கிருஷ்ணர்களே இப்படி யெழுந்தருளி யிருக்கிறார்களென்று தெரிந்துகொண்டு, இவ்வளவு சீக்கிரத்தில் அவ்விருவரும் இங்கே யெப்படி எழுந்தருளினார்களென்று ஆச்சரியப்பட்டவராய், அவர்களை வினவ வாயெடுத்தார். அவ்வளவிலே அவருக்கு வாயெழும்பவொட்டாமல் சுவாமி ஸ்தம்பனஞ் செய்தமையாலே ஒன்றுஞ் சொல்லமாட்டாமல் நதிதீர்த்தத்திலிருந்து சரேலென்று கரைக்குவந்து, திருத்தேரைப்பார்க்க அங்கும் அவ்விருவரும் முன்போலவே மனுஷ்யாவதாரமா யெழுந்தருளி யிருக்கக்கண்டார். மறுபடியும் அக்ரூரர் சலத்திலேபோய் முழுகி நிற்க, அங்கும் அவர்கள் முன்போலே திவ்வியமங்கள விக்கிரகங்களோடுகூடி முனிவர் சித்தர் கந்தருவர் முதலானவர்களாலே ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டிருக்கக்கண்டு, அளவற்ற ஆச்சரியமடைந்தார். பின்பு அந்தத் தானபதி

பரமார்த்தத்தை யறிந்தவராய் எல்லாமறிந்த வெம்பெருமானை ஸ்ரீகிருஷ்ணனைத் துதிக்கத் தொடங்கினார்.

"எப்போதும் சத்தாகவே யிருக்கின்ற உருவமுள்ளவராயும், சிந்திக்க வரிதான மகிமையுள்ளவராயும், எங்கும் வியாபித்தவராயும், அனேகரூபியாயும், ஏகரூபியாயு மிருக்கிற பரமாத்துமாவுக்கு நமோநம: என்று தண்டம் சமர்ப்பிக்கிறேன். ஓ அப்பிரமேயனே! சகலஸ்வரூபியாகவும் தேவதாயக்கியத்திலே ஹவிஸ்ஸாகவு மிருக்கின்ற வுனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். ஓமகாபிரபுவே! ஞானங்களுக்கு எல்லையாகவும் அறியப்படாத அளவுள்ளவனாகவும் பிரகிருதிக்கு மேற்பட்டவனாகவும் இராநின்ற வுனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். நீயே சப்தாதி குணங்களோடுகூடின பஞ்சபூத சரீரகனாய்ப் பஞ்சபூதங்களுக்கு மாத்துமாவாகவும், புத்தி அகங்காரங்களோடு சேர்ந்த பதினொரு இந்திரியங்களுக்கும் ஆத்துமாவாகவும், பிரகிருதிக்கு ஆத்துமாவாகவும், சமஷ்டி வியஷ்டி ரூபக்தரூபியான ஆத்துமாவாகவும், ஆனந்தமய பரமாத்துமாவாகவும் இருத்தலாலே நீயொருவனே அஞ்சுவிதமா யிருக்கிறாய். சகலமாயும், சகலத்துக்கும் ஆத்துமாவாயும், பூதங்களுக்கு மாத்துமாவுக்கும் நியாமகனாயும், பிரமா விஷ்ணு சிவன் என்கிற பெயர்களாகிய கற்பனைகளாலே சொல்லப்படுகிறவனாயுமிருக்கிற பகவானே நீ பிரசன்னனாகவேண்டும். ஓ அளவில்லாமையாலே சொல்லக்கூடாத குணமுள்ள ஆத்துமாவே! சொல்லவொண்ணாத வுபய விபூதியாலுண்டான ஆனந்தமுள்ளவனே! பரமேசுவரனே! அளவில்லாத திருநாமங்களுள்ள வுன்னைப் பணிகிறேன். ஓ எம்பெருமானே! ஜீவாத்துமாக்களிடத்திற் போலே கர்மத்தைப்பற்றின தேவமனுஷ்யாதி நாமரூப கற்பனைகள் எங்கே யிருக்கமாட்டாவோ அந்த நித்திய வுத்தமமாயும் விகாரமில்லாததாயுமுள்ள பிர்மம் நீயே. எந்த வஸ்துவையும் நாமரூப கற்பனைகளில்லாம லறியக்கூடாமையாலே நீ கிருஷ்ணன் அச்சுதன் அனந்தன் விஷ்ணு முதலான திருநாமங்களாலே துதிக்கப்படுகிறாய். ஓ அஜனே! ஓ அனந்தனே! இந்

தத் தேவதைகள் முதலான எந்தக் கற்பனைகளினாலே உலகமென்பது உண்டாயிருக்கின்றதோ அந்த வஸ்துக்களெல்லாம் நீயே. விகாரமில்லாத ஆத்துமாவென்கிற வஸ்து யாதுண்டோ அதுவும் நீயே! இப்படிச் சர்வமும் உன் விபூதியாயிருப்பதனாலே உன்னைக்காட்டிலும் வேறொன்றுமில்லை. ஆகையால் நீயே. பிர்மாவும் சிவனும் சூரியனும் விதாதாவும் தாதாவும் இந்திரனும் வாயுவும் அக்கினியும் வருணனும் குபேரனும் யமனுமாகி வெவ்வேறு காரியங்களுள்ள ஸ்வரூபபேதங்களினாலே உலகத்தை இரக்ஷித்தருளுகிறாய். ஓ சர்வேசுவரனே! மேலும் சூரியகிரண ரூபியாயிருந்து பிரபஞ்சத்தைப் படைக்கிறாய். ஆதலால், இப்பிரபஞ்சமெல்லாம் உனக்குச் சேஷபூதமா யிருக்கிறது. சத்தென்னும் பதத்தினாலே சொல்லப்பட்ட விகாரசூனியமான பரமஸ்வரூபமாயும் சுத்தஞான சுவரூபியாயும் சராசரங்களுக்கு அதிஷ்டாதாவாயுமிருக்கிற அந்த உன்னை மிகவும் பணிகிறேன். பிரணவபிரதிபாத்தியனான ஸ்ரீவாசுதேவனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். சங்கர்ஷணனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். பிரத்தியும்நனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். அநிருத்தனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். இப்படிச் சதுர்வித வியூகரூபியான உனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன்" என்று அக்குரூரர் எம்பெருமானைப் போற்றினார்.

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# மதுராபிரவேசம் மாலாகாராநுக்கிரகம்

கேளும் மயித்திரேயரே! இப்படியாக அந்த யாதவ பாகவதர் நதிஜலத்துக்குள்ளே எம்பெருமானைச் சேவித்துத் துதித்து, மனோமயமான தூபதீப கந்த புஷ்பாதிகளினாலே நன்றாய் ஆராதித்து, வேறு விஷயங்களிலே மனஞ்செலுத்தாமல் பரப்பிரமரூபனான ஸ்ரீகிருஷ்ணனிடத்திலேயே செலுத்தி, நெடு

நேரந் தியானித்து, அந்த நிஷ்டையைவிட்டு, யமுனு தீர்த்தத்தி னின்றுங் கரையேறித் தம்மைக் கிருத கிருத்தியனுக நினைத்துக்கொண்டு, தமது இரதத்தி னருகே வந்து, அத் திருத்தேரிலே முன்போலவே புருஷோத்தமர்கள் இருவர் எழுந்தருளி யிருப்பதைக் கண்டு வியப்படைந்து, கண்மலர்ந்து நின்றுர். அப் படி நின்ற அக்குரூரரைக் கண்டு, சுவாமி "ஓ அக் குரூரரே! நீர் யமுனு ஜலத்திலே ஏதோ ஒரு ஆச்சரியத் தைக் கண்டீர்போலும்; ஏனென்றுல் உம்முடைய கண் கள் ஆச்சரியத்தினுல் மலர்ந்து விளங்குகின்றன" என்று கேட்டருள, அக்குரூரர் விண்ணப்பஞ் செய்ய லாயினுர். "ஓ அச்சுதனே! அடியேன் ஜலத்தினடுவில் யாதோர் ஆச்சரியத்தைக் கண்டேனே, அதுவே யிவ் விடத்திலும் உருபீகரித்து எதிரிலிருக்கக் காண்கின் றேன். ஓ கிருஷ்ணபகவானே! இந்த லோகமெல்லாம் எவனுடைய மகாச்சரிய ஸ்வரூபமோ அப்படிப்பட்ட திவ்வியாச்சரிய சேஷ்டிதனுன உன்னேடு அடியேன் சேர்ந்திருக்க என்ன ஆச்சரியங் கண்டாயென்று ஏன் கேட்டருளுகிறீர்? இந்தப் பிரசங்கத்தினு லென்ன? நாம் மதுரைக்குப் போவோம். ஓ மதுசூதனனே! இப் போதும் அடியேன் கஞ்சனுக்கு அஞ்சுகிறேன். சீச்சீ அன்னியருடைய பிண்டத்தினுற் பிழைக்கிறவருடைய ஜன்மத்தைச் சுடவேண்டும்" என்று சொல்லி, வாயு வேகமான குதிரைகளைத் துரிதமாய் ஓட்டிக்கொண்டு மதுராநகரம் வந்துசேர்ந்தார். அங்கு வந்து ஸ்ரீராம கிருஷ்ணர்களைப் பார்த்து "ஓ மகாவீரர்களே! இனித் தேவரீர் இறங்கித் திருவடிகளாலெழுந்தருளவேண்டும். அடியேனெருவனே தேர்மேலேறிச் செல்லுகிறேன். முந்தித் தேவரீர்கள் வசுதேவருடைய திருமாளிகைக்கு எழுந்தருள வேண்டாம். ஏனென்றுல், தேவரீர்கள் நிமித்தமாய் அந்தக் கிழவரை அந்தப்பாதகன் துன்பப் படுத்துகிறுன்" என்று விண்ணப்பஞ்செய்து மதுரைக் குள் பிரவேசித்தார்.

பின்பு மூத்தநம்பியு மிளையநம்பியும் பட்டணத்தி னுள்ளே இராஜமார்க்கத்திலே அப்பட்டணத்து ஸ்திரீ

புருஷர்க ளெல்லாம் ஆனந்தமாய்க் கண்களாலே சேவித்து நிற்க, மதமுள்ள சிறிய யானைகள்போலே திரு விளையாட்டோடு எழுந்தருளினார்கள். இவ்வாறெழுந் தருளுகையில் குசும்பாதி சாயம்போட்டு வஸ்திரங்களைச் சீர்ப்படுத்துகிற வண்ணா னொருவனைக் கண்டு அவனைத் தங்களுக்கேற்ற நல்ல அழகான வஸ்திரங்களைத் தாவென்று யாசித்தார்கள். அந்த வண்ணானோ கம்ச னுடைய அனுக்கிரகம் பெற்றிருக்கையாலே, மிகுந்த செருக்குடையவனாகி அவ்விருவரையுங் குறித்து வெகு வான திரஸ்கார வசனங்களால் உரத்த சப்தத்தோடு சொன்னான். இப்படிச்சொல்லக்கேட்டுக் கண்ணன் சீற்ற முள்ளவனாய் தூராத்துமாவைக் கையினா லோரறை யறைந்து, அவன் தலையைக் கீழே வீழ்த்தினான். பின்பு இருவரும் பீதாம்பர நீலாம்பரங்களோடுகூட வேண்டு மான வஸ்திரங்களை யெடுத்துச் சாத்திக்கொண்டு, வெகு சந்தோஷமுள்ளவர்களாய்ப் பூமாலைக்காரன் மாளி கைக்கு எழுந்தருளினார்கள்.

ஓ மயித்திரேயரே! அந்த மாலாகாரன் பீதாம்பர நீலாம்பரங்களைச் சாத்திக்கொண்டு, அதிமனோஹர ரூப முள்ளவர்களா யெழுந்தருளின இவர்களைக் கண்டு கண் மலர்ந்து, "இவர்கள் யார்? யாருடைய குமாரர்?" என்று யோசித்துப் பின்பு "இவர்கள் மனிதரல்லர், தேவர்கள் இங்கெழுந்தருளினார்கள்" என்று நினைத்தான். பின்பு அவ்விருவரும் திருமுகமண்டல மலர்ந்து விளங்க "எங் களுக்கு நல்ல மலர்களைத் தாராய் என்று யாசிக்கக்கண்டு, அந்த மாலாஜீவியானவன் கைகளைப் பூமியிற் றூங்கிக் கொண்டு முடி தரையிற்படத் தண்டம் சமர்ப்பித்துச் "சுவாமிகளே! அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்ய வேண்டி, அடியேன் குடிசைக்கு எழுந்தருளினீர்கள்; அடியேன் தன்னியனானேன்; நியமனப்படி அர்ச்சிக்கி றேன்" என்று சொல்லிச் சந்தோஷத்தால் முகமலர்ச்சி யடைந்து, அவர்களுக்குத் திருவுள்ளமானபடி முன்பு சில மலர்களைச் சமர்ப்பித்துப் பின்பு "சுவாமிகளே! இவை முன்னவைகளிற் சிறந்தவைகள்; இவற்றைத் திருவுள்ளம் பற்றவேண்டும்" என்று சிலவற்றைச் சமர்ப்

பித்து மேலும்சிலவற்றையெடுத்து "இவை அவற்றிலும் மேலானவைகள்" என்று அவர்களுக்குத் திருவுள்ள முவக்கும்படி அடிக்கடித் தண்டம்சமர்ப்பித்து அழ காயும் சுகந்தம் வீசப்பெற்றவையாயும் சுத்தமாயுமுள்ள புஷ்பங்களைச் சமர்ப்பித்தான். இப்படி யவன் சமர்ப் பித்த புஷ்பங்களைத் திருவுள்ளம்பற்றிச் சாத்திக்கொண்டு கண்ணன் அவனுக்கு வரங்களைப் பிரசாதித்தருள நினைத்து, அவனை நோக்கி "ஓ யோக்கியனே! என்னைப் பற்றியிருக்கிற திருமகள் உன்னை ஒருபோதும் விடாமல் அனுக்கிரகஞ்செய்து கொண்டிருப்பள். ஓ சௌமியனே! உனக்குப் பலஹானியாவது தன ஹானியாவது வர மாட்டா; காலமுள்ளமட்டும் உன்சந்ததி நசியாமலிருக் கும்; இப்படியாக நீ என் அநுக்கிரகத்தினாலே பெரிய போகங்களையெல்லா மனுபவித்துக்கொண் டிருந்து, கடைசியில் என் ஸ்மரணமடைந்து திவ்விய லோகத்தை யடையக்கடவாய். ஓ மங்கள முள்ளவனே! உனக்கு எப் போதும் தருமத்திலே மனம்பற்றி இருக்கக்கடவது; உன்சந்ததியிற் பிறந்தவர்களுக்குத் தீர்க்காயுசு உண்டா கும்; ஆதிபௌதிகமான தோஷங்கள் வருவதில்லை. ஓ மகானுபாவனே! சூரியனுள்ள வரைக்கும் உங்களுக்கு இப்படிச் சுகங்களுண்டாகும்" என்று அனுக்கிரகித்து, அவனாலே விசேஷமாய் ஆராதிக்கப்பட்டவனாய்ப் பல பத்திரரோடுகூட அம்மாலிகனுடைய மாளிகையி னின்று மெழுந்தருளினான்.

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபதாம் அத்தியாயம்

# கம்ஸவதம்

இப்படியாக மாலிகனுடைய மாளிகையினின்றும் புறப்பட்டுக் கண்ணன் இராஜவீதியி லெழுந்தருளுகை யில் மங்கைப்பருவ முடையவளாய்ச் சந்தனக் கிண்ணத் தைக் கையிலேந்தி வருகின்ற ஒரு கூனியைக் கண்டு

"அடி நீலோற்பலம் போன்ற கண்ணுடையவளே! யாருக்கு நீ இப் பூச்சுக் கொண்டுபோகிறாய்? மெய்யைச் சொல்" என்று விலாசத்தோடு வினவினர். அந்தக் கூனி இவ்வாறு காமமுடையவன்போல் கண்ணனருளிச் செய்ததைக் கேட்டு, அவன் திருக்கண்களினாலே மனமிழுக்கப்பட்டவளாய் அவன் மேலே காதலுற்று விலாசத்தோடு "ஓ அழகனே! நான் நைகவக்கிரை யென்பவளென்றும், கம்ஸனாலே சந்தனாதி பூச்சுகள் செய்யும் வேலையில் வைக்கப்பட்டவளென்றும் நீ ஏன் அறியவில்லை? பிறர் யாரரைத்தாலும் கம்ஸனுக்கு அந்தப்பூச்சுப் பிரியமாயிராது; நான் அரைத்துச் சேர்க்கிறதே பிரியமா யிருக்கும்; ஆதலால் நான் கம்ஸனுடைய அனுக்கிரகமென்னுந் தனத்திற்கு முக்கிய பாத்திரமா யிருக்கிறேன்" என்று கூனி விண்ணப்பஞ் செய்யக்கேட்டு, கண்ணன் அருளிச்செய்ததாவது: 'பெண்ணே! நீ இதோ வைத்திருக்கிற இந்தப் பூச்சு வாசனை கட்டியதே யல்லாமல் இயற்கையாய் வாசனையுள்ளதன்று; மற்றொன்றோ இராஜசமுள்ள ராஜாக்களுக்குத் தகுமே யல்லது சாத்துவிகருக்குத் தக்கதன்று. இதுவோ வெகுநேர்த்தியா யிராநின்றது. விளங்காநின்ற முகமண்டல முள்ளவளே! ஆதலால் எங்கள் திருமேனிக்கு ஏற்ற இந்தப் பூச்சை எங்களுக்குக் கொடுக்கவேண்டும்" என்று சொல்லியதைக் கேட்டு, அக்கூனி "அப்படியே திருவுள்ளம் பற்றுங்கள்" என்று வெகு அன்போடு அவர்களுடைய திருமேனிக்கேற்ற திவ்வியமான பூச்சைச் சமர்ப்பித்தாள். அதைத் திருவுள்ளம்பற்றி அவ்விருவரும் * பத்திர பங்கரசனாவிதமாய் அப்பூச்சைத் திருமேனிகளி லணிந்து, இந்திரவில்லோடு கூடிய வெண்முகிலுங் கருமுகிலும் போலே பிரகாசித்தார்கள். பின்பு கோணலை நிமிர்க்கும் வகையறிந்த ஸ்ரீகிருஷ்ணன் அவளிடத்து மிகவும் பிரசன்னராய் நடுவிரலு மதன் முன்விரலுங் கொண்ட நுனிக்கையினாலே அவளை மோவாய்க்கடையிற் பிடித்துத் தம் திருவடிகளினாலே அவள் பாதங்களை அமுக்கி இழுத்துத் தூக்கி நிமிர்த்தருளினார். பின்பு அவள்

* பத்திரபங்கரசனையாவது கொடிபோலு மலைபோலுஞ் சித்திரித்தல்.

கோணல் நிமிர்ந்து பெண்பிள்ளைகளுக்குள் உயர்ந்தவ ளாகிக் கண்ணன் திருப்பரி வட்டத்தைப் பிடித்துக் கொண்டு "நீ என் மாளிகைக்கு வா" என்று விலாசத் தோடு அன்பு மிகுந்திருத்தலாலே தழதழத்த வசனத் தைச் சொன்னாள். அவள் சொன்னதைக் கேட்டுச் சுவாமி மூத்தநம்பியின் திருமுகத்தைப் பார்த்து † நகைத் துக்கொண்டே குற்றமற்ற நைகவக்கிரையை நோக்கி "பெண்ணே! அப்படியே யாகட்டும், பின்பு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுத் தமையனார் திருமுகமண் டலத்தை நோக்கி உரக்கச் சிரித்தருளினார். இவ்வாறு அந்நம்பிகள் இருவரும் நீலாம்பர பீதாம்பரங்களோடும் விசித்திரமான சந்தனாதி பூச்சோடும் பலவிதமான திவ் விய புஷ்பங்களோடுங் கூடி வில்லின் சாலைக்கு எழுந் தருளினார்கள்.

அங்கெழுந்தருளிச் சுவாமி அங்குள்ள காவற் காரரை "அவ்யாகத்துக்கு உத்தேசியமா யிருக்கிற தனுசு எங்கே யிருக்கிறது" என்று வினவ, அவர்கள் அதைத் தெரிவித்தவுடனே அந்த வில்லை யெடுத்து வளைத்து நாணேறிட்டார். சுவாமியினால் நாணேற்றப் பட்ட வில்லானது முறிந்து அம்மதுரா பட்டணமெங் குஞ் செவிடு படும்படி ஓசைபட்டது. வில்லொடியவே காவற்காரர் இவர்களை யெதிர்த்துவர, அம்மகா புருஷ ரிருவரும் எதிர்த்து வந்த காவற்காரரை யெல்லாந் துவம்சம் செய்து அந்நத் தனுசின் சாலையினின்றும் புறப்பட்டுச் சென்றார்கள். இப்படியிருக்க, கம்ஸன் அக்குரூரர் வந்துவிட்டதையும் வில் முறிந்ததையும் அறிந்து சாணூரன் முஷ்டிகன் என்பவர்களை நோக் கிச் சொல்லுகிறான்:—

"கேளுங்கள் மல்லர்களே! நாம் எதிர்பார்த்த இடைப்பையல்கள் வந்திருக்கிறார்கள். நீங்கள் எனக்கு எதிரிலே அவர்களோடு மல்லயுத்தஞ் செய்து அவர் களைக் கொன்றுவிடவேண்டும். ஏனென்றால் என்னு

† இங்குச் சிரித்தது, நாம் பிரீதி செய்ததைக் காமமாக நினைத்தாளென் றும் பெண்களுக்கு அச்சமயத்திற் காமாதுரமுண்டென்றும் நினைத்ததனாலே.

யிரை வாங்கவல்லவோ அவர்கள் பிறந்திருக்கிறார்கள்? ஓ மகாபலவான்களே! நீங்கள் அவர்கள் மல்லயுத்தத்திற் சங்கரித்து எனக்குச் சந்தோஷம் வரச்செய்வீர்களாகில் உங்களுக்கு இஷ்டமான பொருள்களையெல்லாந் தருவேன், இது வித்தியாசமாக மாட்டாது. அந்தச் சத்துருக்களை நீங்கள் நியாயமார்க்கத்திலானாலும் அநியாய மார்க்கத்திலானாலும் சங்கரித்துத் தீரவேண்டும். அப்படி நீங்கள் செய்தால் இவ்விராச்சியத்தை என்னோடுகூட நீங்களும் சமானமாய் அனுபவிக்கலாம்" என்று மல்லருக்குக் கட்டளையிட்டு யானைப்பாகனைக் கூப்பிட்டு "ஓ பாகனே! நீ நம்முடைய குவலயாபீட மென்கிற பெரிய யானையை இந்தச் சபையின் வாசலில் நிறுத்தி, அவ் இடைப்பையல்கள் இங்கு யுத்தத்திற்கு வரும்போது அவ்யானையைக்கொண்டு அவர்களைக் கொல்விக்கவேண்டும்" என்று உரக்கச்சொல்லி ஆக்கியாபித்துச் சபையிற் போடவேண்டிய மஞ்சங்களைச் செவ்வைப்படுத்தியிருப்பதையும் பார்த்துத் தனக்கு மரணங் கிட்டியிருப்பது தெரியாமல் பொழுது விடிவதை எதிர்பார்த்திருந்தான்.

பொழுது விடிந்தவுடனே பட்டணத்தி லுள்ள ஜனங்கள் சபையில் வந்து தாங்க ளுட்காரத்தக்க மஞ்சங்களில் உட்கார்ந்தார்கள். இராஜாக்கள் இராஜமஞ்சங்களி லுட்கார்ந்தார்கள். பின்பு கஞ்சன் மல்லயுத்த பரீக்ஷகர்களைச் சபைநடுவி லுட்காருவித்துத் தானுமங்கே ஓர் உயர்ந்த மஞ்சத்தி லுட்கார்ந்தான். அச்சபையில் அந்தப்புரத்து ஸ்திரீகளுக்கும் பட்டணத்து ஸ்திரீகளுக்கும் வேசிப்பெண்களுக்கும் அங்கங்கே தகுந்தபடி மஞ்சங்கள் போடப்பட்டிருந்தன. நந்தகோபர் முதலான கோபாலரெல்லாம் வேறு மஞ்சங்களி லுட்கார்ந்தார்கள். வசுதேவரும் அக்குரூரரும் தனித்துப் பேசிக்கொள்வதின் நிமித்தம் மஞ்சத்தின் ஓரத்தி லுட்கார்ந்தார்கள். தேவகி தேவி மகனிடத்திற் கொண்ட மிக்க அன்பினாலே, முடிவுகாலத்திலாகிலும் புத்திரனுடைய முகத்தைப் பார்க்கலாமென்று கருதிப் பட்டணத்து ஸ்திரீகளின் நடுவி லுட்கார்ந்து

கொண்டாள். இப்படியாகச் சபை நிறைந்து பலவாத்தியங்கள் முழங்கிக்கொண்டிருக்க, சாணூரன் மிகவுங் குதித்துக் கொண்டிருக்க, முஷ்டிகன் தோள்கொட்டி நிற்க, பார்ப்பவரெல்லாம் ஹாஹாகாரஞ் செய்துகொண்டிருக்க, மகாவீரராயும் பாலகராயும் கோபாலவேடம் பூண்டவராயுமுள்ள ஸ்ரீபலபத்திர ஜநார்த்தனர் இருவரும் புன்சிரிப்போடு சபையின் வாசலுக்கு எழுந்தருளினார்கள்.

அப்போது குவலயாபீடமானது பாகனால் ஏவப்பட்டு அவ்விருவரையுங் கொல்வதற்கு மிகுந்த வேகமாயெதிர்த்தோடி வந்தது. அத்தருணத்தில் அச்சபையினடுவிலே ஒரு ஹாஹாகார முண்டாயிற்று. அப்போது பலபத்திரர் தம்பியை நோக்கி "ஓ மகானுபாவ! சத்துருவினால் ஏவப்பட்ட இவ்யானையைக் கொல்லாதிருப்பது நியாயமன்றே. ஆதலால் அவசியம் கொல்லவேண்டும்" என்று சொல்லியதைக்கேட்டுச் சத்துருநாசத்தில் வல்லவராகிய ஸ்ரீமாதவன் ஸிம்ஹநாதஞ்செய்து, ஐராவதத்துக்குச் சமான பலமுள்ள அந்தக் கஜத்தைத் தனது திருக்கையினாலே தும்பிக்கையைப்பற்றி இழுத்துச் சுழற்றினான். இப்படியாகக் கண்ணன் சர்வேசுவரனா யிருந்தாலும் திருவவதாரத்திற் கேற்கப் பாலிய லீலையை அனுசரித்து நெடுநேரம் அவ்யானையோடு தந்தங்களினடுவே நின்று விளையாடிப் பின்பு வலக்கையினால் இடத் தந்தத்தைப் பிடுங்கி மேலிருக்கும் பாகனை யோரடி யடித்தருளினான். அவ்வடியினாலே அப்பாகனுடைய தலை பல துண்டங்களா யுடைந்தது. உடனே மூத்தவர் வலத்தந்தத்தைப் பிடுங்கி அதனாலே பக்கத்திலிருந்த யானைகாப்பவரை யடித்துக் கொன்றுவிட்டு, வேகமா யெழும்பித் தமது இடது திருவடியாலே அவ்யானையின் மத்தகத்தி லோருதை யுதைத்தார். இவ்வாறு பலராமர் விளையாட்டா யுதைத்தமாத்திரத்திலே அந்தக் குவலயாபீடமானது இந்திரன் வச்சிராயுதத்தினா லடிபட்ட பருவதம்போலே கீழேவிழுந்து இறந்தது. இவ்வண்ணம அந்தப் புருஷசிரேஷ்டரிருவரும் அவ்யானையைப் பாகனோடு சங்கரித்துவிட்டு, அதன் மத ஜலத்தினாலும் இரத்தத்தினாலும் பூசப்பட்ட

திருமேனி யுடையவர்களாய் அதன் தந்தங்களாகிற திவ்வியாயுதத்தைக் கையிலேந்திச் சிங்கங்கள்போலே கர்வம் பொருந்திய விளையாட்டு நோக்குள்ளவராய் அந்தப் பெரியசபைக்கு எழுந்தருளினார்கள். பின்பு அந்தச் சபையிலே ஜனங்களுக்கு ஒரு ஹாஹாகார மும ஆச்சரியமும் உண்டாயின. அப்போது அங் கிருந்த பட்டனத்தார் யாவரும் "இவனன்றோ முன்பு குழந்தைகளைக் கொன்றுகொண்டிருந்த கொடியவளான பூதனையைக் கொன்றவன்? இவனாலேயன்றோ சகடு தள்ளப்பட்டதும் மருதமரங்கள் முறிக்கப்பட்டதும்? காளியனென்கிற மகா சர்ப்பத்தின்மேலேறி நர்த்தனஞ் செய்த சிறுவன். இவனல்லவோ? ஏழுநாளளவுங் கோவர்த்தனகிரியை யெடுத்துக் கோகுலங் காத்தவன் இவன்றான். அரிஷ்டன், தேனுகன், கேசி என்ற துஷ் டர்களை விளையாட்டாகச் சங்கரித்த மகானுபாவன் இவனே. பாருங்கள் இதோ இந்தக் கிருஷ்ணனுக்கு முன்னே பெண்களுடைய மனங்களையுங் கண்களையுங் களிப்பித்துக்கொண்டு லீலையோடு போகிறவன். இவ னுடைய தமையன் பலபத்திரனென்னு நாமமுடைய வன். புராணார்த்தந் தெரிந்த பண்டிதர்கள் அழுங்கிப் போன யாதவ வம்சத்தை ஒரு கோபாலன் தலையெடுக் கச் செய்வானென்று சொல்லுகிறார்களே, அந்தப் புரு ஷன் இந்தக் கிருஷ்ணன்தான். எல்லாவற்றிற்கும் உற் பத்தி ஸ்தானமான ஸ்ரீவிட்டுணுவின் அம்சமாய்ப் பூமி பாரம்போக்கும்படி அவதரித்தவன் இவனே" என்று ஸ்ரீ கிருஷ்ணனையும் பலபத்திரரையும் வர்ணித்துக் கொண்டிருக்கத் தேவகிக்குப் புத்திரவாஞ்சல்லியத்தால் முலைகளினின்றும் பால்பெருக, மார்பு திடுக்குத் திடுக் கென்றடித்துக் கொண்டிருந்தது. வாசுதேவரோ குமார ருடைய முகங்களைப் பார்த்ததினாலே பெரிய மகோச்சவ மடைந்தாற்போலத் தனக்கு நேர்ந்த மூப்பை விட்டு யவ்வன முள்ளவர்போலானார். அந்தப்புரத்து ஸ்திரீ களும் கண்கள் மலரநின்று கண்ணனைக் காண்பதை ஒழியாமல் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டனர்.

"தோழிமாரே! மிகவுஞ் சிவந்த திருக்கண்க ளுள்ளதாயும், யானையோடு போரிட்டதனா லுண்டான

வியர்வைத்துளிகள் பொருந்தினதாயுமுள்ள கண்ண னுடைய திருமுகமண்டலத்தைப் பாருங்கள்; அது சரத்காலத்தில் மலர்ந்த செந்தாமரைப்பூப் பனித் துளிகளோடுகூடி விளங்கினு லெப்படி யிருக்குமோ அதையுந் தோற்கடித்துக் கொண்டிருக்கிறது. இதனைப் பார்ப்பதனாலே உங்கள் கண்ணின் ஜன்மத்தைச் சற்பல மாகச் செய்யுங்கள். ஓ பெண்கள் நாயகமே! ஸ்ரீவச்ச மென்னு மறுப்பொருந்தி ஸ்ரீ தேவிக்கு மிருப்பிடமாய்ச் சத்துருக்களுடைய பலத்தைப் போக்கும்படியான கற் பாறைபோலே விளங்காநின்ற ஸ்ரீகிருஷ்ணனுடைய திருமார்பைப்பார், திரண்டு நீண்டிருக்கின்ற திருத்தோ ளிரண்டையும் பார், எத்தனை நேர்த்தியா யிருக்கின்றன. அடி நீ பார்க்கவில்லையே, பாலுஞ் சந்திரனுந் தாமரைக் கிழங்கும்போலே வெண்மையான திருமேனி யுடையவ னாய், நீலவஸ்திரம் உடுத்திக்கொண்டிதோ பலபத்திரன் வருகின்றானே, பாரடி. குதிக்கின்ற சாணூரனோடும் முஷ்டிகனோடும் யுத்தசன்னத்தனா யிருக்கிற இராமனு டைய திருமுக மண்டலத்திலுள்ள சிரிப்பு எத்தனை நன்றா யிருக்கின்றது.

"ஓ பாங்கிமாரே! பாருங்கள், இந்தக் கிருஷ்ணன் மல்லுத்தத்திற்காகச் சாணூரனோடு சேருகின்றான். இந்தச்சபையில் தகுதியறிந்து செய்யத்தக்க பெரி யோர்களில்லையா? யவ்வனத்தை யெதிர் பார்த்துக் கொண்டிருக்கிற சுகுமாரனான திருமேனியுள்ள கண்ண னெங்கே? வச்சிராயுதம்போலே கடினமான பெரிய சரீர முள்ள இந்த மகாசூர னெங்கே? இவ்விருவரும் போரிடும்படிப் பார்ப்பது சபையாருக்கு நியாயமா? இக் குமாரரிருவரும் புதிதான யவ்வனம் பொருந்திக் காண் போர் கண்கள் களிக்கும்படியான அழகு பெற்றிருக்கிற திருமேனி யுடையவர்களா யிருக்கிறார்கள். சாணூரன் முதலிய அசுரரல்லரோ மகா கொடியவராயுங் கடின ராயு மிருக்கிறார்கள். இவ்யுத்தத்திற்குப் பரீக்ஷகர்களா யேற்பட்டவர்கள் பாலியர்க்கும் மகா பலவான்களுக்கும் யுத்தமுண்டாவதைத் தடுக்காமற் பார்த்துக்கொண்டிருக் கிறார்களே. ஆதலால், அவர்கள் வெகு அக்கிரமச் செய்கை யுள்ளவர்கள்" என்றிப்படி நகரத்துப்

பெண்கள் பேசிக்கொண்டிருக்கையில், ஸ்ரீ ஹரிபகவான் வஸ்திர முதலானவைகளை வரிந்து கட்டிக்கொண்டு பூமியதிரும்படி ஜனங்களினடுவே குதித்துக்கொண்டிருந்தார். பலபத்திரரும் அப்படியே தோள்தட்டிக் குதித்துக் கொண்டிருந்தார். இவர்கள் குதிப்பதினாலே அடிக்கடிப் பூமி பிளந்துபோகாம லிருந்ததே ஓர் ஆச்சரியமா யிருந்தது. பின்பு அளவற்ற பராக்கிரமசாலியான ஸ்ரீ கிருஷ்ணன் சாணூரனோடும், பலபத்திரர் மல்லுத்தத்தில் வல்லவனான முஷ்டிகாசுரனோடும், போரிடத் தொடங்கினார்கள். மகோற்சவமுள்ள அந்த ஜனசமூகத்திலே இவர்களுக்கு யாதோராயுதமு மில்லாபமல் (சன்னிபாதம்) என்ற முதலிற் கைப்பிடித்துப் பஞ்சாப் போடுவதினாலும், (அவதூதம்) என்ற புறங்கையாற் கீழே தள்ளுவதினாலும், (பிரக்ஷேபணம்) என்ற இழுத்துத் தள்ளுவதினாலும், (முஷ்டி) என்ற கைப்பிடியிடித்தலினாலும், (கீலநிபாதம்) என்ற முழங்கை கணைக்கைகளைக்கொண் டிடித்தலினாலும், (வச்சிரநிபாதம்) என்ற கையோரங்களினா லிடித்தலினாலும் அல்லது (மத்திமை அனாமிகை) யென்ற விரல்களினடுவே கட்டைவிரல்வைத்த முட்டியா லிடித்தலினாலும், (பாதோத்தூதம்) என்ற காலாற்றூக்கி யெறிதலினாலும், பிரமிருஷ்டம் என்ற உடம்பெல்லா மிறுகப்பிடித்துத் தள்ளி உழக்குவதினாலும், மிகக்கொடியதும் பயங்கரமுமானதாய் உற்சாகத்தையுந் தேகபலத்தையுங்கொண்டு நிறைவேற்றத்தக்கதான யுத்தமொன்று நடந்தது. அந்தப்போரில் சாணூரன் கண்ணனோடு எவ்வளவுக்கெவ்வளவு போரிட்டானோ அவ்வளவுக்கவ்வளவு சிறிது சிறிதாய் மிகவும் பல ஹானியையே அடைந்துவந்தான். சுவாமி சர்வேசுவரனாயும் சர்வசக்தனாயு மிருந்தாலும் வருத்தத்தினாலுங் கோபத்தினாலுந் தன் தலையணியிலுள்ள சேகரத்தை யசைத்துக்கொண்டிருக்கிற சாணூரனோடு திருவிளையாட்டாய் இப்படி யுத்தஞ் செய்தருளினார். இப்படி யிருக்கையில், சாணூரனுக்குப் பலம் குறைந்துபோவதையும் கிருஷ்ணனுக்குப் பலம் வளர்ந்து வருவதையும் கம்ஸன்கண்டு மிகுந்த கோபமூண்டவனாய் வாத்தியகோஷத்தை நிறுத்தும்படி யுத்தரவுசெய்

தான். இப்படியங்கே மிருதங்க காகளமுதலிய வாத்தியங்கள் நிறுத்தப்படவே வானத்தில் தேவ வாத்தியங்கள் அநேகம் முழக்கப்பட்டன. மேலும் வானத்திலிருந்துகொண்டு தேவதைகளெல்லாம் "ஓ கோவிந்தனே! சாணூரனை வெல்லக்கடவாய். ஓ கேசவனே! நீ ஜயசாலியாகக் கடவாய்" என்று மிகுந்த சந்தோஷத்தோடு வாழ்த்திக்கொண் டிருந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனோ இப்படி நெடுநேரமளவும் போர்விளையாட்டுப் புரிந்துகொண்டிருந்து, அவ்வசுரனைச் சங்கரிக்கத் திருவுள்ளமுடையவராய் அவனைப் பெயர்த்து அநேகந்தரம் கிறுகிறெனச் சுழற்றித் தரையிலறைந்தார். அவ்வசுரனுக்கோ சுழற்றும்போதே வானத்தி லுயிர் போய்விட்டது. தரையி லறைந்தவுடனே அவனுடல் துணுக்கை துணுக்கையாய்ப் பிய்ந்துபோய்ப் பூமியில் ஒரு பெரிய உதிரச்சேற்றை யுண்டாக்கிற்று. கண்ணன் சாணூரனோடு யுத்தஞ்செய்தவண்ணம் பலதேவனும் முஷ்டிகனோடு யுத்தஞ் செய்துகொண்டிருந்து சாணூரனை வீழ்த்தினபோதே அம்முஷ்டிகனை முட்டியாலே சிரத்திலும், முழங்காலாலே மார்பிலுமிடித்துத் தரையிற் றள்ளத் தள்ளும்போதே உயிரிழந்த அவனைக் கசக்கினார். இவ்விருவரும் மடிந்தவுடனே தோசலகனென்பவன் யுத்தத்துக்குவர, ஸ்ரீ கிருஷ்ணபகவான் மகா பலசாலியான அந்த மல்லராஜனை இடக்கை முட்டியினாலிடித்துத் தரையில் வீழ்த்தியருளினார்.

இவ்வாறு சாணூரனும் முட்டிகனும் தோசலகனும் சங்கரிக்கப்படவே மற்றுமுள்ள மல்லரெல்லாம் பறந்தோடிப் போனார்கள். பின்பு அந்தப் போர்க்களத்திலே போர்க்குரியவர் யாருமில்லாமையாலே ஸ்ரீ வாசுதேவ சங்கர்ஷணரிருவரும் தமக்குச் சரிவயதுள்ள இடைப்பிள்ளைகளை வலுவிலிழுத்துவந்து குதித்துக்கொண்டு மகிழ்ந்திருந்தார்கள். இதையெல்லாங் கண்டு கஞ்சன் கோபத்தா லிரண்டுகண்ணுஞ் சிவந்து, அங்குள்ள யுத்தப்பயிற்சியுடைய மனிதரைக் கூப்பிட்டு, உரக்கச் சொன்னதாவது: "ஓ சேவகரே! இவ்விடைப் பிள்ளைகளை இச்சபைக்குப் புறத்தே யிழுத்

துக்கொண்டு போய்விடுங்கள். துஷ்டனுன நந்தனை யும் பிடித்து இரும்பு விலங்கிடுங்கள். வசுதேவனையும் நல்ல வயதுடையவர்க்குச் செய்யத்தக்க தண்டனை செய்து வதையுங்கள். இதோ எதிரிலே கிருஷ்ண ேனாடு கூடிக்கொண்டு துள்ளுகிருர்களே அந்த இடைய ருடைய மாடுகளையு மற்றுமுள்ள பொருளெல்லா வற்றையும் பறித்துக்கொள்ளுங்கள்" என்று கம்ஸன் கட்டளையிட்டுக் கொண்டிருக்கையில், ஸ்ரீ மதுசூதனன் சிரித்துக்கொண்டே வேகமாய் அவன் மஞ்சத்தின்மே லெழும்பி யேறிக் கிரீடங் கழன்று கீழேவிழும்படி யவ னைத் தலைமயிர் பிடித்திழுத்துத் தரையிற்றள்ளி, அவன் மேல் தாம் வீழ்ந்தருளினுர்.

கேளீர் பிராமணேத்தமரே! இப்படிச் சகலலோகங் களுக்கும் ஆதாரமா யிருப்பதனுலே அதிக பாரமா யுள்ள ஸ்ரீகிருஷ்ணன் மேலேவிழவே உக்கிரசேனனது குமாரனுன கம்ஸமகாராஜன் உயிரிழந்தான். அப்படி அவனுயிரிழந்ததுவிட ஸ்ரீமதுசூதனன் அவ் அரச னுடைய உடலைத் தலைமயிரைப்பற்றி அவ்வரங்கி னடுவிலே இழுத்திட்டான். பாரமுள்ள அந்தச் சரீ ரத்தையங்கே யிழுத்ததனுலே தண்ணீர் வெள்ளமோடி யறுத்தாற்போலே அவ்விடத்திலோ ரகழி யுண்டாயிற்று. கம்ஸன் இவ்வண்ண மானதைக்கண்டு அவனுடைய தம்பியான சுநாமாவென்பவன் வெகு கோபாவேசத் தோடு கண்ணன்மேல் வரக்கண்டு, மூத்தநம்பி இலீலையா லேயே அவனைச் சங்கரித்தருளினுர்.

இவ்விதமாய் மதுராபுரியின் அரசன் கண்ணனுலே அலக்ஷியமாய்ச் சங்கரிக்கப்பட்டதைக் கண்டு அந்தரங்க மண்டலமெல்லாம் "ஹாஹா" என்று ஆரவாரித்துக் கொண்டிருந்தது. இஃது இப்படியிருக்க, ஸ்ரீ கிருஷ் ணன் பலதேவனேடு கூடிப்போய் வசுதேவரையும் தேவகியையும் பாதங்களிற் பணிந்தான். பணியவே, அவ்விருவரும் சுவாமியைத் தூக்கியெடுத்துத் திருவவ தாரகாலத்திலே அவரருளிச்செய்ததை நினைத்தவர்க ளாய் அவர் திருவடிகளிலே விழுந்து தண்டம் சமர்ப் பித்து விண்ணப்பஞ் செய்யலாயினர்.

"ஓ மகாபிரபுவான ஸ்ரீகேசவனே! ஆர்த்தரான தேவர்களுக்கு நீமுன் எந்தவரம் பிரசாதித்தருளினையோ அதை அடியேங்களிடத்தில் திருவவதாரஞ் செய்த அநுக்கிரகமூலமாய் நிறைவேற்றி யருளினாய். அடியேங்களா லாராதிக்கப்பட்டு அடியேங்கள் கிருகத்தில் துஷ்டநிக்கிரகத்துக்காக நீ அவதரித்தருளினதனாலே அடியேங்கள் குலம் பாவனஞ் செய்யப்பட்டது. எம்பெருமானே! நீ சர்வபூதமயனாய்ச் சர்வபூதங்களுடைய இருதயங்களிலிருக்கிறாய். எல்லாம் உன்னிடத்திலேயே உண்டானது, உண்டாய்க்கொண் டிருக்கிறது, உண்டாகப் போகிறது. ஓ அச்சுதனே! நீயே சகல தேவ சுரூபியாயிருந்து சகல யக்கியங்களாலும் ஆராதிக்கப் படுகிறாய், அந்த யக்கியமும் நீயே. யாககர்த்தாவும் நீயே. யாககர்த்தாக்களுக்கு ஆராதிக்கப்படு மீசுவரனும் நீயே. ஓ ஜநார்த்தனனே! நீயே லோகங்களுக்கு உற்பத்தி ஸ்தானமா யிருக்கிறாய், இப்படிக்குச் சர்வேசுரனா யிருக்கில் உன்திறத்திலே அடியேங்களுடைய இருதயம் புத்திரனென்னும் வாச்சலியத்தினாலே மயங்கி நிற்பது மிகவும் பரிகாசம் பண்ணத்தக்கது. நீயே சர்வ பூதங்களுக்குங் கர்த்தா, முதலு முடிவுமில்லாதவன். இப்படிப்பட்ட வுன்னை எந்த மனுஷ்யனுடைய நாக்குத்தான் மகனென்று சொல்லத்துணியும்? ஓ ஜகந்நாதனே! இந்தச் சகல லோகமும் எவனிடத்தினின்று முண்டாகின்றதோ அப்படிப்பட்ட மகா புருஷன் மாயையென்கிற மோகன சத்தியைத்தவிர வேறெந்தக் காரணத்தினாலே எங்களிடத்தினின்று முண்டாவான்? ஸ்தாவரமாயும் ஜங்கமமாயு மிருக்கிற சகல ஜகத்தும் எவனிடத்திலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்டவன் வயிற்றுப்பையி னிடத்திலும் பின்பு மடியிலும் படுக்கின்ற மனிதனாக எப்படி யாவான்? ஓ சர்வேசுவரனே! அப்படிப்பட்ட நீ அநுக்கிரக முள்ளவனாகி யுலகத்தை இரக்ஷித்தருளவேண்டும். நீ அம்சாவதாரஞ் செய்வதனாலே அடியேங்களுக்குப் புத்திரனாக மாட்டாய். பிரமன்முதல் மரமீறாகக் கிடக்கின்ற பிரபஞ்சமெல்லாம் உன்னிடத் துண்டானதாயிருக்க, ஓ புருஷோத்தமனே! அடியேங்களை யென்ன மோகிப்பிக்

கின்றாய்? உன் மாயையினாலே ஞானமழுங்கிப்போய் உன்னை எங்களுடைய புத்திரனென்று நினைத்துச் சகல பயங்களையும் நீக்கவல்ல வுனக்குக்கம்சனிடத்தினின்றுங் கொடிய பயம் எண்ணப்பட்டது. இவ்வாறு சத்ருருவினிடத்தில், அச்சத்தினாலே கோகுலத்துக்கு எழுந்தருளப்பண்ணப்பட்டாய், உன் சங்கற்பத்தினாலேயே வளர்ந்தருளினாய். ஆதலால் அடியேங்களுக்கு இதிலொன்றும் மகத்துவமில்லை. ஓ எம்பெருமானே! உருத்திரன், மருத்து, அசுவினிகள், இத்திரன் முதலானவர்களுக்கும் அசாத்தியமான உன் திவ்விய சேஷ்டிதங்களையெல்லாம் பிரத்தியட்சமாய்க் கண்டோமன்றோ? அப்படிப்பட்ட ஸ்ரீவிஷ்ணுவான நீ லோகரட்சணார்த்தமாக அடியேங்களுக்குப் புத்திரன்போல் அவதரித்தருளினாய். உன்கிருபையினாலே அஞ்ஞான நீங்கினபடியால் இவ்வர்த்தம் நன்றாய் அடியேங்களுக்குத் தெரிந்தது" என்று தேவகி வசுதேவரிருவரும் துதித்து விண்ணப்பஞ் செய்தார்கள்.

இருபதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்தோராம் அத்தியாயம்

# வைதிகன்புத்திரனைக்கொண்டுவந்தது

இப்படியாகத் துதித்து நின்ற தேவகி வசுதேவர்கள் தம் திவ்விய சேஷ்டிதங்களைக் கண்டு தத்துவஞானமுடையவர்களாயிருப்பதைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணன், இவர்களையு மற்றுமுள்ள யாதவ சமூகத்தையும் மோகிப்பிக்கும் பொருட்டுத் தமது மாயையைப் பிரயோகித்தருளித் தாய்தந்தையரை நோக்கி "அம்மா! அண்ணா! உங்களைக்காண வெகுநாளாய் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தும் பலபத்திரரும் நானும் கம்ஸனிடத்தில் பயத்தினாலே வந்துகாணமற் போனோம். தாய்தந்தைகளுக்குப் பணிவிடைசெய்யாம லொழியுங் காலம் ஒருவனது ஆயுள் பாகத்திலேயே வீணாகின்றது. ஐயா! குருக்களுக்கும் தீயோருக்கே அது நேரிடும். தேவர்களுக்கும் பிரா

மணருக்கும் தாய் தந்தைகளுக்கும் பணிவிடை செய்து வருகிறவர்களுடைய காலந்தான் பயனுள்ளதா யிருக்கின்றது. ஓ பிதாவே! இப்படி எங்களையும் மீறி எம்பிரியத்துக்கும் மாறுபட்டு உண்டாகிய இப்பிழையனைத்தையும் பொறுத்தருளவேண்டும். ஏனெனில், கம்ஸனுடைய வலிமைக்கு அஞ்சிப் பரவசராயன்றே நாங்கள் இப்படிச் செய்யலாயிற்று" என்று சொல்லிக் கண்ணன் அண்ணனோடுகூட அவர்களுக்குத் தண்டமிட்டுப் பின்பு யாதவ விருத்தர்களையும் முறையே பணிந்து, பட்டணத்துச் சனங்களுக்கும் தக்கபடி மரியாதை செய்தருளினன். பின்பு கம்ஸனுடைய பத்தினிகளும் அவன் தாய்மாரும் அவனுடம்பைச் சூழ்ந்து உட்கார்ந்துமிருந்த துக்கத்திலாழ்ந்தவர்களாய் அழுதுகொண்டிருந்தார்கள். அவர்களைக்கண்டு கண்ணன் பச்சாதாப முள்ளவனாய் இரக்கமுற்று கண்களில் நீர்ததும்ப வந்து அவர்களைப் பலவகையில் தேற்றியருளினன். மேலும் புத்திரனிழந்தவனை உக்கிரசேன மகாராஜனைத் தளையினின்றும் விடுவித்து, அந்த மதுரா ராச்சியத்துக்குப் பட்டாபிஷேகஞ் செய்தருளினன்.

உக்கிரசேனனும் பட்டாபிஷேகஞ் செய்யப் பெற்றுத் தன் மகனாகிய கம்ஸனுக்கும் மற்றுமங்கே மடிந்தவர்களுக்கும் பிரேதக்கிரியைகளைச் செய்தான். பிரேதக்கிரியைகள் தீர்ந்தபின்பு சிங்காதனத்தி லுட்கார்ந்து இராச்சிய பரிபாலனஞ்செய்யத் தொடங்கின தன்மாதாமகனை நோக்கிக் கண்ணன் "ஓ மகாப் பிரபுவே! செய்ய வேண்டிய காரியத்தைக் குறித்துக் கிஞ்சித்துஞ் சங்கையின்றி எனக்குக் கட்டளையிடக்கடவீர். இந்த அதுவம்சம் யயாதிமகாராஜனுடைய சாபத்தினல் இராச்சிய பாரத்துக்கு யோக்கியமல்லா திருந்தாலும், இப்போது நான் உம்முடைய சேவகனாயிருக்கையில் சகல இராஜாக்களுக்கும் மேலானவரா யிருக்கிறபடியால், நீர் எந்த அரசனுக்கும் கட்டளையிடக்கூடும். ஆனாலும், இந்த அற்ப ராஜாக்களுக்குக் கட்டளை யிடுவதிற் பயனென்ன? தேவர்களுக்குக்கட்டளையிடக்கடவீர்" என்று சொல்லி, வாயுவை நினைத்தருள, அவனும் உடனே சுவாமி சந்நிதிக்கு வந்து நின்றான். வந்துநின்ற வாயுதேவனை

நோக்கி காரியத்திற்காக மனுஷ்யனா யிருக்கிற அந்தப் பகவான் நியமித்தருளிய தென்னவென்றால், "ஓ வாயுவே! நீ இந்திரனிடத்துக்குப் போய்ச்சொல், 'இந்திரா நீ கர்வப்பட்டது போதும்; இனிக் கர்வப்படாதே; உக்கிரசேன மகாராஜனுக்குச் சுதர்மையென்கிற சபா மண்டபத்தை நீ கொடுத்துவிடு. இப்படி ஸ்ரீகிருஷ்ணன் சொல்லுகிறான்' என்று சொல். சுதர்மை என்கிற சபாரத்தினமானது நம்முடைய மகாராஜாவுக்கு ஏற்றது. இதில் யதுவமிசத்தார் வீற்றிருக்கத் தகுந்தவர். ஆதலால், ஒப்பற்ற அந்தச் சபையை மகாராஜாவுக்கு அனுப்பிவிடு என்று இந்திரனுக்கு என் கட்டளையைத் தெரிவித்து அச்சபையைக் கொண்டுவா" என்று நியமித்தவுடனே, வாயுதேவன் சிரசில் வகித்துப் போய்ப் புரந்தரனுக்குத் தெரிவிக்க, அவனும் உடனே அந்தச் சபாரத்தினத்தைச் சமீரணன் கையிற் கொடுத்துவிட்டான். உடனே சமீரணனும் அதைக் கொண்டு வந்து சுவாமி சந்நிதியிற் சமர்ப்பிக்க, அதைச் சுவாமி உக்கிரசேனனுக்குப் பிரசாதித்தருளினார். இவ்விதமாய் வாயுவினாற் கொண்டுவரப்பட்ட ரத்தினமயமாய் விளங்காநின்ற அச்சபையிலே எம்பெருமான் திருத்தோளின் பலத்தை யாசிரயித்த யாதவர் யாவரும் வீற்றிருந்து ஆனந்த மனுபவித்து வந்தார்கள்.

பிறகு அந்தப் புருஷசிங்கங்க ளிருவரும் விதிப்படி உபநயனஞ் செய்யப்பெற்றுத் தாங்கள் இயல்பாய் முற்றுமறிந்தவரா யிருந்தாலும், திருவவதாரமுறைக்குப் பொருந்தச் சிஷ்யாசாரிய கிரமத்தை உலகத்துக்கு அறிவிக்கவேண்டிக் காசியிற் பிறந்தவரான சாந்தீபினியென்னும் பிராமணோத்தமரிடத்துக்குக் கல்வி கற்க எழுந்தருளினார்கள். அங்கெழுந்தருளி யாதவோத்தமரிருவரும் அவருக்குச் சீடராகிச் சாஸ்திரவிதிப்படி குருவுக்குச் சிசுருஷை செய்துகொண்டு, கற்கவேண்டு மொழுக்கம் யாவரும் அறியும்படியாக வேதவேதாங்க முதலான சாஸ்திரங்களையும் இரகசிய சங்கிரகங்களோடு தனுர்வேதத்தையும் ஓதினார்கள். கேளும் முனிவரே! அம்மகானுபாவ ரிருவரும் அறுபத்துநான்கு நாட்களுக்குள்ளாக வேதவேதாங்காதி சகல சாஸ்திரங்களை

யும் அறுபத்துநான்கு கலைகளையும் அத்தியயனஞ் செய்தருளினார்கள். இஃது உலகத்தாருக் கெல்லாம் மிகுந்த ஆச்சரியமாயிருந்தது. சாந்தீபினி யென்னு மவ்வாசாரியரும் மற்றோரிடத்தும் சம்பவியாத இவர்களுடைய அதிமானுஷ சேஷ்டிதத்தைக் கண்டு இவர்கள் சூரிய சந்திரர்; ஏதோ காரணத்தா லிங்குவந்தார்களென்று நினைத்திருந்தார். அவர்கள் ஓதும்போது வேதங்களையாகிலும் சாஸ்திரங்களையாகிலும் மறுதரம் படிக்கவேண்டாமல் உபாத்தியாயர் சொன்னமாத்திரத்திலேயே உணர்ந்து கொண்டவர்களாய், உபாத்தியாயரைநோக்கி, "சுவாமி! தேவரீர்களுக்கு அடியேங்கள் குருதக்ஷிணை எது சமர்ப்பிக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, அவ்வுபாத்தியாயர் இவர்களுடைய இந்திரிய கோசரமாகாத காரியங்களை யோசித்து முன் பிரபாச தீர்த்தக்கட்டத்திலே கடலில் முழுகி இறந்துபோன தம்முடைய புத்திரனைக் கொண்டுவந்து கொடுக்கும்படி வேண்டினார். அவ்விருவரும் அப்படியே யாகட்டுமென்று அஸ்திரங்களோடு புறப்பட்டுக் கடற்கரைக்கு எழுந்தருளினவுடனே சமுத்திராஜன் அர்க்கியத்தைக் கையிலேந்தி வந்து அவர்களை யாராதித்துக் கண்ணனை நோக்கிச் 'சுவாமி அசுர சத்துருவே! அச் சாந்தீபினியின் புத்திரனை அடியேன் கொண்டு போனவனல்ல; சங்கின் உருவந் தரித்து என்னுடைய ஜலத்திலே வாசஞ்செய்கிற பஞ்சஜனன் என்கிற அசுரன் கொண்டுபோனான்" என்று விண்ணப்பஞ் செய்தான். இதைக்கேட்டு ஸ்ரீகிருஷ்ணன் சமுத்திரஜலத்தினுள்ளே பிரவேசித்து அவ்வசுரனைக் கொன்று அவன் எலும்பினாலுண்டான உத்தம சங்கத்தை யெடுத்துக்கொண்டார். பின்பு கண்ணன், எதன் தொனியினாலே அசுரருக்குப் பலஹானியும் தேவதைகளுக்குத் தேஜோவிர்த்தியும் அதர்மநாசமும் உண்டாகுமோ, அப்படிப்பட்ட * பாஞ்சசன்யத்தைப் பூரித்து, யமபட்டணத்துக்கு எழுந்தருளி, அவ் யம

* பஞ்சஜனனுடைய சம்பந்தத்தினால், அச்சங்குக்குப் பாஞ்சஜன்யமென்று திருநாம முண்டாயிற்று. இதுவும் எம்பெருமான் திருநாமம்போலே அவதாரத்திற்கு ஏற்ற பொருத்தமென அறிக.

னைச் சயித்து, யாதனையிற் கிடந்த உபாத்தியாய குமாரனை முன்னிருந்ததுபோன்ற தேகமுடையவனாக்கிக் கொண்டு வந்து, அவ்வுபாத்தியாயருக்குக் குரு தக்ஷிணையாகக் கொடுத்தருளினான். இவ்வாறு கண்ணன் தமையனுந் தானுமா யுபாத்தியாயரது புத்திரனைக் கொண்டுவந்து கொடுத்து, உக்கிரசேனனாலே இரக்ஷிக்கப்பட்டதாய் ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளுங் களிக்கப்பெற்றிருக்கின்ற மதுராநகரத்திற்கு எழுந்தருளினான்.

இருபத்தோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# ஜராசந்தவிஜயம்

கம்சன் மகததேசாதிபதியான ஜராசந்தனுடைய புத்திரிகளாகிய அஸ்தி பிராஸ்தி என்பவர்களை விவாகஞ் செய்திருந்தான். கம்சனைக் கிருஷ்ணன் கொன்றதனாலே ஜராசந்தன் வெகு கோபமுடையவனாய்க் கிருஷ்ணனை வமிசத்தோடு கொல்லவேண்டுமென்று இருபத்துமூன்று அக்குரோணி சேனையோடு எதிர்த்துவந்து மதுராபட்டணத்தை முற்றுகையிட்டான். அப்போது நம்பிகளிருவரும் அற்பமான சேனைகளுடையவர்களானாலும் மகா பலவான்களாகையாலே தம் சிறிய சேனையுடனேகூட வெளியில்வந்து, அந்தப் பெரும்படையோடு போரிட்டார்கள். இப்படி யுத்தஞ்செய்கையில், தங்களுடைய பூர்வீகமான ஆயுதங்களை யெடுத்துக்கொள்ளத் திருவுள்ளமானதால், ஆகாசத்திலிருந்து சார்ங்கமென்கிற வில்லும் அக்ஷய தூணீரங்களும் கௌமோதகி யென்கிற கதாயுதமும் ஸ்ரீகிருஷ்ணனுக்கு வந்து சேர்ந்தன. அப்படியே பலபத்திரருக்கும் பெரிய கலப்பையும் பெரிய உலக்கைத் தடியும் வெகு ஆனந்தத்தோடு வந்துசேர்ந்தன. இப்படி வந்த திவ்வியாயுதங்களைத் தரித்து, பெருஞ்

சேனையையுடைய அம் மகதாதிபதியை வென்று, இருவரும் மறுபடி மதுரைக்கு எழுந்தருளினார்கள். இப்படியாக மகா துஷ்டனான ஜராசந்தனை ஜயித்திருந்தும் சுவாமி, அவன் உயிரோடு திரும்பிப் போனதனாலே தம்மை அவன் ஜயித்ததாக நினைத்தார். அவன் ஜயிக்கப்பட்டதாக நினைக்கவில்லை. சுவாமி நினைத்தபடியே ஜராசந்தன் சிறிது காலங்கழித்து மறுபடியும் பெருஞ்சேனையைக் கூட்டிக்கொண்டு யுத்தஞ் செய்ய மதுரைக்கு வந்து, ஸ்ரீராம கிருஷ்ணர்களால் ஜயிக்கப்பட்டு ஓடிப்போய் விட்டான். இவ்வாறு மகாமதமுள்ள அந்த மகதராஜன் பதினெட்டுத்தரம் ஸ்ரீகிருஷ்ணன் முதலான யாதவர்களோடு போர்செய்ய வந்து, யாதவராலே வெல்லப்பட்டவனாய் கொஞ்சஞ் சேனையோடு திரும்பி ஓடிப்போய்விட்டான். ஜராசந்தன் மகாபல பராக்கிரமமுள்ளவனா யிருந்தும், பதினெட்டுத்தரம் யாதவருக்குத்தோற்று ஓடிப்போனான். ஆனால் இவ் வல்லமை ஸ்ரீமந் நாராயணனுடைய திருவவதாரமாய்த் திருவாழி கையிலேந்தி நிற்கும் மகா புருஷனுடையதன்றி யாதவர்களினது அன்று. அவருடைய திருவாழியின் சான்னித்தியமே சத்துரு ஜயத்திற்குப் போதுமானதாயிருக்கப் பலபல ஆயுதங்களைச் சத்துருக்களின்மேற் பிரயோகித்தது என்னவெனில், மனுஷ்யாவதாரஞ் செய்தருளின அந்த லோகநாதனுக்கு அவ்வவதார முறைமைக்கேற்ற திருவிளையாட்டேயல்லது வேறன்று. பாரும் சங்கற்பமாத்திரத்தினாலே சகலலோக சிருட்டி சங்காரங்களைச் செய்தருளுகிற அவ்வெம்பெருமானுக்குச் சத்துருபக்ஷத்தை நாசஞ்செய்வதற்காக இவ்வளவு முயற்சிவேண்டுமோ? ஆனாலும் மனுஷ்யருடைய தன்மையை அனுசரித்துப் பலவான்களோடு சந்தியும் வலியற்றவர்களோடு யுத்தமுஞ் செய்தருளுகிறான். மேலும் இக் காரணத்தினாலேயே சிலவிடத்திற் சாமோபாயத்தையும் சிலவிடத்திற் பேதோபாயத்தையும் பலவிடத்தில் தண்டோபாயத்தையும் ஒரோவிடத்து ஓடிப்போவதையும் நடித்தருளுகிறான். இப்படி மனிதர்களுடைய செய்கைகளையனுவர்த்திக்கிறானே யல்லது அசக்தி அசாமர்த்தியங்க

ளவனுக்கில்லை. இவ்விதத் திருவிளையாட்டும் இன்ன காலத்தில் இன்னவிடத்தில் இப்படியென்றில்லாமல் அவன் திருவுள்ளத்தின்படியே யுண்டாகின்றது.

இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்துமூன்றும் அத்தியாயம்

# துவாரகாநிர்மாணம்

### காலயவனநாசம், முசுகுந்தஸ்துதி

ஒருகால் யாதவ புரோஹிதரான கார்க்கியரென்னும் பிராமணரை அவருடைய மைத்துனன் அவர்க்குப் பிள்ளை பிறக்கவில்லை யென்பதைக்கொண்டு யாதவ சபையிலே இவரை நபும்சகர் என்று பரிகாசஞ்செய்ய, யாதவர்களெல்லாம் உரக்கச் சிரித்தார்கள். அதனாலே காக்கியர் அவமானமுங் கோபமுமுடையவராய் விந்திய பருவதத்தின் தெற்கேவந்து யாதவர்களுக்குச் சத்துருவாகவொரு புத்திரன் தமக்குவேண்டுமென்று இருப்புப்பொடியைத் தின்றுகொண்டு சிவனைக்குறித்து உக்கிரமான தவஞ்செய்தார். இப்படிப் பன்னிரண்டாண்டு தவஞ்செய்தபின், சிவபெருமான் அவர்க்குப் பிரத்தியக்ஷமாகி அவருக்கு இஷ்டமான வரத்தைக்கொடுத்தார். இவர் புத்திரனுக்காக வரம்பெற்றிருப்பதை யறிந்து யவன தேசாதிபதி இவரிடம் வந்து இவரை மிகவும் உபசரித்துப் பூசித்துத் தனக்குப் பிள்ளை யில்லாமையாலே தன் பத்தினியினிடத்தில் பிள்ளை யுண்டாகும்படி வேண்டிக்கொண்டான். இந்தப் பிராமணன அவனிடத்திலிரங்கி அவன் பத்தினியோடு புணர, அவன் வயிற்றிலே வண்டு போன்ற நிறமுள்ள புத்திரனுண்டானான். அவனுக்கு அந்த யவனாதிபதி காலயவனன் என்று பெயரிட்டுத் தகுதியான காலத்திலே பட்டாபிஷேகஞ் செய்துவிட்டுத் தான் தவஞ் செய்யும்பொருட்டு அரணியத்துக்குப் போனான்.

காலயவனன் வச்சிராயுதத்தின் முனைபோற் கடின மான மார்புடையவனாய் மகாபல பராக்கிரமங்களைப் பொருந்திக் கர்வித்திருந்ததனாலே, நாரத முனிவரை "இந்தப் பூமியில் பலவான்களான அரசர்கள்" யார்? என்று வினவினான். அம்முனிவர் யாதவர்களின் தலைவ ரான எம்பெருமான்களைப் பலவான்களென்று அவனுக் குச் சொன்னார். அதைக் கேட்டவுடனே அவன் அனேககோடி மிலேச்சரோடும் ரத கஜ துரகங்களோடு சேர்ந்து யாதவர்மேற் படையெடுக்க வேண்டுமென்ற முயற்சியுள்ளவனாய், நாள்தோறுந் தன் பிரயாணத்திற் குத் தடை நேரிடாதபடி வழிகளில் அங்கங்கே வாகனங் களை வைப்பித்து, ஒரு வாகனம் அலுத்துப்போன வுடனே அதைவிட்டு மற்றொரு வாகனத்தின்மே லேறி, இப்படியே நெடுந்தூரமான வழியைச் சீக்கிரத்திற் கடந்து, யாதவர்மேற் பொறாமை தலைகொண்டு மதுரா புரிக்கு வந்து சேர்ந்தான்.

அந்தத் தருணத்தில் கண்ணன், ஓ! ஓ! யாதவ சேனையெல்லாம் நாசமாகும்படி நேரிட்டதே; காலயவ னன் யுத்தஞ்செய்வானாகில் அற்பமான யாதவரது சேனா பலத்தை நாசஞ்செய்து விடுவான். இதனாலே பல வீனப்பட்டிருக்கிற யாதவரை மகதராஜன் வந்து நாசஞ் செய்யக் கூடும்; அல்லது மகதராஜனுக்குச் சேனை க்ஷீணப்பட் டிருந்தாலும் காலயவனன் அவனோடு சேர்ந்து யாதவரை யழித்துவிடுவான். ஆதலால் கால யவனன் எதிர்த்தாலுஞ் சரிதான், ஜராசந்தன் எதிர்த் தாலுஞ் சரிதான், இரண்டு பக்ஷத்திலும் யாதவருக்குத் துன்பமே நேரிடும். ஆதலால் இவ் யாதவருக்குச் சத் துருக்கள் புகவொண்ணாத ஒரு துர்க்கம் கோட்டை அமைக்கக் கடவோம். அது பெண்பிள்ளைகளும் யுத்தஞ் செய்யத்தக்கதா யிருக்கவேண்டும். அப்படி யானால் விருஷ்ணிசிரேஷ்டர் அச்சமின்றி அதி லிருந்து யுத்தஞ்செய்வார்களென்பதற்குக் கேட்கவேண் டுவதில்லையே" என்று திருவுள்ளம்பற்றி, ஸ்ரீகோவிந் தன் சமுத்திரராஜனைப் பன்னிரண்டு யோசனை தூரம் விடும்படிகேட்டு அவன்விட்ட அவ்வளவிடத்திலே திவ் வியோத்தியானங்களும் திவ்வியதடாகங்களும் பெரிய

மதில்களும் மதில் தம் வீடுகளும் உப்பரிகைகளும் நிறைந்து, தேவேந்திரனுடைய அமராவதிப் பட்டணம் போலேவிளங்காநின்ற துவாரகாநகரத்தை நிருமித்தருளினார். பின்பு சுவாமி மதுரையிலிருந்த தம்முடைய பிரஜைகளைத் துவாரகாநகரத்திற் கொண்டுபோய்ச் சேர்த்துக் காலயவனன் சமீபத்தில் வரப்பார்த்துத் தாம் மதுரையிற் பிரவேசித்து, பகைவன் சேனையைக் கொண்டு வந்து பட்டணத்தை முற்றுகை போட்டிருக்கையில், யாதோராயுதமு மில்லாமற் பட்டணத்தினின்றும் வெளியிற் புறப்பட்டுப்போனார். போகையில் காலயவனன் நாரதர் சொல்லிய அடையாளத்தினாலே இவன்தான் கிருஷ்ணனென்று நிச்சயித்து, இவன் ஆயுதமில்லாமற் போகிறபடியால் இவனைப் பிடித்துக்கொள்வ தெளிதென்று நினைத்துப் பின்றொடர்ந்தான்.

கேளும் முனிவரே! யோகிகளுடைய இருதயங்களும் பின்றொடரமாட்டாதவனை இவன் தொடர்ந்து பிடிக்க நினைத்தான். இப்படி இவன் தொடரவே சுவாமி விரைவாய் ஓடி ஒரு குகையிற் புகுந்தார். யவனனும் பின்றொடர்ந்தோடி அக்குகையிலே படுக்கையிற்படுத்து நித்திரை செய்துகொண்டிருந்த முசுகுந்தனைப்பார்த்து இவன்தான் கிருஷ்ணனென்று நினைத்துக் காலாலே உதைத்தான். உதைத்தமாத்திரத்திலே அந்த முசுகுந்தன் தூக்கந் தெளிந்து எழுந்திருந்து அந்த யவனனைக் கண்ணினாற் பார்க்க, அந்த மிலேச்சராஜன் அம் முசுகுந்தனுடைய கோபத்தினால் மூடப்பட்ட தன்னுடம்பின் அக்கினியாலே எரிக்கப்பட்டு உடனே சாம்பலாயினான். மயித்திரேயரே! கேளும் அந்த முசுகுந்த மகாராஜன் தேவாசுரயுத்தத்திற் பிரவேசித்து, அசுரரைச் சங்கரித்துத் தேவதைகளுக்குச் சகாயஞ் செய்தபோது தேவதைகள் சந்தோஷித்து "என்ன வரம் வேண்டும்" என்று கேட்க, அரசன் தூக்கமில்லாமல் அலுத்திருந்தபடியினாலே நெடுநாள்வரைக்குந் தான் தூங்கும்படி வரங் கேட்டான். தேவர்களும் அப்படியே வரங்கொடுத்து "உன்னை எவன் எழுப்புவானோ அவன் தன்னுடம்பின் அக்கினியினாலெரிக்கப்பட்டுச் சாம்பலாவான்" என்றுஞ் சொன்னார்கள். ஆதலால் இப்படி

யாகக் காலயவனன் எரிக்கப்பட்டான். முசுகுந்த மகாராஜன் துஷ்டனான அந்த மிலேச்சனை யழித்தபின் ஸ்ரீ வாசுதேவனைப் பார்த்து "நீ யார்?" என்று வினவ, சுவாமியும் "அரசனே! நான் சந்திரகுலத்தைச் சார்ந்த யதுகுலத்திற் பிறந்தவன், வசுதேவருடைய குமாரன்" என்று அருளிச்செய்தார். அது கேட்டவுடனே, அவ்வரசன், முன் தனக்கு விர்த்தகார்க்கிய மகா முனிவர் சொல்லியதை நினைத்துக்கொண்டு திடீரென்று படுக்கை விட் டெழுந்திருந்து சர்வேசுவரனான ஸ்ரீ ஹரியைத் தண்டம் சமர்ப்பித்து, விண்ணப்பஞ் செய்யலாயினான்.

"ஓ சுவாமி! தேவரீர் ஸ்ரீமந் நாராயணனுடைய அம்சாவதாரமென்று அடியேனுக்குத் தெரியும். முன்பு கார்க்கிய மகா முனிவர், இருபத்தெட்டாம் யுகத்திலே துவாபரத்தின் முடிவிலே யதுகுலத்திலே எம்பெருமான் அவதரித்தருளுவன்" என்று அடியேனுக்குச் சொல்லியிருந்தார். தேவரீர்தாம் அந்த அவதாரபுருஷன். மனுஷ்யர்களுக்கு நன்மைக்காக எழுந்தருளினீர் மேலும் தேவரீருடைய மகத்தான தேஜஸை அடியேன் சகிக்கமாட்டவில்லை. அன்றியும் நீருண்டமேகத்தின் கர்ஜனைபோலே கம்பீரமா யிருக்கின்றது தேவரீருடைய திருமிடற்றோசை. இதுவுமன்றித் தேவரீருடைய திருவடி பலத்தினாலே இப்பூமி வணங்குகின்றது. இவ்வடையாளங்களாலும் தேவரீரே ஸ்ரீபகவானென்று நிச்சயித்துக்கொண்டேன். தேவதைகளுக்கும் அசுரருக்கும் நேரிட்ட மகா யுத்தத்திலே அடியேன் போனபோது அங்குள்ள அசுரவீரரெல்லாம் அடியேனுடைய தேஜஸைச் சகிக்கமாட்டாதே போனார்கள். அப்படிப்பட்ட அடியேனோ தேவரீர் தேஜஸைச் சகிக்கச் சக்தியற்றவனா யிருக்கிறேன். இந்தச் சம்சாரமாகிய பெருங்கடலில் வீழ்ந்தவருக்குத் தேவரீ ரொருவரே கரையேற்றும்படியான இரக்ஷகர். ஆதலால் பிரபன்னருடைய ஆர்த்தியைப் போக்கும்படியான பகவானே! அடியேனிடத்தி லனுக்கிரகம் வைத்துப் பாபங்களை யெல்லாம் போக்கியருளவேண்டும். தேவரீரே சமுத்திரங்களும் மலைகளும் நதிகளும் காடுகளும் பூமியும்

வானமும் காற்றும் தண்ணீரும் அக்கினியுமா யிருக்கி றீர். அன்றியும் மனம் புத்தி அவ்யாகிருதம் பிராணன் பிராணாதிபதி புருஷன் புருஷனுக்கு மேற்பட்டதாய் எங்கும் வியாபித்து ஜன்ம விகாரங்களில்லாமலும் சப் தாதிகள் தொடராமலும் முதிர்வு இளமைகளில்லாம லும் அளக்கக்கூடாமலும் குறைவில்லாமலும் தேய்தல் வளர்தல்க ளில்லாமலும் முதலு மீறுமில்லாமலு மிருக் கின்ற பரப்பிர்மம் ஆகிய இவையெல்லாம் தேவரீரே. தேவர் பிதுர்க்கள் இயக்கர் கந்திருவர் கின்னரர் சித்தர் அப்சரசுக்கள் மனிதர் பசுக்கள் பக்ஷிகள் ஊர்வன மர முதலியவைகள் இன்னும் உண்டானதும் உண்டாவது மாய்ச் சரமும் அசரமும் மூர்த்தமும் அமூர்த்தமுமாய் தூலமும் சூக்ஷ்மமுமா யிருக்கின்ற சகலமும் தேவரீ ரிடத்தினின்றே உண்டானவைகள். ஆதலால் லோக கர்த்தாவான தேவரீரையன்றி ஒன்றுமில்லை. எம்பெரு மானே! அடியேன் இந்தச் சமுசாரசக்கரத்திலோய் வில்லாமற் சுற்றிக்கொண்டு தாபத்திரயத்தினாலே வருந் திக் கொண்டிருக்கிறேனேயல்லது எங்கும் ஒருசுகத்தை யடைவனென்று கானலின் பரப்பை ஜலமென்று மூடர் அடைவதுபோல் அடியேன் துக்கங்களையே சுகங்க ளென்று நினைத்து எடுத்துக்கொண்டேன். இராசாதி காரம் பூமி சேனை பொக்கிஷம் மித்திரர் மக்கள் மனைவிகள் ஏவலாட்கள் இன்னும் சப்தமுதலான விஷயங்கள் இவையெல்லாம் சுகமென்றே நினைத்து அடியேன் கொண்டேன். ஆனால் முடிவில் அவை யெல்லாம் அடியேனுக்குத் தாபத்தை விளைவித்தன. தேவஜனனம் கிடைத்தாலுமென்ன? அந்தத் தேவ லோககதியை யடைந்திருக்கிற தேவகணமும் அடி யேனுடைய துணையையன்றோ விரும்பி நின்றது. ஆதலால் அதனாலும் சுகமில்லை. நித்தியமான சுக மெங்கே யிருக்கிறது? ஓ சர்வாதிபதியே! சகலலோகங் களுக்குங் காரணமான தேவரீரை யாராதியாமல் எவ னாலேதான் சாசுவதமான சுகம் அடையக்கூடும்? தேவ ரீருடைய மாயையினாலே மனமகிழ்ந்தவர்கள், பிறப்பு இறப்பு மூப்பு முதலான துன்பங்களை யடைந்து பின்பு தண்டிக்க நிற்கிற யமனைக் காண்கிறார்கள். அதனாலே

தேவரீர் சுவரூபமறியாத மனிதர் நரகங்களில் தங்கள் கருமங்களினாலுண்டான கொடிய துன்பங்களை யனுபவிக்கிறார்கள். ஓ எம்பெருமானே! அப்படியே அடியேனும் தேவரீர் மாயையினாலே மோகமடைந்தவனாய் மிகவும் விஷயானுபவமே செய்துகொண்டு மமத்துவமும் அதனாலுண்டான கர்வமுமாகிய பாழுங் குழியிலே வீழ்ந்து சுழன்றுகொண்டிருக்கிறேன். இப்படிப்பட்ட அடியேன் சம்சாரவழியிற் றிரிந்து மிகுந்த தாபங்களை யடைந்து அவைகளினாலே மனந் தவிக்கப்பட்டவனாய் ஒப்பற்ற வொளியுடைய மோக்ஷசுகத்தில் அபிலாஷை யுள்ளவனாய் எவனைக்காட்டிலும் வேறு பரமப்பிராப்பிய மில்லையோ அப்படிப்பட்ட அபாரனாயும் அப்பிரமேயனாயுமுள்ள வுன்னை யடைக்கலம் புகுந்தேன்" என்று, முசுகுந்தன் துதிசெய்தான்.

இருபத்திமூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்துநாலாம் அத்தியாயம்

### முசுகுந்தனுக்கு அனுக்கிரகித்ததும்

# பலதேவர் கோகுலமெழுந்தருளினதும்

இப்படி மகா புத்திசாலியான முசுகுந்தன் துதித்து மோக்ஷத்தைப் பிரார்த்தித்து நிற்க, சர்வேசுவரராயும் ஆதியந்த மில்லாதவராயு மிருக்கிற ஸ்ரீ ஹரிபகவான் அவனை நோக்கி, "ஓ அரசனே! உனக்கு அபிமதமான உத்தம லோகங்களை அடைந்து, என் னனுக்கிரகத்தினாலே தடுக்கப்படாத மஹா ஐசுவரியமுள்ளவனாய்த் திவ்விய போகங்களை யனுபவித்து, மறுபடியும் ஒரு மகா குலத்திலே பூர்வஜனன ஸ்மரணமுள்ளவனாய்ப்பிறந்து, என் கடாக்ஷத்தினாலே மோக்ஷமடைவாய்" என்று அருளிச்செய்யக் கேட்டு, ஜகந்நாதனை அச்சுதனைத் திருவடி தொழுது, அந்த நராதிபன் குகையினின்றும் புறப்பட்டு வெளியில்

வந்து, மிகக் குறுமையாய்த் திரிகிற மனிதரைப் பார்த்துக் கலியுகம் வந்துவிட்டதென்று தெரிந்துகொண்டு, தவஞ்செய்யும்பொருட்டு ஸ்ரீநரநாராயணர்கள் எழுந்தருளி யிருக்கப்பெற்ற கந்தமாதன பருவதத்துக்குச் சென்றான். கண்ணனே சத்துருவை உபாயத்தினாலே கொல்வித்து, மதுரைக்கு எழுந்தருளி, அதை முற்றுகை செய்திருந்த சதுரங்கசேனையைப் பிடித்துக் கொண்டுபோய்த் துவாரகையில் உக்கிரசேன மகாராஜனுக்குக் கொடுத்தருளினார். அதனாலே அந்த யதுவம்சமானது சத்துரு பயமற்றதாய் விளங்கிற்று.

பிறகு பலராமனும் சண்டைகள் ஓய்ந்தபடியினாலே பூர்வ பந்துக்களைப் பார்க்கத் திருவுள்ளமாகி நந்தருடைய கோகுலத்துக்கு எழுந்தருளி கோபாலரையும் கோபிகைகளையும் முன்போலவே மரியாதையாக க்ஷேமம் வினவி, மூத்தவர்களாலே ஆலிங்கனஞ் செய்யப்பட்டு, இளையவர்களை ஆலிங்கனஞ்செய்துகொண்டு, சமமானவர்களோடு சிரித்து விளையாடினார். அங்கு அந்த ஹலாயுதரைக் குறித்துக் கோபாலர்கள் அநேகமான பிரிய வார்த்தைகளைச் சொன்னார்கள். கோபஸ்திரீகளிலே சிலர் அன்பினாற் கோபமுள்ளவர்களாகவும், மற்றுஞ் சிலர் பொறுமையுள்ளவர்களாகவும், பலராமனை நோக்கிப் பேசினார்கள். கண்ணனிடத்தன்புள்ள கோபிகைகள் நாகரிகப்பெண்களிடத்திலன்பு கொண்டவராக அவரை நினைத்துச் சில வினவினார்கள்.

"ஸ்திரமில்லாததும் அற்பமுமான பிரேமையுள்ள கிருஷ்ணன் சுகமாயிருக்கிறானா? ஒரு நிமிஷமாத்திரமே நேசமுள்ள அவன் அந்த நாகரிக ஸ்திரீகளிடத்திலே எங்கள்காரியங்களைப் பரிகாசஞ் செய்துகொண்டு அவர்களுடைய அழகு சொகுசு முதலானவைகளைக் கொண்டாடாம லிருக்கிறானா? அந்தக் கிருஷ்ணன் நாங்கள் தன்பாட்டோடொத்து மதுரமாய்ப் பாடினதை நினைக்கிறானா? அவன் தன் தாயாரைப் பார்க்கவாகிலும் ஒருதரம் இங்கு வருவானா? கிடக்கட்டும். அவன் பேச்சேதுக்கு? வேறுபேச்சுப் பேசுவோம்.

எவனுக்கு நாமில்லாமற் பொழுது சுகமாய்ப் போகிறதோ, அப்படிப்பட்டவன் பேச்சை விட்டுவிடுங்கள். நமக்கு எவனில்லாமல் பொழுது கஷ்டமாய்ப் போகிறதோ, எவன் தந்தைதாய் உடன்பிறந்தவர் மற்றுமுள்ள பந்துக்கள் யாவரையும் விட்டுப்போனானோ, அப்படிப்பட்டவனுக்காக நாமேன் தபிக்கவேண்டும்? அவன் நன்றியில்லாதவர்க்குட் சிறந்தவன். ஓ ராமா! ஆனாலும் அக்கிருஷ்ணன் இங்கே வருகிறதைப்பற்றின பேச்சு எதுவாகிலும் சொல்லுகிறானா? நீபோய்சொல்லாதே, மெய்யா யுண்டானாற் சொல்லு. தாமோதரனென்றுங் கோவிந்தனென்றுஞ் சொல்லப்பட்ட அவன் பட்டணத்து மாதரிடத்திலே மனம்பற்றினவனாய் நம்மிடத்திலே சிறிதும் அன்பில்லாதவனாயிருக்கிறவன் காணவுங் கூடாதவனென்று எங்களுக்குத் தோன்றுகின்றது" என்றிப்படி அந்த ஆய்ச்சியர் அன்போடும் வெறுப்போடும் ஆசையோடும் சோகத்தோடும் சித்த சமாதானத்தோடும் பலதேவனை நோக்கியும் ஒருவரோடொருவரும் பேசி, ஸ்ரீகிருஷ்ண ஸ்மரண பரவசராய் மூத்த நம்பியையே "தாமோதர, கோவிந்த" என்று அழைத்து, உடனே அது தங்களுக்கு மோகத்தினால் வந்த காரிய மென்பதை யறிந்து, உரத்ததொனியுடன் நகைத்தார்கள். அப்போது ஸ்ரீ சங்கர்ஷண பகவான், நல்வார்த்தையாலே மதுரமாயும் அன்பையுட்கொண்டதாயும்வணக்கமுள்ளதாயும் மனமுருகத்தக்கதாயும் கண்ணன் சொல்லி யனுப்பின வார்த்தைகளைச் சொல்லி, அந்தக் கோபிகைகளைச் சமாதானப்படுத்தியருளினார். பின்பு அவர் அந்தத் திருவாய்ப்பாடியைச் சேர்ந்த விடங்களிலே அந்தக் கோபாலரோடு கூட முன்போலவே பரிகாச வின்பமுள்ள பேச்சுகளைப் பேசிக்கொண்டு வெகு சந்தோஷமாய் இரமித்துக் கொண்டிருந்தார்.

இருபத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# பலபத்திரர் வாருணியை யடைந்ததும் யமுனையை யிழுத்ததும்

இப்படியாக மனுஷ்யவேடம் பூண்டு காரியவசத்தினாலே பூமியி லெழுந்தருளிப் பெரியகாரியங்களை நிறைவேற்றி இடையரோடு வனத்திலே விளையாடிக்கொண்டிருந்த சாக்ஷாத் ஆதிசேஷனுக்குத் திருவுள்ள முகப்பதற்காக வருணன் வாருணிதேவியை யழைத்து, "ஓ மதிராதேவி! நீ மகானுபாவனான திருவனந்தாழ்வானுக்கு மகா பிரியமானவளாகையால் அவருடைய போகத்துக்காக அவர் எழுந்தருளி யிருக்குமிடத்துக்குச் சந்தோஷமாய்ப் போகவேண்டும்" என்று நியமிக்க, அந்த வாருணிதேவி அவர் விளையாடிக்கொண்டிருந்த பிருந்தாவனத்தில் ஒரு கடப்பமரத்தின் பொந்தில் சான்னித்தியஞ் செய்தாள். அப்போது ஹாலயுதர் அவ்வனத்தில் உலாவிக்கொண்டிருக்கையில் மதிரையின் வாசனை வீசக்கண்டு, அதனிடத்திலே மிகுந்த விருப்பத்தை யுடையவராய் அத்திசையை நோக்கிச் சென்று, அங்கே கடப்பமரத்தினின்றுந் தாரையாய் ஒழுகிக்கொண்டிருந்த மதிரையைக் கண்டு, அதிக வுவப்புள்ளவராய் அதனை வேண்டுமளவும் பானஞ் செய்து, தம்மோடிருக்கிற கோபகோபிகைகளுக்குங் கொடுத்து, கீதவாத்தியத்தில் வல்லவர்களான அவர்களாலே வெகு வேடிக்கையாய்ப் பாடப்பெற்று, பெருமிதம் பொருந்தி எழுந்தருளி யிருந்தார்.

இவ்விதமாக மதித்து வியர்வைநீர் முத்துமுத்தா யரும்ப எழுந்தருளியிருந்த அப்பலராமர் பக்கத்தில் ஓடுகின்ற யமுனாநதியை நோக்கி, "ஓ யமுனா! நீ இங்கேவா, நான் நீராடவேண்டும் என்று தழதழத்து அருளிச்செய்தார். அவ் யமுனையோ அவர் மதுபான மதத்தினால் இப்படிச் சொல்லுகிறாரென்று அவர் வார்த்தையை அவமதித்து அங்கே வரவில்லை. அது திருமணம் புரிந்து அவளிடத்திலே நிசிதனென்றும்

கண்டு இலாங்கலயானவர் வெகுண்டவராய்த் தமது ஆயுதமான ஹலத்தைக் கையிலெடுத்து அதன் நுனியாலே அந்நதியை இழுத்து, "ஓ துஷ்டநதியே! நான் கூப்பிட வராமலிருந்தாய். இப்போது சத்தியிருந்தால் உனக்கு இஷ்டமான விடத்திற்குப் போ" என்று சொன்னார். இப்படி இழுக்கப்படவே அந்நதி தான்போகும் வழியைவிட்டு அவர் எழுந்தருளியிருக்கும் வனத்தில் வந்து பெருகிற்று. அன்றியும் அவ் யமுனை தன்னுடைய சரீரத்தோடு அவர்க்கெதிரில் வந்து பயத்தினாலே கண்கள் தழதழக்கப் பார்த்துக்கொண்டு "ஓ ஹலாயுதனே! என்னிடத்தில் அனுக்கிரகம் வைத்து என்னை விட்டுவிடவேண்டும் சுவாமி" என்று வேண்டிக்கொண்டாள். அதுகேட்டு அந்த நீலாம்பரர், "ஓ யமுனா! என்னுடைய சௌரியத்தையும் பலத்தையும் நீ அவமதிப்பையேயானால் நான் உன்னை இந்தக் கலப்பையினாலே ஆயிரந் துண்டமாக்கி விடுவேன்" என்று சொல்லக்கேட்டு, அந்நதி மிகவும் நடுநடுங்கிப்போய் விசேஷமாய் வேண்டிக்கொள்ளவே அந்த வன பூமியெல்லாம் நனைந்தபின்னே அந்த மகா நதியை விட்டுவிட்டார். பின்பு தாமிருக்குமிடத்துக்கு வந்த யமுனாநதியிலே திருமஞ்சனங் கண்டருளின அந்த மகாத்துமாவுக்கு விலக்ஷணமான ஒரு காந்தியுண்டாயிற்று. பின்பு அவருக்குத் திருமுடியில் தரிக்கத் தக்க தாமரைப் பூவும் நேர்த்தியான ஒரு குண்டலமும் வருணனால் சமர்ப்பிக்கப்பட்ட ஒருதாமரை மாலையுங் கடல்போலே நீலமான இரண்டு திருப்பரிவட்டங்களுங் கொண்டுவந்து ஸ்ரீ மகாலக்ஷ்மி சமர்ப்பித்தாள். அவர் அவற்றைத் திருவுளம்பற்றி அத்தாமரைமலரைத் திருமுடியிலும், குண்டலத்தைத் திருச்செவியிலும், திருமாலையைத் திருமார்பிலும், திருப்பரிவட்டங்களை இடையிலுந் தோளிலும் சாத்திக்கொண்டு, வெகு காந்தியுள்ளவராய் அந்த இடைச்சேரியிலே கிரீடித்துக்கொண்டிருந்தார். பின்பு இரண்டு மாதத்திற்குப்பிறகு பலதேவர் துவாரகைக்கு எழுந்தருளி இரைவத மகாராஜனுடைய புத்திரியான இரேவதி யென்பவளைத்

உல்முகனென்றும் பெயருடைய இரண்டு குமாரரைப் பெற்றருளினார்.

இருபத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்தாறும் அத்தியாயம்

# ஸ்ரீ ருக்குமணிப் பிராட்டியார் திருக்கலியாணம்

விதர்ப்பதேசத்திலே குண்டினபுரியிலே பீஷ்மகனென்றொரு மகாராஜன் இருந்தான். அவனுக்கு உருக்குமி என்ற மகனொருவனும் உருக்குமணியென்ற மகளொருத்தியும் இருந்தார்கள். சிறந்த ரூபலாவண்யங்களுள்ள அந்தப் பெண்ணரசைக் கண்ணன் திருக்கலியாணஞ்செய்யத் திருவுள்ளமா யிருந்தார். அவளும் சுவாமியினிடத்தில் மிகுந்த காதலா யிருந்தாள். உருக்குமியோ சுவாமி கன்னிகையைக் கொடுக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டும், துவேஷத்தினால் அந்தப் பெண்ணை அவருக்குக் கொடாமல் ஜராசந்தனுடைய ஏவுதலினாலேசிசுபாலனுக்குக் கொடுக்கும்படித் தன் பிதாவைக்கொண்டு வாக்குத்தத்தஞ் செய்வித்தான். இப்படியாக நிச்சயித்து விவாகஞ்செய்ய ஆரம்பித்தபோது, அவ் விவாகத்துக்காகச் சிசுபாலனுக்கு அன்பராயிருந்த ஜராசந்தன் முதலான இராஜாக்கள் குண்டின பட்டணத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அப்படியே ஸ்ரீ கிருஷ்ணனும் யாதவ சைனியத்தோடு அப் பட்டணத்திற்கு எழுந்தருளினார். எழுந்தருளின கண்ணன் நாளைக்குக் கலியாணமென்றிருக்கையில், சத்துருக்களோடு சண்டைசெய்து ஜயிக்கவேண்டிய பாரத்தைப் பலராமர் முதலானாரிடத்திலே வைத்து, அந்தப் பெண்மணியைப் பலாத்காரத்தினாலே தூக்கிக் கொண்டுபோனார். போகவே பௌரண்டகன் விடூரதன் தந்தவக்கிரன் ஜராசந்தன் சாளுவன் சிசுபாலன் முதலான ராஜாக்கள் மிகவுங் கோபமூண்டவர்களாய் எதிர்த்துவந்து, கிருஷ்ணனைச் சங்கரிக்க

வெகு முயற்சியோடு யுத்தஞ்செய்து கடைசியில் பல தேவர் முதலான யாதவ புங்கவர்களாலே தோற்கடிக்கப்பட்டார்கள். அதனாலே யாவருந் திரும்பித் தங்கள் நாட்டுக்குச்செல்ல, உருக்குமி யொருவனுமே "நான் கிருஷ்ணனைக் கொல்லாமல் குண்டினபட்டணத்திற் பிரவேசிப்பதில்லை" என்று பிரதிக்கினை செய்து, அவரைப் பின்றொடர்ந்துபோனான். போய் வழியில் மடக்கிப் போர்செய்ய, சுவாமி யொருவரே விளையாட்டிலேயே அவனுடைய சதுரங்க சேனையை நாசஞ்செய்து, முடிவில் அவனையுந் தலையெடுக்கவொட்டாமலடித்து உயிரோடு தரையில் வீழ்த்தினார்.

இப்படியாக ஸ்ரீமதுசூதனன் உருக்குமியைவென்று அந்த ருக்மணிப் பிராட்டியை இராக்ஷச விவாஹ முறையால் விவாகஞ்செய்தருளினார். அவள் திருவுதரத்திலே மன்மதாம்சமாய் மகா வீரியவானான பிரத்தியும்நன் உதித்தான். அவனைப் பூர்வஜன்ம விரோதத்தினால் சம்பராசுரன் கொண்டுபோக அந்தச் சம்பராசுரனை அந்தப் பிரத்தியும்நன் சங்கரித்தான்.

இருபத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்தேழாம் அத்தியாயம்

## சம்பராசுரவதம்

இப்படிச் சொல்லிவந்த பராசரமுனிவரை மயித்திரேயர் வினவுகிறார். "சுவாமி பிரத்தியும்நனைச் சம்பராசுரன் தூக்கிக் கொண்டுபோன விதமென்ன? அப்படித் தன்னைத் தூக்கிக்கொண்டுபோன பராக்கிரமசாலியான சம்பரனைப் பிரத்தியும்நன் சங்கரித்த தெப்படி? இதை நன்றாயறிய விரும்புகிறேன். ஆகையால் அருளிச்செய்யவேண்டும்" என்று கேட்ட மயித்திரேயருக்கு ஸ்ரீ பராசரமகாரிஷி அருளிச்செய்ய லாயினார்.

ஓ முனிவரே! கேளும், பிரத்தியும்நன் பிறந்த ஆறு நாளிலே கறுப்பான கொடிய சம்பரன், "இவன் நம்மைக்கொல்லுகிறவன்" என்று நினைத்து

அவனைக் கருவுயிர்ந்த அறையிலிருந்தே கொண்டு போய்விட்டான். கொண்டுபோய் முதலைகளினாலே பயங்கரமாயும் மகரங்களுக்கு இருப்பிடமாயும், அலைகளினாலே கழித்துக்கொண்டுமிருக்கின்ற இலவணசமுத்திரத்திலே எறிந்துவுட்டான். இப்படி எறிந்துவிட்ட அக்குழந்தையை ஒருமீன் விழுங்கிற்று. அந்தக் குழந்தையோ அம்மீனின் வயிற்று நெருப்பினாலெரிக்கப்பட்டாலும் பகவானுடைய வீரியத்தினாலுண்டானதாகையால் மரணமடையாமலிருந்தது. இப்படியிருக்கச் செம்படவர் அனேக மீன்களோடு அந்த மீனையும் பிடித்து அசுரராசனான சம்பரனுக்குக் கொண்டுவந்து கொடுத்தார்கள். அந்த அசுரனுக்குப் பேரினாலே மாத்திரம் பத்தினியாயிருந்த மாயாவதியென்பவள் சமையற்காரருக்கெல்லாம் அதிபதியாக நியமிக்கப்பட்டிருந்தவள், அந்த மீன்களையெல்லாஞ் சேதிக்குமளவில் ஒரு மீன் வயிற்றில் இக்குழந்தையிருக்கக்கண்டாள். கண்டு "இக்குழந்தை எரிந்துபோன மன்மதனாகிய மரத்தினுடைய முதல்முளைபோலே வெகு சுந்தரமாயிருக்கின்றதே? இதுயார்? எப்படி மீன்வயிற்றில் வந்தது?" என்று சிந்தித்துக்கொண்டிருந்த மாயாவதியினிடத்திற்கு நாரதமுனிவர் வந்து "பெண்ணே! இக்குழந்தையைக் குறித்து ஆலோசியாதே, இவன் ஜகத்தினுடைய சிருஷ்டிஸ்திதி சம்ஹாரங்களை நடத்துகின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய குமாரன், இவனைச் சம்பரன் பிள்ளைபெற்ற அறையிலிருந்து திருடிக் கொண்டுபோய்ச் சமுத்திரத்திலே எறிந்துவிட்டான், அங்கே மீன் விழுங்கிவிட்டது, அதனால் உன்னிடம் வந்து சேர்ந்தான். இந்தப் புருஷ ரத்தினத்தை நீ அஞ்சாமற் பரிபாலனஞ் செய்துவா" என்று சொல்லியதைக்கேட்டு, அந்தப் பெண்கள் நாயகம் அவனை மிகவும் அன்போடு போஷித்துவந்ததுமல்லாமல், அவனுடைய சௌந்தரியாதிசயத்தினாலே இளமையிலிருந்தே அவன்மேல் மோகங்கொண்டுமிருந்தாள். அவன் எப்போது யவ்வனவிலாசங்களினாலே அலங்காரம் பொருந்தினவனானானோ அப்போது, அந்தச்சுந்தரி அவன்மேல் ஆசை

யுற்று, அவனுக்குச் சகலவிதமான மாயாவித்தைகளைத் தந்து, மனமுங்கண்ணும் அவனைவிட்டுப் பிரியாதவளா யிருந்தாள். இவ்விதமாக அந்தக் கமலாக்ஷி தன்மேல் காமமுற்றிருப்பதை யறிந்து, கண்ணன் திருமகன் அவளை நோக்கி “ நீ எனக்குத் தாயாயிருக்க அதனைவிட்டு வேறுபாவனை என்னிடத்துச் செய்வதென்ன ” என்று வினவினான். அதற்கு அவள், “கேள் புருஷரத்தினமே! நீஎன்மகனல்லை. ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய மகன்; உன்னை சம்பரன் திருடிக் கொண்டுபோய்க் கடலிற்போட, அங்கொரு மீன் உன்னை விழுங்கிற்று. அந்த மச்சியம் இங்கே உணவாக வந்தபோது அதின் வயிற்றிலிருந்து உன்னை எடுத்துப் போஷித்து வந்தேன், உன்தாய் உன்னைக் குறித்து அதிக வாச்சலியத்தோடு இன்னும் அழுது கொண்டிருக்கிறாள்; இது உன் விருத்தாந்தம் ” என்று சொன்னதைக்கேட்டு, அந்தப் பிரத்தியும்நன் கோவத்தினால் மனக்கலக்கமுற்றுச் சம்பரனைச் சண்டைக்கு அழைத்தான். அழைக்கவே அவன் சகல சேனைகளோடு சண்டைக்குவர, அவனோடு போரிட்டு, அவன் சேனைகளையழித்து. பின்பு சம்பரன் பிரயோகித்த ஏழு மாயைகளையுங் கடந்து எட்டா மாயையை அவன் மேல் பிரயோகித்து, அதனாலே காலசம்பரனைச் சங்கரித்து விட்டான். பின்பு அவளோடுகூட அங்கிருந்து எழும்பித் தன்தந்தையின் பட்டணத்துக்கு வந்து அந்தப்புரத்திலே குதித்தான்.

இவ்வண்ணம் மாயாவதியோடுகூட அந்தப்புரத்திற் குதித்த அவனைப்பார்த்து, அங்கிருந்த தேவிமாரெல்லாம் வடிவொத் திருப்பதனாலே ஸ்ரீகிருஷ்ணனென்ற நினைப்புள்ளவர்களா யிருந்தார்கள். அப்போது உருக்குமணிப் பிராட்டி அவனைப்பார்த்து அன்புகூர்ந்து, கண்களில் நீர்ததும்ப “ எந்தப் புண்ணியவதியின் புத்திரனோ இவன்? நவமான யவ்வனம் பொருந்தி விளங்குகிறானே? * என்குமாரனான பிரத்தியும்நன் பிழைத்திருப்பானாகில் இந்த வயதைப் பொருந்தி யிருப்பானன்றோ ” என்று நினைத்து,

* ஸ்ரீ ருக்குமணிப்பிராட்டி தன் புத்திரனுக்குப் பிரத்தியும்நன் என்று பெயரிட்டுக் கருதி யிருந்ததினால் பிரத்தியும்நன் என்று அருளிச்செய்தாள்.

அவனைப் பார்த்து "குழந்தாய்! எந்தப் பாக்கியவதி உனக்குத் தாயென்று சொல்லப்பட்டு விளங்குகிறாள்? குழந்தாய்! எனக்கு உன்னிடத்தி லுண்டாகிற பிரேமையையும் உன் தேகமிருக்கும் அழகையும் பார்த்தால் நீ ஸ்ரீ கிருஷ்ண சுவாமியினுடைய குமாரனா யிருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது" என்றிப்படி பேசிக் கொண்டேயிருக்கையில், நாரதமுனிவர் கண்ணனையும் அழைத்துக்கொண்டு அங்கே எழுந்தருளி, ருக்குமணித் தாயாரைப் பார்த்து அவளுக்கு மிகுந்த ஆனந்தமுண்டாகும்படிச் சொன்னதாவது "ஓ பெண்ணரசே! இவன் உன் குமாரன், சூதிகாகிருகத்திலிருந்து இவனைச் சம்பரன் கொண்டுபோய்விட்டான். இப்போது இவன் அந்தச் சத்துருவைச் சங்கரித்து இங்கு வந்து சேர்ந்தான். இவள் மாயாவதி. இவனுடைய பாரியை சம்பரனுடைய பாரியை அல்லள். இதன் காரணஞ் சொல்லுகிறேன் கேள்: மன்மதன் அழிந்துபோனபோது அவனுடைய பத்தினியான இந்த ரதிதேவி மகாபதிவிரதை யாகையாலே மறுபடி அவன் ஜனனத்தை எதிர்பார்த்துக்கொண்டு அதுவரையில் காலந்தள்ளும் பொருட்டுச் சம்பரனை மயக்குந்திறனுள்ள கண்களையுடையவளான இந்த மங்கை பலவகைப்பட்ட போகங்களிலே மாயாமயமான ரூபங்களைக் காட்டித் தான் அருகிற் போகாமலே அவனை மயக்கிக்கொண்டும், மாயா ரூபத்தினாலே பத்தினிபாவனையாய் மோகிப்பித்துக் கொண்டும் இருந்தாள். அந்த மன்மதன் உனக்குப் புத்திரனா யவதரித்தான். அவனுடைய பத்தினியான ரதிதேவி யிவள் சந்தேகப்படவேண்டாம். இவன் உன் புத்திரன், இவள் உன்மருமகள்" என்று தேவரிஷி யருளிச் செய்யக்கேட்டுப் பெருமாளும் பிராட்டியும் மற்றுமுள்ள தேவிமாரும் மிகுந்த ஆனந்தமடைந்தார்கள். அந்தப் பட்டண முழுவதுமே இந்தச் செய்தியைக் கேட்டு "நன்று நன்று" என்று சொல்லி வெகு நாளுக்கு முன்னே காணமற்போன புத்திரனை மறுபடி யடைந்த ருக்குமணித் தாயாரைக்கண்டு ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் அடைந்தது.

இருபத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# ருக்குமிவதம்

ஸ்ரீ ருக்குமணிப் பிராட்டிக்குப் பிரத்தியும்நனுக்குப் பிறகு சாருதேஷ்ணன், சுதேஷ்ணன், சாருதேகன், சுதேணன், சாருகுப்தன், பத்திரசாரு, சாருவிந்தன், சுசாரு, சாரு என்கிற குமாரரும் சாருமதியென்ற குமாரியும் உதித்தார்கள். அந்தக் கண்ணனுக்கு உருக்குமணி தவிர மித்திரவிந்தை, சத்தியை, ஜாம்பவதி, உரோகிணி, சுசீலை, சத்தியபாமை, இலக்ஷ்மணை என்கிற ஏழுதேவிமாரிருந்தார்கள். இவர்களுள் மித்திரவிந்தை களிந்தனென்பவனுடைய மகள். ஆதலால் அவளுக்குக் காளிந்தியென்றுந் திருநாமம். சத்தியை நக்நஜித்தென்பவனுடைய மகள். ஜாம்பவதி ஜாம்பவானுடைய மகள். சுசீலை மத்திரராசன் மகள். சத்தியபாமை சத்திராஜித்தின் மகள். உரோகிணியென்பவள் இஷ்டமான ரூபமெடுக்க வல்லவள். சுசீலை அவள் திருநாமத்தின்படி யாவரிலுஞ் சிறந்த சீலமுள்ளவள். இலக்ஷ்மணை சிரிப்பிற் சிறந்த அழகுள்ளவள். அதனால் அவளுக்குச் சாருஹாஸினி என்கிற திருநாமமுமுண்டு. இவ்வெண்மர் தேவிமாருந் தவிர சுவாமிக்குப் பதினாறாயிரந் தேவிமார் வேறுமுண்டு.

மகாவீரியனான பிரத்தியும்நன், சுயம்வரத்திலே தன்மேல் காதலுற்றிருந்த உருக்குமியின் மகளைக் கலியாணஞ் செய்திருந்தான். அவள் கருப்பத்திலே மகா பராக்கிரமசாலியாயும், அளவற்ற வீரியமுடையவனாயும், யுத்தத்தில் யாவராலுந் தடைசெய்யக்கூடாதவனாயும், சத்துருக்களை யடக்குஞ் சாமர்த்தியமுடையவனாயுமுள்ள அநிருத்தனென்பவன் அவதரித்தான். அவனுக்கு விவாகநிமித்தமாய்ச் சுவாமி தன் மைத்துனனான உருக்குமியின் பேர்த்தியை வரித்தார். ருக்குமியும் கண்ணனிடத்துப் பகைபாராட்டி வந்தாலும் அவர்கேட்டபடி அவர் பேரனுக்குத் தன் பேர்த்தியைக் கன்னிகாதானஞ் செய்தான், கேளும் பிராம

மணரே! அந்தக் கலியாணத்திற்குப் பலபத்திரர் முதலான யாதவர்களும் மற்றும் பல ராஜாக்களும் போஜகடமென்கிற ருக்குமியின் பட்டணத்துக்குப் போனார்கள். அங்கே அநிருத்தனுக்கு விவாகம் நிறைவேறின பிறகு களிங்கராஜன் முதலானவர்கள் உருக்குமியை நோக்கி, "ஓ ருக்குமி! கேள். பலராமனுக்குச் சொக்கட்டானாட்டந் தெரியாது. ஆனாலும் அதன்மேல் அவனுக்கு மிகுந்த விருப்பமுண்டு. ஆதலால் அந்த மகா பலவானான பலபத்திரனைச் சூதினாலே ஜயிப்போம். அதற்கு எத்தனஞ்செய்" என்று சொன்னதற்கு ருக்குமியும் "அப்படியே யாகட்டும்" என்று ஒத்துக்கொண்டு, சபையிலே பலதேவரோடு சொக்கட்டானாட ஆரம்பித்தான். அதில் முதலாட்டத்தில் பலராமர் பந்தயம்வைத்த ஆயிரம் வராகனையும் உருக்குமி செயித்தான். அப்படியே இரண்டாந்தரமும் ஆயிரம் வராகனையும் அவனே கெலித்துவிட்டான். பின்பு பலராமர் பதினாயிரம் வராகன் பந்தயம் வைக்க அதையும் சூதில் வல்லவனான பீஷ்மகுமாரனே கெலித்துக்கொண்டான். இப்படி மூன்றாட்டத்திலும் பலபத்திரர் தோற்கக் கண்டு களிங்காதிபதி பற்கள் நன்றாய்த் தெரியும்படி உரக்கச் சிரித்தான். உருக்குமியும் மதத்தினால் யுக்தாயுக்தந் தெரியாமற் சொன்னதாவது, "ஐயோ பாவம்! பலராமன் சூதாட்டந் தெரியாதவன். வீணாய் என்னோடு ஆடவந்து வெகுதிரவியந் தோற்று அவமானப்பட்டான். ஆனால் இவன் ஒரு அக்கிரமஞ் செய்திருக்கிறான்: அஃதாவது சூது தெரியாதவன் அந்த வித்தையில் வல்லவர்களையெல்லாம் அவமானமாய்ப் பேசினானே அதுதான்" என்று துர்வாக்கியஞ் சொன்னான். அந்த விதர்ப்பராஜனையும் பற்களைக்காட்டிச் சிரித்த களிங்கராஜனையும் பற்றிக் கண்ணனுடைய தமையனார் மிகுந்த கோபமுடையவராகி, "நல்லதாகட்டும் இந்தத் தடவை ஆடுவோம்வா" என்று கோடிவராகனைப் பந்தயமாக வைத்தார். உருக்குமியும் ஒன்றும் பேசாமல் அதற்காகப் பாசிகைகளை யுருட்டி யாடினான். அந்த ஆட்டத்தில் மூத்தநம்பி கெலித்தார். அதனாலே "நான் கெலித்தேன்" என்று கோஷித்துச் சொன்னார். உருக்கு

மியும், "ஓ பலனே! அந்தமட்டும் நீ பொய் சொன்னதுபோதும், கெலித்தவன் நானல்லவோ? எப்படியென்றால், நீ கோடிவராகன் பந்தயமென்று சொன்னதுண்டேயல்லது நான் அதனை ஒத்துக்கொண்டவனல்ல. இப்படியிருக்க நீ ஜயித்ததாகச் சொல்லுவையேயானால் நானேன் ஜயித்தவனாகமாட்டேன்" என்று கோஷித்துச் சொன்னான். இப்படியிருக்க ஆகாயத்தில் ஒருவாக்கு மிகக் கெம்பீரமான நாதத்தோடு பலராமருக்குக் கோபம் வளரும்படிச் சொல்லிற்று. அஃதாவது, "பலராமர் தருமமாய்க் கெலித்தார், உருக்குமியோ பொய் சொன்னான், ஒரு விஷயம் வாயினாற் சொல்லாமற்போனாலும் காரியத்தை நடத்தினால் அதை யொத்துக்கொண்டதே யாகின்றது" என்றிப்படி அசரீரி வாக்கு சொன்னதைக்கேட்டு ஹலாயுதர் கோபத்தினாற் கண்களெல்லாஞ் சிவந்து எழுந்து அச்சூதாடும் பலகையை யெடுத்து உருக்குமியை அடித்துத் தள்ளி, அதனாலேயே நடுங்கி நிற்கிற களிங்கராசனாகிய தந்தவக்கிரனுடைய சிரிப்புடன் வெளிப்பட்ட பற்களையெல்லாம் உதிர்த்து, அங்கிருந்த ஒரு விசித்திர ஸ்தம்பத்தைப் பிடுங்கி யெடுத்துக்கொண்டு மிகுந்த கோபத்தோடு உருக்குமியின் பக்ஷத்திலிருந்த இராஜாக்கள் யாவரையு முறித்தெறிந்தார்.

ஓ மயித்திரேயரே! இவ்வாறு இலாங்கலியானவர் உக்கிரமான கோபம்பொருந்தி நடக்கக்கண்டு, அங்கிருந்த இராசமண்டலத்தில் தப்பினவரெல்லாம், ஹாஹாகாரத்தோடு வாயுவேக மனோவேகமாய் ஓடிப் பறந்தார்கள். இப்படி நடந்தபோது பார்த்திருந்த இளையநம்பி ருக்குமி வதத்தைக் குறித்து மூத்தவரை வெறுத்தால் அவருக்குத் திருவுள்ளஞ் சீறுமென்றும் அது நன்றென்று ஆமோதித்தால் தேவியாருக்குத் திருவுள்ளஞ் சீறுமென்றும் நினைத்து, யாதொன்று மருளிச்செய்யாமற் சும்மா இருந்துவிட்டார். பின்பு விவாகமான தன் பேரனையும் மற்றும் வந்திருந்த யாதவரையும் அழைத்துக்கொண்டு பகவான் ஸ்ரீ துவாரகாபுரிக்கு எழுந்தருளினார்.

இருபத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

## இருபத்தோன்பதாம் அத்தியாயம்

# நரகாசுரவதம்

மயித்திரேயரே! கேளும். ஸ்ரீ கிருஷ்ணபகவான் சுகமாய்த் துவாரகையில் எழுந்தருளியிருக்கும்போது, மூவுலகங்களுக்கு மதிபதியான தேவராஜன் ஐராவதத்தின்மேல் ஏறிக்கொண்டு துவாரகைக்கு வந்தான். வந்து சுவாமி சந்நிதிக்குச் சென்று பணிந்து நரகாசுரனுடைய சரித்திரத்தை விண்ணப்பஞ் செய்யலாயினன். "மதுசூதனனே! நீ மனுஷ்யாவதாரஞ் செய்திருந்தாலும் நாதனான உன்னாலே தேவதைகளுடைய சகல துக்கங்களும் போக்கடிக்கப்பட்டன. தவசிகளுக்குத் துன்பஞ்செய்ய ஏற்பட்ட அரிஷ்டன் தேனுகன் கேசி முதலான துஷ்டர்களைச் சங்கரித்தருளினாய். உலகத்தைப் பீடித்துவந்த கம்ஸன் குவலயாபீடம் பூதனை முதலானவர்களையும் நாசஞ் செய்தருளினாய். இப்படியாக உன் திருத்தோள் வலிமையினாலே மூன்றுலங்களும் பாதுகாக்கப்படவே, தேவர்கள் யாகங்களிலே தங்களுக்குரிய பாகங்களைப்பெற்றுத் திருப்தியடைந்திருக்கிறார்கள். இப்படிச் சர்வ ரக்ஷகனான உன் சந்நிதிக்கு அடியேன் இப்போது எந்தக் காரியத்துக்காக வந்தேனோ அதைக் கேட்டு அதற்குச் செய்யவேண்டியதைச் செய்தருள வேண்டும். அஃதென்ன வெனின், ஓ சத்துரு நாசகனே! பிராக்குச்சோதிஷமென்னும் பட்டணத்திலே பூமியின் புத்திரனான நரகாசுரன் இருந்துகொண்டு சகல பிராணிகளுக்கும் உபத்திரவஞ் செய்துகொண்டிருக்கிறான். தேவர் சித்தர் கந்தருவர் முதலானவர்களுடைய கன்னிகைகளையும் இராஜாக்களுடைய கன்னிகைகளையும் வலுவில் அபகரித்துக் கொண்டுபோய்த் தன் மாளிகையிற் சிறை வைத்திருக்கிறான். எப்பொழுதுந் தண்ணீர் பொழிவதான வருணனுடைய குடையைப் பிடுங்கிக் கொண்டு போனான். மந்தரபர்வதத்தினுடைய சிகரமான இரத்தினபர்வதத்தையுங் கொண்டுபோய் விட்டான். ஓ கிருஷ்ணபகவானே! இன்னுங்கேள். என் தாயான அதிதியினுடைய அமுதமொழுகிக் கொண்டிருக்கும்படி

யான குண்டலங்களையுங் கவர்ந்துகொண்டு போனான். இவ்வளவோடே நில்லாமல் என்னுடைய ஐராவதத்தையும் பிடுங்கிக்கொள்ளப் பார்க்கிறான். இப்படியாக அந்த நரகாசுரனுடைய அநியாய நடக்கைகளை உன் சந்நிதியில் விண்ணப்பம் பண்ணிவிட்டேன். இனி இதற்கு எதிர் செய்யவேண்டுவதை நீயே ஆலோசிக்கக் கடவாய்" என்று இந்திரன் சொல்லக் கேட்டுத் தேவகிசுதனான பகவான் * புன்சிரிப்புக்கொண்டு இந்திரனைக் கையிற் பிடித்துக்கொண்டு சிம்மாசனத்தினின்றுமெழுந்தார். எழுந்திருந்து இந்திரனுக்கு விடைகொடுத்தனுப்பிக் கருடனை நினைத்தருளி உடனேவந்த அந்தப் பெரிய திருவடியின்மேல் † சத்தியபாமையை உட்காருவித்துத் தாமுமுட்கார்ந்து பிராக்குச்சோதிஷபுரத்துக்கு எழுந்தருளினார். இந்திரனும் ஐராவதத்தின்மேலேறித் தேவலோகத்துக்குச் சென்றான்.

கண்ணனும் துவாரகையில் இருப்பவர்களெல்லாம் பார்த்துக்கொண்டேயிருக்கக் கருடன்மேலேறி ஆகாயமார்க்கமாய் எழுந்தருளினார். நரகாசுரனுடைய மந்திரியான முரனென்பவனாலே அந்தப் பிராக்குச்சோதிஷ புரத்தைச்சுற்றி நூறுகாதமளவும் சிறு கத்திகள் நுனியிலிருக்கப்பெற்ற பாசங்களைப் பரப்பி அங்கு யாரும் பிரவேசிக்கவொண்ணாதபடி செய்யப்பட்டிருந்தது. அதைக்கண்டு சுவாமி தமது திருவாழியைப் பிரயோகித்து அந்தப் பாசங்களனைத்தையுஞ் சேதித்தருளினார். சேதிக்கவே முரன் எழுந்து தன் பரிவாரத்தோடு யுத்தத்திற்கு வர, அவனையும் அவனுடைய மக்கள் ஏழாயிரம் பேரையும் விளக்குப்

* இப்போது இவ்வளவு வேண்டுகிறவன் உடனே பாரிஜாதத்துக்காக எதிர்க்கப்போகிறானே என்று நகைத்தது.

† உன் அனுக்கிஞையினாலேயே உன் புத்திரனைச் சங்கரிப்பேனென்று பூமிதேவிக்கு முன்பு சுவாமி அருளிச்செய்திருந்ததனாலே பூமிதேவி யம்சமான சத்தியபாமையைக்கூட இட்டுக்கொண்டுபோனார். அன்றியும் ஒருகால் நாரத முனிவர் தேவலோகத்திலிருந்து பாரிஜாதபுஷ்பங் கொண்டுவந்து உருக்குமணிப்பிராட்டிக்குக் கொடுத்ததை யறிந்து சத்தியபாமை மனங்கோணி யிருக்கையில் கண்ணன் உனக்கு அந்த மரத்தையே கொண்டுவந்து கொடுப்பேனென்று வாக்குத்தத்தஞ் செய்திருந்ததனாலும் அப்படி செய்தருளினார்.

படு பூச்சிகளைப்போல சுதரிசனத்தி னரங்களினுடைய அக்கினிச்சுவாலைகளினாலே யெரித்துவிட்டார். இப்படியாக முரன் அயக்கிரீவன் பஞ்சசனன் என்கிற மந்திரிகளை நாசஞ்செய்துவிட்டுத் துரிதமாய்ப் பிராக்குச்சோதிஷ புரத்திற் பிரவேசித்தார். அங்கே அனேக சேனைகளோடு கூட எதிர்த்துவந்து நரகாசுரனுக்கும் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் கடூரமான பெரும்போர் உண்டாயிற்று. அந்தப் போரிலேதான் மிகவுங் கொடியவரான அனேகவாயிர மசுரர்களைச் சுவாமி சங்கரித்தருளினர். தன்படை இராசிராசியாய் மடிந்துபோவதைக் கண்டு மகாபலவானான அந்தப் பௌமன் கண்ணன்மேல் அனேக சஸ்திராஸ்திரங்களை விடத்தலைப்பட்டான். அசுர சமுகத்தை நாசஞ்செய்ய வல்ல சக்கிரபாணியோ அவற்றையெல்லாந் தடுத்துக் கடைசியில் சக்கிராயுதத்தைப் பிரயோகித்துச் சத்துருவை இருதுண்டங்களாக வீழ்த்தியருளினர். இவ்வண்ணமாய் நரகாசுரன் ஹதஞ்செய்யப்பட்டவுடனே பூமிப்பிராட்டி அதிதியின் குண்டலங்களைக் கையிலெடுத்துக்கொண்டு சுவாமி சந்நிதிக்குவந்து தண்டம் சமர்ப்பித்து விண்ணப்பஞ் செய்யத் தொடங்கினள்.

"ஓ நாதனே! எப்போது நீவராகாவதாரஞ்செய்து என்னைக் கோட்டின்மேற் கொண்டாயோ அப்போது உன் பரிசத்தினாலே இந்தக் குமாரன் எனக்கு உண்டானன். ஆதலால் நீயே எனக்குப் புத்திரனைக் கொடுத்தாய். நீயே அவனை நாசஞ்செய்தாய். இதோ குண்டலங்க ளிருக்கின்றன. இவற்றைத் திருவுள்ளம்பற்று. நரகனுடைய சந்ததியைப் பரிபாலனஞ் செய்தருள். ஓ சர்வேசுவரனே! என் பாரத்தை இறக்கும்பொருட்டே நீ என்னிடத்தி லனுக்கிரகமுள்ளவனாய் இந்த லோகத்தில் அவதரித்தருளினாய். நீயே ஜகத்தைச் சிருட்டிப்பவனும் பாலிப்பவனுஞ் சங்கரிப்பவனுமா யிருக்கிறாய். நீயே உற்பத்திஸ்தானமும் லயஸ்தானமுமா யிருக்கிறாய். நீயே சகலலோக சொரூபியாயு மிருக்கிறாய். ஆதலால் உன் கீர்த்தியை எப்படி துதிக்கக்கூடும்? நீ வியாபிக்கப்பட்டதுமாயும், செய்கையுஞ் செய்பவனுஞ் செயப்படு பொருளுமாயு மிருக்கிறாய். ஆதலால் சகல

பூதசரீரகனுன உன் பெருமைகளுள் எதுதான் துதிக்க எளிதாயிருக்கின்றது! மேலும் நீயே பரமாத்துமாவா யும் பூதாத்துமாவாயும் ஆத்துமாவாயும் இருப்பத ஞலே, உன் திறத்தில் எப்படி துதிக்கக்கூடும்? ஓ சர்வாந்தர்யாமியான எம்பெருமானே! அடியேனிடத் திற் பிரசன்னனுகவேண்டும். என் புதல்வனுன நரகன் செய்த பிழைகளையெல்லாம் பொறுக்கவேண்டும். பாவங் களைப் போக்குவதற்கன்றே உன் மகனுயிருந்த நரகனை நீயே சங்கரித்தருளினுய். ஆனதனுல் அதைப்பற்றி நான் சொல்லவேண்டுவது ஒன்றுமில்லை" என்று பூமிப்பிராட்டி பிரார்த்தித்ததைத் திருவுள்ளம்பற்றிச் சசலபூத கர்த்தாவான பகவான் அந்தப் பிராட்டியைக் கடாக்ஷித்து, "அப்படியே யாகட்டும்" என்று அருளிச் செய்து, நரகனுடைய மாளிகையின் அந்தப்புறத்திற் பதினுயிரத்தொருநூறு கன்னிகா ரத்தினங்களையும், அவ னுடைய வாகனசாலை முதலிய விடங்களிலே நான்கு தந்தங்களுள்ள ஆறுயிரஞ் சிறந்த யானைகளையும், இரு பத்தொருலக்ஷம் காம்போஜதேசத்துக் குதிரைகளையும் கண்டு, அவ்வுத்தம வஸ்துக்களை யெல்லாம் நரகனு டைய சேவகரைக்கொண்டே துவாரகையிற் சேர்ப்பித் தார். அன்றியும் வருணனுடைய குடையையும் மணி பருவதத்தையுங் கண்டு அவற்றைப் பெரிய திருவடிமே லேற்றிக்கொண்டு சத்தியபாமையோடு கூடத் தாமுமேறி அதிதிக்கு அக்குண்டலங்களைக் கொடுப்பதற்காகத் தேவ லோகத்துக்கு எழுந்தருளினுர்.

இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## முப்பதாம் அத்தியாயம்

# பாரிஜாதாபஹரணம்

அந்தக் கருத்துமான் வருணன் கொடையையும் மணிபர்வதத்தையும் தேவியாரோடு கூடின கண்ணனை யும் விளையாட்டாகவே சுமந்துகொண்டு சுவர்க்கலோ கத்திற்குச் செல்ல, சுவர்க்கத்தின் வாயிலினிடத்திற்

சென்று இருடீகேசன் திருச்சங்கை ஊதியருளினார். அதுகேட்டு அமரர் யாவரும் அர்க்கியங் கையிலேந்திச் சுவாமி சந்நிதிக்கு எதிர்கொண்டுவந்து, திருவடி தொழுதல் முதலாகச் சகலோபசாரமுஞ் செய்தார்கள். இவ்வாறு தேவர்களினாலே பூசிக்கப்பட்டபின் அந்தக் கருடத்துவசன் வெண்மையான மேகம்போல் விளங்காநின்ற தேவமாதாவின் திருமாளிகையில் எழுந்தருளி, இந்திரனோடுசென்று அதிதியைத் தொழுது, அக்குண்டலங்களையுங் கொடுத்து, நரகாசுரனை வதைத்த சங்கதியையுந் தெரிவித்தான். பின்பு அந்த அதிதியானவள் அதிக சந்தோஷமடைந்தவளாகி உலக கர்த்தாவான கண்ணனை மிகுந்த பக்தியோடு துதிக்க வாரம்பித்தாள்.

'ஓ தாமரைக்கண்ணனே! அடியார்க்கு அபயமளிப்பவனே! நித்தியமான திருமேனி யுள்ளவனே! சர்வத்துக்கும் அந்தர்யாமியாயிருப்பவனே! சகலபூத சரீரகனே! சகலபூத கர்த்தாவே! உனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். மனம் புத்தி இந்திரியம் இவற்றிற்குக் கர்த்தாவானவனே! சமஸ்த கல்யாணகுண பூர்ணனே! முக்குணங்களைக் கடந்தவனே! சீதோஷ்ணாதி பாதையில்லாதவனே! சுத்த சத்துவமயமானவனே! ஞானிகளுடைய இருதயத்தி லிருப்பவனே! வெண்மை முதலான நிறங்களும் நீட்சி முதலான பரிமாணங்களுமாகிய சகலவித கற்பனைகளு மில்லாதவனே! உற்பத்தி முதலிய விகாரங்களால் தீண்டப்படாதவனே! சொப்பன முதலிய அவஸ்தைக ளில்லாதவனே! உனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். ஓ அச்சுதனே! சந்தியை இராத்திரி பகல் பூமி வானம் காற்று தண்ணீர் அனல் மனம் புத்தி பூதாதிகள் இவையெல்லாம் உன் விபூதிகளேயாம். ஓ பெருமானே! லோககர்த்தாக்களான சதுர்முகன் முதலானார்களுக்கு அதிபதியான நீயே பிரமாதி நாமங்களுள்ள உன் திருமேனிகளைக் கொண்டு, சிருட்டி திதி சங்காரங்களைச் செய்தருளுகிறாய். இவ்வளவேயன்று. தேவதைகள் அசுரர் இயக்கர் இராக்கதர் சித்தர் பன்னகர் கூசுமாண்டங்கள் பிசாசங்கள் கந்தருவர் மனிதர் மிருகங்கள் பட்சிகள்

சரீசிரூபங்கள் மரம் செடி பூண்டு கொடி மற்றுமுள்ள திருணசாதிகள் ஸ்தூலங்கள் மத்திமங்கள் சூட்சுமங்கள் சூட்சுமத்துக்குஞ் சூட்சுமங்கள் இப்படிப்பட்ட தேகங்கள் எவையுண்டோ அவை யெல்லாம் உன் திருமேனிகளே யாகின்றன. பரமார்த்தந் தெரியவொட்டாமல் மோகிப்பிக்கின்ற மாயை உனதாயிருக்கின்றது. இதனாலேதான் மூடனானவன் ஆத்துமாவல்லாததை ஆத்துமாவென்று நினைத்துப் பந்திக்கப்பட்டிருக்கிறான். ஓ சுவாமி! இங்குப் பொருளல்லாதது பொருளென்கிற ஞானமும் நான் எனது என்கிற அகங்கார மமகாரங்களும், சம்சாரத்தின் தாயான உன் மாயையின் காரியங்களே. எவர்கள் தங்களுக்குரிய தருமத்தில் நின்று உன்னை யாராதிக்கிறார்களோ அவர்கள்தாம் மோக்ஷத்திற்காக இம் மாயை கடக்க வல்லவர். பிரமன் முதலான தேவர்களும் மனுஷ்யாதிகளும் உன்னுடைய மாயையென்னும் பெருஞ் சுழலினு லாக்கப்பட்ட மோகமென்கிற அந்தகாரத்தினால் மூடப்பட்டிருக்கிறார்கள். உலகத்தார் உன்னை யாராதித்துப் புத்திராதிகளான இஷ்டங்களை வேண்டுகிறார்களே யல்லாமல் தங்களுக்கு நேர்ந்திருக்கின்ற சம்சாரத்துக்கு நாசத்தை வேண்டாம லிருக்கிறார்களென்பது, ஓ பகவானே! உன் மாயா மகிமையேயாம். இதோ இதற்குத் திருஷ்டாந்தம் பார். நான் உன்னைப் புத்திரனுக்காகவும் சத்துருபக்ஷ ஜயத்துக்காகவும் ஆராதித்தேனே யல்லாமல் மோக்ஷத்துக்காக ஆராதித்தேனில்லை. இது மாயாவிலாசமன்றி வேறென்ன? ஒருவன் கற்பகவிருக்ஷத்தருகிற் போய்த் தனக்குக் கௌபீனந் தரவேண்டுமென்று பிரார்த்தித்தானாகில், அஃது அவன் குற்றமேயாம். அல்லாமல் அக்கற்பகத்தின் குற்றமாகாது. ஆதலால் சகல லோகங்களையும் மாயையினால் மோகிப்பிக்கிறவனே! அவ்வியயனே! சர்வேசுவரனே! ஞானம்போலே இருக்கிற இந்த அஞ்ஞானத்தை நீ அழிக்கவேண்டும். ஓ பகவானே! சக்கிராயுத ஹஸ்தனான உனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். சார்ங்க ஹஸ்தனான உனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். கதாயுத ஹஸ்தனாகிய வுனக்குத்

தண்டம் சமர்ப்பிக்கிறேன். சங்கஹஸ்தனை வுனக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். ஓ சர்வோத்தமனான சுவாமீ! ஸ்தூலமான அடையாளங்களோடு கூடிய உன்னுடைய இந்த உருவத்தைக் காண்கிறேனே யல்லது சூக்ஷ்மமான ரூபத்தைக் காணமாட்டேன். ஆகிலும், என்விஷயத்தில் அனுக்கிரகித் தருளவேண்டும்" என்றிப்படி அதிதியினாலே துதிக்கப்பட்டு, ஸ்ரீ பகவான் அந்தத் தேவமாதாவை நோக்கிச் சிரித்து, "அம்மா! நீ எங்களுக்குத் தாய் ஆனதனாலே நீதான் எங்களுக்கு அனுக்கிரக முள்ளவளாகி வரந்தரவேண்டும்" என்று அருளிச்செய்தான். அதுகேட்டு அதிதி "அப்படி உனக்குத் திருவுள்ளமிருந்தால் அப்படியேயாகட்டும், வரந்தருகிறேன், நீ பூலோகத்தில் சுரராலும் அசுரராலும் வெல்லக்கூடாதவனாகக் கடவாய்" என்று மங்களாசாசனஞ் செய்தாள். பின்பு கண்ணனுடைய தேவியான சத்தியபாமையும் அதிதிதேவியைத் தண்டமிட்டு "அம்மா! என்னை அனுக்கிரகித் தருளவேண்டும்" என்று அடிக்கடி பிரார்த்தித்தாள். அதற்கு அந்தத் தேவமாதாவானவள், "ஓ பெருமாட்டி! உனக்கு மூப்பாகிலும் ரூபமாறுதலாகிலும் உண்டாகாதிருக்கக்கடவன். மேலும் யவ்வனமே ஸ்திரமா யிருந்து எப்போதும் குற்றமற்ற திருமேனியுடையளா யிருக்கக்கடவாய்" இப்படியாக அதிதி மங்களாசாஸனம் பண்ணி இந்திரனுக்குக் கட்டளையிட, இந்திரனும் தன் தாயின் உத்தரவுப்படி கண்ணனைத் தக்க வுபசாரங்களினாலே பூசித்தான். இந்திரபத்தினியான சசிதேவியோ சத்தியபாமைக்கும் பல வுபசாரங்களைச் செய்தாலும் பாரிஜாத புஷ்பங்களைத் தான் சூட்டிக்கொண்டாளே யல்லது, அந்தப் பிராட்டிக்குச் சமர்ப்பிக்கவில்லை. ஏனெனில் அவள் மானிடப்பெண்ணென்றும் தேவர்க்கே உரிய இப்புஷ்பம் அவளுக்குத் தகாதென்றும் நினைத்திருந்தாள்.

இவ்விதமாய் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஆராதிக்கப்பட்டுச் சத்தியபாமையோடு கூட நந்தவன முதலான தேவோத்தியானங்களை யெல்லாம் கடாக்ஷித்தார். மேலும் அந்நந்தவனத்தி னுள்ளே மகா சுகத்தமுள்ள

பூங்கொத்துகளாகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டதாயும் மாணிக்கம்போலே சிவந்த இளந்தளிர் களால் விளக்கமுற்றதாயும் பொன்போன்ற மேற் பட்டைகளால் மூடப்பட்டதாயும் எப்போதும் ஆனந் தம் உண்டாக்குவதாயும் பாற்கடல் கடைந்தபோது அதிலுண்டானதாயு மிருக்கிற பாரிஜாத விருக்ஷத்தை யுங் கடாக்ஷித்து மிகவு முகந்தருளினார். அப்போது சத்தியபாமாவானவள் அத்தருவைக்கண்டு விருப்புற் றவளாய்ச் சுவாமியைப் பார்த்து, “என் பிராண நாய கனே! நீ என்னைப் பார்த்து, நீதான் எனக்கு மிகவும் பிரியையானவள், என்று உரைத்தது மெய்யானால் இந்தப் பாரிஜாததரு துவாரகைக்குக் கொண்டுபோ கப்படவேண்டும். நீ அடிக்கடி “சத்தியபாமாய்! ஜாம்ப வதியாலும் ருக்குமணியாலும் உன்னைப்போல் எனக்குப் பிரியமானவர்களல்லர்” என்று சொல்லிய தெல்லாம் சும்மா உபசாரத்துக்குச் சொன்னதாகாமல் கருத்துறச் சொன்னதா யிருந்தால் இத் தரு என் மாளிகையின் புழைக்கடைக்கொரு பூஷணம்போலே கொண்டுபோய் வைக்கப்படவேண்டும். என்னுடைய நாதனே! நான் இதன் பூங்கொத்துகளினாலே என் கூந்தலை யலங்கரித்துக்கொண்டு என் சக்களத்திமார் நடுவில் மிகவுஞ் சிறந்திருக்க வேண்டுமென்று விரும்பு கிறேன்” என்று சொல்லியதைக் கண்ணன் திருச்செவி சாத்தி, நகைத்து * அந்த விருக்ஷத்தைப் பெயர்த்துப் பெரிய திருவடியின் திருத்தோளின்மேல் வைத் தருளினார். அப்போது அவ்வனத்துக் காவற்காரர் “ஓ கிருஷ்ண! இந்திரனுடைய பட்டமஹிஷி யான சசிதேவி வைத்துக்கொண்டிருக்கிற இந்தப் பாரிஜாதத்தைக் கொண்டுபோகத்தகாது. இஃது உண் டானபோதே யாவரும் தேவராஜனுக்குக் கொடுத்து விட்டார்கள். அவரோ தம்முடைய காதலியான சசி தேவிக்குப் பிரீதியினாலே கொடுத்துவிட்டார். சசி தேவியினுடைய அலங்காரத்துக்காகவே அமுதங் கடைந்தபோது தேவதைகள் இம்மரத்தை யுண்டாக்

* பெண் பிள்ளைகள் புருஷனை வசப்படுத்திக்கொண்டு அனர்த்த முண்டாக்குகிறார்களென்று நகைத்தது.

கிறார்கள். அப்படிப்பட்ட மரத்தை நீ கொண்டு போனால் க்ஷேமமாய் உன் ஸ்தானம்போய்ச் சேரமாட்டாய். தேவராஜனே! எவளுடைய முகத்தை நோக்கிக் கொண்டு சகல காரியங்களையும் நடத்துகிறானோ அப்படிப்பட்ட சசி கைக்கொண்டிருக்கிற இத்தருவை நீ மூடத்தனத்தினால் விரும்புகிறாய். இதை எடுத்துக் கொண்டு எவன்தான் க்ஷேமமாய்ப் போய்ச் சேருவான்? இச்செய்தியை இந்திரன் அறிந்தால் உடனே அவசியமாய் வச்சிராயுதத்தைக் கையிலேந்தி இதற்கு எதிரான காரியஞ்செய்யப் புறப்படுவான். அவனைச் சகல தேவதைகளுந் தொடருவார்களென்று நினை. ஆதலால் ஓ கோவிந்தனே! நீ அமரர் யாவரோடும் போரிடும்படியான சாகசத்துக்கு எத்தனித்ததுபோதும். புத்திசாலிகள் முடிவில் கேடுண்டாகும்படியான காரியத்திற் பிரவேசிக்கமாட்டார்களன்றோ" என்று சொல்வதைக் கேட்டுச் சத்தியபாமை வெகுண்டு சொல்லலாயினாள்.

ஓ காவற்காரரே! இந்த மரத்துக்குச் சசி யார்? இந்திராணி? இது அமிர்தங்கடைவதிற் பிறந்ததென்றால், யாவர்க்கும் பொதுவா யிருக்கவேண்டியது. அப்படியிருக்கத் தேவராஜனொருவனே கைக்கொள்வதெப்படி? திருப்பாற்கடலிற் பிறந்த அமுதம் சந்திரன் காமதேனு முதலானவை எப்படி யாவர்க்கும் பொதுவோ அப்படியே இந்தப் பாரிஜாதமும் பொதுவேயல்லது இந்திரனுடையதென்று சொல்லக்கூடாது. ஆனால் இந்திராணியானவள் தன் கணவனுடைய புஜபலத்தைப் பற்றின செருக்கினால் இதை எடுத்துக் கொண்டு போகக்கூடாதென்று தடுக்கின்றாள். நல்லது, பொறுத்திருப்பது போதும். இதைச் சத்தியபாமை எடுப்பித்தாளென்று அவளுக்குச் சொல்லுங்கள். ஓ காவலாட்களே! நீங்கள் விரைவாய் உங்கள் பெருமாட்டியண்டைக்குப்போய் "நீ உன் பர்த்தாவுக்குப் பிரியையாயிருந்து, அவன் உனக்கு வசப்பட்டவனா யிருந்தால், என் பர்த்தா இந்த விருக்ஷத்தை எடுத்துக்கொண்டு போவதை நிறுத்திவிடு. உன் பர்த்தா இந்திரனென்பதையும் அவன் தேவர்களுக்கு அதிபதி என்பதையும்

அறிவேன். அறிந்தே மனுஷ்ய ஸ்திரீயா யிருக்கிற நான் இந்த உன் விருக்ஷத்தை எடுப்பித்தேன்" என்று கண்ணனுடைய தேவியாகிய சத்தியபாமை கோவத்தோடு சொன்னாளென்று சொல்லுங்கள் என்று சொன்ன வார்த்தைகளை அப்படி அவ்வனபாலகர் தம்மரசிக்கு அறிவிக்க, அவள் உடனே இந்திரனைத் தூண்டிவிட்டாள்.

பாரும் மயித்திரேயரே! இப்படித் தூண்டவே இந்திரன் சகலதேவ சைனியங்களோடுகூடப் பாரிஜாதத்துக்காகச் சாக்ஷாத் பகவானோடு யுத்தஞ்செய்ய வந்தான். வந்து சுரராஜன் வச்சிராயுதத்தைக் கையிலேந்தி நிற்கையில், வானவர்களெல்லாம் இருப்புத்தடி கத்தி குண்டாந்தடி சூலம் முதலிய ஆயுதங்களை யேந்திச் சன்னத்தராய் நின்றார்கள். பின் ஐராவதத்தின்மேலேறிக் கொண்டு தேவசைனியஞ்சூழ யுத்தஞ்செய்ய நிற்கின்ற வலாரியைப்பார்த்துக் கண்ணன் திசைகளெல்லாம் நிறையும்படி சங்கத்தொனி செய்தருளி, அனேகவாயிரம் பாணங்களை வருஷித்தருளினார். பின்பு சுவாமியெறிந்த அம்புகளினாலே திக்குகளும் ஆகாசமும் மூடப்பட்டிருப்பதைக்கண்டு சுரரெல்லாம் அநேகமாய் அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். ஜகந்நாதனான மதுசூதனன் தேவர்விட்ட அஸ்திர சஸ்திரங்களில் ஒவ்வொன்றையும் விளையாட்டாகவே பலதுண்டங்களாக்கிவிட்டான். அத்தருணத்திலே வருணன் தன்பாசத்தைப் பிரயோகிக்க, அதைக் கருடன் பிடித்துச் சிறியபாம்பைத் துண்டிப்பதுபோல் தமது மூக்கினாலே பலதுண்டங்களாகத் துண்டித்துவிட்டான். யமன் தனது காலதண்டத்தை யெறிந்தான். அதைத் தேவகிசுதனான பகவான் தமது கதாயுதத்தினாலே முறித்துக் கீழே தள்ளினார். மேலும் குபேரன் சிபிகையென்னு மாயுதத்தையெறிய அதையும் திருவாழியாலே சூர்ணமாக்கிவிட்டார். சூரியனைத் தமது திருக்கண்ணோக்கத்தினாலே ஒளியற்றவனாக்கி அக்கினியையுங் குளிர்ச்சியுள்ளவனாகப் பண்ணிவிட்டார். பின்பு வசுக்கள் எதிர்க்க அவர்களைப் பாண வருஷத்தினாலே திசைகளி லோடும்படி செய்தருளி

ளுர். உருத்திரர்களைச் சக்கிராயுதத்தைக்கொண்டு சூலங்களை முறித்துத் தரையிற் படுக்கும்படி செய்தார். அந்தப் பரமபுருஷன் சார்ங்கத்திலேற்றிவிடுத்த சாயகங்களாலே சாத்தியர் விசுவர் மருத்துக்கள் கந்தருவர் முதலானவர்களெல்லாம் இலவம்பஞ்சுபோற் பறந்துபோனார்கள். பெரிய திருவடி நயினாரும் அனேக தேவர்களை வாயினால் தின்றுகொண்டும் சிறகுகளால் அடித்துக்கொண்டும் நகங்களாற் கிழித்துக்கொண்டுஞ் சஞ்சரித்துவந்தார். பின்பு தேவேந்திரனும் மதுசூதனனும் மழைத்தாரைகளை மேகங்கள் பொழிவதுபோல் ஒருவர்மேலொருவர் அனேகவாயிரஞ் சரங்களைப் பொழிந்து கொண்டார்கள். இப்படிச் சங்குல யுத்தம் நடந்தபோது கருத்துமான் ஐராவதத்தோடு போரிட்டார். சுவாமியோ இந்திரனோடும் மற்றைத் தேவரோடும் போர்செய்தருளினார். அந்தப் போரிலே அஸ்திர சஸ்திரங்கள் யாவும் ஒழிந்திருக்கையில் தேவபதி வச்சிராயுதமெடுத்தான். அதுகண்டு சுவாமியும் சுதரிசனத்தைக் கையிலெடுத்தார். இப்படி வச்சிரஹஸ்தனாக இந்திரனையும் சக்கரஹஸ்தனாகக் கிருஷ்ணனையுங் கண்டு மூன்றுலோகமும் ஹாஹாகாரப்பட்டு நின்றன. இப்படி யிருக்கப் புரந்தரன் வச்சிரத்தை எம்பெருமான் மீது பிரயோகித்தான். எம்பெருமானே அதைக் கையாலே பிடித்து வைத்துக்கொண்டு, தாம் சக்கரத்தைப் பிரயோகியாமல் "இந்திரா? நில்" என்று அருளிச்செய்தார். இந்திரனோ வச்சிராயுதமும் போகவே ஓடிப்போக எத்தனமா யிருந்தான். இப்படியாக ஆயுதம் பறிகொடுத்துக் கருடனாலே வாகனஞ் சிதைக்கப்பெற்று ஓடப்பார்த்த இந்திரனைக் குறித்துச் சத்தியபாமை அருளிச்செய்ததாவது.

"இந்திரனே! மூன்றுலகத்துக்கும் அதிபதியாயும் சசிதேவிக்குக் கணவனாயுமுள்ள நீ ஓடுவது தகுதியன்று. அச் சசிதேவி பாரிஜாத மாலைகளை மிகுதியாக அணிந்துகொண்டு உன்னைப் பணிவளன்றோ? ஓ வாசவனே! முன்போலவே பாரிஜாத மாலைகளாலே விளக்கமுற்று மிகுந்த அன்போடு உன்னிடம் வரும் அந்தத் தேவியைக் கண்குளிரப்பாராத வுன்னுடைய தேவ

ராஜத்தனம் ஏதுக்கு? அப்பா இந்திரா! நீ வருத்தப் படுவது போதும், இனி வருந்தவேண்டாம், வெட்கப் படாதே, பாரிஜாதத்தைக் கொண்டுபோ, தேவர்கள் மனம் வருத்தப் படவேண்டுவதில்லை. அந்தச் சசியான வள் தன் புருஷன் தேவராஜன் என்கிறதைப்பற்றிக் கௌரமான நோக்கத்தோடு பார்த்தாளில்லை. அதுபற் றிப் பெண்மையாலே ஆழ்ந்திராத சித்தமுடையாள் என் பர்த்தாவின் மகிமையைக் கொண்டாடினவளாய் உன்னோடு போரிடுவித்தேன். பாரிஜாதம் வேண்டிச் செய்திலேன். பிறர்பொருளை நான் அபகரித்தது போதும். பாரிஜாதத்தைக் கொண்டுபோ. புருஷன் பெருமைபற்றிக் கர்வப்படாத பெண்கள் உலகத்தி லில்லை. ஆனால் சசியோ அவ்வளவே கர்வித்தவ ளன்று. ரூபத்தினாலே மிகுந்த கர்வமுடையவளா யிருக் கிறாள்" என்றிவ்வண்ணம் சத்தியபாமை சொல்லக் கேட்டுத் தேவராஜன் ஓடாமல் திரும்பினவனாய் அந்தச் சீமாட்டியை நோக்கிச் சொன்னதாவது.

"ஓ கொடியவளே! இஷ்டனுக்குத் துக்கமுண்டா கும்படி யேன் மிகப் பேசுகிறாய்? எவன் யாவற்றிற் கும் சிருஷ்டி ஸ்திதி சம்ஹார கர்த்தாவாயிருக்கிறானோ, அப்படிப்பட்ட சர்வசரீரகனான பகவானாலே ஜயிக்கப் பட்ட எனக்கு வெட்கமுண்டாகமாட்டாது. ஓ பெரு மாட்டி! கேள். முதலு முடிவுமில்லாத எவனிடத்தி னின்றும் உலகமெல்லா முண்டாகி, எவனிடத்திலேயே நிலைபெற்றிருக்கின்றதோ, சர்வரூபியான எவனிடத் தினின்று முண்டாவதுமில்லையோ, அப்படிப்பட்ட உற் பத்தி லய ஸ்திதிகளுக்குக் காரணமான எம்பெருமா னாலே வெல்லப்பட்டவனுக்கு வெட்க மெப்படி யுண் டாகும்? சூக்ஷ்மங்களுக்கும் சூக்ஷ்மமாய்ச் சகலத்துக் கும் பிறப்பிடமாயிருக்கிற எவனுடைய சொரூபம் சகல வேத சாஸ்திரார்த்தங்களையு மறிந்தவர்களுக்கல்லது மற்றவர்களுக்கு அறியக்கூடாததா யிருக்கின்றதோ, ஒருவராலு மாக்கப்படாமல் தானே ஈசுவரனாய் அஜ னாய் நித்தியனாய்த் திருவுள்ளத்தினாலே லோகோபகா ரார்த்தம் மனுஷ்யாவதாரஞ் செய்தருளியிருக்கிற அப்

படிப்பட்ட பகவானை வெல்ல வல்லவனு யிருப்பவன் யார்? ஆதலால் நான் தோல்வி யடைந்தது நியாயந் தான்" என்றான்.

முப்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## முப்பத்தோராம் அத்தியாயம்

### பதினாயிரத் தொருநூறு

## கன்னிகைகளின் விவாஹம்

ஓ பிராமணோத்தமரே! இவ்விதமாய்ப் பகவான் இந்திரனாலே துதிக்கப்பட்டவராய் கருத்து ஆழ்ந்திருக்கும்படி நகைத்து "ஓ லோகேசுவரனே! நீ தேவதைகளுக்கு நாதனா யிருக்கிறாய், நாமோ மனிதர், ஆதலால் எங்கள் அபராதத்தை நீயே பொறுக்கவேண்டும். இந்தப் பாரிஜாத விருக்ஷத்தையும் தகுந்த விடத்திற்குக் கொண்டு போகலாம். இதை நான் சத்தியபாமையின் வார்த்தையினாலே எடுத்தேனே யல்லது விருப்பத்தாலன்று. நீ பிரயோகித்த வச்சிராயுதத்தையும் கைக்கொள்ளலாம். இது உனக்குத்தான் சத்துரு சங்காரத்திற்காக ஏற்படுத்தப்பட்ட ஆயுதம்" என்று அருளிச்செய்யக்கேட்டு, இந்திரன் "ஓ எம்பெருமானே! நான் மனிதன் என்றுசொல்லி என்னை என்ன மயக்குகிறாய்? உன்னை நான் அறிவேனாலும் சூக்ஷுமத்தை அறியேன். சகத்தின் இரட்சிப்பில் பிரவேசித்தவன் எவனோ அவனே நீ ஓ அசுர சங்காரகனே! இப்போது உலகத்துக்கு உபத்திரவகாரிகளாயுள்ளவர்களைக் களைந்துவருகிறாய். இந்தப் பாரிஜாதத்தைத் திருத்துவாரகைக்குக் கொண்டுபோகவேண்டும். நீ பூமியை விட்டபின் இஃது அங்கிராது. ஓ தேவ தேவனே! ஜகந்நாதனே! ஸ்ரீகிருஷ்ண! ஸ்ரீவிஷ்ணுவே! மகாபுஜனே! சங்கசக்கிர கதாபாணியே! அடியேனிடத்திற் கிருபைகூர்ந்து அபராதத்தை க்ஷமித்தருளவேண்டும்" என்று பிரார்த்திருக்கக் கண்ணனும் "அப்படியே ஆகட்டும்" என்று திருவுள்ளம்பற்றிச் சித்த கந்திரு

வாதிகளாலும் தேவரிஷிகளாலும் துதிக்கப்பட்டவராய்ப் பூலோகத்துக்கு எழுந்தருளித் துவாரகைக்கு மேலே நின்று சங்கநாதஞ் செய்தருளவே, துவாரகையிலிருக்கிறவர்களெல்லாம் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்கள். இப்படி நகரத்தாருக்கெல்லாம் ஆனந்தகரமாகக் கருடன்மேலிருந்து, சத்தியபாமையோடுகூட இறங்கி அந்தப் பாரிஜாத தருவைப் புழைக்கடையில் நாட்டியருளினார். அந்த விருட்சத்தின் மகிமை சொல்லுகிறேன் கேளும். அதன் அருகிற்போகும் மனிதனுக்குத் தன் பூர்வ ஜனன ஸ்மரணமுண்டாகும். அதன் மலர்களுடைய சுகந்தம் மூன்றுகாதமட்டும் வீசிக்கொண்டிருக்கும். அப்படிப்பட்ட விருட்சத்தின் அருகிற்போய் யாதவர்கள் அதனை எதிர் நின்று பார்த்துத் தங்களுடைய தேகங்களைத் தேவதேகங்களாகக் கண்டார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் பிராக்குச் சோதிஷத்தினின்றுங் கொண்டுவந்த யானை குதிரை முதலான பொருள்களைச் சுற்றத்தாருக்குத் தக்கபடி பிரித்துக் கொடுத்தருளினார்.

பின்பு நரகாசுரன் பலதிசைகளிலிருந்துங்கொண்டு வந்து சிறைப்படுத்தியிருந்த அந்தக் கன்னியரையெல்லாம் நல்லநாளிலே நல்ல முகூர்த்தத்திலே சுவாமி அந்தப் பதினாயிரத் தொருநூறு மங்கையருக்கும் தனித்தனி ஒவ்வொருவரா யிருக்கும்படி அத்தனையாயிரந் திருமேனியெடுத்து, அங்கங்கே விதிப்படி பாணிக்கிரகணஞ் செய்தருளினார். அந்தப் பெண்மணிகளில் ஒவ்வொருவரும் தம்தம் அஸ்தங்களையே பிடித்தார் சுவாமியென்று நினைத்திருந்தார்கள். அந்த லோகநாதன் இப்படிப் பலரூபங் கொண்டருளியது திருக்கலியாண மகோச்சவத்திலே மாத்திரமன்று. ஒவ்வோ ரிரவிலும் பல ரூபங்களைக்கொண்டு அந்த அந்தப் பாக்கியவதிகளின் மாளிகைகளி லெழுந்தருளி அவர்களை மகிழ்வித்துக்கொண்டிருந்தார்.

முப்பத்தோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

# உஷை கனவுகண்டது

மயித்திரேயரே! உருக்குமணிப் பிராட்டிக்குப் பிரத்தியும்னன் முதலான குமாரர்கள் அவதரித்தார்களென்று சொன்னேனே, மற்றவர்களுக்குஞ் சொல்லுகிறேன் கேளும். சத்தியபாமைக்குப் பானுபௌமன் இரிகன் முதலான குமாரர் அவதரித்தார்கள். தீப்திமான் தாம்பிரபக்ஷன் முதலானவர்கள் உரோகிணியின் குமாரர். சாம்பன் முதலான வீரர்கள் ஜாம்பவதியின் குமாரர். பத்திரவிந்தாதிகள் நக்நஜித்தியின் குமாரர். * சயிப்பியை என்பவளுக்குச் சங்கிராமஜித்து முதலானவர்கள் அவதரித்தார்கள். விருகன் முதலானோர் மந்திரியினிடத்தி லுதயமானவர்கள். காத்திரவான் முதலிய புத்திரரை இலக்ஷ்மணையென்னும் பிராட்டியும் சுரதன் முதலானோரைக் காளிந்திப்பிராட்டியும் பெற்றார்கள். மற்றுமுள்ள தேவிமாரிடத்திலும் பலர் உதித்தார்கள். இவ்வாறு அவர்க்கு அவதரித்த குமாரர்கள் எண்பதினாயிரத்து நூற்றுவராம். இவர்கள் யாவருக்கும் சகல விதத்திலும் முதல்வர் பிரத்தியும்னர். அவர் குமாரர் அநிருத்தர், அவருடைய குமாரன் வச்சிரன், யுத்தத்திலே தடுக்கப்படாத அவ்வநிருத்தர் பலிச்சக்கிரவர்த்தியின் பேர்த்தியாயும் பாணனுடைய புத்திரியாயுமுள்ள உஷை என்பவளைக் கலியாணஞ் செய்துகொண்டார். அந்நிமித்தத்தில் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் சங்கரனுக்கும் கொடிய யுத்தமுண்டாகி, அவ் யுத்தத்தில் சுவாமி பாணனுடைய ஆயிரந் தோள்களையுந் துணித்துவிட்டார் என்று பராசரப் பிரமரிஷி யருளிச்செய்யக் கேட்டு மயித்திரேய முனிவர் வினவுகின்றார்.

ஓ ரிஷி சிரேஷ்டரே! உஷையின் நிமித்தமாக ஹரி ஹரர்களுக்கு எப்படி யுத்தமுண்டாயிற்று? ஸ்ரீ ஹரி எப்படி பாணனுடைய தோள்களைத் துணித்தார்?

---

* இவள் பட்டமஹிஷி யல்லளாயினும் பிரசித்தகுமாரரைப் பெற்றவர்களுள் ஒருத்தியாதலால் இங்கெடுக்கப்பட்டாள். இவள்தான் மித்திரவிந்தையென்று சிலர் சொல்லுகிறார்கள்.

இதை யெல்லாம் அடியேனுக்கு நன்றாய் அருளிச் செய்யவேண்டும். இக்கதையைக் கேட்க அடியேனுக்கு மிகுந்த குதூகல முண்டாயிருக்கிறது என்று கேட்கப் பராசரமகாரிஷி அருளிச்செய்யலாயினார்.

கேளும் ஐயா! பாணன் மகளான உஷையென்பவள் சிவனோடு கிரீடித்துக் கொண்டிருந்த பார்வதியைப் பார்த்துத் தானும் அப்படிக் கிரீடிக்கவேண்டுமென்று ஆசைப்பட்டாள். அவளுடைய கருத்தை அந்தப் பார்வதி அறிந்து, அந்தப் பெண்ணைப் பார்த்து, "நீ யேன் மனந் தவிக்கிறாய்? உன் புருஷனோடு கூடி நீயும் இப்படிக் கிரீடிப்பாய்" என்றாள். இது கேட்டுப் பாணபுத்திரி "இந்தச் சுகம் எப்போதோ? புருஷன்தான் எவனோ? அதைத் தெரிவிக்கவேண்டும்" என்று பிரார்த்திக்கப் பார்வதிதேவி, "ஓ ராஜபுத்திரி! வைகாசிமாதத்தில் சுக்கிலபக்ஷத் துவாதசியிலே கனவில் எவன் உன்னோடு இரமிப்பானோ, அவனே உனக்குப் புருஷனாவான்" என்று உரைத்தாள்.

பின்பு பார்வதி சொல்லியபடி அந்த நாளில் ஒரு புருஷனோடு தான் சம்போகஞ் செய்ததாய்க் கனாக் கண்டு, அவனிடத்தில் மிகுந்த ஆசை பற்றினவளாய் விழித்துக்கொண்டு, அந்தப் புருஷனைக் காணமல், "என் பிராணநாயகனே, நீ எங்கேபோனாய்?" என்று நாணமின்றிச் சொன்னாள். அதுகேட்டு அங்கிருந்த பாணனுக்கு மந்திரியான கும்பாண்டனென்பவனுடைய மகள் சித்திரலேகை யென்ற பெயருடைய அவளுடைய தோழியானவள், "யாரை நோக்கி நீ இப்படிப் பேசினாய்" என்றாள். அதுகேட்ட உஷை வெட்கத்தினால் ஒன்றும் பேசாதிருந்தாள். அப்போது, சித்திரலேகை இராஜகுமாரிக்குத் தன்னிடத்தில் நம்பிக்கை வரும்படி செய்ததனால் உஷை தான் கனாக் கண்ட சரித்திரத்தையும் பூர்வத்தில் தனக்குத் தேவி சொன்னதையுஞ் சொல்லி, "அடி தோழி! இவ்விதமான புருஷனை நான் பெறுவதற்கு என்ன உபாயமோ அதை நீ செய்யவேண்டும்" என்று வேண்டினாள். அதற்கு அந்தத் தோழி உஷையை நோக்கி, "அடி என்னுயிரே! நீ சொல்லிய சங்கதி அறிவதற்கே கஷ்ட

மாயிருக்கிறது, சொல்லவும் அடையவும் எவ்வளவும் இயலாது. ஆனாலும் உனக்கு நான் உபகாரஞ் செய்ய வேண்டுமாதலால் முயலுகிறேன். நீ ஏழெட்டு நாள் பொறுத்திரு" என்று சொல்லி, உள்ளேபோய் ஒருபாயஞ் சிந்தித்து அப்படியே செய்தாள்.

அஃதாவது தேவதைகள் கந்தருவர் அசுரர் முதலானவர்களிலும் மனிதர்களிலும் முக்கியமாயுள்ள வாலிபர்களை ஒரு படத்திலெழுதி, அந்தச் சித்திரலேகை இராஜகன்னிகைக்குக் காட்டி "இவர்களில் உன் கணவன் யார்?" என்று வினவினாள். அந்தக் கன்னிகை அப்படத்தில் தேவதான கந்தருவ பன்னகாதியர் யாவரையும் விட்டு, மனிதர் வரிசையில் வந்து அவர்களுக்குள்ளும் யாதவர்களிடத்தில் கண்வைத்தாள். கண்வைத்து ஸ்ரீ ராமகிருஷ்ணர்களைக் கண்டு வெட்கமுற்றவள்போலாகிப், பிரத்தியும்நரைக் கண்டு நாணிக் கண்ணை யப்புறம் போக்கி, அநிருத்தனைக் கண்டு வெகு விசாலமான பார்வையோடு நாணந் துறந்து, "இவன் தான், இவன் தான்" என்றுசொன்னாள். அதுகேட்டு யோகவித்தியா பலத்தினால் வானத்திற்செல்ல வல்ல சித்திரலேகை பாணகுமாரியை நோக்கி, "ஓ ஸ்திரீ ரத்தினமே! இவன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பேரன், அநிருத்தனென்னும் பெயருள்ளவன். சௌந்தரிய வீரியங்களில் பிரகாசித்தன்தான், இவனையல்லவா தேவி உனக்குப் பர்த்தாவாக அனுக்கிரகித்தாள். அப்படியே நீ இவனைப் பெறுவையாகில் எல்லாச் செல்வமும் நீ பெற்றதுபோலாம். இவன் வாசமாயிருக்கிற துவாரகையோ யாரும் பிரவேசிக்கக்கூடாதது. ஆனாலும் கூடுமானமட்டும் முயற்சிசெய்து உன் பிராணநாயகனைக் கொண்டு வருகிறேன். அடிபாங்கி! இந்தரகசியம் ஒருவரோடுஞ் சொல்லாதே, விரைவிலே வருகிறேன்" என்று உஷைக்குச் சமாதானஞ் சொல்லி துவாரகைக்குச் சென்றாள்.

முப்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

## முப்பத்துமூன்றாம் அத்தியாயம்

# பாணாசுர விஜயம்

இதற்கு முந்திப் பாணன் சிவனைத் தொழுது, "சுவாமி! அடியேனுக்கு ஆயிரங் கைகளிருப்பதனால் வெறுப்பே யுண்டாகின்றது அவைகளுக்குத் தகுதியான யுத்தமுண்டானாலன்றோ பிரயோஜனம்? இல்லாமற்போனால் வீண்சுமையான இந்தக் கைகளாலாக வேண்டுவதென்ன? ஆதலால் என்னுடைய இந்தக் கைகள் பயன்படும்படியான சண்டை நேரிடுமா" என்று கேட்டான். அதற்குச் சிவன், "அடா பாண? உன்னுடைய மயிலடையாளமுள்ள கொடி எப்போது முறிந்து விழுமோ அப்போது பிசாசு முதலானவை களிக்கும்படியான போர் உனக்கு நேரிடும்" என்று சொன்னார். இதுகேட்டு அந்தப் பாணன் சந்தோஷமுடையவனாய் அந்தத் தேவனை மறுபடியுந்தொழுது தன் மாளிகைக்கு வந்து ஒரு காலத்தில் தன் துவஜம் முறிந்தது கண்டு மிகுந்த சந்தோஷத்தை யடைந்திருந்தான்.

இந்தக் காலத்திலே சித்திரலேகை தன்னுடைய யோகவித்தையின் மகிமையினாலே துவாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புறத்திலேவிட, உஷை அவனோடு இஷ்டப்படியான போகங்களை யனுபவித்துவந்தாள். இச் செய்தியை அங்கிருக்குங் காவற்காரர் அறிந்து அந்த அசுர ராஜனிடஞ்சென்று, "எங்களாண்டவனே! கன்னிகாந்தப்புறத்திலே யாரோ வொரு ராஜகுமாரன் எப்படியோ பிரவேசித்து, நம்முடைய கன்னிகையோடு சுகித்துக்கொண்டிருக்கிறான்" என்று சொன்னார்கள். அதுகேட்டு அந்தப் பாணன் கிங்கர சைனியத்தை ஏவினான். அந்தச் சைனியம்போய் அநிருத்தனை எதிர்க்க, அவன் அங்கிருந்த வாசலின் உழல்தடியை யெடுத்துக்கொண்டு அந்தச் சேனையை யெல்லாம் நாசஞ் செய்து விட்டான். இப்படி அக்கிங்கரர் யாவரும் மாண்டு

போனதையறிந்து, அந்தத் தைத்தியேந்திரன் தானே தேரின்மேலேறி அவனைச் சங்கரிக்கும்படியான முயற்சியோடு வந்து, கூடியவரையில் போரிடுகையில் யாதவ வீரனாலே ஜயிக்கப்பட்டான். அப்போது ஏங்கிநின்ற பாணனுக்கு அவன் மந்திரி மாயையைக்கொண்டு யுத்யுஞ் செய்யும்படிச் சொன்னதனால், அவனுமப்படியே மாயையினாலே யுத்தஞ்செய்து, அந்த யதுவீரனை நாகாஸ்திரத்தினாலே கட்டிப்போட்டான்.

இங்கிப்படியிருக்க, துவாரகாபுரியிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாங் கலங்கி எங்கே போயிருப்பானென்று யோசித்துப் பாரிஜாதாபஹாரத்தினாற் பகைகொண்ட தேவர்கள்தாம் இவனை யபகரித்திருப்பார்களென்று எண்ணியிருந்தார்கள். அத்தருணத்தில் நாரத மகாமுனிவர் துவாரகைக்கு வந்து அநிருத்தனை யோகமாயாபலத்தினாலே சித்திரலேகை பாணாசுர பட்டணத்துக்குக் கொண்டுபோனது முதல் அவனை நாகாஸ்திரத்தினாற் பாணன் கட்டினதீறான செய்தியெல்லாம் யாதவர்களுக்கு அறிவித்தார். அது கேட்டவுடனே யாதவர் தேவர்களிடத்திற் சந்தேகமற்றவர்களானார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணபகவான் பெரிய திருவடிநயினாரை நினைத்தருளி, உடனே வந்து நின்ற அவர் தோண்மேலேறிக்கொண்டு பலராமர் பிரத்தியும்நன் முதலானாரோடுகூட பாணநகரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளினார். எழுந்தருளும் போதே அப்பட்டணத்தின் சமீபத்தில் காவல் காத்திருந்த சிவனுடைய பிரமதகணங்கள் எதிர்த்து வந்தார்கள். அவர்களையெல்லாந் துவம்சஞ் செய்து, ஸ்ரீஜநார்த்தனன் பாணபுரத்திற்கு எழுந்தருள, அங்கே சிவனாலேவப்பட்ட ஒரு ஜ்வரம் மூன்று பாதங்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து, பாணனைக் காப்பாற்றும் பொருட்டுச் சார்ங்கபாணியோடு யுத்தஞ் செய்தது. அந்தச் ஜ்வரம் சாம்பலையே ஆயுதமாகப் பிரயோகிக்க, அதுபட்டுத் தாபம் பொருந்தின பலபத்திரரும் கண்களை மூடிக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணனைக் கட்டிக்கொண்டு ஆறுதலை யடைந்தார். அப்போது ஸ்ரீமந்நாராயணனுக்கும் ஒரு ஜ்வரத்தை யுண்டாக்க,

அதன் சக்தியினாலே அந்தச் சைவஜ்வரமானது பீடிக்கப்பட்டு, உடனே சுவாமியினுடைய தேகத்தினின்று மோதிப்போய், நாராயணனுடைய புஜதண்டங்களினாலே நசுக்கப்பட்டதனால் நடுங்கி நிற்கமாட்டாமல் பதைபதைத்து நின்றது. அப்போது பிரமா வந்து "பொறுத்தருளவேண்டும்" என்று பிரார்த்திக்கச் சுவாமி "அப்படியே யாகட்டும், பொறுத்தேன்" என்று சொல்லி, அந்த வைஷ்ணவ ஜ்வரத்தைத் தமக்குள்ளே லயப்படுத்தி யருளினார். பின்பு அந்தச் சைவஜ்வரம் சுவாமி சன்னிதியில் நின்று, "எம்பெருமானே! அடியேனுக்குத் தேவரீரோடு நேர்ந்த யுத்தத்தை நினைக்கிற மனிதருக்கு ஜ்வரத்தினாலுண்டான துன்பமில்லாமற் போகக்கடவது" என்று விண்ணப்பஞ் செய்து போய்விட்டது.

பிறகு பகவான் தம்மோடு எதிர்த்துவந்த * அக்கினிதேவர் ஐவரையுநாசஞ்செய்து, அவர்களோடுகூடவந்த அசுரசேனைகளையும் விளையாட்டாகவே சூர்ணமாக்கியருளினார். இப்படித் தன் சைனியம் பங்கப்பட்டுப் போவதைக்கண்டு பலிச்சக்கரவர்த்தியின் குமாரன் தன்னுடைய சமஸ்த சேனைகளோடுங் கூட்டிக்கொண்டு போர்செய்ய வந்தான். அவனுக்குப் பலமாகச் சிவனும் சுப்பிரமணியன் முதலான பரிவாரங்களோடுகூட ஸ்ரீகிருஷ்ணனை எதிர்த்துப் போரிட்டான் இவ்வாறு ஹரிஹரர்களுக்கு மிகக்கொடிய யுத்தமுண்டாக, உலகமெல்லாம் அஸ்திர சஸ்திரங்களில் சுவாலைகளினாலே வெப்பமுற்றுக் கலங்கி நின்றன. தேவர்களோ சகல லோகங்களுக்கும் ஒரு பிரளயம் வந்துவிட்டதென்று நினைத்தார்கள். இப்படிப் பெரும்போர் நடக்கையில் ஸ்ரீ பகவான் சிருப்பணாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணிச் சிவனை ஒன்றுஞ் செய்யாமற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போகும்படிச் செய்தருளினார். அதனாலே தைத்தியரும்

* அக்கினிதேவர் ஐவர் - கார்கபத்தியன், ஆகவநீயன், தக்ஷிணாக்கினி, சப்பியன், ஆவசத்தியன் என்பவர். இவர்கள் சிவனுடைய அநுசாரத்தையால் பாணாசுரனுடைய கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்தார்கள்.

பிரமதகணங்களும் நாசமாய்ப் போனார்கள். சிவனே அந்த அஸ்திரத்தினாலே அடக்கப்பட்டு உடம்பு பரவசமாய்த் தேரின் தட்டிலே உட்கார்ந்தாரே யல்லாமல் மேன்மையான செய்கைகளைச் செய்யவல்ல ஸ்ரீ கிருஷ்ணனோடே போரிடச் சக்தியற்றவராயினார். பின்பு தந்தைக்கு நேர்ந்த துன்பத்தைக்கண்டு சுப்பிரமணியன் யுத்தஞ்செய்ய வந்தபோது சுவாமி ஓர் ஊங்காரஞ்செய்தார். அதனாலே அவனுடைய வேலாயுதம் அடித்துக்கொண்டு போகப்பட்டது. பட்சி ராஜனோ அவன் வாகனமான மயிலை யடித்து வீழ்த்தினார். இத்தருணத்தில் பிரத்தியும்நன் அஸ்திரங்களைப்பிரயோகித்ததனாலே அமர்க்களத்தில் நிற்கமாட்டாமல் ஓடிப்போனான். சங்கரன் தளர்ந்துவிழவும், அசுரசேனையெல்லாம் நாசமடையவும், முருகன் ஜயிக்கப்பட்டிருக்கவும், பிரமதகணம் க்ஷீணித்துப்போகவுங் கண்டு, பாணாசுரன் நந்தி சாரதியாக விருக்கப்பெற்ற தேரின்மேலேறி ஸ்ரீ கிருஷ்ண பிரத்தியும்நர்களுடைய சேனைகளோடு யுத்தஞ்செய்யும்படி வந்தான். அப்போது மகாவீரனான பலபத்திரன் பாணங்களைப் பிரயோகிக்க, அதைப் பொறுக்கமாட்டாமல் பாணாசுரனுடைய படையானது யுத்த தர்மத்தினின்றும் நழுவி ஓடிப்போய்விட்டது. இப்படியாகப் பலராமனுங் கிருஷ்ணனும் கலப்பையினாலும் அம்புகளினாலும் அலைத்து ஓட்டுகின்ற தன் சேனையை வாணன் கண்டு கிருஷ்ணனோடு கொடிய யுத்தஞ்செய்யத் தொடங்கிக் கவசத்தைப் பிளக்கத்தக்கவைகளாய்ச் சொலித்துக்கொண்டிருக்கிற சரங்களைப் பிரயோகித்தான். பாணன்விட்ட அம்புகளையெல்லாம் கண்ணன் அம்புகளாலே துணித்துத் தள்ளினான். மறுபடியும் நாராசங்களை யெய்து பாணன் கண்ணனைப் பிளக்க, கண்ணனும் பாணனைப் பிளந்தருளினான். இவ்விதமாய்க் கிருஷ்ண பாணர்களிருவரும் ஒருவர்மேலொருவர் ஓய்வில்லாமல் அஸ்திரங்களை வருஷித்து வந்தார்கள். இப்படியாக வருஷித்த சரங்களெல்லாம் பிளக்கப்படவும், பெருட்பான்மையாய் அஸ்திரமும் அடங்கிப்போகவுங் கண்டு ஸ்ரீ ஹரிபகவான், பாணனைச் சங்கரிக்கத் திருவுள்ளமுடையவராய், அநேகவாயிரஞ் சூரியசமூகத்துக்

குச் சமானமான தேஜசுள்ள சுதரிசனமென்கிற சக்கரத்தை யெடுத்துப் பிரயோகித்தருளினார்.

பிரயோகிக்க வாரம்பித்தபோது கோடரீ என்கிற அசுர வித்தியாரூபமான தேவதை திகம்பரியாய்ச் சுவாமிக்கு எதிரிலே வந்து நின்றாள். அப்படி எதிரே அவள் நின்றமையால் சுவாமி கண்களை மூடிக்கொண்டு சத்துருவின் கைகளாகிய காட்டைச் சேதிக்கும்படிக்கு தமது திருவாழியைப் பிரயோகித்தருளினார். அந்தத் திருவாழி தேவதைகள் பிரயோகித்த சஸ்திரங்களை நாசஞ்செய்யுந் திறமுடையவைகளான சத்துருவின் ஆயிரந்தோள்களையும் சுவாமியின் திருவுள்ளப்படி முறையே சிதைத்துவிட்டு மீண்டும் சுவாமியின் திருக்கையைச் சேர்ந்தது. ஸ்ரீ மதுசூதனன் பாணனைச் சங்கரிக்கும்பொருட்டு அந்தச் சுதரிசனத்தை மறுபடியும் விடுக்கத் திருவுள்ளமா யிருப்பதையும், பாணன் கைகளற்றுத் தாரை தாரையாய் உதிரமொழுகத் துடித்து நிற்பதையுங் கண்டு, பார்வதிபதி உடனே சுவாமி சன்னிதிக்கு வந்துதொழுது வணக்கத்தோடு விண்ணப்பஞ் செய்யலாயினார்

"சுவாமி கிருஷ்ண! ஜகந்நாத! நீபரமேசுரனும் பரமாத்மாவும் ஆதியந்த மில்லாதவனும் புருஷோத்தமனுமான ஸ்ரீஹரி என்பதறிவேன். நீதேவதைகள், மனுஷ்யர், திரியக்குகள் இவர்களுக்குள்ளே ஒரு திருமேனியை எடுத்து வருவதெல்லாம் உன்னுடைய திருவிளையாட்டேயாம். ஆதலால் நீசர்வேசுவரனே யல்லாமல் மனிதனல்லை. அடியேன் விஷயத்தில் அனுக்கிரகஞ் செய்யவேண்டும். அண்டினவரை யாதரிக்கும் பிரபுவே? இந்தப் பாணாசுரனுக்கு நான் அபயங்கொடுத்திருக்கிறேன். ஆதலால் அதை நீ பொய்யாக்காம லிருக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன். இந்தப் பாணன் அடியேன் சார்பினாலே, கெர்வித்தவனா யிருப்பதனாலே இப்படிச் செய்தானே யல்லது உன் திறத்தில் விரோதத்தால் அபராதப் பட்டவனல்லன். ஆதலின் அவனுடைய அபராதத்தை நீ என்பொருட்டு க்ஷமித்தருள வேண்டுமென்று அடியேன் பிரார்த்திக்

கிறேன்" என்று பிரார்த்தித்துச் சூலபாணியாய் நிற்கிற உமாபதியைச் சுவாமி பிரசன்னராய்க் கடாக்ஷித்து, அசுரன்மேலுண்டான சீற்றமாறி "ஓ சங்கரனே! நீ வரங்கொடுத்திருக்கிறதனாலே இவ்வசுரன் பிழைத்திருக்கட்டும். உன் வார்த்தையில் பெருமை பாராட்டி இதோ இந்தச்சக்கரத்தை நான் பிரயோகியாமல் நிறுத்தி விட்டேன். நீ அபயங்கொடுத்தது நானபயங் கொடுத்தது போலே யாம். உன்னை என்னோடு ஒற்றுமையுள்ளவனாக நினை. * நீ என் ஸ்வரூபம், தேவாசுர மனுஷ்யாதி ரூபமான பிரபஞ்சமும் என் ஸ்வரூபம். என்னையல்லாமல் ஒன்றுமில்லை. இந்த உண்மையை நீ அறிந்துகொள். உலகத்தார் மாயையினாலே பிரபஞ்சத்தை என் ஸ்வரூபமல்லாததாய் நினைத்து உன்னையும் என் ஸ்வரூப மல்லாமல் வேறுபட்டவனாக நினைக்கிறார்கள். ஓ இடபத்துவசனே! நீ அஞ்சாதே. நான் உன்விஷயத்தில் அனுக்கிரகமுடையவனானேன். நான் துவாரகைக்குப் போகிறேன், நீயும் உன்னிடத்துக்குப் போ" என்று சொல்லி ஸ்ரீகிருஷ்ணன் அநிருத்தனிருக்குமிடத்திற்கு எழுந்தருளினார்.

அந்த அநிருத்தனைக் கட்டியிருந்த சர்ப்பங்களெல்லாம் கருத்மானுடைய காற்றுப் பட்டமாத்திரத்திலே நசித்துப்போயின. பின்பு ஸ்ரீ ருக்குமணிவல்லபன் அவ் வநிருத்தனையும் அவன் பத்தினியையும் பெரிய திருவடியின்மேலேற்றிக்கொண்டு பலபத்திரப் பிரத்தியும்நாதியரோடு துவாரகைக்கு எழுந்தருளினான். ஓ மயித்திரேயரே இவ்விதமாய் எம்பெருமான் பூமிபார நீக்கும்பொருட்டு ஸ்ரீ துவாரகா நகரத்தில் தேவிமாரோடும் புத்திர பௌத்திராதிகளோடுங் கூடி வாழ்ந்து கொண்டிருந்தார்.

முப்பத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

* எம்பெருமான் அந்த அந்தப் பொருள்களி லிருந்துகொண்டு அவற்றாலறியப்படாமல் அவ்வவற்றால் நடக்கவேண்டுங் காரியங்களை நடத்தி வருவதனாலே அவையெல்லாமவன் சரீரங்களே என்று அந்தர்யாமி பிரமாணமென்கிற சுருதி சொல்லுகையாலே எல்லாம் என் சொரூபம் என்றும் என்னையல்லா லொன்றுமில்லையென்றும் சுவாமி யருளிச்செய்தபடி.

## முப்பத்துநாலாம் அத்தியாயம்

# காசீ தகனம்

மயித்திரேயர் வினவுகிருர்: "ஓ ஆசாரியரே! ஸ்ரீ விஷ்ணுவானவர் மனுஷ்யாவதாரஞ் செய்து பெருமையான காரியங்களைச் செய்தருளினர். இந்திரனையும் உருத்திரனையும் மற்றுமுள்ள தேவர்களையும் வென்றருளினர். இப்படியாகத் தேவர்களின் அக்கிரமச் செய்கைகளைத் தடுக்கும்படியான கண்ணபிரான் இன்னும் வேறென்னென்ன செய்தருளினரோ அதையெல்லாம் அருளிச் செய்யவேண்டும். அதைக்கேட்க அடியேனுக்கு வெகு குதூகலமா யிருக்கின்றது" என்ற சிஷ்யருக்கு மகரிஷி யருளிச்செய்யத் தொடங்கினர்.

ஓ பிரமரிஷியே! கேளும். எம்பிரான் இந்த மனுஷ்யாவதாரத்திலே காசீநகரத்தை எரித்தருளின சரித்திரஞ் சொல்லுகிறேன். புண்டரக தேசாதிபதி சில அஞ்ஞான முள்ளவராலே "நீ சாக்ஷாத் ஸ்ரீ வாசுதேவாவதாரம்" என்று சொல்லக்கேட்டு அந்த மூட அரசன் "இவர் சொல்வது மெய்தான், நான் வாசுதேவன்றான்," என்று தன்னைச் சனங்கள் அப்படியே வழங்கும்படிச் செய்திருந்தான். மேலும் ஸ்ரீவிஷ்ணுவின் சின்னங்களாகிய சக்கராதி ஆயுதங்களையும், வனமாலை முதலானவைகளையுஞ் செய்வித்துத் தரித்துக் கொண்டிருந்தான். இப்படி யிருந்துகொண்டு மகாநுபாவரான கண்ணபிரான் சந்நிதிக்கு ஒரு தூதனை யனுப்பி அவனைக்கொண்டு "அடா மூடா கிருஷ்ணு! நீ வாசுதேவன் அல்லை, நான் வாசுதேவன். ஆதலால் இன்றுமுதல் நீ அப்பெயரையும் உன் அடையாளங்களான சங்க சக்கராதிகளையும் விட்டுவிடு. இத்தனை நாள் நீ இப்படி யிருந்த அபராதத்திற்காக உன்னை நான் கொல்லவேண்டும். அப்படி நடவாமல் உன்னுயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு, என்னைச் சரணமடை" என்று சொல்லுவித்தான். அதைக்

கேட்டுக் கண்ணபிரான் திருமுறுவல் கொண்டு அத்தூதனை நோக்கி, "ஓ தூதனே! நீ உங்களரசனான பௌண்டரகனிடஞ் சென்று, 'உன் வாக்கியத்தின் அபிப்பிராயமறிந்தேன்; எது செய்யவேண்டுமோ அதைச் செய்; நீ சொன்னபடியே நான் தடையில்லாமற் செய்கிறேன்; சமஸ்த சின்னங்களையும் தரித்துக்கொண்டு உன் பட்டணத்துக்கு வந்து இந்தச் சக்கரத்தை உன்னிடமே விட்டுவிடுகிறேன்; நீ கட்டளை யிட்டபடி நாளைக்கே உன் சரணத்துக்கு வருகிறேன்; வந்து எனக்கு இனிமேலெப்படி பயமில்லாம லிருக்குமோ அப்படிக் செய்து கொள்ளுகிறேன்; சந்தேகப்படாதே என்று சொல்" என்று அவன் சொல்லியனுப்பிய வாக்கியங்களுக்குச் * சிலேடையால் தந்திருவுள்ளப்படி அபிப்பிராயங் கற்பித்துச் சொல்லியனுப்பி, அத்தூதன் போன பின்பு நினைத்தமாத்திரத்திலே எழுந்தருளின பெரிய திருவடியின்மேலேறி அந்தப் பௌண்டரக வாசுதேவனுடைய பட்டணத்திற்கு எழுந்தருளினர்.

இவ்வாறு ஸ்ரீ கிருஷ்ணன் எழுந்தருளினதை யறிந்து காசிராஜன் பௌண்டரகனுக்குப் பக்கபலமாகப் பெரும்படையோடு வந்து சேர்ந்தான். பௌண்டரகன் தன் சேனையையும் காசீராஜன் சேனையையுங் கூட்டிக்கொண்டு சுவாமிக்கு எதிராக யுத்தத்திற்கு வந்தான். வரும்போது ஸ்ரீகிருஷ்ணசுவாமி தூரத்திலேயே அவனைக் கருடத்துவஜ மிட்டிருக்கிற பெரிய ரதத்தின்மேலே உட்கார்ந்து, கையில் சக்கரம் சார்ங்கம் தண்டம் முதலான ஆயுதங்களைத் தரித்து, பீதாம்பரமும் வனமாலையுமணிந்து, கிரீட குண்டலாதி யாபரணங்களாலே விளக்கமுற்றவனாய் மார்பிலே ஸ்ரீவச்சம்போலே ஒரு மறுவு மேற்படுத்திக்கொண்டு யுத்த சன்னத்தனாய் வந்திருக்கக் கண்டார். இப்படியாக வேடம் போட்டுக் கொண்டிருக்கு மவனைக் கண்டு, ஸ்ரீ கருடத்துவசர்

* சிலேடையாவது இரண்டுவாருள் படும்படிச் சொல்லுதல். சக்கர முதலானவைகளை உன்னிடத்திலே விட்டுவிடுகிறே னென்றால் உன்மேல் பிரயோகிக்கிறேனென்றும், சரணமென்பது இருப்பிடத்துக்கும் பேரா தலால், உன் சரணத்துக்கு வருகிறேனென்றால் உன்னிடத்துக்கு வருகிறேனென்றும், எனக்கினிப் பயமில்லாமற் செய்து கொள்ளுகிறேனென்றால் உன்னை மூலத்தோடு நாசஞ்செய்கிறேனென்றும் கருத்தாம்.

கருத்து உள்ளடங்கி யிருக்கும்படிச் சிரித்து, யானை குதிரைகள் மிகுந்ததும், கட்க கதா சூல சத்தி கார்முக முதலிய ஆயுதங்கள் விளங்கப்பெற்றதுமான அவன் சேனையோடே சண்டைசெய்து, சார்ங்கத்தினின்றும் விடப்பட்ட சரங்களாலும் கதை சக்கர முதலிய ஆயுதப் பிரயோகத்தினாலும் பௌண்டரகனுடைய சேனையையும் காசிராஜனுடைய சேனையையும் நாசமாக்கிவிட்டார். இப்படிப் படைகள் பாழாய்ப் போனதைக்கண்டு தயங்கி நின்றவனாய்த் தன் சின்னங்களைத் தரித்திருக்கின்ற பௌண்டரகனை யாதவோத்தமன் நோக்கி "ஓ பௌண்டரக ராஜனே! நீ தூதுமூலமாய் உன் சின்னங்களை விட்டுவிடென்று எனக்குக் கட்டளையிட்டாயன்றோ. அப்படியே இதோ சக்கரத்தையுங் கதையையும் உன்னிடத்திலேயே யெறிந்துவிட்டேன். அவைகளுக்கு நீ பாத்திரமாகலாம். இந்தக் கருடனையும் அனுப்பிவிட்டேன், உன் துவஜத்தில் ஏற்றிக்கொள்ளலாம்" என்று சொல்லிச் சக்கர முதலானவைகளை யேவியருளினார். சுவாமி திருக்கையினின்றும் புறப்பட்ட திருவாழி அந்தப் போலி வாசுதேவனையறுக்கக் கதாயுத முறிக்கக் கீழே விழுந்தான். அவனுடைய கொடியும் பெரிய திருவடியாலே முறிக்கப்பட்டு அவனுடனேகூட விழுந்தது. இதைக்கண்டு அங்கிருந்தவர்களுக்கு ஒரு ஹாஹாகாரம் பிறக்க, அவனுக்குப் பக்கபலமாய்வந்த மகாபலவானான காசிராஜன் சிநேகிதனுக்கு ஒரு பெருமை செய்யவேண்டுமென்று வந்து சார்ங்கியோடே யுத்தஞ் செய்தான். சுவாமி சார்ங்கத்தை வளைத்து நாணேற்றிட்டுக் குணத்தொனி செய்து சரமாரிபொழிந்து அந்தக் காசீபதியின் சிரத்தையறுத்து ஜனங்களுக்கு ஆச்சரிய முண்டாகும்படி அந்தத் தலையைக் காசிப்பட்டணத்தின் நடுத்தெருவில் விழும்படி யெறிந்தார். இவ்வகையாக ஸ்ரீயாதவபுங்கவன் பௌண்டரகனையும் காசிராஜனையும் ஸபரிவாரமாய்ச் சங்கரித்து மீண்டுந் திருத்துவாரகைக்கு எழுந்தருளி வாழ்ந்து கொண்டிருந்தார்.

காசியிலேயோ அரசன் தலைவிழக் கண்டு ஜனங்கள், "ஈதென்ன ஆச்சரியம்! யாரால் நம்மரசன் தலை

யறுப்புண்டது? இங்கெப்படி வந்து வீழ்ந்தது?" என்று கலங்கி நிற்கையில், அவ்வரசனுடைய மகன், இது வாசுதேவன் செய்த காரியமென்று தெரிந்து கொண்டு, மிகுந்த சோகமுங் குரோதமுமுடையவனாய்த் தன் புரோகிதனோடு சேர்ந்து, அந்த மகா க்ஷேத்திரத்திலே சிவனை விசேஷமாய் ஜபதபாதி ஹோமாதிகளாலே ஆராதித்தான். அந்த ஆராதனத்துக்கு உகந்து, சங்கரன் அவனை நோக்கி "இஷ்டமான வரத்தை வேண்டிக்கொள்" என்ன அந்த ராஜகுமாரன் "சுவாமீ! என் தகப்பனைச் சங்கரித்தவனை கிருஷ்ணனை வதைசெய்யும் பொருட்டு ஒருகிருத்தியைச் (பூதம்) சிருட்டித்துத் தரவேண்டும்" என்று வேண்டினான். சம்புதேவன் "அப்படியே யாகக்கடவது" என்று அநுக்கிரகித்ததனாலே, உடனே தக்ஷிணாக்கினியினின்றும் அவனுக்கே நாசஹேதுவான ஒரு கிருத்தியை உண்டாயிற்று. பிறகு அக்கினிச் சுவாலைகளினாலே சூழப்பட்டுப் பயங்கரமான முகமும் சொலித்துக் கொண்டிருக்கிற மயிர்களுள்ள தலையும் பொருந்திய அந்தக் கிருத்தியையானது அதிக கோபத்தோடு "கிருஷ்ணா கிருஷ்ணா" என்று கூவிக்கொண்டே துவாரகைக்கு ஓடி வந்தது. அதைக் கண்டு அங்கிருந்தவர்களெல்லாம் அச்சத்தினால் கண்கள் வெருண்டலைய ஓடிவந்து சகல லோக சரண்யனை ஸ்ரீ மதுசூதனனைச் சரணம் புகுந்தார்கள். அப்போது சுவாமி தேவிமாரோடு சூதாடிக் கொண்டிருந்தவர், காசிராஜனுடைய குமாரன் ஏற்றுக் கொடியோனைப் பூசித்துப் பெற்றுக்கொண்ட கிருத்தியை இது என்று திருவுள்ளம்பற்றிப் பாசிகையை உருட்டிக் கையிலே ஒரு விளையாட்டாய் அக்கினிச் சுவாலைகளாகிய ஜடாபாரமுள்ள சிரசோடு மகா வுக்கிரமாய் வருகிற இந்தக் கிருத்தியை "அழித்துவிடு" என்று திருவாழியாழ்வானுக்கு நியமித்தருளினார். நியமித்தவுடனே அந்தச் சக்கரத்தாழ்வார் அனற்கொழுந்துகளைச் சடையாகக்கொண்டு கண்ணாலும் வாயாலும் நெருப்பைக் கக்கிக்கொண்டுவந்த அந்தக் கிருத்தியையைப் பின்றொடர்ந்து வர, சிவகிருத்தியை ஸ்ரீ விஷ்ணு சக்கரப் பிரபாவத்தினால் தபிக்கப்பட்டதாய் அதைச்

சகிக்கமாட்டாமல் வந்தவழியே ஓட ஆரம்பித்தது. திரு வாழியும் விடாமல் அதைத் துரத்திக்கொண்டுபோக, அந்தக் கிருத்தியை ஸ்ரீ விஷ்ணு சக்கரப் பிரபாவத்தி னாலே தன் பிரபாவ மருத்ததாகித் தான் பிறந்த காசிக்கே போய்ச் சேர்ந்தது.

ஓ மயித்திரேயரே! இப்படியாகக் கிருத்தியை திரும்பி ஓடிவந்ததைக் கண்டு காசிராஜனுடைய பெரும் படையும் உமாபதியின் பிரதம கணப்படையும் அநேக அஸ்திர சஸ்திரங்களுள்ளவையாய் யுத்தஞ்செய்யக் கருத்துக்கொண்டு சுதரிசனாழ்வாருக்கு எதிரிலேவந்து பல ஆயுதங்களையும் அஸ்திரங்களையும் பொழிந்து நிற்க, அந்தச் சக்கரம் அவற்றையெல்லாம் சாம்பலாக்கி விட்டு அந்தக் கிருத்தியையோடும், அரசன் அவன் பரி வாரம் பட்டணத்தார் யானை குதிரை முதலானவைக ளோடும், கொட்டில்கள் பொக்கிஷங்கள் முதலான பொருள்களோடும், அக்கினிச் சுவாலைகளினாலே அலங் கரிக்கப்பட்ட மதில்சூழ்ந்த அந்தக் காசிப்பட்டண முழு வதையும் எரித்துவிட்டது. இவ்வாறு அந்தச் சத்துரு நகரத்தை யெரித்துச் சாம்பராக்கியும் சுதரிசனாழ்வார் சீற்ற மடங்காதவராகி இன்னும் ஆசிருத விரோதி நிசரூபமான கைங்கரியத்தில் விருப்பமுள்ளவராய்ச் சுவாமி திருக்கையிலே வந்து சேர்ந்துவிட்டார்.

முப்பத்துநாலாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

# பலபத்திரர் சாம்பனை மீட்டது

மயித்திரேயர் வினவுகிறார்: "சுவாமி! முனிக் கரசே! மகானுபாவரான பலராமருடைய பராக்கிரமங் களை இன்னும் கேட்க விரும்புகிறேன். யமுனாகர்ஷ ணாதிகளான சிலவற்றைக் கேட்டேனன்றோ? மற்று முள்ள மகிமையான சரித்திரங்களை அடியேனுக்குச்

சாதித்தருளவேண்டும்” என்ற சிஷ்யருக்கு ஆசாரியர் அருளிச்செய்கிறார். “ஓ மயித்திரேயரே கேளும். அனந்தனும் அப்பிரமேயனும் தரணிதரனுமுள்ள ஆதிசேஷ னென்பவருடைய அவதார விசேஷமான ஸ்ரீ பலபத்திரர் செய்தருளின காரியங்களைச் சொல்லுகிறேன்.

அஸ்தின பட்டணத்திலே துரியோதனனுடைய மகளுக்குச் சுயம்வரங் கோடித்தார்கள். அந்தச் சுயம்வரத்திலே நின்ற அந்தக் கன்னிகையைச் சாம்பவதியின் குமாரனை சாம்பனென்பவன் பலாத்காரத்தால் தூக்கிக்கொண்டு போனான். போகவே மகாபராக்கிரமவான்களான கர்ண துரியோதனாதிகளும் பீஷ்ம துரோணாதிகளும் எதிர்த்துவந்து யுத்தஞ்செய்யச் சாம்பவனும் நெடுநேரம்போரிட்டுக் கடைசியில் தோற்றுப்போனான். ஆகையால் சாம்பனை குரூரவீரர் பிடித்துக்கட்டிக் காவலிவிட்டார்கள். இந்தச் செய்தி கேட்டவுடனே ஸ்ரீகிருஷ்ணன் முதலான யாதவரெல்லாம் துரியோதனாதியரிடத்து மிகுந்த கோபமுள்ளவர்களாய் அவர்களைக் கொல்லும்படி படையெடுக்கத் துணிந்தார்கள். அத்தருணத்தில் பலபத்திரர் அவர்களைத் தடுத்து “நீங்கள் இவ்வளவு பிரயத்தினமேன் செய்யவேண்டும்? நான்போய்ச்சொன்னால் என் பேச்சைக் கௌரவர் தடைசெய்யாமல் சாம்பனை விட்டுவிடுவார்கள். ஆதலால் நானொருவனே போய் வருகிறேன்” என்று சொல்லிப் புறப்பட்டுப் போய் அஸ்தின பட்டணத்தினுள்ளே பிரவேசியாமல் வெளியிலிருந்த ஒரு தோட்டத்தில் எழுந்தருளி யிருந்தார். துரியோதனாதியர் இவர் எழுந்தருளி யிருக்கிற செய்தி தெரிந்து கொண்டு அந்தத் தோட்டத்துக்கு வந்து அர்க்கியம் பாத்தியம் மதுவர்க்க முதலானவைகளாலே அவரை அர்ச்சித்தார்கள்.

சங்கர்ஷண பகவான் அவற்றைத் திருவுள்ளம் பற்றிப் பின்பு அக்கௌரவரை நோக்கி, நம்முடைய உக்கிரசேன மகாராஜன் ஒரு கட்டளையிட்டிருக்கிறார். அதைக்குறித்து நான் வந்தேன். அஃதாவது “நம்

முடைய சாம்பனை விட்டுவிடவேண்டு மென்பதுதான்; அதை நீங்கள் கைக்கொண்டு உடனே சாம்பனை விட்டு விடவேண்டும்” என் றருளிச்செய்தார். இந்த வார்த்தையைக் கேட்டுப் பீஷ்மர் முதலானவர்களும் கர்ண துரியோதனுதியரும் பாஹ்லிகன் முதலானவர்களும் மனங்கலங்கிக் கோபமுண்டு சங்கர்ஷணரை நோக்கி உரைத்ததாவது:—

“ஓய் உலக்கை யாயுத முடைய பலபத்திரரே! இராச்சியத்திற்குத் தகாதது யதுவம்ச மென்பதை யறிந்து நீரேது இப்படிப்பேசினீர்? குருவம்சத்தாருக்கு எந்த யாதவன் கட்டளையிட மாட்டுவான்? உக்கிரசேனரும் கௌரவருக்குக் கட்டளை யிடுவாராகில் நமக்கு ராஜ யோக்கியமான சத்திரசாமரங்க ளெதற்காக? அவை யெல்லாம் உங்கள் பரிகாசத்திற்கல்லவோ இடமாகும். உங்களுக்கு நம்முடைய சார்பினு லுண்டான சத்திர சாமராதிவிபவங்களல்லவோ இவ்வளவு பேசுவதற்கு ஏதுவாயின. இனி யவைகளைப் பொறுத்திருந்தது போதும். இதிருக்கட்டும். நீர் போனுலும் சரிதான்; இருந்தாலும் சரிதான்; துஷ்டகாரியஞ் செய்த சாம்பனை நாங்கள் விடமாட்டோம். இதைக்குறித்து உக்கிரசேனன் சொன்னுலும் நீர் சொன்னுலுங் காரியம் நடக்கமாட்டாது. வணங்குதற்குப் பாத்திரரான எங்களுக்கு யாதவர் வணக்கஞ் செய்யாமலிருக்கட்டும். ஏவலாள் தலைவனுக்குக் கட்டளை யிடுகிறதென்றல் என்னென்று சொல்லுகிறது? இவையெல்லாம் கர்வத்தின் காரியம். அந்தக் கர்வமும் உங்களுக்கு நாங்கள் கூடவுட்காருவித்துக் கொள்வதும், உடன் சாப்பிடுவது முதலான காரியங்கள் செய்ததனுல் வந்தது. ஆதலால் உங்கள்மேல் குற்றமில்லை. உங்கள் நடக்கைகளை நாங்கள் உபேக்ஷை செய்திருந்ததனுல் எங்கள்மேலேயே குற்றமிருக்கின்றது. ஓ பலபத்திரா! உனக்கு நாங்கள் இப்போதும் அர்க்கியாதி வுபசாரஞ் செய்தது அன்பினுலேயன்றி மரியாதையாலன்று.” என்று சொல்லிக் கௌரவர் யாவரும் சாம்பனை விடக்கூடாதென்கிற ஒரே கட்டுப்பாடுடையவர்களாய்ச் சரேலென்று அஸ்தினுபுரிக்குச் சென்றூர்கள்.

இப்படிக் குருகுலத்தார் இகழ்ந்து பேசினதனுலும் பானமதத்தினுலும் கலக்கமுற்றுக் கரையில்லாத கோப முடையவராய்ப் பலபத்திரர் எழுந்திருந்து பக்கத்தில் தரையை யோரிடி யிடித்தார். இடிக்கவே அந்தத்தரை நான்கு பக்கமும் அதிரும்படிப் பெருங்கோஷத்தோடு பிளந்துபோயிற்று. அவர் கண்சிவக்கவும் புருவ நெறிந்து நெற்றியிலேறவும் சொன்னதாவது: "ஓகோ! பலஹீனராயும் துராத்துமாக்களாயு மிருக்கிற இந்தக் கௌரவருக்கு என்ன மதம்? என்ன கர்வம்? நமக்குத் துரைத்தனம் இயற்கையிலில்லாமற் காலபலத்தினுல் வந்ததென்று நம்மை அவமதிக்கிருர்கள். இந்த நினைப் பைக் கொண்டன்ருே உக்கிரசேன மகாராஜனுடைய ஆக்கினையை இப்போதும் உல்லங்கனஞ் செய்கிருர்கள். எப்படியிருக்கினும் சுதர்மையென்கிற அமரலோகத்து சபாமண்டபத்திலே உட்கார்ந்திருக்கிறவர் யார்? நம் முடைய உக்கிரசேன மகாராஜர்தாமே; ஆதலால் அவ ருக்குச் சமானரான அரசர் யாரிருக்கிருர்கள்? இந்திரன் கூட உட்காரவில்லையே. சீ இந்தக் கௌரவருக்கு என்ன பெருமை? அநேக மனிதர் அனுபவித்துக்கழித்த இராஜாஸனத்தை வெகுவாய்க் கொண்டாடுகிருர்கள். எவனுடைய பெண்டிர்கள் தேவர்க்குரிய பாரிஜாதப் பூங் கொத்துகளைத் தரிக்கிருர்களோ அப்படிப்பட்ட வேந் தர் வேந்தன், ஊழியக்காரரான் இந்தக் குருகுலத்தாருக்கு அரசனுகாமற் போகிருனல்லவா? சகல மன்னர்களுக் கும் அதிபதியான உக்கிரசேன னிருக்கட்டும். இப் போது நான் பூமியிற் கௌரவப்பூண்டில்லாமற்செய்து, அப்புறம் துவாரகைக்குச் செல்வேன். இப்போது நான் கர்ணன் துரியோதனன் துரோணன் பீஷ்மன் பாஹ்லி கன் துச்சாதனுதியர் பூரி பூரிச்சிரவன் சோமதத்தன் சலன் பீமன் அருச்சுனன் யுதிஷ்டிரன் நகுல சகாதேவர் கள் முதலான கௌரவரனைவரையும் அவருடைய சது ரங்க சேனைகளையும் நாசஞ்செய்து வீரனுன நம்முடைய சாம்பனை அவன் வேட்டமனைவியோடு அழைத்துக் கொண்டு துவாரகைக்குப்போய் உக்கிரசேனுதிகளைக் காண்கிறேன். இந்த வருத்தந்தான் நமக்கேன்? கௌர வர் வாசஞ்செய்துகொண்டிருக்கிற இந்நகரத்தையே கங்

கையிற் கவிழ்த்துப்போடுவோம். இதுவே சுலபமான காரியம்" என்று சொல்லி மதத்தினாற் கண் சிவந்தவராய் உழுபடையைக் கீழேகொண்டிருக்கிற தமது ஆயுதத்தை மதிளின்மேற் கட்டிய அலங்கமென்னும் துவர்க்கத்தில் மாட்டியிழுத்தார். இழுக்கவே, அப்பட்டண முழுதும் அசைந்து நடுங்கிற்று. அதைக்கண்டு கௌரவரெல்லா மனங்கலங்கி ஏக்கமுற்றுக் கோகோவென்று கதறிக்கொண்டு அந்த முசலாயுதர் சந்நிதியில் வந்து, "ஸ்ரீராம பகவானே! ஸ்ரீராமபகவானே! மகாபுஜபலமுடையவரே! பொறுத்தருளவேண்டும், பொறுத்தருளவேண்டும். கோபத்தையடக்கி அடியேங்களிடத்தில் இரங்கியருளவேண்டும். இதோ தேவரீருடைய சாம்பனை யவன் பத்தினியோடு கூடக்கொண்டுவந்து சமர்ப்பித்து விட்டோம். தேவரீருடைய பிரபாவமறியாமல் அபசாரப்பட்ட அடியேங்களைப் பொறுத்து அருளவேண்டும்" என்று முறையிட்டுப் பீஷ்மர் துரோணர் கிருபர் முதலானவர்களெல்லாம் சாம்பனைப் பத்தினியோடு விரைவாய்க் கொண்டுவந்து சமர்ப்பித்துச் சாஷ்டாங்கமாய் விழுந்து பிரணமஞ்செய்து வேண்டிக்கொள்ள, ஸ்ரீசங்கர்ஷணமூர்த்தியும் "பொறுத்தேன், பயமில்லை" என்று அபயம் பிரசாதித்துக் கலப்பையை அலங்கத்தினின்றும் வாங்கியருளினார்.

ஓ மயித்திரேயரே! அதனாலேதான் அந்த அஸ்தினாபுரியானது இப்போது கொஞ்சஞ் சாய்ந்த வடிவாகக் காணப்படுகின்றது. ஐயா, இது ஸ்ரீபலராமருடைய சௌரிய பிரபாவம். பின்பு கௌரவர்கள் சாம்பனுக்கு மருமகன் மரியாதைகளைச் செய்து சீதனங்களோடு தங்கள் பெண்ணையுங் கூட்டி நீலாம்பரப் பெருமான் பின்னே அனுப்பி விட்டார்கள்.

முப்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## முப்பத்தாறும் அத்தியாயம்

# துவிதசங்காரம்

மித்திராபுத்திரரே! கேளும். மகாபலவானுன பலராமருடைய பலமகிமையைச் சொன்னேனே; இன்னுமவர் செய்ததைச் சொல்லுகிறேன். நரகாசுரனென்ருெரு தேவசத்துரு இருந்தானே, அவனுக்குச் சிநேகிதன் துவிதனென்று ஒரு வானர சிரேஷ்டனிருந்தான். அவன் பல பராக்கிரமங்களிற் சிறந்தவன். அவன் இந்திரன் ஏவினதினுலே கிருஷ்ணன் தன் சிநேகிதனுகிய நரகனைக் கொன்ருனென்று தேவர்மேற் பகை பாராட்டித் "தேவர்க்கும் மனிதருக்குந் தீங்கு செய்யக்கடவேன்" என்று நினைத்து அஞ்ஞானமோகத்தினுல் யக்கியங்களை யழிப்பதும், சாதுக்களுடைய மரியாதைகளை மாற்றுவதும், பிராணிகளை யழித்துக் காடுகள் தேசங்கள் பட்டணங்கள் கிராமங்கள் முதலானவைகளைக் கொளுத்துவதும், மலைகளைத் தூக்கிப்போட்டு ஊர்களை நொறுக்குவதும் மலைகளைப் பெயர்த்துக் கடலிலே போட்டுக் கடலில் நடுவே நின்றுகொண்டு அதனைக் கலக்கிக் கரைபுரளும்படிசெய்து கரையிலுள்ள குடியிருப்புகளை முழுத்துவதும், காமரூபியாகையாலே மிகவும் பெரியவொரு ரூபமெடுத்துக்கொண்டு பயிரில் விழுந்து புரண்டு பயிர்களைப் பாழாக்குவதுமாய் லோகங்களுக்குத் தீங்கு செய்து வந்தான். அதனுலே உலகம் வேதாத்தியயனம் யாகமுதலான வைதிகச் செய்கைகளற்று மிகுந்த துயரமுற்றிருந்தது. இப்படியிருக்குங்காலத்தி லொருநாள் மூத்தநம்பி இரேவதி தேவியோடும் மற்றுஞ் சில தேவிமாரோடும் இரைவதமென்கிற பருவதத்தின் உத்தியான வனத்திற்சென்று மதுபானஞ்செய்து ஸ்திரீகளினடுவிலே ஆட்டமும் பாட்டுமாய் வெகு உல்லாசம் பொருந்தி நந்தவனத்தில் இந்திரன் இருப்பதுபோலே மிகவுங் களித்திருந்தார். அந்தவிடத்தில் அவ்வானரவீரன் வந்து, அவருடைய ஆயுதமான கலப்பை யுலக்கைகளை யெடுத்துக்கொண்டு அவர்க்கெதிரில் நின்று, புருவநெரிக்கிறதும் பற்களைக்

காட்டுகிறதும் உற் என்பதுமாகிய பற்பலவிதங்களாலே பரிகாசஞ் செய்ததுமன்றி, அந்தத் தேவிமாருக்கும் எதிரில் நின்று நகைப்பதுங் குதிப்பதுமாகப் பல சேஷ்டைகள்செய்து மத்தியம் நிறைத்துவைத்திருந்த பாத்திரங்களை யெடுத்துக் கவிழ்த்துமெறிந்தும் பல வகைத் துன்பங்களைச் செய்துவந்தான். அதைக்கண்டு ஹலாயுதர் கோபங்கொண்டு வெருட்ட, அதனை மதியாமல் அந்தத் துஷ்டன் சிசுகிசென்று கூவிக்கொண்டு துஷ்டகாரியங்களையே செய்துவந்தான். அதனாலே பகவான் கொஞ்சஞ் சிரித்துத் தமது உலக்கையை யெடுக்க, அந்த வானரபுங்கவனும் ஒரு பெரிய மலைக் கல்லைக் கையிலெடுத்து அவர்மேலெறிந்தான். அவரோ அந்தப் பெரிய கல்லைத் தமது முசலத்தினாலே பல துண்டுகளாக்கிவிட்டார். இவ்வண்ணமாய் அந்தப் பெருங்கல் சூரணமாய்க் கீழே விழுந்ததனாலே பிலவங்கமன் கோபமூண்டவனாய் முசலத்தையுந் தாண்டி யெழும்பிக் கையினால் அவர் திருமார்பி லறைந்தான். பின்பு முசலாயுதர் அதிக கோபமடைந்து முஷ்டியினாலே அக்குரங்கின் தலையிலிடிக்க துவிதன் உதிரங் கக்கிக்கொண்டு உயிரிழந்து தரையில் விழுந்தான்.

ஓ முனிவரே! இந்த ஆச்சரியத்தைக் கேளும். கவிபுங்கவன் கீழே விழுந்தபோது, அவனுடைய சரீரம் பட்டமாத்திரத்திலே அம்மலையின் கொடுமுடியொன்று இந்திரனுடைய வச்சிராயுதத்தினாற் பிளக்கப்பட்டதுபோலே பலபிளவாய்ப் பிளந்து வீழ்ந்தது. இவ்வாறு கொடிய குரங்கு மடிந்தபோது தேவர்கள் பகவான்மீதில் பூமழை பொழிந்து சந்நிதிக்கு வந்து, "ஓ மகானுபாவனே! ஓ மகாவீரனே! நீ மிகவு மேன்மையான நற்காரியஞ் செய்தருளினாய். இந்தத் தீயமந்தி அசுரபக்ஷத்துக்கே உபகாரஞ் செய்து தேவர்களுக்கெல்லாம் அபகாரஞ் செய்து வந்ததனால் உலகம் வெகுதுன்பமுற்றது. இப்போது உலகத்தின் பாக்கியவசத்தினால் அவன் உம்மாலே நாசமடைந்தான்" என்று துதித்து மீண்டும் தமதுலகத்துக்குச் சென்றார்கள். இப்படி ஞானவா

ணையும் பூமியைத் தாங்கு மாதிசேஷனுடைய திருவவதாரமாயுமுள்ள ஸ்ரீபலபத்திர பகவானுடைய திவ்விய சரித்திரங்கள் பல வுண்டு என்று பராசரர் அருளிச்செய்தார்.

முப்பத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## முப்பத்தேழாம் அத்தியாயம்

# சுவாமி தன்னடிச்சோதிக்கு எழுந்தருள்வது

கேட்டீரோ மயித்திரேயரே! இப்படிக் கண்ணபிரான் மூத்த நம்பியோடு கூடி உலோக ரக்ஷணார்த்தமாய் அசுரரையும் துஷ்டராஜாக்களையும் வதைத்தருளினான். மேலும் சூதாட்டில் மோசம்போய் இராச்சிய முதலானவைகளைப் பறிகொடுத்துவிட்ட பாண்டவர்களுக்குத் தூதனாகிக் கௌரவ சபைக்கு எழுந்தருளிப் போரின்றிப் பாண்டவர் அரசுரிமைபெற வேண்டுமென்று தான்கேட்டகாரியம் பெருமறச்சண்டைமூள, அந்தப் பாரதப்போரில்தான் அர்ச்சுனனுக்குச்சாரதியாய் நின்று அனேக இராஜாக்களையும் அவர்களுடைய அனேக அக்ஷௌகிணி சேனைகளையு மடித்துப் பூமிபாரத்தை இறக்கியருளினான். இவ்வண்ணம் சர்வேசுவரன் யதுகுலத்தி லவதரித்துத் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனங்களினாலே உலகத்தை இரக்ஷித்தருளி, முனிவர் சாபமென்கிற வியாஜத்தினாலே தாமவதரித்த குலத்தையும் உபசங்கரித்துப் பிறகு துவாரகையையு மனுஷ்ய பாவனையையும் விட்டுத் தன்னுடைய அம்சமான சங்கர்ஷணாதிகளோடு தனது ஸ்தானமான பரமபதத்திற்கு எழுந்தருளினான் என்று அருளிச்செய்த மகாரிஷியை நோக்கி மயித்திரேயர் "ஓ முனிபுங்கவரே! ஸ்ரீ பகவான் முனிசாப வியாஜத்தினாலே குலத்தை எப்படி உபசங்கரித்தருளினார்? எப்படித் தமது மனுஷ்ய திருமேனியை விட்டருளினார்? இவற்றை அருளிச்செய்வீர்" என்று வினவ, பிரம ரிஷி யருளிச்செய்கிறார்:

கேளும் பிராமணோத்தமரே! ஒருகால் யாதவகுமாரர் பிண்டாரகமென்னுந் தீர்த்தத்திலே விசுவாமித்திரர் கண்வர் நாரதர் என்கிற மகா முனிவர்களைக் கண்டார்கள். அப்போ தவர்கள் யவ்வனாதிகளினாலே கர்வித்ததினாலும் பின்னாலே விதி அப்படி வரவேண்டி யிருக்கிறபடியினாலும் புத்திகெட்டு, ஜாம்பவதியின் குமாரனை சாம்பனைப் பெண்பிள்ளைபோல அலங்கரித்து, அம்முனிவர்களிடத்திற்கு வணக்கத்தோடுசென்று தொழுது, "சுவாமிகாள்! இந்தப் பெண் கருவுற்றிருக்கின்றாள்; இவள் ஆண்பிள்ளையைப் பெறுவாளோ? பெண்பிள்ளையைப் பெறுவாளோ? அருளிச்செய்ய வேண்டும்" என்றார்கள். முக்காலமு முணர்ந்த அம் முனிவர்கள் யாதவகுமாரர் செய்த பரிகாசத்தினாலே கோபமூண்டவராகி, அக் குமாரரை நோக்கி, "இவள் ஆண்பிள்ளையையு மன்று, பெண் பிள்ளையையு மன்று, ஓரிருப்புலக்கையைப் பெறுவள். அதனாலே சகல யாதவகுலமும் நாசமாகும்" என்றுரைத்தார்கள். என்றிப்படி மகாரிஷிகள் சொன்னதை அவ் யாதவ குமாரர்கள் உக்கிரசேனனுக்கு அறிவித்தார்கள். உடனே சாம்பன் வயிற்றினின்று மோருலக்கை யுண்டாயிற்று. அதை உக்கிரசேனன் பொடியாக்கிக் கடலிற் கொட்டிப்போடும்படிக் கட்டளையிட, அப்படியே செய்தார்கள். அப்பொடிகளோ கடற்கரையில் கோரைகளாக முளைத்தன. ஆரவின அவ் விருப்புலக்கையின் மிகுதித்துண்டொன்று அம்பின் முள்ளைப்போன்றிருந்தது. அதையும் கடலிலெறிந்தார்கள். அதை ஒரு மீன் விழுங்கிற்று. அம்மீனைச் செம்படவர் பிடித்து அறுத்தபோது, அதின் வயிற்றிலிருந்த அவ் விரும்பு முள்ளை ஜரன் என்கிற ஒரு வேடன் எடுத்துத் தன்னம்பில் வைத்துக்கொண்டான். ஸ்ரீ பகவானோ இவற்றையெல்லா மறிந்திருந்தாலும் தமது சங்கற்பத்தால் அதை முழுவதும் மாற்றத் திருவுள்ளம் பற்றவில்லை. இத்தருணத்தில் தேவதைகளினாலே அனுப்பப்பட்டு வாயுதேவன் வந்து சுவாமியைத் தண்டம் சமர்ப்பித்து, இரகசியத்தில் இவ்வாறு விண்ணப்பஞ் செய்யலாயினன்.

"சுவாமி பகவானே! அடியேன் தேவராலே தேவரீர் சந்நிதிக்குத் தூதனாக அனுப்பப்பட்டேன். ஓ மகா பிரபுவே! வசுக்கள் அசுவிகள் மருத்துக்கள் ஆதித்தியர் உருத்திரர் சாத்தியர் முதலானவர்களோடுகூடத் தேவேந்திரன் தேவரீர் சந்நிதியில் விண்ணப்பஞ் செய்கிறான். திருச்செவிசாற்றியருளவேண்டும். என்னவெனில், அடியேங்களுடைய பிரார்த்தனையாலே பூமிபாரம் நீக்கும் பொருட்டுத் தேவரீர் பூமியிலவதரித்தருளித் தேவதைகளோடு கூடவே நூறு திருநக்ஷத்திரங்களுக்கு மேலே இங்கெழுந்தருளி யிருக்கிறீர். மிகவுங் கொடுமையுடைய அசுரரை யெல்லாஞ் சங்கரித்தருளிப் பூமிபாரத்தை நீக்கியருளினீர். இனி அடியேங்கள் தேவரீரைச் சுவர்க்கலோகத்திலே சதாசேவித்துக் கொண்டிருக்கும் படிக் கிருபை செய்யவேண்டும். ஓ ஜகந்நாதனே! இங்கே நூறாண்டுக்கு மேலும் எழுந்தருளி யிருந்தது திருவுள்ளமானால் சுவர்க்கத்துக்கு எழுந்தருளவேண்டும். அல்லது இங்கேயே எழுந்தருளியிருக்கத் திருவுள்ளமானால் அப்படியே எழுந்தருளி யிருக்கலாம். சுவாமியின் திருவுள்ளத்தின்படியன்றோ அடிமைகளிருக்க வேண்டும்" என்று வாயுதேவன் விண்ணப்பஞ் செய்ததைக்கேட்டு ஸ்ரீபகவான் அருளிச்செய்ததாவது: ஓ தேவதூதனே! நீ சொன்னதெல்லாம் எனக்குத் தெரியும், யாதவர்களை நாசஞ்செய்ய ஆரம்பித்து விட்டேன். இவ் யாதவர்கள் மடியாமற்போனால் பூமிபாரம் நீங்கிவிட்டதென்று சொல்லப்போகாது. ஆதலால் ஏழு ராத்திரிக்குள்ளேயே இதைத் தீர்த்துவிடுவேன். இந்தத் துவாரகா நகரத்திற்கு இடம் சமுத்திர ராஜனிடத்திலன்றோ முன்பு பெற்றுக்கொண்டேன். மறுபடியும் அவ்விடத்தை அச்சமுத்திர ராஜனுக்கே கொடுத்து விட்டு யாதவர்களையு முடித்துவிட்டு உங்களிடத்துக்கு வருவேன். இந்த மனுஷ்ய தேகத்தைவிட்டுச் சங்கர்ஷனோடு நான் வந்துவிட்டேனென்றே இந்திரனும் தேவர்களும் நினைக்கவேண்டும். இந்நிலத்திற்குப் பாரமாயிருந்த ஜராசந்தன் முதலானோர் யார் யார் மடிந்தார்களோ அவர்களாலே ஒரு யாதவ சிசுவும் மடியவில்லை. ஆதலால் இம் மண்ணுலகத்துக்குப் பெரும்

பாரமாகிய யாதவர்களையெல்லாம் மடித்துப் பிறகு உங்களுலகத்தைக் காக்கும்பொருட்டு வருவேனென்று இந்திராதியர்க்கு அறிவிக்கக் கடவாய்" என்றிப்படி எம்பெருமான் அருளிச் செய்யக்கேட்டுத் தேவதூதன் சுவாமிக்குத் தண்டம் சமர்ப்பித்துத் தேவர் சொல்லும் வழியாலே தேவலோகஞ் சேர்ந்தான்.

பின்பு கண்ணபிரான் இரவும்பகலும் நாசக்குறியாகிய * திவியம் பௌமம் அந்தரிக்ஷஜம் என்கிற மூவகை உற்பாதங்களும் உண்டாகக்கண்டு, யாதவர்களை நோக்கி "பார்த்தீர்களோ, இங்கே பலவகையான மிகவுங் கொடிய உற்பாதங்களுண்டாகின்றன. இவற்றின் தோஷம் சாந்தமாகும்பொருட்டுச் சீக்கிரமாய்ப் பிரபாச தீர்த்தத்திற்குப் போவோம் வாருங்கள்" என்றருளிச் செய்தான். இம்மொழியைக்கேட்டு யாதவர்களிற் சிறந்தவரும் பரமபாகவதருமான உத்தவர் சுவாமி சந்நிதியிலே தண்டம் சமர்ப்பித்து, "எம்பெருமானே! தேவரீர் இந்தக் குலத்தை முடிக்கத் திருவுள்ளம் பற்றினதாய்த் தோன்றுகின்றது. இப்போது அடியேன் செய்யத்தக்கதெதுவோ அதை நியமித்தருளவேண்டும். இவ்வுற்பாதக்குறிகள் இவ் யதுகுலத்தின் அழிவுக்காக உண்டாயினவென்று நினைக்கிறேன்" என்று விண்ணப்பஞ்செய்து பிரார்த்தித்தார். அவரைநோக்கி ஸ்ரீபகவான் அருளிச்செய்ததென்னவெனில்.

"ஓ உத்தமரே! நாம் உமக்குத் தேவதா மார்க்கத்தாற் செல்லத்தக்க சக்தியைப் பிரசாதிக்கிறோம். அதைக்கொண்டு நீர் கந்தமாதன பருவதத்தினிடத்தே யிருக்கின்ற பரிசுத்தமான பதரிகாச்சிரமத்தைச் சேரும். இந்தப் பூலோகத்திலே நரநாராயண ஸ்தானமாகிய அதுதான் மிகவும் பவுத்திரமான க்ஷேத்திரம். அங்கேயிருந்து நீர் நம்மிடத்திலே சித்தம் நிலைநாட்டிச் சிந்தித்துக்கொண்டிருந்து, நம்முடைய கிருபையினாலே மோட்சபிராப்தி ரூபமான சித்தியையடைவீர். நாமோ

* திவியமாவது - கிருத நக்ஷத்திராதிகளுடைய விகாரம். பௌமமாவது- பூமி நடுங்குதல் முதலானவை. அந்தரிக்ஷஜமாவது - ஆகாசத்தினின்றும் கொள்ளிவீழ்தல் முதலானவை.

நம்முடைய வமிசத்தை உபசங்கரித்துவிட்டு, உத்தம ஸ்தானத்திற்குப் போம்படி நிச்சயித்திருக்கிறோம். நாம் நீங்கினவுடனே துவாரகையைச் சமுத்திரம் மூழ்த்திவிடும். ஆனால் நம்மிடத்தி லச்சத்தினாலே நம்முடைய திருமாளிகையை மாத்திரம் மூழ்த்தமாட்டாது. நாமோ அடியார்களுக்கு இதஞ்செய்யுங் கருத்தினாலே அத் திருமாளிகையிலே சான்னித்தியஞ் செய்திருக்கிறோம்'' என்றிப்படி நியமித்து, அவருக்குத் தத்துவஞானத்தையும் ஆராதனாதி கிரமத்தையும் உபதேசித்துப் பாதுகைகளையும் பிரசாதித்தருளினார். இவ்வாறு கண்ணனுடைய அநுக்கிரகம் பெற்று, உத்தவர் அவரைத் திருவடிதொழுது ஸ்ரீ நரநாராயண ஸ்தானமான அந்தத் தபோவனத்திற்கு விரைவாய் எழுந்தருளினார்.

பின்பு யாதவர்கள் யாவரும் ஸ்ரீவாசுதேவ சங்கர்ஷணர்களோடு தேர்களின்மே லேறிக்கொண்டு பிரபாசத்துக்குப் போனார்கள். போய்க் குகுரர் அந்தகர் விருஷ்ணிகள் என்று சொல்லப்பட்ட பல கூட்டத்தாரான யாதவர்கள் விசேஷமாக மதுபானஞ் செய்தார்கள். செய்யவே மிகுந்த வெறி யேறினதினாலே அவர்களுக்குள்ளே ஒருவரையொருவர் மேற்கொள்ளத்தக்க அதிவாதமாகிய இந்தனங்களைப் பற்றிய (கட்டை) கலகாக்கினி யொன்றுமுண்டது.

இப்படிக்குச் சொல்லி வரும்போது மயித்திரேயர் கேட்கிறார்: ''மகாரிஷியே! தந்தமக்குள்ள அன்னபானங்களைப் புசித்த அவர்களுக்குள்ளே கலகமெப்படியுண்டாயிற்று? மேற்கொள்ளு நினைப்பினாலென்றால் அதுதான் என் உண்டாயிற்று? அதைச் சொல்ல வேண்டும்'' என்ன, முனிவர் அருளிச்செய்கிறார்.

கேளுமையா, என்னுடைய அன்னம் நன்றாயிருக்கிறது என்றொருவன் சொல்ல, அதை மறுத்து மற்றொருவனும் அப்படியே சொல்ல, இப்படி யாவருஞ் சொல்லத் தலைப்படவே, ஒருவரை யொருவர் சாதிக்க வேண்டுமென்கிற நினைப்புண்டாகிக் கலகமுண்டது. தெய்வசங்கற்பமும் தூண்ட அவர்கள் யாவரும் கோபத்

தாற் கண்சிவந்து ஒருவர்மேலொருவர் ஆயுதங்களைப் பிரயோகிக்கத் தலைப்பட்டார்கள். இப்படி மூண்ட அப் பெருஞ் சண்டையிலே ஆயுதங்களனைத்து முறிந்து போனதனாலே அருகிற் கடற்கரையில் முளைத்திருந்த கோரைகளைப் பிடுங்கிக்கொள்ள, அவை வச்சிராயுதத் துக்குச் சமானமாகித்தோன்ற, அவற்றினாலே யொரு வரையொருவர் அறைந்து கொண்டார்கள். இவ்வா றடித்துக்கொண்டிருந்த பிரத்தியும்நன் சாம்பன் முத லானவர்களையும், கிருதவர்மா சாத்தியகி அநிருத்தன் முதலானவர்களையும், பிருது விபிருது சாருவர்மா சாருகன் அக்குரூரன் முதலானவர்களையும் கண்ணன் வேண்டாமென்று தடுக்கப்போக, அவர்கள் கண்ணனைத் தங்கள் தங்கள் எதிரிகளுக்குச் சகாயஞ் செய்பவரா யெண்ணி, அவரையும் அடிக்க வந்தார்கள். வரவே சுவாமியும் ஒரு பிடிக் கோரையைப் பிடுங்கிக்கொண்டு இருப்புலக்கைபோலான அதனாலே தம்மை எதிர்த்து வந்த யாதவர்களைச் சங்கரித்தருளினார். மற்ற அநேக ரும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு மடிந்தார் கள். பின்பு வெற்றி பொருந்திய கண்ணன் திருத் தேரானது சாரதியான தாருகன் பார்த்துக்கொண்டே யிருக்கச் சமுத்திரத்தினடுவிலே குதிரைகளால் வகிக்கப் பட்டுச் சென்றது. அப்படியே சங்க சக்கர கதா கட்க சார்ங்கங்களாகிய பஞ்சாயுதங்களும் சுவாமியைப் பிர தக்ஷிணஞ் செய்து சூரியமார்க்கமாய்ப் போய்விட்டன. அப்போது அங்கே கண்ணனுந் தாருகனுந் தவிர, யாதவர்களிலெவனும் அடிபட்டு விழாதவனில்லை.

இப்படி யாதவர்களெல்லாம் மடிந்தவுடனே சுவாமியும் தாருகனும் அங்கே சஞ்சரித்து வருகையில் ஒரு மரத்தடியிலே பலராமர் எழுந்தருளியிருக்கவும், அவர் திருமுகமண்டலத்தினின்று மொருசர்ப்பம் சொலி த்துக் கொண்டு புறப்படவுங் கண்டார்கள். அந்த முகத்தினின்று முண்டாகிய மகாநாகம் சமுத்திரத்தி லெழுந்தருளி அங்கே சித்தாதிகளும் நாகர்களும் வந்து துதிக்கச் சமுத்திரராஜன் அர்க்கியமெடுத்து எதிர் கொண்டுவந்து ஆராதிக்கச் சமுத்திரஜலத்தினுள்ளே புகுந்துவிட்டது.

அப்போது ஸ்ரீபகவான் சாரதியை நோக்கி "ஓ தாருகா! நீ நம்முடைய பட்டணத்துக்குப்போய் யாதவரெல்லாம் மாண்டதும், பலதேவர் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினதும் வசுதேவருக்கும் உக்கிர சேனருக்குஞ் சொல்லு. நானும் யோகநிஷ்டையினால் இவ்வுடம்பை விடப்போகிறேன். மேலும் அந்தத் துவாரகையைச் சமுத்திரம் முழுத்தப் போகிறது. இவையெல்லாம் ஆகுகருக்கும் இன்னும் பட்டணத்திலுள்ளவர்களுக்குஞ்சொல்லி, நீங்கள் யாவரும் அர்ச்சுனனுடைய வரவை எதிர்பார்த்திருந்து அவனோடு கூடப் போக வேண்டும். துவாரகையி லிருக்கவேண்டாம் என்று சொல்லு. இங்கிப்படிச் சொல்லிவிட்டு அஸ்தினைபட்டணத்துக்குப்போய் அர்ச்சுனனைக்கண்டு நான் சொன்னதாக, நீ சீக்கிரம் துவாரகாபுரிக்கு வந்து என்னுடைய குடும்பங்களைக் கூடுமானவரையிலுங் காப்பாற்றவேண்டுமென்று சொல்லி, அர்ச்சுனனோடுகூட நீயுமிருந்து துவாரகையி லிருப்பவர்களை யெல்லாம் அப்புறமழைத்துப்போ நம்முடைய வச்சிரனை யாதவருக்கு அரசனாகச் செய்து கொள்ளுங்கள்" என்று நியமித்தருளினார். இந்த நியமனத்தைக் கேட்டுத் தாருகன் அனேகந்தரம் சுவாமியைப் பிரதக்ஷிணஞ் செய்து, அநேகமாய்த் தண்டம் சமர்ப்பித்துத் துவாரகைக்குச்சென்று, வசுதேவர் முதலானோர்க்குச் செய்திகளைச்சொல்லி, அர்ச்சுனனண்டையும் போய்ச் சங்கதிகளைச்சொல்லி, அவனையுமிட்டுக்கொண்டு துவாரகைக்கு வந்து, வச்சிரனுக்குப் பட்டாபிஷேகமுஞ் செய்வித்தான்.

இதற்குள்ளே பகவானான ஸ்ரீகோவிந்தன் சர்வபூதங்களு மிருக்கிற வாசுதேவஸ்வரூபமான பிரமம் தானென்று நினைத்துச் சகல பிரபஞ்சாதீதமான தன் சொரூபத்திலே நின்று விளையாட்டாய் அங்கே பள்ளி கொண்டான். அப்போது துர்வாசமுதலிய முனிகளுடைய வாக்கியத்தைப் பெருமைப்படுத்தும் பொருட்டு ஒரு முழந்தாளின்மேல் மற்றொரு திருவடியை வைத்து யோகநித்திரை கண்டருளினான். அப்போது அங்கே அராவிக் கடலிற் கொட்டிப்போட்ட இருப்புலக்கையின் சிறிய துணுக்கையைத் தன்னம்புக்கு முள்ளாக வைத்

துக்கொண்டவனுன ஜரனென்கிற வேடன் வந்தான். தூரத்திலிருந்து சுவாமியின் திருவடியை ஒரு மிருகமாக நினைத்து, அவ்வம்பை அத்திருத்தாளினடிப்புறத்தில் எய்தான். எய்தவுடனே அங்கே நான்கு திருத்தோள்களோடு ஜாஜ்வல்யமானதாய்த் தோன்றின ஒரு புருஷனைக் கண்டான். உடனே ஓடிவந்து அவ்வேடன் பலமுறைத் தண்டம் சமர்ப்பித்து, சுவாமி! அடியேன் தெரியாமல் மானென்று நினைத்துச் செய்த இப்பிழையைப் பொறுத்தருளவேண்டும். இந்த மகா பாபாக்கினியால் எரிந்துபோன அடியேனைக் காப்பாற்றியருளவேண்டும்'' என்று வெகுவாய்ப் பிரார்த்தித்தான். ஸ்ரீ பகவான் அவனைக் கடாக்ஷித்து, "வேடா! நீ சிறிதும் அஞ்சவேண்டாம், உனக்குப் பாதகமில்லை, என்னனுக்கிரகத்தினுலே சொர்க்கமடையக் கடவை'' என்றருளிச் செய்தார். உடனே அங்கே ஒரு திவ்விய விமானம் வர, அவ்வேடன் பகவானுடைய கிருபையினுலே அவ்விமானமேறிச் சுவர்க்கத்திற்குச் சென்றான்.

இவ்வாறு அவனுக்குத் தன் சரீரத்துடன் சொர்க்கமடையும்படி அனுக்கிரகித்து உடனே கண்ணன் அவ்யயமாயும் அசிந்தியமாயும் அமலமாயும் ஜனனமரணங்களில்லாததாயும் அப்பிரமேயமாயும் சர்வாத்துமகமாயும் வியாபகமாயும் வாசுதேவ ஸ்வரூபமாயும் பிரமமாயுமுள்ள தனக்குள்ளே தன்னைச் சேர்த்து முக்குணகதியைக் கடந்து தன் திருமேனியை விட்டருளினுன்.

முப்பத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

# அர்ச்சுனனுக்கு வியாசர் உண்மை யருளிச்செய்தது

கேளும் மயித்திரேயரே! அங்கு வந்த அருச்சுனன் ஸ்ரீவாசுதேவ சங்கர்ஷணர்களுடைய திருமேனிகளைத் தேடியெடுத்துச் சம்ஸ்காரஞ் செய்வித்தான். அப்போது ஸ்ரீருக்குமணிப் பிராட்டிமுதலிய தேவிமாரெண்மரும் சுவாமியின் திருமேனியோடு அக்கினியிற் பிரவேசித்தார்கள். இரேவதியும் பலபத்திரர் திருமேனியோடு அனலிலிறங்கினுள். இச்செய்திகளை உக்கிரசேனரும் வசுதேவரும் தேவகி ரோகிணிகளும் கேட்டவுடனே அக்கினிப் பிரவேசஞ் செய்துவிட்டார்கள். பின்பு அர்ச்சுனன் யாவருக்கும் சரமகிரியைகளை நடத்தித் துவாரகையிலிருந்து வச்சிரனையும் கண்ணனுடைய பல தேவிமாரையும் மற்றுமுள்ளவர்களையும் அழைத்துக்கொண்டு இப்புறம் வந்துவிட்டான். ஸ்ரீ கிருஷ்ணபகவான் பூலோகத்தைத் துறந்ததனுலே சுதர்மையென்கிற தேவசபையும் பாரிஜாத விருட்சமும் உடனே தேவலோகம் போய்ச் சேர்ந்தன. எந்தத் தினத்திலே ஸ்ரீ ஹரிபகவான் பூலோகத்தைவிட்டுத் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளினுரோ அன்றைக்கே கறுத்த தேகமுள்ளவனும் வலவானுமான கலி பூமியில் நன்ருய்ப் பிரவேசித்தான். இப்படி யாருமில்லாமற் பாழான துவாரகாநகரத்தை உடனே சமுத்திரம்மூழ்த்திவிட்டது. ஆனுல் சுவாமியின் திருமாளிகையோவெனில், அங்கே ஸ்ரீ பகவானுன கேசவன் எப்போதும் சாந்நித்தியமா யெழுந்தருளி யிருக்கிருன்ருே? அந்த க்ஷேத்திரம் மிகவும் புண்ணியமானது. சகல பாதகங்களையும் போக்கத்தக்கது. ஸ்ரீ விட்டுணு தேஜசோடுகூடின அந்த க்ஷேத்திரத்தைக்கண்ட மாத்திரத்திலே மனிதன் பாபங்களினின்றும் விடுபடுவான். ஆதலால் அதைக் கடக்கக் கடலுக்கு இப்போதும்

சாமர்த்தியமில்லை ஆனதால் அதை மாத்திரம் மூழ்த்த வில்லை.

துவாரகாவாசிகளை யழைத்துக்கொண்டு புறப் பட்ட அர்ச்சுனன் பஞ்சநத மென்கிற தேசம் தன தானிய சம்பத்து மிகுந்ததாகையால் அங்கே யாவரை யும் இருத்திக் காத்துக்கொண்டிருந்தான். அங்கு அர்ச் சுனனொருவன் கணவனில்லாத அநேகவாயிரம் பெண் டிர்களைக் கொண்டுபோகக்கண்டு சில திருடருக்கு மிக்க ஆசையுண்டாயிற்று. அதனாலே அந்தப் பாபிஷ்ட ரான இடையர் ஒன்றாய்ச் சேர்ந்து ஆலோசித்ததாவது "அர்ச்சுனனொரு வில்லாளி" நாதனில்லாத அனேக ஸ்திரீகளை யிட்டுக்கொண்டு போகிறான்; நாமிங்கே இருக்கிறோ மென்பது அவனுக்குத் தோன்றவில்லை யன்றோ? நம்மை அவன் அலட்சியஞ்செய்து போவ தை நாம் சகித்துக்கொண்டிருந்தால் நமது பலத் தைச் சுடவேண்டும்; இந்த அர்ச்சுனனோ பீஷ்மர் துரோணர் கர்ணன் ஜயத்திரதன் முதலானவர்களைச் சங்கரித்த கருவந் தலைக்கொண்டு இருக்கிறான்; கிரா மத்தில் இருக்கும் நம்முடைய பலத்தை யறியான். நாம் தடியுங் கையுமாய் இருப்பதைக்கண்டு அவன் இவர்களுக்கு என்ன தெரியும்? "இவர்கள் பலவான்க ளல்லர், நாட்டுப்புறத்தார் என்று நம்மை அலக்ஷியஞ் செய்கிறான், நமக்குப் பெரிய கைகளிருப்பதிற் பய னென்ன?" என்று யோசித்து, அந்தத் திருடர் தடி களையும் ஓட்டாங்குச்சுகளையும் ஆயுதமாகக்கொண்டு, அநேகம் பெயராய் அந்தப் பெண்டிரைப் பிடிக்கவந் தார்கள். அதுகண்டு பார்த்தன் அவ்விடையரைத் திரஸ்காரஞ்செய்து அலக்ஷியமாய் "ஓ துஷ்டர்களே! நீங்கள் பிழைத்திருக்க நினைத்திருந்தால் ஓடிப்போய் விடுங்கள்" என்று சொல்ல, அவர்கள் லக்ஷியஞ்செய்யா மல் அங்கிருந்த பொருள்களையும் பெண்டிர்களையுங் கவர்ந்துக்கொண்டு போனார்கள். பின்பு அர்ச்சுனன் அந்தப் போரிலே திவ்வியமாயும் அழியாததாயுமுள்ள காண்டீபமென்கிற தனுசை வளைத்து நாண்பூட்ட எத்தனித்து அப்படிச்செய்யத் திறனில்லாதவனானான். வருந்திப் பூட்டியும் அந்தநாண் திடமாயிராமல்

தளர்ந்துபோயிற்று. மேலும் அஸ்திரங்களைப் பிர யோகிக்கப் பார்த்தான். அவற்றில் ஒன்றும் நினைப் புக்கு வரவில்லை. இப்படித் தன் வித்தை முற்றிலும் பயனில்லாதமை கண்டு அப் பார்த்தன் மிகுந்த கோபங் கொண்டு சத்துருக்களின்மே லம்புகளை யெய்தான். அவ் வம்புகளோ சத்துருக்க ளுடலிலேபட்டு மேற்றோலைப் பெயர்த்தனவே யல்லாமல் மற்றொன்றுஞ் செய்யும் சக்தியற்றவையாயின. இப்படிப்பட்ட காலத்தில் முந்தி அக்கினிபகவான் கொடுத்திருந்த அக்ஷய தூணீரங்களில் அம்புகளும் ஒழிந்துபோய்விட்டன. இப்படி இடைய ரோடு போரிடத்தலைப்பட்ட அர்ச்சுனனுக்கு எல்லா இடையூறுகளுஞ் சம்பவித்தன. அப்போது அர்ச்சு னன், "முன்பு நான் சரங்களினாலே அநேக அரசர் களைச் சங்கரித்தேன், அது ஸ்ரீ கிருஷ்ணனுடைய பலமேயல்லது என்னுடைய பலமன்று" என்று சிந்தித் துப் பார்த்துக்கொண்டே யிருக்கையில், அவ்விடையர் சுவாமி பரிக்கிரகித்திருந்த அனேக மாதர்களை யிழுத்துக் கொண்டே போனார்கள். மற்று மனேக ஸ்திரீகள் அர்ச் சுனனுக்குத் திறமையில்லாமையை அறிந்துகொண்டு தாங்களா யங்கங்கே யோடிப்போனார்கள்.

கேட்டீரோ முனிவரே! பின்பு அர்ச்சுனன் சரங் கள் இல்லாமற்போக, வேறாயுதமொன்று மில்லாமை யாலே அவ்வில்லையே தடிபோல்வைத்து அதின் நுனி யாலே அந்தச் சோரர்களை யடித்தான். அந்த அடிகள் இலேசாயிருந்தபடியினாலே சத்துருக்கள் நகைத்தார்கள். இப்படி அநேக யத்தனங்களாலும் காக்கக்கூடாமற் போனதனாலே தன் கண்ணுக்கு எதிரிலேயே உத்தமரான அந்த யாதவ ஸ்திரீகளைத் திருடர் இழுத்துக்கொண்டு போவதைக் கண்டு, பார்த்தன் அளவில்லாத துக்கமுடை யவனாகி "ஓகோ! என்னகஷ்டம் நேரிட்டது, ஸ்ரீ கிருஷ்ணபகவான் என்னைக் கொண்டுபோய் விட்டாரே, என்னசெய்வேன்" அப்படிப்பட்ட வில்லும் அப்படிப் பட்ட ஆயுதங்களும் அந்த ரதமும் அந்தக் குதிரை களும் வேதந் தெரியாதவனுக்குக் கொடுத்த தானத்தைப் போலே ஒரு க்ஷணத்திலே வீணாய்ப்போயின. ஓகோ தெய்வமே! வலியது. "அந்த மகாத்துமா இல்லாமை

யாலே இவ்வளவு சாதனங்களும் சாமர்த்தியமும் வீணுய்ப்போயினவன்றியும் சாமர்த்தியமில்லாத நீசருக்கு வெற்றியுமுண்டானதே, முன்வெற்றிக்குக் காரணமான அந்தக் கைகளே யிருக்கின்றன, அந்தக் கைப்பிடியே யிருக்கின்றது. இடமுமதுவே, நானுமந்த அர்ச்சுனனே, புண்ணியசொரூபியான அவனில்லாமையாலே எல்லாம் அசாரமாய் விட்டன. நான் அர்ச்சுனனுயிருந்ததும் பீமன் பீமனுயிருந்ததும் எல்லாம் அந்த மகானுபாவனுடைய மகிமை. அவனில்லாமற்போகவே மகாரதசிரேஷ்டனுன நான் இடையருக்குத் தோற்றேனன்றோ" என்றுசொல்லி அழுதுகொண்டே இந்திரப்பிரஸ்தத்துக்குச் சென்று அங்கே வச்சிரனை யாதவர்களுக்கு அரசனுக ஏற்படுத்தினுர்.

பின்பு அங்கிருந்து அஸ்திஞபுரிக்குப்போகையில் வழியிலொருகாட்டில் ஸ்ரீ வேதவியாசரைக் கண்டு திருவடி தொழுது நின்றுன். வியாசபகவான் தன் பாதங்களில் வணங்கி ஒன்றும் பேசாமலிருக்கும் அர்ச்சுனனை நெடுநேரம் பார்த்து அருளிச் செய்யலாயினுர்.

"ஓ அர்ச்சுனு! நீயேனிப்போது இப்படி ஒளியற்றிருக்கிறுய். ஆடு கழுதை முதலியவைகளின் கால்களுடைய தூள்களைப் பிச்சென்றையோ? பிரமஹத்தி தான் செய்தையோ? உறுதியான ஓராசைகெடத் துன்பமுற்றிருக்கிறையோ? ஏனிப்படி தேஜசு அழிந்திருக்கிறுய்? ஓ பார்த்தனே! சந்தானத்திற்காகக் கலியாணஞ் செய்துகொள்ள யத்தனப்பட்டவன் முதலானவர்கள் உன்னையாசிக்க நீ அவர்களைத் திரஸ்காரஞ் செய்தாயோ? புணரக்கூடாத ஸ்திரீயோடு புணர்ந்தாயோ? அல்லது நல்ல அன்னத்தைப் பிராமணர்க்குக் கொடாமல் நீயொருவனே புசித்தாயோ? தரித்திரனுடைய பொருளை அபகரித்தாயோ? முறத்தின் காற்றுப்பட நின்றுயோ? கொள்ளிக்கண்ணராற் பார்க்கப்பட்டாயோ? ஏனப்பா இவ்வளவு காந்தி யிழந்திருக்கிறுய்? அல்லது நகம்பட்ட தண்ணீரைப் பரிசித்தையோ? தண்ணீர்க் குடங் கொண்டு போகையில் அதினின்றுந் தளும்பித்

தெறித்த தண்ணீர் மேலே விழப்பெற்றாயோ? அல்லது போரில் தாழ்ந்தவர்களாலே வெல்லப்பட்டையோ? இத்தனையாய் நீ சாயை இழக்கக் காரணமென்ன?" என்று வியாசர் கேட்டதற்கு அர்ச்சுனன் பெருமூச்செறிந்து சொல்லத் தொடங்கினான்.

"சுவாமி கேட்டருள வேண்டும். அடியேனுக்குக் கதியை, அடியேனுக்குப் பலம் தேஜசு வீரியம் பராக்கிரமம் சம்பத்து காந்தி இவையெல்லாம் யாராயிருந்தாரோ, அந்த ஸ்ரீகிருஷ்ணசுவாமி அடியேங்களைவிட்டு எழுந்தருளிவிட்டார். எவர் ஒப்பற்ற மகனாயிருந்தும் சாதாரணரைப்போலே நம்மைக்கண்டு சிரித்துப் பேசிக்கொண்டிருந்தாரோ, அப்படிப்பட்ட ஸ்ரீபகவான் அடியேங்களைத் துறந்ததனாலே அடியேங்களெல்லாம் வைக்கோலாற் செய்யப்பட்ட மனிதரூபம் போலானோம்; அஸ்திரங்களுக்கும் பாணமுதலான ஆயுதங்களுக்கும் காண்டீபமென்கிற தனுசுக்கும் அடியேனுக்கும் மேன்மை எவராலே உண்டாயிருந்ததோ, அந்தப் புருஷோத்தமன் எழுந்தருளிவிட்டான். எவருடைய கடாக்ஷத்தினாலே செல்வமும் வெற்றியும் மேன்மையும் அடியேங்களை விடாம லிருந்தனவோ அந்த ஸ்ரீகோவிந்த பகவான் எங்களைக் கைவிட்டுப் போய்விட்டார்; பீஷ்மர் துரோணர் கர்ணன் துரியோதனன் முதலானவர்கள் எவருடைய பிரபாவத்தினாலே எரிந்துபோனார்களோ அந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் பூலோகத்தைவிட் டெழுந்தருளினார். ஐயா! அடியேன் ஒருவனாய் ஒளியிழந்து காணப்படுகிறேன். அந்தக் கண்ண னில்லாமையாலே இந்தப் பூமிமுழுதும் யவ்வனமும் செல்வமும் ஒளியு மிழந்த்துபோற் காணப்படுகின்றது. எவருடைய சான்னித்தியத்தினாலே பீஷ்மர் முதலான சுத்தவீரரெல்லாம் நானாகிய நெருப்பிலே விளக்கு விட்டிற் பூச்சிபோலானார்களோ; அந்த ஸ்ரீகிருஷ்ணசுவாமி யில்லாமையாலே அடியேன் கவைக்குதவாத இடையராலே வெல்லப்பட்டேன்; இந்த ஆச்சரியமும் கேட்கவேண்டும்; காண்டீவமானது எவனுடைய மகிமையினாலே மூவுலகத்தி

லும் புகழ்பெற்றிருந்ததோ, அவனில்லாமையாலே அஃது இடையருடைய தடிக்குத் தோற்றுப்போயிற்று: என் காவலிலிருந்த அனேக ஸ்திரீகளைத் திருடர் தடியுங் கையுமாய் வந்து என் முயற்சியைத் தடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்; அடியேன் துவாரகையினின்று மீட்டுக்கொண்டு வந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய தேவிமார்களைத் திருடர் தடிகொண் டென்பலத்தைத் தோற்கடித்து இழுத்துக்கொண்டு போய்விட்டார்கள். இவ்விதமாக அடியேன் தேசிழந்திருப்பது ஆச்சரியமோ? உயிரோடு நிற்கிறேனே இதுவே ஆச்சரியம்; என் பிதாமகரே! நீசர்களால் அவமானப்பட்டதாகிய களங்கத்தை வகித்துக்கொண்டு வெட்கமின்றி நிற்கிறேனன்றோ?" என்றிப்படிப் பரிதாபப்பட்டுச் சொன்ன அர்ச்சுனனை நோக்கி, வியாசமகாரிஷி அருளிச்செய்ததாவது:—

"அப்பா, அர்ச்சுனா! நீ வெட்கப்படாதே, விசனமும் படாதே, சகல பூதங்களிலும் காலகதி இப்படிப் பட்டதென்று நினை; காலமே பூதங்களின் உற்பத்திக்கும் நாசத்திற்கும் ஏதுவாயிருக்கின்றது; இப்படி உலகமெல்லாம் காலத்தினாலே நிகழ்வதென்று நினைத்து மனக்கலக்கமின்றி இருக்கக்கடவாய்; நதிகள் சமுத்திரங்கள் மலைகள் பூமி தேவதைகள் மனிதர் பசுக்கள் நகருஞ்ஜந்துக்கள் மரங்கள் யாவும் காலத்தினாலேயே படைக்கப்பட்டு மறுபடியும் காலத்தினாலேயே நாசப்படுகின்றன. இப்படி சகலமும் காலத்தின் ஆதீனமாயிருப்பதையறிந்து சமாதானப்படக்கடவாய். தாமரைக்கண்ணனான கண்ணபிரானே அந்தக் காலஸ்வரூபி. ஓ தனஞ்சயனே! அந்தக் கண்ணபிரானுடைய மகாத்மியம் நீ என்னென்ன சொன்னையோ அதுவெல்லாம் அப்படிப்பட்டதே, சந்தேகமில்லை. பூமிதேவி துஷ்டராலே பாரமுள்ளவளாய் முன்பு தேவசபைக்குப் போய்ச்சொல்ல, அந்தத் தேவர்களெல்லாம் பிரார்த்தித்தபடியினாலே காலரூபியான அந்த ஜநார்த்தனை எம்பெருமான் பாரத்தை இறக்கும் பொருட்டாக இப்பூமியில் அவதரித்தான். சகல ராஜாக்களுஞ் சங்

கரிக்கப் பட்டார்கள்; யாதவகுலமும் மடிந்தது; அவதரித்த காரியமும் நிறைவேறியது; அந்தமகா பிரபுவுக்குப் பூமியில் இனி நிறைவேற்ற வேண்டுவ தொன்று மில்லை. ஆதலால் பகவான் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளினுர்.

அந்தத் தேவதேவன் சிருஷ்டிகாலத்திற் சிருஷ்டியும், ஸ்திதிகாலத்தில் ஸ்திதியும் எப்படிச் செய்தானே, அப்படியே சங்காரகாலத்திற் சங்காரத்தையுஞ் செய்ய வல்லவன். ஆதலால் அர்ச்சுனு! நீ அவமானப்பட்டேனென்று பரிதாபப்படாதே; மனிதருக்குந் துதிபெறும்படியான நிலைகள் நற்காலங்களி லுண்டாகின்றன. பீஷ்மர் துரோணர் கர்ணன் முதலான மகாசூரரெல்லாம் உன்னொருவனுலே சங்கரிக்கப்பட்டார்களே அஃது அவர்களுக்குத் தாழ்ந்தவர்க்குத் தோற்ற அவமானமன்ரே? ஸ்ரீ விஷ்ணுவின் பிரபாவத்தாலே அவர்களுக்கு அக்காலத்தில் பரிபவம் நேரிட்டதுபோல உனக்கு இக்காலத்திலே திருடரால் நேரிட்டது. அந்தத் தேவநாதன் அந்த அந்தச் சரீரங்களிற் புகுந்திருந்து உலகத்தின் உற்பத்தியையும் அப்படியே நாசத்தையுஞ் செய்தருளுகிருன். ஓ கௌந்தேயனே! உனக்குப் பாக்கிய முதிக்குங் காலத்திலே எம்பெருமான் உனக்குத் துணையாக நின்று தன்னுக்கினைக்கு விரோதமாக நடந்தவர்களைச் சங்கரிப்பித்தான். இல்லாமற்போனுல் பீஷ்மர் முதலான கௌரவர்களை நீ சங்கரிப்பாயென்று எவன் நம்புவான்? அப்படியே இப்போது உனக்கு இடையரால் பரிபவம் வருமென்று எவன் நம்புவான்? பார்த்தனே! நீ கௌரவரை வென்றதும் இடையருக்குத் தோற்றதும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவிளையாட்டேயன்றி, வேறன்று. சாக்ஷாத்பகவான் திருவுள்ளம்பற்றின அந்தப் பெண்டீர்களை அற்பர் இழுத்துக்கொண்டு போனுர்களென்று நீ விசனப்படுகிருயன்ரே? அதற்கொரு காரணமுண்டு அதைச் சொல்லுகிறேன் கேள்:—

"முன்னொருகாலத்தில் அஷ்டாவக்கிரர் என்கிற முனிவர் கழுத்துமட்டுந் தண்ணீரில் அமிழ்ந்து அனேக

வருஷகாலம் பிரமத்தை ஜபஞ்செய்து கொண்டிருந்தார். தேவதைகளுக்கும் அசுரருக்கும் யுத்தம் நேரிட்டதில் அசுரக் கூட்டமெல்லா மடிந்தபோது மகாமேரு பருவதத்தின்மேலே தேவதைக ளொரு திருவிழா நடத்தினார்கள். அந்த உற்சவத்திற்காகப் போய்க்கொண்டிருந்த அரம்பை திலோத்தமை முதலான அனேக அப்சரசுக்கள் அம்முனிவரைக் கண்டு வணங்கிப்புகழ்ந்து துதித்தார்கள். ஜலத்தில் கழுத்தளவு முழுகிச் சடாபாரந் தாங்கி விளங்கிக் கொண்டிருந்த அம்முனிவர் அவர்கள் செய்த வணக்கத்திற்குந் தோத்திரத்திற்கும் மனமுவந்தார். அவர் எவ்வளவுக்கவ்வளவு உகந்தாரோ அவ்வளவுக்கவ்வளவு அத்தெய்வப்பெண்கள் தொழுது போற்றினார்கள். அப்படி அவர்கள் பணியவே அம்முனிவர் அவர்களை நோக்கி, "ஓ மகானுபாவைகளே! நீங்கள் பணிந்ததற்குச் சந்தோஷித்தேன். உங்களுக்கு வேண்டுமான வரத்தைக் கேளுங்கள். அதுபெறுதற்கரிதானாலுந் தடையின்றித் தருகிறேன்" என்று சொன்னார். அது கேட்டு அரம்பை திலோத்தமை முதலான வைதிக அப்சரசுக்கள், "சுவாமி! தேவரீர் திருவுள்ள முவந்ததே போதுமான வரம்" என்றார்கள். மற்றவர்களோ, "ஓ முனிவரே! அப்படித் திருவுள்ள முவந்ததானால் ஸ்ரீ புருஷோத்தமன் எங்களுக்குக் கணவனாகும்படி வரந்தர வேண்டும்" என்றார்கள். அந்த மகாமுனிவர் "அப்படியே ஆகக்கடவது" என்று அவர்களுக்கு வரமளித்துத் தண்ணீரினின்றுங் கரையேறினார். கரையேறின போது எட்டுக்கோணலான வுடம்போடு விரூபமாயிருந்த அவரைப் பார்க்க அத்தேவ வேசிகளுக்குச் சிரிப்புண்டாயிற்று. அச்சிரிப்பை அவர்கள் அடக்கப் பார்த்தார்கள். ஆனாலும் அவர்களுள் அனேகருக்குச் சிரிப்பு அடங்காமல் வெளிப்பட்டது. யாருக்குச் சிரிப்பு வெளிப்பட்டதோ அவர்களை அம்முனிவர் மிகக் கோபத்தோடு, "ஓ பெண்களே! நீங்கள் என்னை விகாரரூபமுள்ளவனென்று நினைத்துச் சிரித்து அவமானித்தீர்களாகையால், நான் முன் அநுக்கிரகித்தபடி ஸ்ரீ புருஷோத்தமனைப் பர்த்தாவாகப்பெற்று வாழ்ந்து, கடைசியில் திருடர் வசத்

தில் போகக்கடவீர்கள்” என்று சபிக்கவே, அப்பெண் கள் நடுங்கி மீண்டும் அவரைத் துதித்து வேண்ட, அவர் மனமிரங்கி அவர்களை நோக்கி, “நீங்கள் திருடர் கையிற்பட்டாலும், உடனே சுவர்க்கமடையக்கடவீர்” என்று அனுக்கிரகித்தார்.

“கேட்டாயோ அர்ச்சுனா! இப்படி அஷ்டாவக்கிர முனிவர் அனுகிரகத்தினால் அத்தெய்வப் பெண்கள் கண்ணனைக் கணவனாகப் பெற்று வாழ்ந்து, அவர் சாபத்தினாலேயே திருடர் கையிலு மகப்பட்டுப்போனார் கள். ஆதலால் இவ்விஷயத்தில் நீ சிறிதுஞ் சோகப் படவேண்டாம். சகலேசுவரனான எம்பெருமானாலேயே எல்லா முடிக்கப்பட்டது. உங்களுக்கும் சங்காரகாலம் நெருங்கியிருக்கின்றது. அதனாலே உங்களுடைய பலம் தேஜசு வீரியம் மகிமை எல்லாம் இழுத்துக் கொள்ளப் பட்டன. பிறந்தவனுக்கு மரணமும், உயர்ந்ததற்குத் தாழ்வும் வரவேண்டுவன. அப்படியே கூடினதற்குப் பிரிதலும், சேர்ந்ததற்குச் செலவும் நியதமாயிருக் கின்றன. ஆதலால் இவற்றை அறிந்த புத்திசாலிகள் நன்மையிற் சந்தோஷத்தையும் தீமையில் விசனத்தை யும் அடைகிறதில்லை. நன்மையில் மகிழ்ச்சியுந் தீமை யில் துயரமுமடைபவர் அறிந்தவரல்லர். ஆனால் சில மகானுபாவர் தங்கள் மகிமையை வெளியிடாமல் அறி யாதவர்போல் சந்தோஷ துக்கங்களை அபிநயித்து வருகிறார்கள். ஆதலால் நீ இதை யெல்லா மறிந்து சகல லௌகிகங்களையும் விட்டுச் சகோதரரோடு சேர்ந்து தவத்திற்காக வனம்போகக்கடவை. ஓ அர்ச்சுனா! இப்போது நான் சொன்னதை உன் தமையனான யுதிட்டிரனுக்குச் சொல்லி, நாளைக்கே உடன் பிறந்தா ரோடு வனம் போகும்படியான முயற்சியைச் செய்யக் கடவாய்” என்று வியாசர் அருளிச்செய்ததைக் கேட்டு, அர்ச்சுனன் அஸ்தினபுரிக்குப்போய் யுதிட்டிர வீம சேன நகுல சகதேவர்களுக்குத் தான் கண்டு அனுபவித் தவைகளையும் வியாசமகாமுனி வாக்கியத்தையும் சொல்லி னான். இப்படி வியாசவாக்கியங் கேட்டவுடனே பாண்டவர்கள் பரீக்ஷித்துக்குக் குருராச்சிய பட்டாபி ஷேகஞ் செய்து உடனே வனத்துக்குப் போனார்கள்.

மயித்திரேயரே! நீர் கேட்டபடி யதுவமிசத்திலே அவதரித்த ஸ்ரீ வாசுதேவனுடைய சரித்திரங்களையெல்லாம் சொன்னேன். எவன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சரித்திரத்தைக் கேட்பனோ அவன் சகல பாபங்களுந் தீர்ந்து ஸ்ரீவைகுந்தபதவி பெறுவான்.

விருத்தம்

மன்னுயி ரனைத்து முய்ய மாநிலத் தவத ரித்துப்
பொன்னுல கோரும் போற்றப் பொறைதனைத் தீர்த்த கண்ணன்
பன்னருஞ் சரிதை தன்னைப் பத்தியிற் படிப்போர் கேட்போர்
துன்னரும் போக மெய்தித் தூய்பத மேறு வாரே.

முப்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஸ்ரீவிஷ்ணு புராணம் - ஐந்தாம் அம்சம்

முற்றிற்று

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ விஷ்ணு புராணம்

## ஆறும் அம்சம்

### முதல் அத்தியாயம்

### கலி தருமம்

மயித்திரேய முனிவர், "அடியேனுக்குக் குருவாகிய ஓ பராசரமுனிவரே! தேவரீர் சிருஷ்டியும் வமிசங்களும் மனுவந்தரங்களின் நிலைகளும் வமிச சரித்திரங்களும் விளக்கமாய் அருளிச்செய்தீர்; இப்போது அடியேன் கற்பத்தின் முடிவில் மகாப்பிரளயமென்று பெயர்கொண்ட சங்காரத்தைச் சரியாய்க்கேட்க விரும்புகிறேன்" என்று கேட்க, குரு அருளிச்செய்கிறார். "ஓ மயித்திரேயரே! கற்பாந்தத்திலும் பிராகிருதத்திலும் பிரளயம் உண்டாகும்விதம் சொல்லுகிறேன் கேளும்."

"நம்முடைய மாதம் பிதுர்க்களுக்கு ஒரு நாள். நம்முடைய வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள். இரண்டாயிரஞ் சதுர்யுகங்கள் சதுர்முகனுக்கு ஒரு நாள். சதுர்யுகமாவது கிருதம் திரேதை துவாபரம் கலி என்கிற நான்குங் கூடியதேயாம். இந்நான்கு யுகங்களும் தேவமானத்தினுற் பன்னீராயிரம் வருஷங்களாம். மயித்திரேயரே! கற்பத்தின் ஆதியான கிருதயுகத்தையும் அந்த முடிவான கலியுகத்தையுந்தவிர மற்றச் சதுர்யுகங்களெல்லாம் சமானங்களேயாம். ஆதி கிருதயுகத்திலே பிரமா எப்படி சிருஷ்டிக்கிறாரோ, அப்படியே கடைசிக் கலியுகத்திலே சங்காரஞ் செய்கிறார்" என்று மகாரிஷி யரு

ளிச் செய்யுமளவில் மயித்திரேயர் மற்றொரு விஷயம் வினவுகிறார்.

"ஓ குருவே! நான்கு பாதங்களால் நடக்குந் தன்மையுள்ள தருமம் அழிந்துபோகத் தக்கதான கலியுகத்தின் சொரூபத்தை நன்றாய்ச் சாதித்தருள வேண்டும்" என்ற மாணுக்கருக்கு ஆசாரியர் அருளிச்செய்ததாவது: "ஓ மயித்திரேயரே! கலியின் சொரூபத்தை விஸ்தரித்துச் சொல்லுகிறேன் கேட்பீராக. கலியுகத்தில் மனிதருக்கு வர்ணாச்சிரம ஆசாரமுள்ள நடக்கை இராது. அதில்லாதபோது இருக்கு யசுர் சாமம் என்கிற வேதங்களினாலே உணர்த்தப்பட்ட யாகாதி சற்கிரியைகளும் இல்லை. மேலும் கலிகாலத்தில் தருமமான விவாகங்கள் நடக்கமாட்டா. குரு சிஷ்ய கிரமமும் கிடையா. தம்பதிகள் ஒருவருக்கொருவர் நடந்துகொள்ளவேண்டிய தருமமுமில்லை. அக்கினியிற் செய்யத்தக்க தேவ யக்கிய மென்ற முறைமையுமில்லை. எக்குலத்தானாலும் பலவானெவனோ அவனே யாவர்க்கு மரசனாவான். சகல ஜாதிகளிலேயும் பொருளுள்ளவனே கன்னிகாதானஞ் செய்யப் பாத்திரமாவானே யல்லது, கல்வி யொழுக்கங்க ளுடையவ னாகமாட்டான். பிராமணன் எந்த வழியாலாவது தீக்ஷிதனாவதே யல்லது சாஸ்திரங்களிற் சொன்ன விதியாலே என்கிறதில்லை. கலியில் விதிக்கப்பட்டதே பிராயச்சித்த மென்பதில்லை. எந்தக் கிரியையாகிலும் பிராயச்சித்தமாக அங்கீகரிக்கப்படும். எவனுக்கு எந்த வாக்கியம் பிரியமா யிருக்கிறதோ அதுவே தக்க சாஸ்திரமாய்விடும். காளி முதலான எவையும் தேவதையாகக் கொண்டாடப்படும். இன்னானுக்கு இந்த ஆச்சிரமம் தகுமென்பதில்லை! எவனும் எந்த ஆச்சிரமத்திலும் பிரவேசிக்கலாகும். ஒருவன் தான் வேண்டியபடி பட்டினியிருப்பதும் வருந்துவதும் கொடுப்பதும் தவமும், சாஸ்திரங்களிற் சொல்லிய உபவாச கிருச்சிராதிகளைப் போலே தருமமென்று எண்ணப்படும். அன்றியும் அற்பமான திரவிய மிருப்பதினாலேயே தாம் தனவான்களென்கிற செருக்குச் சனங்களுக்கு உண்டாயிருக்கும். அப்படியே பெண்பிள்ளைகளுக்குக் கூந்தல் செய்

வையா யிருப்பதினாலேயே சௌந்தரிய கருவம் உண்டா யிருக்கும். கலி முற்றமுற்றப் பொன்னுமணியும் நல்ல ஆடைகளும் அழிந்து போகும்போது மங்கையர்கள் கூந்தலையே அலங்காரமாகப் பெற்று இருப்பார்கள். மேலும் பெண்பிள்ளைகள் பொருளில்லாத தம் புருஷர்களை விட்டு எவனாகிலும் பொருளுடையவனா யிருந்தால் அவனையே புருஷனாகத் தேடிக்கொள்வார்கள். எவன் விசேஷமாய்ப் பொருள் கொடுப்பானோ அவனையே ஜனங்கள் சுவாமி யென்று கொள்வார்களே யன்றி, நற்குலப் பிறப்பு முதலானவைகளைச் சுவாமி யென்பதற்கு ஏதுவாகக் கொள்ளமாட்டார்கள். இந்தக் கலியுகத்திலே புத்திக்குப் பயன் பொருள் சம்பாதிப்பதேயன்றி ஆத்துமஞானம் பயனாகக் கொள்ளப் படாது. அந்தப் பொருளும் வீடு முதலானவை கட்ட உபயோகிக்கப்படுமே யல்லது யாகாதி தருமங்களுக்கு உபயோகிக்கப்படாது. அந்த வீடு முதலானவைகளும் தன் போகத்துக்கு உரியவை யாக்கப்படுமே யல்லது, அதிதி முதலானவர்க்கு எவ்வளவும் உரியவையாக்கப் படா. ஸ்திரீகளெல்லாம் சளுக்கனா யிருக்கிறவனிடத்திற் காதலுற்று விபசாரிகளாய் இருப்பார்கள். புருஷரோ அநியாயத்தினாலானாலும் பணஞ் சம்பாதித்தவரிடத்திலேயே மனம் வைத்திருப்பார்கள். எவர்களும் சிநேகிதர் வேண்டிக்கொண்டாலும் மனமிரங்காமல் தங்கள் காரியத்தையே பெரிதாகப் பார்த்துக் கொண்டு அரைக்காற் பணத்துக்கும் ஆசைவைத்திருப்பார்கள். சூத்திராதிகள் பிராமணரைத் தங்களைப் போல் சாதாரண மனிதராக நினைப்பார்களே யல்லது விசேஷமுள்ளவர்களாக நினைக்கமாட்டார்கள். பசுமாடுகளிலும் ஜனங்களுக்குப் பால் கொடுப்பதைப்பற்றி மேன்மையான எண்ணமே யல்லது ஜாதியைப்பற்றியதாயிராது. இக்கொடிய காலத்தில் பிரஜைகளெல்லாம் பெரும்பாலும் மழையில்லாமையைப்பற்றின அச்சமுள்ளவர்களாய்ப் பசிக்குப் பயந்து சோர்ந்தவராய் வானத்திலேயே கண்வைத்துக்கொண் டிருப்பார்கள். மனிதர் தவசிகளைப்போலே காய் கிழங்குகளைப் புசித்துக்கொண்டு மழையில்லாமை முதலானவைகளி

ஞலே துக்கப்பட்டவர்களாய்த் தங்களைத் தாங்களே கொலைசெய்து கொள்வார்கள். கலிகாலத்தார் சுகமும் உல்லாசமும் அற்றவர்களாய்த் திரவியமும் க்ஷீணித் தவராய் எப்போதும் பஞ்சத்தையும் பலவகைத் துன்பங்களையுமே பெற்றிருப்பார்கள். கலி வளர்ந்து வருகையில் எவர்களும் அக்கினிபூசை தேவதாபூசை அதிதிபூசைகளையும் பிண்டோதக தான ரூபமான பிருது பூசையையுஞ் செய்யாதவராகி முழுகாமலே யுண்டு காலங்கழிப்பார்கள். ஸ்திரீகளும் மிக்க ஆசையுங் குறு கின வுடம்புமுள்ளவராய்ப் பேருண்டி யுண்டுகொண்டு, வெகு பிள்ளைகளைப்பெற்றுச் செல்வமில்லாதவர்களாய் வருந்துவார்கள். மேலும் இரண்டு கைகளினுலேயும் தலையைச் சொறிந்துகொண்டு பர்த்தா மாமனர் முத லானருடைய கட்டளையைமிகுந்த அனுதரத்தோடு திரஸ் காரஞ்செய்து வருவார்கள். இன்னும் பெண்மக்கள் தேகசுத்தியில்லாமல் தங்களைப் போஷிப்பதிலேயே மன மூன்றி ஈனமான எண்ணங்கொண்டு கடினமாயும் பொய் யாயும் பேசுபவர்களா யிருப்பார்கள். குலஸ்திரீகள் தாங் கள் தீயொழுக்கமுடையவராதலால், அப்படிப்பட்டவ ரிடத்திலே சினேகித்தவர்களாய்த் தங்கள் புருஷருக்குப் பலவகைப்பட்ட தீங்கையுஞ்செய்து வருவார்கள். பிரம சாரிகள் விரதானுஷ்டான மில்லாமலே வேதாத்தியய னஞ் செய்வார்கள். கிருகஸ்தரோ சிறிதேனும் ஓமஞ் செய்யா திருப்பதுமன்றித் தக்க பொருள்களையுங் கொடார்கள். வானப்பிரஸ்தரும் ஊரிலுள்ளவைகளைப் புசித்துவருவார்கள். சந்நியாசிகள் புத்திர மித்திராதிக ளிடத்து அன்புடையவர்களா யிருப்பார்கள். அரச ரெல்லாம் ஜனங்களைப் பரிபாலனஞ் செய்வதை முக்கிய மாயெண்ணுமல் அந்தவரி இந்தவரி என்று சாக்கிட்டுக் குடிகளுடைய பொருள்களைப் பறித்து வருவார்கள். எவ னெவன் யானை குதிரை முதலான சேனைகளை மிகவைத் திருப்பனே, அவனவனே அரசனுவான். அப்படிப் பட்டவலியற்றிருப்பவன் க்ஷத்திரியனுனலும் சேவகனு வான். வைசியர் பயிரிடுதல் வாணிகஞ் செய்தல் முத லான தங்கள்தொழிலைவிட்டுச் சூத்திரர்தொழிலாகிய பல

தொழில்களைச் செய்து பிழைப்பார்கள். சூத்திரரோ சந்நியாசிக் குறிகளைத் தரித்தவராய்ப் பிட்சை வாங்கியுண்டு கொண்டு அநேகர் தங்களைப் பூசிக்கும்படிசெய்து கொண்டு பாஷாண்ட விருத்திகளா யிருப்பார்கள். ஜனங்கள் பஞ்சத்தினாலும் வரி யிறுப்பதினாலும் துன்பமுற்றவர்களாய்க் கோதுமை யவம் என்கிற தானியம் விளையப் பெற்ற நீச தேசங்களுக்குப் போய்விடுவார்கள். இப்படியாக வர்ணாச்சிரம தருமங்கள் கெட்டு வேதமார்க்கமே ஒளித்துப்போகப் பாஷண்ட மதங்களைக் கைக்கொண்டு ஜனங்கள் நடப்பதினாலே அதர்மம் விருத்தியாவதுபற்றி ஆயுள் குறைந்துவிடும். அரசர்களுடைய குற்றத்தினால் மனிதர் சாஸ்திரங்களுக்கு விரோதமாய் வீணான தவங்களைச்செய்து வருவதினாலே பாலியத்திலேயே மரணமுண்டாகும். பெண்பிள்ளைகள் ஆறேழு வயதுக்குள்ளாகப் பிள்ளை பெறுவார்கள். ஆண்பிள்ளைகளோ ஒன்பது பத்து வயதுக்குள்ளே பிள்ளையுண்டாக்குந் திறமுடையவராவார்கள். பன்னிரண்டு வயதினுள்ளே நரை முதலியவை உண்டாகும். ஒருவனும் இந்தக் கலி முதிர்ச்சியில் இருபது வருஷங்களுக்குமேல் பிழைக்கப்போவதில்லை. கலிகாலத்தில் ஜனங்கள் அற்பஞான முள்ளவர்களாய் வீண் தவவேடங்களைப் பூண்டு கெட்ட நினைப்புடையவர்களா யிருப்பாதலால் கொஞ்ச நாளிலேயே நசித்துப் போவார்கள்.

ஓ மயித்திரேயரே! தருமம் எவ்வளவுக்கெவ்வளவு இழிந்து வருகின்றதோ அவ்வளவுக்கவ்வளவும் கலி விருத்தியாயிற்றென்று புத்திசாலிகள் அறிந்துகொள்ள வேண்டும். மேலும் எப்போது பாஷண்டர் விருத்தியாகிறார்களோ, எப்போது வேதமார்க்கத்தை யனுசரித்த தற்புருஷருக்குத் தீங்கு நேரிடுகிறதோ, எப்போது தருமவான்களுடைய எத்தனங் கெட்டுப் போகின்றதோ, அப்போது கலி முதிர்ந்து நிற்கிறதென் றறிந்து கொள்ள வேண்டும். அன்றியும் எப்போது யக்கியங்களுக்கு ஈசுவரனான ஸ்ரீ புருஷோத்தமனை யக்கியங்களாலே ஜனங்கள் ஆராதிப்பதில்லையோ, எப்போது வேதஞ்சொல்லுங் காரியங்களிலே பிரீதியில்லாமற் பாஷண்ட வாக்கி

யங்களிற் பிரீதியுண்டாகின்றதோ, அப்போது கலி மகா பலம் பொருந்தி யிருக்கிறுனென்றறியவேண்டும். ஏனென்ருல் கலியில் ஜனங்கள் பாஷண்டராலே கெடுக்கப் பட்டவர்களாய்ச் சர்வசிருஷ்டி கர்த்தாவாயும் சர்வேசுவரனுயு மிருக்கிற ஸ்ரீ விஷ்ணுவை ஆராதிக்கமாட்டார்கள். இன்னமும் பாஷண்ட புத்தியுள்ளவர்களாய் "தேவதைகள் எதற்கு? வேதங்கள் எதற்கு? பிராமணராலென்ன? தண்ணீர்விட்டுக் கழுவுவதினுலென்ன சுத்தி? என்று பிதற்றித் திரிவார்கள். இப்படிப்பட்ட அதர்மங்களினுலே மேகம் அற்பமான மழையையே பெய்யும். பயிரும் அற்பமாகவே பலிக்கும். வஸ்துக்கள் அற்ப சாரங்களாகவே இருக்கும். வஸ்திரங்கள் சணற்கோணிகள் போலிருக்கும். மரங்கள் வன்னிமரங்களைப்போலற்பமாக விருக்கும். ஜாதிகளெல்லாம் சூத்திரஜாதிபோலிருக்கும். மேலும் தானியங்கள் அணுக்கள்போலவும், பால் நெய் போலவும், சந்தனுதி பூச்செல்லாங் கோரைக் கிழங்கின் பூச்சைப் போலவு மாய்விடும். ஓ முனிவரே! கலியில் ஜனங்களுக்கு மாமனுர் மாமியார் ஆசாரியர் மைத்துனர் பெண்டாட்டிகள் வேண்டுமான தொகையுள்ளவராக இருப்பார்கள். அன்றியும் மாதா பிதாக்களிடத்தி லன்பில்லாமல் மாமியார் மாமனுர்களையே பிரதானமா யனுசரித்து, "தாய் யார்? தகப்பன் யார்? எவனுக்கெவன்? அவனவன் தன்தன் கருமத்தையல்லவோ அனுசரித்திருக்கின்ருன்" என்று பேசி வருவார்கள். இக்கலிகாலத்திலே நரர் அற்ப புத்தியுடையவர்களாய், வாக்கு மனம் காயம் இம்மூன்றுஞ் சுத்தமில்லாமல், தினந்தோறும் பாவத்தையேசெய்து வருவார்கள். சத்தியமில்லாதவர்களுக்கும், செளசமில்லாதவர்களுக்கும், வெட்க மில்லாதவர்களுக்கும் எந்தத் துக்கங்களுண்டாகுமோ, அவையெல்லாம் கலிகாலத்திலுண்டாகும். இப்படியாகக் கலிபலத்தினுலே உலகம் வேதாத்தியயன யாக பிதுர்பூஜா தேவபூஜாதிக ளில்லாதிருக்குமளவில் தருமம் எங்கேயோ ஒளித்துக்கொண்டிருக்கும். இப்படிப்பட்ட கலியுகத்திலே எவனுகிலும் ஒருவன் அற்பமான தரும யத்தினஞ்செய்

தால் கிருதயுகத்திற் பெருந்தவஞ்செய்து எவ்வளவு புண்ணியமடைவானோ அவ்வளவு புண்ணியத்தை அடைவான்.

*முதலாம் அத்தியாயம் முற்றிற்று.*

---

## இரண்டாம் அத்தியாயம்

# கலியின் குணம்

மயித்திரேயரே! மகாபுத்திமானான வியாசரும் இந்தக் கலிவிஷயத்தில் ஒரு விசேஷஞ் சொல்லியிருக்கிறார், அதைநான் சொல்லுகிறேன் கேளும்.

ஒரு காலத்தில் இருடிகளுக்குள்ளே புண்ணிய விஷயத்தைப்பற்றி ஒரு வாதமுண்டாயிற்று. "எந்தக் காலத்திலே தருமங்கொஞ்சஞ் செய்யப்பட்டாலும் மகா பலனைக் கொடுக்கும்? எவர் இப்படிப்பட்ட தருமத்தை எளிதிற் செய்தற்குரியர்?" என்பதுதான். இவ்விஷயத்திற் சந்தேகமற வுண்மைதெரிந்துகொள்ளும் பொருட்டு அந்த முனிபுங்கவரெல்லாம் வேதவியாச மகாமுனிவர் சந்நிதிக்குச் சென்றார்கள். சென்றவர்கள் மகானுபாவராயும் என் குமாரராயுமிருக்கிற வேதவியாசரைக் கங்கா தீர்த்தத்திலே பாதி நீராடிக்கொண்டிருக்கையிற் கண்டார்கள். கண்டு அம்முனிகள் அவர் நீராட்டமாடி வருவதை எதிர்பார்த்துக்கொண்டு, அந்நதிக்கரையில் மரங்களின்கீழ் உட்கார்ந்திருந்தார்கள். அப்போது கங்காதீர்த்தத்தில் முழுகி யிருந்த என்குமாரர் எழுந்து, "சூத்திரன் சாது, கலிசாது" என்று அவர்களுக்குக் கேட்கும்படிச்சொல்லி, மீண்டும் நீரில் அமிழ்ந்து எழுந்திருந்து "சாது, சாது, சூத்திரனே! நீ மகாபுண்ணியவானா யிருக்கிறாய்" என்று சொல்லினார். மறுபடியு மூழ்கியெழுந்து அம்மகாமுனிவர் "பெண்பிள்ளைகள் மிகவும் புண்ணியவதிகள், அவர்களைக்காட்டிலும் புண்ணியமுடையவர் யாரிருக்கிறார்?" என்று சொன்னார்.

பின்பு நீராட்டமுடிந்து ஆசமனஞ்செய்து சகல அனுஷ்டானங்களுஞ் செய்து வீற்றிருந்த என்குமாரனிடத்துக்கு அம்முனிவர் பணிவோடு சென்றார்கள். வந்தனஞ் செய்து நின்ற அவர்களுக்கு வேதவியாசர் மிகுந்த அன்புடன் ஆசனங்கொடுத்து, "எதற்காக வந்தீர்கள்?" என்று வினவ, அவ்விருடிகள் "சுவாமி வேதவியாசரே! நாங்கள் ஒரு சந்தேகந் தீர்த்துக்கொள்ள வந்தோம்; தேவரீர் கலி சாது என்றும் சூத்திரன் சாது என்றும், பெண்கள் சாதுக்கள் என்றும், அவர்களெல்லாம் புண்ணியவான்களென்றும், அடிக்கடி அருளிச் செய்தீரே. அவ் அபிப்பிராயத்தை முந்திக் கேட்க விரும்புகிறோம். அது மறைக்க வேண்டியதல்லாத பக்ஷத்திலே அருளிச் செய்யவேண்டும். பின்பு எண்ணி வந்த காரியத்தைக் கேட்டுக் கொள்ளுகிறோம்" என்று சொன்னார்கள். அதுகேட்டு வியாசர் சிரித்துச் சொன்னதாவது:—

"ஓ இருடிகளே! சாது சாது என்று எதனாலே சொன்னேனோ அதைக் கேளுங்கள். கிருதயுகத்திலே எந்தப் புண்ணியம் பத்து வருஷங்களினால் சித்திக்குமோ அது திரேதாயுகத்திலே ஒரு வருஷத்தினாற் சித்திக்கும், துவாபரயுகத்திலே அதுவே ஒருமாதத்தினாற் கிடைக்கும், கலியுகத்திலேயோ ஒரு நாளிலே கிடைக்கும், இப்படித் தவத்திற்கானாலும், பிரமசரியத்திற்கானாலும், ஜபமுதலியவற்றுக்கானாலும், பயனை மனிதன் கலியுகத்திலே மற்ற மூன்று யுகங்களிற் பெறுவதிலு மிகவெளிதாய்ப் பெறுவானாகையாலே, கலி சாது என்று சொன்னேன், இன்னுங் கேளுங்கள். கிருதயுகத்திலே யோகநிஷ்டையிலிருந்து தியானஞ் செய்வதனாலும், திரேதாயுகத்திலே யாகஞ்செய்வதனாலும், துவாபரயுகத்திலே அர்ச்சிப்பதனாலும், எந்தப் பயனுண்டோ அது கலியில் ஸ்ரீகேசவனுடைய திருநாமசங்கீர்த்தனஞ்செய்வதனாலே கிடைக்கும். ஓ தருமமறிந்தவர்களே! மனிதன் இந்தக் கலியுகத்திலே அற்பமான வருத்தத்தினாலேயே தரும மிகுதியை யடைவனாதலால் கலியை நான் கொண்டாடுகிறேன். இனிச் சூத்திரன் சாது என்று சொன்னதின் விவரஞ் சொல்லு

கிறேன். பிராமணாதிகள் விரதானுஷ்டானந் தப்பாமலிருந்துகொண்டு முதலில் வேதங்களை யோதவேண்டும். பின்பு தருமவழியாற் சம்பாதித்த திரவியங்களைக்கொண்டு விதிப்படி யாகங்களைச் செய்யவேண்டும். பிராமணாதிகளுக்குப் பகவானைப் பற்றின வார்த்தைகளைத் தவிர வீண்வார்த்தை சொல்வதும், எம்பெருமானுக்குச் சமர்ப்பியாத அன்னாதிகளைப் புசிப்பதும், டம்பத்துக்கும் லாபத்துக்கும் யாகாதிகளைச் செய்வதும் பாதக மாகுமாதலால் அவர்கள் எப்போதும் மனோவாக்குக்காயங்களைக் கட்டுப்பண்ணிக்கொண் டிருக்கவேண்டும். அன்றியும், அவ் இருபிறப்பாளருக்கு எதையும் விதிப்படிச் செய்யாவிடிற் குற்றமாம். போஜனாதிகளும் இஷ்டப்படிச் செய்யவொண்ணமல் விதிப்படிச்செய்யவேண்டியவைகளாம். இவ்வாறு அவர்களுக்குச் சகல காரியங்களிலும் பராதீனமா யிருப்பதனாலே அவர்கள் மிகவும் வருந்தித் தாங்க ளடையவேண்டிய லோகங்களை ஜயிக்கவேண்டும். சூத்திரனோ வேதாத்தியயனம் அக்கினி யக்கிய முதலானவைகளில்லாமல் பாகயக்யாதிகாரமுள்ளவனாய் முந்திய பிராமணாதிகளுக்குச் சிசுருஷை செய்வதனாலேயே அப்படிப்பட்ட வுத்தமலோகங்களை அடைவான். ஆதலால் அவனைக்காட்டிலும் புண்ணியவான் யாருண்டு? ஓ முனிபுங்கவர்களே! சூத்திரனுக்கு இன்னது தின்னத்தக்கது, இன்னது தின்னத்தகாததென்றும், இது குடிக்கத்தக்கது, இது குடிக்கத் தகாததென்றும், நியம மில்லாமையாலே சூத்திரன் சாது என்று சொன்னேன். பெண்கள்சாதுக்கள் என்று சொன்ன காரணஞ் சொல்லுகிறேன். புருஷர் தங்களுக்குரிய தருமத்தினுற் பொருள் சம்பாதிக்கவேண்டும். சம்பாதித்த பொருளைச் சற்பாத்திரத்திற் செலவு செய்யவேண்டும். பல சத்கருமங்களுஞ் செய்யவேண்டும். இப்படியாகப் பொருளீட்டுவதிலும் அதைக் காப்பதிலும் எவ்வளவு பிரயாசமிருக்கிறது பாருங்கள். இதை நல்வழியிற் செலவழிப்பதிலோ இரட்டித்த வருத்த மிருப்பது நன்ருய்த் தெரிந்திருக்கிறது. இவ்விதமான பலவகைக் கிலேசங்களினலே ஆடவர் பிரஜாபத்திய முதலான உலகங்களை வெல்லுகிருர்கள். பெண்டுகளோ மனோ

வாக்குக் காயங்களினாலே தம் பர்த்தாக்களுக்கு அனுகூலரா யிருந்துகொண்டு சிசுருஷை செய்து வருவார்களாகில் அந்தப் புருஷர் அடையும் லோகங்களையே அடைவார்கள். இவ்விதமாய் அதிகவருத்தமில்லாமலே தங்கள் கணவர்வருந்திப் பெறுமுலகங்களைப் பெறுவார்களாகையால், மூன்றுந்தரம் ஸ்திரீகள் சாதுக்கள் என்றேன். ஓ பிராமண சிரேஷ்டர்களே! நீங்கள் கேட்டபடி நான்சொன்னகாரணங்களை யுரைத்தேன். இனி நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லவேண்டும். அதற்கும் விவரமாய் உத்தரஞ் சொல்லுவேன்" என்று வியாசர் கூறியபின்பு அந்த ரிஷிகள், ஓ முனிராஜரே! நாங்கள் கேட்கவந்த காரியம் தேவரீர் அருளிச்செய்த அர்த்தங்களி லடங்கிப்போயிற்று. இனி அடியேங்களுக்குக் கேட்கவேண்டி மர்த்தம் வேறில்லை" என்று சொன்னார்கள்.

பின்பு அந்தக் கிருஷ்ண துவைபாயனர் சிரித்து ஆச்சரியத்தினாற் கண்மலர்ந்து நிற்கிற அம்முனிவரை நோக்கி, "நான் திவ்விய ஞானத்தினாலே உங்கள் காரியத்தை யறிந்து அதைக் குறித்துத்தான் 'கலி சாது,' 'சூத்திரன் சாது,' ஸ்திரீ சாது," என்று சொன்னேன்; அற்பமான முயற்சியால் கலியில் தருமம் பலிக்கின்றது; தயை சாந்தி முதலான ஆத்துமகுணங்களாகிற தண்ணீர்களினாலே அவர்கள் சகல பாபங்களாகிய மலங்களைக் கழுவிக்கொள்ளுவார்கள்; சூத்திரர் பிராமணாதிகளுக்குச் சிசுருஷை செய்வதினாலேயே பேறு பெறுகிறார்கள்; பெண்டிர்களும்பதி சிசுருஷைசெய்து ஆயாசமில்லாமலே நற்கதி யடைகிறார்கள்; ஆதலால் இம்மூவரும் புண்ணியசாலிகளென்பது என்னபிப்பிராயம்; கிருதயுகாதி காலங்களிலேயும் அந்தணர் முதலியோர்க்கும் தருமம் சம்பாதிப்பதிலே மிகுந்த ஆயாசமிருக்கின்றது; இதைப்பற்றி நான் சொன்ன விவரத்தினாலே உங்கள் சந்தேகந் தீர்ந்துவிட்டதன்றோ? நீங்கள் வினவுதற்கு முன்பே சொல்லவேண்டுவதைச் சொல்லிவிட்டேன். நான் இனி உங்களுக்குச் செய்யவேண்டுவது என்ன?" என்று வியாசர் சொன்னதைக்கேட்டு, அந்த

முனீசுவரர்கள் சந்தேக மற்றவர்களாய்ச் சந்தோஷத்தோடு அவரைத் திருவடி தொழுது மிகவும் புகழ்ந்து தங்களிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

"மயித்திரேயரே! இந்த ரகசியத்தை உமக்கு நான் சொன்னேன். மிகவுந் துஷ்டனான கலிக்கு இந்த மகா குணமொன் றிருக்கின்றது பாரும். நீர் முதலில் உலக ஸம்ஹாரத்தைக் குறித்து என்னைக் கேட்டீரன்றோ? பிராகிருதமென்றும் அவாந்தரமென்றும் பிரிந்திருக்கின்ற அந்தப் பிரளய கிரமத்தையும் உமக்கு நான் சொல்லுகிறேன்.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்றம் அத்தியாயம்

# நைமித்திகபிரளயம்

சர்வ பூதங்களுக்கும் பிரளயம் மூன்றுவிதமுண்டு. அவையாவன:—நைமித்திகம், பிராகிருதிகம், ஆத்தியந்திகம் என்பவையாம். கற்பத்தின் முடிவில் பிரமதேவனா லுண்டாகும் பிரளயம் நைமித்திகம் என்னப்படும். பரார்த்தப் பிரமாணமான விரிஞ்சனுடைய ஆயுசின் முடிவில் வரும் பிரளயம் பிராகிருத மென்னப்படும். மோக்ஷமே ஆத்தியந்திக மென்னப்படும். என்றிப்படிச் சொன்னபோது மயித்திரேயர், "சுவாமி! பிராகிருத பிரளயத்தை அறிந்து கொள்ளும்பொருட்டுப் பரார்த்தத்தை யிரட்டிக்கவேண்டுமே, அந்தப் பரார்த்த மென்கிற கணக்கை அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டும்" என்ன, மகரிஷி அருளிச்செய்கிறார்:—

கேளீர் பிராமணரே! ஏகஸ்தான முதல் ஒன்றுக்கொன்று பதின்மடங் கதிகமாய் மேலே மேலே ஸ்தானங்க ளுண்டன்றோ. அவைகளில் பதினெட்டாமிடம் பரார்த்த மென்று சொல்லப்படுகின்றது. அந்தப் பரார்த்த மிரட்டித்த காலத்தில் பிராகிருத பிரளயமுண்டாம். அப்போது வியக்த மெல்லாம் தன் காரணமான அவி

யக்தத்தி லயப்படும். மனிதருடைய நிமிஷமென்பது யாதுண்டோ, அஃது ஒரு மாத்திரையின் அளவுள்ள தாகையால் மாத்திரையென்று சொல்லப்படும். அந்த மாத்திரைகள் பதினைந்து சேர்ந்தது காஷ்டையாம். முப்பது காஷ்டைகள் ஒரு கலையாம். பதினைந்து கலை ஒரு நாழிகையாம். அந்நாழிகையானது பன்னிரண்டு அரைப்பலம் நிறையுள்ள தண்ணீரால் குறிக்கப்படும். அல்லது மகததேசத்தி னொருபடி நீரளவாம். அதை அறியும்வகை கேளும். இருபது குன்றிமணி யெடையுள்ள பொன்னினாலே நாலங்குல அளவாகச் செய்த ஊசிகளைக்கொண்டு துவாரம் இடப்பட்ட மகததேசத்துப் படியளவான வொரு பாத்திரத்தைத் தண்ணீரில் மூழ்த்த, அப்பாத்திரம் எவ்வளவு காலத்தினாலே தண்ணீரால் நிறையுமோ அவ்வளவு காலம் ஒரு நாழிகையென் றெண்ணப்படும். அல்லது அப்பாத்திரத்தில் விட்ட தண்ணீர் அந்தத் துவாரத்தினால் வெளிப்படுங் காலம் நாழிகையாம். இரண்டு நாழிகை ஒரு முகூர்த்தமாம். முப்பது முகூர்த்தம் ஒரு நாளாம். முப்பது நாள் ஒரு மாதமாம். பன்னிரண்டுமாதம் ஒரு வருஷமாம். இவ்வருஷம் தேவர்களுக்கு ஓரிராப்பகலாம். அப்படிப்பட்ட இராப்பகல் முந்நூற் றறுபதுசேர தேவமானத்தினால் ஒரு வருஷமாம். அந்த வருஷம் பன்னீராயிரஞ் சேர்ந்தால் ஒரு சதுர்யுகமாகும். அந்தச் சதுர்யுகம் ஆயிரமானால் சதுர்முகனுக்கு ஒரு தினமாம். அதற்குத்தான் கற்பமென்று பெயர். அதன் கடைசியில் வருவதுதான் பிரமசப்பந்தமான நைமித்திக பிரளயமாம். மயித்திரேயரே! அதி உக்கிரமான அந்தப் பிரளயத்தின் சொரூபத்தை முந்திச் சொல்லுகிறேன் கேளும். பிறகு நைமித்திகப் பிரளயத்தைச் சொல்லுவேன்.

ஆயிரஞ் சதுர்யுகத்தின் முடிவில் கருப்பு முதலிய காரணங்களாலே பூலோகம் பெரும்பாலும் க்ஷீணித்திருக்கையில் மிகவுங் கொடுமையாய் நூற்றாண்டளவு மழையில்லாமலிருக்கும். அதனாலே அற்பமான சத்தியுள்ள ஜந்துக்களெல்லாம் மடிந்துபோம். பின்பு ஸ்ரீ விஷ்ணுபகவான் சங்காரத்துக்காக உருத்திரரூபந்

தரித்தவராய்ச் சகல பிராணிகளையுந் தம்மில் லயிக்கும் படிச்செய்யத் திருவுள்ளம்பற்றிச் சூரியனுடைய ஏழு கிரணங்களி லிருந்துகொண்டு சகல ஜனங்களையும் பானஞ்செய்தருளுவர். இப்படியாகப் பிராணிகளிலும் பூமியிலுமுள்ள நீரையெல்லா முறிஞ்சிப் பூமிமுழுதை யும் வாட்டிப் போடுவர். இவ்வாறு சமுத்திரம் நதி அருவி முதலான தண்ணீரையெல்லா முண்டதனாலே அந்தச் சூரியகிரணங்களேழும் மிகப்பெருத்து ஏழு சூரியர்களாகிக் கீழுமேலுஞ் சொலித்துப் பாதாளங்க ளுள்பட மூன்று லோகங்களையும் எரித்துவிடும். இவ் வேழு சூரியர்களாலு மெரிக்கப்படவே இந்நிலமானது மலை கடல் முதலிய வெவ்விடத்திலும் பசையென்பது சுத்தமாயில்லாமல் மரஞ் செடி புல் பூண்டு முதலாக எரிந்துபோய் ஆமையோடு போலாய்விடும். பின்பு பக வான் ஆதிசேஷனுடைய சுவாசத்தினின்று முண் டான காலாக்கினி உருத்திரனாகிப் பாதாளங்களையெல் லாம் தகித்துக்கொண்டு பூமிக்கும்வந்து அதையுங் கொளுத்திவிடும். இப்படியாக அந்தப் பிரளயகாலாக் கினி ஜ்வாலா சக்கரத்தோடு கூடியதாய்ப் புவர்லோக சுவர்லோகங்களையும் கொளுத்திக்கொண்டு அங்கேயே சுற்றிக் கொண்டிருக்கும். அப்போது ஜ்வாலைகளாற் சூழப்பட்ட இம்மூன்று லோகங்களும் சராசரங்கள் எல் லாம் நசித்ததாய் வறுக்கிற சட்டிபோல் விளங்கும்.

பின்பு அதிகாரி புருஷர்களாய்ப் புவர்லோக சுவர் லோகங்களி லிருக்கிற மனுவாதிகள் மகாதாபமுற்றவர்க ளாகி மகாலோகஞ் சேருவார்கள். பின்பு அங்கும் பெருந்தாபமுற்று அவ்வுலகத்தாரோடுகூட அதற்கு மேலான ஜனலோகத்தை யடைவார்கள். அவர்களுக் குள்ளே யார் பரப்பிரமத்தை யடையநின்றவர்களோ அப்படிப்பட்டவர்கள் மேலுங் கீழும் பத்துத்தரஞ் சுற்றிச்சுற்றித் தபோலோக சத்தியலோங்களிற்சென்று கடைசியில் பரப்பிரமத்தை யடைவார்கள். பூமிமுத லான மூன்றுலோகத்திலுள்ள மற்றவர்களெல்லாம் ஆத்துமாவில் லயப்படுவார்கள். இப்படியாக ருத்திர ரூபியாயிருக்கிற ஸ்ரீஜநார்த்தனன் சகலத்தையுந் தகித் துத் தன் சுவாசத்தினின்று மனேக மேகங்களை யுண்

டாக்கினன். அதனாலே யானைக்கூட்டம்போலே மகா பயங்கரங்களான மின்னலோடும் இடியோடுங்கூடிப் பிரளயகால மேகங்கள் தலைப்படுகின்றன. அவற்றுள் சில கருநெய்தற்பூப்போலவும், சில ஆம்பல் போலவும், சில கருஞ்சிவப்பாயும், சில பொன்னிறமாயும், சில கழுதை நிறமாயும், சில அரக்குநிறமாயும், சில வைடூரியத்திற்கு ஒப்பாயும், சில இந்திர நீலத்திற்கு ஒப்பாயும், மற்றுஞ் சில சங்கு முல்லைகளுக்குச் சமானங்களாயும், பிறவுஞ் சில மைக்குநிகராயும், இன்னுஞ் சில தம்பலப் பூச்சிகள் போலவும், வேறு சில நெருப்புப்போலவும், மற்றுஞ் சில மனச்சிலைபோலவும், சில கூந்தற்பனை போலவும், சில சாஷமென்கிற பக்ஷியின் சிறகைப்போலவும் விளங்கும். அந்தப் பெரியமேகங்களின் உருவம் சில பெரிய பட்டணங்களை யொத்தும், சில மலைகளை யொத்தும், வேறு சில வஞ்சனைவீட்டுக்குச் சமானமாயும், மற்று முள்ளவை தரைக்கு நிகராயுமிருக்கும். இப்படி யுண்டான அந்த மகா மேகங்கள் பயங்கரமாய்க் கர்ச்சித்துக்கொண்டு வானமுழுது மறைத்து நின்று பெருந் தாரைகளைப் பொழிந்து, முன்னுரைத்தபடி மூவுலகங்களிலும்பற்றி நின்ற அப்பெருந்தீயை அவிக்கின்றன. தீ யவிந்தபின்பும் அவை இராப்பகலோயாமல் வருஷித்து அப்பெருந் தாரைகளினாலே பூமி முழுவதையும் ஜலமயமாக்கிப் பின்பு புவர்லோகத்தையும் அதற்குமே லுலகத்தையும் அப்படியே ஜலமயமாக்கும். இவ்வாறு அந்த மேகங்கள் ஸ்தாவர ஜங்கமங்கள் யாவு மற்று அந்தகாரஞ் சூழ்ந்த வுலகத்திலே நூற்றாண்டளவுக்கு மேலும் மழைபெய்து நிற்கும். ஓ முனிவரே! நித்தியனும் பரமாத்துமாவாயு மிருக்கிற ஸ்ரீவாசுதேவனுடைய மகிமையினாலே கற்பகாலத்தின் முடிவில் இப்படியெல்லா மாகின்றன.

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## நான்காம் அத்தியாயம்

# பிராகிருதபிரளயம்

கேளீர் மயித்திரேயரே! அந்தத் தண்ணீர் சப்த ரிஷிகளுடைய ஸ்தானத்தைக் கவர்ந்து நிற்பதனால் திரிலோகங்களும் ஏகார்ணவமாய்விடும். அப்போது ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய திருமுகத்தினின்றும் ஒருமூச்சுக்காற்றுண்டாகி அந்த மேகங்களையெல்லாம் நாசஞ்செய்துகொண்டு ஒரு நூறுண்டளவும் வீசிக்கொண்டிருக்கும். பிறகு சர்வபூதமயனும் நினைக்கவரியனும் அனாதியாயும் பிரபஞ்சத்துக்கு ஆதியாயும் மகாப்பிரபு வாயுமிருக்கிற ஸ்ரீ ஹரிபகவான் அக்காற்றை யமுது செய்து, பிரமரூபத்தோடு அந்த ஏகார்ணவத்திலே சேஷசயனத்தின்மீது, ஜனலோகத்திலுள்ள சனகாதி யோகிகளாலும் பிரமலோகத்திலுள்ள முமுக்ஷுக்களாலும் தியானிக்கப்பட்டவராய்த் தமது மாயா ஸ்வரூபமான யோகநித்திரையைக் கைக்கொண்டு வாசுதேவனென்னுந் திருநாமமுள்ள தம்மைச் சிந்தித்திருப்பவராய்த் திருக்கண் வளர்ந்தருளுவர். ஸ்ரீ ஹரியானவர் பிரமரூபந் தரித்து அந்தக்காலத்தில் பள்ளிகொள்வது நிமித்தமா யிருப்பதனாலே இவ்வாறு நடக்கும் பிரளயத்துக்குத்தான் நைமித்திகமென்று பெயர். சர்வாத்துமாவான அச்சுதன் எப்பொழுது எழுந்திருப்பாரோ அப்போது இவ்வுலகமும் அசையும். அவர் போக நித்திரை கண்டருளுவராயின் உலகமும் கண்மூடிப்போம். ஆயிரஞ் சதுர்யுக பிரமாணமான பிரமதினம் யாதுண்டோ, அவ்வளவு காலமே இராத்திரியாகும். இவ் விராத்திரியின் முடிவில் ஸ்ரீ விஷ்ணு விழித்துக்கொண்டு பிரமரூபத்தோடு மீண்டும் சிருஷ்டித்தருளுகிறாரென்பதை முன்னமே உமக்குச் சொல்லியிருக்கிறோமன்றோ? இந்தக் கற்பத்தின் முடிவிற் செய்யுஞ் சங்காரந்தான் அவாந்தர பிரளயமாம். நைமித்திகப் பிரளயக்கிரமத்தை உமக்குச் சொன்னோமன்றோ? இனிப் பிராகிருத பிரளயஞ் சொல்வோம் கேளும்.

முன்னுரைத்தபடி அனுவிருஷ்டி முதலானவைகளினுலே எல்லா உலகங்களும் பாதாளங்களும் நாசமாகி மஹத்தத்துவமுதல் விசேஷம் வரையிலுமுள்ள விகாரமெல்லாம் நசிக்கும்படி எம்பெருமானுடைய சங்கற்பத்தினுலே பிரளயம் சம்பவிக்க முதலில் நீர் நிலத்தின் குணமாகிய கந்தத்தைக் கிரகிக்கிறது. கந்தம் கிரகிக்கப்படவே, நிலமானது லயப்படத் தக்கதாகிக் கந்த தன்மாத்திரை நசித்து நீராய் விடுகின்றது. அந்த நீர் வளர்ந்து மகாவேகமும் மகாகோஷமு முள்ளதாகி எல்லாவற்றையு நிரப்பிக்கொண்டு அலைகளுள்ள பிரவாகத்தோடு லோகங்களின் முடிவு வரையில் ஓடி நிற்கிறது. அந்தத் தண்ணீரின் குணமான இரசத்தைச் சோதி கிரகிக்க, அத்தண்ணீர் இரசதன்மாத்திரை அற்றுச் சோதியாகின்றது. இவ்விதமாய் நீர் அக்கினியாகி மகாதேஜசு சூழ்ந்ததாய் எங்கும் நிறைந்து வியாபிக்கிறது. இவ்வண்ணம் நாற்புறமும் சுவாலாமயமாய்ச் சூழ்ந்து நிற்கிற அவ்வனலின் குணமாகிய ரூபத்தைக் காற்று கிரகித்துக் கொள்ளுகிறது. ரூப தன்மாத்திரை நசித்ததனுலே அனல் அற்று காற்று மிகவும் வீசுகின்றது. இதனுலே எங்கும் ஒளியற்றுக் காற்றே பேரிரைச்சலோடு வானத்தைப்பற்றி வீசிக்கொண்டிருக்க, அதன் குணமாகிய பரிசத்தை வானம் கிரகித்துக் கொள்ளுகின்றது. பின்பு வாயு நாசமாகி ஆகாசமொன்றே ஆவரணமின்றி யிருக்கும். ரூப ரச கந்த ஸ்பரிசங்களற்றதாய்ச் சத்தமே இலக்கணமாக வுடையதாய் அவயவமில்லாததாய் மிகவும் பெரிதாயிருக்கின்ற அந்த ஆகாசமானது யாவற்றையும் நிரப்பிக்கொண்டு விளங்கும். இப்படிச் சுற்றும் வட்டமாகி யாவுங்கொள்ளு மிடமாய் எல்லாவற்றையுஞ்சூழ்ந்து நிற்கின்ற அவ்வானத்தின் குணமாகிய சத்தத்தைப் பூதாதி கிரகிக்கின்றது. பூதங்களும் இந்திரியங்களும் ஒருமிக்க அந்தப் பூதாதியில் லயப்பட்டிருக்கும். அபிமான ரூபமான இந்தப் பூதாதியானது தமஸ்ஸைப் பிரதானமாகக் கொண்டதனுலே தாமசமென்று சொல்லப்படும். இந்தப் பூதாதியென்று சொல்லப்பட்ட அகங்காரத்தைப் புத்தியே லக்ஷணமாகக்கொண்ட மகத்து கிரகிக்கிறது. இவ்வண்டத்தி

னுள்ளே பூமியும் மகத்தும் முதலெல்லையுங் கடையெல்லையுமா யிருப்பதுபோலே வெளியிலும் அவை முதலெல்லையுங் கடையெல்லையுமா யிருக்கின்றன.

ஓ புத்திமானான மயித்திரேயரே! இப்படியே அண்டத்துக்குப் புறத்திலுள்ள பிருதிவி முதல் மஹத்திரூநின்ற ஏழு பிரகிருதிகளும் சங்கார கிரமத்திலே முன்னுரைத்தபடி தந்தமுடைய காரணங்களிலே லயப்படுகின்றன. இந்தப் பிரபஞ்சத்தை மூடிக்கொண்டிருக்கிற அண்டரூபமான பிருதிவியானது அதைச் சூழ்ந்த அப்பிலும், அவ்வப்பு அதைச்சூழ்ந்த தேஜசிலும், அத்தேஜசு அதைச் சூழ்ந்திரா நின்ற வாயுவிலும், அவ்வாயு தன்னைச் சூழ்ந்த ஆகாசத்திலும், அவ்வாகாசம் அகங்காரத்திலும், அவ்வகங்காரம் மஹத்திலும் லயமாகின்றன. இவற்றோடு கூடிய அந்த மஹத்தத்துவத்தைப் பிரகிருதி கிரகிக்கின்றது. அதிகப்படாமலும் குறைபடாமலும் முக்குணங்கள் சமமாயிருப்பதுதான் பிரகிருதியென்று சொல்லப்படும். அதுதான் லோகங்களுக்கு ஏதுவாகையால் பிரதானமும் காரணமு மாகின்றது. இவ்வண்ணம் இந்தப் பிரகிருதி வியத்த ஸ்வரூபமாயும் அவியத்த ஸ்வரூபமாயு மிருக்கின்றது. ஆனதால் வியத்தம் அவியத்தத்தில் லயப்படுகின்றது என்றும் ஒருவகைப்பட்டவனுயும் சுபாவத்திற் சுத்தனுயும் அக்ஷரனுயும் நித்தியனுயும் சூக்ஷ்மரூபி யாகையாலே பிரகிருதியையும் வியாபிக்கத் தக்கவனுயு மிருக்கிற புருஷனும் பிரகிருதிபோல் பரமாத்துமாவினுடைய அம்சமா யிருக்கிறுன். பரமாத்துமாவோ நாமம் ஜாதி முதலிய கற்பனைகளில்லாமல் எப்போதும் இருத்தலே சுபாவமாகக் கொண்டவனுய் அறியவேண்டியவனுய்ச் சர்வேசுவரனுய் ஞானஸ்வரூபியாய் ஜீவாத்துமாவுக்கு மேற்பட்டவனு யிருக்கிறவன். அப்படி யிருக்கும் ஸ்ரீ விஷ்ணுதான் பரப்பிரமம். முக்கியமான இடமாகையாலே பரந்தாமன். எல்லாமா யிருப்பவனவனே. யோகியானவன் அவனைச் சேர்ந்து தான் மறுபடியுந் திரும்புகிறதில்லை. வியத்தா வியத்த சொரூபமான பிரகிருதி யாதுண்டோ

அதுவும், புருஷன் என்று சொல்லப்பட்ட ஜீவனும் இவ்விரண்டும் அந்த பரமாத்துமாவிலே லயப்படு கின்றன. அந்தப் பரமாத்துமாதான் எல்லாவற்றிற்கும் ஆதாரமான பரமேசுவரன். அவன் கர்ம காண்டமான வேதத்திலும் பிரமகாண்டமான வேதாந்தத்திலும் விஷ்ணு முதலிய நாமங்களினாலே துதிக்கப்பட் டிருக்கிறான். பிரவிர்த்தி மார்க்கமென்றும், நிவர்த்தி மார்க்கமென்றும் இருவகையான வைதிக கருமங்களி னாலே சகல தேவதா ஸ்வரூபியான அந்த ஸ்ரீவிஷ் ணுவே இருக்கு யசுர் சாமம் என்கிற பிரவிர்த்திமார்க் கங்களினாலே யக்கியேசுவரனாயும் யக்கியபுருஷனாயும் ஆராதிக்கப்படுகிறான். மேலும் நிவர்த்தி மார்க்கத் திலே ஞானசொரூபியாயும் ஞானமயமான திருமேனி யுள்ளவனாயுமுள்ள அந்த விஷ்ணுவே மோக்ஷங் கொடுக்க வல்லவனாக ஞானயக்கியத்தைக் கொண்டு யோகிகளால் பூஜிக்கப்படுகிறான். குறில் நெடில் அள பெடை இவற்றாலே சொல்லப்படும்படியான அசித்து யாதுண்டோ அதுவும், வாக்குக்கு விஷயமாகாத சித் தும் அந்த ஸ்ரீவிஷ்ணுவின் சுவரூபங்களேயாம். வியத்தமும் அவியத்தமும் புருஷனும் முத்தனும் யாவும் அந்த ஸ்ரீ ஹரிபகவானே. சகல பிரபஞ்சத்தை யும் தமக்குச் சரீரமாக்கொண்டு விளங்குவதனாலே அவனுடைய சுவரூபங்களேயாம். விகாரமில்லாத சுவரூப முடையவனும் வியாபகனுமான அந்த ஸ்ரீஹரியினிடத்திலே வியத்தாவியத்த ஸ்வரூபமான பிரதானமும் புருஷனும் ஒடுங்குகிறார்களன்றோ? அவ் வண்ணம் ஒடுங்குமிடமான அந்தப் பரமாத்துமாவுக்கு இரண்டு பரார்த்தகாலமென்று சொன்னது ஒரு பக லாம். வியத்த மெல்லாம் பிரகிருதியிலும் அந்தப் பிரகிருதி புருஷனிடத்திலும் அந்தப் புருஷன் பர மாத்துமாவிலும் லயமா யிருக்க, அவ்வளவு காலம் இரவாம். ஓய் பிராமணோத்தமரே! நித்தியனான அந் தப் பரமாத்துமாவுக்குப் பகலென்பது மிரவென்பது மில்லை. ஆனாலும் சிருஷ்டி முதலான காரியங்களைக் கொண்டு உபசாரவழக்கமாய் இராப்பகல் சொல்லப்படு கின்றன. இப்படியாகப் பிராகிருத பிரளயக்கிரமத்தை

உமக்குச் சொன்னேன். இனி ஆத்தியந்திகப் பிரளயத்தைச் சொல்லுவேன்.

*நான்காம் அத்தியாயம் முற்றிற்று.*

---

## ஐந்தாம் அத்தியாயம்

# ஆத்தியந்திகப்பிரளயம், ஜனனாதி துக்கநிரூபணம்

கேளும் மயித்திரேயரே! புத்திசாலியானவன் ஆத்தியாத்துமிக முதலிய தாபங்கள் மூன்றையு மறிந்து ஞானமும் வைராக்கியமும் உண்டாகப்பெற்று மோக்ஷமென்கிற ஆத்தியந்திக லயத்தை அடைகிறான். ஆத்தியாத்துமிக தாபமாவது தன்னாத்துமாவையுந் தேகத்தையும்பற்றி யுண்டாகுந் துக்கம். அது சரீரத்தைப் பற்றினதும் மனதைப்பற்றினதும் என இருவகைப்படும். தலைநோய், பீனசம், சுரம், சூலை, பகந்தரம், குன்மம், இரத்தபேதி, சோகை, சுவாசம், வாந்தி, கண்ணோய், அதிசாரம், குஷ்டம், வாயு, உரோகம் இப்படிப் பட்ட பலவும் சரீரத்தைப்பற்றினவை. காமம், குரோதம், பயம், துவேஷம், உலோபம், மோகம், துக்கம், சோகம், அசூயை, பொறாமை, அவமானம், பகை பாராட்டல் முதலாக மானசமும் பலவகையாயிருக்கும். ஆதிபவுதிகமாவது ஜந்துக்களைப்பற்றி யுண்டாவது. மிருக பக்ஷி மனுஷ்ய பிசாச சர்ப்ப ராக்ஷஸாதிகளாலே யுண்டாவதானதால் அதுவும் அனேகவிதமுள்ளது. ஆதி தைவிகமென்பது தெய்வத்தால் வருவது. அதுவும் குளிர் காற்று வெப்பம் மழை இடி முதலானவைகளா லுண்டாவதுபற்றிப் பலவிதமாம். இந்தத் தாபங்கள் மூன்றும் கருவினாலும் பிறப்பினாலும் இறப்பினாலும் மூப்பினாலும் நரகத்தினாலும் உண்டாக்கப்பட்டு அனேகவாயிரம் வகைகளாகின்றன. அவற்றைவிளக்குகிறேன் கேளும்.

ஐந்துவானது மிகவு மேன்மையான வுடம்புள்ளதாய் அனேக மலங்கள் சூழ்ந்த கருப்பத்திலே ஒருவகைத் தோலால் மூடப்பட்டு, மிகவும் வளைந்த முதுகு கழுத்துகளி னெலும்புடையதா யிருந்துகொண்டு, தாயுண்ணுகின்ற புளிப்பு கசப்பு கரிப்பு உப்பு முதலானவுணவுகள் மேலே படும்போது அளவில்லாத வேதனைகளைப் பொருந்தி, தன்னுடம்புகளை நீட்டவு மடக்கவுந் திறனில்லாததாய் மல மூத்திரங்களாகிய சேற்றிலே கிடந்து, எப்புறத்திலுந் துன்பமேயுற்று, மூச்சுவிட மாட்டாமல் அறிவுமாத்திர முள்ளதாய்ச் சென்ற அனேக ஜனனங்களை நினைத்து மகா விசனமடைந்ததாய் இப்படித் தன் கருமத்தினுற் கட்டுண்டிருக்கின்றது. பின்பு பிறக்கும்போது பிரமதேவனு லேவப்பட்ட ஒரு காற்றினுல் எலும்புகளெல்லாம் நூறுங்கிப்போம்படிப் பீடிக்கப்பட்டு மலமூத்திரங்களாலுஞ் சுக்கில சோணிதங்களாலும் பூசப்பட்ட முகமுடையதாய் மிகுந்த பலமான பிரசவ வாயுக்களினுலே தலைகீழாகத் திருப்பப்பட்டு வெகு வருத்தத்தினுல் தாயின் வயிற்றினின்றும் வெளியில் வருகின்றது. பிறந்த பின்பு வெளிக்காற்று பரிசித்தவுடனே பெருமூர்ச்சையுற்று முன்னிருந்த ஞானத்தை யிழக்கின்றது. விழும்போது முட்களாலே குத்தப்பட்டாற் போலவும் வாட்களாலறுக்கப்பட்டாற் போலவும் துர்க்கந்தமான விரணத்திற்கொப்பான யோனித்துவாரத்தினின்றும் புழுப்போலே தரையில் விழுகின்றது. பிறகு சொறிந்து கொள்ளவுந் திரும்பவுங்கூடச் சக்தியில்லாததாய் ஸ்நானபான ஆகாராதிகளைப் பிறருடைய இச்சையின்படிப் பெறுகின்றது. மேலும் மூத்திராதிகளினுலே அசுத்தமான படுக்கையிற் கிடந்து, எறும்பு கொசுகு முதலியவைகள் கடிக்கும்போது அவற்றைத் தடுக்கமாட்டாம லிருக்கின்றது. இப்படிப் பிறப்பின் துன்பங்களையும் பின்னுண்டாகுந் துன்பங்களையும் ஆதிபௌதிகமுதலிய துன்பங்களையும் எத்தனையோ இளமையிலடைகின்றது. பின்பு வளர்ந்து பருவ மடையும் போது மனிதன் அஞ்ஞானமாகிய அந்தகாரமூடிக்கொண்டிருப்பதனுலே மூடனுகி "நான் யார்? எங்கிருந்து வந்தேன்? எங்கே போவேன்?

எனக்கென்ன பயன்? நான் எந்தக் கட்டினுற் கட்டுண்டிருக்கிறேன்? காரணம் எது? காரண மல்லாத தெது? செய்யத் தக்க தெது? செய்யத் தகாத தெது? எது சொல்லத் தக்கது? எது சொல்லத் தகாதது? எது தருமம்? எஃது அதருமம்? எங்கே இருக்கிறேன்? எப்படி இருக்கிறேன்? செய்ய வேண்டுவ தெது? செய்ய வேண்டாத தெது? எது குணமுள்ளது? எது குற்றமுள்ளது?" என்று ஒன்றையும் அறியமாட்டதவனு யிருக்கிறுன். இப்படி மிருகங்களைப்போலே மூடனுய் உண்பதும் புணர்வதும் முக்கியமாகக் கொண்டு அஞ்ஞானத்தாலுண்டான அனேக துக்கத்தை யனுபவிக்கிறுன். அஞ்ஞானமென்பது தமோகுணத்தின் விகாரம். அதனுல் மனிதருக்குக் கெட்டகாரியங்களைச் செய்யும்படி யாகின்றது. ஆகவே வைதிக கருமங்கள் நடவாதிருக்கின்றன. அந்தக் கருமலோபத்தினுலே நரகமுண்டாகின்றது. ஆதலால் அஞ்ஞானிகளுக்கு இம்மையிலும் மறுமையிலும் துக்கம் அதிகமாயிருக்கின்றது. இவ்வாறு யவ்வனந்தாண்டி முதுமை நேரிடும்போது உடம்பு மெலிந்து கட்டுத் தளர்ந்து பற்களாடி யுதிர்ந்து திரைகளும் நரம்பு தோன்றுதலு முண்டாகக் கொஞ்சந் தூரத்தி லிருப்பதுந் தெரியாமல் கருவிழி உள்ளே ஆழ்ந்து போய் மூக்கின் துவாரத்தி லிருந்து மயிர்கள் உதிர உடம்பு நடுங்கி எலும்புக ளெல்லாம் வெளிப்பட்டுத் தெரிய முதுகெலும்பு வளைந்து போகத் தீபனம் மந்தமானதினுலே உணவு நன்ருய்ச் செல்லாமற் செய்கைகள் குறுகிப்போக நடப்பதும் எழுந்திருப்பதும் படுப்பதுங் கூட வருந்திச் செய்து கொண்டு காது கேளாமலுங் கண் தெரியாமலுமிருக்க வாயினின்றும் நீர் வடிந்து கொண்டிருக்கத் தவிக்கின்றுன். இப்படிச் சகல இந்திரியங்களும் அசுவாதீனங்களாகி மரணங் கிட்டியிருக்கையில் முன்பு தான் அனுபவித்தவைகளை நினைத்து உருகிக்கொண்டு மக்களுண்டென்று அறியவேண்டும். மனிதன் சப்தப்பிரமத்தில் தேறினுல் ஒரு வார்த்தை சொல்லவும் மிகுந்த வருத்தமுள்ளவனுய்ச் சுவாசகாசமுண்டாவதனுலே மிகுந்த ஆயாசமும் தூக்கமின்மையு முடையவ

ணய் எழுந்திருக்கவும் உட்காரவும் பிறருதவி வேண்டு கையாலே வேலைக்காரர் மக்கள் மனைவிகள் முதலாக யாவரும் அவமதிக்கும் படியானவனாய் ஒருசுத்தியுமில் லாமல் உண்ணவும் உலாவவும் வெகு ஆசையுள்ளவ னாய் ஊழியரும் பரிகாசஞ் செய்யப் பெற்றுப் பந்துக்கள் வெறுப்படையத் தன்னுடைய யவ்வனனுபவத்தைப் பூர்வ ஜன்மத்தி னனுபவம்போல் நினைத்து மன வருத்தத்தோடு பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறான். இப்படி மூப்பில் பலதுக்கங்களை யனுபவித்து மரண மடைகிறான்.

அந்த மரணத்தில் நேரிடுந் துன்பங்களைக் கேளும். கால் கை கழுத்துக்கள் கட்டுவிடப்பெற்று பெருநடுக்கமுள்ளவனாய், சுவாதீன மில்லாமல் சற்று நேரம் அறிவும் சற்றுநேரம் அறிவழிவு முள்ளவனாய் இவைகள் எப்படிப் போமோவென்று மக்கள்பெண்டிர் வீடு மாடு தனம் தானிய முதலானவற்றிலே ஒரு கவலையினாலே கலங்கினவனாகி, இப்படி இருக்கையி லேயே இரம்யங்கள்போலே மிகக் கொடியவைகளான இயமனுடைய சரங்கள்போன்ற மகா வியாதிகளாலே உயிர்பெயரக் கண்கள் சுழலக் கைகால்களை யுதறிக் கொண்டு, நாக்கு முதடும் உலர்ந்து உதானவாயு எழும்பித் துன்பப்படுத்தக் கண்டமடைத்துக் குருகுரு வெனச் சப்தித்துக் கொண்டிருக்கப் பெருந்தாபமும் பெரும்பசியும் பெருந்தாகமும் பொருந்தி, யமகிங்கர ராலே பீடிக்கப்பட்டு, வெகு பிரயாசத்தினாலே தேகத்தை விட்டுக் கிளம்புகிறான். உடனே யாதனா தேகத்தையு மடைகிறான். இவைகளும் இன்னும் பலவிதமான துன்பங்களும் மரணத்தி லுண்டாகின்றன.

இறந்தபின் மனிதர் நரகத்திற்படு மவஸ்தைகளைக் கேளும். யமகிங்கரர் முந்திப் பாசத்தினாற் கட்டிப் பிடிப்பதும், பின்பு தடியா லடிப்பதும், உக்கிரமான யமனைப் பார்ப்பதுங், கொடிய வழியைக் காண்பது மாகிய துன்பங்களை யனுபவித்துப் பிறகு காய்ந்த மணலும் அக்கினி யந்திரமும் கத்தி முதலிய ஆயுதங் களும் இவை முதலியவைகளினாலே பயங்கரமான

அவ்வந்த நரகத்திலே படும்பாடு மிகவுங் கொடியது. ஓ பிராமண சிரேஷ்டரே! இரம்பங்களினாலே அறுக்கப் பட்டும் மூசையிற் போட்டுக் காய்ச்சப்பட்டும் கோடரிகளி னாலே பிளக்கப்பட்டும் பூமியிற் புதைக்கப்பட்டும் சூலங் களி லேற்றப்பட்டும் புலியின்வாயி லிடப்பட்டும் கழுகுக ளாலே பிடுங்கப்பட்டும் கொடிய மிருகங்களாலே கடிக் கப்பட்டும் எண்ணெய்க் கொப்பரையிலிட்டுப் பொரிக்கப் பட்டும் உப்புச்சேற்றிலே புரட்டப்பட்டும் உயரத்தி லிருந்து தள்ளப்பட்டும் யந்திரங்களிலேற்றி யெறியப் பட்டும் பாப பலங்களாய் மனிதர் நரகங்களிற் படுந் துன் பங்கள் இவ்வளவென்று சொல்லி முடியா. ஓ முனி வரே! நரகத்திலே மாத்திரமன்று, துக்க பரம்பரை சுவர்க்கத்திலு முண்டு. சுவர்க்கத்திற் சுகானுபவம் பண் ணிக்கொண்டிருக்கையில் புண்ணியம் குறைந்து இனி நாம் விழப்போகிறோமென்கிற நினைப்பினாலே பயமுண் டாகும்போது மனதிற்கு மகா துக்கமுண்டாகும். இப் படி நரகாதிகளை யனுபவித்து மறுபடியும் கர்ப்பத்திற் பிரவேசித்துப் பிறக்கிறான். இவ்வாறு அநேகந்தரம் பிறப்பது மிறப்பதுமாய் அலைகிறான். மேலும் பிறந்த வுடனேயாவது இளமையிலாவது யௌவனத்திலாவது நடுவயதிலாவது முதுமையிலாவது சித்தமாயிறக்கிறான். பிழைத்திருக்கும்போதோ நானாவித துக்கங்களாற் சூழப் பட்டு நூலுக்குக் காரணமான பஞ்சு மொய்த்துக்கொண் டிருக்கிற பருத்திவிதைபோலே யிருக்கிறான். மேலும் பொருளைச் சம்பாதிப்பதிலும் காப்பாற்றுவதிலும் அதின் அழிவிலும் இஷ்டருக்குத் துன்பம் நேரிடுகை யிலும் மனிதர்க்கு அநேக துக்கங்களே யுண்டாகின்றன.

மயித்திரேயரே! எந்த எந்தப்பொருள் புருஷர்க்கு இன்பமாயிருக்கிறதோ அதுவே துன்பமென்னு மரத் திற்கு விதையாகின்றது. களத்திரம் புத்திரர் மித்திரர் திரவியம் கிருகம் க்ஷேத்திரம் முதலானவைகளினாலே எவ்வளவு துக்கமுண்டாகின்றதோ அவ்வளவு சுகமுண் டாவதில்லை. இப்படியாகச் சம்சாரத்தின் துக்கமாகிய வெய்யிலினாலே தபிக்கப்பட்டு அலைகின்ற மனிதருக்கு மோக்ஷமென்கிற விருக்ஷத்தி னிழலி வில்லாமல் மற்

றெங்கே சுகமுண்டாகும்? ஆதலால் கர்ப்பம் ஜனனம் வார்த்திக்கியம் முதலானவைகளிலே மனிதருக்கு உண்டாகுந் தாபங்கள் மூன்றுக்கும் மருந்து யாதென்றால் மற்றொரு சுகத்திலும் அதிசயந் தோன்றாதிருக்கும்படியான மகா சுக ரூபமாயும் துக்க சம்பந்தமே யில்லாததாயும் நித்தியமாயுமுள்ள பகவத் பிராப்தியே என்பது என்னபிப்பிராயம். ஆதலால் அறிவுள்ள மனிதர் ஈன குணங்க ளொன்றுமில்லாமல் சகல சற்குணங்களு முள்ளவனான பகவானை யடையும் பொருட்டு எத்தனஞ் செய்யவேண்டும்.

ஓ முனிவரே! அந்த எம்பெருமானை யடைவதற்கு ஞானமும் கருமமும் உபாயமென்று சாஸ்திரஞ்சொல்லுகின்றது. அந்த ஞானம் ஆகமஜமென்றும் விவேகஜமென்றும் இருவகைப்படும். சாஸ்திரங்களினா லுண்டானது ஆகமஜம். யோகசிந்தனையாலே யுண்டானது விவேகஜம். முந்தியதற்குச் சப்தப்பிரமமென்றும், பிந்தியதற்குப் பரப்பிரம மென்றும் பெயர். இவ்விரண்டு ஞானங்களுக்கு முள்ள பேதமாவது:— அஞ்ஞானமென்பது அந்தகாரம் வஸ்துக்களை மறைப்பதுபோலே ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபங்களை மறைப்பதால் அது அந்தகாரம்போலே யிருக்கின்றது. சப்தப்பிரம மென்கிற ஆகமஜஞானம் விளக்கு இருளைச்சிறிது நீக்கிப் பொருளை விளக்குவதுபோலே தேகாத்துமாதி மயக்கங்களை நீக்கி ஜீவபரஸ்வரூபங்களை யொருவாறு விளக்குவதினாலே விளக்குப்போலாகும். பரப்பிரமமென்கிற விவேகஜ ஞானம் சூரியன் இருளை முற்றுமழித்துப் பொருளெல்லாவற்றையும் நன்றாய் விளக்குவதுபோலே அஞ்ஞானத்தை வேரோடுபோக்கி ஸ்வரூபங்களைப் பிரத்தியக்ஷமாய் விளக்குவதினாலே சூரியனைப்போலாகும்.

இவ்விஷயத்தில் மனுவும் வேதார்த்தத்தை யறிந்து சொல்லி யிருப்பதைக் கேளும். சப்தப்பிரம மென்றும் பரப்பிரம மென்றும் இரண்டு பிரமத்தை யடைவான். அதர்வண சுருதி யென்ற வேதபாகமும் இப்

படியே சொல்லுகின்றது. அக்ஷரமென்று சொல்லப்படுகிற பிரமத்தை எந்த வித்தையாலடையலாமோ அதற்குப் பரவித்தை யென்று பெயராம். கருமங்களை யறிவிக்கிற இருக்கு வேதாதிகள் அபரவித்தையென்று சொல்லப்படும். அந்தப் பரவித்தையின் விஷயமான பிரமஸ்வரூபமானது வேதாந்தத்தினு லல்லாமல் தோன்ருததும், தோன்றல் மறைதல் கெடுதல் வளர்தல் குறைதல் திரிதல்களாகிய விகாரமில்லாததும், வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாததும், தேவ மனுஷ்யாதி ரூபங்களில்லாததும், கால் கை முதலான வுறுப்புக ளில்லாததும், யாவற்றையும் நியமிப்பதும், எங்குமுள்ளதும், பூதங்களுக்குக் காரணமானதும், தனக்கொரு காரணமில்லாததும், எல்லாவற்றையும் வியாபித்து ஒன்றிலும் வியாபிக்கப்படாததுமாயிருக்கின்றது. மேலும் எதினின்று மெல்லா முண்டாகின்றதோ, ஞானிகள் எதைக் காண்கிருர்களோ அதுதான் பிரமம். அதுதான் மேலான சோதி. விஷ்ணுவின் உத்தமசொரூபமென்று சுருதிகளிற் சொல்லப்பட்ட ஆக்ஷ—மமான அந்தப் பிரமத்தை மோக்ஷம் பெறவேண்டுபவர்கள் தியானிக்கவேண்டும். பரமாத்துமாவின் அந்த ஸ்வரூபந்தான் பகவானென்கிற சொல்லுக்குப் பொருள். இந்தப் பகவானென்னுஞ் சொல் எம்பெருமானுடைய அளவற்ற ஸ்வரூப ரூப குண விபவங்களைக் குறையறச் சொல்லத்தக்கது. இப்படி நன்ருய்ச் சொல்லப்பட்ட ஸ்வரூபாதிகளையுடைய அந்தப் பரமாத்துமாவின் தத்துவம் எதனுலே விளங்குமோ அப்படிப்பட்ட துவாதசாக்ஷரத்தை அங்கமாகக் கொண்டதுதான் பரவித்தையாகும். மற்ற வேதபாகமெல்லாம் அபர வித்தையேயாம். இந்தப் பகவானென்னும் பதம் நாமரூபாதி விஷயமாகாமல் பிரமசமானமான முத்தனையும் பூஜாநிமித்தமாய் உபசாரத்தாற் சொல்லும். ஆனுல் தோஷங்களுக்கு விரோதியாய் மகா விபூதிகளை யுடையதாய் சர்வகாரணங்களுக்குங் காரணமாயிருக்கிற பரப்பிரமத்தைத்தான் முக்கியமாய்ச் சொல்லுகின்றது. இச்சொல் பிரகிருதியைத் தூண்டுதலும் உடையனுயிருத்தலும் போஷித்தலும்

காத்தலும் சங்கரித்தலும் உண்டாக்கலும் யாவற்றுக்கும் இடமாயிருத்தலும் யாவற்றிலு மிருத்தலுமாகிய எழுத்துப் பொருள்களை யுடையதாதலால் பரப்பிரமமாகிய வாசுதேவனுக்கேயல்லது பிறனுக்குச் செல்லாது. இச்சொல்லை மேன்மைப் படுத்தும்படியான விடத்திலே சங்கேதமாய்ப் பிரயோகிக்கிறார்கள். அந்தச் சங்கேதத்தின்படியும் எம்பெருமானையே முக்கியமா யுணர்த்தும். மற்றவிடத்தில் உபசாரவழக்காய்ச் செல்லும். அப்படிச் செல்லுதற்கும் ஞானவிசேஷம் அவ்விடத்தி லிருக்கவேண்டும். அஃதாவது உற்பத்தி பிரளயம் பூதங்களின் போக்குவரவு வித்தை அவித்தை இவற்றை அறிந்தவன் பகவானென்று சொல்லப்பட வேண்டும். மேலும் இம்மொழி சம்பூர்ணமான ஞான சத்தி பல ஐசுவரிய வீரிய தேஜசுக்களாகிய சகல சற்குணங்களையும் சகல ஹீநகுணங்க ளில்லாமையையும் பதப்பொருளாகத் தருகின்றது. ஆதலால் இது சகல ஹேயப்பிரத்தியநீகனும் சமஸ்த கல்யாண குணாகரனுமுள்ள எம்பெருமானுக்கே முக்கிய வாசகமாகின்றது. சகலாதாரமாயும் சகலாதேயமாயும் விளங்குகிற ஸ்ரீவிஷ்ணுவை வாசுதேவபதம் போதிக்கின்றது.

முன்னே கேசித்துவஜனென்பவரைக் காண்டிக்கிய ஜனகர் வினவ அநந்தனை ஸ்ரீவாசுதேவனுடைய திருநாமத்தை நாமுரைத்தபடியே அவரு முரைத்தருளினார். இந்தத் திருநாமங்களின் பொருளைப் புத்தியில் நிலைக்கும் பொருட்டுச் சொல்லுகிறேன். எம்பெருமான் அவியத்தத்தையும், மகத்து முதலிய விகாரங்களையும், முக்குணங்களையும், அவற்றின் காரியமான அஞ்ஞான துக்காதிகளையும் கடந்தவன். சகல மறைவுகளு மெக்காலத்திலு மில்லாதவன். சகலமும் உள்ளும் புறமும் அவனாலே வியாபிக்கப்பட்டிருக்கிறபடியால் சகல ஸ்வரூபியா யிருக்கிறவன். மேலும் ஸ்ரீ வாசுதேவ பகவான் இயற்கையால் குற்றங்களோடு கலக்காத சகல கலியாணகுண பரிபூரணன். சகல பூதங்களையும் தன் சத்தியின் ஒரு சிறிய பங்கினால் சூழ்ந்திருப்பவன். தன் திருவுள்ளத்தின்படி அவ்வந்தத் தருணத்திற்கு வேண்டுமான திவ்விய மங்கள விக்கிர

கத்தை யெடுக்கின்றவன். அதனாலே சகல லோகங்களுக்கும் நன்மையைச் சாதிக்கிறவன். அளவற்ற தேஜசு பலம் ஐசுவரியம் ஞானம் வீரியம் சத்தி முதலான குணங்களின் இராசிபோன்றவன். மேலானவர்க்கெல்லா மேலானவன். ஒரு துர்க்குணமு மில்லாதவன். உயர்ந்தவைகளுக்குந் தாழ்ந்தவைகளுக்கு மீச்சுரன். அப்படிப்பட்ட எம்பெருமான் வியூஹ விபவாதி ரூபங்களினாலே வியஷ்டி ரூபகனாகவும், சமஷ்டி ரூபகனாகவும், இந்த ரூபங்களாலே விளங்குவதினாலே வியத்தனாகவும், பாரூபத்தினால் விளங்காமையாலே அவியத்தனாகவும், சகலத்தையும் சர்வகாலங்களினும் சர்வவிதத்தினும் ஆளுகிறவனாகவும், எல்லாக்காலத்திலும் எல்லாவற்றையும் தானே ஒருங்கே பிரத்தியக்ஷமாய்க் காண்கிறவனாகவும், எல்லாவற்றையும் பொருந்தினவனாகவும், சகல சத்திகளு முள்ளவனாகவு மிருக்கையாலே பரமேஸ்வரனென்னுந் திருநாமமுடையவன். அப்படிச் சகல தோஷரகிதமாய்ச் சுத்தமாய் மேலாய் என்றும் பிரகிருதிக் குட்படாததாய் என்று மொருபடிப்பட்டதாயுள்ள பகவத் ஸ்வரூபம் எதனாலே அறியப்படுகிறதோ அந்த ஆகமஞானமும், எதனாலே காண்ப்படுகிறதோ அந்த விவேகஞானமும், எதனாலே அடையப்படுகிறதோ அந்தப் பக்திரூபமான ஞானமும், இவைதாம் ஞானமென்று சொல்லப்படும். இதற்குப் புறமாயிருப்பதெல்லாம் அஞ்ஞானமேயாம்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆறும் அத்தியாயம்

# கேசித்துவஜகாண்டிக்ய சம்வாதம்

முன் சொன்னபடி குணங்களும் விபூதிகளும் விக்கிரகமுமுள்ள பகவான் தத்துவமுணர்த்துஞ் சாஸ்திரத்தினாலும் யோகத்தினாலும் காணப்படுவன். இவ்விரண்டு ஞானமுந்தான் அவனை யடைவதற்குச் சாதனமாய் இருக்கும். ஆதலாலே பிரமமென்றுஞ்

சொல்லப்படும் சாஸ்திரத்தை நன்ருய் விசாரித்து யோகத்தி லிழியவேண்டும். யோகத்தி லிழிந்தபின் அந்தத் தத்துவசாஸ்திரத்தை நன்ருய்த் திடப்படுத்திக் கொள்ள வேண்டும். இப்படி ஸ்வாத்தியாய யோகங்க ளிரண்டும் நன்ருய்த் தேர்ந்ததனுலே பரமாத்துமா விளங்கிக் காணப்படும். அந்தப் பரமாத்துமாவைக் காண்பதற்குச் சாஸ்திரஞானம் ஒரு கண், யோகம் மேலான கண். பரப்பிரமமான பகவான் இக்கண்களாலே காணக்கூடியவனேயல்லது இந்தமாமிசக் கண்களாற் காணக்கூடாதவன் என்றுரைத்த குருவை நோக்கிச் சீஷர் "ஓ பராசர பகவானே! எதனுலே சகலாதாரபூதனுன பரமேசுவரனை நான் காணக்கூடுமோ அப்படிப்பட்ட யோகத்தை அறிய விரும்புகிறே ஞதலால் அதை அடியேனுக்குச் சாதித்தருளவேண்டும்" என்று வினவ, மகா முனிவர் சிஷ்யரை நோக்கி "ஓ மயித்திரேயரே! பூர்வத்திலே மகாத்துமாவான காண்டிக்கிய ஜனகருக்குக் கேசித்துவஜர் சொன்னவிதமாய் அந்த யோகத்தை உமக்கு நான் சொல்லுகிறேன்" என்றவுடனே, மயித்திரேயர் "ஓ பிரமரிஷி சிரேஷ்டரே! காண்டிக்கியர் யார்? கேசித்துவஜர் யார்? யோகத்தைப் பற்றி அவர்களுக்குச் சம்வாதம் நேர்ந்த தெப்படி? அருளிச் செய்யவேண்டும்" என்ன, இருடி அருளிச் செய்யலாயினுர்.

தருமத்துவசனென்ற ஜனகமகாராஜா இருந்தார். அவருக்கு மிதத்துவசர் என்றும் கிருதத்துவசர் என்றும் இருவர் குமாரரிருந்தார்கள். கிருதத்துவசர் எப்போதும் வேதாந்த விசாரணை செய்துகொண்டிருப்பர். அவருக்குக் கேசித்துவசர் என்கிற மகா கீர்த்திமானுன புத்திரர் உண்டானுர். மிதத்துவசருக்கும் காண்டிக்கிய ஜனகர் என்கிற புத்திரர் பிறந்தார். காண்டிக்கியர் கரும மார்க்கத்தில் நின்று பூமியை யாண்டுவந்தார். கேசித்துவசரோ ஆத்தும வித்தையி லூன்றினவராய் இராச்சிய பரிபாலனஞ் செய்து வந்தார். இப்படி யிருக்கையில் அவ்விருவரும் ஒருவரை யொருவர் ஜயிக்க வேண்டுமென் றெத்தனப்பட கேசித்துவஜர் காண்டிக்கியரை இராச்சியத்தி னின்றுந் துரத்திவிட்

டார். துரத்திவிடவே காண்டிக்யர் அற்பமான சேனைதிகளை யுடையரா யிருந்ததனாலே சத்துருவை ஜயிக்கமாட்டாமல் இராச்சியத்தை விட்டு மந்திரி புரோகிதர்களோடுகூடப் பிறர்வரக்கூடாத ஓராரணியத்திற் சஞ்சரித்துக்கொண்டிருந்தார். இராச்சியத்திலிருந்த கேசித்துவசர் ஞானத்தைப் பற்றினவராய்ப் பிரமவித்தையி லிருந்துகொண்டே உபாசனத்துக்கு இடையூறுசெய்யும் பாவங்களை நிவிர்த்தியாக்கும்பொருட்டு அனேக யாகங்களைச் செய்துவந்தார். அந்த மகாராஜா யாகஞ் செய்துகொண்டிருக்கையில் ஒருநாள் பிரவர்க்கிய மென்ற சடங்கில் அவிசுக்கு வேண்டும் பால் கொடுத்து வருகிற பசுவைக் காட்டில் ஒரு புலி அடித்தது. அதை அந்த மன்னன் கேள்விப்பட்டு "இதற்குப் பிராயச்சித்த மென்ன" என்று இருத்துவிக்குகளைக் கேட்டார். அவர்களோ "நாங்க ளறிய மாட்டோம், கசேருவைக் கேளும்" என்றார்கள். பின்பு அரசன் கசேருவைக் கேட்க, அவர் "பார்க்கவரைக் கேளும்" என்றார். பார்க்கவரும் "எனக்குத் தெரியாது, சனகருக்குத் தெரியும், அவரைக் கேளும்" என்றார். அரசன் சனகரை அணுகிக்கேட்க அவர் "அரசனே! இந்தக் காரியம் கசேருக்காவது எனக்காவது இப்பூமியில் மற்றொருவருக்காவது தெரியாது. ஆனால் உம்மாலே ஜயிக்கப்பட்டு உமக்குச் சத்துருவாயிருக்கிற காண்டிக்ய ஜனகருக்குத்தான் தெரியும்" என்று சொல்லியதைக் கேட்டுக் கேசித்துவசர் அவரை நோக்கி "ஓ முனிவரே! நல்லது இதைத் தெளியும் பொருட்டு என் சத்துருவினிடத்துக்கே போகிறேன். அவர் என்னைக் கொல்வராயின் யாகபலன் எனக்குச் சித்திக்கிறது. இல்லையென்று நான் கேட்கும் பிராயச் சித்தத்தைச் சொல்வராயின் யாகம் குறைவில்லாமல் நிறைவேறிப் போகின்றது" என்று சொல்லிக் கிருஷ்ணாஜினந் தரித்தபடியே இரதத்தின்மே லேறிக்கொண்டு, அந்தப் பூபதி மகாபுத்திமானான காண்டிக்யரிருக்கு மிடத்திற்குச்சென்றார்.

காண்டிக்யர் தன் சத்துரு வருவதைக்கண்டு கோபத்தாற் கண்சிவந்து வில்லை நாணேறிட்டுக் கொண்டு

கேசித்துவசரை நோக்கி "அடா! நீ கிருஷ்ணாஜின கவசம் போட்டுக் கொண்டு யோக்கியன்போலே இங்கு வந்து என்னைக் கொல்லப் பார்க்கிறாய். நீ மேலும் நாம் கிருஷ்ணாஜினந் தரிப்பதனால் நம்மை அவன் அடிக்கமாட்டானென்று எண்ணுகிறாய். ஓ மூடா! மான்களின் முதுகில் இந்தத் தோலில்லையோ? அப்படிப்பட்ட மான்களின்மேல் நீயும் நானும் எத்தனை அம்புகளைவிடுத்திருக்கிறோம்? ஆதலால் உன்னைப் போன்ற அயோக்கியனை அடிப்பதற்கு இந்தக் கிருஷ்ணாஜினம் தடையன்று. ஓ துர்ப்புத்தியானவனே! நீ என் இராச்சியத்தைப் பிடுங்கிக்கொண்ட சத்துருவாகையால் ஆததாயியா யிருக்கிறாய். ஆதலால் யாகத்தி லிருந்தாலும் உன்னை நான் கொல்வேன். நீ என்னிடத்தினின்றும் உயிரோடு போகமாட்டாய்" என்று சொல்லக் கேசித்துவசர் சொல்லுகிறார்.

"ஓ காண்டிக்கியே! இப்போது நான் உம்மிடத்திற்கு ஒரு தரும சந்தேகங் கேட்க வந்தேனே யல்லது கொல்வதற்கு வரவில்லை. இதை நீர் ஆராய்ந்து கோபத்தையாகிலும் விடும். அல்லது என்மீது பாணத்தையாகிலும் விடும்" என்று கேசித்துவசர் சொல்லக் கேட்டுக் காண்டிக்கியர் புரோகிதர் மந்திரிகள் முதலானோரோடு ஏகாந்தத்தில் ஆலோசிக்கையில், அவர்கள் "சத்துரு கைவசத்தில் வந்தபோது அவனை அவசியம் கொல்லவேண்டும். அந்தப் பகையாளி மடிந்தால் இப்பூமி முழுதும் நம்முடைய கையில் வரும்" என்று சொல்லக்கேட்டு, அவர் மந்திரி முதலானவர்களை நோக்கி "நீங்கள் சொன்னது சரிதான். எதிரியைக் கொன்றால் பூமி நமக்குச் சுவாதீனமாகும், எதிரிக்கோ மேலுலகஞ் சுவாதீனமாகும். அவரைக் கொல்லாவிட்டால் நமக்கு மேலுலகஞ்சுவாதீனப்படும். அவருக்கோ பூமி கைவசத்திலிருக்கும். இவ்வுலக ஜயத்திலும் மேலுலக ஜயமே விசேஷமென்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் இவ்வுலக வாழ்க்கை சிறிதுநாளுள்ளது. மேலுலக வாழ்க்கையோ நீடித்திருப்பது. ஆதலால் என் பகைவனை நான் கொல்லாமல் அவன் கேட்குங் கேள்விக்கு விடை கொடுப்பேன்" என்று சொல்

லிக் கேசித்துவசரை எதிர்கொண்டுவந்து "அப்படியானல் வினவவேண்டுவதை வினவும். தெரிந்தவரையிற் சொல்லுகிறேன்" என்ருர். அதுகேட்டுக் கேசித்துவசர் யாகத்திற்கு உபயோகமான பசு இறந்த சங்கதியைச் சொல்லிப் பிராயச்சித்தமென்ன? என்று கேட்க, அவரும் அதற்குச் சாஸ்திரத்தில் விதிப்படி பிராயச்சித்தத்தைச் சொன்னுர். பின்பு கேசித்துவசர் சந்தேகந் தீர்ந்து அவரிடத்தில் விடைபெற்று யாகபூமிக்குவந்து விதிப்படிச் சகல கிரியைகளையும் நிறைவேற்றி அவபிரதஸ்நானஞ்செய்து செய்யவேண்டுவதை யெல்லாஞ் செய்தவராயிருந்தும் பின்வருமாறு சிந்திக்கலாயினுர்.

"நாம் யாகசாலையில் வந்த பிராமணரையெல்லாம் பூசித்தோம். இருத்துவிக்குகளையுஞ் சம்மானித்தோம். மற்றுமுள்ள யாசகர்களுக்கும் வேண்டுமானவற்றைக் கொடுத்தோம். இப்படி உலகத்துக்கு ஒப்புரவான காரியத்தைத் தகுந்தபடி நாம் செய்திருக்க நம்முடைய மனம் ஏன் செய்யவேண்டியதைச் செய்யாததுபோலே குறைகொண்டிருக்கிறது?" என்று சிந்தித்து, "ஓகோ நாம் எல்லாஞ் செய்தாலும் நமக்குப் பிராயச்சித்தத்தை யுபதேசித்த காண்டிக்கியருக்குக் குருதக்ஷிணை கொடாமற் போனேமன்ருே" என நினைத்துக்கொண்டு கேசித்துவசர் தேரின்மேலேறி மறுபடியும் காண்டிக்கியர் வாசஞ் செய்திருந்த துர்க்கமான வனத்திற்குச் சென்ருர். காண்டிக்கியரும் சத்துரு மறுபடியும் ரதத்தின்மேல் வருவதைக் கண்டு ஆயுதத்தைக் கையிலேந்தி நின்ருர். அதுகண்டு கேசித்துவசர் அவரைநோக்கி "ஓ மகானுபாவரே! நான் உமக்குத் தீங்குசெய்ய வரவில்லை. கோபியாதேயும்; உமக்குக் குருதக்ஷிணை கொடுக்க வந்தேனென்று நினையும்" என்று சொன்னதைக்கேட்டு காண்டிக்கிய ஜனகர் மறுபடியுந் தம் மந்திரிமாரோடு, 'எதைக் கேட்கலாம்' என்று ஆலோசிக்க, அவர்கள் "இராச்சிய முழுவதையுங் கொடுத்துவிடும்படிக் கேளும். புத்திசாலிகள் தருணம் வாய்த்தபோது தம்முடைய சேனைகளுக்கு வருத்தமில்லாமல் இராச்சியத்தைச் சம்பாதிப்பார்கள்" என்று சொன்னுர்கள். அதுகேட்டு மகிபதி நகைத்து, "மந்திரிமாரே! சிறிது பொழுது

நிற்கத்தக்க இராச்சியத்தையா எம்போலியோர் வேண்டு வார்கள்? நீங்களெல்லாம் பொருளைச் சாதிக்கின்ற மந்திரிகளல்லவா? இந்தச் சமுசாரத்திலே பரமார்த்த மெது? அஃதெப்படி கிடைக்கும்? என்கிற விஷயத்தில் நீங்கள் ... மறியாதவர்கள். ஆனதால் நீங்கள் சொன்னது சரிதான்" என்று சொல்லிக் கேசித்துவச ரிடத்துக்கு வந்து அந்தக் காண்டிக்கியர் "ஐயா நீர் அவசியம் குருதக்ஷிணை கொடுக்க நினைக்கிறீரோ? என்ன, அவரும் "ஆம்" என்றவுடனே, அவரை நோக்கி "அப்படியானால் நீர் ஆத்துமஞானவித்தையில் தேறினவராதலால், எனக்கு நீர் குரு தக்ஷிணையாகச் சம்சார கிலேசம் போக்கத்தக்க அந்த ஞானத்தைச் சொல்லவேண்டும்" என்றார்.

ஆரும் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஏழாம் அத்தியாயம்

# யோகமார்க்க வுபதேசம்

கேசித்துவசர் காண்டியக்கியரை நோக்கி "ஓ காண்டிக்கியரே! நீரேன் பகைப்பூண் டற்றதான இராச்சியத்தை வேண்டவில்லை? க்ஷத்திரியர்களுக்கு இராச்சியம் பெறுவதைக்காட்டிலும் பிரியமானது மற்றொன்று மில்லையே" என்று சொல்லக் காண்டிக்கியர், "ஓ கேசித்துவசரே! உம்முடைய முழுராச்சியத்தையும் நானேன் பிரார்த்திக்கவில்லையோ அதன் காரணத்தைச் சொல்லுகிறேன் கேளும்: இவ்விராச்சிய விஷயத்தில் தெரியாதவர் ஆசைப்படுகிறார்கள்; நீர் சொன்னபடியே பிரஜைகளைப் பாலிப்பதும், அதற்கு விரோதிகளா யிருப்பவர்களைத் தருமயுத்தஞ் செய்து வசிப்பதும் க்ஷத்திரியருக்குத் தருமந்தான்; ஆனாலும் இராச்சியத்தைக் காப்பதில் வல்லமையில்லாதவனையும் ஆசையற்றவனையு மிருக்கிற எனக்கு நீர் அபகரித்துக்கொண்ட இராச்சியத்தை விரும்பாமை குற்றமன்று. இக்கருமத்தை நடத்த சக்தியிருந்

தும் நடத்தாமல் விடுவதே குற்றமாம். இவ்விராச்சியத்தில் எனக்கு ஜன்மாந்தர கருமத்தின்பலனை போகங்களை அனுபவித்துக் கழிப்பதற்காகவே ஆசையாயிருந்தது. மற்றவர்களுக்கோ அது போகத்திலாசையினாலேயே யிருக்கும். ஏனென்றால் இவ்வாசைப் பொருளை யனுசரித்திருக்கிறதேயன்றித் தருமத்தை யனுசரித்திருக்கவில்லை. மேலும் க்ஷத்திரியர் யாசிப்பது தருமமென்று பெரியோர்கள் அங்கீகரிக்கமாட்டார்கள். இக்காரணங்களைப்பற்றிக் கருமங்களிற் சேர்ந்த இவ்விராச்சியத்தை நான் யாசித்திலேன். ராச்சியத்தை வஸ்துக்களின் உண்மை யறியாதவராய், எனது என்கிற வீணபிமானத்தினாலே மன மிழுக்கப்பட்டவர்களாய், நானென்கிற அகங்காரமாகிய கொடிய கள்ளையுண்டு மயங்கியிருப்பவர்களே யல்லாமல் என்போலியோர் விரும்புவதில்லை" என்று சொன்ன காண்டிக்கிய ஜனகரைப் பார்த்துக் கேசித்துவசர் "நன்று நன்று" என்று சந்தோஷித்து அன்போடு சொல்லலானார்.

"கேளும் காண்டிக்கியரே! நீர் சொன்னது எனக்கும் சரிதான். ஆனால் கருமத்தினாலே யோகவிரோதிகளான காமக்குரோதாதிகளைப் போக்கும்பொருட்டு ராச்சியத்தையும் நானாவிதயாகங்களையுஞ் செய்துவருகிறேன். அன்றியும் போகங்களினாலே புண்ணியக்ஷயமுஞ்செய்து வருகிறேன். நமது குலத்துக்கு ஆனந்தமானவரே! உமக்கு அதிருஷ்டவசத்தினால் மனமானது விவேகமாகிய ஐசுவரியத்தைப் பொருந்தி யிருக்கின்றது. ஆதலால் அவ்வித்தையின் சுவரூபஞ் சொல்லுகிறேன் கேளும்."

"ஆத்துமாவல்லாத தேகாதிகளிலே ஆத்துமாவென்கிற நினைப்பும், தனதல்லாத அந்தந்தப் பொருளிலே தனதென்கிற நினைப்பும், இவ்விரண்டும் சம்சார விருக்ஷத்திற்கு விதையா யிருக்கின்றன. எப்படியென்றால், தேகியானவன் அஞ்ஞான விருளாலே மூடப்பட்டவனாய் பஞ்சபூதமயமான தேகத்திலே நானென்றும் எனதென்றும் புத்தியைப் பண்ணுகிறான். ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பிருதிவி யென்பவைகளுக்கு வேறாய் ஆத்துமா இருக்க, தேகத்தை ஆத்துமா

வென்று எவன் நினைக்கக்கூடும்? மேலும் இந்தக் காரியத்தினு லனுபவிப்பதற் குரியவைகளான வீடு நில முதலியவைகளை அறிவுள்ள எவன் என்னுடையவை என்று நினைப்பான் இப்படி யிருக்க அந்தக் காரியத்தினுற் பிறந்த புத்திர பௌத்திராதிகளையும் என்னுடையவர்கள் என்று நினைக்கத்தகுமோ? உடம்பே ஆத்துமா வல்லாதிருக்க மற்றவற்றை யெல்லாம் சுவதம் என நினைப்பது அஞ்ஞான வாசனையே யல்லது வேறன்று. இவ்வாருன அஞ்ஞானத்தினுலேதான் இவ்வுடலின் போகத்துக்குரிய காரியங்களையே மனிதர் செய்கிருர்க ளல்லது ஆத்தும போகத்திற்காக ஒன்றுஞ் செய்கிற தில்லை. ஆத்துமாவுக்குத் தேகம் வேருனதினுலே இப்படிச்செய்வதெல்லாம் பந்தத்திற்கே காரணமாகின்றன. மண் வடிவமான மாளிகை மண்ணினுலும் நீரினுலும் பூசப்படுவதுபோலப் பிருதிவிமயமான இவ்வுடம்பும் அன்னபானங்களாகிய மண்ணீர்களினுலே பூசப்படு கின்றது. பஞ்சபூத ரூபங்களான போகவஸ்துக்களினுலே பஞ்சபூத ரூபமான தேகம் திருப்தி பண்ணப்படுமாணுல் தேகத்தின் வேருன ஆத்துமாவுக்கு அப்போகங்களினுலே போகமெப்படி யுண்டாகின்றது? இப்படியிருக்க, இவ்வாத்துமா அனேகவாயிரஞ் சனனங்களில் சம்சார மென்கிற வழியில் நடந்து வாசனை யென்கிற புழுதி படிந்தவனுய் மயக்கமாகிய சிரமத்தை யடைந்திருக்கிருன். இப்படி வருந்திய ஆத்துமாவுக்கு எப்போது ஞானமென்னும் வெந்நீரினுலே அப்புழுதி கழுவப்படுமோ அப்போது மயக்கவருத்தந் தீர்ந்துபோம். அது தீர்ந்தால் புருஷன் மனம் சொஸ்தப்பட்டு வேறதிசயமில்லாததுந் துக்கமில்லாததுமான மோக்ஷத்தை யடைவான். மோக்ஷபலன் கருமபலன்போலே வேருய் வரவேண்டுவதோ அன்று. இவ்வாத்துமா நிருமல ஞானரூபியாதலால் சுபாவத்தில் மோக்ஷ சுகரூபமாயே யிருக்கிறது. துக்கமான அஞ்ஞான மயங்களான இராகாதிகள் பிரகிருதியின் தன்மைகளேயன்றி ஆத்தும தருமங்களல்ல. எப்படி யெனில், தண்ணீர்க்கு இயற்கையாய் வெப்பமில்லாதிருக்க அக்கினியோடு சேர்ந்த பாத்திர சம்பத்தத்தி

ஞலே தண்ணீர் வெப்பமுள்ளதாகித் தொனி எழுச்சி முதலியவைகளைச் செய்கின்றதோ அதுபோலத் தாபத்திரயத்தோடு கூடின பிரகிருதியின் சம்பந்தத்தினுலே தோஷமுள்ளவனுகி அந்தப் பிரகிருதியின் தருமங்களான பசிதாக முதலியவைகளை அடைகிறுன். இவ்வாத்துமாவோ அந்தப் பிராகிருதங்களுக்கு வேருய் விகாரமில்லாதிருப்பவன். இப்படியாக அவித்தையின் காரணத்தை உமக்குச் சொன்னேன். இதனுல் வருங் கிலேசங்களை அழிக்கத்தக்கது யோகமேயல்லது வேறில்லை" என்ருர்.

அதுகேட்டு காண்டிக்கியர் "ஓ மகானுபாவரே! யோகமறிந்தவர்களுக்குட் சிறந்தவரே! அந்த மகா யோகத்தை எனக்குச் சொல்லவேண்டும். இந்த நிமி சந்ததியிலே யோகசாஸ்திரார்த்த மறிந்தவராயிருக்கிறீர்" என்று கேட்க, கேசித்துவசர் சொல்லத் தொடங்கினுர். "ஓ காண்டிக்கியரே! யோகஸ்வருபஞ் சொல்லுகிறேன் கேளும். அந்த யோகத்திலிறங்கினவன் பிரமத்தில் லயத்தை யடைந்து மறுபடியுந் திரும்பமாட்டான். மனிதர்களுக்கு மனம் விடயங்களைப்பற்றி நின்ருல் பந்தத்துக்குக் காரணமாகும். அவற்றைப் பற்ருனின்ருல் மோக்ஷத்துக்குக் காரணமாகும். ஆதலால் பந்தத்திற்கும் மோக்ஷத்திற்குங் காரணம் மனமே யாகின்றது. ஆகையால் பிரகிருதி புருஷேசுவர ஞானமுள்ள முனியானவன் அம்மனதை விஷயங்களினின்றுந் திருப்பி, அதைக்கொண்டு பரப்பிரமமான சர்வேசுவரனை மோக்ஷத்திற்காகத் தியானிக்கவேண்டும். இப்படியானுல் தியானிக்கப்பட்ட அந்தப் பிரமம் * மாற்றும்படியான யோகியை, அயக்காந்தமானது தன் சக்தியினுலே இரும்பைத் தன்னிலேக்குக் கொண்டு வருவதுபோலவும், அக்கினியானது அழுக்குள்ள பொன்னைத் தன் சக்தியாற் சுத்தப்படுத்தித் தன்னைப்போல் விளங்கும்படிச் செய்

* மாற்றுதலாவது, அனுதியான அவித்தை கருமம் வாசனை தேகம் என்கிற பாரம்பரையினுலே வந்திருக்கிற பந்தருபமான அவஸ்தையைப் பகவத் ஞானத்தினுலே போக்குதலும், ஆத்தியந்திகலயமென்று சொல்லப்படுகிற சகல பாவநாசமுமேயாம்.

வது போலவும், தனக்குரிய தன்மையை யடைவிக்கும். தன் முயற்சியை வேண்டினதாய் இடைவிடாது நிற்றலையுடையதான யாதொரு மனோகதியுண்டோ அதனைப் பிரமத்திற் கூட்டுவதே யோகமாகும். இந்தப் பிரகாரமாய் மிகுந்த குணங்களோடு கூடின யோக முடையவனான முமூக்ஷு யோகியென்று சொல்லப் படுவான். இப்படிப்பட்ட யோகி முதலில் யோகத்தி லிறங்கும்போது யுஞ்சானன் அல்லது யோகயுக் என்று சொல்லப்படுவான். பின்பு பரப்பிரம சாக்ஷாத்காரம் பெற்றபோது யுக்தன் அல்லது விநிஷ்பந்நஸமாதி என்று சொல்லப்படுவான். இப்படி யோகிக்கு இரண்டு அவஸ்தையுண்டு. அப்பியாச தசையிலிருக்கிற முந் தினவனுக்கு அந்தராயங்களென்கிற இடையூறுகளி னாலே மனங் கெடுக்கப்படுமாயின் பின்னுண்டாகும் பல ஜனனங்களில் யோகந் தலைக்கெட்டினபோது முத்தி யுண்டாகும். சமாதி கைகூடிய இரண்டாவமனுக்கோ யோகாக்கினியாலே கருமங்களெல்லா மெரிந்துபோம் ஆகையால் அந்தச் சனனத்திலேயே முத்தியுண்டாகும். யோகியொருவன் மற்றொன்றையும் விரும்பாதவனாகித் தன் மனதிற்கு யோக்கியதை வரும்பொருட்டுப் பிரம சரியம் அஹிம்சை சத்தியம் திருடாமை ஏற்காமை வேதாத்தியயனம் சுசியாயிருத்தல் சந்தோஷம் தவம் இவற்றைச் செய்துகொண்டு, பரப்பிரமத்தினிடத்திலே மனதைப் பற்றச்செய்ய வேண்டும். இயம நியமங்க ளாகிய இவை யாதேனுமொரு பயனைக் கருதினவர் களுக்கு அப்பயனைத் தரும். ஒன்றுங் கருதாதார்க்கு மோக்ஷ ஏதுக்களாம். இந்த இயமநியமாதி குணங்க ளோடு கூடி யோகியானவன் பத்திராசன முதலான ஆசனங்களில் ஏதேனு மோராசனத்தை கைக்கொண்டு அப்பியாசஞ் செய்யவேண்டும். பிராணனென்கிற காற் றை அப்பியாசத்தினாலே வசப்படுத்துவதே பிராணா யாமமென்னப்படும். அது சபீசமென்றும் நிர்ப்பீச மென்றும் இருவகையாம். மூர்த்தித் தியான மந்திர ஜபங்களோடு கூடியது சபீசம். அஃதில்லாதது நிர்ப் பீசம். மேலும் பிராணாயாமம் பிராணத்தினால் அபா னத்தைத்தடுத்தலும், அபானத்தினாற் பிராணத்தைத்

தடுத்தலும், இரண்டையு மொருங்கே தடுத்தலுமாகிய பேதங்களினாலே ரேசகம் பூரகம் கும்பகமென மூவகைப் படும். அப்பியாசியான யோகி செய்கிற சபீஜம் அல்லது சாலம்பனமென்கிற பிராணாயாமத்துக்கு ஆலம்பனம் ஸ்ரீ அனந்தனுடைய ஸ்தூலரூபமென்றறியும். சப்தாதி விஷயங்களிற்பற்றி நிற்கிற இந்திரியங்களைத் தடுத்துச் சித்தத்திற்கு இசையச்செய்வது பிரத்தியாகாரமாம். இதனாலே மிகவுஞ் சஞ்சலங்களான இந்திரியங்கள் நன்றாய் வசப்படுகின்றன. அவை வசப்படாத போது யோகியானவன் யோகத்தைச் சாதிக்க மாட்டான். இப்படியாகப் பிராணாயாமத்தினாற் காற்றும், பிரத்தியாகாரத்தினால் இந்திரியங்களும் வசப்பட்டபின், சுபமான ஆசிரயத்திலே மனதை நிறுத்தவேண்டும்" என்று சொல்லிக் கொண்டுவந்த கேசித்துவசரைக் காண்டிக்கியர் வினவுகிறார்.

"ஓ மகானுபாவரே! மனதுக்கு எது சுபாசிரயமோ அதைச் சொல்லவேண்டும். எந்தச் சுபாசிரயத்தைப் பற்றின மனமானது இராகாதிதோஷங்களாலுண்டாகுங் குற்றங்களையெல்லாம் போக்குமோ அப்படிப்பட்டதை அறிய விரும்புகிறேன்" என்று வினவின காண்டிக்கியருக்குக் கேசித்துவசர் சொல்லுகிறார்.

"மனதிற்கு ஆசிரயம் பிரமம்; அது மூர்த்தம் அமூர்த்தமென்று சுபாவத்தில் இருவகைப்படும். மூர்த்தமாவது சரீரத்தோடு கூடியது. அது ஹிரணிய கருப்பன் முதலான பக்தஸ்வரூபம். அம்மூர்த்தாவது சரீரமில்லாதது. அது முகுத்தஸ்வரூபம். இந்த ஸ்வரூபம் பரமென்று சொல்லப்படும். முந்தினதோ அபரமென்று சொல்லப்படும். இப்படி மூர்த்தாமூர்த்தமயமான பிரபஞ்சமெல்லாம் பிரமபாவனை கருமபாவனை உபயபாவனை என மூன்றுவகைப்பட்ட பாவனையாயிருக்கின்றன. பாவனையாவது பொருள்களை இடைவிடாது நினைத்தல். பிரமபாவனையாவது பிரமத்தைப் பாவித்தல். கருமபாவனை கருமத்தைப் பாவித்தல். உபயபாவனையாவது இரண்டையும் பாவித்தல். சனந்தனாதி யோகிகள் பிரமபாவனையோடு கூடியவர்கள்.

தேவர்களாதியாய்த் தாவரமந்தமாக நின்றவரெல்லாம் கருமபாவனையோடு கூடியவர்கள். இரணியகருப்பன் முதலானவர்கள் போதமும் அதிகாரமு முடையவர்களாகையால் உபயபாவனையோடு கூடினவர்கள். விசேஷமான ஞானகருமங்கள் யாவும் க்ஷயிக்காம லிருக்குமளவில் முன் சொல்லப்பட்ட விசுவரூபமான பிரமம் இருக்கின்றது. தேவ மனுஷ்யாதி பேதஞானத்தினாலே ஞானம் வேறுபட்டிருக்கிற முன் சொல்லப்பட்ட சீவர்களைக்காட்டிலும் பரம் என்று சொல்லப்பட்ட ரூபம் வேறாயிருக்கின்றது. அது ஜாதிமுதலான சகல பேதங்களு மில்லாததாய் வாக்குக்கு எட்டாததாய் குறைவு முதலான விகாரங்களின்றி என்று மொருபடிப்பட்டதாய்ச் சுயம்பிரகாசமாயுள்ள ஞானஸ்வரூபமானவஸ்து. அது பிரமமென்கிற பேருள்ளது. அதுதான் பரமாத்துமாவான ஸ்ரீ விஷ்ணுவினுடைய அமூர்த்தமான ஸ்வரூபம். முன் சொல்லப்பட்ட விசுவரூபத்தைக் காட்டிலும் விலக்ஷணமாய்ச் சர்வோத்தமமா யிருப்பது. ஓ இராஜாவே! அது யுஞ்சானனாலே சிந்திக்கக்கூடாதது. ஆதலால் ஹரியினுடைய ஸ்தூலமான விசுவரூபத்தையே சிந்திக்கவேண்டும். ஸ்ரீ வாசுதேவாம்சமாய்ப் பிரஜாபதியா யிருக்கிற இரணியகருப்பனும், மருத்துக்களும், வசுக்களும், உருத்திரரும், சூரியரும், நக்ஷத்திரங்களும், கிரகங்களும், கந்தருவரும், யக்ஷரும், தைத்தியர் முதலானவர்களும், சகலமான தேவயோனி விசேஷங்களும், மனுஷ்யரும், பசுக்களும், பருவதங்களும், சமுத்திரங்களும், நதிகளும், விருக்ஷங்களும், மற்றுமுள்ள சகல பூதங்களும், பூதங்களின் காரணங்களும், இப்படிப் பிரதானமுதலாக விசேஷமீறாக நிற்பதும், சேதநாசேதந ஸ்வரூபமாய் ஏகபாதமுள்ளதும் இரண்டுபாதமுள்ளதும் அனேகபாதமுள்ளதும் பாதமில்லாததுமான யாவும் ஸ்ரீ ஹரிபகவானுடைய மூர்த்தஸ்வரூபம். இது சிந்திக்கக் கூடியதானாலும் மூன்று பாவனைகளுள்ளதாகையால் சுத்தமன்று. இப்படிப்பட்ட உலகமெல்லாம் பரப்பிரமசொரூபியான ஸ்ரீ விஷ்ணுவின் * சக்தியினாலே

* சக்தியாவது அம்சம், அல்லது சங்கற்பம்.

வியாபிக்கப்பட்டிருக்கின்றது. முன்பு சுத்தஞான பிரமஸ்வரூபமென்று சொல்லப்பட்டது. பரமான விஷ்ணு சக்தி. இரணியகருப்பன் முதலாகச் சொல்லப்பட்டது. க்ஷேத்திரஞ்ஞன் என்னும் பெயருள்ள அபரமான சத்தி. இவ்விரண்டுமல்லாமல் அவித்தையென்றும் கருமமென்றுஞ் சொல்லப்பட்ட மூன்றுஞ் சத்தியு முண்டு இதனாலே சூழப்பட்டுத்தான் க்ஷேத்திரஞ்ஞ னென்னுஞ் சத்தி பரவிநிற்கிற சகல சம்சாரதாபங்களையும் பெறுகின்றது. மேலும் இதனாலே மறைக்கப்பட்டுத்தான் தாரதம்மிய முள்ளதாய்க் காணப்படுகின்றது. எப்படியெனில், அசேதனங்களிலே அந்தச்சத்தி மிகவு மற்பமாயிருக்கிறது; தாவரங்களிலே அதற்குங் கொஞ்சமதிகமாயும் ஊருஞ் சந்துக்களில் அதற்கு மேற்பட்டதாயும், இவ்வாறே பட்சிகள் மிருகங்கள் பசுக்கள் மனிதர் நாக கந்தருவ யக்ஷாதிகள் தேவதைகள் ஆகிய இவர்களிலே மேன்மேலே அந்தச்சத்தி அதிகமாயிருக்கின்றது. தேவதைகளி லிருப்பதைக் காட்டிலும் தேவேந்திரனிடத்தில் அதிகம்; பிரசாபதியினிடத்திலோ அதிலுமதிகம்; இரணியகர்ப்பனிடத்தில் அதிலு மேற்பட்டிருக்கின்றது."

"ஓ அரசனே! இந்தச் சகல ரூபங்களும் அந்த எம்பெருமானுடைய சரீரங்கள். அவையெல்லாம் ஆகாசத்தினாலே முழுதும் வியாபிக்கப்பட்டதுபோல எம்பெருமானுடைய சத்தி சங்கற்பத்தினாலே வியாபிக்கப்பட்டிருக்கின்றன. யோகிகளாலே தியானிக்கத்தக்க பிரமமான ஸ்ரீ விஷ்ணுவினுடைய ரூபமாவது வித்துவான்களாலே சத்தென்று சொல்லப்பட்ட அமூர்த்த ரூபமேயாம். இந்தச் சகல சத்திகளும் நிலைபெற்றிருக்கப்பெற்றதாயும் விசுவரூப விலக்ஷணமாயும் குணாதிகளினாலே பெருமை யுள்ளதுமான ஸ்ரீ ஹரியினுடைய வேறுரூப மொன்றுண்டு. சகல சத்தியுள்ள அந்த ஸ்வரூபந்தான் லீலாவிசேஷத்தாலே தேவதைகள் திரியக்குகள் மனிதர் முதலானருடைய செய்கைகளுள்ள அவதார விசேஷங்களைச் செய்கின்றது. அப்பிரமேயனான எம்பெருமானாலே அவதாரரூப வியாபாரமானது

லோகோபகாரத்துக்காகத் திருவுள்ளம் பற்றப்பட்டதே யல்லது மற்றவர்களுக்குப் போலே கர்மத்தைப்பற்றி யடையப் பட்டதன்று. ஆதலாலே அது சகல ஜாதிகளி லும் வியாபித்ததாயும் எவராலும் வெல்லப்படாததாயு மிருக்கின்றது. விசுவரூபனுன அவனுடைய இந்த ரூப மானது சகல பாதகங்களையும் போக்கும்படியானதனுலே, ஆத்மாவுக்குச் சுத்தியுண்டாகும் பொருட்டு யோகாப்பி யாசஞ் செய்யப் புகுந்தவன் இந்த ஸ்வரூபத்தையே தியானிக்கவேண்டும். எப்படி அக்கினியானது காற் றுடன் கூடி மஹாச் சுவாலைகள் வளரப்பெற்று ஒரு புத ரைக் கொளுத்தி நாசஞ்செய்யுமோ அப்படியே யோகிக ளுடைய இருதயத்திலே இருந்து ஸ்ரீ மகாவிஷ்ணு சமஸ்த பாபங்களையுந் தகித்தருளுவர். ஆதலால் சமஸ்த சத்திகளுக்கும் ஆதாரமான அந்தத் திவ்விய ஸ்வரூபத்திலே மனதை நிறுத்தவேண்டும். அதுதான் சுத்தமான தாரணையென்று நினைக்கப்படும். ஓ அரசனே! எங்குந் திரிந்து அலைந்தபிறகு அந்த விஷயத்திற்பற்றி அசையாமலிருக்கும் மனதுக்கு மூவகைப்பட்ட பாவ பாவனைகளையுங் கடந்த அந்த ஸ்வரூபந்தான் யோகி களுக்கு மோக்ஷ ஹேதுவான சுபாசிரயமென்றறியும். ஓ புருஷசிரேஷ்டரே! மற்றும் இருதயத்துக்கு ஆசிரய மான தேவாதி ஸ்வரூபமெல்லாம் கருமவசப்பட்ட வைக ளாகையாலே அசுத்தங்களேயாம். ஆகை யால் இப்படிப்பட்ட அசுத்தமான ஆசிரயங்களையெல் லாம் விரும்பாமல் எம்பெருமானுடைய சுத்தமான மூர்த்த ரூபத்தைத் தியானிப்பதே சித்தந் தரிக்கப்படுத லாலே தாரணையென்று சொல்லப்படுகின்றது. ஓ இரா ஜாவே! ஆதாரமின்றித் தாரணை கூடாது. ஆகையால் ஸ்ரீ ஹரியினுடைய எப்படிப்பட்ட எந்த ரூபம் சிந்திக் கப்படவேண்டுமோ அந்தப் பகவத் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன். கேளும் பிரசன்னமான திருமுகமண் டலமும், அழகான தாமரை யிதழ்போன்ற திருக்கண் களும், அழகான கபோலங்களும், விசாலமான பலகை போன்ற திருநெற்றியும், சமமான திருச்செவிகளிலே தரித்த அழகிய குண்டலங்களும்,வலம்புரிபோன்ற கண்ட மும், பரந்ததும் ஸ்ரீயும் ஸ்ரீவச்சமென்கிற திருமறுவும்

பொருந்தியதுமான திருமார்பும், மடிப்புகளாலே மூன்று பிரிவுள்ளதும் ஆழ்ந்த கொப்பூழுள்ளதுமான திருவுதரமும், நீண்ட எண்புயங்களும் அல்லது நாற் புயங்களும், சமமாயிருக்கும்படியான திருத்தொடை களும், கணுக்கால்களும், தாமரை மலரையொத்த திருவடிகளும், நிர்மலமான பீதாம்பரமும், கிரீட ஹார கேயூர கடகாதி திவ்யாபரணங்களும் விளங்காநின்ற ஸ்ரீ விட்டுணுவாகிய பரப்பிரமத்தைத் தியானிக்கவேண் டும். மேலும் சார்ங்கம் சங்கம் கதை கட்கம் சக்கரம் அக்ஷமாலை ஆகிய இவைகளை ஆறு திருக்கைகளினுலே தாங்கி, மற்ற விரண்டில் ஒன்று வரதஹஸ்தமும் மற் றொன்று அபய ஹஸ்தமுமாய் விளங்கும்படித் தியா னிக்கவேண்டும். நான்குதோள்களின் அருகில் சங்க சக் கர கதைகளும் தாமரைமலரு மேந்தியதாய்த் தியானிக்க வேண்டும். இத்திருக்கைகளெல்லாம் திவ்விய மோதி ரங்கள் பிரகாசிக்கப் பெற்றவைகளாகத் தியானிக்க வேண்டும். இப்படிப்பட்ட இத்திவ்விய ஸ்வரூபத்தை நிலைநின்ற மனதினுல் தாரணை உறுதிப்படுமளவும் தியானிக்கவேண்டும். தாரணை உறுதிப்படுதலாவது நடந்துகொண் டிருக்கையிலும் உட்கார்ந்திருக்கையி லும் * இன்னும் வேறெந்தச் செய்கை செய்கையிலும் அந்த ஸ்வரூபம் மறையாமல் தோன்றிக்கொண்டிருப் பது. அப்படியானுற்ருன் தாரணை சித்தியானதென் றறியலாம். இப்படித் தியானம் உறுதியான பின்பு சங்க சக்கராதி ஆயுதங்க ளில்லாமல் அக்ஷமாலை மாத் திரம் உள்ளதாயும் மிகவுஞ் சாந்தமாயும் அந்த ஸ்வ ரூபத்தைச் சிந்திக்கவேண்டும். இந்தத் தாரணையும் முந்திய தாரணைபோலே ஸ்திரப்பட்டபின் கிரீட முத லான திவ்விய பூஷணங்களை யொழித்து அந்த ரூபத்தைத் தியானிக்கவேண்டும். இப்படியாக ஆயு தங்களும் பூஷணங்களும் திருக்கை முதலிய வுறுப்புக் களும் நன்ருய்க் கிரகிக்கப்பட்டபின்பு அந்த வுறுப்புக் களுக்குப் பிரதானமான ஒரு திருமேனியோடு கூடியவ

* இங்கே சொன்ன இந்த ஸ்வரூப உபலக்ஷணம். ஆதலால் எம் பெருமானுடைய விபவாவதார ரூபங்களும் சுபாசிரயமென்று கொள்ளவேண் டும். அர்ச்சாவதாரங்களு மப்படியே.

ளுக எம்பெருமானைச் சிந்திக்கவேண்டும். இவ்வண்ணம் தாரணை செய்த பின்பு முன்சொல்லப்பட்ட அவயவங்களையுடைய அவயவியினிடத்திலே மனதைச் செலுத்தவேண்டும். அந்தத் தாரணையினாலே சித்தப்பட்டிருக்கிற சொரூப விஷயமாய் வேறொரு தோற்றத்தைப் பற்றாததாய் நின்ற இடைவிடாத ஞானப் பிரவாகம் யாதுண்டோ அதுதான் தியானமென்று சொல்லப்படும். இது முன்னுரைத்த ஆறு அங்கங்களினாலே ஏற்படுத்தப்படும். அப்படிப்பட்ட சொரூபத்திற்கே நாமரூபாதி கற்பனைகளில்லாத சொரூபத்தைத் தியானங்கொண்ட மனதினாலே கிரகிப்பது சமாதியென்று சொல்லப்படும்.”

☞ நான்குவிதமான தாரணைகள் சொல்லப்பட்டன அவற்றுள் ஆயுதபூஷண பிரதியங்க பிரதாநாங்கமென்கிற நான்கையும் பிரதானமாகக் கொண்டது முதலாவது; ஆயுதமின்றி மற்ற மூன்றையும் பிரதானமாகக்கொண்டது இரண்டாவது; ஆயுதபூஷணங்களை யொழித்து மற்றிரண்டையும் பிரதானமாகக்கொண்டது மூன்றாவது; மற்றெல்லா மொழித்துப் பிரதாநாங்கத்தை மாத்திரம் பிரதானமாகக்கொண்டது நான்காவது; இந்நான்கிலும் அத்து பிரதானமாயிருப்பதல்லது மற்றவை யொழிந்தலவல்ல. இப்படியே பின்பு கூறிய தியானித்தலும் இவை ஒழிந்தனவல்ல. முதலமிசத்தில் இருபத்திரண்டாமத்தியாயத்திற் சொல்லியபடி தத்துவங்களே அஸ்திர பூஷணாதிரூபமா யெம்பெருமானிடத்தி லிருத்தலாலேயும் அந்த விசிஷ்ட விக்கிரகமே சாலம்பன யோகத்துக்கு விஷயமாயிருக்கிறபடியாலு மென்றறியவேண்டும். சமாதியில் திவ்வியாத்தும ஸ்வரூபஞ் சொல்லப்பட்டாலும் அது பிராப்பியமாகாது; ஆகையால் முன்னுரைத்த விசிஷ்ட திவ்விய மங்கள விக்கிரகமே பிராப்பியமாம்.

தத்துவங்கள் அஸ்திரபூஷணாதிரூபமா யிருப்பதைச் சுருக்கமா யறியும்படி இப்பாசுரத்தை அனுசரிக்கவேண்டியது

புருடன்மணி வரமாகப் பொன்று மூலப்
பிரகிருதி மறுவாக மான்றண் டாகத்
தெருள் மருள்வாள் மறைவாக வாங்கா ரங்கள்
சார்ங்கஞ்சங் காகமனந் திகிரி யாக
இருடீங்க பீரைந்துஞ் சரங்க ளாக
விருபூத மாலைவன மாலை யாகக்
கருடனுரு வாமறையின் பொருளாங் கண்ணன்
கரிகிரிமே னின்றனைத்துங் காக்கின் றானே.

"ஓ காண்டிக்கியரே! அடையத்தக்கதான பரப்பிரமத்தை யடைவிப்பது வேதவிஞ்ஞானந்தான். இதைக் கொண்டு அடைவிக்கவேண்டியது மூன்றுவித பாவனைகளையுங் கடந்த ஆத்துமா. மாயையால் மறைக்கப்கப்பட்ட சொரூபமுள்ளவனுயிருந்த ஆத்துமா இந்தச் சாதனமுடையவன். இந்த ஞானமே சாதனம். இந்த ஞானமானது அவனுக்கு மோக்ஷமென்கிற காரியத்தை உண்டாக்கிப் பின்பு திரும்பிவிடும். அதனாலே இவ்வாத்மா பரப்பிரமத்தினுடைய குற்றமில்லாமை முதலிய தன்மைகள் உண்டாகப்பெற்றவனாய் அந்தப் பரமாத்துமாவோடு வாசியறநிற்கும். அவனுக்கு முன்னிருந்த பேதமானது அஞ்ஞானத்தினால் வந்ததாம். ஞானஸ்வரூபமான ஆத்துமாவிலே தேவ மனுஷ்யாதி பேதத்தை யுண்டாக்கும்படியான அஞ்ஞானமானது வேரோடற்றுப்போனவளவில் ஜீவாத்துமாவுக்கும் பரமாத்துமாவுக்கும் இல்லாத வித்தியாசத்தை எவன் கற்பிக்கமாட்டுவான்."

"ஓ காண்டிக்கியரே! நீர் வினவியபடி அஷ்டாங்க யோகத்தைச் சுருக்கியும் பெருக்கியும் உமக்குச் சொன்னேன். இன்னும் உமக்கு நான் செய்யவேண்டுவதெது?" என்று கேசித்துவசர் சொல்லியதைக் கேட்டுக் காண்டிக்கியர் சொல்லுகிறார். ஓ கேசித்துவசரே! தேவரீர் யோகசுவரூபம் அறியும்படிச்செய்த உபதேசத்தினால் சித்தத்தின் மலமுழுவதும் அழிந்துபோனதனாலே யாவும் எனக்குச் செய்யப்பட்டனவேயாயின. இப்போது நானும் 'எனக்கு' என்று சொன்னது சரியானதன்று. ஆனாலும் பரமாத்தும சாக்ஷாத்காரம் பெற்றவர்களுக்கும் நான் எனது என்கிறதைத் தவிர்ந்துபேச வகையில்லையே? நான் எனது என்பது அந்யதாஞானம் என்கிற திரிபுதான். இதனாலேதான் ஆடு மாடு ஆண் பெண் முதலான வழக்கங்களுண்டாகின்றன. பரமார்த்தமான ஆத்துமஸ்வரூபமோ சொல்லுக்கு எட்டாததாகையால் அந்தச் சொற்களாலே சொல்லப்படாது. இனித்தேவரீர் தம்மிடத்துக்கு எழுந்தருளலாம். மோக்ஷகாரணமான யோகத்தை அடியேனுக்கு உபதேசித்ததனாலே அடியேனுடைய சிரேய

ணப்பஞ்செய்த மயித்திரேயரைக் கடாக்ஷித்து மகாரிஷி யருளிச்செய்யலாயினர்.

"ஓ பிராமணோத்தமரே! உமக்குச் சொல்லிவந்த இந்தப் புராணம் வேதத்தோடு சமானமானது. இதைக் கேட்பதனாலே இராகாதி தோஷங்களாலுண்டான பாப ராசிகள் நசித்துப்போம். இப்புராணத்திற் சொன்ன சிருட்டி முதலிய ஐந்தங்கங்களினாலே தேவதைகளும் தைத்தியரும் கந்தருவரும் உரகரும் அரக்கரும் இயக்கரும் வித்தியாதாரும் சித்தரும் அப்சரசுக்களும் பிரமத்தியானிகளாய் மகாதவமுள்ள முனிவரும் சொல்லப் பட்டிருக்கிறார்கள். மேலும் பிராமணாதி வர்ணங்கள் நான்கும், புருஷருடைய சிரேஷ்டமான சரித்திரங் களும், பூமியிலிருக்கின்ற புண்ணியமான பிறதேசங் களும், புண்ணிய நதிகளும், புண்ணிய சமுத்திரங் களும், மகா புண்ணிய பர்வதங்களும், ஞானவான்களுடைய சரித்திரங்களும், வர்ண தரும முதலிய தருமங் களும் வேத சாஸ்திரங்களும், இப்படியாக ஸ்மரணத்தினாலே பாவம் நீங்கத்தக்க பல விஷயங்களுஞ் சொல் லப்பட்டிருக்கின்றன. இவ்வளவேயன்று. சகத்தினுடைய உற்பத்தி ஸ்திதி நாசங்களுக்கு ஏதுவாயும், அவியயனும், சர்வசுவரூபியாயும், எல்லாவற்றுக்கும் ஆத்துமாவாயும் ஐசுவரிய முதலிய ஆறு குணங்களு நிறைந்தவனுமுள்ள ஸ்ரீஹரியும் இப்புராணத்தில் உரைக்கப்பட்டிருக்கிறான். எவனுடைய திருநாமத்தைத் தற்செயலாய் ஒருவ னுச்சரித்தாலும் அவனுடைய சர்வ பாதகங்களும் சிங்கத்தைக்கண்ட அற்ப மிருகங்களைப்போலே விரைந்தோடுமோ, பக்தியுடன் செய்யப்படுகிற எவனுடைய நாம சங்கீர்த்தத்தினாலே சகல பாபங்களும் பெரு நெருப்பில் விழுந்த தாதுக் களைப்போலே லயப்பட்டுப்போமோ, எவனை ஒருதரம் நினைத்த மாத்திரத்திலே அதியுக்கிரமாயும் நரகதுக்கத்தைக் கொடுக்கத்தக்கதாயு மிருக்கின்ற கலிகல்மஷமானது உடனே அழிந்துபோமோ, பிரமா ருத்திரன் இந்திரன் ஆதித்தன் அசுவினிகள் வாயுக்கள் அக்கினிகள் வசுக்கள் சாத்தியர் விசுவதேவர் முதலான தேவயோனிகளோடும் அசுவினி முதலிய நக்ஷத்திரங்க

ளோடும் மற்றுமுள்ள தாரகங்களோடும் சூரியாதி சகல கிருகங்களோடும் சப்தரிஷிகளோடும் மற்றுமுள்ள அந்தந்த லோகங்களோடும் அந்தந்த லோகாதிபதிகளோடும் பிராமணுதி மனுஷியர்களோடும் பசுக்களோடும் சிங்கமுதலிய கொடிய மிருகங்களோடும் பல வகைப்பட்ட பக்ஷிகளோடும் பாம்பு முதலிய ஊர்வன வற்ருேடும் பலாசு முதலான மரங்களோடும் காடுகள் சமுத்திரங்கள் நதிகள் பாதாளங்களோடும் அவற்றிலுள்ள ஜந்துக்களோடும் சப்தாதி விஷயங்களோடும் ஆவரணங்களோடுங்கூடின இந்தப் பிரமாண்டம் மேருவுக்கு ஓரணுப்போலே எவனுக்கு ஏகதேசமா யிருக்கின்றதோ, எல்லாமறிந்தவனுய் எல்லாமுள்ளவனுய் எல்லாச் சொருபமுடையவனுய் யாதொரு சொருபமுமில்லாதவனுய் சகல பாபநாசகனுயுள்ள அந்த ஸ்ரீ விஷ்ணுபகவான் இப்புராணத்தில் முக்கியமாய் துதிக்கப்பட்டிருக்கிருன். இப்படிப்பட்ட இப்புராணத்தைக் கேட்பவன் அசுவமேதயாகத்தின் அவபிரதத்தில் ஸ்நானஞ்செய்த பலனை யடைவான். மேலும் பிரயாகத்திலேயும் புஷ்கரத்திலேயும் குருக்ஷேத்திரத்திலேயும் சேதுபந்தன சமுத்திரத்திலேயும் உபவாசாதி விரதானுஷ்டானஞ் செய்பவன் எந்தப் பலனை யடைவனே அந்தப் பலனை இப்புராணங் கேட்பதனுற் பெறுவான். ஓ மயித்திரேயரே! ஒருவன் ஒருவருஷகாலம் அக்கினியை நன்ருய் ஓமத்தால் ஆராதித்து வந்தால் எந்தப் பலனை யடைவானே அந்த நற்பயனை இதை ஒருகாற் கேட்டுப் பெறுவான். ஒருவன் ஜ்யேஷ்ட மாதத்து சுக்கிலபக்ஷத் துவாதசியில் யமுனுநதியில் ஸ்நானஞ்செய்து ஸ்ரீ மதுராபுரியில் கண்ணனை ஆராதித்தா லுண்டாகும் பயனை ஸ்ரீ கேசவனிடத்திலே மனதை வைத்து இப்புராணத்தில் ஓர் அத்தியாயங் கேட்பதனுற் பெறுவான். ஜ்யேஷ்ட மாதத்துச் சுக்கில பக்ஷத் துவாதசியில் முன்பு உபவாச மிருந்தவனுகி யமுனுதீர்த்தத்தில் நீராடி மதுரையில் ஸ்ரீ மாதவனை யாராதிப்பவனுக்கு எந்தப் பலம் வருமென்ருல் குறைவற்ற அசுவமேதயாகத்தின் பலம் வரும். இப்படிப்பட்ட புண்ணியவான்களான தங்கள் குலத்தாராலே

மேன்மை யடைவிக்கப்பட்ட சிலருடைய செல்வத்தைக் கண்டு பிதுர்க்கள் சொல்லியதாவது "நமது குலத்திற் பிறந்த எவனுகிலும் யமுனுசலத்தில் நீராடி உபவாச மிருந்து ஜ்யேஷ்ட சுக்கில துவாதசியிலே மதுரையில் ஸ்ரீ ஜநார்த்தநனை அர்ச்சிப்பனு? அர்ச்சிப்பானுகில் நாமும் பிறரைப்போலே கரையேறினவர்களாய் மோக்ஷ மென்கிற மேலான செல்வத்தைப் பெறுவோமன்ருே? ஜ்யேஷ்ட சுக்கில துவாதசியில் சுவாமியை யாராதித்துப் பிதுர்க்களுக்கு யமுனையிற் பிண்டத்தை யெவன் போடுவனென்றுல், புண்ணியஞ் செய்தவர்களுடைய குலத்திற் பிறந்தவன் போடுவான்" என்று பிதுர்க்கள் ஆசைப்படுகிருர்கள். இப்படி அந்தப் புண்ணியதினத்திலே யமுனுஸ்நானஞ்செய்து ஸ்ரீ கிருஷ்ணபகவானை யர்ச்சித்துப் பிதுர்க்களுக்கும் பிண்டமிடுவதனு லெந்தப் பயனுண்டோ அந்தப் பயனை இப்புராணத்தின் அத்தியாய சிரவணத்தினுற் பெற்றுத் தன் பிதுர்க்களைக் கடைத்தேற்றுவான். இந்தப் புராணம் சமுசாரத்தை அஞ்சினுர்க்கு இரக்ஷகமாயும், செவியுறத்தக்கவைகளுக்குள்ளே மேம்பட்டதாயும், பரிசுத்தங்களுக்கெல்லாம் பரிசுத்தமாயும், தீயகனவுகளை யழிக்கவல்லதாயும், சகல தோஷங்களையும் போக்கத்தக்கதாயும், மங்களங்களுக்கெல்லா மேலான மங்களமாயும், புத்திர சம்பத்தைத் தரத்தக்கதாயும் விளங்குகின்றது.

ஆதியில் ஸ்ரீமந் நாராயண மகரிஷியினுற் செய்யப்பட்ட இப்புராணத்தைக் கமலோற்பவர் இருபுவென்பவர்க்கு உபதேசித்தார். இருபு பிரியவிரதருக்குச் சொன்னுர். பிரியவிரதர் பாகுரிக்கும், பாகுரி ஸதம்பமித்திருக்கும், ஸதம்பமித்திரர் ததீசருக்கும், அவர் சாரஸ்வதருக்கும், அந்தச் சாரஸ்வதர் பிருதுவுக்கும், புருது புருகுச்சருக்கும், அவர் நருமதைக்கும், அவன் திருதராஷ்டிரன் ஆபூரணன் என்ற நாகர்களுக்கும், அவ்விருவரும் நாகராஜனை வாசுகிக்கும், வாசுகி வச்சருக்கும், அவர் அசுவதராருக்கும், அவர் கம்பளருக்கும், அவர் ஏலாபுத்திருருக்கும் சொன்னுர்கள். இப்படிப் பாதாளலோகத்திலே பரவியிருந்த இப்புராணத்தைப் பாதாளலோகத்திற் சென்

திருந்த வேதசிரசு என்கிற முனிவர் பெற்றுப் பூலோகத்திற் பிரமதி யென்பவருக்குக் கொடுத்தார். பிரமதி ஜாதுகர்ணருக்குத் தந்தார். ஜாதுகர்ணர் மற்றப் புண்ணியவான்களனேகருக்குக் கூறினர். புலஸ்திய மகாமுனிவருடைய வரப்பிரசாதத்தினுலே இப்புராணம் எனக்கும் ஞாபகத்துக்கு வந்தது. நானும் மயித்திரேயரே! உமக்கு உள்ளபடி இப்புராணத்தை யறிவித்தேன். நீரும் இதைக் கலியின் முடிவிலே சினீகரென்பவருக்கு உரைப்பீர்.

"இந்த மகாபுராணம் பரம ரகசியமாயும் கலிதோஷ நாசனமாயு மிருப்பதை எவன் பக்தியுடன் கேட்பனே அவனுக்குப் பாவமெல்லாந் தீரும். இப்புராணத்தைத் தினந்தோறும் கேட்பவனுக்குச் சகல தீர்த்த ஸ்நானபலனும் சகல தேவதா ஸ்தோத்திர பலனும் கிடைக்கும். இதிற் பத்தத்தியாயங் கேட்டமாத்திரத்திலே காராம் பசுவைத் தானஞ்செய்வதாலுண்டாகிய அருமையான புண்ணியம் கிடைக்கும். ஐயமில்லை. எந்தப் புருஷன் சகல சரீரகனுய்ச் சர்வவியாபியாய்ச் சகல லோகத்துக்கு மாதாரமாய்த் தன்னிலே தானிருப்பவனுய் ஞானத்தினுலேயே அறியத்தக்கவனுய் ஆதியந்தமில்லாதவனுய்ச் சகல தேவதைகளுக்கும் இதனுயுள்ள ஸ்ரீ அச்சுதனை நினைத்துக்கொண்டே இப்புராண முழுவதையுங் கேட்பானே அவன் பத்தியோடு அசுவமேதஞ்செய்த பலனையெல்லாமடைவான். இப்படி ஒருவாறு சொன்னேன். எந்தப் புராணத்தின் ஆதியிலேயும் மத்தியத்திலேயும் அந்தத்திலேயும் சராசர குருவாயும் பிரமஞான சொரூபியாயும் சகல ஜகத்துக்கும் சிருஷ்டி ஸ்திதி சங்கார கர்த்தாவாயுமான ஸ்ரீ அச்சுதபகவான் துதிக்கப்பட்டிருக்கிருனே அப்படிப்பட்ட புராணத்தை முழுதுங் கேட்கின்றவனும் படிப்பவனும் சொல்லுகிறவனுமாயுள்ளவனுக்கு வரும்பலன் இப்படிப்பட்டதென்று சொல்ல மூவுலகத்திலு மொப்பில்லை. ஏனென்றால், ஒப்பில்லாத மோக்ஷ சாம்பிராச்சியந் தரவல்ல ஸ்ரீஹரி பகவானே பயனுயிருக்கிருனன்றே! எவனிடத்தில் மனம் வைத்தவன் நரகத்துக்குப் போகமாட்டானே,

எவனைத் தியானிப்பதற்குச் சுவர்க்கமும் இடையூரு யிருக்குமோ, எவனிடத்தில் மனம்பற்றியவர்க்குப் பிரமலோகமும் அற்பமாய்த் தோன்றுமோ எவன் நிர்மல ஞானமுடையவர்களுக்கு இருதயத்தி லிருந்து கொண்டு முத்தியை யளிக்கின்றானோ அப்படிப்பட்ட அச்சுதனைத் துதிப்பதனாலே பாவந்தீருமென்பது ஓராச்சரியமா? யக்கியேசுவரனான எவனை யக்கியமறிந்தவர்களான கர்மிகள் யக்கியங்களாலே ஆராதிக்கிறார்களோ, ஞானிகள் எவனைப் பிரமசொரூபியாகவும் பராபர சொரூபியாகவும் தியானிக்கிறார்களோ, எவனை நினைப்பவன் ஜனன மரணங்களையும் அறிவு தேய்வு வளர்ச்சிகளையும் காரிய காரணங்களா யிருத்தலையும் அடைகிறதில்லையோ அப்படிப்பட்ட ஸ்ரீ ஹரியைக் காட்டிலும் கேட்கத்தக்க வேறு பொருளென்னவுண்டு? ஆதியந்தங்க ளில்லாதவனாய்ப் பிரபுவான எவன் பிதுர் ரூபியாயிருந்து விதிப்படி இடப்பட்ட கவியத்தையும் தேவரூபியாயிருந்து ஓமஞ் செய்யப்பட்ட அவியத்தையும் புசிக்கிறானோ, பிரமாண முடையவர்களுக்கு எந்தப் பிரமாணமும் சகல சக்திஸ்தானமாயும் பிரமமாயு மிருக்கிற எவன் விஷயத்தில் ஒரு பரிச்சேதஞ் செய்ய வொண்ணாதோ அப்படிப்பட்ட ஸ்ரீ ஹரிபகவான் காதிற்பட்டவுடனே சகல பாபத்தையும் போக்கிவிடுவான். எவனுக்கு முடிவும் உற்பத்தியும் இல்லையோ, பரிணாமமில்லாத எவனுக்கு விருத்தியழிவுகளில்லையோ, எவன் விகாரமற்ற வஸ்துவா யிருக்கிறானோ, புருஷோத்தமனாயும் துதிக்கத்தக்கவனாயுமுள்ள சர்வேசுவரனைத் திருவடி தொழுகிறேன். எவன் அந்தப் பரமபுருஷனுக்கு அநுகுணமானதையே அநுபவிக்கும்படியான சேஷபூதனா யிருக்கிறானோ, எவன் தேவாதி பேதங்களில்லாமல் ஞானமே வடிவாகக்கொண்டு ஒருவனாயிருந்தும் தேவதை முதலான தேகங்களைக் கொண்டு அவற்றில் தானென்கிற மயக்கமுற்றதனாலே அனேகனாய் அசுத்தனாய்த் தோன்றுகின்றானோ, ஞானத்தோடு கூடியவனாய் மகத்து முதலான சகல தத்துவங்களையும் பரவச் செய்வதற்குக் கருமமூலத்தாற் கர்த்தாவா யிருக்கிறானோ, எப்போதும் அவியயனாயுள்ள

எம்பெருமானுடைய ஸ்வரூபமான அந்தப் புருஷனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். எஃது அறிவு பரவுதலும் அசையாது நிற்றலுஞ் சேர்ந்து லயப்பட்ட ஸ்தானமா யிருக்கின்றதோ, புருஷனுக்குப் பாவ புண்ணியானுபவ யோக்கியமான தேகாதிகளைத் தரவல்லதாய் முக்குணவடிவா யிருக்கின்றதோ, மகத்து முதலான அவஸ்தைகளை யடையாததாயும் சமுசார வுற்பத்திக்குக் காரணமாயும் தானே யுண்டானதாயும் எப்போது மழியாததாயுமுள்ள பிரதானம் எதுவுண்டோ, எம்பெருமானுடைய ஸ்வரூபமான அதைத் தொழுகின்றேன். ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பூமி இவைகளின் செய்கை வடிவாயும், சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்கிற விஷயங்களாகிய போக்கிய பதார்த்தங்களைக் கொடுத்து வருவதாயும், ஆத்துமாவுக்கு ஞானேந்திரிய கருமேந்திரியங்களைக்கொண்டு உபகாரஞ் செய்வதாயும், சூக்ஷ்மமும் தூலமுமான சொரூபமுடையதாயுமுள்ள வியக்த மென்கிற பகவானுடைய சொரூபத்தைப் பணிகிறேன். இப்படியாகப் பலவகைப்பட்ட வியக்தாவியக்த பிரகிருதிகளும் அப்பிராகிருத திவ்விய மங்கள விக்கிரகமும் ஆத்துமாவும், அஜனும் எப்போது முள்ளவனை எவனுக்கு ஸ்வரூபமோ அந்த ஞானாதி ஐசுவரியமுள்ள ஸ்ரீ ஹரிபகவான் சகல ஆத்துமாக்களுக்கும் பிறப்பு இறப்பு மூப்பு முதலிய குற்றங்களில்லாத மோக்ஷசம்பத்தைத் தந்தருளவேண்டும்.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

**ஆறும் அம்சம் முற்றிற்று.**

---

**ஸ்ரீ விஷ்ணு புராணம் ஸம்பூர்ணம்.**

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:



# ஸ்ரீ விஷ்ணு புராண

## தத்துவபோத விளக்கம்

புராணசாரம்

விஷ்ணு புராணம்—வைணவ சம்பந்தமான புராணம்; விஷ்ணுவென்னுந் திருமாலின் விஷயமான புராணம்; வைஷ்ணவ புராணம் என்னும் பொருள். புராணம்—உலகத்தின் தோற்றம்; ஒடுக்கம், முனிவர்கள் அரசர்களின் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மன்வந்தரம் என்னும் ஐந்து விஷயங்களையும் விரவிக்கூறுவது; இது பஞ்சலக்ஷணம் என்றுங் கூறப்படும்.

நித்திய அநுஷ்டானங்கள் — ஒவ்வொருநாளும் செய்யவேண்டியதான வைதிக கருமங்கள். அநுஷ்டானம் - ஒழுக்கம். உயிருள்ளவரை செய்யற்பாலனவாய கருமங்கள்; வடசொல் விகாரம்; நித்தம்.

வேதாங்கங்கள்—சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், சோதிடம், கல்பம் என்ற வேதாங்கம் ஆறும், மீமாம்சை, தர்க்கம், புராணம், தர்மசாஸ்திரம் என்ற உபாங்கம் நான்கு என இவை.

லயப்படும்—ஒன்றில் ஒன்று அடங்கல். பஞ்சபூதங்கள் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன.

கற்பம்— ஆசுவலாயநீயம், போதாயநீயம், ஆபஸ்தம்பம் முதலிய சூத்திர ரூபத்திலிருந்து வைதிக கருமங்களைப் பிரயோகிக்கும் முறையைக் கற்பிப்பது. கல்பம் - பிரமன் முடிவுகாலம்.

வேதசாகை—வேதங்களின் பிரிவுகள்.

பிரமசரியம்—நால்வகை ஆச்சிரமங்களி லொன்று.

பிரவர்த்தி — தருமாதருமங்கள்; வடசொல் விகாரம்.

நியமம்—நிட்டை; ஆசாரமுமாம்; வடசொல் விகாரம்.

வஸிஷ்டர் — பஞ்சேந்திரியங்களை வசப்படுத்தியவன் என்பது பொருள். இவன் - சூரிய வம்சத்து அரசர்களுக்குக் குலகுரு.

விசுவாமித்திரர்—பிரமனது புதல்வனை குசனென்னும் அரசனுடைய புத்திரர் நால்வருட் குசநாபனது மகனாகிய காதியின் குமாரர்; கௌசிகரென்னும் பெயருடையவர். விசுவாமித்திரன் - எல்லாருக்கும் நண்பன். அன்றி, எல்லாவற்றிற்கும் வேறுபாடானவற்றைப் படைக்கின்ற திறம் வாய்ந்தவன்.

புசிக்கிறான்—அநுபவிக்கிறான்.

சொர்க்கம் — மாறிமாறிப் பிறக்குந் தன்மையைத் தன்னிடத்தேகொண்ட வின்பவுலகம்.

மோக்ஷம்—அழிவற்ற பேரின்பத்தைக் கொடுக்கும் அப்ராகிருத திவ்யலோகம்.

எக்கியம்—வைதிக ஹோமம்.

அர்க்கியம்—கால் கழுவும் நீர். சந்ததி - குலாபி விருத்தி.

பரமார்த்தம்—மேலான பொருளின்னதென்பது.

பிரவர்த்தி—முயற்சி. நிவர்த்தி - விடுபடல். இப் பிரவர்த்தி நிவிர்த்தி என்பன இரண்டும் பிரமஞானரூப மார்க்கம். சர்வ சங்க பரித்தியாகமே சர்வ துக்க நிவர்த்திக்கும் பரமானந்தப் பிராப்திக்கும் ஏதுவாயிருத்தலால், நிவிர்த்தி மார்க்கத்தைப் பின்பற்றுதல் முமுக்ஷுவிற்

குரிய கடமை. மயித்திரேயர் - ஒரு முனிவர்; இவர் யாவரிடத்துங் கருணை பாராட்டினமையால் இவருக்கு இது காரணப் பெயராயிற்று.

## இரண்டாம் அத்தியாயம்

பிரபஞ்ச உற்பத்தி—உலகின் உற்பத்தி. வேதாந்த சித்தாந்தத்தில், கிரம சிருஷ்டி, யுகபத் சிருஷ்டி, அஜாத வாத மென்பனவாம்: மற்றும், பின்னம், அபின்னம், பின்னுபின்னம், சத்து, அசத்து, சதசத்து, சாவயம், நிரவயம், சாவயநிரவயம் என்பனவாகாது அநிர்வசநீயமாய்ப் பிரமத்தின்கண் கயிற்றின்கண் அரவாதற்குரிய சத்திபோன்றிருப்பது மாயையாம். ஆவரண விட்சேப சத்திகளையுடைய அநாதியான பதார்த்தம் மாயை யென்பது அதன் லக்ஷணம். எச்சமயத்து ஈசுவரன் சீவர்களுக்குக் கன்மபலங் கொடுக்கச் சன்முக மாகின்றானோ அச்சமயத்துச் சிருஷ்டியுண்டாகின்றது. ஈசுவரன் சீவர்களுடைய கன்மத்தை யநுசரித்து உயர்ந்த அல்லது தாழ்ந்த போகங்களை யவர்கள் அநுபவிக்குமாறு சிருஷ்டி பண்ணுமிடத்து மாயையின் விட்சேபத்தினின்று சத்தகுணத்தோடு கூடிய சூக்கும ஆகாயமும், அவ் வாகாசத்தினின்று பரிசகுணத்தோடு கூடிய சூக்குமவாயுவும், அவ்வாயுவினின்று ரூப குணத்தோடு கூடிய சூக்கும தேயுவும், அத் தேயுவினின்று ரச குணத்தோடு கூடிய சூக்கும அப்புவும், அவ் வப்புவினின்று கந்த குணத்தோடு கூடிய சூக்குமப் பிருதிவியு முண்டாயின வென்றதாம். தேகாதிப் பிரபஞ்சம் கிரமமின்றிப் பிரமத்தினின்று முண்டாயிற்றென்பது யுகபத் சிருஷ்டியாம். உண்மையாகவுள்ளது பிரமமே; தேகாதிப் பிரபஞ்சம் எக்காலத்தும் இன்றென்பது அஜாதவாதம்.

விகார மில்லாதவன்—பிறப்பு, இறப்பு, வளர்ச்சி, திரிவு, குறைவு, அழிவு என்னும் ஷட்பாவ விகாரமு மின்றி யிருக்கின்றவன்.

சுத்தனும்—ஜாதி வருணாச்சிரமாதியவற்றால் தொடக்குற்ற ஜீவன், கிருபை அவதார முதலியவற்றால் தொடக்குற்ற ஈசுவரன், ஜீவசம்பந்தத்தால் அசுத்தமுற்ற பூதங்கள் ஆகிய இவற்றுடன் எம்பெருமான் கூடி யிரும்

பினும் ஆகாயம் போன்றுதான் ஓ ரசுத்தமும் இன்றி இருக்கிறவன்.

நித்தியனாய்—உற்பத்தி நாசமின்றி யிருத்தலின் பிரமத்தை நித்திய மென்றது.

பரமாத்மா—நாமரூப வடிவமான எப்பொருட்கும் விவர்த்தன காரணமாயும்; தனக்கொரு காரணமின்றி மேற்பட்டும் வியாபகமாயிருக்கும் பொருள்.

விக்கிரகம்—உருவம். சதுர்முகரூபம்-நான்முகவுருவம். தன்னவதாரரூபி - திருமாலுருவம். ருத்திரரூபி-சிவனுருவம். ஈண்டு, முத்தொழில்.

காரணாவஸ்தையில் ஒன்றாய்—எம்பெருமான் அவஸ்த்தா திரயங்கள் தம்முள் மாறி மாறி வரினும் தான் மாறாதுஒருபடித்தாய் இருக்குந் தன்மை.

சூக்குமமாய்—நுண்மையாயுள்ள யாவற்றினும் அதிசூக்குமமாயிருத்தலின் திருமாலைச் சூக்குமமென்றார். "அணோரணியாந் மகதோ மஹீயாந்" என்ற உபநிஷத் வாக்கியம் அறிக. ஸ்ரீ வேதவியாஸ பகவான் பிரஹ்ம ஸூத்திரத்தில், "உத்க்ராந்தி கத்யாகதீநாம்" என்றதும், "ஏஷோணு ராத்மா சேதஸா வேதிதவ்யா:" என்ற முண்டகோபநிஷத்துங் காண்க.

அவ்யக்தமாய்—கடபடாதிகளை (கடம் - பானை, படம்-வஸ்த்ரம்) கிரகிக்கிற கண் முதலிய இந்திரியங்களுக்குத் தோற்றாதிருக்கை.

காரியாவஸ்தையில்—காரிய விஷயங்களில் (அதாவது) அவதாராதிகளில்.

ஸ்தூலரூபம்—மஹா பூதங்களும், இந்திரியங்களும், ஸப்த தாதுக்களும்,எழுபத்தீராயிரம் நாடிகளும், சதஸஹஸ்ரகோடி ரோமங்களும் சேர்ந்தவடிவம்.

அனாதி பிரகிருதி—வெகு காலமாகச் சேர்த்த பூர்வ ஜன்ம கர்மம்.

அந்தர்யாமி—எல்லாவற்றினுள்ளும் இருந்தும் வெளிக்குப் புலனாகாமை.

புருஷோத்தமன்—புருஷச் சிரேஷ்டன். எல்லாருள்ளும் உத்தம குணமுடைமை.

பரமார்த்தம்—உண்மை.

சுத்தஞானம்—குற்றமற்ற ஞானஸ்வரூபன்.

பிரமிப்பு—மயக்கம்; விபரீத ஞானம்.

தேகேந்திரியாதிகளை ஆத்மாவாக நினைப்பவர்—பாமரர்களில் சிலர், தூலசரீரமான அன்னமயகோசமே ஆத்மாவாம். ஏனெனில், எதில் நான் என்னும் புத்தியுண்டாகிறதோ அஃதாத்மாவாம்; அல்லது, எதில் முக்கியமான பிரீதியுண்டாகிறதோ அது ஆத்மாவாம். நான் மனிதன், நான் பிராமணன், நான் க்ஷத்திரியன் என்றொடக்கத்த புத்தி எல்லாருக்கும் உண்டாதலால் மனிதத் தன்மை முதலியன தூல சரீரத்திலேயே இருக்கின்றன. ஸ்திரீ, புத்திரன், தனம், பசு முதலியவை தூல சரீரத்திற் குபயோகமாயின் அவற்றில் பிரீதியுண்டாகின்றது. எந்தத் தூலசரீரத்தின் பொருட்டு அன்னிய பதார்த்தங்களில் பிரீதியுண்டாகிறதோ, அந்தத் தூல சரீரத்தில் முக்கியப்பிரீதி இருக்கிறது. இதனால் நான் என்னும் புத்திக்கு விஷயமாயும் முக்கியப் பிரீதிக்கு இடமாயும் இருப்பது தூல சரீரமே எனப் பெறப்படுதலால், தூல சரீரமே ஆத்மாவாம். ஆகையால் அதனைப் போஷித்தல் பரம புருஷார்த்தமாம். புருஷர்களின் இச்சைக்கு எது இஷ்டமோ அது புருஷார்த்த மெனப் படும் என்று சொல்லுவர். இவர்களுக்குப் பிரத்தியட்ச மொன்றே பிரமாணமாம்; மரணமே மோக்ஷம்; இன்பமும் பொருளுமே புருஷார்த்தம். இங்ஙனம் கூறும் அசுரக் கொள்கையினையும், ஸ்தூல சரீரம் ஆத்மாவாக மாட்டாது; ஆனால் ஸ்தூல சரீரத்தில் யாதொன்றிருப்பதனால் ஜீவன விவகாரமும் யாதொன்றில்லாமற் போவதினால் மரணவிவகாரமும் உண்டாகுமோ அதுவே ஆத்மாவாம். அது ஸ்தூல சரீரத்தைப் பார்க்கிலும் வேறாம். ஜீவனமும் மரணமும் இந்திரியங்களின் வசமாக விருக்கின்றன. எவ்வளவு காலம் தேகத்தில் இந்திரியங்கள் இருக்குமோ அவ்வளவுகாலம் ஜீவனம் உண்டாயிருக்கிறது. எப்போது இந்திரியங்கள் இல்லாமற் போகுமோ அப்பொழுது மரணமென்று உரைக்கப் படுகின்றது. நான் காண்கிறேன், நான் உரைக்கிறேன்,

நான் நடக்கிறேன் என்று இங்ஙனம் நான் என்னும் புத்தி இந்திரியத்தில் இருக்கின்றது. ஆகையால், இந்திரியம் ஆத்மாவாம் என்று சொல்லும் சாருவாக மதக் கொள்கையினையும் சொல்லியது.

சேதனம்—தமிழில் அறிவு எனப் பொருள்படுமாயினும், ஈண்டுப் பொருந்து மாற்றால் வடமொழிப்படியே அறிவுடைப் பொருளாகிய உயிரையே சொல்லியது.

விசதம்-தெளிவு. பரம்பரை-ஒன்றன்பின் ஒன்றாக வரும் தன்மை.

சிரேஷ்டன்-மேலானவன்.

சேதனு சேதனம் - அறிவுள்ளதும் இல்லதும் ஆகிய பொருள்.

விசேஷணங்கள்-ஒன்றைப் பிரித்து அறிவிப்பதற்கு ஏதுவாய் இருப்பது.

ஷட்பாவம்-குறைதல், விநாசம், திரிதல், வளர்தல், பிறத்தல்.

அப்ரமேயம்-உபநிஷத்துப் பிரமாணத்தால் அன்றி இதரப் பிரமாணங்களுக்கு விஷயமாகாதிருத்தல். பிரமாணத்தால் அறியப்படுவது பிரமேயம். எம்பெருமான் சப்த பரிசாதி குணங்கள் இன்றி யிருத்தலின் கடபடம்போன்று. (1) பிரத்தியட்சப் பிரமாண விஷயமன்று; காரியலிங்க மின்மையின். (2) அநுமானப் பிரமாண விஷயமுமன்று; ஒப்புமையின்மையின் (3) உவமானப் பிரமாண விஷயமுமன்று; ஜாதிகுணக்கிரியைகளின்மையின் (4) சப்தப் பிரமாண விஷயமுமன்று; உபாதான தர்ம மின்மையின் (5) அருத்தாபத்திப் பிரமாண விஷயமுமன்று; (6) யதார்த்த பாவ வடிவாயிருத்தலின் அநுபலப்திப் பிரமாண விஷயமுமன்றும். இங்ஙனமாயின் உபநிஷத்துக்களின் வாயிலாகப் பிரமம் அறியப்படுவ தென்பது எங்ஙனம் பொருந்துமெனின், உபநிஷத்து வாயிலாக இலட்சியார்த்தமாக வறியப்படுதலின் தவறின்றாம். எம்பெருமான் சொற்பிரகாசமாக விருத்தலின் எப்பிரமாணத்தாலும் அறியப் படுவதின்றாம். ஆனால், பிரமாணங்களோ எம்பெருமானால் விளங்குகின்றனவென்க.

ஷட்குணம்—அறிவு, பொறை, வல்லமை, செல்வம், தைரியம், அழகு முதலியன.

வியாபகம்—தேசகால வஸ்துக்களாலாகிய பரிச்சேதமின்றி யிருத்தலின் எம்பெருமான் விபுவாம்.

வாஸுதேவன்-சகலத்திலும் தான் வசிக்கிறபடியாலும், சகலத்தையும் தன்னிடத்தில் வசிக்கும்படிச் செய்வதினாலும், சகலத்தையும் மறைக்கிறதினாலும், வாசு என்கிற பெயர்; மோக்ஷமடைய விரும்பும் முமுக்ஷுக்களாலே பிரார்த்திக்கப்படுகிறவனாயும், ஸர்வ சுதந்தரனாயும் இருப்பதால் தேவன் என்கிற பெயர்; ஆகையால், வாசுதேவன் என்றார்.

பிரமம்-நாமரூபவடிவம். எப்பொருட்கும் விவர்த்த காரணமாய்த் தனக்கொரு காரணமுமின்றி மேம்பட்டிருத்தல்.

நித்தியன்-அழிவில்லாதவன். சௌனரஹிதன்-பிறப்பில்லாதவன்.

க்ஷேத்திரம்-சரீரம். க்ஷேத்திரக்ஞன் - ஸர்வ சரீரமாக இருப்பவன்.

வியக்தமாவது-கண்ணுக்குப் புலனாதல்.

அத்தியந்தம்-மிகவும்.

மூலப் பிரகிருதி-ஜீவபாவத்தை அடைந்த ஈசுவரனுடைய ஸ்வரூபமாய் இருக்கிறது. ஈசுவரன் ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாக விருப்பது. அவ்யக்தமான பிரகிருதி-காணமுடியாத பிரகிருதியின் இயல்பு.

க்ஷேத்திரக்கியன்-சுபாவ ஞானத்தினாலாவாது, உபதேச ஞானத்திலாவது பாதமுதல் சிரசுவரையில் இருக்கிற அந்தந்த அவயவங்களோடு கூடியிருக்கிற சரீரம் இப்படிப்பட்டதென்று எவன் அறிகிறானோ அவனே க்ஷேத்திரக்கியன். அன்றி, தேகம் வேறு; ஆத்மா வேறு என்று அறியும் தன்மையுள்ளவன்.

கிஞ்சித்து-கொஞ்சம்.

நிச்சலம்-சலியாமல் இருப்பது. சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை இதில், "சதுர்விபாக ஸம்ஸ்ருஷ்

டௌ சதுர்த்தா ஸம்ஸ்திதஸ்ஸஸ்திதௌ ப்ரளயச்ச கரோத்யந்தே சதுர்பேதோ ஜநார்த்தநஃ” என்கிறபடித் தனித்தனியே நான்கு பிரகாரமாயிருக்கும். சிருஷ்டியில் பிரமாவுக்கும், பிரஜாதிபதிகளுக்கும், சிருஷ்டிக்கு அபேக்ஷிதமான காலத்துக்கும் ஒன்றுக்கொன்று உத்பாதகங்களான சகல ஜந்துக்களுக்கும் அந்தர்யாமியாய் ரஜோ குணத்தோடேகூடி சிருஷ்டிக்கும். ஸ்திதியில், விஷ்ண்வாதி ரூபேண அவதரித்து மநுயாக்ஞவல்கிய பராசர வால்மீகி சௌனகாதிகள் மூலமாக ஸ்மிருதி இதிகாச புராணாதி சாஸ்திரங்களைப் பிரவர்த்திப்பித்து ஆத்மாக்கள் வாளா உழன்றலையாமல் ஈடேறுகைக்கு உறுப்பான நல்வழிகளைக் காட்டிக் காத்தற் கனுகுணமான காலத்துக்கும் லோகத்தில் ஒன்றுக்கொன்று ரக்ஷகமான எல்லா வுயிர்களுக்கும் அந்தர்யாமியாய்ச் சத்துவ குணத்துடன் ஸ்திதிப்பிக்கும். ஸம்ஹாரத்தில், “ஆஶ்ரித்ய தமஸோ வ்ருத்தி மந்தகாலே ததாப்ரபுஃ ருத்ர ஸ்வரூபோ பகவாநேகாம் ஶேநபவத்யஜஃ அக்ந்யந்த காதிரூபேண பாகேநாந்யேந வர்ததே காலஸ்வரூபோ பாகோந்ய ஸ்ஸர்வ பூதாநிசா பரஃ விநாஶம்குர்வ தஸ் தஸ்ய சதுர்தைர் வஹமாத்மநஃ” என வடமொழி விஷ்ணு புராண வாக்கியத்தின்படி, ருத்திரனுக்கும் அக்னி அந்தகாதிகளுக்கும் சங்காரத்தையுடைய காலத்துக்கும் ஒன்றுக்கொன்று நாசகமான எல்லாப் பூதங்களுக்கும் அந்தர்யாமியாய்த் தாமத குணத்தோடே சங்கரிக்கும்.

சப்தவாச்சியம்-நாதரூபம்; சப்தகாரணத்துவம்.

சமஷ்டி புருஷரூபம்-சீவர்கள் கூட்டமே ஈசுவரனாதல். வெகு ஜனம். கிராமம். தோப்பு.

பிராகிருதப் பிரளயம்-அழிதற் றன்மையவான காலம்.

அவிச்சின்னம்-இடைவிடாம லிருப்பது.

பிரவர்த்தித்தல்-முயலுதல்.

வைஷம்மியம்-மாறுபாடு; வேறுபாடு.

நிமித்தகாரணம்-ஸங்கல்ப விசிஷ்ட பிரம்மம்.

உபாதான காரணம்-சூக்கும சிதசித் விசிஷ்ட பிரம்மம்.

மகத்-தத்துவம்; அதாவது, அகங்காரம். பிறத்தற் கிடம்.

விகாரப்படுதல்-வேறுபடுதல். தூலசரீரம் - மயிர், தோல், நரம்பு, தசை, எலும்பு, கொழுப்பு இந்த ஆறும் ஸ்தம்பம்போற் கண்கூடு ஆக ஸ்தூலமாய்த் தோன்றுவது.

சூக்கும சரீரம்-ஞானேந்திரிய பஞ்சகம், கன்மேந்திரிய பஞ்சகம், பிராணாதி பஞ்சகம், சித்தத்தோடு கூடிய மனம், ஆங்காரத்துடன்கூடின புத்தி ஆகிய இப்பதினேழும் கூடினது.

பரிசம்-கிரகித்தல், அது, சீதம், உஷ்ணம், சீதோஷ்ணம், மிருது, கடினம் முதலியன.

காரணசரீரம்-காரியமான ஸ்தூல சூட்சுமமாகிய இரண்டு சரீரங்கள் காணப்படுதலால், இவைகட்குக் காரணம் ஒன்றுண்டென்று யுத்திபண்ண வேண்டியது.

விகஸிதம்-நன்றாய்.

லகுத்துவம்-மென்மைத் தன்மை.

பிரசன்னத்துவம்-பொலிவு.

ஆலசியம்-சோம்பல்.

வையுக்தம்-சேர்க்கை.

மாருதம்-வாயு. பஞ்சீகரணம் - ஒன்று சேர்கை.

தன்மாத்திரைகளாவன-சத்தம், பரிசம், ரூபம், ரஸம், கந்தம். இவற்றில், சத்தம் - ஆகாசத்திலும் செவியிலு மொடுங்கும். பரிசம் - வாயுவிலும் உடம்பிலும் ஒடுங்கும். ரூபம் - தேயுவிலும் கண்ணிலும் ஒடுங்கும். ரஸம் - நீரிலும் நாவிலும் ஒடுங்கும். கந்தம் - பிருதிவியிலும் மூக்கிலும் ஒடுங்கும். வசனம் - வாக்கிலும் ஆகாசத்திலும் ஒடுங்கும். கமனம்-வாயுவிலும் காலிலும் ஒடுங்கும். தானம்-தேயுவிலும் கையிலும் ஒடுங்கும். விசர்க்கம் - அப்புவிலும் முகத்திலும் ஒடுங்கும். ஆனந்தம் - பிருதிவியிலும் குய்யத்திலும் ஒடுங்குமெனச் சுருக்கம் அறிக.

பிரகிருதிசரீரன்-உலகையே தேகமாகவுடையவன்.

லீலாஸ்தானம் - விளையாடும் இடம்.

மகாஜலம்-பிரளயக்கடல்.

தசகுணம்-பத்துகுணம்.

உதகம்-தண்ணீர்.

சத்தாவரணம்-அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்ச ஞானம், அபரோட்ச ஞானம், சோக நிவிர்த்தி, நிரங்குச திருப்தி என்பன.

விசுவேசுவரன்-எங்கும் நிறைந்து, யாவருக்குந் தலைவனாயிருத்தல்.

ஸஹஸ்ர பணமண்டலம் - ஆயிரம் சிரங்களுடைமை.

மண்டலம்-கூட்டம்.

## மூன்றும் அத்தியாயம்

காலப்பிரமாணம் - கால அளவையினைச் சொல்லுதல்.

சுபாவம்-இயல்பு. பிரமத்தினுடைய இருப்பு.

அவாங்மனசகோசரம்-வாக்கு மனங்களுக்கு எட்டாத் தன்மை. சத்தி-திவ்யதிறம்.

உபசாரம்-மரியாதை.

பரம்-மேலானது.

அந்தியம்-இறுதி.

கருமம்-பிரபஞ்ச சிருஷ்டி.

இராப்பகல் அறிதல்-பிரமனுக்கு ஆயிரம் யுகங்கள் பகல் என்றும், ஆயிரம் யுகங்கள் இரவு என்றும் அறிதல்.

ஆயிரம்யுகங்கள்-ஆயிரம் சதுர்யுகங்கள்.

### கால அளவை

| | |
|---|---|
| 15 கண்ணிமைப் பொழுது கொண்டது-காஷ்டை | (1) |
| 30 காஷ்டை | கலை (1) |
| 30 கலை | முகூர்த்தம் (1) |
| 30 முகூர்த்தம் | இராப் பகலுள்ள நாள் (1) |
| 15 நாள் | பக்ஷம் (1) |

| | | |
|---|---|---|
| 2 பக்ஷம் | | மாதம் (1) |
| 2 மாதம் | | இருது (1) |
| 3 இருது | | அயனம் (1) |
| 2 அயனம் | | வருஷம் (1) |
| 1 மனிதவருஷம் | | தேவநாள் (1) |
| 360 தேவநாட்கள் | | தேவவருஷம் (1) |
| 4600 தேவவருஷங்கள் அல்லது, | 1728000, மனித வருஷங்கள் கொண்டது கிருதயுகம் | (1) |
| 3600 ,, | 1296000-திரேதாயுகம் | (1) |
| 2400 ,, | 864000-துவாபரயுகம் | (1) |
| 1200 ,, | 432000-கலியுகம் | (1) |

இப்படிப்பட்ட நாலுயுகங்கள் சேர்ந்தது, அதாவது தேவவருஷங்கள் பன்னிரண்டாயிரம், மனுஷிய வருஷங்கள் 432000-கொண்டது சதுர்யுகம் (1).

இப்படிப்பட்ட சதுர்யுகம் - 1000 கொண்டது சதுர்முகப் பிரம்மாவினுடைய ஒருபகல். அப்படிப்பட்ட சதுர்யுகம், 1000 கொண்டது பிரமாவினுடைய ஒரு இரவு. இப்படிப்பட்ட பகல் இரவு சேர்ந்தநாள்-360, கொண்டது பிரமாவினுடைய ஒருவருஷம். இப்படிப்பட்ட 100-வருஷம் கொண்டது ஒரு பிரம்மாவினுடைய ஆயுஷ். இந்த ஆயுஷ்காலமானது பராவென்று சொல்லப்படுகிறது.

மேலே சொன்ன கிருதயுகத்தில் 800 வருஷங்களும், திரேதாயுகத்தில் 600 வருஷங்களும், துவாபரயுகத்தில் 400 வருஷங்களும், கலியுகத்தில் 200 வருஷங்களும், சாந்தியென்று சொல்லப்படும்.

இந்த ஒரு வருஷங்களிலும், பாதி பூர்வசந்தியென்றும், மற்றொருபாதி உத்தரசந்தியென்றும் சொல்லப்படுகிறது.

மேற்சொன்ன சந்தியென்பது எப்படிப்பட்டதென்றால், முதல் யுகமாகிய கிருதயுகத்தின் கடைசியில் 400-வருஷமும், இரண்டாவது யுகமாகிய திரேதாயுகத்தின் துவக்கத்தில் 400 வருஷமும், சேர்ந்த 8000 வருஷங்கள், முதல் யுகத்தின் சந்தி. அப்படியே

இரண்டாவது யுகத்தின் கடைசியில் 300 வருஷங்கள், மூன்றாவது யுகத்தின் துவக்கத்தில் 300 வருஷங்கள் ஆக அறுநூறு வருஷங்கள் இரண்டாவது யுகத்தின் சந்தி. இப்படியே மற்ற யுகங்களும் சந்தி வருஷங்களைக் கணக்கிடவேண்டியது.

இப்படிப்பட்ட சந்திவருஷங்களின் பிரயோசனமென்னவெனில், கிருதயுகத்தின் கடைசியிலுள்ள, 400 வருஷங்களாகிய சந்தியிலேயே திரேதாயுகத்தின் தருமம் முதலிய குணங்கள் காணப்படும். திரேதாயுகத்தின் முதல் 400 வருஷங்களாகிய சந்தியில் கிருதயுகத்தின் தருமம் முதலிய இருந்துகொண்டே யிருக்கும். அந்தச் சந்திவருஷங்கள் முடிவான பிறகு அந்த யுகத்தின் சுபாவமான தருமம் முதலிய குணங்கள் மாத்திரம் இருக்கும். இந்தச் சந்தி வருஷங்களைக் கழித்து மிச்சமுள்ள வருஷங்கள்தான் யுகம் என்று சொல்லப்படுகின்றன.

சுக்கிலம்-ஞானப்பிரகாசம், பிரகாசமுள்ளது.
கிருஷ்ண-அஞ்ஞானம். இருள்.

---

## நான்காவது அத்தியாயம்

# ஸ்ரீ வராகவவதார வைபவம்

நாராயணன்-பிரளயப் பெருங்கடலைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டவனென்றும், எல்லாப் பொருள்கட்கும் இருப்பிடமானவனென்றும், எல்லாப் பொருள்கட்குந் தான் ஆதாரமானவன் என்றும் பொருள். அன்றி, நாரங்களாவன-நித்திய வஸ்துக்களினுடைய திரள். நாரபதம், நர என்றும், நார-என்றும், நாராః என்றுமாய் "ரிங்க்ஷயே" என்கிற தாதுவிலே, ர-என்று பதமாய் க்ஷயிக்கும் வஸ்துவைச் சொல்லி, நகாரம் அத்தை நிஷேதித்து, நர என்று க்ஷயமில்லாத நித்திய வஸ்துவைக்காட்டி, ஸமூகார்த்தத்திலே அண் ப்ரத்யயமும் ஆதிவ்ருத்தியுமாய் நாராః என்று நித்ய வஸ்து சமூகத்தைச் சொல்லி, நாராః எனப் பன்மையாகையாலே சமூகத்திரளைச்சொல்லுவது. நாராயணம் அயநம், யஃ, ஸஃ-நாராயணஃ. நாராః.

அநயம், யஸ்ய, ஸः-நாராயணः.

விசதமாகும்படி-நன்றாய் விளங்கும்படி.

பகவான்-ஆறுகுணங்களை யுடையவன்.

சஹஸ்ரசங்கை-ஆயிரக்கணக்கு.

யோகநித்திரை-கண்டும் காணாத் தூக்கம்.

மரபோதம்-ஞானம். ஷட்குணம், ஆறுகுணம்.

சிருஷ்டி-எம்பெருமானிடத்திலிருந்து ஆகாய முதலாயின உண்டாயின வென்பது.

அநுப்பிரவேசம்-உள்ளே பிரவேசித்தல்.

மகாசலம்-திருப்பாற்கடல்.

உதகங்கள்-தண்ணீர்கள்.

விநய வினத காத்திரையாய்-மிக்க பக்தியும் அன்பும் ஆர்வமும் பூண்டவராய்.

மகார்ணவம்-பிரளயக் கடல்.

ரக்ஷகன்-காப்பவன்.

கோவிந்தன்-ஆத்மாக்களுக்குத் தலைவன்; கோவர்த்தன மலையைத் தாங்கினவன்.

பரப்பிரமம்-நாமரூபவடிவும் எப்பொருட்கும் விவர்த்தன காரணமாயும், தனக்கொரு காரணமின்றி மேற்பட்டும் வியாபகமா யிருப்பவன்.

மதத்தத்வம்-ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்னும் மூன்றுவிதமாய்ப் பிரியும்.

பரிச்சேதம்-விவரிக்கும் வேறுபாடு.

ஆநந்தரூபம்-சுகரூபமாயிருக்கை.

நித்யமாகை-ஸர்வகாலத்திலு மிருக்கை.

சேஷமாகையாவது-சந்தந புஷ்ப தாம்பூலாதிகளைப்போலே அவனுக்கு இஷ்டமானபடி விநியோகங் கொள்ளுகைக்கு அர்க்யமாயிருப்பது.

வாஸனையாவது-முன்பு செய்து போந்தவற்றிலே மீளவும் மூளுகைக்கு உறுப்பான ஸம்ஸ்காரம்.

எக்கியங்கள் - ஸ்மிருதிகளினால் விதிக்கப்பட்ட பஞ்ச மகாயக்கியங்கள்.

பிரணவம்-ஓம் என்கிற ஓரெழுத்து. இவ்வக்காம் பிரமசுவரூபம். இது, அகாரம், உகாரம், மகாரம் என்று மூன்றெழுத்துக்களைத் தன்னில் அடக்கி யிருப்பது.

தாராகணம்-நக்ஷத்திரக் கூட்டம்.

ஆத்மபூதன்-பூதங்களை யெல்லாம் தன்னிடத்தில் வைத்துள்ளவன்.

நமோ நமஃ-நமஸ்கரிக்கிறேன்.

குக்குரசத்தம்-அனுகாணவோசை.

கருநெய்தல்-நீலோத்பல புஷ்பம்.

கோடு-கொம்பு.

ஓதம்-தண்ணீர்.

ரோமகூபம்-மயிர்க்கூட்டம்.

புளகாங்கிதம்-மயிர்க்கூச்செரிதல்.

கேசவன்-அழகான மயிர்களையுடையவன். கேசி என்ற அசுரனைக் கொன்றதினால், இப்பெயர் வந்தது.

கஃ-பிரம்மா, அஃ-விஷ்ணு, ஈஶஃ-உருத்திரன், இம் மூவரையும், வ-சுவாதீனத்தில் வைத்திருப்பவன்.

கஃ-பிர்ம்மா, ஈஶஃ-உருத்திரன், இவர்களை (சிருஷ்டி காரியங்களில்) முயற்சிக்கும்படி கட்டளை யிடுகின்றவன்.

யூபஸ்தம்பம்-யாகத்தின் காரணமாக நாட்டப்பட்ட தூண்.

வேதிகை-யாக காரணமாக நிறுவிய மணல்மேடை.

ஸ்ருக்கு-வைதிக ஹோமம் செய்கையில் உபயோகிக்கும் கருவி.

பதம்-பதப்பிரிவு. நமஸ்தே என்பது நமஃ தே எனப் படுவது.

கிரமம்-வேதத்தின் பதங்களை முன்பதத்தோடும் பின் பதத்தோடுங் கூட்டிக் கூறுவது.

அக்ஷரம்-அழியாமை. பதுமபத்திரம்-தாமரையிலே.

சராசரம்-உயிருள் பொருள்; உயிரில் பொருள்.

திருஷ்டிபதம்-காணப்படும் இடம்.

கோசரம்-கண்கூடு; பிரத்தியக்ஷம்.

ஸ்தூலசரீரம்-மஹா பூதங்களும், இந்திரியங் களும், எழுவகைய தாதுக்களும், எழுபத்தீராயிரம் நாடி களும், சதஸ்ஹஸ்ர கேச ரோமங்களுஞ் சேர்ந்தது.

சத்து-முக்காலத்திலும் பொய் யென்று நிச்சயிக்கப் படாதது.

அசத்து-ஞானமில்லாததாய் விகாரத்திற்குக் காரண மாய் இருக்கும். இவ்வசத்து சுத்த ஸத்வம் என்றும், மிச்சிர தத்வம் என்றும், ஸத்துவ சூநிய மென்றும் மூன்று வகைப்படும்.

பிராந்தி ஞானம்-மயக்கவுணர்ச்சி.

அமரன்-அழிவில்லாதவன். மோகார்ணவம்-காமக் கடல்; ஆசைக்கடல்.

பிரகிருதி புருஷன்-பூர்வகன்ம ஸம்ஸ்காரம் இல் லாதவனான கடவுள். பிரகிருதி-இயல்பு. தன்மை.

ஸமஸ்த பிரபஞ்சம்-எல்லாவுலகங்கள்.

உத்தரித்து-படைத்துத் தாங்கி.

சத்துவகுணப் பிரதானனாவது-சத்துவகுணம் நிர் மல மாகையாலே ஞானவின்பங்களைக் கொடுத்து மறைக் காமல் நன்மையைப் பிரகாசிக்க விடுவதாய், ஞானசுகங் களைப் பெறுவதற்கு லௌகிக வைதிகங்களில் முயலச் செய்யும் வண்ணம் அன்பினை யுண்டுபண்ணிச் சுக ஸாதனங்களைச் செய்வித்து நல்ல பிறவியிலே தோற் றும்படி யாக்கும் குணத்தைத் தன்னில் முதன்மையாக வுடையனாவது.

தரித்தல்-வராகரூபியாகக் கோட்டிலே தாங்குதல். ஸ்தாபித்தல் - நிலை நிறுத்தல். சங்கல்பம் - இன்னது செய்யப் போகிறேனென்று உறுதி கொள்ளுதல்; இச்சை. ரஜோ குணத்தை ஆசிரயித்து - ரஜோ குணத் தை அடைந்து. அக் குணவிபவத்தால் பிரவர்த்தி நிவர்த்தி தர்மங்களையும் காரியா காரியங்களையும், பந்த மோக்ஷங்களையும் உள்ளபடி அறிந்து அறுதியிட மாட் டாமல், வேறு வகையாக அதாவது, விசேஷ தருமத்

தைப் பொதுவாகவும்; பொது தர்மத்தைச் சிறப்பாகவும் உறுதிப்படுத்துகை.

நிமித்தகாரணன்-ஸங்கல்ப விசிஷ்ட பிரம்மம்.

கர்மமாவது-கரணம் மூன்றினாலே செய்யப்பட்டதாய், புண்ணிய பாபங்களாகிய தொழில் விசேஷம். நானாவிதம் - அநேகவகை. சர்வசமன் - எல்லாருக்கும் ஒரே மாதிரியான தன்மையோடிருப்பவன்; வேண்டுதல் வேண்டாமை இல்லான்; நடுவுநிலையுடையவன். சாக்ஷி - சொரூபவடிவ ஞானத்தாலே எல்லாவுலகையும் மறைவில்லாமல் நேரே தனக்கொரு சம்பந்தமில்லாமல் அறிகின்றவன். ஸ்ரீயப்பதி - ஸ்ரீமகாலக்ஷிமிக்குத் தலைவன். சேதனர்கள்-ஆன்மாக்கள். உபசாரம்-மரியாதை.

---

## ஐந்தாம் அத்தியாயம்

# தேவ மனுஷ்யாதி சிருஷ்டி

தாமஸம்-தேகாதிகளை ஆத்மாவாக நினைத்தல். பாரிசம்-பக்கம். திரியக்கு-விலங்கு; மிருகம். அகங்கார மமகாரம்-தேகத்தினுல் ஆத்மாவென்னும் அபிமான புத்தியைக்கொள்ளுதலே அகங்காரம். மமகாரம்-தேக சம்பந்தப்பட்டு வீட்டிலும், பூமியிலும் புத்திரர்களின் மேலும், பெண் மனைவியர்களின் மேலும் என்னைச் சேர்ந்தவர்கள் என்னும் அன்பினைக் கொடுப்பது.

அக்கியானுவரணம்-அஞ்ஞானமென்னும் உறை.

அம்புஜாஸனன்-தாமரை மலரில் தோன்றிய பிரமன்.

கவுமார சிருஷ்டி-ஸனக ஸனந்தன ஸனத்குமார ருத்திராதியர்களைப் படைத்தல்.

மஹத் தத்வம்-ஸாத்விகம், ராஜஸம், தாமஸம்என்னும் மூன்றுவிதமாய் விரிவது. இதனைவிட்சேப சத்தி என்பர்.

தன்மாத்திரைகளாவன-சாந்தத்வ கோரத்துவ மூடத்துவங்களாகிற விசேஷங்களை உடையதல்லாத சப்தாதி மாத்திரத்தைக் குணமாகவுடைய ஆகாசாதி பூதங்களின் சூக்குமாவஸ்தைகள்.

சம்பவம்-உண்டாதல். கிருத்தியம் – காரியம்.

பூர்வவாசனுவசத்தால்-முன்பு செய்து போந்தவற்றில் மீண்டும் உண்டாகும் ஆசைக்குக் காரணமாக விருத்தல்.

அவத்தையாவது-அஞ்ஞானம். அது, ஞானத்தோற்றம், அந்நிதாஞானம், விபரீதஞானம் எனப் பல விதமாக இருக்கும்.

பிதாமகன்-பிரமன். முகாம்புஜம் - முகத்தாமரை.

நிமித்தம்-காரணம். கேசம் - தலைமயிர். அகிகள் - பாம்புகள். விரிஞன் - நான்முகன். கர்மானுகுணமாய் - புண்ணிய பாவங்களுக்குத் தகுந்தபடி. அசுவம் - குதிரை. சலசரம் - தண்ணீரில் வசிப்பது. காயத்திரி சந்தம்-காயத்திரி மந்திரம்.

நிமேஷம்-கால அளவை. சத்தியம் - விகாரமில்லாமை. பூதசாதம் - பூதங்களின் பிறப்பு. நித்தியமான வேதவசனங்கள் - அழிவில்லாத வேதவாக்கியங்கள்.

---

## ஆறும் அத்தியாயம்

# வருணாசிரம வுற்பத்தி

வர்ணாச்சிரமம்-பிர்மசர்யம் முதலிய நிலை. வருணபேதம்; சாதிகளின் வேறுபாடு ஆசாரம்-ஒழுக்கம். சாத்விகம்-எவர்க்கும் ஞானமுண்டாவதற்குக் காரணமாக விருப்பது. ராஜஸம் - ராகத்துவேஷங்களை விளைவிப்பித்துக் காரியத்தில் புகவிடுவது. தாமஸம்-மோகத்தையுண்டாக்கி ஞானத்தினைப் போக்கச் செய்வது. வக்ஷஸ்தலம்-மார்பு. சிரேயசு-பெருமை. இரணியகர்ப்பன்-எட்டு இருக்குகளாலும் வேறொரு காரணங்களை முன்னிடாமல் பூதங்களுக்கு நாயகன் என்றது.

பச்சிமம்-மேற்கு (சூரியனுதிக்குந் திசைக்குப் பின்னுள்ளது என்பது பொருள்.)

நிர்மலாந்தக் கரணமுடையவர் - குற்றமற்ற மனமாதிகளை யுடையவர்.

புண்ணிய கருமங்கள் - ஸவிசேஷசிந்தை, நிர்விசேஷசிந்தை, பரலோகசிந்தை, பக்தி ஞான வைராக்கியசிந்தை என்பன.

துவந்துவங்கள்-சம்பந்தங்கள். யோகாப்பியாசம்-கடவுளிடத்து ஒரே மனதாயிருத்தல். அதாவது, மனம் மாகிய விஷயத்திற் செல்லாது ஒன்றின்கண் நிற்றலாம்.

யோகாப்பியாச வசத்தினாலே சிரசில் சந்திர மண்டலத்தினின்றும் ஒழுகுகிற அமிருதம் பசியாறுதல்-யோகாப்பியாசம் செய்யும்பொழுது உசுவாச நிசுவாசங்களையடக்கி, சுழுமுனை மார்க்கத்திலே பிராணவாயுவைச் சலனமற நிறுத்தி, விஷயங்களின் வழி மனத்தைச் செல்லவொட்டாது மீட்டு, முக்கோண முதலிய வடிவனவாய மூலாதாரமுதலிய ஆறுதாரங்களின் தன்மையறிந்து, அவ்வாதாரங்களில்எழுந்தருளச்செய்த மூர்த்திகளைத் தியானித்து, படிப்படியே பிரமரந்திரத்திற் சென்று, ஆண்டுள்ள தாமரை முகையை மலரச்செய்து, அதன் கேசாக்கிரத்துள்ள சந்திரமண்டலத்தை மூலாக்கினியால் இளகப்பண்ணி, அவ்வழியாக வொழுகும் அமுதத்தை உடல்முற்றும் நிரப்பிக் கடவுளைத் தியானித்தலாம்.

பரத்துவாச முனிவர்-பரத்துவாஜன் என்கிற முனிவர். இது, பிரஜைகளைப் பாதுகாப்பவனென்பது பொருள்; பரத்-பரித்தல், காத்தல்; வாஜம்-ஜநம்.

வாணிச்சியம்-வியாபாரம்: கிராமியம்-இழிசன வசனம். உபயுக்தம்-பிரயோசனம். பராபரம்-இறைவன். உபகாரணம்-கருவி. அக்கினி கோத்திரம்-பாவ நிவர்த்திக்காகக் கிருகஸ்தர்களாற் காலை மாலைகளிற் செய்யப்படும் பிராயச் சித்தமாகிய அக்கினி காரியம்.

பஞ்சாக்கினி-வேள்வித் தீ மூன்றும்; ஔபாசனாக்கினி ஒன்றும், சூரியனாகிய தீ யொன்றுமாகிய ஐந்து தீ; வடமொழித் தீர்க்கசந்தி.

எட்டுசித்தி-அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாம்மியம், வசித்துவம், ஈசத்துவம் என்னும் எண்வகை சித்திகள்.

பீடித்தல்-வருந்தல். பாவ விமுக்தர் - பாவத்தி லிருந்து விடுபட்டவர். விக்கினம்-தடை; இடையூறு. குடிலபுத்தி-தீய புத்தி. நிருமித்து-உண்டாக்கி. சிசுரூஷா-பணிவிடை. கர்ம மார்க்கத்தில்-ஸத்கர்மாதிகளி ளுல் அடைவதற்குக் காரணமான வழிகளில். ஆத்மத் தியானம் - ஆத்மோபாசனை. பிரமத்தியானம் - கடவுள் பக்தி.

காமதேனு-தெய்வப் பசு; வேண்டுவார் வேண்டுவன கொடுக்கும் ஆற்றல் வாய்ந்தது.

சித்தாதிகள்-அணிமாமுதலிய எண்வகைச் சித்திகளும் கைவந்த சிலர்கள்.

வாருணிதேவி-மோகினிதேவி.

அபூர்வம்-கிடைத்தற் கரியது.

லோகாதந்தகரன்-உலகினர்க்கு இன்பத்தைத் தன் கிரணமாகிய கையாலே தரப்பட்டவன். உற்பவம் - தோற்றினை. தன்வந்திரி - தெய்வத்தன்மை வாய்ந்த மருத்துவன். பூரிப்பு - சந்தோஷம்; மனநிறைவு. ஸ்ரீஸூக்தம்-பெரிய பிராட்டியாராகிய ஸ்ரீமகாலக்ஷிமியைப்பற்றிச் சொல்லும்நூல். சர்வலோக மகேஸ்வரி - பெரிய பிராட்டியார். பதுமமாலிகை - தாமரைப்பூமாலை. விசுவகர்மா - தேவகுலப் பொற்கொல்லன். புரந்தரன் - இந்திரன். அஸ்திரம் - அம்பு; பாணம். பிரபை - பிரகாசம்.

நாதம்-இரேசக பூரக காலங்களிலுண்டாகும் அநாகதம் என்னும் சத்தம்; ஆக்ஞைக்கப்பாற் சந்திரமண்டலத்திற்குப் பன்னிரண்டங்குலத்தில் இருப்பதாகிய நாதஸ்தானமுமாம்.

மீமாஞ்சை-கன்மநூல்; இது, பூர்வமீமாஞ்சை.

உபநிடதம் - பிரமத்தைப் பிரதிபாதிக்கும் வேதசிரங்கள்.

குஹ்யம்-இரகஸியம். ஆத்ம வித்தை-வேதாந்தம். கிருஷி - பயிர்செய்தல். கோ - பசு. தண்டம்—தண்டித்தல். வித்தை—வித் என்னும் அடியாகப் பிறந்த பெயர். வித்—அறி. அசாந்தம்—பொறுமையின்மை. பாரியா புத்திர பந்து மித்திர கிருக க்ஷேத்திர தன வாகனாதிகள் —

மனைவி மக்கள் சுற்றம் நண்பு மனை வயல் செல்வம் ஏறுதிகள் முதலியன.

தனகோசம்—பொக்கிஷம்; கோசம்—உறை.

துவாதசாக்ஷரம்—ஓம் ஸ்ரீ பரவாசுதேவாய நமஃ, என்பது. துவாதசம்—பன்னிரண்டு.

நித்திய ஸூரிகள்—ஒருநாளும் ஸம்ஸரியாத ஆதிசேஷர், ஸேனைமுதலியார் முதலானவர்கள். பகவத்தியானத்திலேயே உறுதியுடையவராய் ஞானசங்கோசம் ஒருநாளும் இல்லாதவராய் விளங்குவதாலே நித்திய என்கிற அடை கொடுத்ததாம்.

பரமானந்தம்—முக்காலத்தும் அழிவில்லாத ஆனந்தம்; மேலான ஆனந்தம்.

வேதநிந்தகர்—வேதத்தை நிந்தனைசெய்யும் பாபிகள்.

எக்கிய விக்கினஞ்செய்பவர்—வைதிகமான யாகாதிகளைச் செய்கையில், அது நிறைவேறுவண்ணம் பலபடியான இடையூறு செய்பவர். இராவணன், சூரபதுமன் முதலிய அசுரர்களாம்.

## ஏழாம் அத்தியாயம்

சதுர்முகன்—நான்முகன்; பிரம்மா. ஜனித்த—தோன்றிய. மனதிலே சிருஷ்டித்தல்—மனத்தே எண்ணல். நவ பிரமாக்கள்—ஒன்பது பிரமர்கள்; புதிய பிரமாக்கள். நிரதர்—விலக்கியவர். பிரவர்த்தியாமல்—புகாமல். சர்வசங்க பரித்தியாகம்—முற்றத்துறத்தல். குரோதம்—கோபம். லலாடம்—நெற்றி. மார்த்தாண்டமண்டலம்-சூரியமண்டலம். அர்த்தநாரிரூபம்-சிவஞ் சத்தியாய் விளங்கும் உருவம். பிரத்தியேகம்—தனி. அந்தர்த்தானம்—மறைதல். பரமேஷ்டி—பிரமன். பதினொருவிதமாகப் பிரித்தல்—பதினொரு உருத்திரர்களாவது. ஸ்திரீரூபப்பிரவு— பலவகையாகிய சத்தியுருவமாய் வெவ்வேறு பெயர்களுடன் வழங்கிவருவது. கமலாக்ஷி—தாமரையன்ன நேத்திரமுடையவள். நியமனம்—கட்டளை. பாணிக்கிரகணம்—கலியாணம்.

கிரியை-காரியம் முடிவதற்கு இன்றியமையாதனவாய் நிற்பது, தண்டமும், நய விநயாதிகளுமே.

புத்தியின் இடத்திலே போதன்-ஞான விகாஸன். புத்தி-குணத்திரய சமமற்றது. மாயை - (யா-மா-ஸா, மாயா) எது இல்லையோ அது மாயை என்று வேதாந்திகளும், பிரபஞ்சம் எதனிடத்துச் சங்காரகாலத்தடங்கிச் சிருஷ்டி காலத்து வெளிப்படுகின்றதோ அது மாயை யென்று சைவ சித்தாந்திகளுங் கூறுவர். மிருத்து-எமன், கூற்றம். நித்தியப் பிரளயம்-தினமுடிவு காலம். நித்திய சிருஷ்டி-தினப்படைப்பு. பூதபாவனன்-பூதங்களைக்காப்பவன். மதுசூதனன் - மதுவென்கிற அரக்கனைக் கொன்றவனான திருமால். விஷ்ணுசக்தி - ஸ்ரீமகாலக்ஷ்மி. பரித்தியாச்சியம் - கைவிடுதல். சாயுச்சியம்-வேறு. சதுர்விதம்-நான்குவிதம். பிராகிருதம்-உண்டாதல். காலபேதம் - காலவித்தியாசம். விமுக்தன்-விடப்பட்டவன்.

நித்தியப் பிரளயம்-எல்லாப் பிராணிகளினது சுழுத்தி. அவாந்தரப் பிரளயம்-கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய அவ்வவ் வாதிபத்தியம் வருகிறமட்டும் அவாந்தரப் பிரளயம். தினப்பிரளயம்-தேவருடைய சுழுத்தி. பிரமப் பிரளயம்-பிரமதேவருடைய நாசம். அந்தியந்தப் பிரளயம்-முத்தி.

---

## எட்டாவது அத்தியாயம்

# ருத்திர சிருஷ்டியும் பிராட்டி வைபவமும்

தமோகுண சிருஷ்டி-சங்காரஞ் செய்யும்பொருட்டுப் படைக்கும் படைப்பு. நீலலோகிதன்-கருமையும் செம்மையுங்கலந்த வுருவம். ரோதனம்-தொந்தரை, அழுகை பசுபதி-ஜீவர்களுக்குத் தலைவன். பீமன்-பயங்கரத்தைக் கொடுப்பவன். மகாதேவன்-தேவர்களுக்கெல்லாந் தலைமையாகிய தேவன். பரமசிவனுக்கு எட்டு உருவுடன் கூடியவன் என்பதையே, சூலம், ஜலம், பூமி, அக்கினி, வாயு, ஆகாசம், பிராணன் என்றனர். சசீதேவி-பார்வதி. இமவான் - இமயமலை. அமிருதமதனம்- அமுதங்கடைதல். நித்தியை-அழியாதவள். ஜன

ஞுதிகள் - பிறப்பு. விபுவாய் - தேசகால வஸ்துக்களா லாகிய பரிச்சேதமின்றி யிருத்தலின் இறைவன் விபு வாம். சத்தியம்-தத்துவக் கூட்டங்களைத் தத்தங் கார ணங்களில் ஒடுக்கிக்கொண்டு சென்றால் காரணகாரியங்க ளில்லாமல் முடிவாய் நிற்றல். அநந்தன்-முடிவின்றி இருத்தல். விபூதி - ஐசுவரியம். வைபவம் - சிறப்பு. பதம்-இடம். போதம்-ஞானம். சத்கிருபை-நல்லகாரி யம். ஆச்சியம்-நெய். கமலை-இலக்ஷுமி. யூபஸ்தம் பம் - யாகத்தின் பொருட்டாக நடப்படும் தம்பம். பிரபை-ஒளி, தேஜஸ். விகிருதி-வேறுபாடு. கமலா லயை - இலக்குமி. நாதசொரூபன் - பிரணவத்தினோர் அவயவம்; அகாரமாகிய கலையையுடையது. புண்ட ரீகம்-தாமரை. புல்லிங்கம்-ஆண்பால்.

பூசுரர் - பிராமணர்; பூமிக்குத் தேவர் என்பது பொருள்; வடசொல் விகாரம்.

தானவர்-தநுவயிற்றிற் பிறந்தவர்களான வசுரர்; தத்திதாந்தம்.

புங்கவ-மேலானவனே. பிரளயம்-ஈண்டு அளவு குறித்து நின்றது.

பூதங்கள்-ஈண்டு அவற்றினுக்குரிய தேவர்களைக் குறிக்கின்றது: அவராவார்-பிரமன், அரி, அரன், மஹேசன், சதாசிவன் என்போர்.

ஜனித்தல் - உண்டாதல். தத்துவம் - பதங்களின் மெய்ப்பொருளாதல்.

பிராகிருதம்-பழமை. ஆதிபுருஷன் - காலஅளவு அற்றவன். கோசரம்-அறிதல். அஜன்-பிறப்பில்லா தவன். பிரகிருதி-பகுதி, ஜகத்து இதனிடத்து ஆரம் பிக்கின்றது அல்லது, புருஷனுக்குப் போக்கியங்களை உண்டாக்குவது என்பது பொருள்.

விரிஞ்சன்-பிரமன்; பூதங்களைப் படைப்பவர், அல் லது, அன்னப் பறவைகளால் வகிக்கப்படுவோர் என் பது பொருள்.

மகத் தத்துவத்திலிருந்து, அகங்காரத்துவம் பிறந்த தென்க. இதனை, மாயேயம் என்பர்; அவ்வியத்தம்

அல்லது, பிரகிருதி மாயை; இதனையே "மான்" என்றுங் கூறப்படும்.

சப்தாதி சகல போக்கியங்கள் - தூலதேகப் பிராண வாயுக்களின் சப்தாதிகளை இன்பமாக வநுபவிக்கை.

அட்சரம் - அழிவில்லாதது. யக்கிய புருஷன் யாகங்களுந்தானே யானவன். பூர்வீகர்கள் - பழமையோர். பரமேஷ்ஷ-பிரமன்.

நிருதர்-நைருத ரென்ற வடசொல்லின் சிதைவு; நிருதியென்னும் திக்குப்பாலகனது மரபில் தோன்றியவரென்று பொருள்.

துவாதசாதித்திய ராவார்-இந்திரன், தாதா, பர்ஜந்யன், த்வஷ்டா, பூஷா, அரியமா, பகன், விவஸ்வான், விஷ்ணு, அம்சுமான், வருணன், மித்திரன் என்னும் பெயரினர். இப்பெயர்கள் சிறிது வேறுபாடாக வழங்கும் வகையும் உண்டு. பன்னிரண்டு மாதங்களில் ஒவ்வொன்றுக்கும் இவர்களில் ஒவ்வொருவர் உரியவராவர். இவர்களில் 'பூஷா' வென்னும் சூரியன் தக்ஷமுனிவன் செய்த யாகத்தில் வீரபத்திரக் கடவுளால் பல்லொடிந்தமைபற்றி, அவனைத் தனியே எடுத்துக்கூறினர்.

திரேதாக்கினி-தக்ஷிணாக்கினி, பிரத்யாக்கினி, ஆகவனீயம் என்கிற மூன்று வைதிக வக்கினிகள்.

தேஜோராசி - ஒளிக்கூட்டம். அநந்தம் - எல்லையில்லாதது.

மாயாவிசிஷ்டசேதனம்—காரணப் பிரம்மமாம்; மாயையாலுண்டான காரிய விசிஷ்ட சேதனம் காரிய பிரம்மமாம்.

அகிலப்பிரபஞ்சம்-எல்லாவுலகங்களும்.

தயித்தியசங்கம்-அசுரக்கூட்டம்.

விஷயாபிலாஷை - உலகமாயையில் மிக்கமோகம். மோகம்-ஆசை.

பூரித்தல்-நிரப்பியருளுதல். வியாபகம் - நிறைவு. வியாப்பியம்-ஒன்றிலே யொன்றடங்கி நின்ற நிறைவு. அருள்-இவை தொடர்புடையவை என்றும், இவை

தொடர்பில்லாதவை என்றும் நோக்காது இயல்பாகவே எல்லாவுயிர்களின் மேலுஞ் செல்வதாகிய கருணை.

சாமோபாயம்-இன்சொற் சொல்லல்.

நாகேந்திரன் - வாசுகி, சர்ப்பங்களுக்கெல்லாம் அரசன். கூர்மம்-ஆமை.

---

ஒன்பதாம் அத்தியாயம்

## பெரியபிராட்டியார் திருவவதாரம்

யதேச்சை - சுதந்தரம். கராம்புஜம் - கரகமலம். அதிமனோகரம் - மிகவும் மனச் சந்தோஷத்துடன். கோலாகலம்-சந்தோஷம். அமரேசுவரன்-தேவேந்திரன். வாசவர்-வசுக்களுக்குத் தலைவன், தேவர்கோன். கிருதார்த்தன்-மேலானவன். மாலிகை-மாலை. துர்த்தசை-கஷ்டம். க்ஷமித்தல் - பொறுத்திருத்தல். க்ஷமை - பொறுமை. சதமகன் - தேவேந்திரன்; நூறு யாகங்களைச் செய்தவன். சுகுணம்-நல்லகுணம். அவுதாரியம்-பேருபகாரம்; தானம். லோபாதி துர்க்குணங்கள்-காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பை, அகங்காரம் என்கிற குணங்கள். இவை, ஆசை, பிணக்கு, பிடிபாடு, பிரியம், கருவம், உறவாயும் உதட்டில் நகைப்புமாயிருந்து உட்பகை விளைவித்தல். உதாசீனம், கோபித்தல் முதலிய பொருளன.

யூபம்-வேள்வித்தம்பம்.

வலைச்சிதன்பாற் பிறந்தவர் - சத்தியவதி யிடத்துப் பிறந்த வேதவியாசர். நாணற்றூற்றினிடைப் பிறந்தவர்-கௌசிகர், திருமூலர் முதலியோர்; திரணபிந்து முனிவர் என்பார் ஒருசாரார். கடத்திற் பிறந்தவர் - அகஸ்தியரும், வசிஷ்டரும். வேர்லூற்றினிடைப்பிறந்தவர்-நீலலோகிதர், துர்வாசர் என்போர். உள்ளத்திற் பிறந்தவர்-வசிஷ்டரும், சனகாதியரும். மானீற்றிடைப் பிறந்தவர்-ரிச்யசிருங்கர் (கலைக்கோட்டு முனிவர்) கிளி வயிற்றிற் பிறந்தவர்-சுசப்பிரம்மருஷி. கிருதகிர்த்தியர்-செயற்பால செய்து முடித்தோர். சர்வக்ஞதீட்சதர்-முற்றுமுணர்ந்

தோர், சோபையுள்ள யக்ஞ கர்த்தாக்களுமான பெரியோர். பதுமம் – தாமரை, வடசொல் விகாரம்; (லட்சுமி) அடைதற்கு இடமானது என்பது பொருள். குடும்பாக்ஷபாரம் - குடும்பத்தைக்காக்கும் பொறுப்பு. வியோகம்-நீக்கம். அர்த்தம்-செல்வம். பூர்வம்-முன்பு. மனோரதம்-எண்ணம்; மனநிறைவு. ஸர்வோத்தமம்-மிகவும் மேலானது. அக்ஷயமான-அழிவில்லாத. குட்சி-வயிறு.

பாஹ்ய விஷய வபிலாசைகளை வர்ச்சித்தல்-உலக வின்பத்தில் இச்சைகளைப் போக்கடித்தல். நிச்சலம்-உறுதி. வியஷ்டி-இது சமஷ்டியிலுள்ளாயது. அது, சாக்கிராவஸ்தையில் தூலசரீரத்தில் அபிமானியாய் இருக்கிற சீவன். இது பலவகைப் பெயருடன் விளங்குவது. சமஷ்டி - தோப்பு. சுத்தஞானம் - குற்றமற்ற ஞானம்.

வாஸுதேவன்-சகலத்திலும் தான் வசிக்கிறபடியினாலும், சகலத்தையும் தன்னிடத்தில் வசிக்கும்படி செய்வதினாலும், சகலத்தையும் மறைக்கிறதினாலும், வாசு என்கிற பெயர்; மோக்ஷமடைய விரும்பும் முமுக்ஷுக்களாலே பிரார்த்திக்கப்படுகிறவனாகவும், சர்வசுதந்தரனாகவு மிருப்பதால் தேவனென்ற பெயர் வந்தது.

துவாதசாக்ஷரமந்திரம் என்றது-வாஸுதேவ மகாமந்திரம். இதன் விபரத்தை, "ஏகாக்ஷராய ருத்ராய அகாராயாத்மரூபிணே உகாராயாதி தேவாய வித்யா தேஹாயவை நமஃ த்ருதீயாய மகாராய சிவாய பரமாத்மநே மோக்ஷாய மோக்ஷரூபாய மோக்ஷகர்த்ரே நமோ நமஃ ஆத்மநே ருஷ்யே துப்யம் ஸ்வாமிநே விஷ்ணவே நமஃ சர்வாயச நமஸ்துப்யம் நமோ நாராயணாயச நமோ ஹிரண்ய கர்ப்பாய ஆதிதேவாய தேநமஃ" என்றும்,

த்வமாதிஸ் த்வநாதிச்ச ப்ரக்ருஸ்த்வம் ஜநார்த்தந| புருஷஸ்த்வம் ஜகந்நாதோ விஷ்ணுர் விஸ்வேஸ்வரோ பவாந்| யோயம் ப்ருஹ்மாஸி புருஷோ விஸ்வமூர்த்தி பிதா மஹஃ| தத்வமாத்யம் பவாநேவ பரம்ஜ்ஜோதி ஜநார்த்தந| பரமாத்மா பரந்தாம ஸ்ரீபதே பூபதே ப்ரபோ| த்வத் க்ரோதா ஸ்தம்பவோ ருத்ர ஸ்தமஸா

ஸமாவ்ருத꞉ த்வத் ப்ரஸாதா ஜகத்தாதா ஜஸாச பிதா மஹ꞉। தவத் ப்ரஸாதாத் ஸ்வயம் விஷ்ணு ஸத்வேந புருஷோத்தம꞉। காலமூர்த்தே ஹரேவிஷ்ணோ நாராயண ஜகந்மய। என்றும் இலிங்கபுராணத்தால் அறிக.

தொழுவம்—மாடுகள் கட்டுகின்ற இடம்.

பிரபு—தலைமை, எஜமானன். சமிர்த்தி—நிறைவு. சமமாவது-உட்கரணமென்னும் அந்தக்கரண (மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களை)த்தைவிஷயங்களிற் பிரவிர்த்திக்காவாறு தடுத்தலாம். பாகிய வியாபார மின்றி மனத்தைத் திருப்பி வேதாந்தச் சிரவணத்தில் அழுந்தச் செய்வது. தமமாவது—செவியாதிப் புறக் கரணங்களைச் சப்தாதி விஷயங்களிற் பிரவர்த்திக்கா வாறு தடுத்தலாம்.

பிரார்த்தனை—துதி. இந்தத் தோத்திரம் – லக்ஷ்மி ஸ்தோத்திரம். தரணி—பூமி. நித்தியமாய்-எப்போதும். தாரித்திரியம் – வறுமை. சர்வாபீஷ்டம் – எல்லாவித பேறுகளையும். சதிராக—நன்றாக.

### பத்தாவது அத்தியாயம்

## பிருகு மரீசி முதலானோர் வமிசம்

வைபவம் – பெருமை. விசதம் – செவ்வையாக. சந்ததிக்கிரமம்—வமிசத்தின்முறை. அநசூயை-வசிஷ்டர் மனைவி. சப்த மகாரிஷி – ஏழு முனிவர். உதயம் செய்தல்—பிறத்தல். பிதுர்க்கணம் - படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்ட பிதுர்த்தேவதைகள்; அவ ராவார் - கவ்வியவாகன், அநலன், சோமன், யாமன், அரியமன், அக்கினிஷ்வார்த்தன், பர்ஹிஷன் என் போர். சந்தானம் - சந்ததி, புத்திரப்பேறு.

---

### பதினோராவது அத்தியாயம்

## துருவ சரிதம்

சுவாயம்பு மநு - தானே தோன்றிய பிரமன்.

துருவன்- நிச்சயபுத்தி யுள்ளவன். உத்தமோத்தம்- மிகவும் மேலான. மகிபாலன்- அரசன்.

மகீ-பூமி, சபத்தினி-சக்களத்தி. கிலேசம்-துன்பம். கிருஷ்ணாசனம்-மான்தோல்.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# துருவன் சித்திபெற்றது

சந்துஷ்டி-சந்தோஷம். கிருதார்த்தன் - சிலாக்கியன்; உத்தமன். சத்துருக்கணாழ்வான் - பகைவரைக் கொல்லுந் திறமை வாய்ந்த சக்கிரத்தாழ்வான். பாபக்ஷயம் - பாபத்தைப் போக்கடித்தல். சித்தம் - மனம். சப்தசாகரம் - ஏழுகடல். நிஷ்பலன் - பலனில்லாத. ஆத்துமகிலேசம்-மனவியாகூலம். நிசாசரர்கள்-இரவில் திரியும் இராக்கதர்கள். பயப்பிராந்தசித்தர் - அச்சத்தோடுகூடிய மயக்க மனதையுடையவர்.

அநாதி - உற்பத்தி யில்லாதிருத்தல். நித்தியம் - உற்பத்தி நாசமில்லாம லிருத்தல். மனோலயம் - மனது இந்திரியங்களின் வழியாய் விஷயங்களிற் செல்லாது ஒடுங்குதல். கலை-தத்துவத்தைக் கொஞ்சம் உணர்த்துவது.

பீதாம்பரம் - பொன்னுடை. சரணாரவிந்தம் - திருவடித்தாமரை.

தபோமகத்துவம்-தவத்தாலாயமேன்மை.

அதிகாரம்-ஆக்ஞை; பதவி. சர்வாத்மகன் - எல்லாவுயிர்களினுள்ளும் உறையு மிறைவன். ஷட்குணம் ஐசுவரியம்-ஆறுவகையான குணச்செல்வம்; இதனையுடையவன் எம்பிரான். வைராக்யம்-ஆசையில்லாமை. அபூர்வம்-முன்பு உண்டாகாதது. பூரித்தல்-மகிழ்ச்சியாற் புடைபருத்தல்.

சாந்த்ராயணம்-வடசொல்; சிறந்த ஒருவிரதம், சுக்கில பக்ஷத்துப் பிரதமை முதல் சந்திரன்கலை வளர வளர நாள் தோறும் உணவை ஒவ்வொரு கவளமாக வளர்த்தி

வந்து பௌர்ணமாவாசையில் பதினைந்து கவளம் புசித்து மறுபடி கிருஷ்ணபக்ஷத்துப் பிரதமை முதல் சந்திரகலை தேயத்தேய ஒவ்வொரு கவளமாக்குறைத்து வந்து, அமாவாசையில் உபவாசமிருந்து, இவ்வாறு ஒருமாதகாலத்தில் செய்து முடிக்கும் விரதம். அச்சுதன்-சரணமடைந்தவரைக் கைவிடாதவன். பிருகத்துவம்-பெருத்திருத்தல். சகஸ்ரம் – எல்லையற்றது. பூதபவிஷ்யத்வஸ்து-நிகழ்கால எதிர்காலப் பொருள்.

சமஷ்டிதேகன்—வனத்தைப்போல் எல்லாம் பிறப்பதற்கிடமானவன். சாதம் - பிறத்தல். பீசம்-விதை. சாகோபசாகம்-கிளைகளால் விரிந்து. ஏகாகாரம் - ஒரே வுருவம். அப்பிராகிருதம்-பழமை. சர்வபூதாந்தர்யாமி—எல்லாப் பிராணிகளினுள்ளும் உறையும் திவ்யசத்தி. பகுதி-பிரகிருதி; ஜகத்து இதனிடத்து ஆரம்பிக்கின்றது அல்லது, புருஷனுக்குப் போக்கியங்களை உண்டாக்குவது என்பது பொருள். புருஷன்-ஜீவான்மா; சரீரத்திலிருப்பது என்பது பொருள்.

கேவலம்-ஆன்ம தத்துவங்கள் ஒன்றையும் கூடாதிருப்பது.

அந்தக்கரணம்-மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்பன.

சபலம்—பூர்த்தி. கம்பீரமானஸ்தானம் - மேலான பதவி. சிசுருஷை-பணிவிடை. ஜகதபூசிதம் - உலகம் நமஸ்காரம் செய்யும். திவ்யஸ்தானம் - துருவமண்டலம். கல்பகாலம்-யுகமுடிவு. சாயம் பிராதகாலம் - காலை மாலை எனும் வேளையில். தரித்தல்-தாங்குதல். ஸ்தானப்பிரஷ்டன்-இட நிகிருஷ்டன்.

---

### பதின்மூன்றும் அத்தியாயம்

## பிருதுசக்கரவர்த்தி சரித்திரம்

சர்வோத்தமமான-மேலான. புஷ்கரிணி-தடாகம். பிரபாவம்-கீர்த்தி. தேனு-பசு. அதீசுரன்-தலைவன். சாபம்-சபித்தல். மகீபாலன்-உலகினையாளும் அரசன். ஓமம் - வைதிகச்சடங்கு. சரம் - அசையும் பொருள்.

அவிசு-ஓமத்திரவியம். ஆதியந்தம்-முதலும் முடிவும். அராசகம்-அரசனில்லாமை. அவுத்திரன்-பிள்ளை இல்லாமை. ஜனித்து-பிறந்து. நிர்மலமான உதகம்-புண்ணிய தீர்த்தம். ஹஸ்தம்-கை. அநுராகம்-ஆசை. பிராக்கியர்-சிறந்தவர். வந்திமாகதர்-அரசன் பெருமையினைப் போற்றுவோர். க்ஷுத்து-பசிவாதை. தனுர்த்தரன்—பாணத்தைக் கையிலுடையவன். வைணியன்-வேனன் மகன். சங்கரித்தல்-கொல்லுதல். துர்விநீதை-கெட்ட நடக்கையுள்ளவள். வசுந்தரை-பூமி. க்ஷீரம்-பால். கிரிஷி-பயிர்த்தொழில். கோரக்ஷணம்-பசுபரிபாலனம். மேதினி-பூமி. கந்தமூலபலாதிகள்-கிழங்கு காய், கனி. பூர்வம்—முன். சகல வஸ்யம்—எல்லாப்பொருள்கள்.

---

பதினாலாம் அத்தியாயம்

# பிரசேதனருடைய தவமும் தோத்திரமும்

பிரஜேசுவரன் - அரசன். பாணிக்கிரணம் - கலியாணம். விரிஞ்சன்-பிரமன். அபீஷ்டப் பலப்பிரதன ஸ்ரீ விஷ்ணு-வேண்டுவார் வேண்டும் வரங்களைக் கொடுக்குந் திருமால். இஷ்டசித்தி-தான் விரும்பியதை அடைதல். சதுர்வித புருஷார்த்தம்-அறம் பொருள், இன்பம், வீடு என்பன. சாமர்த்தியம்-சத்தி. சமாகிதம்-பொறுமை; ஒருநிலைப்பட்ட. உபமானரகிதன்-வேறொரு உவமை கூறமுடியாதவன். நியமனம்-கட்டளை. அமிர்தம்-அழிவற்றது; இனிமை பொருந்திய பிரமமாம். அந்தகாரம்-இருள். சூரியாத்மகன்-சூரிய மண்டலத்துள் ஒளிரும் கடவுள். சுக்கிலம்-வெண்மை. அநந்தமூர்த்தி-பற்பல நாமதேயமுள்ள கடவுள்; அநேக அவதாரமெடுத்தவன். பிரணமம்-நமஸ்காரம். க்ஷரம்-அழிதல். அக்ஷரம்-அழியாமை. பிராந்தி - விபரீதவுணர்ச்சி. முத்தஜீவன் - முத்தியை அடையும் பக்குவம்வாய்ந்த வான்மா. ஹிரஸ்வம்—சுருங்கல். பிரமம்-மயக்கம். ஆச்சிரயம்-சேர்க்கை;

சம்பந்தம். மகார்ணவஜலம்—பிரளயப் பெருங்கடல். பக்திபாரம்—பக்தியின் மிகுதி. அந்தர்த் தானமானன்—மறைந்தான். அபீஷ்டவரம்—வேண்டும் வரம்.

---

பதினைந்தாம் அத்தியாயம்

## கண்டு சரித்திரமும், தக்ஷவமிசமும்

நாரதன்–ஒரு முனிவன்; நாரம்- நரசம்பந்தமானது, மனிதர்களுள் உள்ள ஒற்றுமை, தன் -(அதனைக்) கெடுப்பவன்: 'நாரதன் கலகப் பிரியன்,' அல்லது நாரம்—ஆத்துமஞானம், தன்—(அதைக்) கொடுப்பவன்: இவன், வால்மீகி வியாசன் முதலியோர்க்குத் தத்துவஞானம் உபதேசித்தல் காண்க. இவன்—பிரமனது மனத்தினின்று தோன்றிய குமாரன்; தேவவிருடி-மேலுலகத்தில் உள்ளவர்களும் யாகம் தவம் முதலிய முயற்சிகளைச் செய்து பயன் பெறுவதற்கு ஏற்ற சிறந்ததலம் பூமியேயாதலால், நாரதன் அங்குவந்தானென்றார். யோகமாவது—கடவுளிடத்து ஒரே மனமாயிருத்தல். ப்ராணாயாமம்—(ப்ராண + ஆயாமம்) பிராணவாயுவை அடக்குதல். நிகரம்—கூட்டம். நிஷ்டை—சாதகம். பிராக்ஞன் - அறிவுள்ளவன். சோஷித்தல் - சப்தித்தல். தருணம் - மரக்கூட்டம். விக்கினம் - இடையூறு. விலாசம் - விளையாடல். துரோணம் - இடம். கிரீடித்தல் - சரசசல்லாபஞ் செய்தல். திவம் - மேலிடம். பிரதிவசனம் - பதில். அமரவனிதை - தேவகன்னி. பிரத்தியவாயம் - எதிர்; நம்பி மோசம்போதல். வதுமணி - கலியாணரத்தினம். பிரமவித்து - ஜீவன் முத்தியடைதற்கு முன்னர் இயற்றிவந்த தங்கட்குரிய வருணாச்சிரமங்களுக்குரிமைபூண்ட கிரியைகளை லோகோபகாரமாகச் சாஸ்திரோக்தமாய்ச் செய்து தீர்ந்தநிலையில் மாறுதொருதகைத்தாய் இருக்கும் ஞானிகள். இவர்கள் பெரும்பாலும் இல்லற ஞானிகளே யாவர். பிராதக்காலம் - விடியற்காலம்; வைகறை. வேத அத்தியயனம் - வேதமோது தல்; அத்யயநம் என்பதன்விகாரம். விப்பிர - பிராமணா! (தன்னையும் பிறரையும் பாவத்திலிருந்து நீக்கி) இரட்

சிப்பவன் என்பது பொருள். ஷடூர்மி - பசி, தாகம், சோகம், மோகம், வார்த்திகம், மரணம் ஆகியவை.

பரப்பிரமம்-நாமரூபவடிவ எப்பொருட்கும் விவர்த்த காரணமாயும் தனக்கொரு காரணமின்றி மேம்பட்டு வியாபகமாக விருக்கின்ற தன்மை.

புரந்தரன்-தேவேந்திரன். (பகைவர்களுடைய) நகரங்களை அல்லது உடல்களை அழிப்பவனென்று காரணப் பொருள்பெறும்; புரம் - ஊரும் உடலும்.

க்ஷீணித்தல்-அழிதல். நிவாஸஸ்தானம் - வசிக்குமிடம்.

மிலங்கள்-திமிங்கிலங்கள்.

பரிச்சேதிக்க - இலக்கியச்செய்யுட் கூறுபாடுகளை விவரிக்க.

திருந்தம்-நாள்முடிவு. ஆனந்த ஸ்வரூபியாய் - மூக்காலத்தும் மிகுந்த பிரியத்திற்கு விஷயமாக விருக்கும் ஆனந்த வுருவினன். பரியவசானம் - முடிவு.

விபு-தேசகால வஸ்துக்களாகிய பரிச்சேதமி (முடிவி)ன்றி யிருத்தலின் ஆன்மாவை விபுவென்றமை.

அதிபூதம்-பிரகிருதிமாயை. பிரம்மா வானவர் விராட்ரூபத்திற்குள் அடங்கினவர். இனி ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்றவஸ்தைகளுஞ் சொல்லப்படும். கற்பிதப் பிரபஞ்ச வடிவமாகத் தோன்றுகின்ற தூலபஞ்ச பூதங்களும், அந்தப்பூதங்களிலே தோன்றின மூன்றுசாதியாயிருக்கின்ற தூலசரீரசமஷ்டியுங்கூடி ஈசுவரதூலசரீரம் விராட் என்றதாம். மூலப்பிரகிருதியில் அநேககோடி ஜீவர்கள் தங்கள் கருமவாசனையுடன் மொழுக்குண்டையில் தங்கச்சன்னங்களைப் போலச் சிருஷ்டி காலத்திற்குமுந்தி (பிரளயகாலத்தில்) அடங்கியிருக்கிறார்கள்.

அயோனிஜை — தாய்கர்ப்பத்தின் சம்பந்தமில்லாமை. பிரதிக்கிரகித்தல்— பெற்றுக்கொள்ளுதல். துவிபாதங்கள்—இரண்டுகால் பிராணி. ஜாதம்—பிறத்தல்.

பன்னகம்—பாம்பு. தரிசனம்—காட்சி. பரிசனம்—தீண்டல். சங்கமம்—சேர்க்கை. அதோபாகம்—கீழ்பாகம்:

தூரதேசகதன்-வெளியிற் சென்றவன். பிராக்ஞியன்—சிறந்தவன். நிருமித்தான்-உண்டாக்கினான். அரித்திரா வர்ணம்-சிகப்பு. ஜிதேந்திரியன்-இந்திரிய வெற்றி பெற்றவன். க்ஷீணித்தல்-குறைதல்.

## பதினாறும் அத்தியாயம்

பாசபத்தன்-அன்பாற் கட்டுப்பட்டவனாய். பிரபாவம்-மகிமை.

## பதினேழாம் அத்தியாயம்

கோரம்-கொடுமை. அவிர்ப்பாகம்-ஓமத்தில் தரு முணவு. படிகம்-கண்ணாடி. சிலாமயம்-கற்கள் நிறைந்த மலை. சுபாஷிதம்-இனிமையான சொல். சமாகித சித்தம்-பொறுமையுடைய மனம். அஜன்-உற்பத்தியில்லாதவன். ஆதி-முதல், மத்தி-இடை, அந்தம்—இறுதி. நிசாரம்-பொருளற்றது. பரமார்த்த ஸ்வரூபம்-மேலான திருவுருவம். விசுவமயம்-தேசகால வஸ்துக்களாலாகிய முடிவின்றி எங்கும் நிறைவுற்றிருத்தல். பரம ஈசுவரன்-எல்லாருக்கும் மேலான கடவுள். மோகம்-ஆசை. சாத்துவிகம், இராசதம், தாமதம் ஆகிய குணங்களின் அபின்னமாகிய மூலப்பகுதி. ஸ்வபக்ஷம்-தன்குடிக்கு. அரணி-தீக்கட்டை.

அதமன்-இழிந்தவன். விநியஸ்தமானசனை—கூப்பியகையுடன் நீங்காமனத்தனாய்.

ஸ்மரணம்-பகவானுடைய அநந்த திருநாமங்களைச் சதா ஜபித்தல்.

சண்டமாருதம்-வன்மைமிக்க காற்று.

பிரதிபக்ஷி-விரோதி. நிவாரம்-தடை.

சுக்கிலம்-வெண்மை. சோணிதம்-சிகப்பு; இரத்தம். ஊடல்-கலவியிற் பிணங்கல்.

காமினீ-காமத்திற்குக் காரணமாகியவள். பிராந்தி-மயக்கம். விரக்தி-வெறுப்பு. ரஹிதன்-இல்லாதவன்.

சிரேயசான-மேன்மையான. அபிஞக மாட்டான்-ஆளாகமாட்டான்.

மத்திமாதிகாரி – விசாரம் இல்லாத வழி மந்த மத்திமா காரிகளுக்குச் சித்தம் வியாகூலமாய் விடுகிறது.

ஆத்ம விசாரத்தால் நிலைபெருது அதிகாரம் மிகவும் குறைவாகிறபடியால் அவர்கள் யோகாப்பியாசந்தான் செய்தல் வேண்டும். அதனுற்ருன் அவர்களது சித்த விருத்தி கெடும். இதனுல் அவர்களுக்கு யோகமே முக்கியமென்று சொல்லப்படுகின்றது. இவ்விருவர்களுக்கும் சித்த நிரோதத்திற்கு யோகமே முக்கியமென்று கூறியபடியால் மற்றவர்களுக்கு ஆத்ம விசாரமே முக்கியமென்று கொள்க.

உத்தம அதிகாரி—நித்தியா நித்திய வஸ்து விவேகத்தினுல் யதார்த்தத்தினுல் அநித்தியமா யிருக்கிற தேகாதிப் பிரமலோக பரியந்தமான சகல போக்கிய வஸ்துக்களிலும் நாய்கான்ற அன்னத்திற் போல அத்தியந்த வயிராக்கியத்தை யடைந்து, சகல விஷயங்களையும் விஷம்போலவும், அக்கினிபோலவும் நரகம் போலவுங்கண்டு, ஒருவிஷயத்திலும் பிரவிருத்தியின்றி நீ விருத்தியை யடைந்து, சுழுத்தி யவஸ்தையைப் போன்று விஷய ஞான மின்றி யிருக்கப்பெற்று, சாட்சாத்கார மின்மையினுல் அடிக்கடி பகிர்முகப்பட்டு, தன்னைப்பற்றி வருவனவும், பிறரைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாகிய தாபத்திரியங்களால் சிரசில் அக்கினி பற்றினவனைப் போன்று வருந்தி, ஒரு விஷயத்திலும் இன்பத்தை யடையாது, ஒருகணப்போதாயினும் பிறவித் துன்பங்களாகிய தாபத்திரயங்களைச் சகிக்க முடியாது, 'எப்போது இந்தச் சம்ஸாரத்தினின்றும் நீங்கப்போகின்ருேம், எப்போது இதை விடப்போகின்ருேம். எதனுலே இந்தத் துக்கத்தினின்று விடுபடுவோம்'' என்றிப்படி யத்தியந்த மோக்ஷவிச்சையோ டிருப்பவன்.

## பதினெட்டாம் அத்தியாயம்

பாகம் செய்வோன்-சமயல் செய்வோன். மந்தவதிகாரி-சொருப பரியந்தம் சாதன சதுஷ்டயங்களை யுடையவன்.

அநந்தன்-முடிவின்றி இருப்பவன். பாசகர்-சமையல் செய்பவர். தானவர்-அசுரர்கள்; தனுவின் மைந்தர்

கள். பூசுரர்கள்-அந்தணர். பவுத்திரன்-மகன் மகன்; பேரன்.

---

பத்தோன்பதாவது அத்தியாயம்

## பிரக்லாத ஸ்தோத்திரம்

1. பிரபாவம்—கீர்த்தி. பூதத்துரோகம்-பிறபிராணி களுக்குத் துன்பஞ்செய்தல். புண்டரீகாக்ஷன்-தாமரைக் கண்ணன். கிஞ்சித்து-கொஞ்சம். சஹஸ்ரகோடி - அநேகம். நியமனம்-கட்டளை. திருவாழியாழ்வான்-சக்கரத்தாழ்வான். தரணீதரன்-பூமியைத் தாங்குவோன். சுக்கிரப்புரோக்தம்-சுக்கிரபகவானால் சொல்லப்பட்டது. அமாத்தியர்-மந்திரிகள். ஆப்பியந்தரர்-அந்தப்புரத்தில் காரியஞ் செய்கின்றவர்.

சந்தி விக்கிரகம்-சந்தி-சேர்க்கை; விக்ரகம்-பிரித்தல்; அடுத்துக் கெடுத்தல். சயிலதுர்க்கம்-மலைகள் நிறைந்த விடம். புளிந்தர் - வனசாதியர்; வேடர். சமாதான பேதாதி வுபாயம்-அரசருக்குரிய நான்குவகை உபாயங்கள். துச்சம்-பயனற்றது. ஜலராசி - நீர்க்கூட்டம். அவித்தை-ஞானமின்மை; விபரீத வுணர்ச்சி. உபாதான காரணம்-முதற்காரணம்.

பரமயோகிகள்-முற்றத் துறந்தவர். சத்தி-திவ்விய திறம். நிரூபித்தல்-உறுதியாய் மெய்ப்பித்துக் காட்டல். பராத்பரரூபம் - மேலான வடிவம். அக்ஷரம்-அழிவின்மை.

---

இருபதாம் அத்தியாயம்

## பிரகலாதருக்கு நரசிங்கன் பிரத்தியக்ஷம்

திரிகுணாத்மன் - முக்குணவிசிட்டன். அந்தக்கரணம்-மனம், புத்தி, அகங்காரம், சித்தம். நிகிலம்-எல்லாம். மஹீ-பூமி. அநாதி-காலவரையற்றது. நியதி - இது நன்று, இது தீது என்னுந் தீர்மானத்தை உண்டாக்குவது. கலை-தத்துவத்தைக் கொஞ்சம் உணர்த்துவது. வித்தை-கலை உணர்த்துவதைக் காட்டிலும் சற்று அதிகமாய்த் தத்துவத்தை உணர்த்துவது.

நிரஞ்சனன்-குற்ற மில்லாதவன். வியூகரூபம்—பிரிவுள்ள வடிவம். நிருமலர்—குற்றமில்லாதவர்; மும்மலங்களினின்றும் நீங்கியோர். அச்சுதன்-நம்பினோரைக் கைவிடாதவன். அசஹ்யம்—பொறுக்க முடியாமை. பிராரப்தகன்மம்-பழவினை.

---

## இருபத்தோராம் அத்தியாயம்

# தனு முதலானவர்களுடைய சந்ததிக்கிரமம்

சஹஸ்ரசங்கை-ஆயிரக்கணக்கானஎண். அசங்கை—கணக்கற்றது. அபீஷ்டமான—வேண்டுவனவான. சிசுரூஷை—பணிவிடை. சேதம்—அழித்தல். பாகசாதனன்—இந்திரன். ரோதனம்—அழுகை.

---

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# தேவதாதிகாரமும் பகவத்வைபவமும்

ஓஷதி-செடி கொடிகள். ஆதித்தியர்—சூரியர்கள். பிரமுகர்-தலைவர். வியாக்கிரம்-புலி. பர்ச்சன்னியம்-தானியாதிகள். கிருகாதிபதிகள்-நவக்கிரகங்கள்.

சத்துவகுணாச்சிரயம் - சத்துவகுணச் சேர்க்கை. இது, அடக்கம், அன்பு, விவேகம், ஐம்பொறியடக்கல், அருள், ஞானம், தவம், பொறை, மேன்மை, வாய்மை முதலியவற்றை யுடையதாய் இருத்தல். ராஜஸகுணத்தை ஆச்சிரயித்தல் - அகங்காரமாய் வெட்டவும் குத்தவும் கடிக்கவுமாய் இருப்பது.

தாமதகுணத்தை ஆச்சிரயித்தல் - மந்தமாய் உன்மத்தமாய் மத்திமமாக விருப்பது. உபேந்திராதி-இந்திரன் முதலியவுருவம். உபமானரகிதம்-உவமை வேறில்லாமை. ஜீவசாதம்-பிராணிகளின் பிறப்பு. முக்தஜீவன்-எல்லாவற்றினின்றும் விடுபட்ட ஜீவன்; அல்லது, ஆத்மா. இதனை, "தத்வவித்து மஹாபாஹோ குண

கர்ம விபாகயோ: குணகுணேஷு வர்த்தந்த இதிமத்வா நஸஜ்ஜதே” என்பதால் அறிக.

பிராணுயாமம்-ரேசகம் (வாயுவை மூக்கின் வலது துவாரத்தால் விடுதல்). பூரகம்-(வாயுவை மூக்கின் இடது துவார வாயிலாக உள்ளுக்கிழுத்தல்). கும்பகம்-வாயுவை உள்ளே யடக்குதல் செய்தலாம்.

சாங்கியமதம்—இது, சேச்வர சாங்கியம், நிரீச்வர சாங்கியம் என இரண்டு. பகுதியாவது, விகுதியாவது, இரண்டுமாவது, இரண்டும் அற்றது என்னும் நான்கு வகையினையுடைய பிரதானமாதி இருபத்தைந்தும் தத்துவங்கள். புத்தி வேறு; ஆன்மா வேறு; இவ்விரண்டும் ஒன்றன்று. ஆன்மா அல்லது, புருஷன் பல. புருஷன் அஞ்ஞானத்தை அடைந்தபொழுது பிரபஞ்சத்தைத் “தான்” என்றும், ஞானத்தை யடைந்தபொழுது பிரகிருதியென்று மறியும். புருஷன் பிரகிருதியோடு கூடி மயங்குதல் பந்தம். பிரிந்து தெளிதல் முத்தி.

கோசரம்-அறிதல். க்ஷயம்-அழிதல்.

குறி-அடையாளம்; பிரமாணுதிகள்.

ஆறு ஊர்மிகள் - அறுவகை வேறுபாடுகள்.

உபாதிகள்-ஒரு வஸ்துவைப் பலவிதமாய்த் தோற்றுவிக்கிறதற்குச் சாதகமாயிருக்கிறதெதுவோ அதுதான்.

வியாபித்தல்-நிரம்பி யிருத்தல்.

க்ஷராக்ஷரமயன்-அழிவதும் அழியாததாயுமிருக்குந் தன்மை.

க்ஷேத்திரக்கியன்-தேகமுடையவன்.

ஞானேந்திரியம் - ச்ரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, ஆக்கிராணம்.

கன்மேந்திரியம் - வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம்.

சேதனம்-அறியுந் தன்மையது.

அசேதனம்-அறிவற்றதன்மையது.

தொந்தம்-சுக துக்க சம்பந்தம்.

## இரண்டாம் அம்சம்

## 1, 13 அ—ம்.

# பிரய விரத வம்ச விஸ்தாரம்

உத்தரம்-பதில். ஜ்யோஷ்மான் - பிரகாசமுடையவன். ஜம்பூத்வீபம்-நாவல் மரப்பழம் நிறைந்தவிடம். பாரதவருஷம் - பாதனாலே வரையறுத்தமை, இது ஜடபாதனாலே ஆக்கியது. வானப்பிரஸ்தம் - மனைவியுடன் காட்டிலிருந்து தவமுதலிய செய்தல். நிர்வாணம்-ஆடையின்றியிருத்தல். மகாப்பிரஸ்தானம்-மோக்ஷம். சயிலம்-மலை. சித்தர்-சித்தியடைந்தவர்.

குலபருவதம்-சிறந்த மலைகள். பிரவர்த்தி-முயற்சி. சகரர்-காரணப்பெயர். சிற்பத்தொழில் - பதுமைமுதலிய செய்யும் வேலை; சித்திரவேலையுமாம். தாழ்வரை-மலைச்செறிவு. சொர்க்கலோக வாழ்க்கை - பொன்னுலக வாழ்க்கை. லவணம்-உப்பு.

உத்சர்ப்பிணி - மேன்மேலும் அபிவிருத்தி அடைகின்றகாலம்.

அவசர்ப்பிணீ - அழிவு காலம்.

சஞ்சீவினி - உயிருண்டாக்கும் மருந்து. நிவர்த்தியாகும்பொருட்டு - நீங்கும்வண்ணம்.

வடவாக்கினி — வடகடலின்கண்ணுள்ள பிரளயாக்கினி.

இரத்தின சயிலம்-இரத்தின மலை.

சாகாத்வீபம்-சாகாவிருக்ஷங்கள் நிறைந்த விடம்.

க்ஷீணமாதல்-குறைதல்.

சேடித்தல்-மிகுந்திருத்தல்.

ஞானகருமங்கள் — ஞானத்தாலுண்டாகிய சரிசைகள். இருதுவேதம்—காலவேதம். பக்ஷம்—பதினைந்து தினம். ஷட்ரசம்—தித்திப்பு, உவர்ப்பு, கார்ப்பு முதலியன. சுத்தோதகம்—நன்னீர். அந்தகாரம்—பேரிருள்.

5. பருக்கை—சிறு சிறு கற்கள். ரமணீயம்—அழகு. நாகஜாதி—சர்ப்பசாதி. சயித்தியம்—குளிர்ச்சி. சாந்து-

கலப்பு. சம்பூரணம்—நிறைவு. லோகஹிதம்—உலக நன்மை. அநந்தன்—ஆதிசேஷன். கைம்மலர்—கைத் தாமரை. கிரகசாரக்கிரமம் — கிரகங்கள் சஞ்சரிக்குங் காலவரிசை.

6. கோக்கள்—பசுக்கள். மத்தியபானம்—கட்குடித் தல். வேத தூஷணை — வேத நிந்தனை செய்பவன். அதோமுகம் - கீழ்ப்பக்கம். குண்டன்—விதைவைக்குப் பிறந்தவன். கோளன்—சாதிமாறிய சேர்க்கையால் வந்து பிறந்தவன். வைதரணி — ஒரு புண்ணியநதி. விருத லோபம்—இருக்கவேண்டிய விரதங்களைச் செய்யாமல் விடுதல். யாதனை—துன்பம். சுக்கிலம்—வெண்மையான வீரியம். ஜலசரம்—தண்ணீரில் வசிக்கும் மீன் முதலிய. நியமித்த — கட்டளையிட்ட. தாரதமியம் — வேறுபாடு. அனுக்கிரகம்—கிருபை. அவித்தை-நிஷ்காமம்.

7. துருவமண்டலம்—துருவநக்ஷத்திரம்; துருவன் தவஞ்செய்து அடைந்த விடம். ஆவரணம் — மூடி. பந்தம் — பிணிப்பு. அவ்யக்தம் - தோன்றாமை. பரிணமம் - உண்டாதல், பருத்தல். சத்து — உண்மை. அசத்து - பொய்.

அவ்யக்தமான மூலப்பிரகிருதி - கண்ணிற்குப் புலப்படாத பகுதி காரணம். கிரியா ரூபம்-காரியவடிவம்.

8. க்ஷயம் - அழிவு. தேவயானம் - அர்ச்சிராதி மார்க்கம். தேஜஸ்-ஒளி. மகரம்-மகரலக்கினத்தில். கர்க் கடகம்-கடகம்; ஜலராசி. குலாலன்-குயவன். இராசி கள்-மேஷம், இருஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் முதலியவற்றை. பிரணவத்தை - ஓங்காரவுருவத் துட னிருக்கின்ற பொருளை. மந்தேகர் - பாவச் செய லுடைய வசுரர்; இவர்களின் சங்காரத்தைக் குறித்தே அந்தணர் காலை மாலை நடு வேளைகளில் வேத பூர்வ மான மந்திரங்களால் நீரைவிடுகிறார். முகூர்த்தம் - ஏழரை நாழிகைகொண்ட காலம். துலாராசியில் சூரியன் பிரகாசிக்குங் காலமே, சரத்காலம்; அல்லது, சரத்ருது வென்னலுமாம். மேஷராசியில் சூரியன் புகுங்காலம், வசந்தருதுவாம். சூரியன் கடகராசியில் பிரகாசிக்குங்

காலம் தட்சிணாயனம். சூரியன் மகரராசியில் பிரவேசிக்குங் காலம். உத்தராயணம். விகற்பம் - வேறுபாடு. அஜவீதி-பிரமவீதி. அக்கினி ஹோத்திரம் - அக்கினி குண்டத்தில் வைதிகநெறி தவறாமல் வேதமந்திரங்களினால் அந்தணர் செய்யும் ஓமம். வேதம்-கர்மகாண்டம், பிரமகாண்டம் என இரண்டு; கர்மகாண்டமே, யக்கிய யாகாதிகளுக் குதவுவது. பரமபதம் - மேலானவிடம்; அழிவில்லாதவிடம். பிரவாகம்-வெள்ளம்.

9-வது. ஆகர்ஷித்து – இழுத்து. நிர்மலம் - தெளிவு. இருதயம் - நடுவிடம். சிம்சுமார சக்கரத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு எழுந்தருளியிருப்பது விளக்கம். உத்தராயணம் - சூரியன் வடபாரிசத்தில் சஞ்சரிக்குங் காலம். கதி-போக்கு. பராசரர் - பிறரை ஞானமூட்டிக் காப்பவர். காசிபர்-பூமிக்குரியவர். அப்ஸராசு-அச்சராசு என்பது. அந்தமண்டலம்-அந்தவிடம். வாலகில்யர்-வால்நீண்ட குருவியின் உருவமுடையவர், தலைகீழாய்த் தொங்கும் இயல்பினர்; இவர்களை, வௌவால் எனவும் பாரதங்கூறும்.

11. கிரியை-காரியம். கணம்-கூட்டம். திரிவேதம்-இருக்கு, யஜுர், சாமம். இதன் விரிவை சந்தியாவந்தன பாஷியத்தாலறிக. ஸ்ரீமகா விஷ்ணுவைக் காலை மாலை மத்தியான்னம் என்கிற ஒவ்வொரு வேளையிலும் போற்றும் வேதமந்திரத்தால் அறியலாம். கலை-பங்கு. பிதுர்க்கள்-தென்புலத்தார்.

12. முல்லைப்பூவர்ணம் - வெண்மை, இது, சாத்வீகம். இதனைக் கற்பிற்சிறந்த முல்லை என்பர். பரமாணுக்கள்-மிகச்சிறிய பொருள்கள். பதுமராகம்-செந்தாமரை. சாரம்-வழி, மார்க்கம், நெறி. ஞானம்-பிரகாசம். அஸ்தி - உண்டாவது. நாஸ்தி - இல்லை. பிருதிவி-மண். அணு- துகள். ஞானாகாரம்-ஞானசரீரம். கர்மபேதம்-செய்கையின் வேறுபாடு.

13. கிரகங்கள் - நவக்கிரகங்கள். பரமார்த்தம் - மேலான பொருள். க்ஷேத்திரம் - இடம், பிறப்பு. அஹிம்சை - பிற பிராணிக்குக் கஷ்டஞ் செய்யாமை; கொல்லாமை. சொப்பன மத்தியஸ்த மூள்பட - சொப்

பன ஜாக்கிர சுழுப்தி துரிய துரியாதாதிகள் உள்பட. சமாதி-ஒருநிலையில் மனத்தை யூன்றிநிற்றல், அநுபவ நிஷ்டை

ஜடனைப்போல்-அறிவிழந்த பொருள்களின் தன்மையினை யொத்து.

வித்துவான்-எல்லாவற்றையும் எளிதில் அறியும் வன்மை வாய்ந்தவன், வித் - அறி; என்னும் பகுதியடியாகப் பிறந்த பெயர்.

ஜடபரதன்-இது, அறியாத் தன்மையினைக்கொண்டு உழன்றமையால் வந்தபெயர்.

பிராணதாரணை - உட்கொண்டு. சிகா - தலைமயிர். யக்கியோபவீதம் - முப்புரிநூல். நரபலி - மனிதபலி. அமிஞ்சி-தண்டு. சிவியாரை-பல்லக்குச் சுமப்பவர்.

ஆத்மா-உயிர்; இதன் இயல்பிலக்கணங்களெல்லாம் ஒருங்கே கீதையிற் காணலாம்.

மமத்துவம்-இது என்னுடைய வீடு; இது, என்னுடைய பெண், மகன், மனைவி முதலியன. அகங்கார வபிமானமுமாம்.

ஆத்மபுத்தி-ஆன்மாவினிடத்தில், நான் என்றது. இதனை வேதாந்தங்களில் அறிக.

ஸ்தூலசரீரமே ஆத்மா-இது, மமதைக்கு விஷயமாகி (எனது எனவும்) அகந்தைக்கு விஷயமாகி (நான் எனவும்) விஷயமாகாதென்பது நியமம். என்தேகம் என்றவிடத்துத் தேகம் மமதைக்கு விஷயமாயிருத்தலால் அஃது அகந்தைக்கு விஷயமாமென்பது பிறழுகின்றது. ஆதலால் ஸ்தூலதேகம் ஆத்மாவாக மாட்டாது.

இந்திரியமே ஆத்மா-என்னுடைய இந்திரியம் என்றிவ்வாறு இந்திரியம் மமதைக்கு விஷயமாய் இருத்தலால்இந்திரியம் ஒருபோதும் ஆத்மாவாக மாட்டாது. ஏனெனில், யாது எனது என்ற சொல்லப்படுகிறதோ அது நான் என்னும் சொல்லுக்குப் பொருளாவதில்லை. இந்திரியம் எனது என்னும் சொல்லிற்கே தெளிவு காலத்தில் பொருளாய் இருத்தலால் அஃதெங்ஙனம்

ஆத்மாவாகும். பிராணன் கேவலம் ஜடமாயிருப்பதாலும் என் பிராணனென்ன என்று என்னுஞ் சொல்லுக்குப் பொருளாய் இருத்தலாலும், அந்தரவாயுவான பிராணன் ஆத்மாவாகும் பக்ஷத்தில் வெளிவாயுவும் ஆத்மாவாக வேண்டுமாதலாலும் பிராணன் ஆத்மாவாக மாட்டாது.

புத்தியே ஆத்மா-என் மனதென்னும் விவகாரம் நிகழ்தலின்மனம் ஒருபோதும் ஆத்மாவாகமாட்டாது. மேலும், வாய்ச்சி உளி முதலிய வற்றைப்போன்று மனம் விஷயங்களை இந்திரியங்களின் வாயிலாகச் சீவன் அறிதற்குக் கருவியாயிருத்தலின் அஃதெங்ஙனம் ஆத்மாவாகு மென்க.

## மூன்றும் அம்சம்

### 1, 18 அ—ம்.

1. திரியக்குகள் - மிருகங்கள்; குறுக்காகவமைந்த தேகமுடைமை. அந்தரம்-முடிவு. புரந்தரன்-தேவேந்திரன்; பகைவர்களைப் பின் காட்டியோடும்படிச் செய்பவன். வாமனரூபம் - வாமனவதாரம். இந்திரன் - ஐசுவரியமுள்ளவன்.

2. விசுவகர்மா - தெய்வத்தச்சன். தபதி - சூரியன் புதல்வி. யோகதிருஷ்டி - யோகத்தாலாகிய பார்வை. அவரந்தரத்தில்-அவர்களின் கால முடிவில். விகங்கர்-ஆகாயத்தில் சஞ்சரிப்பவர். நிர்வாணர் - ஆடையில்லாதவர். நிர்மோகன்-ஆசையில்லான். தத்துவதர்சி-உண்மையறிந்தவன். சம்பூரணம் - முடிவு. இரஜோகுணத்தை ஆச்சிரியத்தல்-சௌரியம், உச்சாகம், அபிமானம், கிருபையின்மை, இடும்பை முதலியவற்றைக் கைக்கொள்ளல். பிரகரணம்-விஷயமுடிவு; பகுதி. மனுவந்தரம் - ஒரு மனுவுடைய வாழ்க்கைக்காலம். அஃது ஒரு தேவாண்டு. மனுச் சக்கரவர்த்திகள் - சுவாயம்பு, சுவாக்கிருஷன், உத்தமன், தமசன், இரேவதன், தாக்கிஷன், வைவச்சுதன், மனுதன், மன்ருட்டு.

3. வியாசரூபியாகி - வியாத முனிவராகி; இவ்விஷயத்தை விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் காண்க. சாகா-

பிரிவு. அனு-அற்பம். அதிஷ்டித்து-ஆக்கிக்கொண்டு. வேத விபாகம் - வேதப் பிரிவு. ஏகாக்ஷரம் - ஓங்காரம். நாசம் - அழிவு. வியாபித்தல் - சூக்குமமாய்க் கலந்திருத்தல். வியாகிருதி-மாறுபாடு; விபரம். பிரளயம்-அழிவுகாலம்.

அகாதம்-முந்தியது. க்ஷயம்-அழிவு. பிரவர்த்தனம்-தீர்மானம்; முயற்சி.

சாங்கிய சாஸ்திரஞானம்—இது சேச்வரசாங்கியம், நிரீச்வர சாங்கியம் என இருவகைப்படும். முன்னது கர்த்தமரிஷி புத்திரரான கபிலராலும், பின்னது மற்றொரு கபிலராலுங் கூறப்பட்டது. ஈண்டுக் கூறப்படுவது நிரீச்வரசாங்கியம். பகுதியேயாவது, விகுதியேயாவது, இரண்டுமாவது, இரண்டு மற்றது என்னும் நான்கு வகையினையுடைய பிரதானமாதி இருபத்தைந்தும் தத்துவங்கள். தன்னிற் றோன்றுவன வற்றிற்கு எல்லாம் காரணமாய் ஒரு காரணத்திலிருந்துண்டான காரியம் அல்லாததாய் இருத்தலின், மூலப்பிரகிருதி பகுதியே யாவதாம் (காரணமாத்திரமே யாவதாம்). ஒன்றைத் தோற்றுவிக்காததாற் காரணமாகாது, ஒன்றிற்றோன்றுதலாற் காரிய மாத்திரமே யாதலின், பூதங்கள் ஐந்தும், இந்திரியங்கள் பத்தும், மனம் ஒன்றும் ஆகிய பதினாறும் விகுதியாவதாம். (காரியமாத்திரமே யாவது). காரணத்தை நோக்கக் காரியமும் காரியத்தை நோக்கக் காரணமும் ஆதலின், மகத்தத்துவம் ஒன்றும், அகங்காரம் ஒன்றும், தன்மாத்திரைகளைந்தும் ஆகிய ஏழும் பகுதியும் விகுதியுமாகிய இரண்டுமாவதாம். ஒன்றிற்றோன்றுததாற் காரியமும், ஒன்றைத் தோற்றுவிக்காததாற் காரணமு மாகாமையின் புருஷன் பகுதியும் விகுதியுமாகிய இரண்டு மற்றதாம்.

சமம்—உட்காரணம் என்கிற அந்தக்கரணங்களை விஷயங்களிற் பிரவிர்த்திக்காவாறு தடுத்தலாம். பாகிய வியாபாரமின்றி மனத்தைத் திருப்பி வேதாந்த சிரவணத்தில் அழுந்த செய்தலுமாம்.

தமம்-செவி முதலிய புறக்கரணங்களைச் சப்தம் முதலியவற்றில் புகவிடாமல் தடுத்தல். மூன்றாய்ப் பிரிந்

திருத்தல்-அகாரம், உகாரம், மகாரம் எனப்பிரிந்து நிற்றல். அதிஷ்டித்தல்-பொருந்தல். பேதித்தல் - வேறுபடுதல். வேதசாகைகள்-வேதப் பிரிவுகள்.

4. அக்கினி ஹோத்திரம்—தீ, நெய்; யாக மிருபத்தொன்றில் ஒன்று. பசுபந்தம்-ஆடுகளைப் பந்திப்பதாகிய யாகம். சாந்திராயனம்—சந்திரன் வீதி. அகண்டம்-பெரிய, கணக்கிட முடியாத. மகாமதி-சிறந்த புத்தியுட்ப முள்ள. பிரசாதித்தல்-கொடுத்தல். சிஷ்யன்-மாணாக்கன். ப்ரசிஷ்யன்-மாணாக்கனுக்கு மாணாக்கன்.

5. இருபத்தேழு சாகை-இருபத்தேழு பிரிவு. நியமித்தார்-கட்டளையிட்டார். இதிகாசம் - உபதேச பரம்பரையில் வந்த பழைய சரித்திர மொன்றைப் பிரதானமாக வெடுத்துப் பல கிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக் கூறுவது. புரோகிதன்-சாந்திக பௌஷ்டிகாதிக் கிரியைகளில் முன் வைக்கப்படுவோன். தயித்திரியம் - யஜுர்; தித்திரிப் (சிச்சிலிப்) பறவைகளாம் (போற்றப்பட்டது); ஆதலின், இப்பெயர்த்தாயிற்று. வைசம்பாயனர், தமது மருமகனை ஓர் இரவில் அறியாது மிதித்துக்கொன்றுவிட்டதனால் தமக்குண்டான பிரம்மஹத்தி தோஷம் நீங்கும் பொருட்டுத், தமது சீடர்களனைவரையும் விரதங்காக்குமாறு பணிப்ப, அச்சீடர்களுள் ஒருவராகிய யாக்ஞவல்கர், ஏனையோர் உடல் வலியிலராதலின், அப்பணியைத் தாம் ஒருவர்மாத்திரமே புரிய அனுக்ஞை தரும்படி வேண்டினர். வைசம்பாயனர், தம் உரையின் வண்ணம் நடவாது வேறு உரைத்ததனால் யாக்ஞவல்கரை முனிந்து, தம்மால் ஓதியுணர்ந்த யஜுர் வேதத்தை விடுத்துச் செல்லும்படி கூறினர். அங்ஙமே யாக்ஞவல்க்யர் இரத்தம்கான்று விழுமாறு குருவியின் முன்னிலையில் அதனை ஓதி உமிழ்ந்துசெல்ல, அவருடன் கற்றவர்கள் அவ்விரத்த ரூபமாய்க்கிடந்த யஜுர் வேதத்தை வீணாக்க மனம்பொருது தித்திரிப்பறவை வடிவங்கொண்டு உட்கொண்டார்கள் என்பது. பிரணவரூபம்-ஓங்கார ஸ்வரூபம். அந்தகாரம்-இருள்; அஞ்ஞானம். வகித்தல்-தாங்குதல்.

6. சங்கிதை-பிரிவு. சாமசாகை-சாமவேதப்பிரிவு.

ஆக்கியானம்-தொகுதி. உபாக்கியானம்-கிளைக்கதை. காதை-கதை. வியாசகிருதம்-வியாசராற் செய்யப்பட்டது. கர்த்ருத்துவம்-தலைமை. பிரதிபாதிக்கின்ற-தொடர்ந்து விளங்கிமாறுபடும். ஆயுர்வேதம்-வைத்தியசாஸ்திரம். தனுர் வேதம் - ஆயுதகலை. அர்த்தசாஸ்திரம் - அரச தருமம். நித்தியம் - அழிவில்லாதது. விகற்பம்-பிரிவு; வேறுபாடு.

7. சப்தத்வீபம்-ஏழுதீவுகள். ஸ்தூலம்-பெருமையது. சூக்ஷ்மம் - அணுவைப்போலது. அந்தரங்கம் - தனிமை. பிரசினம் - வினு. குண வைஷம்யம் - குணவேறுபாடு. நிருபாதிகமாய் - ஒன்றையும் வேண்டாமல்செய்யும் சேவை. அபகரித்தல்-திருடல். விகாரம் - மாறுபாடு, தேய்தல், வளர்தல், பருத்தல்முதலிய. திருவாழி - சக்கரம். ஆத்தும சமர்ப்பணம் - தன்னுயிரை ஈதல். காலபாசம் - எமன்கைக்கயிறு.

8. பகவான்-ஷட்குணச் செல்வன். பதம்-இடம், தேவதாந்தரம் - பிறதெய்வங்கள். வியாபித்து-வியாப்தமாகி. அபவாதம் - இல்லதும் பொல்லதும் சொல்லுதல். விப்பிரர்-பிராமணர். ஆசாரியர் - வித்தியாகுருக்கள்; அல்லது குலகுருக்களுமாம். வேதாத்தியயனம்-வேதமோதல். இதம்-நன்மை; இதனையே திருவள்ளுவர், "அந்தணரென்போர்———செந்தண்மை பூண்டொழுகலான்" என்றார். சிஷ்டர்-மேலோர்; யோகிகள். பிதுர்க்கிரியை-தகப்பனுக்குக் குமாரன் செய்யவேண்டிய கருமச்சடங்கு. லோபியாகாமை-ஈகைகுணமில்லாமை. அழுக்காறு - பொறாமை. சாதிசங்கரம் - ஜாதிகளின் சேர்க்கை.

9. நியமத்தோடு-உறுதியோடு. உபநயனம்-பூணூற்கலியாணம். உப-இரண்டு, நயனம் - கண். அந்தணர் முதல் மூன்று வருணத்தார்க்கும் இம்மங்களம் நிகழ்வதுண்டு. பிராமணர்களுள், பூணூல் போடுவதன்முன் சாமான்யனென்றும், பின்னர் ஞானவானென்றும் பொருள்விரியும். உபநயன காலத்தில் பிரம்மஞான உபதேசம் செய்வதால், இருபிறப்பாளன் என்றும், த்விஜனென்றுமாம். அர்த்தஞானம்-பொருள் தெளிவு.

இல்லற வொழுக்கம் - மனைவாழ்க்கையின் அநுஷ்டானம். அதிதி - விருந்து. கிருகஸ்தாச்சிரமம்-மனைவியோடிருக்கும் வாழ்க்கை, இல்லறவாழ்க்கை. வானப்பிரஸ்தன் - மனையோடு கானகஞ் சென்று செய்வன செய்து வாழ்தல். முச்சந்தி - காலை, மாலை, மத்தியான்னம். மரவுரி - மரபட்டை, ஆடை. களத்திரம்-மனைவி. யதி-துறவி. மோக்ஷாச்சிரயம்-மோக்கவிச்சை. சாந்தமானசோதி-சாத்வீகஜோதி.

10. சோடசப்-பதினாறு. கிரியை-காரியம். அர்த்தஹீனம்-பொருட்குறைவு. சம்ஸ்காரங்கள்-காரியங்கள். விவாகப்பிரிவு - பிரமம், தைவம், ஆரிஷம், பிரஜாபத்தியம், ஆசுரம், காந்தருவம், ராக்ஷஸம், பைசாசம் ஆக எண்வகையது; இவைகளின்விரிவை அகப்பொருலிலக்கணத்தில் காண்க.

11. சத்-சத்துவகுணமுடைய பெரியோர். சதாசாரம்-நல்லொழுக்கம். பிராம்மணமுகூர்த்தம்-வைகறையாமம்; பிரமத்தை ஞானஞ் செய்வதற்குரியகாலம். அர்த்தம் - பொருள். காமம் - ஆசை. ஆசமனம் – முக்குடிநீர். நதம் - கிழக்குத் திக்கிலிருந்து மேற்குத்திக்கை நோக்கி ஓடும் நதி. பிரபிதாமகர் - தகப்பனுக்குத் தந்தை; முப்பாட்டன். விசுவதேவர் - எங்கும்நிறைந்ததேவர். பூதங்கள்-பிராணிகள். பதிதன்-தாழ்ந்தவன். கிரிமி - புழு. அநிஷ்டசாந்தி- துன்பங்களைச்சாந்திப்படுத்தல். ஆபோஜனம்-உண்டு எழுந்தருளியிருக்கும்போது தண்ணீரைக் கையினில் எடுத்துக் குடித்தல். உதராக்கினி-வயிற்றுத்தீ; ஜாடராக்கி. மனோவிகாரம் - மனவேறுபாடு. பிராயச்சித்தம் – சாந்தி. பாகம் – சமயல். காமம் - ஆசை. யாதனை-துன்பம்.

12. கோக்கள்-பசுக்கள். விஷநாசகம்-விஷத்தைப் போக்கல். அபானவாயு - கெட்டகாற்று. உத்தியானவனம்-நந்தவனம். கச்சம்-வேஷ்டியின்மடிப்பு. அதமர்-இழிவானவர். அக்ஷயம் – நிலை. நாணம் - வெட்கம். கிஞ்சித்து-கொஞ்சம், குரோதம் - பகை.

13. நாந்தி-சுபகாரியம். பிதுர்கணம்-பிதுரர் கூட்டம். நாமகரணம்-பெயர் வைத்தல். தகனம் - கொளுத்தல்;

இடுகாட்டில் கொண்டு சேர்த்து, அங்கியிற் சேர்த்தல். சபிண்டர்-பங்காளிகள். சஞ்சயனம் - இறந்தவருக்குச் செய்யும் இரண்டாம் நாள் காரியம். சாஹாத்தியாயி-உடன் படித்தவன். சபிண்டிகரணம் - பன்னிரண்டா நாள் காரியம். ஏகோதிஷ்டம்-பதினோரா நாள் செய்யுங் காரியம். நிபந்திரணம்-அந்தணர்களை இருக்கும் வண்ணம் நியமித்தல். பிரேத பாத்திரம் - இறந்தவனைக் குறித்து ஆவாகனஞ் செய்துள்ள தான பாத்திரம். பூர்வம்-முன்.

14 விதி - தர்ம சாஸ்திரத்திற் கூறிய கட்டளை. பிண்டம்-சிராத்த காலத்தில் மந்திர பூர்வமான அன்ன வுருண்டை.

15 விரித்து - இருக்கும்படியாக மந்திரத்தால் ஆவாகனஞ்செய்து. ஷடங்கம்-ஆறுபிரிவு. கைம்பெண்-விதவை. நியமம்-கட்டளை. அனுக்ஞை-தனத்தை. யாக விக்கினம்-யாகத்தில் இடையூறு.

16. கதலி-வாழை. நபும்ஸகன்-அலி. நாமகோத்திரம்-பெயரும் வமிசமுறையும். பரிணமித்தல் - உண்டாதல். அசுவமேதம் - குதிரையை விடுத்துச் செய்யும் யாகம்.

17. சதாசாரம்-நல்லொழுக்கம். நக்கினன்-ஆடையில்லாதவன். திரயீ-இருக்கு, எஜுஸ், சாமம் என்பன. அவிகாரி-விகாரமில்லாதவன். வேதமார்க்கம் - வேதத்திற்கூறிய வைதிக வொழுக்கம். சர்வசக்தன்-எல்லாம் வல்லவன்.

18. பரலோகம்—மேலுலகம். முத்தி-விடுபடுதல். யுக்தி பிரமாணம் - இது கூடும் இது கூடாதெனத் தன் கண்ணே தோன்றுவது யுக்தியாம். இது பொருந்துமா றென்றுஞ் சொல்லப்படும். நித்திய கருமம்-சந்தியாவந்தனாதிகள். நிவர்த்தியாதல்- நீங்குதல். சூரிய தரிசனம்-சூரிய நமஸ்காரம்.

# நாலாவது அம்சம்

## 1, 24 அ—ம்.

1. நைமித்திகம்—விசேஷ காரியம்; நித்திய மல்லாதது. சதுர்முக பகவான்-நான்முகன். அஜன்-பிறப்பற்றவன். குசஸ்தலி-ஒருநகரம். தாலத்துவசன்-பனைக் கொடியோன்.

2. மகீபாலன்-அரசன். ஒருமைப்பாடு-மனம் ஒன்றில் நிலைத்தல். மகாநந்தம் - பேரானந்தம். பங்கம்-கெடுதல். அந்தப்புரம்-அரசர்களின் அரண்மனையில் பெண்கள் வசிக்கவமைந்துள்ள விடம்; உள்ளிடம். விசுவகர்மா-தெய்வத் தச்சன். மகாநிதி - பெருஞ்செல்வம். மழலைச்சொல் - குழந்தைகள் பேசும் பொருளற்ற வார்த்தை. சமாதி - விஷயங்களின் தோஷ திருஷ்டியென்னும் அங்குசத்தால் அடக்கப்பட்ட அகக்கரணமாகிய யானையும், தோஷ திருஷ்டி பூர்வகமாய்ச் சாஸ்திர சிந்தனை என்னும் சாட்டியால் சப்தாதி விஷய வடிவ மார்க்கத்தில் செல்லாவண்ணம் அடக்கிய இந்திரியங்களாகிய குதிரைகளும், சம்ஸ்காரவாயிலாக வரப்பட்ட விஷயங்களில் பிரித்தும் பிரவேசித்து அல்லற்பட்டவாறு ஆரியன் அநுக்கிரகித்தை அநுசந்தித்துச் சலிப்பின்றி யொருமுகப் பட்டிருத்தலாம்.

3. ஆவேசித்து-உட்புகுந்து. ஆச்சிரமம்-இடம். தொம்சம்-அழித்தல். நீதி-தருமம்.

4. சந்தான நிமித்தம்-புத்திரப்பேறு காரணம். கபில பகவான்-கபிலமுனிவர். மகாத்துமியம்-சிறப்பு. விரூபம்-அவகோலம். சோபிதம்-அழகு. தசரதன்-பத்துத் திக்கிலும் தன் ரதஞ்செலுத்துபவன்; இராமனின் தந்தை. வாச்சல்யம்-அன்பு.

5. விதேகம்-ஒருநாடு; இது விதேகவரசன் ஆண்ட நாடு. ஆத்ம வித்தை-தத்துவ ஞானம்.

6. நாபி கமலம்—கொப்பூழ். கபோலம்-கன்னம்.

7. பீமன்-பயங்கரமானவன். அநுக்கிரகம்-கிருபை. பிரவரம்-கோத்திர முறை.

8. அவிர்ப்பாகம்-யக்கியத்தில் கொடுக்கும் உணவு. சத்துருஜித்து-பகைவரை வெல்லுந்திறம்.

9. அபிசாரயாகம் - மரணஞ் சம்பவிக்கும் யாகம். வமிசம்-மரபு.

10. சாபம்-கொடுஞ் சொல். சந்ததி-புத்திர பாக்கியம். ஜரை-தள்ளாமை. காமங்கள்-ஆசைகள். உலகவின்பம்-விஷயவாசை. மமதை-எனது என்னும் அபிமானம்.

11. இஷ்டசித்தி-மனதிலுள்ளதை அடைதல். ஸ்வதருமம்-குலவொழுக்கம். ஜலக்கிரீடை-நீர்விளையாட்டு.

12. நாமதேயம் - பெயர். கன்னிகை - கலியாணமாகாத பெண்.

13. சகோதரன்-ஒரே வயிற்றில் பிறந்தவன். செவிலித்தாய் - வளர்க்குந் தாய். வாரணவதம் - ஒருகிராமம். ஏகாந்தம்-தனிமை. மாவெட்டி-யானையை அடக்கும் ஆயுதம். குரோசம்-அளவு. மறு-குற்றம்.

14. ஆனகம்-தேவ வாத்தியம். ராவணம்-கோஷஞ் செய்பவன்; இலங்கை மன்னன். சாயுஜ்ஜியம்-மோக்ஷம்.

15. குதூஹலம்-சந்தோஷம். கியானம்-அறிவு. திவ்யம்-அழகு. ஸ்மரணம்-நினைப்பு. ஸங்கர்ஷணம்-இழுத்தல். ஸன்மார்க்கம்-நன்னெறி.

16. விசதம்—தெளிவு. வம்சம்—மரபு.

17. மிலேச்சர்— துருக்கர். அதிபதி-தலைவன்.

18. அங்கநாடு—மன்மதன் ஆண்டுவந்த தேசம்.

19. மருத்துக்கள்-வைத்தியர்கள். க்ஷத்திரியதன்மை - அரசத்தன்மை. துரோணசாரி - கும்பத்திற் பிறந்தவன்; குரோணம் - குடம். குசம் - தர்ப்பைப்புல்.

20. நியாயவாக்கியம்-அறந்தரும் வார்த்தை. அநாதி-முடிவின்மை. வேதவாதம் - வேதத்தின்மேலெழுந்த வாதப்போர். காமயோகம் - காமவிச்சை; இன்பம்.

21. மேதாவி-புத்தி வன்மையுள்ளவன். தனயன் - குமாரன்.

22. திவாகரன்-பகல் செய்வோன்; சூரியன்; இங்குக் காரணப் பெயர்.

23. சத்தியஜித்-உண்மையினை வென்றோன். ரிபுஞ் சயன் - பகைவனைப் போரில் புறங்கொடுத்தோடும் வண்ணஞ் செய்பவன்.

24. நசித்தல் - அழிதல். கவுடில்யன் - கவுண்டில்ய இருடியின் மரபில்வந்து தோன்றியவன். வைப்பாட்டி-ஆசைக்குரியபெண். நிர்மலம் - குற்றமின்மை. மமதை - அகங்காரம்.

---

## ஐந்தாவது அம்சம்

### 1, 38 அ—ம்.

1. சர்வ வியாபகன்-எங்கும் நிறைந்தவன். பூர்வீகம்-முன். பூமிநிமித்தம் - பூலோக ஜனங்கள். பாதித்தல் - வேறுபடல். அணு - மிகச் சிறியது. திரிவிக்கிரமன்-திருமாலின் அவதாரத்தில் ஒன்று; மாவலிக்காகக் கொண்ட வடிவம். நித்தியன்-அழிவில்லாதவன். விசுவரூபம்-எம்பெருமானின் பேருருவம் (இதன் விபவத்தைக் கீதையிலும், வில்லிபாரதத்திலும் அறிக). பிதாமகன் - பிரமன். கிங்கரர் - கைங்கரியஞ் செய்பவர். சுவேச்சை-இயல்பு.

2. வசந்தாதி ருதுக்கள்-வசந்தம் முதல் ஆறுருதுக்கள். பிரமாணங்கள்-அளவைகள். பரிசோதித்தல்-கண்டறிதல். தரித்தல்-தாங்குதல்.

3. வானவர்-தேவர். சற்புருஷர்-மேலோர். நள்ளிரவு-நடு இராத்திரி. வர்ஷித்து-பெய்து. மறு-அடையாளம். திருவனந்தாழ்வான் - ஆதிசேஷன். இதம் - நன்மை. சித்தர்-அணிமா, மகிமாமுதலிய எண்வகையான சித்திகளை அடைந்தவர்.

4. அமரர்-மரணமில்லாதவர். திருஷ்டாந்தம் - உதாரணம். எத்தனம்-முயற்சி. மித்துரு-சிநேகிதன்.

5. பகவத் சங்கல்பம்—கடவுளின் கிருபை. கப்பம் எல்லாம்—இறைப்பணமெல்லாம். ஜனார்த்தனன்—இறைவன். சாந்தி-சாந்தம் தருவது. சகடு—வண்டிச் சக்கரம்.

6. பாவனை—தன்மை. கும்பம்-குடம். பிரத்திக்ஷம்-கண்கூடு. கோமயம்-பசுவின் மூத்திரம். தொழுவம்—மாடுகட்டும் இடம். துராத்துமாக்கள்-கொடியவர்கள். ஜராசந்தன்-ஜரையென்னுந் தேவதையால் ஒன்று சேர்க்கப்பட்ட தேகத்தை யுடையவன் (பாரதத்தில் காண்க) யாகசீலர்-யாகத்தாலே மேன்மையுற்றவர்.

7. மித்துரு—சினேகிதன். மிருத்யு—எமன். பரமதுஷ்டன்-மிகவுங் கொடியவன். பானயோக்கியம்—குடித்தற்குப் பிரயோசனம். கருநெய்தல் – நீலோத்பலம். கோவியர்-இடையர். மனுஷலீலை-மனிதவிளையாடல். ரேசககதி-மூச்சை வலது மூக்குத் துவாரத்தால் விடுதல். பரஞ்சோதி-மேலானபிரகாசம். பஞ்சபூதமயம்-பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசாதிகளின் தன்மை. பதிபிக்ஷை-கணவனை வேண்டல்.

8. கமழுதல்-வாசனை வீசுதல். கோவலர்-இடையர்.

9. வனமாலை-அழகிய மாலை. நாரதர்-தலைவர். வியக்தப் பிரபஞ்சம்-நன்றாகத் தெரிகின்ற இவ்வுலகம். திவ்யரூபம்—யாவருங்கண்டு ஆனந்திக்குந் திருமேனி. வடவாமுகாக்கினி-வடகடலினின் றெழுகின்றவாய அக்கினி. அமேயாத்மன் - உபநிஷத்துக்களினாலே அறிகின்ற தன்மைவாய்ந்த இறைவன்.

10. வருஷாகாலம்-மழைக்காலம். கிலேசம்-மனத்துயரம். பிரத்தியாகாரம்-விஷயங்களில் செல்லா வண்ணம் சகல இந்திரியங்களையும் தடுத்து உள்நோக்கி இருத்தலாம்.

பிராணாயாமம் - ரேசக கும்பகங்களினால் மூச்சை யடக்கியாளுதல். கிரகித்து - இழுத்து. வாணிகம் - வியாபாரம். மந்திர யக்கியம்-மந்திரத்தாலாகியவைதிகச் சடங்கு வேத மந்திரத்தினாலாய அக்கினி ஓமம். பாடி-போர்க்களத் தமைந்த பாசறை.

11. பருவத சிகரம்-மலையின்கொடிமுடி. ஆயர்-இடையர்; பசுபரிபாலனஞ் செய்வோர்; ஆ - பசு. பிரதிக்ஞை-சபதம்.

12. விரோத புத்தி - கெட்ட எண்ணம். பரிபாலனம் - காத்தல். கோவிந்தன் - கோக்களுக்கு இந்திரன்; கோ-ஆன்மா. இந்திரன் - தலைவன். அமரராசன்-தேவேந்திரன். யுதிஷ்டிரன் - தரும புத்திரன்; பாண்டுமகன். அயிராவதம்-இந்திரன் பட்டத்துயானை.

13. தானவன்-தனுவின் மைந்தன். கூதிர்ப்பருவம் - குளிர்செய்யுங் காலம். வேணுகானம் - புள்ளாங்குழலூதல். பரிசித்தல் - தொடுதல்.

14. விருஷபம் - எருது. சிங்கநாதம் - சிங்கத்வனி.

15. திவ்யஞானம் - சிறந்த பேரறிவு. தனுர்யாகம்-போர்பயிற்சி. யாதவர்-யதுவமிசத்தில் பிறந்தவர்.

16. ஆரவாரம் - ஓசை. ஸ்ரீ புண்டரீகாக்ஷன்-தாமரைக் கண்ணன். துரங்கம்-குதிரை. அமுது-இனிமை.

17. திருமுகமண்டலம்-திருமுகம். ஸ்ரீ கேசவன் - திருமால்; காரணப்பெயர். வேதாந்த நிஷ்டர்-வேதாந்தங் கைவல்லவர்.

18. துவஜம்-கொடி. நிமித்தம் - காரணம். பீதாம்பரம் - பொன்னுடை. சதுர்விதம் - நான்குவகை.

19. மூத்தநம்பி-பலராமன். நீலாம்பரம் - நீலவாடை. தனஹானி - செல்வப்போக்கு. ராஜமார்க்கம் - அரசர் நெறி. ஆராதித்தல் - போற்றல். திவ்யலோகம் - மோக்ஷம்.

20. நீலோத்பலம்-கருநெய்தல். ஆக்கியாபித்து - கட்டளையிட்டு. மத்தகம் - தலை.

21. அதிக்கிரமம்-துஷ்டகாரியம். புரந்தரன்-தேவேந்திரன். அதிமாநுஷ சேஷ்டை - மானிடரால் ஆக்க முடியாத காரியம்.

22. ஜராசந்தன்-கிரிவிரசை நகர்க்குத் தலைவன். திருவாழி - சக்கரம். சந்தி - சமாதானம். தண்டோபாயம் - சிக்ஷை. அசாமர்த்தியம் - திறமையின்மை.

23. நபும்ஸகர்-அலி. சிரேஷ்டர் - மேலோர். பொக்கிஷம் - பண்டாரம். விஷயாநுபவம் - உலக விஷய வின்பத்தில் துளைதல்.

24. ஆதியந்த மில்லாதவன்-முதல் நடு கடை யில்லாதவன். ஸ்மரணம் - நினைவு. ஆலிங்கனம் - சேர்க்கை.

25. அபிலாஷை-அன்பு. குண்டலம்-காதணி.

26. யாதவ புங்கவர் - யாதவச் சிரேஷ்டர். சதுரங்க சேனை - நால்வகைச்சேனை. திருவுதரம் - வயிறு.

27. பரிபாலனம்-ரக்ஷணை. போஷித்து-காத்து.

28. பாசிகை-காய்கள். ஹலாயுதர்-பலராமன்.

29. பீடித்துவந்த - வருந்திவந்த. சேதித்தல்-வெட்டல்.

30. அபகரணம்-கொண்டுவருதல். அவியயன்-காணமுடியாதவன். சசிதேவி-இந்திரன் மனைவி.

31. கிரீடித்தல்-விளையாடல்.

32. சவுரியம்-பராக்கிரமம்.

33. சைனியம் - படை. தாபம் - வெப்பம். கவசம்-போர்வை.

34. சின்னம் - அடையாளம். சிலேஷை - இருவிதமாகப் பொருள்தரும் சொல்.

35. கவுரவர் - பாண்டவர்களும், துரியோதனாதியர் களும்.

36. வேதாத்தியானம் — வேதமோதுதல். முசலம்— உலக்கை.

37. வியாஜம்-காரணம். உற்பாதம்-கெட்டசகுனம்.

38. தானம் - கொடை. காந்தி - பொலிவு. களங்கம்- குற்றம்.

## ஆறும் அம்சம்

### கலிதருமம்

ஆதி-முதல். தம்பதிகள்-தலைவன் தலைவியர். உப வாசம்-விரதம்; பட்டினிகிடத்தல். யவம்-ஒருவகை தானியம். தற்புருஷன்-அந்தப் புருடன். நைமித்திக பிரளயம்-விசேஷமுடிவு.

பரப்பிரமம் - மேலானகடவுள். தமஸ் - இருள். அவாந்தரம்-இறுதி. சோணிதம்-இரத்தம். துர்க்கந் தம்-கெட்டவாசனை. அந்தகாரம்-இருள். பாவித்தை-துவாதசாக்ஷத்தைத் தனக்கு அங்கமாகக் கொண்டு விளங்குவது; யோகஞ்செய்யும் வழி. பலச்சுருதி-இவ் விஷ்ணு புராணத்தைப் படிப்பதினாலாய பலன், அல் லது, படித்தவர் அடையும் பயன்.

முற்றிற்று.